Madras Government Oriental Manuscripts Series No. 66



# யாப்பருங்கலம்

# YĀPPARUṄKALAM

BY

AMITASĀGARANĀR

(with an ancient commentary)

EDITED BY

Vidvān M. V. VENUGOPALA PILLAI




Published by

The Curator, Government Oriental Manuscripts Library, Madras

(*Published under the authority of the Government of Madras*)

PRINTED BY THE CONTROLLER OF STATIONERY AND PRINTING, MADRAS, ON BEHALF OF THE GOVERNMENT OF MADRAS

1960

MADRAS GOVERNMENT ORIENTAL MANUSCRIPTS
SERIES No. 66




அமிதசாகரனார் இயற்றிய

# யாப்பருங்கலம்

(பழைய விருத்தியுரையுடன்)

பதிப்பாசிரியர்
வித்துவான் மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை

"எண்ணென்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டும்
கண்ணென்ப வாழும் உயிர்க்கு"
—திருக்குறள்

சென்னை அரசாங்கத்திற்காக சென்னை எழுது பொருள் அச்சுத் தொழில் கட்டுப்பாட்டு
அதிகாரியால் பதிப்பிக்கப்பட்டது.
1960

# INTRODUCTION

The public are perhaps aware of the fact that the Government of Madras have launched upon a scheme of publication of rare manuscripts treasured in two premier institutions of this State, namely, the Madras Government Oriental Manuscripts Library, Madras, and the Tanjore Maharaja Serfoji's Sarasvathi Mahal Library, Tanjore. Financial help has also been extended to Dr. U. V. Swaminatha Iyer's Library, Adyar, Madras, for similar purpose. Though the publication of rare manuscripts was started as early as 1909 by this library, only 12 works were taken up for publication till 1942. Of these, the printing of three works has not yet been completed.

Only in the year 1949-50 a regular scheme for the publication of manuscripts was prepared and accepted by the Government of Madras under the MADRAS GOVERNMENT ORIENTAL SERIES. This scheme included the manuscripts in all the South Indian Languages in which there are manuscripts in the Library. The selection of manuscripts was done by an Expert Committee appointed by the Government specially for this purpose. Till now 157 manuscripts in different languages have been printed. Of these, 35 manuscripts are from Tanjore Maharaja's Serfoji's Sarasvathi Mahal Library, Tanjore, and two from Dr. U. V. Swaminatha Iyer's Library, Adyar. In addition, three manuscripts, two from this library and one from Dr. U. V. Swaminatha Iyer Library, Adyar, are in the press.

While all the manuscripts under the Madras Government Oriental Series were edited by various scholars drawn from different learned institutions, the publication of manuscripts under the Madras Government Oriental Manuscripts Series was resumed in the year 1950--51. All the manuscripts published under this series before 1942 were in Sanskrit. But since 1950-51 the manuscripts in other languages also were included. These are edited by the Curator with the assistance of the Pandits in respective languages. Till now 60 works have been printed including the total number of 51 since 1951.

Since 1958-59, however, no fresh manuscripts were taken up for publication in both the series. There were several proposals for the printing of manuscripts. Of these, the Government of Madras have sanctioned the publication of the following seven Tamil manuscripts in G.O. No. 81859-E6/59-15, Education, dated 5th January 1960.

I. Government Oriental Manuscripts Library, Madras.

1 Tani-p-Pāḍalkaḷ.
2. Kēraḷa Dēśa Varalāṟu.
3. Yāpparuṅkala Virutti.
4. Kaṭṭabomman Varalāṟu.
5. Paḻamoḻi-t-Tiraṭṭu.
6. Kalambaka-k-Kottu.
7. Uttara Rāmāyaṇa Nāṭakam.

## II. Dr. U. V. Swaminatha Iyer Library, Adyar.

1. Manuvijñānēśvariyam.
2. Śuddhānanda Bharatam.

Of the seven manuscripts from this library, "Palamoli-t-Tirattu" has been dropped as it was found to contain many archaic proverbs. The entire publication has been recommended for aid from the Government of India under the scheme for the Development of Modern Indian Languages. It is also hoped that the Government of India aid will be forthcoming in due course. Since the amount has to be reimbursed from the Government of India, it was ordered that the expenditure on the scheme should be incurred before 31st March 1960. Though the time actually available for getting the manuscripts printed is less than two months, the publication has been started in right earnest and every possible efforts were made to complete the same before the stipulated time. There has, however, been one change in the scheme of publication as submitted by the Curator on account of the limited time available. Originally the above manuscripts were intended to be edited by outside scholars under the Madras Government Oriental Series but now they have been edited by the Curator himself with the assistance of Tamil staff of the library, under the Madras Government Oriental Manuscripts Series.

The late S. Bhavanandam Pillai of the Police Department, Madras, had a rich collection of printed books and a few manuscripts in TAMIL. They were deposited in the BHAVANANDAM ACADEMY that was started in his name. The High Court of Judicature at Madras, was kind enough to order the transfer of 94 paper manuscripts and 73 palm-leaf manuscripts from that Academy to the Government Oriental Manuscripts Library, Madras. In pursuance of that order, the Official Trustee of Madras, transferred them to this Library on 9th September 1953. Again, he transferred the following two manuscripts to this Library on 19th December 1957 :—

1. Yāpparuṅkala Virutti (with Kuṟippurai).
2. Tolkāppiyam–eḻuttadhikāram.

They were neatly written on paper, ready to be passed on to the press for printing on or about 1944. The former was edited by Vidvan M. V. Venugopala Pillai, a Tamil Pandit of Conjeevaram and the latter by the late C. R. Govindaraja Mudaliar, retired Tamil Pandit of the Pachayappa's College, Madras. These manuscripts bearing R. Nos. 7161 and 7162 respectively could not be taken up for publication immediately but the former has now been selected for publication under a scheme of the Government of India for the Development of Modern Indian Languages.

The staff of this library has not made any change in the press copy that was handed over by the Official Trustee of Madras. The entire press copy including the indices, etc., was prepared by Vidvan M. V. Venugopala Pillai. Though the text and the commentary were already printed some years ago by the late S. Bhavanandam Pillai himself, the same has been edited afresh by the learned Vidvan with very useful explanations, illustrations, etc., in the foot-notes. He has also added several indices. The work deals mainly with prosody

in Tamil poetry in an elaborate form. My thanks are due to Sri V. S. Krishnan, Pandit of this library who went through the proofs of the major portion of the text and also to Sri M. Pasupathy and Sri T. Krishnamurthi, Pandits of this library for going through the proofs of the preliminary matter and the appendices.

On account of the great speed with which the press copies were prepared, edited and rushed through the press, a few mistakes might have crept in. It is hoped that the learned scholars who read the work will make necessary corrections, if any.

In this connection, I shall be failing in my duty if I do not express my thanks to the Controller of Stationery and Printing, Madras, for scrutinizing the quotations of the private presses, for supplying the required stationery for printing, for passing the printing bills from the presses in a very short time and for taking up the printing of one of the manuscripts in the Government Press itself.

T. CHANDRASEKHARAN,
*Curator.*

Government Oriental Manuscripts Library,
Madras-5, 20th March 1960.

## உரிமையுரை

எழுசீர் ஆசிரிய விருத்தம்

கண்டவர் வியக்கும் கவினுறு வடிவும்
கலைதெரி புலமையும் சீர்சால்
தண்டமிழ் மொழியில் ஆர்வமும் அதனைத்
தழைத்திடச் செய்தலின் விருப்பும்
கொண்டநற் பெரியோய்! சரவண பவானந்
தன்னெனும் கோதிலாய்! கருத்தின்
எண்டகு மிந்நூற் பதிப்பினை யீந்தேன்
ஏன்றருள் உரிமையா இனிதே.

---மே. வீ. வே.




## பொருளடக்கம்

---

# திவான் பகதூர் சரவண பவானந்தம் பிள்ளையவர்கள் வாழ்க்கை வரலாற்றுச் சுருக்கம்.

"தோன்றிற் புகழொடு தோன்றுக; அஃதிலார்
தோன்றலின் தோன்றாமை நன்று." —திருக்குறள்.

என்னும் வள்ளுவர்தம் வாய்மொழியின் முற்பகுதிக்கு ஓர் எடுத்துக்காட்டாக இவ்வுலகில் தோன்றித் தம் புகழ் நிறுவிச் சென்ற பெருமக்களுள் **திவான் பகதூர் சரவண பவானந்தம் பிள்ளையவர்களும்** ஒருவர். இவர் **முத்துசாமி பிள்ளை** என்னும் வேளாண் குடிச்செல்வரும் **சந்திரமதி** என்னும் அவர்தம் மனைவியாரும் செய்த நற்றவப் பயனாய்த் தோன்றினர். 'விளையும் பயிர் முளையிலேயே தெரியும்,' என்னும் முதுமொழிக்கு ஏற்ப, இளமைப் பருவத்திலேயே இவரிடம் சீரிய குணங்கள் தோன்றித் தழைத்தன. இவர் இளமையில் கல்வி கேள்விகளில் தேர்ச்சியடைந்து, ஒழுக்கத்திற் சிறந்து, 'இம்மைந்தரைப் பெற இவர்தம் பெற்றோர் எத்தவம் இழைத்தனரோ!' என்று கண்டோர் கூற விளங்கினர். இவர் வழக்கறிஞராக விரும்பி இங்கிலந்து செல்ல முயன்றபோது, வைதிக மதப் பற்றுள்ளவராகிய இவர்தம் அன்னையார் மறுக்க, 'தாய் சொல் துறந்தால் வாசகம் இல்லை,' எனும் கட்டுரைக்கு இணங்கி, அக்கருத்தினை ஒழித்தனர்.

அந்நாளில் நகரக் காவற்படையின் திறத்தையும் உரத்தையும் வளர்க்கக் கருதின **கர்னல் டி. வெல்டன், ஸி. ஐ. இ.** என்னும் புகழ் பெற்ற நகரக் காவற்படை அதிகாரத் தலைவர், [1] கல்வியில் தேர்ந்த இளைஞரை நகரக் காவற்படையிற் சேர்க்க விரும்பிப் போட்டிப் பரீட்சை ஒன்றை ஏற்படுத்தினார். அப்பரீட்சை எழுதியவர்களுள் முதல்வராய்த் தேறிய பிள்ளையவர்களைக் கர்னல் வெல்டன் துரைமகனார் தாம் புதிதாக ஏற்படுத்திய **குற்ற வர்த்தமான விசாரணை வகுப்பில்** [2] தமது நேர்முகக் காரியஸ்தராக [3] நியமித்தனர். இவர் தாம் மேற்கொண்ட தொழில்களைக் கர்னல் வெல்டனும் பிறரும் கண்டு வியக்கும்படி செய்து, இளம்புகழ் ஈட்டினர்.

இவர் தென்னிந்தியாவிற் பற்பல இடங்களில் ஏற்பட்ட குழப்பங்களைத் திறம்பட அடக்கி, ஐரோப்பிய மேற்பார்வை உத்தியோகஸ்தர்களால் 'அற்புதம் விளைத்த விற்பன்னர்' எனப் புகழ்ந்து உரைக்கப்பட்டார்; கொலை, கொள்ளை, பொய்க் கையெழுத்து, மோசம் முதலிய சிக்கலான வழக்குகளைக் கண்டு பிடித்து, தமது நுண்ணறிவால், அவற்றின் உண்மையை நாடி அறிந்து வெளிப் படுத்தியதால், தம் மேலதிகாரிகளாலும் நீதிபதிகளாலும் மிகவும் பாராட்டப் பட்டனர். மனந்தடுமாறாமை, நேர்பட ஒழுகல், நிருவாக சாதுரியம் ஆகிய அரும்பண்புகள் இவரிடம் விளங்கின. இவர் சட்டப் பரீட்சையில் தேறாதவராயினும், தமக்கு இயற்கையிலேயே சட்ட நூல்களை ஆராய்வதில் ஏற்பட்டிருந்த பெருவிருப்பத்தால், அவற்றை நன்கு ஆய்ந்துணர்ந்த சட்ட அறிஞராவர்.

இவர் எப்.எல்., பி.எல்,. சட்டப் பரீட்சைகளுக்குரிய 30 நூல்களை ஆராய்ந்தெழுதிப் பதிப்பித்துள்ளார்.

*1904*-ஆம் ஆண்டு முதல் *1912*-ஆம் ஆண்டு வரையில் இவர் சென்னை நகரக் குற்ற வர்த்தமான விசாரணை வகுப்புத் தலைவராய் அமைந்து, அரசாங்கத்திற்கு அரிய சேவை செய்தனர்.

மாட்சிமை தங்கிய **வேல்ஸ்** இளவரசரும் இளவரசியரும் சென்னைக்கு விஜயம் செய்தபோது (1906 ஆம் ஜனவரி மீ 24-28 உ) அவர்களுக்கு மெய் காப்பாளராயிருக்கும் பொறுப்பை ஏற்று இவர் திறம்படச் செயலாற்றியதற்கு

---

1 Commissioner of Police. 2 The Criminal Intelligence Department. 3 Personal Officer.

வியந்து, இளவரசர் தம் திருக்கரத்தாலேயே விசேட விருதுப் பதக்கம் 1 ஒன்றை இவருக்கு அணிந்து மகிழ்ந்தார். மிண்டோ பிரபுவும் ஹார்டிஞ்சு பிரபுவும் சென்னையில் தங்கியிருந்த போதும் இவரே அவர்களுக்கு மெய் காப்பாளராயிருந்து, அவர்கள் மெச்சும்படி செயலாற்றினர்.

1918-ல் இவர் சென்னைத் தென் பாரிச நகரக் காவற்படை அதிகாரத் தலைமைப் பிரதிநிதியாய் இருந்தபோது இவர் ஆற்றிய செயல்கள் துரைத்தனத் தாரால் மிகப் பாராட்டப்பட்டன.

இங்ஙனம் முப்பத்தைந்தாண்டுகள் இவர் ஆற்றிய உத்தமத் தொண்டுகளைத் துரைத்தனத்தார் தொடர்ச்சியாக அரசாங்க அறிக்கைகளிலும் 2 வர்த்த மானப் பத்திரிகைகளிலும் அடிக்கடி புகழ்ந்திருக்கின்றனர். இவர் சென்னை ஷெரிப்பாயும் விளங்கினர்.

இவர் தமது உத்தியோக அலுவல்களைத் திறம்படச் செய்து புகழீட்டிய துடன் அமையாமல், நாட்டு மக்களின் நலம் கருதி அறிவுத் துறையிலும் பற்பல தொண்டுகள் ஆற்றி வந்தனர். இதனால், வர்த்தமானப் பத்திரிகைகள் இவரைப் **'பரோபகாரப் போலீஸ் உத்தியோகஸ்தர்'** எனப் பாராட்டியிருக் கின்றன.

இவர் தம் பெயரால் 'பவானந்தர் கழகம்' என்னும் கல்விக் கழகம் ஒன்றை நிறுவி, அதன் வளர்ச்சிக்காகவும் தொண்டுகளுக்காகவும் தாம் அரிதின் ஈட்டிய பெரும்பொருளை இறுதிமுறி 3 வாயிலாக அர்ப்பணம் செய்திருக் கின்றனர். பல துறைகளில் ஆராய்ச்சி புரிவதும், பொதுஜன நன்மைக்கான ஞானத்தையும் கல்வியையும் நீதி நெறியிலும் உடற்கூற்றுத் துறையிலும் மக்களிடையிற் பரவச் செய்வதுமே அக்கழகத்தின் நோக்கமாகும். அக்கழகச் சார்பில் இவரால் நிறுவப்பட்ட நூல் நிலையம் ஒன்று திகழ்கின்றது. அந்நூல் நிலையத்தில் சற்றேறக்குறைய நாற்பது ஆண்டுகளாக இவரால் அரிதின் முயன்று தொகுக்கப்பெற்ற பல்லாயிரம் நூல்கள்—ஏட்டு வடிவிலும் கையெழுத் திலும் அச்சிலும் அமைந்தவை—உள்ளன.

இவர் இலண்டன்மா நகர ராஜரிகத் தேச சரித்திர சங்கத்தில் ஓர் அங்கத்தினர்; 4 ராஜரிக ஆசிய சங்கத்திலும் ஓர் அங்கத்தினர் 5. தமிழ் நூல்கள் பலவற்றை இவர் பலவகைக் குறிப்புகளுடனும் ஆராய்ச்சி முகவுரை களுடனும் பதிப்பித்து வெளியிட்டுத் தமிழுலகத்திற்குச் சிறந்த தொண்டாற்றி யிருக்கின்றார். தமிழ் மொழியிடத்தும் தமிழரிடத்தும் இவருக்கிருந்த அன்பின் பெருக்கினை அளவிட்டுக் கூறல் இயலாது. தமிழிலக்கணங்களில் தொன்மை வாய்ந்தனவும் சிறந்தனவுமாகிய தொல்காப்பியம் பொருளதிகாரம் (நச்சினார்க் கினியர் பேராசியர் உரையுடன்), யாப்பருங்கல விருத்தியுரை, இறையனாரகப் பொருளுரை, பேரகத்தியத் திரட்டு, இராமானுசக் கவிராயர், சங்கர நமச்சி வாயப் புலவர், சிவஞான முனிவர் முதலிய உரையாசிரியர்களின் உரைகளைத் தழுவி எழுதப்பட்ட நன்னூல் காண்டிகையுரை முதலியவற்றை இவர் தம் பொருளைக்கொண்டு வெளியிட்டிருக்கின்றனர். இவரால் இயற்றப்பட்ட நாடகங்களும் மொழி பெயர்ப்பு நூல்களும் பல. இவர் இயற்றிய நாடகங்கள் இலண்டன்மா நகரத்தில் மாட்சிமை தங்கிய ஐந்தாம் ஜார்ஜ் சக்கரவர்த்தி யாரும் மேரி மகாராணியாரும் கண்டு களிக்க அவர்கள் முன்னிலையில் நடித்துக் காட்டப்பட்டமை இங்குக் குறிப்பிடத் தக்கது.

இவர் சென்னைப் பல்கலைக் கழகத் திராவிட வாசக சங்கத்திற்குத் தலைவ ராயும், ஷை பல்கலைக்கழக அதிகாரிகளால் நியமிக்கப்பட்ட திராவிடச் சொற்றொடராக்கச் சங்கத்தின் அங்கத்தினராயுமிருந்திருக்கிறார்; தென்னிந்திய ஆராய்ச்சிக் கழகத்தின் சபா நாயகருக்குப் பிரதிநிதியாய் 6 இருந்திருக்கிறார். இவர் இயற்றிய நூல்களிற் பல பல்கலைக்கழகச் சார்பில் நடைபெறும்

---

1 Special medal. 2 Administration Reports. 3 Will. 4 Fellow of the Royal Historical Society. 5 Member of the Royal Asiatic Society. 6 Vice-President.

கல்லூரிகளின் மாணவர்களுக்கும் உயர்தரப் பாடசாலைகளிற் பயிலும் மாணவர்களுக்கும் பாட புத்தகங்களாக அமைக்கப்பட்டன. இவர் இயற்றிய வாசக பாடங்கள் இளஞ்சிறுர்க்குப் பயன்பட்டு வருகின்றன.

இவர் தலைவராயும் அங்கத்தினராயும் அமர்ந்து தொண்டாற்றிய கலைக் கழகங்களும் சபைகளும் பலவாகும். அக்கழகங்களும் சபைகளும் இவரைப் பெரிதும் பாராட்டியுள்ளன. அவற்றைப்பற்றிய குறிப்புகள் யாவும் இவாது வாழ்க்கை, வரலாற்றைக் கூறும் விரிவான நூலில் வெளி வருமாதலின், விரிவஞ்சி இங்கு விடப்பட்டன.

இவர் அரசாங்கத்தாரால் பெற்ற பட்டங்களும் பரிசுகளும் மதிப்புரைகளும் பல. 1889-ஆம் ஆண்டு உத்தியோகத்திற் சேர்ந்த இவர், படிப்படியாய் உயர்ந்து, 1908-ஆம் ஆண்டு போலீஸ் அஸிஸ்டெண்டு கமிஷனர் பதவியை ஏற்றனர் ; 1918-ஆம் ஆண்டு டெபுடி கமிஷனர் பதவியை மேற்கொண்டனர்.

இவர் மாட்சிமை தங்கிய சக்கரவர்த்தியாருக்கும், அரசாங்கத்திற்கும், நாட்டுக்கும் ஆற்றிய அரும்பெருந் தொண்டுகளுக்காக ஆண்டுதோறும் ஆயுள் வரையில் இவருக்கு அறுநூறு ரூபாய் நிரந்தர வருமானமளிக்கும் ஜாகீர் ஒன்று 1922 ஹு ஏப்பிரல் மீ 12உ முதல் பயன் தருமாறு வழங்கப்பட்டது.

இவருடைய பக்தி மிகுந்த பரிசுத்தமான பிரமசரிய வாழ்க்கையும், இனிய குணமும், சிறந்த கலையுணர்வும், வசீகரத் தோற்றமும், வணங்கிய வாக்கும், நுணங்கிய கேள்வியும், வள்ளன்மையும், அடுத்தவரை ஆதரிக்கும் நற்பண்பும் இவரை எவரும் விரும்பிப் பாராட்டுதற்குரிய பண்புகளாயிருந்தன. 'கற்றேருடன் கலந்து உரையாடி மகிழ்வதிலும் பேரின்பம் வேறில்லை,' என்னும் கருத்துடன் இப்பெரியார் வாழ்ந்து வந்தமையின், புலவரும் கவிஞரும் போற்ற வாழ்ந்தவராவர்.

இங்ஙனம் அரசறிய வாழ்ந்து பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தது போலவும் ஊருணி நீர் நிறைந்தது போலவும் பலர்க்கும் பயன்படுபவராய் விளங்கிய இப்பெரியார், 1932-ஆம் ஆண்டு, மே மாதம் 20-ஆம் தேதி இம்மண்ணுலக வாழ்வை நீத்து, விண்ணுலகத்தார்க்கு நல்விருந்தினர் ஆயினர். இறைவன் திருவடி நிழலில் இவர் ஆன்மா என்றும் நிலவி இன்பம் திளைப்பதாகுக !

---

# யாப்பருங்கல விருத்தி

## பாயிரம்.

முழுதுல கிறைஞ்ச முற்றெருங் குணர்ந்தோன்
செழுமலர்ச் சேவடி செவ்விதின் வணங்கிப்
பாற்படு தென்றமிழ்ப் பரவையின் வாங்கி
யாப்பருங் கலநனி யாப்புற வகுத்தோன்
தனக்குவரம் பாகிய தவத்தொடு புணர்ந்த
குணக்கடற் பெயரோன் கொள்கையின் வழாஅத்
துளக்கறு கேள்வித் துகடீர் காட்சி
அளப்பருங் கடற்பெய ரருந்தவத் தோனே.

என்பது பாயிரம்.

**இதன் பொருள் :** முழுது உலகு இறைஞ்ச—மூவகை உலகமும் வணங்க, முற்றெருங்கு உணர்ந்தோன்—முழுதுடன் அறிந்தோனது, செழுமலர்ச் சேவடி செவ்விதின் வணங்கி—வளமலர் போலும் செய்ய அடிகளை முறைமையால் இறைஞ்சி பாற்படு செந்தமிழ்ப் பரவையின் வாங்கி—பாகுபாடு தென்றமிழ்க் கடல்வயினின்றும் வாங்கி, யாப்பு அருங்கலம் நனி யாப்பு உற வகுத்தோன்—'யாப்பு' என்னும் அருங்கலத்தை மிகவும் திண்ணிதாக வகுத்தோன், தனக்கு வரம்பாகிய தவத்தொடு புணர்ந்த—தனக்கு எல்லை தானேயாகிய தறவொடு பொருந்திய, குணக்கடற் பெயரோன் கொள்கையின் வழாஅ—குணசாகரப் பெயரோனது கோட்பாட்டின் வழுவாது நிற்கும், துளக்கு அறு கேள்வி—மயக்கம் அற்ற கேள்வியினையும், துகள்தீர் காட்சி—குற்றம் அற்ற அறிவினையும், அளப்பருங்கடற்பெயர்—அளத்தற்கு அரிய கடலினது பெயரினையும் உடைய, அருந்தவத்தோன்—அரிய தவத்தினை உடையோன் (என்றவாறு).

இன்—ஐந்தாவதன் உருபு ; வாங்கல்—அதன் வயிற்கோடல் ;
'நனியென் கிளவி மிகுதிப் பொருட்டே'.

என்றுராகலின், 'நனி' என்றதற்கு ஈண்டு 'மிகவும்' எனப் பொருள் கொண்டார். ஒடு—உடனிகழ்ச்சி.

'வகுத்தோன் தவத்தோன்,' என்று கூட்டுக. ஏகாரம், ஈற்றசை.

## சிறப்புப் பாயிரம்.

வெறிகமழ் தாமரை மீமிசை ஒதுங்கிய
அறிவனை வணங்கி அறைகுவன் யாப்பே.

என்பது சூத்திரம்.

நூல் நுதலியது உரைக்குமிடத்து நூலாமாறும், நூலின் விகற்பமும், 'நூல்' என்ற சொற்குப் பொருளும், நூலாற் பயனும் உரைத்து உரைக்கற் பாற்று.

நூலாவது,

முதல்நடு இறுதி மறுதலைப் படாது
தொகைவகை விரியின் உட்பொருள் தோன்ற
உரையொடு புணர்ந்த ஒழுக்கிற் றாகிச்
சூத்திரம் ஒத்துப் படலம் பிண்டமென்
றியாப்புறுத் தமைத்த அவயவத் தாகி

நடப்பது. என்னை ?

'நூலெனப் படுவது நுவலுங் காலை
முதலும் முடிவும் மாறுகோள் இன்றித்
தொகையினும் வகையினும் பொருண்மை காட்டி
உண்ணின் றகன்ற உரையொடு பொருந்தி
நுண்ணிதின் விளக்கல் அதுவதன் பண்பே.' 1

'அதுவே தானும் ஈரிரு வகைத்தே.' 2

'ஒருபொருள் நுதலிய சூத்திரத் தானும்
இனமொழி கிளந்த ஓத்தி னானும்
பொதுமொழி கிளந்த படலத் தானும்
மூன்றுறுப் படக்கிய பிண்டத் தானுமென்
றாங்கனை மரபின் இயலும் என்ப.' 3

என்றார் தொல்காப்பியனார் ஆகலின்.

அவற்றுட் சூத்திரமாவது, கருதிய பொருளைக் கைக்கொண்டு கண்ணாடியில் நிழல் போலத் தெரிவுறத் தோன்றச் செய்யப்படுவது. என்னை ?

'அவற்றுள், சூத்திரந் தானே
ஆடி நிழலின் அறியத் தோன்றி
நாடுதல் இன்றிப் பொருள்நனி விளங்க
யாப்பினுள் தோன்ற யாத்தமைப் பதுவே.' 4

என்றாராகலின்.

ஓத்தாவது, ஒப்புடைப் பொருளை ஓரிடத்துள் ஒற்றுமைப்பட வைப்பது ஆகும். என்னை ?

'நேரின மணியை நிரல்பட வைத்தாங்
கோரினப் பொருளை ஒருவழி வைப்ப
தோத்தென மொழிப உயர்மொழிப் புலவர்.' 5

என்றாராகலின்.

படலமாவது, வேற்றுமையுடைய பல பொருள்களால் தோற்றம் உடைத் தாகத் தொடர வைப்பது. என்னை ?

'ஒருநெறி இன்றி விரவிய பொருளாற்
பொதுமொழி தொடரின் அதுபடலம் ஆகும்.' 6

என்றாராகலின்.

---

1 தொல். பொ. செய். சூ. 166.
2 தொல். பொ. செய். சூ. 167.
3 தொல். பொ. செய். சூ. 168.
4 தொல். பொ. செய். சூ. 169.
5 தொல். பொ. செய். சூ. 170
6 தொல். பொ. செய். சூ. 171.

பிண்டமாவது, உறுப்பு மூன்றும்* உள்ளடக்கி, நெறிப்பாடு உடைத்தாய்க் கிடப்பது. என்னை ?

'மூன்றுறுப் படக்கிய தன்மைத் தாயின்
தோன்றுமொழிப் புலவர்அது பிண்டம் என்ப.' 1

என்றாராகலின்.

இனி, நூலின் விகற்பம் உரைக்குமாறு: நூல் முத்திறப்படும்: முதல் நூலும், வழி நூலும், சார்பு நூலும் என. என்னை ?

'முதல்வழி சார்பென நூல்மூன் றாகும்' 2

என்றாராகலின்.

முதல் நூலாவது, குற்றம் கெடுத்து முற்ற உணர்ந்த நற்றவத்தோன் சொற்ற தாகும். என்னை ?

'வினையின் நீங்கி விளங்கிய அறிவின்
முனைவன் கண்டது முதல்நூல் ஆகும்.' 3

என்றாராகலின்.

வழிநூலாவது, முதல் நூலோடு ஒத்த முடிவிற்றாய்த் தனது ஓர் விகற்பப் படக் கிடப்பது. என்னை ?

'முன்னோர் நூலின் முடிபொருங் கொத்துப்
பின்னோன் வேண்டும் விகற்பம் கூறி
அழியா மரபினது வழிநூல் ஆகும்.' 4

என்றாராகலின்.

சார்பு நூலாவது, அவ்விருவர் நூலுள்ளும் ஒரு வழி முடிந்த பொருளை ஓர் ஆசிரியன் யாதானும் ஓர் உபகாரம் நோக்கி ஒரு கோவைப்பட வைப்பது. என்னை ?

'இருவர் நூற்கும் ஒருசிறை தொடங்கித்
திரிபுவே றுடையது புடைநூல் ஆகும்.' 5

என்றாராகலின்.

நான்காவது 'எதிர்நூல்' என்பதும் ஒன்று உண்டு. யாது அது ? முதல்வன் நூலுள் முடிந்த பொருளை ஓர் ஆசிரியன் யாதானும் ஒரு காரணத்தாற் பிறழ வைத்தால், அதனைக் கருவியால் திரிபு காட்டி ஒருவாமை வைத்ததற்கு ஒள்ளியோன் ஒரு புலவனுன் உய்க்கப்படுவது. என்னை ?

'தன்கோள் நிறீஇப் பிறன்கோள் மறுப்ப
தெதிர்நூல் என்ப ஒருசா ரோரே.' 6

என்றாராகலின்.

---

1 தொல். பொ. செய். சூ. 172.
2 நன். பாயிரம், சூ. 6.
3 தொல். பொ. செய். மரபு. சூ. 94.
4 நன். பாயிரம், சூ. 7.
5 நன். பாயிரம், சூ. 8.
6 இறை. சூ. 1. உரை மேற்.

குறிப்பு—* உறுப்பு மூன்று—சூத்திரம், ஓத்து படலம் என்பவை.

இனி, 'நூல்' என்ற சொற்குப் பொருள் உரைக்குமாறு: நூல் போறலின், 'நூல்' எனப்படும். என்னை? பாவை போல்வாளைப் 'பாவை' என்றாற்போல. 'யாதோ நூல் போலுமாறு?' எனின், நுண்ணிய பலவாகிய பஞ்சின் நுனிகளால் கைவல் மகடூஉ தனது செய்கை நலம் தோன்ற மாண்பினால் ஓர் இழைப்படுத்தல் அன்றே உலகத்து நூல் நூற்றலாவது? அவ்வாறே, சுகிர்ந்து பரந்த சொற்பரவைகளால் பெரும்புலவன் தனது உணர்வு மாட்சியிற் சூத்திரம் ஓத்து, படலம், பிண்டம் என்னும் யாப்பு நடைபடக் கோத்தலாயிற்று நூல் செய்தலாவது. அவ்வகை நூற்கப்படுதலின், நூலெனப்படும்.

இனி, நூலாற் பயன் உரைக்குமாறு: நூல் கேட்டு விளங்கிய நுண்ணுணர்வினேன், அபாயம் இல்லாததோர் உபாயத்தினால் அறம், பொருள், இன்பம், வீடு என இவற்றை நிரம்புமாறு அறிந்து நிகழ்த்துவானும். அதனாற் பகரப்பட்ட நான்கினையும் பாரம்பரத்தால் பனுவலே பயப்பதாயிற்று எனக் கொள்க.

எழுத்து; (தொகை, வகை, விரி).

இனி, நூல் நுதலியது உரைக்குமாறு: சிறப்பெழுத்து, உறுப்பெழுத்து என்னும் தொகையானும்; ஒற்று, உயிர், உயிர்மெய் என்னும் வகையானும், உயிரும், மெய்யும், உயிர்மெய்யும், குறிலும், நெடிலும், அளபெடையும், வன்மையும், மென்மையும், இடைமையும், குற்றியலிகரமும், குற்றியலுகரமும், ஆய்தமும், ஐகாரக் குறுக்கமும், ஔகாரக் குறுக்கமும், மகரக் குறுக்கமும் என்னும் விரியானும்;

அசை, (தொகை, வகை, விரி).

நேரசை, நிரையசை என்னும் தொகையானும்; நேரசை, நிரையசை, நேர்பசை, நிரைபசை என்னும் வகையானும்; சிறப்புடை நேரசை, சிறப்பில் நேரசை, சிறப்புடை நிரையசை, சிறப்பில் நிரையசை, சிறப்புடை நேர்பசை, சிறப்பில் நேர்பசை, சிறப்புடை நிரைபசை, சிறப்பில் நிரைபசை என்னும் விரியானும்;

சீர்: தொகை, வகை, விரி).

இயற்சீர், உரிச்சீர், பொதுச்சீர், என்னும் தொகையானும்; நேரீற்றியற்சீர், நிரையீற்றியற்சீர், நேரீற்றுரிச்சீர், நிரையீற்றுரிச்சீர், நேரீற்றுப் பொதுச்சீர், நிரையீற்றுப் பொதுச்சீர் என்னும் வகையானும்; சிறப்புடை நேரீற்றியற்சீர்' சிறப்பில் நேரீற்றியற்சீர், சிறப்புடை நிரையீற்றியற்சீர், சிறப்பில் நிரையீற்றியற்சீர், சிறப்புடை நேரீற்றுரிச்சீர், சிறப்பில் நேரீற்றுரிச்சீர், சிறப்புடை நிரையீற்றுரிச்சீர், சிறப்பில் நிரையீற்றுரிச்சீர், சிறப்புடை. நேரீற்றுப் பொதுச்சீர், சிறப்பில் நேரீற்றுப் பொதுச்சீர், சிறப்புடை, நிரையீற்றுப் பொதுச்சீர், சிறப்பில் நிரையீற்றுப் பொதுச்சீர் என்னும் விரியானும்;

தளை, (தொகை, வகை, விரி).

வெண்டளை, ஆசிரியத்தளை, கலித்தளை, வஞ்சித்தளை என்னும் தொகையானும்; இயற்சீர் வெண்டளை, உரிச்சீர் வெண்டளை, பொதுச்சீர் வெண்டளை, நேரொன்று ஆசிரியத்தளை, நிரையொன்று ஆசிரியத்தளை, கலித்தளை, ஒன்றிய வஞ்சித்தளை, ஒன்றாத வஞ்சித்தளை என்னும் வகையானும்; இயற்சீர்ச் சிறப்புடை வெண்டளை, இயற்சீர்ச் சிறப்பில் வெண்டளை, உரிச்சீர்ச் சிறப்புடை வெண்டளை, உரிச்சீர்ச் சிறப்பில் வெண்டளை, பொதுச்சீர்ச் சிறப்புடை வெண்டளை, பொதுச்சீர்ச் சிறப்பில் வெண்டளை, நேரொன்றிய சிறப்புடை ஆசிரியத்தளை, நேரொன்றிய சிறப்பில் ஆசிரியத்தளை, நிரையொன்றிய சிறப்புடை ஆசிரியத்தளை, நிரையொன்றிய சிறப்பில் ஆசிரியத்தளை, சிறப்புடைக் கலித்தளை, சிறப்பில் கலித்தளை, ஒன்றிய சிறப்புடை வஞ்சித்தளை, ஒன்றிய சிறப்பில் வஞ்சித்தளை, ஒன்றாத சிறப்புடை வஞ்சித்தளை, ஒன்றாத சிறப்பில் வஞ்சித்தளை என்னும் விரியானும்;

---

குறிப்பு சுகிர்ந்து—பிளவுபட்டு, பாரம்பரம்—முறைமை, பனுவல்—நூல்.
சிறப்பெழுத்து=ஓரெழுத்தே ஒரு பொருளைப் பயந்து நிற்பன.
உறுப்பெழுத்து—இயைந்து பொருள் பயப்பன.

அடி; (தொகை, வகை, விரி).

இயலடி, உரியடி, பொதுவடி என்னும் தொகையானும்; குறளடி, சிந்தடி, அளவடி, நெடிலடி, கழிநெடிலடி என்னும் வகையானும்; இயற்குறளடி, உரிக் குறளடி, பொதுக்குறளடி, இயற்சிந்தடி, உரிச்சிந்தடி, பொதுச் சிந்தடி, இயல் அளவடி, உரி அளவடி, பொது அளவடி, இயல் நெடிலடி, உரி நெடிலடி, பொது நெடிலடி, இயற்கழிநெடிலடி, உரிக்கழிநெடிலடி, பொதுக் கழிநெடிலடி என்னும் விரியானும்;

தொடை; (தொகை, வகை, விரி).

மோனை, எதுகை, முரண், இயைபு, அளபடை, செந்தொடை, இரட்டைத் தொடை, அந்தாதித் தொடை என்னும் தொகையானும்; தலையாகு மோனை, இடையாகு மோனை, கடையாகு மோனை, தலையாகு எதுகை, இடையாகு எதுகை, கடையாகு எதுகை, சொல் முரண், பொருள் முரண், சொற்பொருள் முரண், மோனை முரண், எதுகை முரண், செம்முரண், மோனை இயைபு, எதுகை இயைபு, முரண் இயைபு, அளபெடை இயைபு, மயக்கு இயைபு, செவ்வியைபு, மோனை அளபெடை, எதுகை அள பெடை, முரண் அளபெடை, மயக்கு அளபெடை, செவ்வளபெடை, இயற்செந் தொடை, மருட்செந்தொடை, ஒரு பொருள் இரட்டை, இரு பொருள் இரட்டை, பல பொருள் இரட்டை, இரு முற்று இரட்டை, எழுத்து அந்தாதி, அசை அந்தாதி, சீர் அந்தாதி, அடி அந்தாதி, மயக்கு அந்தாதி, இடையிட்டு அந்தாதி என்னும் வகையானும்; அடி மோனை, இணை மோனை, பொழிப்பு மோனை, ஒரூஉ மோனை, கூழை மோனை, மேற்கதுவாய் மோனை, கீழ்க்கதுவாய் மோனை, முற்று மோனை, அடி எதுகை, இணை எதுகை, பொழிப்பு எதுகை, ஒரூஉ எதுகை, கூழை எதுகை, மேற்கதுவாய் எதுகை, கீழ்க்கதுவாய் எதுகை, முற்று எதுகை, அடி முரண், இணை முரண், பொழிப்பு முரண், ஒரூஉ முரண், கூழை முரண், மேற்கதுவாய் முரண், கீழ்க்கதுவாய் முரண், முற்று முரண்; அடி இயைபு, இணை இயைபு, பொழிப்பு அளபெடை, ஒரூஉ அளபெடை, கூழை இயைபு, மேற் கதுவாய் இயைபு, கீழ்க்கதுவாய் இயைபு, முற்று இயைபு; அடி அளபெடை, இணை அளபெடை, பொழிப்பு அளபெடை, ஒரூஉ அளபெடை, கூழை அள பெடை, மேற்கதுவாய் அளபெடை, கீழ்க்கதுவாய் அளபெடை, முற்று அள பெடை எனவும்; கடை இணை மோனை, பின் மோனை, இடைப்புணர் மோனை, கடைக் கூழை மோனை, கடை மோனை; கடை இணை எதுகை, பின் எதுகை, இடைப்புணர் எதுகை, கடைக்கூழை எதுகை, கடை எதுகை; கடை இணை முரண், பின் முரண், இடைப்புணர் முரண், கடைக்கூழை முரண், கடை முரண்; கடை இணை இயைபு, பின் இயைபு, இடைப்புணர் இயைபு, கடைக்கூழை இயைபு, கடை இயைபு; கடை இணை அளபெடை, பின் இணை அளபெடை, இடைப்புணர் அளபெடை, கடைக்கூழை அளபெடை, கடை அளபெடை எனவும்; அசை விரளச் செந்தொடை, சீர் விரளச் செந்தொடை, இசை விரளச் செந்தொடை, முற்று விரளச் செந்தொடை, குறையீற்று ஒரு பொருள் இரட்டை, குறையீற்றுப் பல பொருள் இரட்டை, நிறையீற்று ஒரு பொருள் இரட்டை, நிறையீற்று பல பொருள் இரட்டை, குறையீற்று முற்று இரட்டை, நிறையீற்று முற்று இரட்டை; மண்டில எழுத்து அந்தாதி, செந்நடை எழுத்து அந்தாதி, மண்டில அசை அந்தாதி, செந்நடை அசை அந்தாதி, மண்டில சீர் அந்தாதி, செந்நடைச் சீர் அந்தாதி, மண்டில அடி அந்தாதி, செந்நடை அடி அந்தாதி, மண்டில மயக்கு அந்தாதி, செந்நடை மயக்கு அந்தாதி, மண்டில இடையிட்டு அந்தாதி, செந்நடை இடையிட்டு அந்தாதி என்னும் விரியானும்;

வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா, மருட்பா என்னும் தொகை யானும்; குறள் வெண்பா, சிந்தியல்பா, இன்னிசை வெண்பா, நேரிசை வெண்பா, பஃறொடை வெண்பா; நேரிசை ஆசிரியப்பா, இணைக் குறள் ஆசிரியப்பா, நிலை மண்டில ஆசிரியப்பா, அடிமறி மண்டில ஆசிரியப்பா; நேரிசை ஒத்தாழிசைக் கலிப்பா, அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பா, வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பா, வெண் கலிப்பா, தரவு கொச்சகக் கலிப்பா, தாவிணைக் கொச்சகக் கலிப்பா, சிஃறாழிசைக் கொச்சகக் கலிப்பா, பஃறாழிசைக் கொச்சகக் கலிப்பா, மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா; குறளடி

வஞ்சிப்பா, சிந்தடி வஞ்சிப்பா, புறநிலை வாழ்த்து மருட்பா, வாயுறை வாழ்த்து மருட்பா, செவியறிவுறூஉ மருட்பா, கைக்கிளை மருட்பா என்னும் வகை யானும்; குறள் வெண்பா, விகற்பக் குறள் வெண்பா, நேரிசைச் சிந்தியல் வெண்பா, இன்னிசைச் சிந்தியல் வெண்பா, ஒரு விகற்ப நேரிசைச் சிந்தியல் வெண்பா, இரு விகற்ப நேரிசைச் சிந்தியல் வெண்பா, ஒரு விகற்ப இன்னிசைச் சிந்தியல் வெண்பா, இரு விகற்ப இன்னிசைச் சிந்தியல் வெண்பா, ஒரு விகற்ப நேரிசை வெண்பா, இரு விகற்ப நேரிசை வெண்பா, ஒரு விகற்ப இன்னிசை வெண்பா, பல விகற்ப இன்னிசை வெண்பா, பல விகற்ப நேரிசை வெண்பா, ஒத்த விகற்பப் பஃறொடை வெண்பா, ஒவ்வா விகற்பப் பஃறொடை வெண்பா, இன்னியல் நேரிசை ஆசிரியப்பா, விரவியல் நேரிசை ஆசிரியப்பா, இன்னியல் இணைக்குறள் ஆசிரியப்பா, விரவியல் இணைக்குறள் ஆசிரியப்பா, இன்னியல் நிலை மண்டில ஆசிரியப்பா, விரவியல் நிலை மண்டில ஆசிரியப்பா, இன்னியல் அடிமறி மண்டில ஆசிரியப்பா, விரவியல் அடிமறி மண்டில ஆசிரியப்பா; வெள்ளைச் சுரிதக நேரிசை ஒத்தாழிசைக் கலிப்பா, அகவற் சுரிதக நேரிசை ஒத்தாழிசைக் கலிப்பா, அளவியல் அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பா, அளவழி அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பா, அளவியல் வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பா, அளவழி வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பா, கலி வெண்பா, வெண்கலிப்பா, இயற்றரவு கொச்சகக் கலிப்பா, சுரிதகத் தரவு கொச்சகக் கலிப்பா, இயற்றரவிணைக் கொச்சகக் கலிப்பா, சுரிதகத் தரவிணைக் கொச்சகக் கலிப்பா, இயற்சிஃறாழிசைக் கொச்சகக் கலிப்பா, குறைச் சிஃறாழிசைக் கொச்சகக் கலிப்பா, இயற்பஃறாழிசைக் கொச்சகக் கலிப்பா, குறைப்பஃறாழிசைக் கொச்சகக் கலிப்பா, இயல் மயங் கிசைக் 'கொச்சகக் கலிப்பா, அயல் மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா; இன்னியற்குறளடி வஞ்சிப்பா, விரவியற்குறளடி வஞ்சிப்பா, இன்னியற்சிந்தடி வஞ்சிப்பா, விரவியற்சிந்தடி வஞ்சிப்பா; புறநிலை வாழ்த்துச் சமனிலை மருட்பா, புறநிலை வாழ்த்து வியனிலை மருட்பா, வாயுறை வாழ்த்துச் சமனிலை மருட்பா, வாயுறை வாழ்த்து வியனிலை மருட்பா, செவியறிவுறூஉச் சமனிலை மருட்பா, செவியறிவுறூஉ வியனிலை மருட்பா, கைக்கிளைச் சமனிலை மருட்பா, கைக்கிளை வியனிலை மருட்பா என்னும் விரியானும்;

பாவினம்: (தொகை, வகை, விரி).

தாழிசை, துறை, விருத்தம் என்னும் தொகையானும்; வெண்டாழிசை, வெண்டுறை, வெளி விருத்தம்; ஆசிரியத் தாழிசை, ஆசிரியத் துறை, ஆசிரிய விருத்தம்; கலித் தாழிசை, கலித்துறை, கலி விருத்தம்; வஞ்சித் தாழிசை, வஞ்சித் துறை, வஞ்சி விருத்தம் என்னும் வகையானும்; வெண்செந்துறை, குறட்டாழிசை, வெள்ளொத்தாழிசை, வெண்டாழிசை; ஓரொலி வெண்டுறை, வேற்றொலி வெண்டுறை; வெளி விருத்தம், வெளி மண்டில விருத்தம்; ஆசிரிய ஒத்தாழிசை, ஆசிரியத் தாழிசை; ஆசிரிய நேர்த்துறை, ஆசிரிய இணைக் குறட்டுறை; ஆசிரிய நிலை விருத்தம், ஆசிரிய மண்டில விருத்தம்; கலி ஒத்தாழிசை, கலித்தாழிசை, கலித்துறை, கலி விருத்தம்; கலி நிலைத்துறை, கலி மண்டிலத் துறை, கட்டளைக் கலித்துறை, கலி நிலை விருத்தம், கலி மண்டல விருத்தம், வஞ்சி நிலைத் தாழிசை, வஞ்சி மண்டிலத் தாழிசை, வஞ்சி நிலைத்துறை, வஞ்சி மண்டிலத்துறை, வஞ்சி நிலை விருத்தம், வஞ்சி மண்டில விருத்தம் என்னும் விரியானும்;

செப்பல், அகவல், துள்ளல், தூங்கல், கொஞ்சல் என்னும் தொகையானும்;

'பாஅ வண்ணம், தாஅ வண்ணம்,
வல்லிசை வண்ணம், மெல்லிசை வண்ணம்,
இயைபு வண்ணம், அளபெடை வண்ணம்,
நெடுஞ்சீர் வண்ணம், குறுஞ்சீர் வண்ணம்,
சித்திர வண்ணம், நலிபு வண்ணம்,
அகப்பாட்டு வண்ணம், புறப்பாட்டு வண்ணம்,
ஒழுகு வண்ணம், ஒரூஉ வண்ணம்,

எண்ணு வண்ணம், அகைப்பு வண்ணம்,
தூங்கல் வண்ணம், ஏந்தல் வண்ணம்,
உருட்டு வண்ணம், முடுகு வண்ணமோடு
ஆங்கவை என்ப அறிந்திசினோரே.' 1

என்னும் வகையானும்;

குறில் அகவல் தூங்கிசை வண்ணம் முதலாகிய வண்ணம் நூறு என்னும் விரியானும்; சுருங்கியும் விரிந்தும் கிடந்த தொன்னூல் யாப்புக்களது துணிபு நோக்கி, அரும்பொருட் பெருங்கேள்வி ஆசிரிய வசனங்களை ஆலம்பனமாக அருங்கல அணி ஒருங்கு கோத்தாற்போலவும், அலை கடல் கடைந்து அமுது கொண்டாற்போலவும் ஒருங்கு கோத்து ஒரு கோவைப்படுத்து எல்லார்க்கும் உணர்வு புலன் கொள்ளுமாற்றால் யாப்பு உணர்த்துதல் நுதலிற்று. இதனானே இது சார்பு நூல் என்பது முடிந்தது.

இனி, 'இவ்வோத்து என் நுதலிற்றோ?' எனின், அசைக்கு உறுப்பாம் எழுத்துக்களது பெயர் வேறுபாடு உணர்த்துதல் நுதலிற்று; அதனானே, 'எழுத்தோத்து' என்பதாயிற்று.

'இச்சூத்திரம் என் நுதலிற்றோ?' எனின், சிறப்புப் பாயிரம் உணர்த்துதல் நுதலிற்று. என்னை?

'வணக்கம் அதிகாரம் என்றிரண்டும் சொல்லச்
சிறப்பென்னும் பாயிர மாம்.'

என்றாராகலின்.

அச்சூத்திரப் பொருள் உரைக்கின்றுழிச் சூத்திரத்தின் விகற்பமும், 'சூத்திரம்' என்ற சொற்குப் பொருளும் உரைத்து உரைக்கப்படும்.

சூத்திரம் ஆறு வகைப்படும்: பெயர்ச் சூத்திரம், விதிச் சூத்திரம், விலக்கியற் சூத்திரம், நியமச் சூத்திரம், அதிகாரச் சூத்திரம், ஞாபகச் சூத்திரம் என. 'பெயரே தொகையே' என்ப ஆகலின்.

அவற்றுள் பெயர்ச் சூத்திரமாவது, இடுகுறியானும் காரணக் குறியானும், பொது வகையானும் இலக்கணங்கட்கு ஓர் உபகாரம் நோக்கி, 'இஃது இதற்குப் பெயர்,' என்று இடுவது.

விதிச் சூத்திரமாவது,

'இன்ன தொன்றிற் கிதுவாம் என்று
முன்னில் லதனை மொழிவ தாகும்.'

விலக்கியற் சூத்திரமாவது, பொது வகையான் விதிக்கப்பட்டதனை அவ்வகை ஆகாது என்பது.

நியமச் சூத்திரமாவது, முன் ஒன்றானல் முடிய வைத்துப் பின்னும் அதனையே எடுத்துக்கொண்டு விதி முகத்தான் விலக்குவதூஉம், விலக்கும் வகையான் விதிப்பதூஉம் ஆம் எனக் கொள்க.

அதிகாரச் சூத்திரமாவது, ஆற்றொழுக்கு, அரிமான் நோக்கம், சார்ச்சி வழி* ஒழுகுதல், தவளைப் பாய்த்து என்பவற்றுள் ஒன்று ஏற்கும் வகையால் இயைந்து பொருள் விளைப்பது.

---

1 தொல். பொ. செய். சூ. 213.
குறிப்பு.—ஆலம்பனம்—பற்றுக்கோடு.
பி. ம: * சாரச்சில்வழி.

ஞாபகச் சூத்திரமாவது, எளிதும் சிறிதுமாக இயற்றற்பாலதனை அரிதும் பெரிதுமாக இயற்றிப் பிறிதொரு பொருளை அறிவிப்பது.

'பரிபாடைச் சூத்திரம்' என்பனவும் உள. அவை ஈண்டுத் தந்திர உத்தியுள்ளே பட்டு அடங்கும் எனக் கொள்க.

இவற்றை விகற்பித்துப் பல படுத்துச் சொல்வாரும் உளர்.

முதற்சூத்திரம் நான்கு வகைப்படும் : வழிபடு தெய்வ வணக்கம் செய்தலும், மங்கல மொழி முதல் வகுத்து எடுத்தலும், தொகை வகை விரியால் நுதலிப் புகுதலும், சொல்லத் தகும் பொருளை எடுத்து உரைத்தலும் என.

இனிச் 'சூத்திரம்' என்ற சொற்குப் பொருள் உரைக்குமாறு :

ஏற்புடைப் பொருளெலாம் தோற்றுமாறு
சூத்திரித்து நடத்தலிற் சூத்திரம் எனப்படும்.

அது வடமொழித் திரிசொல் எனக் கொள்க. சூத்திரப் பொருள் உரைக்கின்றுழிப் பல திறத்தானும் உரைப்ப. என்னை ?

'முத்திறத் தானும் மூவிரு விகற்பினும்,
பத்துவிதத் தானும் பதின்மூன்று திறத்தானும்
எழுவகை யானும் இரண்டுகூற் றானும்
வழுவுநனி நீங்க மாண்பொடும் மதத்தொடும்
யாப்புறத் துரைப்பது சூத்திர உரையே.'

என்பது ஆகலின்.

அவற்றுள் முத்திறமாவன பொழிப்பு, அகலம், நுட்பம் என இவை.

மூவிரு விகற்பமாவன, எடுத்துக் காட்டல், பதம் காட்டல், பதம் விரித்தல், பதப்பொருள் உரைத்தல், வினாதல், விடுத்தல் என இவை.

பத்து விதமாவன,

'சொல்லே சொற்பொருள் சோதனை மறைநிலை
இலேசே எச்சம் நோக்கே துணிபே
கருத்தே செலுத்தலென் றீரைங் கிளவியும்
நெறிப்பட வருவது பனுவல் உரையே.'

என்று ஓதப்பட்டன.

பதின்மூன்று திறமாவன சூத்திரம் தோன்றல், சொல் வகுத்தல், சொற்பொருள் உரைத்தல், வினாதல், விடுத்தல், விசேடம் காட்டல், உதாரணம் காட்டல், ஆசிரிய வசனம் காட்டல், அதிகார வரவு காட்டல், கொடுத்து முடித்தல், விரித்துக் காட்டல், துணிவு கூறல், பயனொடு புணர்த்தல் என இவை.

எழுவகையாவன, பொழிப்பு, அகலம், நுட்பம், நூல் எச்சம், பதப்பொருள் உரைத்தல், ஏற்புழிக் கோடல், எண்ணல் என இவை.

இரண்டு கூறாவன, தொகுத்துக் கண்ணழித்தல், விரித்துக் கொணர்ந்து உரைத்தல் என இவை.

வழுவாவன,

'குன்றக் கூறல், மிகைபடக் கூறல்,
கூறியது கூறல், மாறுகொளக் கூறல்,
வழூஉச்சொற் புணர்த்தல் மயங்க வைத்தல்,
வெற்றெனத் தொடுத்தல், மற்றொன்று விரித்தல்,
சென்றுதேய்ந் திறுதல், நின்றுபயன் இன்மை' 1

என இவை.

மாண்பாவன,

'சுருங்கச் சொல்லல், விளங்க வைத்தல்,
நவின்றோர்க் கினிமை, நன்மொழி புணர்த்தல்,
ஓசை உடைமை, ஆழமுடைத் தாதல்,
உலகம் மலையாமை, முறையின் வைத்தல்,
விழுமியது பயத்தல், விளங்குதா ரணத்த
தாதல் . . . . 2

என இவை.

எழுவகை ஆசிரிய மதமாவன,

'உடன்படல், மறுத்தல்,
பிறர்தம் மதமேற் கொண்டு களைதல்,
தாஅன் நாட்டித் தனாது நிறுத்தல்,
இருவர் மாறுகோள் ஒருதலை துணிதல்,
பிறர்நூற் குற்றம் காட்டல், ஏனைப்
பிறிதொடு படாஅன் தன்மதம் வடுத்தல்' 3

என இவை.

இவ்வகையே புகுந்தன புகுந்தன பரப்பி உரைப்பான் புகில், இகந்து பட்ட உரையிற்றும், எடுத்துக்கொள்ளப்பட்ட பொருளவற்றுள் யாதானும் ஒரு வகையாற் கேட்போர் உணர்வு புலன் கொள்ளுமாற்றால் எடுத்துக் கொண்ட சூத்திரப் பொருள் உரைக்க வேண்டும் என்பது ஈண்டுத் துணிபு. அஃது ஆமாறு :

'வெறிகமழ் . . . யாப்பே', என்பது, 'நறுநாற்றம் கமழும் தாமரைப் பூவின்மேல் நடந்த அறிவனை இறைஞ்சிச் சொல்லுவன் யாப்பு' என்றவாறு

'இப்பொருளைச் சொல்லுமோ இச்சூத்திரத் தொடர்மொழி?' என்னில் சொல்லும். என்னை? 'வெறி' என்பது, 'நறுநாற்றம்' என்றவாறு; 'கமழ்' என்பது, 'நாறுதல்' என்றவாறு; அது, 'வெறிகமழ், சந்தனம்'. 'வெறி கமழ் துழாய்' என்றாற்போலக் கொள்க. 'தாமரை' என்றது, தாமரைப்பூ' என்றவாறு, இது 'முதலிற்கூறும் சினையறி கிளவி.' 4

'தாமரை புரையும் காமர் சேவடி' 5

என்றாற்போலக் கொள்க. 'மீமிசை' என்பது, 'மேன்மேல்' என்றவாறு. 'மீமிசை' என்பது, ஒரு பொருட்பன்மொழி சிறப்புப்பற்றி வந்தது. என்னை?

---

1 நன். பாயிரம், சூ. 11.
2 நன். பாயிரம். சூ. 12.
3 நன். பாயிரம். சூ. 10.
4 தொல். சொல். வேற். மயங். சூ. 31.
5 குறுந் கட. வாழ்.

'ஒருபொருட் பன்மொழி சிறப்பினின் வழாஅ.' 1

என்றாராகலின், அஃது,

'அடுக்கன் மீமிசை அருப்பம் பேணாது' 2

என்றாற்போலக் கொள்க. 'ஓதுங்கல்' என்பது, நடத்தல். அது,

'போதியங் கிழவனை பூமிசை ஒதுங்கினை' 3

என்றாற்போலக் கொள்க. எல்லாப் பொருளையும் ஒருகணத்திற்றானே அறிந்தமையால், 'அறிவன்' என்பது காரணக்குறி; 'ஐ' என்பது இரண்டாம் வேற்றுமை. 'வணங்கி' என்பது, 'இறைஞ்சி' என்றவாறு. 'வணங்கி' எனினும், 'இறைஞ்சி' எனினும், 'பணிந்து' எனினும் ஒரு தொழில். 'அறைகுவன்' என்பது, 'சொல்லுவன்' என்றவாறு. அறைகுவன்' எனினும், 'மொழிகுவன்' எனினும், 'சொல்லுவன்' எனினும் ஒக்கும். 'யாப்பு' என்பது, 'யாப்பு என்னும் அதிகாரம்' என்றவாறு. 'யாப்பு' எனினும், 'பாட்டு' எனினும், 'தூக்கு' எனினும், 'செய்யுள்' எனினும், 'தொடர்பு' எனினும் ஒக்கும். ஏகாரம், தேற்றேகாரம்; 'பிரிநிலை' எனினும், அமையும். என்னை?

'தேற்றம் வினாவே பிரிநிலை எண்ணே
ஈற்றசை இவ்வைந் தேகா ரம்மே.' 4

என்றாராகலின்.

'வழிபடு தெய்வ வணக்கம் செய்து, மங்கல மொழி முதல் வகுத்து எடுத்தாக் கொண்ட இலக்கண இலக்கியம் இடுக்கண் இன்றி இனிதுமுடியும்,' என்ப ஆகலின், இச்சூத்திரம் இவ்வாறு கூறப்பட்டது எனக்கொள்க. தெய்வ வாழ்த்து முதலிய செய்யுளுள்ளும்,

'ஆதியங் கடவுளை அருமறை பயந்தனை
போதியங் கிழவனை பூமிசை ஒதுங்கினை
சேதியஞ் செல்வ! நின் திருவடி பரவுதும். 5
'காமனைக் கடிந்தனை காலனைக் கடந்தனை
தேமலர் மாரியை திருமறு மார்பினை
மாமலர் வண்ண! நின் மலரடி வணங்குவதும்.' 6
'ஆரருள் பயந்தனை ஆழ்துயர் தவிர்த்தனை
ஓரருள் ஆழியை உலகுடை ஒருவனை
சீரருள் மொழியைநின் திருவடி பரவுதும்.' 7

எனக் கொள்க.

பாயிரம் முற்றியது.

---

1 நன். பொது. சூ. 47
2 மலைபடு. 19.
3 சூளா. இரத. 96.
4 தொல். இடை. சூ. 9
5–7 சூளா. இரத. 95–98.

குறிப்பு.—முதலிற் கூறும் சினையறிகிளவி—முதலாகு பெயர், காரணக்குறி—காரணப் பெயர், 'ஐ' என்றது, 'அறிவனை' என்பதிலுள்ள உருபை.

யாப்பு" என்பது "யாப்பு" என்னும் அதிகாரத்தை உணர்த்துங்கால் கருவியாகு பெயராம்.

# I. உறுப்பியல்

## க. எழுத்தோத்து

### யாப்பு.

எழுத்தசை சீர்தளை அடிதொடை தூக்கொடு
இழுக்கா நடைய தியாப்பெனப் படுமே.

'என்பது என் நுதலிற்றோ?' எனின், 'யாப்பாவது இன்னது,' என்று தொகுத்து உணர்த்துதல் நுதலிற்று.

**இதன் பொழிப்பு**: எழுத்தும், அசையும், சீரும், தளையும், அடியும், தொடையும், தூக்கும் என்னும் இவ்வேழுறுப்போடும் புணர்ந்து குற்றமின்றி நடைபெறுவது 'யாப்பு' என்று சிறப்பித்துச் சொல்லப்படுவது (என்றவாறு).

உம்மைகள் தொக்கன. 'ஓடு,' எண் ஓடு.

'இவ்வேழுறுப்பினும் தீர்ந்து யாப்பு உண்டோ?' எனின், இல்லை.

'என் போல?' எனின், முப்பத்திரண்டு உறுப்பொடு புணர்ந்தது மக்கட் சட்டகம் என்றால், முப்பத்திரண்டு உறுப்பினும் தீர்ந்து மக்கட்சட்டகம் இல்லை. அதுபோலக் கொள்க. அல்லதூஉம், பிறரும் கூறினார். என்னை?

'யாப்பெனப் படுவ தியாதென வினவின்
தூக்கும் தொடையும் அடியுமிம் மூன்றும்
நோக்கிற் றென்ப நுணங்கி யோரே.'

என்றார் நற்றத்தனார்.

'இமிழ்கடல் வரைப்பின் எல்லையின் வழாஅத்
தமிழியல் வரைப்பிற் றானினிது விளங்கி
யாப்பிய றானே யாப்புற விரிப்பின்,
எழுத்தசை சீர்களை அடிதொடை தூக்கொடு
இருக்கா மரபின் இவற்றொடு பிறவும்
ஒழுக்கல் வேண்டும் உணர்ந்திசி னோரே.'

என்றார் பல்காயனார்.

இவற்றை இடுகுறியானும் காரணக்குறியானும் வழங்குப. அவற்றுள் காரணக்குறியான் வழங்குமாறு:

'எழுதப் படுதலின் எழுத்தே; அவ்வெழுத்து
அசைத்திசை கோடலின் அசையே; அசையியைந்து
சீர்கொள நிற்றலிற் சீரே; சீரிரண்டு
தட்டு நிற்றலிற் றளையே; அத்தளை

---

குறிப்பு—32 உறுப்பாவன, திருவரங்கக் கலம்பகம் 56-ஆம் செய்யுளிற் கண்டு கொள்க; மக்கட் சட்டகம்—மனித சரீரம். விளங்கியாப்பியல்—(விளங்கு+யாப்பியல்) வினைத் தொகை.

அடுத்து நடத்தலின் அடியே; அடியிரண்டு
தொடுத்தல் முதலாயின தொடையே; அத்தொடை
தூங்கித் * தொடர்ந் திசைத்தலின் தூக்கெனப் படுமே.'

என்றார் ஆசிரியர் எனக் கொள்க.

'இவை இம்முறையே வைத்ததற்கு என்னையோ காரணம்?' எனின், எழுத்து எல்லா உறுப்புக்கும் முதற்காரணம் ஆதலின், சிறப்புடைத்து என்று முன் வைத்தார். என்னை?

'சிறப்புடைப் பொருளை முந்துறக் கிளத்தல்.'

என்பது தந்திர உத்தி ஆகலான். எழுத்தின் பின்னர் அசை வைத்தார், அசை எழுத்தினான் ஆமாகலின். அசையின் பின்னர்ச் சீர் வைத்தார், சீர் அசையினான் ஆமாதலின். சீரின் பின்னர்த் தளை வைத்தார். தளை சீரினான் ஆமாகலின். தளையின் பின்னர் அடி வைத்தார், அடி தளையினான் ஆமாகலின். அடியின் பின்னர்த் தொடை வைத்தார், தொடை அடியினான் ஆமாகலின். தொடையின் பின்னர்த் தூக்கு வைத்தார், தூக்குத் தொடையினான் ஆமாகலின். 'தூக்கு' எனினும், 'பாட்டு' எனினும், 'பா' எனினும் ஒக்கும். என்னை?

'யாப்புத்
தூக்கும் பாட்டும் பாவும் ஒன்றென †
நோக்கிற் றென்ப நுணங்கி யோரே.'

என்றார் பல்காயனார் ஆகலானும்,

'பாவென மொழியினும் தூக்கினது பெயரே.'

என்றார் நற்றத்தனார் ஆகலானும் எனக் கொள்க.

'எழுத்தசை சீர்தளை அடிதொடை தூக்கோ டியாப்பு' என்றது, 'இழுக்கா நடைய தியாப்பெனப் படுமே,' என்றமையான், 'அவை முற்றிய ஆறு உறுப்பிற்று ஆயினும், குற்றமின்றி நடைபெறுவது 'யாப்பு' என்று சிறப்பித்துச் சொல்லப்படுவது,' எனக் கொள்க. 'சிறப்பு என்பது எற்றாற் பெறுதும்?' எனின், 'என' என்னும் சொல்லாற் பெறுதும். அது சிறப்பினைக் கூறுமோ?' எனின், கூறும்; என்னை?

'நளியிரு முந்நீர் ஏணி யாக' 1

என்னும் புறப்பாட்டினுள்,

'முரசுமுழங்கு தானை மூவி ருள்ளும்
அரசெனப் படுவது நினதே பெரும! 2

எனவும்,

'ஆடுகழைக் கரும்பின் வெண்பூ நுடங்கும்
நாடெனப் படுவது நினதே யத்தை.' 3

எனவும் சிறப்புப் பற்றிப் புணர்த்தார் சான்றோர் ஆகலானும்,

---

1-3. புறம். 35.

பி-ம்: * தூக்கிற். † தொடர்பும் செய்யுளை.

குறிப்பு:—தூங்குதல்—செறிதல்: தூங்கிருள் இறும்பில் (புறம்: 126.) 'அவை முற்றிய' என்பது எழுத்து அசை முதலிய உறுப்புக்களைக் குறிக்கும்.

'நாடெனப்படுவது சோழநாடு'

'ஊரெனப்படுவது உறையூர்'

என்று பரவை வழக்கினுள்ளும் சிறப்பித்துச் சொல்லுவார், ஆகலானும் எனக் கொள்க. எனவே, எழுத்துக் குற்றம் முதலாக உடைய செய்யுள் 'யாப்பு' என்று கூறப்படாது என்பது பெறப்பட்டதாயிற்று எனக் கொள்க.

அஃதே எனின், 'எழுத்தசை சீர்தளை அடிதொடை தூக்கோடு இழுக்காதது யாப்பெனப் படுமே,' என்றாலும் கருதிய பொருளைப் பயக்கும். 'நடையதி யாப்பு' என்று மிகுத்துச் சொல்ல வேண்டியது என்னை?' எனின், 'வனப்புடைத்* தொடக்கத்து ஒருசாரனவும் யாப்புறுப்பு', என்பது அறிவித்தற்கு வேண்டப்பட்டது. அவை போக்கி, 'நிரனிறை முதலிய பொருள்கோட் பகுதியும்'1 என்னும் ஒழிபியற் சூத்திரத்துட் சொல்லுவதும்.

'நாதன் முதலாக நல்லுறுப் பேழியைந்
தேதமில் தன்மை இயலரசாம்;†—தாதுக்கள்
ஏழும் புணர்ந்த தியாக்கை; எழுத்தாதி
ஏழும் புணர்ந்த தியாப்பு.

'தொல்காப் பியப்புலவோர் தோன்ற விரித்துரைத்தார்;
பல்காய னார்பகுத்துப் பன்னினார்;—நல்யாப்புக்
கற்றார் மதிக்கும் கலைக்காக்கை பாடினியார்
சொற்றார்தம் நூலுள் தொகுத்து.'

இவற்றை விரித்துரைத்துக் கொள்க.

2] அசைக்கு உறுப்பாம் எழுத்தின் வகை.

உயிரே மெய்யே உயிர்மெய் யென்றா
குறிலே நெடிலே அளபெடை யென்றா
வன்மை மென்மை இடைமை யென்றா
சார்பிற் றோன்றும் தன்மைய வென்றா
ஐஔ மகரக் குறுக்கம் என்றாங்கு
ஐம்மூ வெழுத்தும் ஆமசைக் குறுப்பே.

'என்பது என் நுதலிற்றோ?' எனின், அசைக்கு உறுப்பாம் எழுத்துக்களினது பெயர் வேறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

**இதன் பொழிப்பு**: உயிரும், மெய்யும், உயிர்மெய்யும், குறிலும், நெடிலும், அளபெடையும், வன்மையும், மென்மையும், இடைமையும், சார்பில் தோன்றும் இயற்கைய மூன்றும், ஐகாரக் குறுக்கமும், ஔகாரக் குறுக்கமும், மகரக் குறுக்கமும் என்றிப்பதினைந்து திறத்து எழுத்தும் அசைக்கு உறுப்பாவன (என்றவாறு).

---

1. யா. வி. சூ. 95.
* பி-ம்: அரவ வனப்புடை. † இயலரசாம்.

குறிப்பு—பரவை வழக்கு—உலக வழக்கு; நாதன் முதலாக நல்லுறுப்பு ஏழு—அரசன், படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு, அரண் என்னும் அரசியல் உறுப்புக்கள். தாதுக்கள் ஏழு—இரதம், உதிரம், எலும்பு, தோல், இறைச்சி, மூளை, சுக்கிலம்.

உயிராவன, அகரம் முதல் ஔகாரம் ஈறுய்க் கிடந்த பன்னிரண்டு எழுத்தும் எனக் கொள்க. என்னை ?

'அகரம் முதலா ஔகாரம் ஈறு
இசையொடு புணர்ந்த ஈராறும் உயிரே.'

என்பது சங்க யாப்பு ஆகலின்.

மெய்யாவன, ககரம் முதல் னகரம் ஈறுய்க் கிடந்த பதினெட்டு எழுத்தும் எனக் கொள்க. என்னை ?

'ககரம் முதலா னகரம் ஈறு
இவையீ ரொன்பதும் மெய்யென மொழிப.'

என்பது சங்க யாப்பு ஆகலின்.

'மெய்' எனினும், 'உடம்பு' எனினும் 'உறுப்பு' எனினும் ஒக்கும்.

உயிர்மெய்யாவன, உயிரும் மெய்யும் கூடின எழுத்தெனக் கொள்க. என்னை ?

'உயிரும் மெய்யும் புணர்ந்த புணர்ச்சி
உயிர்மெய் என்றுங் குணர்ந்தனர் கொளலே.'

எனவும்,

'உயிரும் மெய்யும் ஓராங் கியைந்த
உயிர்மெய் என்ப உணர்ந்திசி னோரே.'

எனவும்,

'உயிரின் அளபே அளபென மொழிப.'

எனவும்,

'உயிரின் அளவுயிர் மெய்யென மொழிப
வழக்கொடு வரூஉங் காலை யான.'

எனவும் சொன்னுர் தொல்லாசிரியர் எனக் கொள்க.

பதினெட்டு மெய்மேலும் பன்னிரெண்டு உயிரும் ஏற இருநூற்று ஒரு பத்தாறு உயிர்மெய்யாம். என்னை ?

'உயிரீ ராறே; மெய்மூ வாறே;
அம்மூ வாறும் உயிரொ டுயிர்ப்ப
இருநூற் றொருபத் தாறுயிர் மெய்யே.'

என்பது பல்காயம் ஆகலின்.

குற்றெழுத்தாவன, அ, இ, உ, எ, ஒ என்னும் இவ்வைந்தும் எனக் கொள்க. என்னை ?

'குறிலோ ரைந்தும் அறிவுறக் கிளப்பின்
அஇ உஎ ஒஎனும் இவையே.'

என்பது சங்க யாப்பு ஆகலின்.

நெட்டெழுத்தாவன, ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ என்னும் இவ்வேழும் எனக் கொள்க. என்னை ?

'ஆஈ ஊஏ ஐஓ ஔவெனும்
ஏழும் நெட்டெழுத் தென்றல் இயல்பே.'

என்பது சங்க யாப்பு ஆகலின்.

'அஇ
உஎ ஒஇவை குறிய மற்றை
ஏழ்நெட் டெழுத்தா நேரப் படுமே.'

இஃது அவிநயம்.

'குற்றெழுத் துத்தொண் ணூற்றைந் தாகும்;
நூற்றொடு முப்பத்து மூன்று நெடிலாம்;
இருநூற் றிருபத் தெட்டு விரிந்தன
உயிரே வன்மை மென்மை இடைமை.'

இஃது அவிநயம்.

அளபடையாவன, மாத்திரை குன்றலிற் சீர் குன்றித் தலைகெட நின்ற விடத்து யாப்பழியாமைப்பொருட்டு வேண்டப்பட்டன. என்னை ?

'மாத்திரை வகையாற் றளைதபக் கெடாநிலை
யாப்பழி யாமைநின் றளபெடை வேண்டும்.'

என்ப ஆகலின்.

அவ்வளபெடைதான் இரண்டு வகைப்படும்: உயிரளபெடையும், ஒற்றளபெடையும் என. என்னை ?

'உயிரள பெடையும் ஒற்றள பெடையுமென்
றுயிரண் டென்ப அளபெடை தானே.'

என்ப ஆகலின்.

உயிருள் நெட்டெழுத்து ஏழும் அளபெடுக்கும். அவை அளபெடுக்கு மிடத்து ஆ, ஈ, ஊ, ஏ, ஓ என்னும் ஐந்தும் தமக்கு இனமாகிய குற்றெழுத் தினோடு அளபெடுக்கும். ஐகாரம், இகரத்தோடு அளபெடுக்கும். ஔகாரம், உகரத்தோடு அளபெடுக்கும். என்னை ?

'குன்றிசை மொழிவயின் நின்றிசை நிறைக்கும்
நெட்டெழுத் திம்பர் ஒத்தகுற் றெழுத்தே.' 1
'ஐஔ என்னும் ஆயீ ரெழுத்திற்கு
இகர உகரம் இசைநிறை வாகும்.' 2

என்றார் தொல்காப்பியனார் ஆகலின்.

அவ்வளபெடைதான் நான்கு வகைப்படும்: தனிநிலை அளபெடையும், முதல் நிலை அளபெடையும், இடைநிலை அளபெடையும், இறுதிநிலை அளபெடையும் என. என்னை ?

1 தொல். எழுத்து. சூ. 41. 2 தொல். எழுத்து. சூ. 42.

'தனிநிலை முதனிலை இடைநிலை ஈறென
நால்வகைப் படூஉமள பாய்வரும் இடனே.'

என்றார் ஆகலின். அவை வருமாறு:

(1) ஆஅ, ஈஇ, ஊஉ, ஏஎ, ஐஇ, ஓஒ, ஔஉ—என நெட்டெழுத்து ஏழும் தனிநிலை அளபெடையாய் வந்தவாறு.

(2) பாஅரி, கீஇரை, கூஉரை, ஏஎரி, தைஇயல், ஓஒரி, ஔஉவை என ஏழு நெட்டெழுத்தும முதல்நிலை அளபெடையாய் வந்தவாறு.

(3) படாஅகை, பரீஇகம், கழூஉமணி, பரேஎரம், வளைஇகம், புரோஒசை, மனௌஉகம்—என ஏழு நெட்டெழுத்தும் இடைநிலை அளபெடையாய் வந்த வாறு.

(4) படாஅ, குரீஇ, கழூஉ, விலேஎ, விரைஇ, நிலோஒ, அனௌஉ—என ஏழு நெட்டெழுத்தும இறுதிநிலை அளபெடையாய் வந்தவாறு.

ஒற்றளபெடை போக்கித் 'தனிநிலை ஒற்றிவை தாமல கிலவே,' 1 என்னும் சூத்திரத்துட் காட்டுதும்.

குற்றெழுத்து ஒரு மாத்திரை, நெட்டெழுத்து இரண்டு மாத்திரை, அளபெடை மூன்று மாத்திரை எனக் கொள்க. என்னை?

'குறிலொரு மாத்திரை, நெடிலிரு மாத்திரை
அளபெடை மூன்றென் றறியல் வேண்டும்.'

என்பது பல்காயம் ஆகலின்.

மாத்திரையாவது, கண் இமைத்தலொடு கைந்நொடித்தல் ஒத்த காலம். என்னை?

'கண்ணிமை நொடியென அவ்வே மாத்திரை
நுண்ணிதின் உணர்ந்தோர் கண்ட வாறே.' 2

என்றார் தொல்காப்பியனார்.

'கண்ணிமை கைந்நொடி என்றிவை இரண்டும்
மின்னிடை அளவே எழுத்தின் மாத்திரை.'

என்றார் சங்கயாப்புடையார் ஆகலின்.

'ஒன்றிரண் டொருமூன் றென்றரை அரைகால்
என்றனர் பொழுதிவை இமைநொடி அளவே.'

என்றார் பிறரும்.

விளி முதலாயினவற்றுள் மூன்று மாத்திரையின் மிக்க பல மாத்திரை யானும் அளபெடுத்து வருமாயினும், அவை செய்யுட்களுக்குப் பெரியதோர் உபகாரம்பட நில்லா ஆகலின், அவற்றிற்கு இலக்கணம் எடுத்து ஓதினாரில்லை எனக் கொள்க.

---

1 யா. வி. சூ. 3. 2 தொல். எழுத்து. சூ. 7.

குறிப்பு—பாஅரி—ஒரு வள்ளல், ஓஒரி-ஒரு வள்ளல், படாஅகை—கொடி, பரீஇகம், மதில், கழூஉமணி—கடைந்து சுத்தஞ்செய்த இரத்தினம், பரேஎரம்—மிக்க அழகு, வளைஇகம் சூழ்வோம், புரோஒசை—யானைக் கழுத்திடு கயிறு, மனௌஉகம்—(மன+ஒகம்) உள்ளக் கிளர்ச்சி, படாஅ-குட்டிப்பிடவம், குரீஇ-குருவி, கழூஉ-கழு மரம். விலேஎ—வில்லம்பு, விரைஇ, வாசனை, நிலோஒ—நிலா அனௌஉ—இரக்கக் குறிப்புப்போலும், அவ்வே—அவையே.

வன்மையாவன, க, ச, ட, த, ப, ற என்னும் ஆறும்.
மென்மையாவன, ங, ஞ, ண, ந, ம, ன என்னும் ஆறும்.
இடைமையாவன, ய, ர, ல, வ, ழ, ள என்னும் ஆறும்.

என்னை ?

'வன்மை என்ப கசட தபற;
மென்மை என்ப ஙஞண நமன;
இடைமை என்ப யரல வழள.

அவைதாம்,

புள்ளியொடு நிற்றல் இயல்பென மொழிப;
புள்ளியில் காலே உயிர்மெய் ஆகும்.'

என்பது **சங்க யாப்பு** ஆகலின். அவை ஒரோ ஒன்று அரையரை மாத்திரை எனக் கொள்க. என்னை ?

'உறுப்பின் அளவே ஒன்றன் பாகம்.'

என்றார் **கையனார்**.

'அரைநொடி அளவின அறுமூ வுடம்பே.'
'அரைநொடி என்ப தியாதென மொழியின்,
நொடிதரக் கூடிய இருவிரல் இயைபே.'

என்றார் **சங்கயாப்புடையார்**.

சார்பில் தோன்றும் தன்மைய ஆவன, குற்றியலிகரமும், குற்றியலுகரமும், ஆய்தமும் என இவை. என்னை ?

'குற்றிய லிகரம், குற்றிய லுகரம்
ஆய்தப் புள்ளி என்றிவை மூன்றும்
சார்பில் தோற்றத் துரிமையு முளவே.'

என்ப ஆகலின்.

ஏழிடத்து * ஆறு வல்லெழுத்தினையும் ஊர்ந்து உகரம் வந்தால், அதனைக் **'குற்றியலுகரம்'** என்று வழங்குப. என்னை ?

'எழுவகை இடத்தும் குற்றிய லுகரம்
வழுவின்றி வரூஉம் வல்லா றூர்ந்தே.'

என்பது **பல்காயம்** ஆகலின்.

எழுவகை இடமாவன, நெடிற் கீழும், நெடிலொற்றின் கீழும், குறிலிணைக் கீழும், குறிலிணை ஒற்றின் கீழும், குறில் நெடிற் கீழும், குறில் நெடில் ஒற்றின் கீழும், குற்றொற்றின் கீழும் என இவை. என்னை ?

---

குறிப்பு :—ஒரோ ஒன்று—ஒவ்வொன்று, உறுப்பு—மெய்யெழுத்து, ஒன்றன் பாகம்—அரை (பாகம்—பாதி) * தொல்காப்பியரும், பவணந்தி முனிவரும் குற்றுகரத்திற்கு ஆறிடமே வேண்டினர் (தொல். எழுத்து.சூ. 36. 406 ; நன். எழுத்து. சூ. 39). காறு—கால அளவு (கம்ப மீட்சி. 140).

'நெடிலே குறிலிணை குறினெடில் என்றிவை
ஒற்றொடு வருதலொடு குற்றொற் றிறுதியென்று
ஏழ்குற் றுகரக் கிடனென மொழிப.'

என்றார் ஆகலின். அவை வருமாறு:

நாகு, காசு, காடு, காது, காபு, காறு—என நெடிற்கீழ் ஆறு வல்லெழுத்தினையும் ஊர்ந்து குற்றியலுகரம் வந்தவாறு.

நாக்கு, காச்சு, காட்டு, காத்து, காப்பு, காற்று—என நெடிலொற்றின்கீழ் ஆறு வல்லெழுத்தினையும் ஊர்ந்து குற்றியலுகரம் வந்தவாறு.

வரகு, முரசு, முருடு, மருது, துரபு, கவறு—எனக் குறிலிணைக்கீழ் ஆறு வல்லெழுத்தினையும் ஊர்ந்து குற்றியலுகரம் வந்தவாறு.

அரக்கு, பொரிச்சு, தெருட்டு, குருத்து, பொருப்பு, சிரற்று—எனக் குறிலிணை ஒற்றின்கீழ் ஆறு வல்லெழுத்தினையும் ஊர்ந்து குற்றியலுகரம் வந்தவாறு.

அசோகு, பலாசு, மலாடு, கெடாது, புதாபு, விராறு—எனக் குறில் நெடிற்கீழ் ஆறு வல்லெழுத்தினையும் ஊர்ந்து குற்றியலுகரம் வந்தவாறு.

நமாக்கு, தடாச்சு, பணாட்டு, கெடாத்து, புதாப்பு, விராற்று—எனக் குறிநெடில் ஒற்றின்கீழ் ஆறு வல்லெழுத்தினையும் ஊர்ந்து குற்றியலுகரம் வந்தவாறு.

நக்கு, கச்சு, கட்டு, கத்து, கப்பு, கற்று—எனக் குற்றொற்றின்கீழ் ஆறு வல்லெழுத்தினையும் ஊர்ந்து குற்றியலுகரம் வந்தவாறு.

பிறவும் வந்தவழிக் கண்டுகொள்க.

அக்குற்றியலுகரந்தான் வருமொழிக்கு முதலில் யகரம் வந்தால், திரிந்து குற்றியலிகரம் ஆம். என்னை?

'யகரம் முதல்வரின் உகரம் ஒழிய
இகரமும் குறுகும் என்மனார் புலவர்.'

என்றார் பல்காயனார்.

'வல்லெழுத் தாறே டெழுவகை இடத்தும்
உகரம் அரையாம்; யகரமோ டியையின்
இகரமும் குறுகும் என்மனார் புலவர்.'

என்றார் அவிநயனார். அவை வருமாறு:

நாகியாது, காசியாது, காடியாது, காதியாது, காபியாது, காறியாது என.

---

குறிப்பு.—காச்சு—ஒலிக்குறிப்பு (காச்சு மூச்சென்று), காட்டு—உதாரணம் (கருத்துப் பதப் பொருள் காட்டு மூன்றினும்—நன். சூ. 22.), முருடு, மத்தள வகை (முருடதிர்ந்தன '—சிலப். மங்கல.), மருது—மருத மரம், துரபு—செலுத்தி, கவறு—சூதாடு கருவி, காதல் கவறு ஆடல்—நள. கலி. 39) பொரிசசு—பொரித்தல், தெருட்டு—தெளியச் செய், பொருப்பு—மலை, சிரற்று—கோபி (சிறுபாகராகச் சிரற்றுது, கலி. 97 : 29) பலாசு—ஈரப்பலா, மலாடு மலையமான் நாடு. எண்பதன் மரூஉ (நன், சூ 273 உரை) பணாட்டு—பனவெல்லம் (தொல். எழுத் 284), நக்கு—சிரித்து, கச்சு—இரவிக்கை (கச்சது கடிந்து, கல்லாடம் 44), கப்பு—பிளவு.

ஒழிந்தனவும் இவ்வாறே ஒட்டிக்கொள்க; பிறவாற்றானும் கண்டுகொள்க. 'மியா' என்னும் முன்னிலை அசைச்சொற்கண் வந்த இகாரமும் குற்றிய லிகரமாம். என்னை?

'குற்றிய லிகரம் நிற்றல் வேண்டும்
யாவென் சினைமிசை உரையசைக் கிளவிக்கு
ஆவயின் வரூஉம் மகரம் ஊர்ந்தே.' 1

என்றார் தொல்காப்பியனார் ஆகலின்.

**வரலாறு : கேண்மியா, சென்மியா**

எனக் கொள்க; பிற வகையானும் வந்தவழிக் கண்டுகொள்க.

குற்றியலிகரமும் குற்றியலுகரமும் புள்ளி பெறும். என்னை?

'குற்றிய லிகரமும் குற்றிய லுகரமும்
மற்றவை தாமே புள்ளி பெறுமே.'

என்பது சங்கயாப்பு ஆகலின்.

உயிருள் எகரமும் ஒகரமும் புள்ளி பெறும். என்னை?

'மெய்யின் இயற்கை புள்ளியொடு நிலையல்.' 2
'எகர ஒகரத் தியற்கையும் அற்றே' 3

என்றார் தொல்காப்பியனார் ஆகலின்.

சார்பிற்றோற்றத்த மூன்றும் அரையரை மாத்திரை உடைய எனக் கொள்க. என்னை?

'மெய்யின் அளவே அரையென மொழிப.' 4
'அவ்வியல் நிலையும் ஏனை மூன்றே.' 5

என்றார் தொல்காப்பியனார் ஆகலின்.

ஆய்தம் ஒரு மொழியில் வருகின்றுழிக் குற்றெழுத்துக்கீழாய், உயிர் மெய்யாகிய வல்லெழுத்தினைச் சார்ந்து வரும். என்னை?

'குறியதன் முன்னர் ஆய்தப் புள்ளி
உயிரொடு புணர்ந்தவல் லாறன் மிசைத்தே.' 6

என்றார் தொல்காப்பியனார்.

'ஆய்தந் தானே குறியதன் கிழதாய்
வலியதன் மேல்வந் தியலும் என்ப.'

என்றார் கையனார். அவை வருமாறு,

அஃகம், வெஃகா, எஃகு, கஃசு, கஃடு, கஃது, கஃபு, கஃறு—எனக்கொள்க. தொடர் மொழியுள்ளும் அவை வரும் வழிக் கண்டு கொள்க.

---

1. தொல். எழுத்து. சூ. 34. 2. ஷை ஷை சூ. 15. 3. ஷை ஷை சூ. 16. 4. ஷை ஷை சூ. 11. 5. ஷை ஷை சூ. 12. 6. ஷை ஷை சூ, 38.

குறிப்பு—கேண்மியா—கேள், சென்மியா—செல் (இவை திரியாது வந்த குற்றியலிகரம்) குற்றியலிகரமும், குற்றியலுகரமும், எகரமும், ஒகரமும் புள்ளி பெறுதல் பழைய வழக்கு கஃசு - காற்பலம் ('தொடிப்புழுதி கஃசா உணக்கின்'—குறள் 1037) அஃகம் - தானியம், வெஃகா - திருமால் திருப்பதிகளுள் ஒன்று, கஃறு – கறுத்துள்ளமை காட்டும் குறிப்பு ('கஃறென்னும் கல்லதாத்தம்' - தொல், எழுத்து 40 உரைமேற்). கஃடு, கஃபு கஃது என்பனவும் எழுத்தல் இசையாகக் கொள்க.

'ஆய்தம்' எனினும், 'அக்கேனம்' எனினும், 'தனிநிலை' எனினும், 'புள்ளி' எனினும், 'ஒற்று' எனினும் ஒக்கும். என்னை ?

'அக்கேனம் ஆய்தந் தனிநிலை புள்ளி
ஒற்றிப் பால ஐந்தும் இதற்கே.'

என்றார் அவிநயனார் ஆகலின்.

ஐகார ஔகாரக் குறுக்கம் ஆமாறு: அளபெடுத்தற்கண்ணும் தனியே சொல்லுதற்கண்ணும் என இரண்டிடத்தும் அல்லாத வழி வந்த ஐகார ஔகாரம் என்பன தம் அளவிற்சுருங்கி ஒன்றரை மாத்திரையாம். ஐகாரம் தனியே நின்று ஒரோவிடத்து ஒரு பொருளைச் சொல்லுதற்கண் ஒன்றரை மாத்திரையாம். என்னை ?

'அளபெடை தனியிரண் டல்வழி ஐஔ
உளதாம் ஒன்றரை. தனியும்ஐ ஆகும்.'*

என்றார் அவிநயனார்.

அவை மொழிக்கு முதலும், இடையும், இறுதியும் நின்றவழிக்குறுகுவ தெனக் கொள்க. வரலாறு :

ஐப்பசி, மைப்புறம், ஐக்கட்டி

எனவும்,

பௌவம், மௌவல், கௌவை

எனவும் ஐகார ஔகாரம் முதல் நின்று ஒன்றரை மாத்திரை ஆயினவாறு.

இடையன், மடையன், உடைவாள், கடைவாள்

எனவும்,

சிறுதலை நௌவிமான், நறுமலர் வௌவினார், ஒல்லென்பௌவம்,
கல்லென் கௌவை

எனவும் இடைநின்ற ஐகார ஔகாரம் ஒன்றரை மாத்திரை ஆயினவாறு.

குவளை, தவளை, திணை, பணை

எனவும்,

அந்தௌ, அன்னௌ

எனவும் இறுதி நின்ற ஐகார ஔகாரம் ஒன்றரை மாத்திரை ஆயினவாறு.

ஐகாரம் தனியே நின்று ஒரு பொருளைக் குறித்து ஒன்றரை மாத் திரையாம் :

பை, மை, வை

எனத் தனியே நின்ற ஐகாரம் ஒன்றரை மாத்திரை ஆயினவாறு.

---

*பி. ம். தனிமையு மாகும்.

மகரக் குறுக்கம் ஆமாறு : மகரம் ஓரோவிடத்து அரை மாத்திரையிற் சுருங்கிக் கால் மாத்திரையாம். என்னே ?

'அரையளபு குறுகல் மகரம் உடைத்தே
இசையிட னருகும் தெரியுங் காலே.' 1

என்பது தொல்காப்பியம். அது வகரமோடு கூட்டத்தின்கண் குறுகும். என்னே ?

'வகார மிசையும் மகாரம் குறுகும்.' 2

எனவும்,

'வகரமோ டியையின் மகரமும் குறுகும்.'

எனவும் சொன்னுர் ஆகலின்.

வரலாறு : வரும் வளைகாரன், தனம் விளைநிலம், வாழும் வணிகன்,

சூழும் வாவிகள்—எனக் கொள்க.

பிற வகையானும் வந்தவழிக் கண்டுகொள்க.

'சார்பிற் றோன்றும் தன்மைய' என்று மிகுத்துச் சொல்லிய அதனுல், அகரத்தோடு யகர ஒற்று வந்தும், ஆய்தம் வந்தும் ஐகாரத்தின் பயத்தவாம். அகரத்தோடு உகரம் வந்தும், வகர ஒற்று வந்தும் ஔகாரத்தின் பயத்த வாம். என்னே ?

'ஆய்தமும் யவ்வும் அவ்வொடு வரினே
ஐயென் எழுத்தொடு மெய்பெறத் தோன்றும்.'
'உவ்வொடு வவ்வரின் ஔவிய லாகும்.'

என்றுர் அவிநயனுர்.

வரலாறு : அய்யன், கய்தை, தய்யல், மய்யல், கய்யன்—என அகரத்தோடு யகர ஒற்று வந்து, ஐயன், கைதை, தையல், மையல், கையன் என்னும் ஐகாரத்தின் பயத்தவாயினவாறு.

கஃசு, கஃதம், கஃசம்—என அகரத்தோடு ஆய்தம் வந்து, கைசு, கைதம், கைசம், என்னும் ஐகாரத்தின் பயத்தவாயினவாறு.

அவ்வை, நவ்வி, அஉவை, நஉவி—என அகரத்தோடு வகர ஒற்றும் மகரமும் வந்து, ஔவை, நௌவி என்னும் ஔகாரத்தின் பயத்தவாயின வாறு.

இனி, 'அசைக்கு உறுப்பே' என்பதில் ஏகாரம் ஈற்றசை ; அல்லன எண்ணேகாரம். என்னே ?

'தேற்றம் வினவே பிரிநிலை எண்ணே
ஈற்றசை இவ்வைந் தேகா ரம்மே.' 3

என்ப ஆகலின். 'என்ரு' என்பது, எண்ணிடைச்சொல். என்னே ?

'உம்மை தொக்க எனுவென் கிளவியும்
ஆவீ றுகிய என்றென் கிளவியும்
ஆயிரு கிளவியும் எண்ணுவழிப் பட்டன.' 4

என்றுர் ஆகலின்.

---

1 தொல். எழுத்து. சூ. 13.
2 தொல். எழுத்து. சூ. 330.
3 தொல். சொல். இடை. சூ. 9.
4 தொல். சொல். இடை. சூ. 41.

'குற்றெழுத் தென்று நெட்டெழுத் தென்று
ஒற்றே உயிரே என்மனார் புலவர்.'

எனப் பிறரும் சொன்னார் ஆகலின்.

'ஆங்கு' என்று மிகுத்துச் சொல்லிய அதனால், ஓரெழுத்தே ஒரு பொருளைப் பயந்து நிற்பன 'சிறப்பெழுத்து' என்றும், இயைந்து பொருள் பயப்பன 'உறுப்பெழுத்து' என்றும் வழங்கப்படும் எனக் கொள்க.

எழுத்தெல்லாம் ஒற்றும், உயிரும், உயிர்மெய்யும் என அடங்குவனவற்றை இவ்வாறு விகற்பித்துச் சொல்லியது, எழுத்துக்களது பெயர் வேறுபாடு எல்லாம் அறிவித்தற்கும், அப்பெயரால் பெயராக்கி ஆண்டதற்கும் எனக் கொள்க. அல்லதூஉம், பிறரும் விகற்பித்துச் சொன்னார். என்னை?

'குறினெடில் அளபெடை உயிருறுப் புயிர்மெய்
வலிய மெலிய இடைமையொ டாய்தம்
இஉ ஐயென் மூன்றன் குறுக்கமோடு
அப்பதின் மூன்றும் அசைக்குறுப் பாகும்.'

என்றார் காக்கைபாடினியார்.

'குறிய நெடிய உயிருறுப் புயிர்மெய்
வலிய மெலிய இடைமை அளபெடை
மூவுயிர்க் குறுக்கமும் ஆமசைக் கெழுத்தே.'

என்றார் சிறுகாக்கைபாடினியார்.

'நெடிய குறிய உயிர்மெய் உயிரும்
வலிய மெலிய இடைமை அளபெடை
மூவுயிர்க் குறுக்கமோ டாமசைக் கெழுத்தே.'

என்றார் அவிநயனார்.

'குறினெடில் ஆய்தம் அளபெடையை காரக்
குறில்குற் றிகர உகரம்—மருவில்
உயிர்மெய் வியாய்மெய்யொ டாறு றெழுத்தாம்
செயிர்வன்மை மென்மை சமன்.'*

என்பது நாலடிநாற்பது என்னும் [என்னும் நூலின் எழுத்துப்] புறநடை.

'உயிருறுப் புயிர்மெய் தனிநிலை எறுஅக்
குறினெடில் அளபெடை மூவினம் எறுஅ
அஃகிய நாலுயிர் மஃகான் குறுக்கமோடு
ஐந்துதலை யிட்ட ஐயீ ரெழுத்தும்
அசைசீர் தளைதொடைக் காகும் உறுப்பென
வசையறு புலவர் வகுத்துரைத் தனரே.'

இது பெரியபம்மம்.

---

குறிப்பு—சமன் - இடையெழுத்து, அஃகிய நாலுயிர் - குற்றியலிகரமும் குற்றியலுகரமும் ஐகாரக்குறுக்கமும் ஔகாரக்குறுக்கமும்.

'குறிலுயிர் வல்லெழுத்துக் குற்றுகர வாதி
குறுகிய ஐஔமவ் வாய்தம்—நெறிமையால்
ஆய்ந்த அசைதொடைதாம் வண்ணங்கட் கென்முறையால்
ஏய்ந்தன நானென் கெழுத்து.

இது நாலடிநாற்பது என்னும் [நூலின்] அசைப் புறனடை.

இவ்வெழுத்துக்களாற் செய்யுள் வருமாறு :

'ஐயாவோ ஐயாவோ எய்யாயோ எய்பாயோ
கையாயோ ஐயா களிறு.'

இஃது உயிர் மிக்கு வந்த செய்யுள்.

'பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு.' 1

இது மெய் மிக்கு வந்த செய்யுள்.

'படைகுடி கூழமைச்சு நட்பர ணாறும்
உடையா னரசரு ளேறு.' 2

இஃது உயிர்மெய் மிக்கு வந்த செய்யுள்.

'கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத் தக.' 3

இது குற்றெழுத்து மிக்கு வந்த செய்யுள்.

'யாகாவா ராயினும் நாகாக்க; காவாக்கால்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு.' 4

இது நெட்டெழுத்து மிக்கு வந்த செய்யுள்.

'ஏஎர் சிதைய அழாஅல் எலாஅநின்
சேஎயரி சிந்திய கண்.'

இது நான்கு அளபெடையும் வந்த செய்யுள்.

'தெறுக தெறுக தெறுபகை தெற்றாற்
பெறுக பெறுக பிறப்பு.'

இது வன்மை மிக்கு வந்த செய்யுள்.

'மணிநீரும் மண்ணும் மலையும் அணிநிழற்
காடும் உடைய தரண்.' 5

இது மென்மை மிக்கு வந்த செய்யுள்.

'வயலுழுவார் வாழ்வாருள் வாழ்வார்; அயலுழுவார்
வாழ்வாருள் வாழா தவர்.'

இஃது இடைமை மிக்கு வந்த செய்யுள்.

---

1 குறள். 350. 2 குறள். 381. 3 குறள். 391. 4 குறள். 127. 5 குறள் 742.

குறிப்பு.—ஏஎர்–அழகு. அழாஅல்–அழாதே. எலாஅ - தோழியே. சேஎயரி செவ்வரி

'குருத்துக் குறைத்துக் கொணர்ந்து நமது
கருப்புச் செறுப்புப் பரப்பு.'

இது குற்றியலுகரம் வந்த செய்யுள்.

'குழலினி தியாழினி தென்பர்தம் மக்கள்
மழலைச்சொற் கேளா தவர்.' 1

இது குற்றியலிகரம் வந்த செய்யுள்.

'சிலையன் செழுந்தழையன் சென்மியா என்று
மலையகலான் மாடே வரும்.'

இதுவும் குற்றியலிகரம் வந்த செய்யுள்.

'அஃகி அகன்ற அறிவென்னும் யார்மாட்டும்
வெஃகி வெறிய செயின்.' 2

இஃது ஆய்தம் வந்த செய்யுள்.

'படுமழைத் தண்மலை வெற்பன் உறையும்
நெடுந்தகையைக் கண்டதாம் நாள்.'

இஃது ஐகாரக்குறுக்கம் வந்த செய்யுள்.

'நௌவிமான் நோக்கினர் அவ்வாய் மணிமுறுவல்
வௌவாதார் கௌவை இலர்.'

இஃது ஔகாரக்குறுக்கம் வந்த செய்யுள்.

'ஔவித் தழுக்கா றுடையானைச் செய்யவள்
தௌவையைக் காட்டி விடும்.' 3

இதுவும் ஔகாரக்குறுக்கம் வந்த செய்யுள்.

'தம்பொருள் என்பர்தம் மக்கள் அவர்பொருள்
தந்தம் வினையான் வரும்.' 4

தாம்வீழ்வார் தம்வீழப் பெற்றவர் பெற்றரே
காமத்துக் காழில் கனி.' 5

இவை மகரக்குறுக்கம் வந்த செய்யுள்.

மகரக் குறுக்கத்துக்குப் பயன் மாபுராணம் உடையார் எடுத்து ஓதினர். என்னை ?

'கழிநெடில் அசையும் காலெழுத் தசையும்
பெயரயற் புணர்ப்பினும் பெயரிடைப் புணர்ப்பினும்
வழுவென மொழிப வாய்மொழிப் புலவர்.' 6

என்றார் ஆகலின்.

---

1 குறள். 66. 2 குறள். 85. 3 குறள். 167. 4 குறள். 63. 5 குறள். 1191. 6 மாபுராணம்.

குறிப்பு.—நௌவிமான் – பெண்மான். நோக்கினர் – பார்வையை உடையவர். அவ்வாய்–அழகிய வாய். மணி முறுவல் – அழகிய புன்னகையால். வௌவாதார்—கவரப் படாதவர். கௌவை - துன்பம். கழிநெடிலசை – அளபெடையசை. காலெழுத்து – மகரக்குறுக்கம்.

'ஆய்தமும் ஒற்ருய் அடங்கினும் ஆங்கதனை
ஓதினர் தொன்னூல் உணர்வுடையோர்—நீதியால்
ஒற்ருய் அடங்குகினும் உன்கால வேற்றுமையால்
சொற்ருர் மகரச் சுருக்கு.'

எனவும்,

'மெய்யென்ற சொல்லானே மிக்கமக ரத்தினையும்
நையு மடங்கும் நனியென்னின்—ஐயன்ப
தாவி எனவடங்கும் அஃகிற் றெனின்மகரத்
தேய்விற்கும் அஃதே திறம்.'

எனவும் மகரப்பிரகரணத்துட் காண்க.

'உயிரென்ற சொல்லானே ஒன்பதாம் ஆவி
செயிரின்றிச் சென்றடங்கு மேனும்—பயில்புரைத்தார்
குன்றுதலால் என்னிற் குணம்புரிந்தார் ஒளவுந்தான்
குன்றுதலாற் கூறப் படும்.'

'கால விகற்பத்தாற் கட்டுரைக்கப் பட்டவற்றுள்
மூல வியனூல் முறைமையால்—ஞாலத்துள்
எல்லாம் எடுத்துரைத்தார்க் காமோ சிலவெழுத்துச்
சொல்லாதார்க் காகுமோ தோம்?' *

'அசையாக்கும் தன்மையவே அன்றித் தொடையோ
டிசையாக்கும் ஏனையவும் சொற்ருர்—இசைதொடைதோம் †
ஆக்கும் எழுத்தனைத்தும் சொன்னுர் அசைமுகத்தால்
தூக்கியநூற் கேற்பத் தொகுத்து.'

'குறிலும் நெடிலும் அளபெடையும் ஒற்றும்
அறிஞர் அசைக்குறுப்பாம் என்பர்—வறிதே
உயிர்மெய்யும் ‡ மூவினமென் றேதினர் என்று
செயிரவர்க்கு நின்றதோ சென்று?'

'வடாது தெனுதென்று வைத்ததனுல் மற்ருண்
டெடாதனவும் சொற்ருர் இனத்தாற்—கெடாததுபோல்
மஃகான் குறுக்கம் வகுத்ததனுல் மாட்டெறிந்தார்
அஃகாய்தந் தானும் அசைக்கு.'

'ஐயௌமவ் வென்றிவற்றிற் காங்கந்த § தீபகமா §
நையா தகாரம் § நடத்தாதே—மெய்யானே
கற்ருய்ந்த நூலோர்கள் தாமே ο புணர்த்ததூஉம்
குற்ருய்தம் தானும் கொளற்கு.'

---

மகரச்சுருக்கு—மகரக்-குறுக்கம். மகரத் தேய்வு – மகரக்குறுக்கம். மகரப் பிரகரணம்–மகரத்திற்குரிய இலக்கணத்தைக் கூறும் அத்தியாயம்.

பி–ம்* நில்லாச் சுருக்க நிலை. † இசை தொடைதாம். ‡ உயிர்மெய்யாம். § காங் குற்ற-ஞாபகமா. § துகாரம். ο நூலோ ரிகரம்.

குறிப்பு—அ ஃ காய்தம் - ஆய்தக் குறுக்கம், அந்த தீபகம் - கடைநிலைத் தீவகம், குற்ருய்தம் - ஆய்தக் குறுக்கம்.

'சிறப்புடைய அல்ல எனவிவற்றுட் கொள்ப
சிறப்புடைய என்பவே சிந்தித்—துறுப்பசைக்கண்
காலளவாம் ஒற்றினையும் கைக்கோடல் காரணமா
நூலளவிற் சொற்றார் நுனித்து.'

'ஐம்மூ வெழுத்தும் அசைக்குறுப்பாம் என்பதற்கண்
உம்மைதாம் எச்சம் எனவுரைப்பர்—ஐம்மூன்றின்
மிக்கனவும் கைக்கோடல் வேண்டி வியன்பொருளை
மெய்ப்படுக்கும் ஆங்கே விதப்பு.'

'மகரக் குறுக்கம் வகுத்ததுதான் ஆய்தக் n
இகரக் குறுக்கம் முதலாப்—புகாற்ற
நாலொன்றும் எண்ணாதே நாட்டுதற்கு u ஞாபகமாய்
நூலொன்றி நிற்றற் பொருட்டு.'

இவற்றை விரித்துரைத்துக் கொள்க. இன்னும் மகரக்குறுக்கத்திற்குப் பயன் மரபுணர்த்துமிடத்துக் * கண்டுகொள்க. ஈண்டு உரைப்பிற் பெருகும்.

'ஆய்தத்திற்கும் ஒற்றிற்கும் சிறப்பு விதி
தனிநிலை ஒற்றிவை தாமல கிலவே
அளபெடை அல்லாக் காலை யான.

'என்பது என் நுதலிற்றோ?' எனின், மேற்சூத்திரத்துள் பொது வகையான் எல்லா எழுத்தும் அசைக்க உறுப்பாம் என்றார், அவற்றுட் சிலவற்றை விலக்கி, ஒரோ வழியே ஆமாறு உணர்த்துவான் எடுத்துக்கொண்டார். இச்சூத்திரம், ஆய்தத்திற்கும் ஒற்றிற்கும் எய்தியதோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொழிப்பு: 'ஆய்தமும் ஒன்றும் தாமாக அலகு காரியம் பெறா, அளபெழுந்தவழி அல்லாது,' (என்றவாறு).

எனவே, ஆய்தமும் ஒற்றும் ஓரோவொன்றேயாய் நின்று அலகுபெறா என்பதாம்.

"கார்க்கடல், கார்க்கேதம், கதிர்ச்செந்நெல், கடாய்க்கன்று," என இவற்றுள் இரண்டு ஒற்று ஒருங்கு நிற்பினும், ஒரு மாத்திரையுடைய எழுத்தின் பயத்தவாய் அலகு காரியம் பெறுங்கொலோ?' எனின், 'பெறா' என்பதூஉம் பெறப்பட்டது. அவிநயனாரும்,

'அளபெழின் அல்லதை ஆய்தமும் ஒற்றும்
அலகியல் பெய்தா என்மனார் புலவர்.'

என்றார் ஆகலின்.

---

காலளவு - கால் மாத்திரை.

1 தொல். எழுத்து. சூ. 51, 52.

ꯪ ஆய்தற். u நாட்டுதல். பி-ம்.*—மாபுராணத்திடத்து.

குறிப்பு.—ஒரோவொன்றாய் - தனித்து, கார்க்கேதம் - கார்காலத் துண்டாகும் துன்பம், கடாய்க்கன்று - காளைக்கன்று, அல்லதை - அல்லது (ஐ - சாரியை), மூவொற்றுடனிலையாய் வருதற்குதாரணம் 'ஈர்க்கு, பார்ப்பு' எனவும் இவற்றுள் குற்றுகரமும் ஒன்றின் பயத்ததாம் எனவும் அறிக.

'ஒற்றள பெழாவழிப் பெற்றவல கிலவே.'

எனவும்,

'ஈரொற் றுயினும் மூவொற் றுயினும்
ஓரொற் றியல ஆகும் என்ப.'

எனவும் சொன்னுர் பிறரும் எனக் கொள்க.

'ஆய்தமும் ஒற்றும் தாமாக அலகு பெறு,' எனவே, 'வேருேர் எழுத்தோடு கூடி நின்ற பொழுது அலகு பெறும்,' என்பதாயிற்று. என்னே ?

'தேவதத்தன் தானுகப் போகலான்,' என்ருல், 'துணைபெற்ருல் போம்,' என்பதாம்; அது போலக் கொள்க. அவை வருமாறு :

'தனிநிலை ஒற்றிவை தாமல கிலவே
அளபெடை அல்லாக் காலை யான.'

எனவே,

தனிநிலை ஒற்றியவை தாமலகு பெறூஉம்
அளபெடை ஆகிய காலை யான.

என்பது பெறப்பட்டது என்பதாயிற்று. காக்கைபாடினியாரும்,

'ஆய்தமும் ஒற்றும் அளபெழ நின்றுழி
வேறல கெய்தும் விதியின ஆகும்.'

என்ருர் எனக் கொள்க.

'தாம் அலகிலவே' என்றவழி ஏகார விதப்பினல், ஒன்றும் ஆய்தமும் அளபெழுந்து குற்றெழுத்தின் பயத்தவாய் ஓர் அலகு பெறுவது அல்லது, முன்னும் பின்னும் நின்ற எழுத்திேைடு புணர்ந்து நிரையசை ஆகா எனக் கொள்க. 'இவை' என்னும் சுட்டு விதப்பினல், ஒற்றினுள் அளபெழுவன, 'தாம்' என்பதனுற் பெறப்பட்ட ங, ஞ, ண, ந, ம, ன, வ, ய, ல, ள என்னும் பத்து மெய்யும், ஆய்தமும் குறிற்கீழும் குறிலிணைக்கீழும் வந்து, இறுதிநிலை அளபெடையும் இடைநிலை அளபெடையும் அன்றி ஆகா எனக் கொள்க. பிறரும்,

'ஙஞண நமன வயலள ஆய்தம்
ஈரிடத் தளபெழும் ஓரோவழி யான.'

என்ருர் எனக் கொள்க. அவை வருமாறு :

மங்ங்கலம், மஞ்ஞ்சு, மண்ண்ணு, பந்ந்து, அம்ம்பு, மின்ன்னு; தெவ்வ்வர், மெய்ய்யர், செல்ல்க, கொள்ள்க, எஃஃகு—என ஆய்தத்தோடு பதிஞேரொற்றும் குறிற்கீழ் அளபெழுந்தவாறு.

---

குறிப்பு—புள்ளி அளபெடை- ஒற்றளபெடை, பரவை வழக்கு - உலக வழக்கு, எ.·.கு - ஆய்தம், தெவ்வர் - பகைவர், அரங்கம் - சபை, முரண்டு - மாறுபாடு, முரன்று - ஆலாபனம் ('களிவண்டு முரன்று பாட' -சீவக. 1959), குரவை - மகளிர் தம்முள் கை கோத்து ஆடும் கூத்து ('ஆய்ச்சியர் குரவை, குன்றக் குரவை'—சிலப்.) அரயர் - அரசர், குரங்கள் - தானியக் கதிர்கள், வரஃகு - வரகுத்தானியம்,

தளைதப - தளைகெட, அஃகிய - நுண்ணிதாகிய, எஃகுணர் நாவினர் - கூர்மையாக உணரும் நாவினையுடையவர், வெஃகின்-விரும்பினல், வீடு-மோட்சம், வெஃகுவார்-இச்சிப்பவர்.

அரங்ங்கம், உரிஞ்ஞ்சு, முரண்ண்டு, பருந்ந்து, அரும்ம்பு, முரன்ன்று, குரவ்வ்வை, அரய்ய்ர், குரல்ல்கள், திரள்ள்கள், வாஃஃகு—என ஆய்தத்தோடு பதினேரொற்றும் குறிலிணைக்கீழ் அளபெழுந்தவாறு.

இவ்விருபத்திரண்டு புள்ளி அளபெடையும் செய்யுளகத்து அல்லது பரவை வழக்கினுள் வாரா எனக் கொள்க. என்னை?

'மாத்திரை வகையாற் றளைதபக் கெடாநிலை
யாப்பழி யாமைநின் றளபெடை வேண்டும்.'

என்றார் ஆகலான். அவற்றிற்குச் செய்யுள் வருமாறு:

'எஃஃகி னஃஃகிய வெஃஃகுணர் நாவினர்
வெஃஃகின் வெஃஃகுவர் வீடு.'

எனவும்,

'எஃஃகி லங்கிய கையராய் இன்னுயிர்
வெஃஃகு வார்க்கில்லை வீடு.'

எனவும் ஆய்தம் அளபெழுந்து நேரசை ஆயினவாறு.

'கண்ண் கருவிளை; கார்முல்லை கூரெயிறு;
பொன்ன் பொறிசுணங்கு; போழ்வாய் இலவம்பூ;
மின்ன் நுழைமருங்குல்; மேதகு சாயலாள்
என்ன் பிறமகளா* மாறு?'

எனவும்,

'அம்ம் பவள்ள் வரிநெடுங்கண்; ஆய்வஞ்சிக்
கொம்ம் பவள்ள் கொடிமருங்குல்; கோங்கின்
அரும்ம் பவள்ள் முலையொக்கும்; ஒக்கும்
கரும்ம் பவள்வாயிற் சொல்.'

எனவும்,

'வாளேர் தடங்கண் வகையாலும், வைகலும்
வாளா விருக்கும் வகையாலும்—நாளும்
விழைந்ந்து வேறென்று† சிந்திப்பாள் போலும்
குழைந்ந்த கோதை குறிப்பு.'

எனவும்,

'கண்ண் டண்ண்ணெனக் கண்டும் கேட்டும்' 1

எனவும் ஒற்று அளபெழுந்து நேரசை ஆயினவாறு.‡ பிறவும் வந்துழிக் கண்டு கொள்க.

---

1 பத்துப். மலைபடு. 352.

பி-ம்.—குறமகள் † வேமேன்று.

குறிப்பு—கருவிளை – காக்கட்டான் மலர், எயிறு - பல், சுணங்கு - தேமல், போழ்வாய் - பிளந்த வாய், நுழை மருங்குல் - நுட்பமான இடை, வரி – செவ்வரி, வாளேர் - வாள் போன்ற, வைகலும் – எந்நாளும், குழைந்த - வருந்திய, நாநலி—நசை - நலிபு வண்ணம்- ஏது - காரணம்.

'ஆய்தம் ஒற்றெனப் பெற்றசை யாக்குமென்
றோதி னுருள ராகவும் ஒண்டமிழ்
நாத ராயவர் நாநலி போசையிற்
கேது வென்றெடுத் தோதினர் என்பவே.'

எனவும்,

'நலிபு வண்ணம் ஆய்தம் பயிலும்.' 1

எனவும் கூறினர் ஆகலின்.

'மறையவரும் வந்தார் வசிட்டரும் வந்தார்
குறைவின்றிக் கொண்டாடல் வேண்டும்—மறையவருள்
மிக்க விழுக்குணங்கள் நோக்கி வியனிலத்து
மக்கள் வசிட்டரா மாறு.' *

பிறவும் வந்தவழிக் கண்டுகொள்க.

4] இகர உகரக் குறுக்கங்களுக்கும் உயிரளபிற்கும் சிறப்பு விதி. [சு

தளைசீர் வண்ணம் தாம்கெட வரினே
குறுகிய இகரமும் குற்றிய லுகரமும்
அளபெடை ஆவியும் அலகியல் பிலவே.

இச்சூத்திரம், குற்றியலிகரம், குற்றியலுகரம், உயிரளபெடைகட்கு எய்திய தோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

**இதன் பொழிப்பு :** 'தளையும், சீரும், வண்ணமும் சொன்ன இலக்கணத் தோடு மாறுகொள்ள வருமே எனின், குற்றியலிகரக் குற்றியலுகர உயிரள பெடைகள் அலகு காரியம் பெறு எனக் கொள்க,' (என்றவாறு).

எனவே 'எதிர் மறுத்தல்' என்னும் இலக்கணத்தால்,

தளைசீர் வண்ணம் தாம்கே டில்வழிக்
குறுகிய இகரமும் குற்றிய லுகரமும்
அளபெடை ஆவியும் அலகியல் பினவே.

என்பதாயிற்று.

இதன் கருத்து, 'தளையும், சீரும், வண்ணமும் ஆமாறு சொன்ன இலக்கணத் தோடு மாறு கொள்ளாது ஓர் உபகாரம்பட நிற்பின், குற்றியலிகரக் குற்றிய லுகர உயிரளபெடைகள் அலகு காரியம் பெறும்,' என்றவாறு.

---

1 தொல். பொரு. செய். சூ. 223.

* 'பிறப் பொன்றுனே சிறப்புற்ற மறையவரும், பிறப்பான் மட்டுமன்றித் தவம் முதலிய விழுமிய பண்புகளாலும் உயர்வெய்திய வசிட்டரும் வந்தனர். இருவரையும் குறை வின்றிக் கொண்டாடுதல் வேண்டும் ; எனெனின், மறையவருள் மிக்க விழுக்குணங்களை நோக்கிப் பெருநில மக்கள் தாங்களும் அப்பண்புகளையுடையவர்களாய் வசிட்டரேயாக முயலு மாறு' என்க.

மிக்க விழுக்குணங்களான் மேன்மையடைந்தாரைச் சார்ந்தொழுகும் ஏனையரும் அம்மேலோரெய்தும் சிறப்பினைத் தாமும் நன்னெறி கடைப்பிடித் தொழுகி எய்தல்போல, சிறப்பில் எழுத்துகளும் சிறப்புடை எழுத்துகளைச் சார்ந்து மொழியிற் பயின்று சிறப்பெய்தும் என்பது இச்செய்யுளின் ஒட்டணியாற் பெற்ற பொருள் என்க.

தளை சீர் வண்ணம் ஆமாறு சொன்ன இலக்கணமும் 'தளை சீர் வண்ணம்' எனப்படும், உபசார வழக்கினால்; குண்டல நீல பிங்கல கேசிகளது தோற்றமும் தொழிலும் சொன்ன செய்யுட்களும் வேறொரு வழக்கினால் 'குண்டல கேசி, நீல கேசி, பிங்கல கேசி, என்னும் பெயர் பெற்றாற் போல எனக் கொள்க.

"தளைசீர் வண்ணம்' என்புழி உம்மை தொகுத்து நிறுத்துப் பின்னர்க் 'குறுகிய இகரமும் குற்றிய லுகரமும் அளபெடை ஆவியும்' என்று உம்மை விரித்து, ஒரு நெறியின்றிச் சொல்ல வேண்டியது என்னை?" எனின், 'ஈண்டு நிரனிறை என்னப்படாது, கூடுமாற்றாற்கொள்ளப்படும்,' என்பது அறிவித்தற்கு வேண்டப்பட்டது. அவை வருமாறு:

'குழலினி தியாழினி தென்பர்தம் மக்கள்
மழலைச்சொற் கேளா தவர்.1

'அருளல்ல தியாதெனிற் கொல்லாமை கோறல்
பொருளல்ல தவ்வூன் தினல்.' 2

என்ற இவற்றுள் 'குழலினி தியாழினிது' எனவும், 'அருளல்ல தியாதெனில்' எனவும் ஆசிரியத்தளையும் கலித்தளையும் தட்டு, 'வெள்ளையுட் பிறதளை விரவா' 3 என்னும் இலக்கணத்தோடு மாறு கொள்ளும் ஆதலின், ஆண்டுக் குற்றியலிகரத்தை இவ்விலக்கணத்தால் அலகு பெறா என்று விலக்க, வெண்டளை யாம். 'அருளல்ல தியாது' என்புழிக் குற்றியலிகரம் ஆமாறு,

'குறுமையும் நெடுமையும் அளவிற் கோடலின்
தொடர்மொழி எல்லாம் நெட்டெழுத் தியல.' 4

என்பதனாற் கொள்க.

'சிறுநன்றி யின்றிவர்க்கியாம் செய்தக்கால் நாளைப்
பெறுநன்றி மன்னும் பெரிதென்—றுறுநன்றி
தானவாய்ச் செய்வதூஉம் தானமன் றென்பவே
வானவாம் உள்ளத் தவர்.'

என இதனுள் 'இன்றிவர்க்கியாம் செய்தக்கால்' என்புழிக் குற்றியலிகரம் வந்து வஞ்சியுரிச்சீர் ஆயிற்று. இது வெண்பாவினுள் விரவுக என்னும் ஓத்து இல்லாமையால், வெண்பா அழிய நிற்கும். ஆண்டுக் குற்றியலிகரத்தை இவ் விலக்கணத்தால் அலகு பெறாது என்று களைய, வஞ்சியுரிச்சீர் அன்றாம்.

இனிக் குற்றியலுகரத்திற்குச் செய்யுள் வருமாறு:

[5] 'கொன்றுகோடுநீடு குருதிமாறவும்
[6] சென்றுசென்றுநீடு * செழுமலைபொருவன
[6] வென்றுகோடுநீடு விறல்வேழம்
[5] என்றுமூடுநீடு பிடியுளபோலும்
அதனால்,
இண்டிடை இரவிவ ணசைஇவரின்
வண்டுண் கோதை உயிர்வா ழாளே.'

என இருசீரடி வஞ்சிப்பாவினுள் குற்றுகரம் வந்து ஆறசைச்சீரும் ஐயசைச் சீரும் ஆயின. இவ்வாறு வருக என்னும் இலக்கணம் இன்மையால், ஆண்டுக் குற்றியலுகரங்களை இவ்விலக்கணத்தால் அலகு பெறா என்று களையச் சீர் சிதையாதாம்.

---

1 குறள். 66. 2 குறள். 254. 3 யா. வி. சூ. 22. 4 தொல். எழுத்து. சூ. 50.

குறிப்பு :—ஓத்து - இலக்கணம்.
பி-ம் *சென்று கோடு நீடு

'தாழிரும் பிணர்த்தடக்கை'1 என்னும் இருசீரடி வஞ்சிப்பாவினுள், எனைப்பல எமக்குத்தண்டாது' என ஐயசைச்சீர் வந்ததனுள் குற்றுகரத்தை அலகு பெறுது என்று களையச் சீர் சிதையாதாம்.

'நலஞ்செலத் தொலைந்து புலம்பொடு பழகி'2 என்னும் பாட்டினுள், 'குண்டுநீடுநீர்க் குவளைத்தண்சுனை, குறித்துக்கூடுவோர் நெறிமயங்கவும்' எனவும், 'போதுசேர்ந்துகூடு பொறிவண்டினம், புரிந்துவாங்குவீங்கு நரம்பி மிர்தலின்' எனவும் வந்த வஞ்சியடிகளுள்ளும் குற்றுகரங்களை அலகு பெறு என்று களையச் சீர் சிதையாதாம்.

'இவற்றுக்கு இலக்கணம் ஓத வேண்டியது என்னை? குற்றிகரக் குற்று கரங்கள் வந்து இன்னுங்காய் அறுத்திசைத்தமையால் குற்றப்பாடு என்று களைந்திடாமோ?' எனின், அற்றன்று; 'அறுத்திசைப்பும் வெறுத்திசைப்பும் குற்றம் என்று களைந்திடப்படா, பிற சான்றோர் செய்யுளகத்தும் அருகி வருமாகலின்,' எனக் கொள்க.

அளபெடைக்குக் கூறுமாறு:

> 'இடைநுடங்க ஈர்ங்கோதை பின்ருழ வாட்கண்
> புடைபெயரப் போழ்வாய் திறந்து—கடைகடையின்
> உப்போஒ எனவுரைத்து மீள்வாள் ஒளிமுறுவற்
> கொப்போநீர் வேலி உலகு?'

என இதனுள் 'உப்போஒ' என்புழி அளபெழுத்து கலித்தளை தட்டு, 'வெள்ளை யுட் பிறதளை விரவா'3 என்னும் இலக்கணத்தோடு மாறு கொள்ளுமாகலின், ஆண்டு அவ்வளபெடையை இவ்விலக்கணத்தான் அலகு பெறுது என்று விலக்க வேண்டலையாம்.

> 'பிண்ணுக்கோஒ என்னும் பிணுவின் முகத்திரண்டு
> கண்ணுக் குடையனபோற் கட்டுரைக்கும்;—'பிண்ணுக்குக்
> கொள்ளீரோ?' என்பாடன் கூரெயிறு காளையரை
> உள்ளீர்வ போல உள.'

எனவும்,

> 'பல்லுக்குத் தோற்ற பனிமுல்லை; பைங்கிளிகள்
> சொல்லுக்குத் தோற்றின்னந் தோற்றினவால்;—நெல்லுக்கு
> நூற்றேஒநூ றென்பாள் நுடங்கிடைக்கும் வெம்முலைக்கும்
> மாற்றேமால் அன்றளந்த மண்?'

எனவும்,

> '**களிச்சாத்தாஅ என்றியான் கட்காண நின்று**
> **விளித்தாலும் வாரான் விரைந்து.'** *

எனவும் இவற்றுள் பண்ட மாற்றின்கண்ணும், விளித்தற்கண்ணும் அளபெடை அநுகரணங்கள் வந்து, வெண்பாவினுள் நாலசைச்சீராய், வண்ணம் அனுப்

---

1 யா. வி. 93 உரைமேற். 2 யா. வி. சூ. 95 உரைமேற். 3 யா. வி. சூ. 22

பி-ம்: * களிச்சாத்தன, வாளாவே தின்பான் வேலைக்குப் போகலான், காளையாம்பை தல் கவடு—இவ்வடிகள் எட்டுப் பிரதியிலில்லை; முன்பதிப்பிலுள.

குறிப்பு.—இன்னுங்காய்—கொடுமையாய். பிணு—பெண், ஈர்வ—அறுப்பன, தோற்ற—தோல்வியுற்றன, தூற்றின பலருமறியப் பழிகூறின, நூற்றேஒ நூறு, சுண்ணும்போ சுண்ணும்பு, மாற்றே—பிரதியாகக்கொள்ளுவதோ, மால்—திருமால் அநுகரணங்கள்—ஒலிக்குறிப்புகள், வண்ணம்—பாவின்கண் நிகழும் ஓசை விகற்பம்.

புழிச் 'செப்பல் இசையன வெண்பா'1 என்னும் இலக்கணத்தோடு மாறும், செப்பலோசை சிதைய நிற்கும்; ஆகலின், ஆண்டு உயிரளபெடைகளை இவ் விலக்கணத்தால் அலகு பெறா என்று விலக்க, வண்ணம் சிதையாதாம்.

'அளபெடை ஆவியும் அலகில,' என்னாது, 'அலகியல்பில' என்ற விதப் பினால், ஆண்டு உயிரளபெடைகளை நெட்டெழுத்தே போலக் கொண்டு வழங்கப் படும் எனக் கொள்க.

இனி, அவை அலகு பெறுமாறு :

'சிலைவிலங்கு நீள்புருவம் சென்றொசிய நோக்கி
முலைவிலங்கிற் றென்று முனிவாள்—மலைவிலங்கு
தார்மாலை மார்ப! தனிமை பொறுக்குமோ
கார்மாலை கண்கூடும் போழ்து?' 2

இதனுள் குற்றியலுகரம் இவ்விலக்கணத்தோடு மாறு கொள்ளாது நின்று அலகு பெற்றவாறு கண்டுகொள்க.

'வந்துநீ பேரின்* உயிர்வாழும்; வாராக்கால்
முந்தியாய் பெய்த வளைகழலும்;—முந்தியாம்
கோளானே கண்டனம் கொல்குறியாய் இன்னுமோர்
நாளானே நாம்புணரு மாறு.'

இதனுள், 'வந்துநீ' என்புழிக் குற்றியலுகரமும், 'முந்தியாய்' என்புழிக் குற்றியலுகரமும் தளை சீர் வண்ணங்கட்கு ஓர் உபகாரம் பட நின்று அலகு பெற்றவாறு. பிறவும் அன்ன.

'காவல் உழவர் களத்தகத்துப் போரேறி
நாவலோஒ என்றிசைக்கும் நாளோதை†—காவலன்றன்
கொல்யானை மேலிருந்து கூற்றிசைத்தாற் போலுமே‡
நல்யானைக் கோக்கிள்ளி நாடு. 3

என இதனுள், 'நாவலோஒ' என்புழி உயிரளபெடை தளை சீர் வண்ணங் களோடு மாறு கொள்ளாது நின்று அலகு பெற்றவாறு.

'கடாஅக் களிற்றின்மேற் கட்படாஅ மாதர்
படாஅ முலைமேற் றுகில்.' 4

எனவும்,

'காஅரி கொண்டான் கதச்சோ மதனழித்தான்
ஆஅழி ஏந்த லவன்.' 5

எனவும் இவற்றுள், 'கடாஅக் களிறு,' 'படாஅ முலை,' 'காஅரி,' 'ஆஅழி' என் புழி வந்த உயிரளபெடைகள் தளை சீர் வண்ணங்களோடு மாறு கொள்ளாது நின்று அலகு பெற்றவாறு.

---

1 யா. வி. சூ. 57. 2 தண்டி. சூ. 16 மேற். 3 முத்தொள். 4.
4 குறள். 1087. 5 யா. வி. சூ 41 95. உரைமேற்.

குறிப்பு :—*விதப்பு—சிறப்பித்து எடுத்துச் சொல்லுதல், முந்தியாய்—(முந்து+யாய்) முந்து—முன்பு யாய்—தாய் பெய்த—அணிந்த கோளானே—அநுபவத்தால் (என்னாருயிர் கோள் உண்டே'—திவ். திருவாய். 9—6—7.)

பி-ம் : * சேரின் † நாவோதை ‡ கூற்றிசைப்பப் போலாதே

'தூஉத் தீம்புகை தொல்விசும்பு போர்த்தது கொல்
பாஅஅய்ப் பகல்செய்வான் பாம்பின்வாய்ப் பட்டான்கொல்
மாஅ மிசையான்கொல் நன்னன் நறுநுதலார்
மாஅமை எல்லாம் பசப்பு.' 1

என்பதூஉம் கொள்க.

'சீர்தளை வண்ணம்' என்னாது, 'தளைசீர் வண்ணம்' எனமுறை பிறழக் கூறினமையால், குற்றியலிகரக் குற்றியலுகரங்களைக் குற்றெழுத்தே போலக் கொண்டு அலகிடப்படும் எனக் கொள்க.

'தளைசீர் வண்ணம் கெடவரும்' என்னாது 'தாம்கெட வரினே' என்ற விதப்பினால், தனிநிலை அளபெடை நேர்நேர் ஆகவும், இறுதிநிலை அளபெடை நிரை நேர ஆகவும் வைக்கப்படும், மூன்று மாத்திரையின் மிக்க பல மாத்திரையான் வரினும்,' எனக் கொள்க. என்னை?

'தனிநிலை அளபெடை நேர்நேர் இயற்றே.' 2
'இறுதிநிலை அளபெடை நிரைநேர் இயற்றே.' 3

என்றார் ஆகலின்.

'இடைநுடங்க ஈர்ங்கோதை' என்னும் தொடக்கத்தன அளபெடுப்பன அல்ல. என்னை?

'மாத்திரை வகையாற் றளைதபக் கெடாநிலை
யாப்பழி யாமைநின் றளபெடை வேண்டும்.'

என்ப ஆகலின். 'அதனால் இச்சூத்திரத்துள் 'அளபெடை ஆவியும்' என்பது வேண்டா என்று விடுத்திடலாமோ?' எனின், அற்றன்று; செய்யுளகத்தும் பரவை வழக்கினுள்ளும் 'கடாக்களிறு, படாமுலை' என்று அளபெடாதே தத்தம் பொருளைப் பயக்கும் சொற்கள், ஒருசார்ச் செய்யுளகத்து வந்து மாத்திரை சுருங்கிச் சீரும் தளையும் சிதைய வந்தால்,

'கடாஅக் களிற்றின்மேற் கட்படா மாதர்
படாஅ முலைமேற் றுகில்.' 4

என்று சீரும் தளையும் சிதையாமே அளபெடுக்கும்.

'நிலம்பாய்ப்பாய்ப் பட்டன்று நீலமா மென்றோள்
கலம்போய்ப்போய்க் கௌவை தரும்.' 5

என்றித் தொடக்கத்தன மாத்திரை சுருங்கிச் சீரும் தளையும் சிதைய நில்லா ஆகலின், அளபெடா என்பது. என்னை?

'மாத்திரை வகையாற் றளைதபக் கெடாநிலை
யாப்பழி யாமைநின் றளபெடை வேண்டும்.'

என்றார் ஆகலின்.

இதன் கருத்து, பரவை வழக்கினுள் பண்ட மாற்றும், நாவல் கூறலும், அவலமும், அழுகையும், பூசலிடுதலும், முறையிடுதலும் முதலாவுடையன

---

குறிப்பு.—நாவலோடு—நெற்போர் தெழிப்போர் பகட்டினங்களைத் துரப்பதோர் ஒலிக் குறிப்பு, ஓதை—ஒலி.

1 பத்துப்: மலைபடு இறுதிச் செய்யுள் 2, 3 நற்றத்தனார். 4 குறள், 1087.
5. தொல். பொ. செய். சூ. 17 உரைமேற், யா. வி. சூ. 93, 95 உரைமேற்.

வற்றுள் அளபெடுத்த மொழிகள் செய்யுளகத்து வந்து உச்சரிக்கும்பொழுது அளபெடா என்பது இலக்கணம் இன்மையின், செய்யுளகத்தே வந்து தளை சீர் வண்ணம் கெட நின்றால் அலகு பெறு என்பதற்கு, 'அளபெடை ஆவியும் அலகியல் பில', என்பது சொல்லவேண்டும் என்க. அல்லதூஉம்,

'ஆழி இழைப்பப் பகல்போம்; இரவரின் *
தோழி துணையாத் துயர்தீரும்;—'வாழி
நறுமாலை தாராய் திரையவோஒ!' என்னும்
செறுமாலை சென்றடையும் போழ்து.' 1

என்னும் பொய்கையார் வாக்கினுள், 'திரையவோ' என்பதனைப் புளி மாங்காயாக வைப்பினும், வகையுளி சேர்த்துக் 'கருவிளம்' என்னும் சீராக வைப்பினும் சீரும் தளையும் சிதைந்து செய்யுள் அழிய நிற்பதன்று ஆயினும், விளி முதலியவற்றுள் அளபெழுந்த செய்யுளிடத்து அவ்வாறே சொல்லப்படும் என்னும் கருத்தினால் அகத்தியனார் ஆனந்த ஓத்தினுள் இதனை,

'இயற்பெயர் சார்த்தி எழுத்தள பெழினே
இயற்பா டில்லா எழுத்தா னந்தம்.' 2

என்றார் என்க: பிறரும் கூறினர். என்னை?

'சீர்தளை சிதைவுழி ஈருயிர்க் குறுக்கமும்
நேர்தல் இலவே உயிரள பெடையும்.' 3

என்றார் மயேச்சுரர்.

'இஉ இரண்டன் குறுக்கம் தளைதப
நிற்புழி ஒற்றும் நிலைமைய ஆகும்.' 4

'உயிரள பேழும் உரைத்த முறையான்
வருமெனின் அவ்வியல் வைக்கப் படுமே.' 5

என்றார் காக்கைபாடினியார்.

'உயிரள பெடையும் குறுகிய உயிரின்
இகர உகரமும் தளைதபின் ஒற்றும்.' 6
சீர்தப வரினும் ஒற்றியற் றாகும்.' 7

என்றார் அவிநயனார்.

'ஐந்தா றசையின் அருகி உகரத்தின்
வந்தசீர் ஒன்றிரண்டொற் றெப்பித்து—நந்துவித்தால்
வஞ்சிப்பா விற்கியலும் நாலசைச்சீர்; அல்லுரிச்சீர்
தங்கி விரவத் தகும்.' 8

என்றார் பிறரும்.

---

1—2. யா. வி. சூ. 96 உரை மேற். 3—8. யா. வி. சூ. 95 உரைமேற்.
பி. ம: * இரவெல்லாம்.

குறிப்பு:—ஒப்பித்து—சமானமாக்கி, நந்துவித்தால்—கெடச்செய்தால். அல்லுரிச்சீர்—(அவை) அல்லாத வஞ்சியுரிச்சீர். விரவ—கலக்க.

'ஆற்றல்சால் ஆவி முயல அகத்தியல்கால்
ஏற்றெழுந்த தெட்டிடத்தும் முத்திறத்தால்—தோற்றி
விசையா மணுக்கந்தம் ஐந்தெழுத்தாய்ப் பத்துத்
திசையாய்ச் செவிப்புலனுய்ச் சென்று.'

இதனை விரித்து உரைத்துக்கொள்க.

எழுத்து ஒத்து முடிந்தது.

---

குறிப்பு—அகத்து இயல் கால்—உள்ளியங்கும் காற்று, எட்டிடம்—உரம், கண்டம், உச்சி, மூக்கு, இதழ், நா, பல், அண்ணம் என்பவைபோலும் ! முத்திறம்—எடுத்தல், படுத்தல், நலிதல் என்னும் மூவகை ஒலி முயற்சி. ஐந்தெழுத்து—உயிர், மெய், உயிர்மெய், ஆய்தம் எழுத்தல்லிசையாகிய ஒலிக்குறிப்பு என்பனபோலும் ! உயிரெழுத்தும், மெய்யெழுத்தும், ஆய்தமும், குற்றியலிகரமும், குற்றியலுகரமும் ஆகிய ஐந்தெழுத்து எனலுமாம். பத்துத் திசை—எண்டிசையும் ஆகாயமும் பூமியும். அணுக்கந்தம்—அணுக்களின் தொகுதி.

## உ. அசை ஓத்து.

---

5] [க

### அசையின் வகை.

'நேரசை என்று நிரையசை என்று
ஆயிரண் டாகி அடங்குமன் அசையே.'

என்பது சூத்திரம். 'இவ்வோத்து என்ன பெயர்த்தோ?' எனின், எழுத்தினான் அசை ஆமாறு உணர்த்திற்று ஆகலான், 'அசை ஓத்து' என்னும் பெயர்த்து.

'இச்சூத்திரம் என் நுதலிற்றோ?' எனின், எழுத்தினான் ஆக்கப்பட்ட அசைகளது பெயர் வேறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள்:

'நேரே நிரையே நேர்பே நிரைபென
ஈரிரண் டென்ப அசையின் பெயரே.' 1

என விரித்து உரைத்தாராயினும், தொகுத்து நோக்குங்கால், அசையே—அசை, நேரசை என்று நிரையசை என்று—நேரசையும் நிரையசையும் என, ஆயிரண்டாகி அடங்கும்—அவ்விரண்டாய் அடங்கும் (என்றவாறு).

நேர்நேராய் 'நேர்பு' அடங்கும்; நிரைநேராய் 'நிரைபு', அடங்கும். 'நேரென்று நிரையென்று ஆயிரண்டாகி அடங்குமன் அசை,' என்றது,
'நேரென்று நிரையென்று ஆயிரண்டாகி அடங்குமன் அசை,' என்றது,
பெறும்; நிரையசை இரண்டலகு பெறும். என்னை?

'நேரசை ஒன்றே நிரையசை இரண்டல
காகும் என்ப அறிந்திசி னோரே.'

எனவும்,

'நேரோர் அலகு நிரையிரண் டலகு
நேர்புமூன் றலகு நிரைபுநான் கலகென்
றோதினர் புலவர் உணரு மாறே.' 2

எனவும் சொன்னார் ஆகலின்.

'நேர்நேர் நிரைநேராய் நேர்பு நிரைபடங்கும்;
சீர்மேல் இசைபலவாய்ச் செல்லுங்கால்—ஈரியல்பிற்
குற்றிபோற் குற்றுகரம் கொண்டியற்ற நேர்நிரையாய்
முற்றும் முடிந்து விடும்.'

என்றார் பிறரும்.

---

1 யா. வி. சூ. 95 உரைமேற். 2 அவிநயம்; யா. வி. சூ. 95 உரைமேற்.

குறிப்பு—விதந்ததனால்—சிறப்பித்து எடுத்துச் சொன்னதனால்.

**இனி ஒருசார் வடநூல்வழித் தமிழாசிரியர், 'நேர், நிரை, நேர்பு, நிரைபு' அசைகள் ர, ட, ரு, டு வடிவாக இடுவாரும் உளர். என்னை ?**

'நேர்நிரை நேர்பு நிரைபென நான்கும்
ரடருடுப் போல ஒருவிரல் நேரே.'

**எனவும்,**

'விரலிடை இட்டன அசைச்சீர் நாலசை
விரல்வரை இடையினும் மானம் இல்லை.'

**எனவும்,**

'விரலிடை இட்ட ரடருடு வடிவம்
நிரல்பட எழுதி அலகு பெறுமே.'

என்றார் **காக்கைபாடினியார்.**

இனி, நேரசை நிரையசைகளைத் **'தனியசை, இணையசை'** என்பாரும் உளர். என்னை ?

'தனியசை என்று இணையசை என்று
இரண்டென மொழிமனர் இயல்புணர்ந் தோரே.'

என்றார் காக்கைபாடினியார்.

6] **நேரசை.** [உ

நெடில்குறில் தனியாய் நின்றுமொற் றடுத்தும்
நடைபெறும் நேரசை நால்வகை யானே.

என்பது சூத்திரம். 'இஃது என் நுதலிற்றோ?' எனின், அதிகாரம் பாரித்த இரண்டசையுள்ளும், முதற்கண் நேரசை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

**இதன் பொருள் :** நெடில் குறில் தனியாய் நின்றும்—நெட்டெழுத்துத் தனியே நின்றும், குற்றெழுத்துத் தனியே நின்றும், ஒற்று அடுத்தும்—நெட்டெழுத்து ஒற்றடுத்து நின்றும், குற்றெழுத்து ஒற்றடுத்து நின்றும், நடைபெறும் நேரசை நால்வகையானே—நேரசை இந்நான்கு வகையானும் **நடத்தல்** பெறும் (என்றவாறு).

**உதாரணம் :** **ஆ, ழி வெள், வேல்**

இதில் **'ஆ'**—தனி நெடில் நேரசை.
**'ழி'**—தனிக்குறில் நேரசை.
**'வெள்'**—குற்றெழுத்து ஒற்றடுத்த நேரசை.
**'வேல்'**—நெட்டெழுத்து ஒற்றடுத்த நேரசை.

**கோல், வேல், கண், கோழி, வேந்தன், காரி, சேந்தன், பெற்றான், வீடு** என்றிவை பிறவும் அன்ன.

**உதாரணச்செய்யுள் :**

'ஆளி நன்மான் கோள்வல் வேற்றை.'

எனவும்,

---

குறிப்பு—மானம்—குற்றம், ஆளி—யாளி, மான்—மிருகம், கோள்வல் எற்றை—ஆற்றல் மிக்க ஆண் விலங்கு.

'போது சாந்தம் பொற்ப ஏந்தி
ஆதி நாதற் சேர்வோர்
சோதி வானம் துன்னு வோரே.' 1

எனவும் இவை நேரசை நான்கும் வந்த செய்யுள்.

'நடைபெறும்' என்ற விதப்பால் ஒன்றரை மாத்திரை என்று ஓதப்பட்ட ஐகார ஔகாரக் குறுக்கமும் நேரசையாம்:

'தன்னாட் பூத்த பொன்னிணர் வேங்கை.' 2

எனவும்,

'கௌவை போகிய கருங்காய் பிடியேழ்
நெய்கொள ஒழுகிய பல்கவ ரீரெண்' 3

எனவும்,

'ஔவை என்று வேறெடுத் துரைக்கும்
தௌவை என்றன் ஓலை'

எனவும்,

'பௌவத் தன்ன பாயிருள் நீந்தி' 4

எனவும் கொள்க.

7] தனிக்குறில் நேரசை ஆகாத இடங்கள் [ந

குறிப்பே ஏவல் தற்சுட் டல்வழித்
தனிக்குறில் மொழிமுதல் தனியசை இலவே.

'என்பது என் நுதலிற்றோ?' எனின், மேற்சூத்திரத்துத் 'தனிக்குறில் நேரசையாம்' என்றவழி, அஃது இன்ன இடத்தன்றி ஆகாது என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள்: குறிப்பே ஏவல் தற்சுட்டு அல்வழி தனிக்குறில்—குறிப்பின்கண்ணும் ஏவற்கண்ணும் தற்சுட்டின்கண்ணும் அல்லாதவழித் தனிக்குறில், மொழி முதல் தனியசை இலவே—மொழி முதற்கண் நின்று நேரசை ஆதல் இல (என்றவாறு).

என்னை?

'தற்சுட் டேவல் குறிப்பிவை அல்வழி
முற்றத் தனிக்குறில் முதலசை ஆகா.'

என்றார் பல்காயனார்.

(உ-ம்.) 'உண்ணான் ஒளிநிறான் ஓங்கு புகழ்செய்யான்
துன்னருங் கேளிர் துயர்களையான்—கொன்னே
வழங்கான் பொருள்காத் திருப்பானேல் அஆ!
இழந்தான்என் றெண்ணப் படும்.' 5

---

போது—மலர், சாந்தம்—சந்தனம், ஆதிநாதர்—விருஷப தீர்த்தங்கரர். மேருமந். 187 உரை; அருகக் கடவுள் எனினுமாம்.

1 யா. வி. சூ. 69 உரைமேற். 2 அகம். 85. 3 பத்துப். மலைபடு. 105—6. 4 'பகலே பல்பூங் கானல்' எனும் செய். அடி 12; யா. வி. சூ. 37 உரைமேற். 5 நாலடி. 9.

இதனுள் ‘அஆ’ என்புழிக் குறிப்பின்கண் தனிக்குறில் மொழிமுதற்கண் நின்று நேரசை ஆயிற்று.

> ‘வெறிகமழ் தண்சிலம்பின் * வீங்கி உகளும்
> மறிமுலை உண்ணாமை வேண்டிப்—பறிமுன்கை
> அஉ அறியா அறிவில் இடைமகனே!
> நொஅலையல் நின்னாட்டை நீ.’ 1

இதனுள் ‘நொ’ என ஏவற்கண் தனிக்குறில் மொழிமுதற்கண் வந்து நேரசை ஆயிற்று. ‘நொ’ என்றது, ‘ஒன்றைச்செய்’ என்றமையான் ஏவல். ‘அஉ அறியா’ எனத் தற்சுட்டின்கண் தனிக்குறில் மொழி முதற்கண் நின்று நேரசையாயிற்று. ‘அஉ அறியா’ என்பதில் அகரம் தன்னை உணர்த்திற்று; ஆதலால், தற்சுட்டு.

‘குறிப்பே’ என ஏகாரம் மிகுத்துக் கூறிய அதனால், சுட்டின்கண்ணும் வினாவின்கண்ணும் ஒருசார் தனிக்குறில், மொழி முதற்கண் வந்து நேரசையாம். என்னை?

> ‘ஏவல் குறிப்பே தற்சுட் டல்வழி
> யாவையும் தனிக்குறில் முதலசை ஆகா;
> சுட்டினும் வினாவினும் உயிர்வரு காலை
> ஒட்ட வரூஉம் ஒருசாரும் உளவே.’

என்றார் மயேச்சுரர்.

(உ—ம்.) ‘அஅவனும் இஇவனும் உஉவனும் கூடியக்கால்
எஎவனை வெல்லார் இகல்?’

‘குறிப்பே ஏவல் தற்சுட்டு . . . . அசையிலவே,’ என்றாலும், ‘மொழி

‘குறிப்பே ஏவல் தற்சுட்டு அசையிலவே,’ என்றாலும், ‘மொழி
முதல்’ என்பது பெறலாம். என்னை?

> ‘ஒற்றின் றாகியும் குறிப்பே ஏவல்
> தற்சுட் டல்வழி முதல்தனி நேராம்.’

என்றார் ஆகலின். அவ்வாற்றலாற்பெற வைத்தும், ‘மொழிமுதல்’ என்று விகற்பித்த அதனால், குறிப்பே ஏவல் தற்சுட்டின்கண் வந்த குற்றெழுத்து விட்டிசைப்பின் அல்லது மற்றொன்றனோடு இயைந்து இனியவாய் நடப்பினும் முதற்கண் நேரசை ஆகா.

வரலாறு: ‘யரல வழள இடையினமாம் ஏனை *
மரபு பிழையாத வைப்பு.’
‘அமருந்து தானை அதியர்தம் † கோவே!
துமருந்து தூயனவே கொண்டு.’

என்ற இவற்றுள், தற்சுட்டின்கண்ணும் ஏவற்கண்ணும் வந்த குற்றெழுத்து விட்டிசையாது, மற்றொன்றனோடு இயைந்து இனியவாய் நடத்தலின், நேரிசையாகா.

---

1. இடைக்காடனார் பாடல்; யா. வி. சூ. 37, 95 உரை மேற்.

பி-ம்: * தண்புறவின். *இடையின மென † அதிகரதங்கொண்டு.

குறிப்பு—‘அ ஆ’ என்பது அறிவின்கட் குறிப்பு.

குறிப்பு—நொ—துன்பப்பட்டு (‘நொக்கொற்றா’—நன். சூ. 165 உரைமேற்) அஉ அறியா—எட்டும் இரண்டும் அறியாத; அ,உ என்பன தமிழில் 8, 2 என்னும் இலக்கங்களைக் குறிக்கும். ‘யரல வழள’ என்பன தற்சுட்டின்கண் வந்தன; ‘து’ என்பது ஏவலின்கண் வந்தது. து—உண் (‘துவ்வளவா!’ —நன். சூ. 157 உரை).

'இலவே' என்னும் தேற்றேகார விதப்பினுல், குறிப்பு ஏவல் தற்சுட்டின்கண் வந்த குற்றெழுத்து விட்டிசைத்து நிற்பின், மொழியிடையும் இறுதியும் நின்றும் நேரசையாம்.

(உ—ம்.) 'அஇ உஎ ஒ இவை குறிய.'

என மொழியிடையிலும் கடையிலும் குற்றெழுத்துத் தற்சுட்டின்கண் வந்து நேரசை ஆயின. பிறவும் வந்தவழிக் கண்டுகொள்க.

8 **நிரையசை.** [௯

குறிலிணை குறில்நெடில் தனித்துமொற் றடுத்தும்
நெறிமையின் நான்காய் வருநிரை அசையே.

என்பது சூத்திரம். 'இஃது என் நுதலிற்றோ?' எனின், நிரையசை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

**இதன் பொருள்:** குறில் இணை குறில் நெடில் தனித்தும்—குறில் இரண்டு இணைந்தும், குறில் நெடில் இணைந்தும், ஒற்று அடுத்தும்—குறில் இணை ஒற்றடுத்தும், குறில் நெடில் ஒற்றடுத்தும், நெறிமையின் நான்காய் வரும் நிரையசையே—நிரையசை இந்த நான்கு முறைமையினும் வரும் (என்றவாறு).

'தனித்தும்' என மிகுத்த அதனுல், நேரசைகட்கும் நிரையசைகட்கும ஓதிய எழுத்துக்கள் மொழியாய் நிற்பினும், மொழிக்கு உறுப்பாய் நிற்பினும் கொள்ளப்படும். அவற்றுள் பொருள் பயந்து நிற்பன 'சிறப்பசை' என்றும், மொழிக்கு உறுப்பாய் நிற்பன 'சிறப்பில் அசை' என்றும் வழங்கப்படும். இவ்விரண்டினுனும் எட்டசையும் உறழப் பதினாறும்.

'நெறிமையின்' என்ற விதப்பினுல், நெடில் இரண்டு இணைந்தும், நெடில் குறில் இணைந்தும் நிரையசை ஆகா. என்னை?

'நெடிலொடு நெடிலும் நெடிலொடு குறிலும்
இணையசை ஆதல் இலவென மொழிப.'

என்றார் காக்கைபாடினியார்.

(உ—ம்.) வெறி, சுறா, நிறம், விளாம் என வரும்.

வெறி—குறில் இரண்டு இணைந்த நிரையசை.

சுறா—குறில்நெடில் இணைந்த நிரையசை.

நிறம்—இரு குறில் இணைந்து ஒற்றடுத்த நிரையசை.

விளாம்.—குறில்நெடில் இணைந்து ஒற்றடுத்த நிரையசை.

'பல, பலா, பலம், பலாம்' எனவும், 'மரு, பலா, முயல், கிழான்' எனவும், 'கழி, கனா, கடல் கடாம்' எனவும், 'கறி, பொரு, கடா, கடாம்' எனவும் வரும். பிறவும் அன்ன.

---

குறிப்பு.—எட்டசை-நேரசை நான்கும் நிரயசை நான்கும், உறழ – பெருக்க ('இரு நான் குருபும் உறழ்தர'–நன். சூ. 240).

உதாரணச் செய்யுள் :

'கடியுலாய் நிமிர்ந்த கயங்குடை வராஅல்'

எனவும்,

'அணிநிழ லசோகமர்ந் தருள்நெறி நடாத்திய
மணிதிக ழவிரொளி வரதனைப்
பணிபவர் பவநனி பரிசறுப் பவரே.'

எனவும் இவை நிரையசை நான்கும் வந்த செய்யுள். அல்லதூஉம்,

'நெடில்குறில் தனியாய் நின்றுமொற் றடுத்தும்
குறிலிணை குறினெடில் தனித்துமொற் றடுத்தும்
நடைபெறும் அசைநேர் நிரைநா லிரண்டே.'

என்றார் பல்காயனார்.

'குறிலே நெடிலே குறிலிணை குறினெடில்
ஒற்றொடு வருதலொடு மெய்ப்பட நாடி
நேரும் நிரையும் என்றிசிற் பெயரே.' 1

என்றார் தொல்காப்பியனார்.

'தனிநெடில் தனிக்குறில் ஒற்றொடு வருதலென்
றந்நால் வகைத்தே நேரசை என்ப.' 2

'குறிலிணை குறினெடில் ஒற்றொடு வருதலென்
றந்நால் வகைத்தே நிரையசை என்ப.' 3

என்றார் நற்றத்தனார்.

'நேர்நால் வகையும் நெறியுறக் கிளப்பின்
நெடிலும் குறிலும் தனியே நிற்றலும்
அவற்றின் முன்னர் ஒற்றொடு நிற்றலும்
இவைதாம் நேரசைக் கெழுத்தின் இயல்பே.'

'இணைக்குறில் குறினெடில் இணைந்துமொற் றடுத்தும்
நிலைக்குறி மரபின் நிரையசைக் கெழுத்தே.'

என்றார் சங்க யாப்பு உடையார்.

'நெடிலும் குறிலும் ஒற்றொடு வருதலும்
கடிவரை இலவே நேரசைத் தோற்றம்.'

'குறிலும் நெடிலும் குறில்முன் நிற்பவும்
நெறியினொற் றடுத்தும் நிரையசை ஆகும்.'

என்றார் பிறைநெடுமுடிக் கடைமிடற்றரனார் பெயர் மகிழ்ந்த பேராசிரியர்.

'தனிநெடி லாகியும் தனிக்குறி லாகியும்
ஒற்றொடு வந்தும் நேரசை யாகும்.'

'குறிலிணை யாகியும் குறினெடி லாகியும்
ஒற்றொடு வந்தும் நிரையசை யாகும்.'

என்றார் சிறுகாக்கைபாடினியார்.

---

1 தொல். பொ. செய். சூ. 3. 2, 3 யா. வி. சூ. 95 உரை மேற்.

**ஐகாரக்குறுக்கம் இணைந்த நிரையசை.**

**ஈறும் இடையும் இணைந்தும் இணையசை**
**ஆகும்ஐ என்ப அறிந்திசி னோரே.**

என்பது சூத்திரம். 'இஃது என் நுதலிற்றோ?' எனின், ஐகாரக்குறுக்கம் இணையசையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

**இதன் பொழிப்பு**: சீர்க்கு இறுதியும் இடையும் நின்ற ஐகாரம், ஐகாரத்தினோடு இணைந்தும் நிரையசையாம் (என்றவாறு).

**'இணைந்தும்'** என்ற உம்மையான், அல்வழி ஐகாரம் குற்றெழுத்தே போல நின்று பிறிதோர் எழுத்தினோடு இணைந்து நிரையசையாம்.

'சீர்' என்பது, ஆற்றலாற் பெற்றது. அதனை 'அரிமா நோக்கு' எனினும், 'அதிகாரம்' எனினும் அமையும்.

'குற்றெழுத்தே போல' என்பது,

'விதப்புக் கிளவி வேண்டியது விளைக்கும்.'

என்ப ஆகலானும்,

'குறுமை எழுத்தின் இயல்பே ஐகாரம்
நெடுமையின் நீங்கியக் கால்.'

என்றார் ஆகலானும் சொல்லப்பட்டது.

'அந்தமும் நடுவும் நிரையசை யாகும்,' எனவே, ஆதிக்கண் நின்ற ஐகாரம் நிரையசை ஆகாது. என்னை?

'ஐயென் நெடுஞ்சினை ஆதி ஒழித்தல
கெய்தும் இணையசை என்றிசி னோரே.'

என்றார் **காக்கைபாடினியார்.**

'இடையும் கடையும் இணையும் ஐ எழுத்தே.'

என்றார் **சிறுகாக்கைபாடினியார்.**

'கடையும் இடையும் இணையும் ஐ இரட்டியும்.'

என்றார் **அவிநயனார்.**

(உ-ம்.) **'கெண்டையை வென்ற கிளரொளி உண்கண்ணாள்**
**பண்டையள் அல்லள் படி.'**

எனச் சீர்க்கடைக்கண் ஐகாரம் இரண்டு இணைந்து நிரையசை ஆயிற்று.

'அன்னையையான் நோவ தவமால் அணியிழாய்!
புன்னையையான் நோவன் புலந்து.'

எனச் சீர் நடு ஐகாரம் இரண்டு இணைந்து நிரையசை ஆயிற்று.

---

குறிப்பு.—அல் வழி—இணை அல்லாத வழி, ஆற்றல்—இன்ன சொல் இன்ன பொருள் உணர்த்தும் என்னும் நியதி, அரிமா நோக்கு—சிங்க நோக்கு; அது முன்னும் பின்னும் நோக்குவது; சூத்திர நிலைகளுள் ஒன்று (நன். சூ. 19), அதிகாரம்—சந்தர்ப்பம் (குறள். 478 உரை), உண்கணாள்—மையுண்ட கண்ணாள், படி—உடம்பு ('நினையாரவன் மைப்படியே, திவ். இயற். திருவிருத். 93).

'படுமழைத் தண்மலை வெற்பன் உறையும்
நெடுந்தகையைக் கண்டதாம் நாள்.'

எனச் சீர்க்கடைக்கண் நின்ற ஐகாரம் குற்றெழுத்தோடு இயைந்து நிரையசை ஆயிற்று.

'புன்னைப் பொழிலருகே போயினுள் பூங்கொம்பர்
தன்னையரும் காணத் தளர்ந்து.'

எனச் சீர் நடு ஐகாரம் குற்றெழுத்தினோடு கூடி நிரையசை ஆயிற்று.

'பையுண் மாலைப் பழுமரம் படரிய
நொவ்வுப்பாறை வாவல்.' 1

எனச் சீர்முதற்கண் நின்ற ஐகாரம் குற்றெழுத்தினோடு கூடி நிரையசை ஆகாத வாறு காண்க.

'நடைக்குதிரை ஏறி நறுந்தார் வழுதி
அடைப்பையா! கோல்தா எனலும்—அடைப்பையான்
சுள்ளற்* சிறுகோல் கொடுத்தான்; தலைபெறினும்
எள்ளா† தியாங்காண் டலை.' 2

இதனுள், 'அடைப்பையா' என்புழிச் சீர் நடு ஐகாரம் நெட்டெழுத்தினோடு இயைந்து நிரையசை ஆயிற்று.

'மொழிபுணர்ந்த சீர்முதற்கண் மும்மூன்றும் ஆவி
இழிபும் இணையசையாம் என்பர்—ஒழிவின்றித்
தேரைத்தத் தாகச் சிவணும் முதற்குறிப்பே
ஏவற்க ணின்றும் எனல்.'

'குறிப்பே ஏவல் தற்சுட்டு' 3 என்னும் சூத்திரத்துணின்றும் 'சீர்முதல்' என்று அதிகாரம் வருவித்து, 'மொழிபுணந்த சீர்முதற்கண் மும்மூன்றும் ஆவி இழிபும் இணையசையாம்,' என்று ஐகாரக் குறுக்கம் பிறிதொன்றனோடு இயைந்தும், ஐகாரத்தினோடு இயைந்தும் நிரையசையாம் என்று கூட்டிப் பொருள் உரைக்கப்படும். என்னை?

'வேண்டி யதுநிறுவி வேண்டாப் பொருள்விலக்கும்
மாண்பினதாய் நிற்பது நூல்.'

என்பது ஆகலின்.

வரலாறு: 'பூந்தாமரை' 4 என்னும் பாட்டினுள்,

'புகழ்த லானுப் பெருவண் மையனே'

எனவும்,

---

1 தொல். பொ. கள. சூ. 23. நச். உரைமேற். 2 யா. வி. சூ. 95 உரைமேற்.
3 யா. வி. சூ. 7. 4 யா. வி. சூ. 15 உரைமேற்.

பி–ம்: * கொள்ளச் † சொல்லா

குறிப்பு.—*பையுள்–துன்பம், படரிய – சென்ற, நொவ்வு–விரைவு, பறை – பறத்தல், வாவல்–வெளவால், அடைப்பையான்–வெற்றி மடித்துக் கொடுப்போன், கோல்–குதிரைச் சாட்டை; சுள்ளற் சிறுகோல் என்பதும் அது ('குதிரை மேலிருந்து 'கோல்தா' என்றால் – – – சுள்ளற்கோலாம் ஆகலானும்' – தொல். சொல். 53 இளம் பூரணர் உரை), மும்மூன்றும் ஆவி இழிபு–ஒன்பதாம் உயிராகிய ஐகாரக் குறுக்கம், தேரைத்தத்து–தவளைப்பாய்த்து, சிவணும்–பொருந்தும், எனல்–என்க.

'வண்கொன்றை யஞ்சூட்டு வண்டார் குழன்மடவாள்
கண்கெண் டையைமருட்டும் காண்.'

எனவும் கொள்க.

'வழுக்கா* இயல்வகையின் வாய்மையால் வேறாய்
இழுக்கின் எறும்பொழுக்கே போலும்—எழுத்தின்
இசைத்தொடர்ச்சி மாலையை எண்முறையாற் கண்டித்
தசைத்திசைய வைப்ப தசை.'

இதனை விரித்து உரைத்துக்கொள்க.

அசை ஓத்து முடிந்தது.

---

பி—ம். : * வழுக்கின்.

குறிப்பு.—வழுக்கா—குறைபடாத, இயல்—இலக்கணம், இழுக்கின்—குறைபட்டால், எறும்பொழுக்கு—எறும்பின் சாரை, மாலை—வரிசை, எண்முறை—எட்டு வகை, கண்டித்து—துணித்து, அசைத்து—சார்த்தி.

# . சீர் ஓத்து

---

10] சீர்களின் பெயர் வேறுபாடு. [௧

> இயற்சீர் உரிச்சீர் பொதுச்சீர் என்று
> மயக்கற வகுத்த சீர்மூன் றாகும்.

என்பது சூத்திரம். இவ்வோத்து அசையினாற் சீராமாறு உணர்த்திற்று ஆகலான், 'சீர் ஓத்து' என்னும் பெயர்த்து.

'இச்சூத்திரம் என் நுதலிற்றோ?' எனின், அசைகளான் ஆகிய சீர்களது வேறுபாடும், அவற்றது எண்ணும் உணர்த்துதல் நுதலிற்று.

**இதன் பொருள்**: இயற்சீர் உரிச்சீர் பொதுச்சீர் என்று—இயற்சீரும் உரிச்சீரும் பொதுச்சீரும் என்று, மயக்கு அற வகுத்த சீர் மூன்று ஆகும்—ஐயம் அற வகுக்கப்பட்ட சீர் மூன்று வகைப்படும் (என்றவாறு).

'இவை இம்முறையே வைத்த காரணம் என்?' எனின், இயற்சீர் எல்லாச் செய்யுளுள்ளும் இயன்று இனிது நடத்தலின், சிறப்பு உடைத்து என்று முன் வைக்கப்பட்டது. என்னை?

> 'சிறப்புடைப் பொருளை முந்துறக் கிளத்தல்.'

என்பது தந்திர உத்தி ஆகலின்.

உரிச்சீர் எல்லாச் செய்யுளுள்ளும் வரும் எனினும், வெண்பாவிற்கும் வஞ்சிப்பாவிற்கும் உரிமை பூண்டு நிற்றலின், இடைக்கண் வைக்கப்பட்டது.

பொதுச்சீர் அருகியன்றி வாராமையின், கடைக்கண் வைக்கப்பட்டது.

அல்லதூஉம், இரண்டு முதலிய அசைகளாய் அடுக்கப்படுதலின், எண்முறை வைத்ததூஉம் ஆம். என்னை?

> 'இயற்சீர் உரிச்சீர் பொதுச்சீர் என்னும்
> நிகழ்ச்சிய என்ப நின்ற மூன்றும்.'

என்றார் மயேச்சுரர்.

'சீர்மூன் றாகும்', எனினும், குறித்த பொருளைக் கொண்டு நிற்கும். 'மயக்கற வகுத்த' என்ற மிகையால், நேரசையும் நிரையசையும், நேர்பு அசையும், நிரைபு அசையும் என நான்கு அசை வேண்டினர் தொல்காப்பியர் முதலிய தொல்லாசிரியர்; நேர்பு அசை நிரைபு அசை வேண்டாது, நேரசை நிரையசை வேண்டி, நாலசைப் பொதுச்சீர் வேண்டினார் காக்கைபாடினியார் முதலிய ஒருசார். ஆசிரியர்; நேர், நிரை, நேர்பு, நிரைபு என்னும் நாலசையும் நாலசைப் பொதுச்சீரும் வேண்டினார் பல்காயனார் முதலிய ஒருசார் ஆசிரியர்; இந்நூலுடையார் நேர்பு அசையும் நிரைபு அசையும் வேண்டாது, நாலசைப்

பொதுச்சீரும் வேண்டாமே நடப்பதோர் உபாயம் கண்டாரேனும், முதல் நூலின் வழி நில்லாது தமது மதம் படுத்துச் சொன்னர் என்னும் பாதுகாவல் நோக்கியும்,

> ' உலகம் தழீஇய தொட்ப மலர்தலும்
> கூம்பலும் இல்ல தறிவு.' 1

என்ப ஆகலானும், அவ்வாறு உரைப்பின் நுண்ணுணர்வினர்க்கு அல்லது அறிவரிது ஆகலானும், காக்கைபாடினியார் முதலிய தொல்லாசிரியர்தம் மதம் பற்றி ஈண்டு நாலசைச்சீர் எடுத்தோதினர் என்பது அறிவித்தற்கெனக் கொள்க. நாலசைச்சீர் வேண்டாமே நடாத்தும் உபாயம் போக்கிக் கூறுதும். அல்லதூஉம், சீர்வயின் பொருள் பயந்து நிற்பனவற்றைச் 'சிறப்புடைச்சீர்' என்றும், வகையுளி சேர்ந்து நிற்பனவற்றைச் 'சிறப்பில்சீர்' என்றும் சொல்வர் என்பது அறிவித்தற்கும் வேண்டப்பட்டது;

> 'விதப்புக் கிளவி வேண்டியது விளக்கும்.'

என்ப ஆகலின்.

> 'குற்றுகரம் ஒற்றுக்கிக் கூன்வகுத்துச் சிந்தியற்றி
> மற்று நெடிலும் வகையுளியும்—சொற்றபின்
> மேலசைச்சீர் நாட்டி அளபெடை வீறழித்தால்
> நாலசைச்சீர்க் கில்லை நடை.' 2

இதனை விரித்து உரைத்துக்கொள்க.

11] **இயற்சீரின் திறமும் தொகையும்.** [உ

> ஈரசை கூடிய சீரியற் சீர்; அவை
> ஈரிரண் டென்ப இயல்புணர்ந் தோரே.

'இஃது என் நுதலிற்றோ?' எனின், மேல் அதிகாரம் பாரித்த முறையானே மூவகைச் சீருள்ளும் முதற்கண் இயற்சீர் ஆமாறும், அவற்றது எண்ணும் உணர்த்துதல் நுதலிற்று.

**இதன் பொருள்:** ஈரசை கூடிய சீர் இயற்சீர்—இரண்டசை இணைந்து நின்றது 'இயற்சீர்' எனப்படும்; அவை ஈரிரண்டு என்ப—அவை நான்கு திறத்தன என்பர், இயல்பு உணர்ந்தோரே—நூல் முறைமையினை அறிந்தோர் (என்றவாறு).

அவை, நேர்நேர், நிரைநேர், நிரைநிரை, நேர்நிரை என்பன. என்னை?

> 'நேர்நேர் நிரைநேர் நிரைநிரை நேர்நிரையென்
> றீரிரண் டென்ப இயற்சீர்த் தோற்றம்.'

என்றார் ஆகலின்.

(உ-ம்.) 'தேமா, புளிமா, கருவிளம், கூவிளம்.'

எனவும்,

> 'தேமா, புளிமா, கணவிரி, பாதிரி.'

எனவும்,

> **'பூமா, மலர்பூ, மலர்மழை, பூமழை.'**

எனவும்,

1. குறள். 425. 2. யா. வி. சூ. 94 உரைமேற்.

குறிப்பு—வகையுளி–முன்னும் பின்னும் அசை முதலாகிய உறுப்புக்கள் நிற்புழி அறிந்து குற்றப்படாமல் வண்ணம் அறுத்தல் (யா.வி. சூ. 95 உரை); பாரித்த–சங்கற்பித்த.

'இம்மா, எழினி, இனிமொழி, இன்மொழி.'

எனவும்,

'வேங்கை, அரிமா, வலம்புரி, சந்தனம்.'

எனவும்,

'காசு, பிறப்பு, வரிவளை, நூபுரம்.'

எனவும் வரும். பிறவும் அன்ன. அவற்றிற்குச் செய்யுள் வருமாறு :

'குன்றக் குறவன் காதல் மடமகள்
வரையர மகளிர்ப் புரையும் சாயலள்
ஐயள் அரும்பிய முலையள்
செய்ய வாயினள் மார்பினள் சுணங்கே.' 1

எனவும்,

'சீயம் சுமந்த மாசறு மணியணை
மேய உரவோன் சேவடி
வாயின் வாழ்த்த வானுல கெளிதே.' 2

எனவும் இவற்றுள் இயற்சீர் நான்கும் வந்தன.

ஈரசைச்சீர் பிறிதாகாது எல்லாப் பொருள் மேலும் சொல்லப்படும் சிறப்புடைமையானும், முதற்பா இரண்டினுள்ளும் பெரும்பான்மை இயன்று இனிது நடத்தலானும் 'இயற்சீர்' என்பது காரணக்குறி.*

'ஓரோ அகையினல் ஆகிய ஈரசைச்
சீரியற் சீரெனச் செப்பினர் புலவர்'

என்றார் காக்கைபாடினியார்.

'கூடிய' என்ற மிகையான், இயற்சீரை 'ஆசிரிய உரிச்சீர்' என்றும் வழங்குவாரும் உளர். என்னை ?

'இயற்சீர் எல்லாம் ஆசிரிய உரிச்சீர்.'

என்றார் காக்கைபாடினியார்.

---

1 ஐங்குறு. 255. 2 திருப்பாமாலை.

குறிப்பு—வரையர மகளிர்—மலை வாழ் தெய்வப் பெண்டிர் ; புரையும்—ஒக்கும் ; ஐயள்—வியக்கத் தக்கவள் ; சுணங்கு—அழகு தேமல்.

சீயம்—சிங்கம் ; மாசறு—குற்றமற்ற ; மணியணை—அழகிய ஆசனம் ; மேய—அமர்ந்த உரவோன்—வலியோன் (அருகன்) ; வானுலகு—மோட்சம்.

முதற்பா இரண்டு—வெண்பாவும் ஆசிரியப்பாவும் ; காரணக் குறி—காரணப் பெயர்.

* "இஃது ஆட்சியும் குணனும் காரணமாகப் பெற்ற பெயர். 1. ஆட்சி : "இயற்சீர் இறுதிமுன் நேரவண் நிற்பின்" எனவும் (தொல். பொ. செய். சூ. 19). பிறுண்டும் ஆளும். 2. குணம் : இயற்சீராகலானும். நான்கு பாவிற்கும் இயன்று வருதலானும் குணம் காரணமாயிற்று. இயல்பு வகையான் ஒரோ ஒன்றாகி நின்ற சொற்கள் வருதல் பெரும் பான்மையாகலானும், நான்கு பாவிற்கும் பொதுவாகி இயன்று வருதலானும், இயலசையான் வரும் ஈரசைச் சீர் ஆதலானும், இவற்றை ஒரு பாவிற்கு உரிமை கூறுதல் அரிதாகலானும், இவற்றை "இயற்சீர்" என்றான்." (தொல். பொ. செய். சூ. 13 பேராசிரியர் உரை.)

அகை—கூறுபாடு (சீவக. 2694).

மூவசைச் சீர்உரிச் சீர்இரு நான்கனுள்
நேரிறு நான்கும் வெள்ளை ; அல்லன
பாவினுள் வஞ்சியின் பாற்பட் டனவே.

'என்பது என் நுதலிற்றோ ?' எனின், 'உரிச்சீர்' ஆமாறும், அவற்றது எண்ணும், பெயர்வேறுபாடும் உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் : மூவசைச்சீர் உரிச்சீர் இரு நான்கனுள்—மூன்று அசையான் ஆகிய சீர் உரிச்சீர் ; அஃது எட்டு வகைப்படும் ; அவற்றுள், நேர் இறு நான்கும் வெள்ளை—நேரசை இறுதியாகிய நான்கும் வெண்பா உரிச்சீர் ; அல்லன பாவினுள் வஞ்சியின்பாற்பட்டனவே—அவை அல்லனவாகிய நிரையசை இறுதியாகிய நான்கும் பாவகையுள் வஞ்சிப்பாவின் பகுதியாகிய 'வஞ்சி உரிச்சீர்' எனப்படும் (என்றவாறு).

'பாவினுள் வஞ்சியின் பாற்பட்டனவே,' என்ற சிறப்பால், வஞ்சி உரிச்சீர் பிற செய்யுளுள் வரினும், வஞ்சிப்பாவினுட்போல இனிது நடவா என்க.

வெண்பா உரிச்சீர் நான்கிற்கும் வாய்பாடு :

'தேமாங்காய், புளிமாங்காய், கருவிளங்காய், கூவிளங்காய்.'
எனக் கொள்க. இனி,

'பூவாமா, விரிபூமா, நறுவடிமா, பூவிரிமா.'
எனவும்,

'பொன்னுக்கும், பொருளாக்கும், பொருள்பெருக்கும், பொன்பெருக்கும்.'
எனவும்,

'தென்மேற்கு, வடமேற்கு, வடகிழக்கு, தென்கிழக்கு.'
எனவும்,

'வேய்மென்றோள், வளைமென்றோள், வளைகெழுதோள், வேய்கெழுதோள்.'
எனவும் வரும். பிறவும் அன்ன.

அவற்றிற்குச் செய்யுள் :

'பொன்னுரை மார்பிற் புனைகழற்காற் கிள்ளிபேர்
உன்னேனென் றூழுலக்கை பற்றினேற்—கென்னோ*
மனனோடு வாயெல்லாம் மல்குநீர்க் கோழிப்
புனனாடன் பேரே வரும் !'

எனவும்,

பி-ம். : * கன்னோ

குறிப்பு :—கழல்—வீரகண்டை ; கிள்ளி—சோழன் ; உன்னேன்—நினையேன் ; ஊழுலக்கை—நினைப்பழிதல் ; என்னோ—எக்காரணத்தாலோ ; கோழி—(சோழர்க்குத் தலைநகராகிய) உறையூர் ; புனல் நாடன்—சோணாட்டான்.

'வான்றோயும் பொன்னெயிலான் வண்டார் மலரடிக்கீழ்த்
தேன்றோய் மலர்பெய்ம்மின் சென்று.'

எனவும் இவற்றுள் வெண்பா உரிச்சீர் நான்கும் வந்தன.

வஞ்சி உரிச்சீர் நான்கிற்கும் வாய்பாடு:

'தேமாங்கனி, புளிமாங்கனி, கருவிளாங்கனி, கூவிளாங்கனி.'

எனவும்,

'மாவாழ்சுரம், புலிவாழ்சுரம், புலிபடுசுரம், மாபடுசுரம்.'

எனவும்,

'பூவாழ்பதி, திருவாழ்பதி, திருவுறைபதி, பூவுறைபதி.'

எனவும்,

'மீன்வாழ்துறை, சுறவாழ்துறை, சுறமறிதுறை, மீன்மறிதுறை.'

எனவும்,

'பூண்மென்முலை, புணர்மென்முலை, புணரிணமுலை, பூணிளமுலை.'

எனவும் வரும்.

அவற்றிற்குச் செய்யுள்:

'சுறமறிவன துறையெல்லாம்;
இறவீன்பன இல்லெல்லாம்;
மீன்றிரிவன கிடங்கெல்லாம்;
தேன்றாழ்வன பொழிலெல்லாம்;
எனவாங்கு,
தண்பணை தழீஇய இருக்கை
மண்கெழு நெடுமதில் * மன்னன் ஊரே.'

எனவும்,

'தாளோங்கிய தண்பிண்டியின்
நாண்மலர்விரி தருநிழற்கீழ்ச்
சுடர்பொன்னெயில் நகர்நடுவண்
அரியணைமிசை இனிதமர்ந்தனை
அதனால்,
பெருந்தகை அண்ணல்! நிற் பரவுதும்
திருந்திய சிவகதி சேர்கயாம் எனவே.' 1

எனவும் இவற்றுள் வஞ்சியுரிச்சீர் நான்கும் வந்தன.

---

1 திருப்பாமாலை.

பொன் எயில்—பொன் மதில்.

பி-ம்: * செங்கோல்.

குறிப்பு—சுற—சுறுமீன்; மறிவன—திரிவன; துறை—நீர்த்துறை; இறவு—தேன் கூடு; கிடங்கு—குளம்; தேன் தாழ்வன—தேன் சிந்துவன; பொழில்—சோலை; தண்பணை—மருத நிலம்; இருக்கை—இருப்பிடம்.

பிண்டி—அசோக மரம், நாள் மலர்—புது மலர்; எயில்—மதில்; நடுவண்—இடையில்; அரியணை—சிங்காதனம்; அண்ணல்—பெரியோனே; நிற்பரவுதும்—உன்னை வணங்குவோம்; சிவ கதி—சமணர் கூறும் முத்தி நிலை (சிலப். 10 : 180.)

பூந்தாமரைப் போதலமரத்
தேம்புனலிடை மீன்றிரிதர
வளவயலிடைக் களவயின்மகிழ்
வினைக்கம்பலை மனைச்சிலம்பவும்
மனைச்சிலம்பிய மணமுரசொலி
வயற்கம்பலைக் கயலார்ப்பவும்

நாளும்,

மகிழும் மகிழ்தூங் கூரன்
புகழ்தல் ஆனுப் பெருவண் மையனே.' 1

எனவும் கொள்க.

'இயற்சீர் இறுதிமுன் நேரவண் நிற்பின்
உரிச்சீர் வெண்பா ஆகும் என்ப.' 2

எனத் தொல்காப்பியனுர் 'வெண்பா உரிச்சீர்' என்றதனை மொழி மாற்றி 'உரிச்சீர் வெண்பா' என்றுர். அதுபோலக் கொள்க.

நேரீறுகிய மூவசைச்சீர் நான்கும் பெரும்பான்மையும் வெண்பாவுக்கே உரிமை பூண்டு நிற்றலின், 'வெண்பா உரிச்சீர்' என்பதூஉம் காரணக்குறி; நிரையீறுகிய மூவசைச்சீர் நான்கும் பெரும்பான்மையும் வஞ்சிப்பாவிற்கே உரிமை பூண்டமையின், 'வஞ்சி உரிச்சீர்' என்பதூஉம் காரணக்குறி. என்ன?

'மூவசை யான்முடி வெய்திய எட்டனுள்
அந்தம் தனியசை வெள்ளை; அல்லன
வஞ்சிக் கிழமை வகைப்பட் டனவே.'

என்றுர் காக்கைபாடினியார்.

'ஈரசை யாக மூவசைச் சீர்தான்
நேரிறின் வெள்ளை; நிரையிறின் வஞ்சி.'

என்றுர் அவிநயனுர்.

13] பொதுச்சீரின் திறமும் தொகையும் [ ௬

நாலசைச் சீர்பொதுச் சீர்பதி னறே.

'என்பது என் நுதலிற்றே?' எனின், நிறுத்த முறையானே 'பொதுச்சீர்' ஆமாறும், அவற்றது எண்ணும் உணர்த்துதல் நுதலிற்று.

---

1 யா. வி. சூ. 15,21,90 உரைமேற். 2 தொல். பொ. செய். சூ. 19.

குறிப்பு.—போது–மலர்; அலமர–அசைய; புனல்–நீர்; களவயின்–களவொழுக்கத்தில்; கம்பலை–ஒலி; சிலம்பவும்–ஒலிக்கவும்; கயல்–கெண்டை மீன்; மகிழ் தூங்கு ஊரன்–மகிழ்ச்சி தங்கியுள்ள மருத நிலத் தலைவன்; ஆனு–கெடாத; வண்மையன்–வள்ளல்.

அந்தம்–இறுதி; தனியசை–நேரசை (இணையசை–நிரையசை); கிழமை – உரிமை; வெள்ளை–வெண்பா.

ஈரசையாக–நேரசையும் நிரையசையுமாக.

நிறுத்த முறை–(சூத்திரம் 10 ல்) நிறுத்திய முறை.

**இதன் பொருள் :** நாலசைச்சீர் பொதுச்சீர்—நாலசையானுகிய **சீர் பொதுச்சீர்'** எனப்படும்; பதினறே—(அவைதாம்) பதினறு **திறத்தன** (என்றவாறு).

அவற்றுள் நேர் இறுதி எட்டும், **நிரை** இறுதி எட்டுமாம். **என்னை ?**

> 'ஈரசைச்சீர் பின்முன் ஞவைத் துறழ்ந்து
> மாறியக்கால் நாலசைச் சீர்பதி ஞரும்.'

என்ருர் **அவிநயஞர்.**

அவற்றிற்கு வாய்பாடு :

1. தேமாந்**தண்ணிழல்**
2. புளிமாந்**தண்ணிழல்**
3. கருவிளந்**தண்ணிழல்**
4. கூவிளந்**தண்ணிழல்**

எனவும்,

5. தேமாந்**தண்பூ**
6. புளிமாந்**தண்பூ**
7. கருவிளந்**தண்பூ**
8. **கூவிளந்தண்பூ**

எனவும்,

9. தேமா**நறும்பூ**
10. புளிமா**நறும்பூ**
11. கருவிள**நறும்பூ**
12. கூவிள**நறும்பூ**

எனவும்,

13. தேமா**நறுநிழல்**
14. புளிமா**நறுநிழல்**
15. கருவிள**நறுநிழல்**
16. கூவிள**நறுநிழல்**

எனவும் கொள்க.

> 'தேமா புளிமா கருவிளங் கூவிளமென்
> ருமா றறிந்தவற்றின் அந்தத்து—நாமாண்**பின்**
> **தண்ணிழல் தண்பூ நறும்பூ நறுநிழலும்**
> நண்ணுவிக்க நாலசைச்சீர் **ஆம்.'**

**இதன்** வழியே ஓட்டுக.

> **'வாய்க்காலும்** வாய்த்தலையும் மாண்ட **துலைவாயும்**
> **நீக்காப்** பெருந்துறையும் முன்னிறீஇ—**நீக்கா**
> மறிவுவாழ் வென்ப திடையா முதற்கண்
> சுரமறிப்பின் நாலசைச்சீர் சொல்.'

எனவும்,

> 'ஆரம் முறுவல் அணிவட மேகலையென்
> றீரிரண்டும் வைத்தெண் இடையாரச்—சேர்வித்து
> முத்தும் மணியும் முதல்வைப்ப நாலசைச்சீர்
> பத்தும்இரு மூன்றும் படும்.'

எனவும் நாலசைச்சீர்க்கு வாய்பாடு கூறினுர் பிறரும்.

---

குறிப்பு—உறழ்ந்து-பெருக்கி, ஒட்டுக-(சீர்களைப்) பொருத்துக.

அவற்றிற்குச் செய்யுள் :

‘அங்கண்வானத் தமரரசரும்
வெங்களியானை வேல்வேந்தரும்
வடிவார்கூந்தல் மங்கையரும்
கடிமலரேந்திக் கதழ்ந்திறைஞ்சச்

5. சிங்கஞ்சுமந்த மணியணைமிசைக்
கொங்கிவரசோகின் கொழுநிழற்கீழ்ச் *
செழுநீர்ப்பவளத் திரள்காம்பின்
முழுமதிபுரையும் முக்குடைநிழல்
வெங்கண்வினைப்பகை விளிவெய்தப்

10. பொன்புனைநெடுமதில் புடைவளைப்ப
அனந்தசதுட்டயம் அவையெய்த
நனந்தலையுலகுடை நவைநீங்க
மந்தமாருதம் மருங்கசைப்ப
அந்தரதுந்துபி † நின்றியம்ப

15. இலங்குசாமரை எழுந்தலமர
நலங்கிளர்பூமழை நனிசொரிதர

இனிதிருந்

தருள்நெறி நடாத்திய ஆதிதன்
திருவடி பரவுதும் சித்திபெறற் பொருட்டே.’ 1

இக்குறளடி வஞ்சிப்பாவினுள் 2 நாலசைச்சீர் பதினாறும் முதற்கண்ணே வந்தன. இவை பதினாறும் சிறப்பின்மையின், ‘பொதுச்சீர்’ என்பது காரணக்குறி.

---

1 திருப்பா மாலை. 2 இச்செய்யுள் யா. வி. சூ. 95 உரையில் சிந்தடி வஞ்சிப்பாவுக்கு உதாரணமாகக் காட்டப்பட்டுள்ளது.

குறிப்பு.—‘அங்கண்வானத்து’ எனத் தொடங்கும் இச்செய்யுளின் 11-ஆம் அடியிலுள்ள ‘அனந்தசதுட்டயம்’ என்னும் சீரையும், 13-ஆம் அடியிலுள்ள ‘மந்தமாருதம்’ என்னும் சீரையும், 15-ஆம் அடியிலுள்ள ‘இலங்குசாமரை’ என்னும் சீரையும் முறையே அனந்–த–சதுட்–டயம், மந்–த–மா–ருதம், இலங்–கு–சா–மரை என அலகிட்டு, புளிமாநறுநிழல், தேமாந்தண்ணிழல், புளிமாந்தண்ணிழல் என்னும் வாய்ப்பாடுகளாகக் கொள்க. சீர் பக்குவிட்டிசைப்புழியும் குற்றியலுகரம் இடையிட்டிசைப்புழியும் இங்ஙனம் அசையமைதி கொள்ளல் பண்டை வழக்கெனக் கொள்க.

கடிமலர்—மணமுள்ள மலர் ; கதழ்ந்து—திரண்டு ; முழுமதி—பூரணச் சந்திரன் ; புரையும்—ஒக்கும் ; முக்குடை—(சந்திராதித்தம், நித்திய விநோதம், சகல பாசனம் என்னும் மூன்று அடுக்குள்ள (அருகக் கடவுளுக்கு உரிய) குடை (சீவக. ௬௨244) ; விளிவெய்த—அழிய ; புடை—பக்கம் ; அனந்தசதுட்டயம்—(ஆன்மா நிருவாணதசையிலெய்தும்) அனந்தஞானம் (கடையிலா அறிவு), அனந்த தரிசனம் (கடையிலாக் காட்சி), அனந்த வீரியம் (கடையிலா வீரியம்). அனந்த சுகம் (கடையிலா இன்பம்) என்பன (சீவக. 2846 உரை) ; நனந்தலை—அகன்ற இடம் ; நவை—குற்றம் ; அந்தரதுந்துபி—தேவ வாத்தியம் ; நின்றியம்ப—இடைவிடாது ஒலிக்க ; அலமர—சுழல ; ஆதி—அருகக் கடவுள் ; சித்தி—சமணர் கூறும் முத்தி நிலை.

பா–ம் : * குளிர் நிழற்கீழ்ச் † அந்தரதுந்துபி.

'பொது, சிறப்பின்மையைச் சொல்லுமோ?' எனின், சொல்லும்.

என்னை?

'புலமிக் கவரைப் புலமை தெரிதல்
புலமிக் கவர்க்கே புலனும்—நலமிக்க
பூம்புனல் ஊர! பொதுமக்கட் காகாதே;*
பாம்பறியும் பாம்பின கால்.' 1

இதனுள் பொதுவைச் சிறப்பின்மைக்கட் புணர்த்தார் சான்றோர் ஆகலின்.

பிறரும் நாலசைச்சீர் எடுத்தோதினர். என்னை?

'அசையே இரண்டும் மூன்றும் தம்முள்
இசையே வருவன சீரெனப் படுமே;
ஈரிரண் டாகியும் ஒரோவிடத் தியலும்.'

என்றார் பல்காயனர்.

'நாலசை யானும் நடைபெறும்; ஓரசை
சீர்நிலை எய்தலும் சிலவிடத் துளவே.'

என்றார் காக்கைபாடினியார்.

'நாலசைச் சீரும் ஒரோவிடத் தியலும்
பாவொடு பாவினம் பயிறல் இன்றி.'

என்றார் அவிநயனர்.

14] ஓரசைச்சீரின் பெயரும் வகையும் [ரு

ஓரசைச் சீருமஃ தோரிரு வகைத்தே.

'என்பது என் நுதலிற்றோ?' எனின், 'ஓரசையினல் ஆகிய சீரும் பொதுச்சீர்' என்று எய்துவித்தலும், அவற்றது எண்ணும் உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள்: ஓர் அசைச்சீரும் அஃது—ஓர் அசையினன் ஆகிய சீரும் 'அஃது' என்று மாட்டெறிந்தமையின் பொதுச்சீராம்; ஓர் இரு வகைத்தே—அது நேரசைச்சீரும் நிரையசைச்சீரும் என இரண்டு வகைப்படும் (என்றவாறு).

(உ-ம்.) நாள், மலர் என்பன.

இவை ஓரசைச்சீருக்கு உதாரணம் உரைத்தது, வெண்பாவின் இறுதி உசை ஊட்டுதற்பொருட்டு.

அவற்றிற்குச் செய்யுள்:

'பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி
வாலெயி றூறிய நீர்.' 2

எனவும்,

'நன்றறி வாரிற் கயவர் திருவுடையர்
நெஞ்சத் தவலம் இலர்.' 3

எனவும் இவற்றுள் நேரசையும் நிரையசையும் வந்தவாறு காண்க. எனனை?

---

1 பழமொழி, 5. 2 குறள். 1121. 3 குறள். 1072.

குறிப்பு—பயிறல் இன்றி–கண்ணுற நிற்றல் இல்லாமல்; மாட்டெறிதல்–ஒரு சூத்திரத்திற் கூறிய விதியை அதனை ஒத்த சூத்திரங்கட்கும் இணைத்துக்கொள்ளும் ஓர் உத்தி (நன் சூ. 14).

பா-ம்: * காகாவாம்

'இசைநிலை நிறைய நிற்குவ வாயின்
அசைநிலை வரையார் சீர்நிலை பெறலே[1]

என்றார் தொல்காப்பியனார்.

'நேர்நிரை வரினே சீர்நிலை எய்தலும்
பாவொடு பிறவும் ஆகும் ஓரோவழி.'[2]

என்றார் அவிநயனார்.

'நேரும் நிரையும் சீராய் வருதலும்
சீரும் தளையும் சிதைவுழிக் கொளலும்
யாவரும் உணர்வர் யாவகைப் பாவினும்.'[3]

என்றார் மயேச்சுரர்.

15] முன்னே கூறப்பட்ட சீர்கள் செய்யுளுள் நிற்கும் முறை [சா

விரவியும் அருகியும் வேறும் ஓரோவழி
மருவியும் பெறுதும் வழங்குமன் அவையே.

'என்பது என் நுதலிற்றோ?' எனின், அச்சீர் செய்யுளகத்து நிற்கும் முறைமை உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள்:விரவியும்—(இயற்சீரும் உரிச்சீரும் செய்யுளகத்து) மயங்கியும், அருகியும்—(பொதுச்சீர்) அருகியும், வேறும்—(இயற்சீரும் உரிச்சீரும்) வேறு வேறே ஆயும் (செய்யுளகத்து வரும்); ஓரோவழி மருவியும்—நிரையீறுகிய நாலசைப் பொதுச்சீர் எட்டும் வஞ்சிப்பாவினுள்ளே வரும்; பெறுதும்—வஞ்சியுரிச்சீர் வெண்பாவினுள் வரப்பெறுது[ம்],* வழங்குமன் அவையே—அவ்வாற்றால் நடைபெறும் முன் கூறப்பட்ட சீர்கள் (என்றவாறு).

'விரவியும் அருகியும் வேறும் ஓரோவழி
மருவியும் பெறுதும் வழங்குமன் அவையே.'

என்றல்லது, 'இயற்சீரும் உரிச்சீரும் விரவியும் வரும்; பொதுச்சீர் அருகியும் வரும்; இயற்சீரும் உரிச்சீரும் வேறு வேறுகியும் வரும்; நிரையீறுகிய பொதுச்சீர் வஞ்சியுள்ளே வரும்; வஞ்சியுரிச்சீர் வெண்பாவினுள் வரப்பெறு; நேரீற்றியற்சீர் ஒத்தாழிசைக் கலிப்பாவுள்ளும், வஞ்சிப்பாவின் இறுதியும் வரப்பெறு; என்று இவ்வாறு கூறிற்றிலரேனும், 'உரையிற்கோடல்'[4] என்னும் உத்தியானும், 'பிறநூன் முடிந்தது தானுடம்படுதல்'[5] என்பதனுலும் இவ்வாறு உரைக்கப்பட்டது.

'அரையளபு குறுகல் மகரம் உடைத்தே;
இசையிட னருகும் தெரியுங் காலை.'[6]

எனத் தொல்காப்பியத்துள் இன்னவிடத்துக் குறுகும் என்று யாப்புறுத்துக் கூறிற்றில்லையேனும், 'உரையிற்கோடல்' என்னும் உத்தி பற்றி 'வகரத்தின் பின் மகரம் குறுகும்,'[7] என்று விருத்தியுள் விளங்கக் கூறினர். அது போலக் கொள்க. அவிநயத்துள்ளும்,

---

1 தொல். பொ செய். சூ. 27. 2, 3 யா. வி. சூ. 94 உரைமேற்.
4, 5 நன்-பாயி. 14: 166, தொல். எழுத். சூ. 13.
6, 7 தொல். எழுத்து. சூ. 330 காண்க.

பி-ம்: * இதன்பின் 'நேரீறுகிய தேமா புளிமா என்னும் இரண்டு இயற்சீரும் ஒத்தாழிசைக் கலிப்பாவிலும், தரவு தாழிசைகளுள்ளும் வரப்பெறு; வஞ்சியுள்ளும் இறுதிக்கண் பெரும்பான்மையும் வரப்பெறு என்னுந்' தொடர்கள் பழைய பதிப்பிற் காணப்படுகின்றன; எனினும் கிடைத்த ஏடுகளிற் காணப்படவில்லை.

'முதலிடை நுனிநாப் பல்லிதழ் மூக்கிவை
வன்மை முதலாம் மும்மையும் பிறக்கும்.'

எனப் பொது வகையாற்கூறி, இன்னவிடத்து இன்ன எழுத்துப் பிறக்கும் என்று விருத்தியுள் விளங்கக் கூறினர். அது போலக் கொள்க.

இது பொருந்தாது.

'வகார மிசையும் மகாரம் குறுகும்' 1

என்று போக்கிச் சொன்னர் ஆகலானும், இன்னவிடத்து இந்த எழுத்துப் பிறக்கும் என்று கணக்கியலுட் புறநடை எடுத்தோதினர் அவிநயனர் ஆகலானும், இந்நூலுடையாரும் 'மாஞ்சீர் கலியுட்புகா' 2 என்னும் இதன் புறநடையானும்,

'நாலசைச்சீர் வெண்பாவில் நண்ணு; அயற்பாவில்
நாலசைச்சீர் நேரீற்ற நாலிரண்டாம்;—நாலசைச்சீர்
ஈறுநிரை சேரின் இருநான்கும் வஞ்சிக்கே
கூறினர் தொல்லோர் குறித்து.'

என்னும் புறநடையானும், பிறவாற்றுனும் விளங்கக் கூறினர் என்க.

இனிப் பிற நூலுட் கூறுமாறு:

'இயற்சீர் உரிச்சீர் எனவிரு சீரும்
மயக்க முறைமையின் நால்வகைப் பாவும்
இனத்தின் மூன்றும் இனிதின் ஆகும்.'

'உரிச்சீர் விரவ லாயு மியற்சீர்
நடக்குன ஆசிரி யத்தொடு வெள்ளை
அந்தம் தனியாய் இயற்சீர் கலியொடு
வஞ்சி மருங்கின் மயங்குதல் இலவே.'

'நாலசை யானடை பெற்றன வஞ்சியுள்
ஈரொன் றிணைதலும் ஏனுழி ஒன்றுசென்
றுகலும் அந்தம் இணையசை வந்தன
கூறிய வஞ்சிக் குணத்த ஆகலும்
ஆகுன என்ப அறிந்திசி னேரே.'

என்றார் காக்கைபாடினியார்.

'நேரீற் றியற்சீர் கலிவயின் இலவே;
வஞ்சி மருங்கினும் இறுதியின் இலவே.'

என்றார் நற்றத்தனர்.

---

1 தொல். எழுத். சூ. 330   2 யா. கா. காரிகை, 40.

குறிப்பு.—யாப்புறுத்துக் கூறல்—வலியுறுத்துக் கூறுதல்.

நண்ணு—பொருந்தா; தொல்லோர்—பழைய ஆசிரியர்கள்; இனத்தின மூன்று—பாவினங்களாகிய தாழிசை துறை விருத்தம்—என்னும் மூன்று;

தனியாய்—நேரசையாய்; ஏனுழி—பிறவிடத்து; இணையசை—நிரையசை.

‘ஓசையின் ஒன்றி வரினும்வெண் சீரும்
ஆசிரிய அடியுட் குறுகும் என்ப.’

‘அகவலுள் தன்சீர் வெண்சீர் ஒருங்கு
புகலிற் கலியுடன் பொருந்தும் என்ப.’

‘வஞ்சியு ளாயின் எஞ்சுதல் இலவே.’

‘இயற்சீர் இறுதிநேர் இற்ற காலை
வஞ்சி யுள்ளும் வந்த தாகா ;
ஆயினும் ஒரோவிடத் தாகும் என்ப.’

என்றார் பல்காயனார்.

‘கலித்தளை அடிவயின் நேரீற் றியற்சீர்
நிலைக்குரித் தன்றே தெரியு மோர்க்கே.’ 1.

‘வஞ்சி மருங்கினும் இறுதி நில்லா.’ 2

என்றார் தொல்காப்பியனார்.

‘உரிமை இயற்சீர் மயங்கியும் பாநான் *
கிருமை வேறியல் வெண்பா வாகியும்
வருமெனும் வஞ்சி கலியினேர் இற்ற
இயற்சீர் ஆகா என்மனார் புலவர்.’

‘நிரையிறும் நாலசை வஞ்சி யுள்ளால்
விரவினும் நேரீற் றல்லவை இயலா.’

என்றார் அவிநயனார்.

‘நேரீற் றியற்சீர் கலிவயிற் சேரா ;
நிரையிற நின்ற நாலசை எல்லாம்
வரைதல் வேண்டும் வஞ்சியில் வழியே.’

என்றார் மயேச்சுரர்.

இவற்றிற்குச் செய்யுள் :

‘இருநோக் கிவளுண்க ணுள்ள தொருநோக்கு
நோய்நோக்கொன் றந்நோய் மருந்து.’ 3

என வெண்பாவினுள் இயற்சீரும் உரிச்சீரும் விரவி வந்தன.

---

1 தொல் பொ. செய். சூ 25. 2 தொ. பொ. செய். சூ. 26 3 குறள். 1091

பா-ம் : * பதினான்.

குறிப்பு—வரைதல் வேண்டும்-நீக்குதல் வேண்டும் ; விரவி-கலந்து.

'கொங்குதேர் வாழ்க்கை அஞ்சிறைத் தும்பி!
காமம் செப்பாது கண்டது மொழிமோ:
பயிலியது கெழீஇய நட்பின் மயிலியற்
செறியெயிற் றரிவை கூந்தலின்
நறியவும் உளவோநீ அறியும் பூவே?' 1

இவ்வாசிரியத்துள் இயற்சீரும் உரிச்சீரும் விரவி வந்தன.

'அடலணங்கு * கழற்செவ்வேல் அலங்குதார்ச் † செம்பியன்றன்
கெடலருங் கிளர்வேங்கை எழுதித்தம் உயிரோம்பா
துடல்சமத் துருத்தெழுந்த ஒன்னுத பல்லரசர்
கடகஞ்சேர் திரண்முன்கை கயிற்ருேடும் வைகினவே.'

இக் கலியுள் இயற்சீரும் உரிச்சீரும் விரவி வந்தன.

'தாழ்பொழிற் றடமாஞ்சினே
வீழ்குயிற் பெடைமெலிவினைக்
கண்டெழுந் துளர்சிறகிற் ‡
சென்றணைந்து சேவலாற்றும்
செழுநீர்க்
கழனி யூரன் கேண்மை
மகிழ்நறுங் கூந்தற் கலரா ஞதே.'

இவ்வஞ்சியுள் இயற்சீரும் உரிச்சீரும் மயங்கி வந்தன.

இனிப் பொதுச்சீர் அருகி வருமாறு:

'அலரிநாறு துவர்வாய் அமர்த்த § நோக்கின்
நன்னுதல் அரிவை'

எனவும்,

'இன்னுயிர்தாங்கும் மதுகை யோளே ||

எனவும்,

---

1 குறுந்.

பி-ம்: * அடல் வணங்கு † அணங்குதார்ச் ‡ துளருஞ்சிறகிற். § தமர்த்த. || மதுகையோனே.

குறிப்பு:—அடல் அணங்கு-பகைவரை வருத்துகின்ற; அலங்குதார்-அசைகின்ற மலர் மாலை; செம்பியன்-சோழன்; வேங்கை-புலி (இங்கு அதன் வடிவத்தை உணர்த்தியது); ஓம்பாது-பாதுகாக்காமல்; உடல் சமம்-பொருகின்ற போர்; உருத்து-கோபித்து; ஒன்னுத-(தன்னுடன் மனம்) பொருந்தாத; கயிற்ருேடும் வைகின-தளையுண்டன.

சினை-கிளை; வீழ் குயில்-விரும்புகின்ற குயில்; பெடை-பெண் குயில்; மெலிவு-வருத்தம்; உளர் சிறகு-கோதுகின்ற சிறகு; கேண்மை மகிழ்-உறவை விரும்புகின்ற; நறுங்கூந்தற்கு-நறிய கூந்தலையுடையாட்கு; அலர் ஆனுது-பலரறிந்து கூறும் பழிச் சொல் நீங்காது.

அருகி-அருமையாய்; அலரி நாறு துவர்வாய்-பூப்போலும் செய்ய வாய்; அமர்த்த நோக்கு-மாறுகொண்ட பார்வை; நன்னுதல்-அழகிய நெற்றி.

மதுகையோன்--வலியவன்.

'அந்தண் சாந்தமோ டகில்மரம் தொலைச்சிச்
செந்துதைய உழுத * செங்குரற் சிறுதினைப்
படுங்கிளி † நம்மொடு கடியும்
நெடுவரை நாடர்க்கு நேர்ந்தனர் எமரே.'

எனவும் இவ்வாசிரியத்துள் நாலசைச்சீர் வந்தது.

'திரைந்துதிரைந்து திரைவரத் திரண்முத்தம் கரைவாங்கி
நிரைந்துநிரைந்து சிறுநுளைச்சியர் நெடுங்கானல் விளையாடவும்
கண்டல்வண்டற் கழிபிணங்கிக் கருநீல மதுவுண்ணவும் ‡
கொண்டஞெண்ட § மணற்குன்றிற் பண்ணையாயம் குடிகெழுவவும்
போதணிந்த பொழிற்புன்னைப் பாரைப்பெண்ணைப் படுதுறையெம்
தூதணிந்த வண்டுண்கண்ணித் துறைவனெங்கள் துறைவனே.'

இக்கலியுள் நாலசைச்சீர் வந்தது.

'செங்கண்மேதி கரும்புழக்கி
அங்கண்ணீலத் தலரருந்திப்
பொழிற்காஞ்சி நிழற்றுயிலும்

செழுநீர்,

நல்வயற் கழனி யூரன் ||
புகழ்தல் ஆனப் பெருவண் மையனே.'

இவ்வஞ்சியுள் நாலசைச்சீர் வந்தது.

'இன்பம் விழையான் வினைவிழைவான், தன்கேளிர்
துன்பம் துடைத்தூன்றும் தூண்.' 1

எனவும்,

'தாம்வீழ்வார் தம்வீழப் பெற்றவர் பெற்றாரே
காமத்துக் காழில் கனி.' 2

எனவும் எரும் இவ்வெண்பாக்களின் இறுதிக்கண் ஓரசைப் பொதுச்சீர் வந்தன.

---

1. குறள். 615. 2. குறள். 1191.

* செந்து சிதையாதுழுத. † படுகிளி. ‡ மதுவீழவும். § கொண்டமண்ட.
|| நல்வயலூரன் கேண்மை.

சாந்தம்–சந்தனம்; தொலைச்சி–அழித்து; செந்து–அணு; குரல்–கதிர்; படும்–(வந்து) படியும்; கடியும்–ஓட்டும்; வரைநாடர்–குறிஞ்சி நிலத் தலைவர்; எமர–எம் சுற்றத்தார்; நேர்ந்தனர்–(மணமுடிக்க) இயைந்தனர்.

திரைந்து திரைந்து–சுருண்டு சுருண்டு; நுளைச்சியர்–வலைச்சியர்; கானல்–கழிக்கரை; கண்டல்–தாழை; மது–தேன்; ஞெண்ட–நண்டுகளையுடைய; பண்ணை ஆயம்–மகளிர் கூட்டம்; கெழுவ–நிறைய; பாரைப்பெண்ணை–பருத்த அடிமரத்தையுடைய பனை; துறைவன்–நெய்தல் நிலத் தலைவன்.

மேதி–எருமை; உழக்கி–மிதித்து; அம் கண் நீலம்–அழகிய கண் போலும் நீலோற்பலம்; அலர்–மலர்; காஞ்சி–ஆற்றுப் பூவரசு; ஊரன்–மருத நிலத் தலைவன்.

'ஊழி நீ; உலகு நீ; உருவும் நீ; அருவும் நீ.' 1

என்னும் அம்போதரங்க உறுப்பின்கண் ஓரசைப் பொதுச்சீர் வந்தன.

[கலி விருத்தம்.]

'கை விரிந்தன காந்தளும் பூஞ்சுனை
மை விரிந்தன நீலமும் வான்செய்கண் *
மெய் விரிந்தன வேங்கையும் சேர்ந்துதேன் †
நெய் விரிந்தன நீளிருங் குன்றெலாம்.' 2

எனவும்,

[கலி விருத்தம்.]

'குர வணங்கிலே மாவொடு சூழ்கரைச்
சர வணம்மிது தானனி போலுமால்
அர வணங்குவில் ஆண்டகை சான்றவன்
பிரி வுணர்ந்துழி வாரலன் என்செய்கோ! 3

எனவும் பாவினங்களுள் முதற்கண் நேரசைப் பொதுச்சீரும், நிரையசைப் பொதுசீரும் வந்தன.

இனி, இயற்சீரும் உரிச்சீரும், வேறு வேறு வருமாறு :

'தெறுக தெறுக தெறுபகை தெற்றுற்
பெறுக பெறுக பிறப்பு.' 4

இஃது இயற்சீரான் வெண்பா வந்தது.

'பூம்பாவாய்! நீயொருநாட் பூம்பொழில்வாய் வந்தாயை
யாம்பாவை வேண்டினமோ வென்று.' ‡

என உரிச்சீரான் வெண்பா வந்தது.

[நேரிசை ஆசிரியப்பா.]

'மருந்தெனின் மருந்தே வைப்பெனின் வைப்பே
அரும்பிய சுணங்கின் அம்பகட் டிளமுலைப்
பெருந்தோள் நுணுகிய நுசுப்பிற்
கல்கெழு கானவர் நல்குறு மகளே.' 5

இஃது இயற்சீரான் ஆசிரியம் வந்தது.

---

1 விளக்கத்தனார் பாடல்; யா. வி. 83 உரைமேற். 2 சூளா. நாடு. 11; யா. வி. 15 உரைமேற். 3 யா. வி. 15, 94 உரைமேற். 4 யா. வி. 95 உரைமேற் 5 குறுந். 71.

பி-ம்.—*வான்செய் நாண். † சோர்ந்ததேன் ‡ என்று.

[தரவு கொச்சகம்.]

'செல்வப்போர்க் கதக்கண்ணன் செயிர்த்தெறிந்த சினவாழி
முல்லைத்தார் மறமன்னர் முடித்தலையை முருக்கிப்போய்
எல்லைநீர் வியன்கொண்மூ இடைநுழையும் மதியம்போல்
மல்லலோங் கெழில்யானை மருமம்பாய்ந் தொளித்ததே.' 1

இது வெண்பாவுரிச்சீரானே கலி வந்தது.

[குறளடி வஞ்சிப்பா.]

'எல்லாரும் எந்தமக்கே
நல்லறிவே உள'வென்பர்;
நல்லார்கள் நனிதெரியின்
கல்லாரும் கற்றாரும்
சொல்லாலே வெளிப்படுவர்;
அதனால்,
மண்மிசை மாண்ட கற்பின்
விண்ணொடு வீடு விளக்குமால் அதுவே.'

இது வெண்பாவுரிச்சீரானே வஞ்சி வந்தது.

[குறளடி வஞ்சிப்பா.]

'பூந்தாமரைப் போதலமரத்
தேம்புனலிடை மீன்றிரிதர *
வளவயலிடைக் களவயின்மகிழ்
வினைக்கம்பலை மனைச்சிலம்பவும்
மனைச்சிலம்பிய மணமுரசொலி
வயற்கம்பலைக் கயலார்ப்பவும்
நாளும்,
மகிழும் மகிழ்தூங் கூரன்
புகழ்தல் ஆனுப் பெருவண் மையனே.' 2

இது வஞ்சியுரிச்சீரானே வஞ்சி வந்தது.

'விரவியும் அருகியும் வேறும் ஓரோவழி' என்றது, 'மருவியும்' என்று மயங்க வைத்தமையால், வெண்பாவினுள் நாலசைச்சீர் வாரா; கலியுள்ளும் பெரும்பான்மையும் குற்றுகரம் வந்துழியன்றி வாரா; வஞ்சியுள் குற்றுகரம் வாராதேயும் வரப்பெறும்; வஞ்சியுள் இரண்டு நாலசைச்சீர் ஓரடியுள் அருகிக் கண்ணுற்று நிற்கவும் பெறும்; அல்லனவற்றுட் பெரும்பான்மையும் ஓரடியுள் ஒன்றன்றி வாரா; இரண்டு வரினும் இயற்சீர் ஆயின், இடையிட்டு வரும்; ஓரசைச்சீர் பெரும்பான்மை வெண்பாவின் இறுதிக்கண்ணும், அம்போதரங்க உறுப்பின்கண்ணும் வரும்; உரிச்சீரானே ஆசிரியம் பயின்று வாரா; இயற்சீரானே வஞ்சியும் கலியும் பயின்று வாரா.

---

1 யா. வி. 20, 32, 78, 86 உரைமேற். இது தக்கயாகப் பரணி (1930 பதிப். பக். 259) விசேடக் குறிப்பில் சூளாமணிச் செய்யுளென டாக்டர் சாமிநாதையரவர்களால் குறிக்கப்பட்டுள்ளது. 2 யா. வி. 9, 21, 90. உரைமேற்.

பி-ம்.—*மீன்றிரிதரும்.

இனி, ஒரோவழி மருவியும் வருமாறு :

'நின்றுநின்றுளம் நினைபுநினைவொடு
நீடுதெருமரு நிறைசெலச் செல
இவளின்றுதன தெழில்வாடவும்
நறுமாந்தளிர்நிறத் தகைபிறக்கெந்
தண்முகைமென்குழற் பெருந்தடங்கண்
பூவுறுநலந்தொலைந் தினியாற்றலள்
செலச்செலவூரலர் செவிசுடச்சுடமுகிழ்
முகிழ்ப்பயலாரறி வுறுப்பவுநீடினை
தெரிவொடு கெழுமிய திருநலம்
புரிவொடு கெழுவுக புனைதா ரோயே!'

இக் குறளடி வஞ்சிப்பாவினுள் நிரையீறுகிய நாலசைப் பொதுச்சீர் வட்டும் வந்தன.

'பெருதும்' என்ற உம்மையான், வஞ்சியுரிச்சீர் வெண்பாவினுள் வாரா மையும், நேரீற்றியற்சீர் ஒத்தாழிசைக் கலிப்பாவினுள் வாராமையும், மேற் காட்டியவற்றுள்ளும் பிறவற்றுள்ளும் காண்க.

'சுடர்த்தொடீஇ! கேளாய்: தெருவினு மாடும்
மணற்சிற்றில் காலிற் சிதையா அடைச்சிய
கோதை பரிந்து வரிப்பந்து கொண்டோடி
நோதக்க செய்யும் சிறுபட்டி மேலோர்நாள்
அன்னையும் யானும் இருந்தேமா, 'இல்லிரே!
உண்ணுநீர் வேட்டேன்', எனவந்தாற் கன்னை
அடர்பொற் சிரகத்தால் வாக்கிச் 'சுடரிழாய்!
உண்ணுநீர் ஊட்டிவா', என்றாள்; எனயானும்
தன்னை அறியாது சென்றேன்; மற் றென்னை
வளைமுன்கை பற்றி நலியத் தெருமந்திட்டு,
'அன்னாய்! இவனொருவன் செய்ததுகாண்!' என்றேனா.
அன்னை அலறிப் படர்தரத் தன்னையான்
'உண்ணுநீர் விக்கினான்', என்றேனா, அன்னையும்
தன்னைப் புறம்பழித்து நீவமற் றென்னைக்
கடைக்கணாற் கொல்வான்போல் நோக்கி நகைக்கூட்டம்
செய்தானக் கள்வன் மகன்.' 1

இந்தக் கலிவெண்பாவினுள் நேரீற்றியற்சீர் வந்தது.

'புன்காற் புணர்மருதின்
போதப்பிய புனற்றுமரை' 2

எனவும்,

'தேந்தாட் டீங்கரும்பின்' 3

எனவும்,

'பூந்தாட் புனற்றுமரை' 4

எனவும்,

1 கலி. 51. 2-4 யா. வி. 94 உரைமேற்.

'வார்காற் செழுங்கழுநீர்'

எனவும்,

'வென்றி கொண்டறை'

எனவும்,

வஞ்சியடி முதற்கண் நேரீற்று இயற்சீர் வந்தது.

'எழிலார் சிமயம்

முறிகொண் டறையும் முரல்வாய்ச் சுரும்பின்'

எனவும்,

'காமர் கடும்புனல் கலந்தெம்மோ டாடுவாள்' 1

எனவும் கொச்சகக் கலியுள்ளும் நேரீற்று இயற்சீர் வந்தது.

'உடைமணியரை யுருவக் குப்பாயத்து'

என வஞ்சியடி நடு நேரீற்று இயற்சீர் வந்தது.

அள்ளற்பள்ளத் தகன்சோ ணுட்டு

வேங்கைவாயில் வியன்குன் றூரன்'

என்னும் முச்சீரடி வஞ்சியுள் * நேரீற்று இயற்சீர் சிறுபான்மை வந்தது.

'மண்டிணிந்த நிலனும்

நிலனேந்திய விசும்பும்

விசும்புதைவரு வளியும்

வளித்தலைஇய தீயும்

தீமுரணிய நீரும்.' 2

எனவும்,

'பொன்புனைந்த நகரும்

நகர்சூழ்ந்த எயிலும்

எயிலேந்திய கண்ணும்

கண்ணேந்திய குணனும்'

எனவும் இவ் வஞ்சியடி இறுதி நேரீற்று இயற்சீர் சிறுபான்மை வந்தது.

இனிப் பாவினத்துள் விரவி வருமாறு:

'போதார் நறும்பிண்டிப் பொன்னூர் மணியணையான்

தாதார் மலரடியைத் தணவாது வணங்குவார்

தீதார் வினைகெடுப்பார் சிறந்து.' 3

இவ்வெள்ளொத்தாழிசையுள் இயற்சீரும் உரிச்சீரும் வந்தன.

'நன்பி † தென்று தீய சொல்லார்

முன்பு நின்று முனிவ ‡ செய்யார்

அன்பு வேண்டு பவர்.'

இவ்வெள்ளொத்தாழிசை இயற்சீரானே வந்தது.

---

1 கலி. 39; யா. வி. 86 உரைமேற். 2 புறம் 2 : 1—5. 3 யா. வி. 66 உரைமேற்.

பி-ம்.—*இக்குறியின் பின் 'நடு ஊரே என்னும்' பொருத்தமில்லாத் தொடர் எடுகளிற் காணப்படுகின்றது. † நண்பி ‡ முனிவு.

'வாராரே என்றென்று மாலைக்கண் நனிதுஞ்சாய்
ஊராரே என்றென்றும் ஒன்றேவ்வா உரைசொல்லி
யார்யாரே என்றுளே யாய்.'

என உரிச்சீரானே வெள்ளொத்தாழிசை வந்தது.

'குழிவிசைய வண்டினங்கள் கோழிலைய செங்காந்தட் குலைமேற் பாய
'அழலெரியின் மூழ்கினவால் அந்தோ அளிய' என் றயல்வாழ் மந்தி
கழல்வனபோல்* நெஞ்சகைந்து† கல்லருவி தூஉம்
நிழல்வரை நன்னாடன் நீப்பனோ அல்லன்.' 1

இவ் வெண்டுறையுள் இயற்சீரும் உரிச்சீரும் விரவி வந்தன.

'அங்குலியின் அவிரொளியால் அருண மாகி
அணியாழி மரகதத்தாற் பசுமை கூர்ந்து
மங்கலஞ்சேர் நூபுரத்தால் அரவம் செய்யும்
மலரடியை மடவன்ன மழலை ஓவாச்
செங்கமல வனமென்று திகைத்த போழ்தில்
தேமொழியால் தெருட்டுதியோ செலவி னாலோ
தொங்கலர்பூங் கருங்கூந்தல் சுடிகை நெற்றிச்
சுந்தரிநிற் பணிவார்க்கென் துணிவு தானே.' 2

இவ் வாசிரிய விருத்தத்துள் இயற்சீரும் உரிச்சீரும் விரவி வந்தன.

பிற பாவினங்களுள்ளும் இயற்சீர் உரிச்சீர் விரவவும் பெறும்.

இனிப் பொதுச்சீர் பாவினத்துள் அருகி வருமாறு:

'இருநெடுஞ் செஞ்சுடர் எஃகமொன் றேந்தி இரவில்வந்த
அருநெடுங் காதற்கன் றேதரற் பாலதல் லாதுவிட்டாற்
கருநெடு மால்கடல் ஏந்திய கோன்கயல் சூடுநெற்றிப்
பெருநெடுங் குன்றம் விலையோ கருதிலெம் பெண்கொடிக்கே.' 3

இக்கலித்துறையுள் நாலசைச்சீர் வந்தது.

'உரிமை யின்கண் இன்மையால்
அரிமதர் மழைக் கண்ணாள்
செருமதி செய் தீமையால்
பெருமை கொன்ற என்பவே.' 4

என்னும் இவ்வஞ்சி விருத்தத்துள் ஓரசைப் பொதுச்சீர் வந்தது.

'கை விரிந்தன காந்தளும் பூஞ்சுனை
மை விரிந்தன நீலமும் வான்செய்கண்
மெய் விரிந்தன வேங்கையும் சேர்ந்துதேன்
நெய் விரிந்தன நீளிருங் குன்றெலாம்.'

எனவும்,

---

1 யா. வி. 67 உரைமேற். 2 யா. வி. 94 உரைமேற். 3 யா. வி. 94 உரைமேற்
4 யா. வி. 21 உரைமேற்.

பி-ம். *கலுழ்வனபோல். †நெஞ்சு அயர்ந்து.

'சுர வணங்கில மாவொடு சூழ்கரைச்
சர வணம்மிது தானனி போதுமால்
அர வணங்குவில் ஆண்டகை சான்றவன்
பிரி வுணர்ந்துழி வாரலன் என்செய்கோ!'

எனவும் வரும் இக்கலி விருத்தத்துள் அடிதோறும் ஓரசைப் பொதுச்சீர் வந்தது. 'இவற்றை வகையுளி சேர்த்துக்கொள்க!'1 என்பாரும் உளர்.

16] நேர்நடு வஞ்சியுரிச்சீர் கலியுளும் ஆசிரியத்துல் வருதல் [எ

நிரைநடு இயலா வஞ்சி உரிச்சீர்
கலியினே டகவலிற் கடிவரை இலவே.

'என்பது என் நுதலிற்றோ?' எனின், விதி வகையான் விலக்குதல் நுதலிற்று.

**இதன் பொருள்:** நிரை நடு இயலா வஞ்சி உரிச்சீர்—நேர் நடுவாகிய 'தேமாங்கனி, புளிமாங்கனி' என்னும் வஞ்சி உரிச்சீர், கலியினேடு அகவலில் கடிவரை இலவே—கலியுள்ளும் ஆசிரியத்துள்ளும் வரப்பெறும் (என்றவாறு).

'அகவல் என்பது ஆசிரியத்தைச் சொல்லுமோ?' எனின், சொல்லும். என்னே?

'அகவல் என்ப தாசிரியப் பாவே.'

என்பது சங்கயாப்பு ஆகலின்.

மேற் சூத்திரத்துள் 2 'உரிச்சீரும் இயற்சீரும் விரவியும் வரப்பெறும் செய்யுளகத்து,' என்றதனுல், இப்பொருள் முடிய வைத்துப் பெயர்த்தும் சூத்திரம் ஓதிய அதனுல், 'கலியுள்ளும் ஆசிரியத்துள்ளும் வஞ்சி உரிச்சீர் வருகின்றுழி நிரை நடு இல்லாதன வருக,' என்பது பயன். எனவே, 'நிரை நடுவாகிய 'கூவிளங்கனி, கருவிளங்கனி' என்னும் இரு சீரும் வாரற்க.' என்று விலக்கப் பட்டது ஆகலின், இதனை 'நியமச்சூத்திரம்' என்க. என்னே? முன் ஒன்றினுல் முடிய வைத்துப் பின்னும் அதனையே எடுத்துக்கொண்டு விதிமுகத்தான் விலக்குவதூஉம், விலக்கும் வகையான் விதிப்பதூஉம் நியமச்சூத்திரம் 3 ஆகலின்.

**வரலாறு:**

[தரவு.]

'புனற்படப்பைப் பூந்தாமரைப் போதுற்ற புதுநீருள்
இனக்கெண்டை இரைதேரிய இருஞ்சிறைய மடநாரை
கழுநீரும் குவளையுமங் கரும்பினெடு காய்நெல்லும்
பழுநீருள் ஓடித்தேறும் பழனஞ்சூழ் ஊர! கேள்:

[தாழிசை.]

'வடித்தடங்கண் பனிகூர வால்வளைத்தோள் பசப்பெய்தத்
துடிக்கியையும் நுண்ணிடைவாய்த் துன்னுது துறப்பாயேல்

---

1 வகையுளி சேர்த்தால் 'கை விரிந்தன காந்தளும் பூஞ்சுனை' எனவும், 'சுரவணங்கில மாவொடு சூழ்கரை' எனவும் இயற்சீராதல் காண்க. 2 யா. வி. 15. 3. யா. வி. பாயிர உரை நோக்குக.

பொடித்தகன்ற வனமுலையாள் யுலம்பலும் புலம்பாளோ? 1
'வண்டுற்ற நறுங்கோதை வால்வளைத்தோள் மெலிவெய்தப்
பண்டுற்ற எழில்வாடப் பரியாது துறப்பாயேல்,
உண்டுற்ற காதலின் உள்ளாகி இருப்பாளோ? 2
'வேய்தடுத்த மென்றோளும் பேனியும் விளர்ப்பெய்த
நீவிடுத்தாங் கொண்டுபொருட்கே நீங்குதலை நினைப்பாயேல்,
ஆய்மலர்க்கண் பனிகூர ஆவியும் உள்ளாமோ? 3

'எனவாங்கு, [தனிச்சொல்.]

[சுரிதகம்.]

'குவளை உண்கண் இவள்நலம் தொலைய
உறுபொருட் கெண்ணிய எண்ணம்
மறுபிறப் புண்டெனிற் பெறுக யாமே.'

இந் நேரிசை ஒத்தாழிசைக் கலிப்பாவினுள் 'பூந்தாமரை' எனவும், 'இரைதேரிய' எனவும் நேர்நடுவாகிய வஞ்சி உரிச்சீர் வந்தது.

[நேரிசை ஆசிரியப்பா.]

'மாரியொடு மலர்ந்த மாத்தாட் கொன்றைக்
கடிகமழ் புறவிற் கணவண் டார்க்கும்
யாணர்க் கோளூர் என்ப
பாணர் பாரம் தாங்கியோன் பதியே.'

இவ் வாசிரியத்துள் 'மாரியொடு மலர்ந்த' என்புழித் 'தேமாங்கனி' என நேர் நடுவாகிய வஞ்சி உரிச்சீர் வந்தது.

[நேரிசை ஆசிரியப்பா.]

'நன்னாள் வேங்கைப் பொன்னேர் புதுமலர்
குறிஞ்சியொடு கமழும் குன்ற நாட!
கடிபுனற் கோளூர் அன்னவெம்*
தொடிபொலி பணைத்தோள் துறவா தீமே.'†

இதனுட் 'குறிஞ்சியொடு கமழும்' என்புழிப் 'புளிமாங்கனி' என நேர் நடுவாகிய வஞ்சி உரிச்சீர் வந்தது.

'வரை' என்ற விதப்பால், ஆசிரியத்துள் இரண்டும் ஓரடியுட்பெரும்பான்மையும் வாரா; வரினும், இயற்சீர் இடையிட்டு நிற்கும்; அருகிக்கண்ணுற்று நிற்குமேனும் சிறப்பில.

'வீங்குமணி விசித்த விளங்குபுனை நெடுகிதேர்' 1

என்னும் ஆசிரியத்துள் இரு சீரும் ஓரடியுள்ளே 'விசித்த' என்னும் இயற்சீர் இடையிட்டு வந்தது.

வண்டுகெழு திலகம் ஒருமரந் தொலைத்த' 2

என்னும் ஆசிரியத்துள் இரு சீரும் கண்ணுற்றவாறு காண்க.

---

1 யா. வி 94 உரைமேற். 2 இவ்வடியுள் இரு சீரும் கண்ணுற்று நின்றமைக்கு உதாரணமின்று இச் செய்யுளின் முழு வடிவம் தெரிந்திலது.

பி-ம்.— *அன்ன † துறவாய் நீயே.

'அகவல் கலி' என்றது, 'கலியினோடு அகவல்' என முறை பிறழ வைத்தமையால், கொச்சகக் கலிப்பாவினுள் நிரை நடுவாகிய வஞ்சி உரிச்சீர் அருகி வரினும், பெரிதும் சிறப்பில.

வரலாறு :

'திரைந்து திரைந்து திரைவரத் திரண்முத்தம் கரைவாங்கி' 1

என்னும் கொச்சகக் கலியுள் 'சிறுநுளைச்சியர்' என நிரை நடுவாகிய வஞ்சி உரிச்சீர் வந்தது.

'கலியினோ டகவல்' எனப் பொது வகையாற் கூறிற்றேனும், கலிப்பாவினுள்ளும் ஆசிரியப்பாவினுள்ளுமே விதி முகத்தால் விலக்குவது. அவற்றின் இனத்துள் நிரை நடுவாயினவும் புகுதும் எனக் கொள்க. 'அஃது எற்றாற் பெறுதும்?' எனின், 'மூவகைச் சீருரிச்சீர்' 2 என்னும் சூத்திரத்துப் 'பா' என்னும் தவளைப்பாய்த்துள்ளாக அதிகாரம் வருதலானும், 'உரையிற்கோடல்' என்பதனாலும்,

'ஆசிரி யத்தொடு வெள்ளையும் கலியும்
நேரடி தன்னல் நிலைபெற நிற்கும்.' 3

என்று பொது வகையாற்சொல்லிப் பாவே கொண்டார் பல்காயனார் ஆகலானும்,

[நேரிசை வெண்பா.]

'பொதுவகையாற் சொற்றனவும் பொய்தீர் சிறப்பிற்
குதவி ஓரோவிடத்து நிற்கும்—விதிவகையால்
நின்ற பொருளை நிகழ்விப்பது நியமம்
என்றுரைப்பர் தொல்லோர் எடுத்து.' 4 [நற்றத்தனார்.]

என்பதனாலும் பெறுதும்.

வரலாறு :

[சந்தக் கலி விருத்தம்.]

'வளர்கொடியன மணம்விரிவன மல்லிகையொடு மௌவல்;
தளிர்கொடியன நறுவிரையக நறுமலரன நறவம்;
குளிர்கொடியன குழைமாதவி; குவிமுகையன கொகுடி;
ஒளிர்கொடியன உயர்திரிளிணெ டொழுகிணரன ஓடை.' 5

இச்சந்த விருத்தத்துள் நிரையும் நேரும் நடுவாகிய வஞ்சியுரிச்சீர் வந்தன.

'கொன்றூர்ந் தமைந்த குருமுகத் தெழில்நிறக்
குருதிக் கோட்டின இருந்தாட் பெருங்கைக்
குன்றுமென அன்றுமெனக்
குமுறு நின்றன கொடுந்தொழில் வேழம்;
வென்றூர்ந் தமைந்த விளங்கொளி இளம்பிறைத்
துளங்குவாள் இலங்கெயிற் றழலுளைப் பருஉத்தாள்
அதிரும் வானென எதிரும் கூற்றெனச்
சுழலா நின்றன சுழிக்கண் யாளி;

1 யா. வி. 15, 94 உரைமேற். 2 யா. வி. 121 3 யா. வி. 27 உரைமேற்.
4 யா. வி. 30 உரைமேற். 5 சூளா. தூது. 4.

சென்றூர்ந் தமைந்த சிறுநதி வள்ளுகிர்ப்
பொறியெருத் தெறும்வலிப் புலவுநா றழ்ல்வாய்ப்
புனலாமெனக் கனலாமெனப்
புகையா நின்றன புலிமான் ஏற்றை;
என்றுங்கிவை யிவையியங்கலின்
எந்திறத்தினி வரல்வேண்டலம்
தனிவரலெனத் தலைவிலக்கலின்
இறுவரைமிசை எறிகுறும்பிடை
இதுவென்னென அதுநோனுர்
கரவர விடைக்கள உளமது
கற்றோர் ஓதும் கற்பன்றே.' 1

என்னும் ஆசிரியத்துறையுள் வஞ்சியுரிச்சீர் வந்தன. என்னை?

'இணைநடு வியலா வஞ்சி உரிச்சீர்
இணையுள ஆசிரி யத்தன ஆகா.'

என்றூர் காக்கைபாடினியார்.

'நடுவு நெரியல் வஞ்சி உரிச்சீர்
உரிமை யுடைய ஆசிரியத் துள்ளே.'

என்றூர் சிறுகாக்கைபாடினியார்.

'நேர்நடு வியலா வஞ்சி உரிச்சீர்
ஆசிரி யத்தியல் உண்மையும் உடைய.'

என்றூர் சிறுகாக்கைபாடினியார்.

'நிரைநடு வியலா வஞ்சி உரிச்சீர்
வருதல் வேண்டும் ஆசிரிய மருங்கின்.'

என்றூர் மயேச்சுரர். இவர்களும் இலேசு எச்ச உம்மை விதப்பாற் கலிப்பாவி னுள்ளும் உடம்பட்டாரென்க.

[நேரிசை வெண்பா.]

'அசையிரண்டும் மூன்றும் அவைநான்கும் ஒன்றும்
வசையில் முறைமையான் வந்து—திசைகமழும்
ஏரேற்ற கோதாய்! எதிபங்கம் 2 வாராமைச்
சீரேற்று நிற்பது சீர்.'

சீரோத்து முடிந்தது.

---

1 யா வி. 25, 76 உரைமேற். 2 யதி வழு (தண்டி. 113.)

## ௪. தளை ஓத்து.

---



ஈரொடு சீர்தலைப் பெய்வது தளை ; அவை
ஏழென மொழிய இயல்புணர்ந் தோரே.

என்பது சூத்திரம்.

'இவ்வோத்து என்ன பெயர்த்தோ?' எனின், தளை ஆமாறு உணர்த்திறறு ஆகலான், 'தளை ஓத்து' என்னும் பெயர்த்து.

'இச்சூத்திரம் என் நுதலிற்றோ?' எனின், பொது வகையால் தளை ஆமாறும், அவற்றது எண்ணும் உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள்: சீரொடு சீர் தலைப்பெய்வது தளை—ஒரு சீரோடு ஒரு சீர் ஏற்று நிற்பது 'தளை' என்று சொல்லப்படும்; அவை ஏழ் என மொழிய இயல்பு உணர்ந்தோரே—அவைதாம் ஏழு வகைப்படும் என்று சொல்லுவார் நூல் முறை அறிந்தோர் (என்றவாறு).

ஏழாவன: வெண்டளை இரண்டும், 1 ஆசிரியத்தளை இரண்டும், 2 கலித்தளை ஒன்றும், வஞ்சித்தளை இரண்டும், 3 என. அவை போக்கித் 4 தத்தம் இலக்கணச் சூத்திரத்துட் காட்டுதும்.

பிறரும்,

'செயற்குரி இருசீர் செய்யுள் நடப்புழித்
தலைப்பெய 5 நிற்பது தளையெனப் படுமே.'

என்றார் ஆகலின், 'சீரொடு சீர்தலைப் பெய்வது தளை', என்று ஒருமை கூறி, 'அவை ஏதென மொழிப', என்று எண்ணுழிப் பின்பு பன்மை கூறிய அதனால், தளை வழங்குகின்றுழி, நின்ற சீரின் ஈற்றசையும் வரும் சீரின் முதலசையும் தம்முள் ஒன்றுதலும் ஒன்றாமையும் கொண்டு வழங்கப்படும். என்னை?

'நின்ற சீரீற் றெடுவரும் சீர்முதல்
ஒன்றுதல் ஒன்றா தாகுதல் தளையே.'

என்றார் பிறரும் எனக் கொள்க.

[நேரிசை வெண்பா.]

'நின்றசீர் ஈறும் வருஞ்சீர் முதலசையும்
ஒன்றியும் ஒன்றாதும் ஓசைகொள—நின்றால் *
வளையொன்று முன்கையாய்! வந்ததனை வல்லோர் †
தளையென்று கட்டுரைப்பார் தாம்.' 6

---

1 வெண்சீர் வெண்டளையும், இயற்சீர் வெண்டளையும், 2 நேரொன்று ஆசிரியத்தளையும், நிரையொன்று ஆசிரியத்தளையும். 3 ஒன்றிய வஞ்சித்தளையும், ஒன்றா வஞ்சித்தளையும், 4 பிண்ட 5 கிட்ட. 6 யா. வி. 22 உரைமேற்.

பி-ம்: *ஓசைகொண் டென்றும். †வந்தன நூலோர்.

**வெண்சீர் ஒன்றலும் இயற்சீர் விகற்பமும்**
**என்றிரண் டென்ப வெண்டளைக் கியல்பே.**

'என்பது என் நுதலிற்றோ?' எனின், வெண்டளை இரண்டும் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

**இதன் பொருள்:** வெண்சீர் ஒன்றலும்—வெண்பா உரிச்சீர் நின்று தன் வரும் சீர் முதலசையோடு ஒன்றலும், இயற்சீர் விகற்பமும் என்று—இயற்சீர் நின்று தன் வரும் சீர் முதலசையோடு ஒன்றாததூஉம் என, இரண்டு என்ப வெண்டளைக்கு இயல்பே—வெண்டளை இயல்பாவன இரண்டு வகைப்படும் (என்றவாறு).

'இயல்பே' என்ற விதப்பால், வெண்பா உரிச்சீர் நின்று வெண்பா உரிச்சீரோடு ஒன்றுதலும், இயற்சீர் நின்று இயற்சீரோடு ஒன்றாததூஉம் சிறப்புடைய. வரும் சீர் யாதானுமாக வரப்பெறும்.

'விகற்பம்' என்றது ஒன்றாததனைச் சொல்லுமோ?' எனின், சொல்லும். என்னை?

'இயற்சீர் இரண்டு தலைப்பெயல் தம்முள்
விகற்ப வகையது வெண்டளை ஆகும்.' 1 [காக்கைபாடினியார்.]

என்றார் ஆகலின்

அவற்றிற்குச் செய்யுள்:

[குறள் வெண்பா.]

'குன்றேறி யானைப்போர் கண்டற்றால் தன்கைத்தொன்
றுண்டாகச் செய்வான் வினை.' 2

இது வெண்சீரோடு வெண்சீர் ஒன்றி வந்த சிறப்புடை வெண்சீர் வெண்டளை.

[குறள் வெண்பா.]

'கல்லாதான் சொற்கா முறுதல் முலையிரண்டும்
இல்லாதாள் பெண்காமுற் றற்று.' 3

இது வெண்சீரோடு வேற்றுச்சீர் ஒன்றிய சிறப்பில் வெண்சீர் வெண்டளை.

[குறள் வெண்பா.]

'பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி
வாலெயி றூறிய நீர்.' 4

இஃது இயற்சீர் நின்று இயற்சீரோடு விகற்பித்து வந்த சிறப்புடை இயற்சீர் வெண்டளை.

[குறள் வெண்பா.]

'இருநோக் கிவளுண்கண் உள்ள தொருநோக்கு
நோய்நோக்கொன் றந்நோய் மருந்து.' 5

இஃது இயற்சீர் நின்று வேற்றுச் சீரோடு விகற்பித்து வந்த சிறப்பில் இயற்சீர் வெண்டளை.

---

[1 யா. வி. 21 உரைமேற். 2 குறள், 785. 3 குறள் 402. 4 குறள் 1121. 5 குறள் 1091]

[நேரிசை வெண்பா.]

'சிலைவிலங்கு நீள்புருவம் சென்றொசிய நோக்கி
முலைவிலங்கிற் றென்று முனிவாள்—மலைவிலங்கு
தார்மாலை மார்ப! தனிமை பொறுக்குமோ
கார்மாலை கண்கூடும் போழ்து?' 1

இதனுள் வெண்டளை எல்லாம் வந்தன.

ஆசிரியத்தளை.

19] ஈரசைச் சீர்நின் றினிவரும் சீரொடு
நேரசை ஒன்றல் நிரையசை ஒன்றலென்
றுயிரு வகைத்தே ஆசிரி யத்தளை.

'என்பது என் நுதலிற்றோ?' எனின், ஆசிரியத்தளை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள்: ஈரசைச் சீர் நின்று இனி வரும் சீரோடு நேர் அசை ஒன்றல்—இயற்சீர் நின்று வரும் சீர் முதலசையொடு நேரசை ஒன்றுவதூஉம், நிரை அசை ஒன்றல் என்று—நிரையசையாய் ஒன்றுவதூஉம் என்று, ஆயிரு வகைத்தே ஆசிறியத்தளை—ஆசிரியத்தளை அவ்விரண்டு வகைப்படும் (என்றவாறு).

'இனி வரும் சீர்' என்று சிறப்பித்த அதனால், வரும் சீரும் இயற்சீரே வந்து ஒன்றுவது சிறப்புடைத்து. வரும் சீர் யாதானும் ஆகப்பெறும்.

வரலாறு:

[நேரிசை ஆசிரியப்பா.]

'உள்ளார் கொல்லோ தோழி! முன்னுடை
அலங்குகுலை ஈந்தின் சிலம்பிபொதி செங்காய்
துகில்பொதி பவளம் ஏய்க்கும்
அகில்படு கள்ளியங் காடிறந் தோரே.' 2

இஃது ஈரசைச்சீர் நின்று ஈரசைச்சீரோடு ஒன்றிய சிறப்புடை ஆசிரிய நேர்த்தளை.

'திரியாச் சுற்றமொடு முழுதுசேண் விளங்கி' 3

இஃது ஈரசைச்சீர் நின்று வேற்றுச்சீரோடு ஒன்றிய சிறப்பில் ஆசிரிய நேர்த்தளை.

[நேரிசை ஆசிரியப்பா.]

'திருமழை தலைஇய இருள்நிற விசும்பின்
விண்ணதிர் இமிழிசை முழங்கப்
பண்ணமைத் தவர்தேர் சென்ற வாறே.' 4

இஃது ஈரசைச்சீர் நின்று ஈரசைச்சீரோடு ஒன்றிய சிறப்புடை ஆசிரிய நிரைத்தளை.

---

1 தண்டி 16 மேற்; யா. வி. 37, 60 உரைமேற். 2 ஐங்குறு பக். 143. 3 புறம் 2 : 19.
4 இதன் முதலிரண்டடிகள் மணிபடு கூடாம். 1, 2.

[வெண்செந்துறை.]

'ஆர்கலி உலகத்து மக்கட் கெல்லாம்
ஓதலிற் சிறந்தன் றொழுக்கம் உடைமை.' 1

இஃது ஈரசைச்சீர் நின்று வேற்றுச்சீரோடு ஒன்றிய சிறப்பில் ஆசிரியத் தளை. என்னை?

'ஈரசை இயற்சீர் ஒன்றிய தெல்லாம்
ஆசிரி யத்தளை என்மனர் புலவர்.'

என்றார் மயேச்சுரர்.

'ஈரசை இயற்சீர் ஒன்றிய நிலைமை
ஆசிரி யத்தளை ஆகும் என்ப.' [சிறுகாக்கை பாடினியார்.]

என்றார் பிறரும் ஆகலின். பிறவும் அன்ன.

20] கலித்தளை. [௨

நிரையீ றில்லா உரிச்சீர் முன்னர்
நிரைவருங் காலைக் கலித்தளை ஆகும்.

'என்பது என் நுதலிற்றோ?' எனின், கலித்தளை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள்: நிரை ஈறு இல்லா உரிச்சீர் முன்னர்—நேர் ஈருகிய உரிச் சீர் முன்னர், நிரை வரும் காலைக் கலித்தளை ஆகும்—நிரையசை வரும் சீருக்கு முதலாய் வரின் கலித்தளை ஆகும் (என்றவாறு).

'நிரையீ றில்லா உரிச்சீர் முன்னர் நிரை வரிற் கலித்தளை யாகும்,' என்னாது, 'நிரை வருங் காலை' என்று மிகுத்துச் சொல்லிய அதனால், 'வரும் சீரும் நேரீற்று உரிச்சீரேயாவது சிறப்புடைத்து, பிற சீர் வரப்பெறுமாயினும்,' எனக் கொள்க.

வரலாறு:

'செல்வப்போர்க் கதக்கண்ணன் செயிர்த்தெறிந்த சினவாழி' 2

என்பது, நேரீற்று உரிச்சீர் நின்று நேரீற்று உரிச்சீரோடு ஒன்றாது வந்த சிறப்புடைக் கலித்தளை.

'முற்றொட்டு மறவினை முறைமையான் முயலாதார். 3
என்பது, நேரீற்று உரிச்சீர் நின்று பிற சீரோடு ஒன்றாது வந்த சிறப்பில் கலித்தளை.

'இயற்சீர் ஆசிரிய உரிச்சீர் என்று வழங்கவும் பெறும்', என்று உரைக்கப் பட்டது ஆகலின், நிரையீறு இல்லாத் 'தேமா, புளிமா' என்னும் இரண்டு ஆசிரிய உரிச்சீர்முன் நிரையசை முதலாகிய சீர் வரினும் கலித்தளையேயாம், 'பிற', எனின், ஆகாது. 'ஈரசை கூடிய சீரியற்சீர்', என்று எடுத்து ஓதினமை யானும், ஆண்டு 'இயற்சீர் ஆசிரிய உரிச்சீர் என்று வழங்கப்படும்', என்று பிறர் மதம் சொன்னமையானும், 'இயற்சீர் விகற்பம் வெண்டளை ஆகும்', என்று எடுத்து ஓதிப் போந்தமையானும், எனின், அது பொருந்தாது. நிரையீறுகிய 'கூவிளம், கருவிளம்' என்னும் சீர் நின்று வரும் சீரோடு

1 முதுமொழிக் 1 : 1. 2 யா. வி. 32, 78. 86 உரைமேற். 3 யா. வி. 78 உரைமேற்.

விகற்பித்தவழி வெண்டளைக்கு இடமாகும் ஆதலான், 'இயற்சீர் விகற்பம் வெண்டளை ஆகும்', என்பது பழுதாகாது. 'தேமா, புளிமா' என்னும் இரண்டு ஆசிரிய உரிச்சீர்ப்பின் நிரை வரினும் 'கலித்தளை ஆதல் வேண்டும்', என்று கடாவினால், அச்சீர் கலிக்குச் சிறப்பில்லாமையானும், பிற நூலுள் இவ்வாறு சொல்லாமையானும்,

'பல்பொருட் கேற்பின் நல்லது கோடல்' 1

என்பது தந்திர உத்தி ஆகலானும், ஈண்டு நேரீறுகிய மூவசைச்சீர் நின்று ஒன்றுவதுவே கலித்தளை என்று கொள்ளப்படுவது எனக் கொள்க.

[நேரிசை வெண்பா.]

'ஈரசைச்சீர் தாமுரிய ஆசிரியக் கென்றமையான்
நேரீற் றியற்பின் நிரைவருங்கால்—ஓரும்
கலித்தளையாம் என்னினக வற்சீர் கலியின்
ஒலிக்கியையா என்றுரைக்கும் ஓத்து.'

இதனை விரித்து உரைத்துக்கொள்க.

21] வஞ்சித்தளை. [ரு

தன்சீர் இறுதி நிரையொடு நேர்வரின்
வஞ்சித் தளையின் வகையிரண் டாகும்.

'என்பது என் நுதலிற்றோ?' எனின், வஞ்சித்தளை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள்: தன் சீர் இறுதி—வஞ்சியுரிச்சீரின் இறுதி, நிரையொடு நேர் வரின்—வரும் சீர் முதலசை நிரையசையாய் வரவும் நேரசையாய் வரவும், வஞ்சித்தளையின் வகை இரண்டு ஆகும்—வஞ்சித்தளை இரண்டு வகைப் படும் (என்றவாறு).

'வஞ்சித்தளை இரண்டாகும்', என்னாது, 'வஞ்சித் தளையின் வகை இரண் டாகும்', என்ற விதப்பினால், 'வரும் சீரும் வஞ்சி உரிச்சீராய் வருவது சிறப் புடைத்து, பிற சீரும் வருமாயினும்', எனக் கொள்க.

'பூந்தாமரைப் போதலமர' 2 என்னும் பாட்டினுள் முதல் இரண்டடியும் வஞ்சியுரிச்சீர் நின்று வஞ்சியுரிச்சீரோடு ஒன்றாது வந்த சிறப்புடை வஞ்சித் தளை; அல்லன, ஒன்றி வந்த சிறப்புடை வஞ்சித்தளை.

[குறளடி வஞ்சிப்பா.]

'மந்தாநிலம் வந்தசைப்ப
வெண்சாமரை புடைபெயர்தரச்
செந்தாமரை நாண்மலர்மிசை
எனவாங்கு,
இனிதின் ஒதுங்கிய இறைவனை
மனமொழி மெய்களின் வணங்குதும் மகிழ்ந்தே.' 3

எனவும்,

1 தொல். பொ. 665. 2 யா. வி. 15 உரைமேற். 3 திருப்பாமாலை.

[குறளடி வஞ்சிப்பா.]

'புனல்பொழிவன சுனையெல்லாம்;
பூநாறுவ புறவெல்லாம்;
வரைமூடுவ மஞ்செல்லாம்;
தேனூறுவ பொழிலெல்லாம்;

எனவாங்கு,

நாறுகுழற் கொடிச்சியர் தம்மலைச்
சீறூர் வாழிய செல்வமொடு பெரிதே!'

எனவும் இவற்றுள் வஞ்சியுரிச்சீர் நின்று வேற்றுச்சீரோடு ஒன்றியும் ஒன்றாதும் வந்த சிறப்பில் வஞ்சித்தளை இரண்டும் வந்தவாறு கண்டுகொள்க.

'தன்சீர் இறுதி நிரையொடு நேர்வரின் வஞ்சித் தளையாம்,' என்றமையால், வரும் சீர் நிரையும் நேரும் ஒருங்கு நின்று 'புளிமா' என்னும் சீராய் வரின் அல்லது வஞ்சித்தளை ஆகாது, 'பிற,' எனின், அற்றன்று. 'வஞ்சித்தளையின் வகையிரண் டாகும்' என்று எண்ணி விரித்து உரைத்தமையால், வரும் சீர் நிரை முதலாய் வரினும் நேர் முதலாய் வரினும் வஞ்சித்தளையாம் என்பது. எனவே, நிரையும் நேரும் முதலாகிய எல்லாச் சீரினையும் உடன்கொண்டு பிற நூலொடு மாறு கொள்ளாது நிற்கும் எனக் கொள்க. அல்லதூஉம்,

'இருவகை உகரமோ டியைந்தவை வரினே
நேர்பும் நிரைபும் ஆகும் என்ப.' 1

என்பது, 'நேர்க்கீழ்க் குற்றியலுகாமும் முற்றியலுகரமும்' வந்தது, 'நுங்கு நுங்கினர்,' என்றாற்போல ஒருங்கு வரின் நேர்பு அசையாம்; நிரைக்கீழ்க் குற்றியலுகரமும் முற்றியலுகரமும் வந்தது, 'நுழைந்து புக்கார்' என்றாற் போல 'ஒருங்கு வரின் நிரைபு அசையாம்,' என்பது அன்று. நேர்க்கீழ்க் கீழ்க்குற்றியலுகரம் வரினும் முற்றியலுகரம் வரினும் நேர்பு அசையாம் நிரைக் கீழ்க்குற்றியலுகரம் வரினும் முற்றியலுகரம் வரினும் நிரைபு அசையாம் என்றார் செய்யுளியலுடையார்; அதுபோலக் கொள்க.

'வஞ்சித் தளைவகை வரைவின் றாகும்.'

என்றாற்போலத்

'தன்சீர் இறுதி நிரையொடு நேர்வரின்
வஞ்சித்தளை இரண்டாகும்'.

என்று தொகுத்துச் சொன்னாலும், குறித்த பொருளைக் கொண்டு நிற்கும்.

'வஞ்சித் தளையின் வகையிரண் டாகும்.

'என்று விரித்துச் சொல்ல வேண்டியது என்னை?' எனின், தளை வழங்கு கின்றுழி நேர் ஈறுகிய நாலசைப் பொதுச்சீரை வெண்பா உரிச்சீரே போலக் கொண்டு, வரும் சீர் முதல் அசையோடு ஒன்றியது வெண்டளையாகவும், ஒன்றாதது கலித்தளையாகவும்; நிரையீறுகிய நாலசைப் பொதுச்சீரை வஞ்சியுரிச்சீரே போலக் கொண்டு, வரும் சீர் முதல் அசையோடு ஒன்றினும் ஒன்றுவிடினும் வஞ்சித்தளையாகவும்; ஓரசைப் பொதுச்சீரை இயற்சீரே போலக் கொண்டு, வரும் சீர் முதல் அசையோடு ஒன்றியது ஆசிரியத்தளை யாகவும், ஒன்றாதது வெண்டளையாகவும் கொண்டு வழங்கப்படும் என்பது அறிவித்தற்கு வேண்டப்பட்டது; 'விதப்புக் கிளவி வேண்டியது விளக்கும்,' என்ப ஆகலின்.

---

1 தொல். பொ. செ. சூ 4.

[கட்டளைக் கலித்துறை.]

'தேமா புளிமா கருவிளம் கூவிளஞ் சீரகவற்
காமாங் கடைகா யடையின்வெண் பாவிற்கந் தங்கனிபா
வாமாண் கலையல்குல் மாதே! வகுத்தவஞ் சிக்குரிச்சீர்
நாமாண் புரைத்த அசைச்சீர்க் குதாரணம் நாள்மலரே.' 1

'தண்ணிழல் தண்பூ நறும்பூ நறுநிழல் தந்துறழ்ந்தால்
எண்ணிரு நாலசைச் சீர்வந் தருகும்; இனியவற்றுட்
கண்ணிய பூவினம் காய்ச்சீர் அனைய; கனியொடொக்கும்
ஒண்ணிழற் சீர்; அசைச் சீரியற் சீரொக்கும் ஒண்டளைக்கே.' 2

இவற்றை விரித்து உரைத்துக்கொள்க.

பிறரும்,

[நேரிசை வெண்பா.]

'நேரிற நேர்வரின் வெண்டளை யாகுமா
நேரிற்ற சீர்ப்பின் நிரைவரின்—ஓரும்
கலித்தளையாம் பால்வகையால் வஞ்சித் தளையாம்
நிரைவரினும் நாலசைச்சீர்க் கண்.'

எனவும்,

'உரிச்சீர்த் தளைவகைக் கெய்தும் பெயரே
எய்தும் நிரைநேர் இறுதிநா லசைச்சீர்.'

எனவும்,

'ஓரசைப் பொதுச்சீர்த் தளைவகை தெரியின்
ஈரசைச் சீர்த்தளைக் கெய்தும் பெயரே.'

எனவும்,

'ஓரசைப் பொதுச்சீர் ஒன்று தாயின்
வெண்டளை; ஒன்றிய தாசிரியத் தளையே.'

எனவும் சொன்னாரும் உளரெனக் கொள்க.

'அங்கண்வானத் தமரரசரும்' 3

என்னும் பாட்டினுள்,

'வெங்களியானை வேல்வேந்தரும்'

என நேரீற்று நாலசைச்சீர் நின்று, வரும் சீர் முதலசையோடு ஒன்றினமையின், வெண்டளை.

'கடிமலர் ஏந்திக் கதழ்ந்திறைஞ்சி'

என்பது நேரீற்று நாலசைச்சீரோடு ஒன்றாமையின், கலித்தளை.

'மந்தமாருதம் மருங்கசைப்ப'

என்பதும்,

'அந்தரதுந்துபி நின்றியம்ப'

என்பதும் நிரையீற்று நாலசைப் பொதுச்சீர் நின்று வரும் சீரின் முதல் அசையோடு ஒன்றியும் ஒன்றாதும் வந்த வஞ்சித்தளை.

---

1, 2 யா. கா. 7, 8. 3 திருப்பாமாலை (யா. வி. 13 உரைமேற்).

[வஞ்சி விருத்தம்.]

'உரிமை யின்கண் இன்மையால்
அரிமதர் மழைக் கண்ணாள்
செருமதி செய் தீமையால்
பெருமை கொன்ற என்பவே.'1

என்னும் இதனுள் 'மழை' என்னும் அசைச்சீர் நின்று வரும் சீர் முதலசை யோடு ஒன்றுமையின், வெண்டளை; 'செய்' என்னும் அசைச்சீர் நின்று வரும் சீர் முதல் அசையோடு ஒன்றிற்று ஆகலின், ஆசிரியத்தளை. பிறவும் வந்துழிக் காண்க.

பிறரும் தளைக்கு இலக்கணம் இவ்வாறே எடுத்து ஓதினர். என்னை?

'இயற்சீர் இரண்டு தலைப்பெயல் தம்முள்
விகற்ப நடையது வெண்டளை ஆகும்.'

'உரிச்சீ ரதனுள் உரைத்ததை அன்றிக்
கலிக்கும் தளையெனக் கண்டிசி னோரே.'

'இயற்சீர் இரண்டு தலைபெயல் தம்முள்
விகற்பம் இலவாய் விரவி நடப்பின்
அதற்பெயர் ஆசிரி யத்தளை ஆகும்.'

'வெண்சீர் இறுதிக் கிணையசை பின்வரக்
கண்டன எல்லாம் கலித்தளை ஆகும்.'

'தன்சீர் இரண்டு தலைப்பெயல் தம்முளொத்
தொன்றினும் ஒன்று தொழியினும் வஞ்சியின்
பந்தம் எனப்பெயர் பகரப் படுமே.'

என்றார் காக்கைபாடினியார்.

'அஃதே எனின், இவர் வரும் சீரும் குறித்துக் கூறினர் அன்றோ?' எனின், அவர் அவை சிறப்புடைமை நோக்கி எடுத்து ஓதினர்; அல்லாத சீரும் உடம் பட்டார் எனக் கொள்க.

'இயற்சீர் ஒன்று நிலையது வெண்டளை;
உரிச்சீர் அதனுள் ஒன்றிய தியல்பே.'

'ஈரசை இயற்சீர் ஒன்றிய நிலைமை
ஆசிரி யத்தளை ஆகும் என்ப.'
'வெண்சீர் இறுதி நிரைவரிற் கலித்தளை;
வஞ்சி வகைமை வரைவின் றாகும்.'

என்றார் சிறுகாக்கைபாடினியார்.

'ஈரசை இயற்சீர் ஒன்றிய தியல்பே.'

என்றார் அவிநயனார்.

'இயற்சீர் ஒன்று நிலையது வெண்டளை;
உரிச்சீர் அதனுள் ஒன்றிய தியல்பே.'

'நேரும் நிரையுமாம் இயற்சீர் ஒன்றின்,
யாவரும் அறிப ஆசிரி யத்தளை;

---

1 யா. வி. 15, 94 உரைமேற்.

வேறுபட வரினிது வெண்டளை; வெண்சீர்
ஆறறி புலவர்க் கொன்றினும் அதுவே.'
'வெண்சீர்ப் பின்னர் நிரைவருங் காலைக்
கண்டனர் புலவர் கலித்தளை யாக.'
'வஞ்சி உரிச்சீர் வந்தன வழிமுறை
எஞ்சிய வரினும் வஞ்சித் தளையே.'

என்றார் மயேச்சுரர்.

[கட்டளைக் கலித்துறை.]

'தன்சீர் * தனதொன்றிற் றன்றளை யாம்; தண வாதவஞ்சி
வண்சீர் விகற்பமும் வஞ்சிக் குரித்து; வல் லோர்வகுத்த
வெண்சீர் விகற்பம் கலித்தளை யாய்விடும்; வெண்டளையாம்
ஒண்சீர் அகவல் உரிச்சீர் விகற்பமும் ஒண்ணுதலே!' 1

எனவும்,

[கட்டளைக் கலித்துறை.]

'திருமழை உள்ளார் அகவல்; சிலைவிலங் காகும்வெள்ளை;
மருளறு வஞ்சிமந் தாநிலம் வந்து; மை தீர்கலியின்
தெரிவுறு பந்தம்நல் லாய்! செல்வப் போர்க்கதக் கண்ணன்என்ப
துரிமையின் கண்ணின்மை ஓரசைச் சீருக் குதாரணமே.' 2

எனவும் இவற்றை விரித்து உரைத்துக் கொள்க.

22] தளைகள் மயக்கம். [சா

வெள்ளையுட் பிறதளை விரவா; அல்லன
எல்லாத் தளையும் மயங்கியும் வழங்கும்.

'என்பது என் நுதலிற்றோ?' எனின், தளை மயக்கம் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள்: வெள்ளையுள் பிற தளை விரவா—வெண்பாவினுள் வெண்டளை அன்றி வேற்றுத்தளை வந்து மயங்கா; அல்லன—மற்று ஒழிந்த பாவிடத்தும் பாவினத்திடத்தும், எல்லாத் தளையும் மயங்கியும் வழங்கும்—வேற்றுத்தளையும் மயங்கியும் வரப்பெறும் (என்றவாறு).

'மயங்கியும் வழங்கும்,' என்னும் உம்மை விதப்பால், எல்லாத் தளையும் மயங்கியும் வரினும், தன் தளையான் வந்த பொழுதே பாக்கள் இன்னியல்பாய் நடப்பது எனக் கொள்க. பிறரும்,

'எல்லாத் தளையும் மயங்கினும் தன்றளை
அல்லாத் தளையாற் பாவினி தியலா.'

என்றார் எனக்கொள்க. அவை விரவி வருமாறு:

[ஆசிரிய அடியுள் தளை மயக்கம்.]

ஆசிரிய அடியுள் வெண்டளையும் ஆசிரியத் தளையும் விரவி நிற்றலும், வெண்டளையும் கலித்தளையும் விரவி நிற்றலும், வெண்டளையே வருதலும், கலித்

---

1, 2 யா. கா. 10. 11.

பி-ம்: * தண்சீர்: சுன்னாகம் அ. குமாரசாமிப் புலவர் 'தண்சீர்' என்னும் பாடமே கொண்டு "தன் எனபன இண்டும் ஆசிரியப்பா முதலிய மூன்றையும் தனித்தனி சுட்டுமாறு நின்றன" என்பர்.

தளையே வருதலும், வெண்டளையும் வஞ்சித்தளையும் விரவி நிற்றலும், வஞ்சித் தளையும் ஆசிரியத்தளையும் விரவி நிற்றலும், வஞ்சித்தளையும் கலித்தளையும் விரவி நிற்றலும் உரிய என்றிவற்றாற் பல பட விகற்பித்தும்;

[கலி அடியுள் தளை மயக்கம்.]

கலி அடியுள் தன் தளையும் ஆசிரியத்தளையும் விரவி நிற்றலும், தன் தளையும் வெண்டளையும் விரவி நிற்றலும், தன் தளையும் ஆசிரியத்தளையும் வெண்டளையும் விரவி நிற்றலும், வெண்டளையே வருதலும், ஆசிரியத்தளையே வருதலும், வஞ்சித்தளையும் தன் தளையும் விரவி நிற்றலும், வஞ்சித்தளையும் ஆசிரியத் தளையும் விரவி நிற்றலும், வஞ்சித்தளையும் வெண்டளையும் விரவி நிற்றலும், வஞ்சித்தளையும் தன் தளையும், ஆசிரியத்தளையும் விரவி நிற்றலும் வஞ்சித் தளையும் தன் தளையும் வெண்டளையும் விரவி நிற்றலும், வஞ்சித்தளையும் வெண்டளையும் ஆசிரியத்தளையும் விரவி நிற்றலும், வஞ்சித்தளையே வருதலும் என்றிவற்றாற் பல பட விகற்பித்தும்;

[வஞ்சி அடியுள் தளை மயக்கம்.]

வஞ்சி அடியுள் வெண்டளையே வருதலும், ஆசிரியத்தளையே வருதலும், கலித்தளையே வருதலும், முச்சீரடி வஞ்சியுள் தன் தளையும் வெண்டளையும் வருதலும், ஆசிரியத்தளையும் தன் தளையும் வருதலும், கலித்தளையும் தன் தளையும் வருதலும், வெண்டளையும் ஆசிரியத்தளையும் வருதலும், வெண்டளையும் கலித்தளையும வருதலும், கலித்தளையும் ஆசிரியத்தளையும் வருதலும் உரிய என்றிவற்றாற் பொது வகையாற் கூறிச் சிறப்புடைத்தளையானும் சிறப்பில் தளையானும் இவ்வாறு மயக்கம் சொல்ல எல்லாம் இரட்டியாம் என்று, இவ்வாறு இருதளையும் மயங்கி நிற்ப, பல வேறு வகைப்பட்ட தளைமயக்கமாம் என்று இலக்கியப்பன்மை நோக்கி விகற்பித்து விரித்துக் கூறினர் ஒருசார் ஆசிரிய ரேனும், எல்லாத் தளையும் வந்து இவற்றுள் மயங்கும் எனவே அடங்கும் எனறு,

'அல்லன, எல்லாத் தளையும் மயங்கியும் வழங்கும்.'

என்று தொகுத்துச் சொன்னார் இந்நூலுடையார். அவற்றிற்குச் செய்யுள் வருமாறு:

[நேரிசை ஆசிரியப்பா.]

'நெடுவரைச் 1 சாரற் 2 குறுங்கோட்டுப் 3 பலவின்
ண்ண்டுவார் 4 திஞ்சுளை விங்குகவுட் 5 கடுவன்
உண்டுசிலம் 6 பேறி ஓங்கிய இருங்கழைப்
படிதம் பயிற்றும் என்ப
மடியாக் கொலைவில் என்னையர் மலையே.' 7

இவ்வாசிரியத்துள் வேற்றுத்தளை எல்லாம் வந்து மயங்கியவாறு கண்டு கொள்க.

[சுரிதகத் தரவு கொச்சகக் கலிப்பா.]

'குடநிலைத் தண்புறவிற் கோவலர் எடுத்தார்ப்பத்
தடநிலைப் பெருந்தொழுவிற் றகையேறு மரம்பாய்ந்து
வீங்குபிணிக் கயிறுரீஇத் தாங்குவனத் தொன்றப்போய்க்
கலையினொடு முயலிரியக் கடிமுல்லை முறுவலிப்ப
எனவாங்கு,
கானொடு புல்லிப் பெரும்புதல் முனையும்
கானுடைத் தவர்தேர் சென்ற வாறே' 8

இக்கலிப்பாவினுட் பிற பாவின் தளை எல்லாம் மயங்கி வந்தவாறு கண்டு கொள்க.

---

1, 2 இயற்சீர் வெண்டளை, 3 கலித்தளை, 4 வெண்சீர் வெண்டளை, 5 ஒன்றிய வஞ்சித் தளை, 6 ஒன்று வஞ்சித்தளை, 7 யா. வி. 53 உரைமேற். 8 யா. வி. 86 உரைமேற்.

[குறளடி வஞ்சிப்பா.]

'பூம்பொழிற் றண்கானல்
புனல்பொழி தண்படப்பை
வீநாறு பூங்காஞ்சிக்
காஅறு கோட்டெருமைக்
குழக்கன்று பிழைத்தோடிக்
காய்த்துறுப பெருஞ்செந்நெல்
தேய்த்துழக்கு மதுநோனுர்

எனவாங்குத்

தீங்கழை வாங்கி விலங்கும்
பூம்புனல் ஊர! புலம்பா ளுளே.'

இவ்வஞ்சிப்பாவினுள் வெண்டளையும் கலித்தளையும் ஆசிரியத்தளையும் மயங்கி வந்தவாறு கண்டுகொள்க.

இனி, பாவினத்துள் தளை மயங்கி வருமாறு:

[வேற்ருெலி வெண்டுறை.]

'முழங்குதிரைக் கொற்கைவேந்தன் முழுதுலகும் ஏவல்செய
முறைசெய் கோமான்
வழங்குதிறல் வாள்மாறன் மாச்செழியன் ருக்கரிய
வைவேல் பாடிக்

கலங்கிநின் ருயெலாம் கருதலா காவணம்
இலங்குவாள் இரண்டினல் இருகைவீ சிப்பெயர்ந்
தலங்கன்மா லையவீழ்ந் தாடவா டும்மிவள்
பொலங்கொள்பூந் தடங்கட்கே புரிந்துநின் ருரெலாம்
விலங்கியுள் ளந்தப விளிந்துவே ருபவே.' 1

என்னும் இவ் வெண்டுறையுள் வஞ்சித்தளையும், ஆசிரியத்தளையும், கலித்தளையும், வெண்டளையும் மயங்கி வந்தவாறு கண்டுகொள்க.

[எண்சீர் ஆசிரிய விருத்தம்.]

'வம்பலைத்த வனமுலையாள் முகமாய் வந்து
மறுநீக்கி மறைந்திருந்தேற் கறிந்து தானும்
அம்பரத்தின் இனிதிழிந்தா லமுதம் கொள்வான்
அவிரொளிசேர் மயிரொழுக்காய் அணைந்த தென்று
செம்பவளத் திரள்முத்தம் செறியச் செய்து
சிலைகோலிக் கணைதெரிந்து சேம மாகக்
கொம்பலைத்த நுசுப்பியக்கி மதியம் இட்ட
கொடிமதிலென் றவிர்பூணைக் குறிக்கொண் டேனே.'

இவ்வாசிரிய விருத்தத்துள் கலித்தளையும், ஆசிரியத்தளையும், வெண்டளையும் மயங்கி வந்தவாறு கண்டுகொள்க.

---

1 யா. வி. 67 உரைமேற்.

'நாகம் சந்தனத் தழைகொண்டு நளிவண்டு கடிவ;
நாகம் சந்தனப் பொதும்பிடை நளிர்ந்துதா துமிழ்வ;
நாகம் செஞ்சுடர் நகுமணி உமிழ்ந்திருள் கடிவ;
நாகம் மற்றிது நாகர்தம் உலகினை நகுமே.' 1

இக்கலித்துறையுள் ஆசிரியத்தளையும், கலித்தளையும், வெண்டளையும் மயங்கி வந்தவாறு கண்டுகொள்க.

'கருவிப் புட்டிலின் கண்டமும்
மருவிப் பக்கரைப் போழ்களும்
விரவிப் போர்க்கள வாயெலாம்
புரவித் துண்டங்கள் போர்த்தவே.'

இவ்வஞ்சி விருத்தத்துள் ஆசிரியத்தளையும் வெண்டளையும் வந்தன. பிற பாவினங்களுள்ளும் தளை மயங்குமாறு வந்த வழிக் கண்டுகொள்க.

'வெள்ளையுட் பிறதளை விரவா ; அல்லன
எல்லாத் தளையும் மயங்கியும் வழங்கும்.'

என்பதனுள் 'அல்லன எல்லாத் தளையும் மயங்கியும் வழங்கும்,' என்பது வேண்டா ; 'வெள்ளையுட் பிறதளை விரவா,' என்பதனனே அல்லனவற்றுட் பிற தளை விரவும் என்பது பெறப்படும். என்னை ? 'மேலைச்சேரி கோழி வென்றது, என்றால், 'கீழைச்சேரிக் கோழி ஓடிற்று,' என்பது பெறப்பட்டது. 2 அல்லதூஉம், பிறரும், 'முக்கட் கூட்டம் களவிற் கில்லை. 3 என்றமையான், 'முக்கட் கூட்டம் கற்பிற்கு உண்டு,' என்பது பெறப்பட்டது என்று விரித்து உரைத்தார் ஆகலானும்,' எனின், அவ்வகையால் எதிர் மறுத்தல் ஈண்டுப் பெறப்படுமே எனினும், 'விளங்கச் சொல்லல்' என்னும் நூல் மரபினுற் சொல்லப்பட்டதாம்.

'அற்றன்று,' 'வெள்ளையுட் பிறதளை விரவா,' என்பதனைச் சூத்திரமாகக் கொண்ட பொழுது, 'வெள்ளை' என்பதனுல் வெண்பாவும், வெண்பா இனமும் கொள்ளப்படும்? எனின், வெண்பா இனத்துள்ளும் வேற்றுத்தளை விரவாது விடல் வேண்டும். 'வெள்ளை' என்பதனுல் வெண்பாவே கொள்ளப்படுவது எனின், பாவாம் வேருகிய ஆசிரியம், கலி, வஞ்சி என்றிவற்றிற் பிறதளை விரவும் என்பது அல்லது, இனத்திற் பிறதளை விரவும் என்பது பெறப்படாது. 'மேலைச் சேரிக் கோழி வென்றது,' என்ருல், 'கீழைச்சேரிக் கோழி ஓடிற்று,' என்ப தல்லது, 'ஏனைச்சேரிக் கோழி வென்றது ; ஓடிற்று,' என்பது பெறலாகாது ; அவ்வாறே போலவும், 'முக்கட் கூட்டம் களவிற் கில்லை,' என்ருல், 'களவின் வேருகிய கற்பிற்கு உண்டு,' என்பதல்லது, 'கைக்கிளை, பெருந்திணை என்பன வற்றுள் உண்டு ; இல்லை', என்பது பெறப்படாது ; அவ்வாறே போலவும்,' என்று கடாவும் மாணுக்கனைக் குறித்து, 'வெண்பாவொழித்து அல்லாப் பாவும், பாவினமும், வெண்பா இனமும் பிற தளை விரவும்,' என்பது அறிவித்தற்கு

'வெள்ளையுட் பிறதளை விரவா ; அல்லன
எல்லாத் தளையும் மயங்கியும் வழங்கும்.'

என்பது சொல்ல வேண்டும் எனக் கொள்க.

'அஃதே எனின்,

'வெள்ளையுட் பிறதளை விரவா ; அல்லன
தளையும் மயங்கியும் வழங்கும்.'

என்ருலும் குறித்த பொருளைக் கொண்டு நிற்கும் ; 'எல்லாம்' என்று மிகுத்துச் சொல்ல வேண்டியது என்னை ?' எனின், பெருநூல் மருவா

1 சூளா. சீய. 177, 2 நன். பொது. 51 உரை, 3 தமிழ் நெறி. சூ. 21 ; களவியற் காரிகை, பக். 120.

ஒருசாராரும், சான்றோர் செய்யுட்டன்மை அறியாதோரும் 'நேர்நடுவாகிய வஞ்சியுரிச்சீரும் பிற தளையும் வெண்பாவினுள் அருகி வரும்,' என்பார் உளராயினும், 'அவ்வாறு வரின், வெண்பா அழியும், செப்பலோசை தழுவி நில்லாது ஆகலின்,' என்று மறுத்தார் காக்கைபாடினியார் முதலிய மாப்பெரும் புலவர்; அவரது துணிபே இந்நூலுள்ளும் துணிபு,' என்று யாப்புறுத்தற்கு 1 வேண்டப்பட்டது எனக் கொள்க.

[நேரிசை வெண்பா.]

'குலாவணங்கு வில்லெயினர் கோன்கண்டன் கோழி
நிலாவணங்கு நேர்மணல்மேல்* நின்று—புலாவுணங்கல் †
கொள்ளும்புட் காக்கின்ற கோயின்மையோ ‡ நீபிறா
துள்ளம் புகாப்ப § துரை.'

இதனுள் 'கொள்ளும்புட் காக்கின்ற' என்புழிச் செப்பலோசை கொள்ளுமாறு போலாது, 'கோயின்மையோ' என்புழி வஞ்சியுரிச்சீர் வந்து, வஞ்சித்தளை தட்டுச் செப்பலோசை வழுவிக்கிடந்தவாறும், வகையுளி சேர்த்தல் ஆகாதவாறும், உதாரண வாய்ப்பாட்டால் ஓசை ஊட்டினும் உண்ணாதவாறும் கண்டுகொள்க. அல்லதூஉம், சான்றோர் செய்யுளுள்ளும் ‖ வஞ்சித்தளையும் வேற்றுத்தளையும் வந்த வெண்பா இல்லை போலும் எனக் கொள்க.

[குறட்டாழிசை.]

'வளக்கு எக்கரை மாநிலம் கொய்வாட்
களக்க லாகுமோ அன்பு?'

இதனுள் ஆசிரியத்தளை தட்டுச் செப்பலோசை வழுவிற்று. பிறவும் இவ்வாறு பிறழ்ந்தன கண்டுகொள்க.

[கட்டளைக் கலித்துறை.]

'மாஞ்சீர் கலியுட் புகா; கலிப் பாவின் விளங்கனிவந்
தாஞ்சீர் அடையா; அகவல் அகத்துமல் லாதவெல்லாம்
தாஞ்சீர் மயங்கும்; தளையும தே; வெள்ளைத் தன்மைகுன்றிப்
போஞ்சீர் கனிபுகிற் புல்லா தயற்றளை பூங்கொடியே!' 2

இதனை விரித்து உரைத்துக்கொள்க.

[நேரிசை வெண்பா.]

'சீர்வண்ணம் வெள்ளைக் கலிவிரவும்; வஞ்சியுள்
ஊருங் கலிப்பாச் சிறுச்சிறிதே—பாவினும்
வெண்பா ஒழித்துத் தளைவிரவும்; செய்யுளாம்
வெண்பாக் கலியுட் புகும்.' 3 [நாலடி நாற்பது]

எனவும்,

'வெள்ளை ஒழித்தல் பாவொடு பாவினம்
சொல்லிய தளைசீர் வரைவில விரவும்.'

எனவும் சொன்னார் பிறரும் எனக் கொள்க.

---

1 வலியுறுத்துதற்கு 2 யா. கா. 40. 3 யா. வி. 32 உரைமேற்.

பி—ம் *வெண்மணன்மேல், † புலாலுணங்கல், ‡ கோவின்மையோ, § புக்கியாப்ப
‖ கோவையுள்ளும்.

[நேரிசை வெண்பா.]

'நின்றசீர் ஈறும் வருஞ்சீர் முதலசையும்
ஒன்றியும் ஒன்றுதும் ஓசைகொள—நின்றால்
வளையொன்று முன்கையாய்! வந்ததனை வல்லோர்
தளையென்று கட்டுரைப்பார் தாம்.'

'அதிகண்டம் என்றும் இசையென்றும் சீரைப்
பதச்சேதம் என்றும் பகர்வர் ;—பதச்சேதம்
சந்தித் ததனைத் தளையென்பர் ; அத்தளையைப்
பந்தமென் பாரும் பலர்.'

இவற்றை விரித்துரைத்துக்கொள்க.

தளை ஓத்து முடிந்தது.

## ரு. அடி ஓத்து.

23] அடியின் வகை. [க

குறளடி சிந்தடி அளவடி நெடிலடி
கழிநெடில் அடியெனக் கட்டுரைத் தனரே.

**'இவ்வோத்து என்ன பெயர்த்தோ?'** எனின், தளையினுன் அடி ஆமாறும், அடிப் பெயரும், அடிக்கு உரிமையும், அடி மயக்கமும், அடி வரையறையும் ஆமாறும் உணர்த்திற்று ஆதலான், 'அடி ஓத்து' என்னும் பெயர்த்து.

'இச்சூத்திரம் என் நுதலிற்ரே?' எனின், ஒருசார் ஆசிரியர் வேண்டும் அடிகளது பெயர் வேறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

**இதன் பொழிப்பு:** குறளடியும் சிந்தடியும் அளவடியும் நெடிலடியும் கழி நெடிலடியும் என இவ்வைந்து திறத்தன அடி என்று உரைத்தார் ஒருசார் தொல்லாசிரியர் (என்றவாறு).

'இப்பொருளைச் சொல்லுமோ இச்சூத்திரத்துட்டொடர்மொழி?' எனின், சொல்லும். என்னை? 'குறளடி சிந்தடி அளவடி நெடிலடி கழிநெடிலடி' என்பது உம்மைதொகை ஆதலின், எண்ணும்மை வாசகம்பட விரித்து உரைக்கப்பட்டது.

'ஐந்து திறத்தன' என்பது, அச்சொன்ன அடி ஐந்தே; ஆகலின் 'ஐந்து' என்பது போந்த பொருள்.

'கடையிணை, பின்முரண் இடைப்புணர் முரண்.' 1

என்னும் சூத்திரத்துணின்றும் 'சார்ச்சி 2 வழி ஒழுகுதல்' என்னும் அதிகார முறைமையால் 'ஒருசார் ஆசிரியர்' என்பது கொணர்ந்து உரைக்கப்பட்டது, வடநூலுள்ளும், ஞாபகத்தானும் 3 விருத்தியானும் அதிகாரம் என்று சேண் வயிற் கொணர்ந்து 4 உரைக்கப்படும் ஆகலின், அல்லதூஉம், பல்காயனுர் முதலாகிய ஒருசார் ஆசிரியர் எடுத்து ஓகிற்றிலர் ஆதலின், அது வலிந்து உரைக்கப்பட்டது எனவும் அமையும். இது சார்புநூல் ஆகலின், அப்படி விகற்பம் ஓதினுர் காக்கைபாடினியார் முதலாகிய ஒருசார் ஆசிரியர் எனக் கொள்க. என்னை?

'குறள்சிந் தளவுநெடில் கழிநெடில் என்றுங்
கணவகை மரபின அடிவகை தானே.'

என்றுர் ஆகலின். 'தொல்லை' என்பது, 'கட்டுரைத்தனரே' என இறந்த காலப் படக்கையொடு* தழுவச் சொன்னமையாற் பெறப்பட்டது. ஆசிரியர்,' என்பது ஆற்றலாற் போந்த பொருள். அணியியல் உடையாரும்,

'இயன்ற செய்யுட் கியைந்த பொருளை
உயர்ந்த நடையால் உணரக் கூறலும்
அருங்கல மொழியால் அரிதுபடக்† காட்டலும்
ஒருங்கிரண் டென்ப உயர்நடைப் பொருளே.'

என்னும் சூத்திரத்துள் 'ஒருங்கிரண்டு' என்புழி ஆற்றலாற் போந்த பொருளை, 'என்ப' என்னும் முற்றுச்சொல்லோடு 'புலவர்' என்னும் பெயர் கூட்டிப் பொருள் உரைத்தார் ஆகலின், இதுவும் அவ்வாறே கொள்க.

---

1 யா. வி. 39. 2 தொடர்பு. 3 குறிப்பாலும், 4 தூரத்திலிருந்து கொண்டுவந்து.
பா-ம்: *இறந்தகாலம் படத்தன்மையொடு, † அரிபறக்

பலவும் சிலவுமாகிய தளையொடு பொருந்திய சீர்களால் அடுத்து நடத்தலின், 'அடி' என்பது காரணக் குறி. என்னை?

'தடுத்தனர் தட்ட* தளைபல தழுவியும்
அடுத்த சீரின் அடியெனப் படுமே.'

என்றார் ஆகலின்.

குறளடி முதலாகிய அடிகளை இடுகுறியானும் காரணக்குறியானும் வழங்குப. 'காரணக் குறியான் வழங்குமா றியாதோ?' எனின், மக்களில் தீரக் குறியானைக் 'குறள்' என்ப; அவனின் நெடியானைச் 'சிந்தன்' என்ப; குறியனும் நெடியனும் அல்லாதானை 'அளவிற்பட்டான்' என்ப; அவனின் நெடியானை 'நெடியன்' என்ப; தீர நெடியானைக் 'கழி நெடியன்' என்ப. அதனால், இவ்வடிக்கும் இவ்வாறே பெயர் சென்றன என்ப.

24] முதல் நான்கு அடிகள். [உ

குறளடி சிந்தடி இருசீர் முச்சீர்;
அளவடி நெடிலடி நாற்சீர் ஐஞ்சீர்;
நிரனிறை வகையால் நிறுத்தனர் கொளலே.

'இஃது என் நுதலிற்றோ?' எனின், மேல் அதிகாரம் பாரித்த ஐந்தடியுள்ளும் முதல் நான்கு அடியும் உணர்த்துதல் நுதலிற்று.

**இதன் பொழிப்பு**: 'குறளடி, சிந்தடி' என்றும், அதன் கீழ் 'இருசீர், முச்சீர்' என்றும்; 'அளவடி, நெடிலடி' என்றும், அதன் கீழ் 'நாற்சீர், ஐஞ்சீர்' என்றும் இவ்வாறு நிரல்நிறை வகையால் நிறுவி, இரு சீரானே வந்தது **குறளடி** என்றும், முச்சீரானே வந்தது **சிந்தடி** என்றும், நாற்சீரானே வந்தது **அளவடி** என்றும், ஐஞ்சீரானே வந்தது **நெடிலடி** என்றும் இவ்வாறு கொண்டு வழங்குக (என்றவாறு).

'இருசீர் குறளடி; சிந்தடி முச்சீர்;
அளவடி நாற்சீர்; அறுசீ ரதனின்
இழிப நெடிலடி என்றிசி னோரே.'

என்றார் காக்கைபாடினியார்.

இச்சூத்திரத்துள்,

'நிரனிறை வகையால் நிறுத்தனர் கொளலே.'

என்பது இல்லாவிடினும் நிரல் நிறைப் பொருள்கோளேயாம்;

'ஐ ஔ என்னும் ஆயீ ரெழுத்திற்
கிகர உகரம் இசைநிறை வாகும்.' 1

என்றாற்போல. பெயர்த்தும் அதனை எடுத்து ஓதல் வேண்டியது என்னை?' எனின், 'நாற்சீரடி சிறப்புடைத்து; அதனை 'நேரடி' என்றும், 'அளவடி' என்றும் வழங்குப,' என்பது அறிவித்தற்கு வேண்டப்பட்டது எனக் கொள்க.

1 தொல். எழுத். 42. பி-ம்: *தடுத்தன தட்டத்

'நாற்சீர் கொண்டது நேரடி ; அதுவே *
தூக்கொடும் தொடையொடும் சிவணும் என்ப.'

என்றார் நற்றத்தனாரும் எனக் கொள்க. அவற்றிற்குச் செய்யுள் வருமாறு

[வஞ்சித் துறை.]

'திரைத்த சாலிகை
நிரைத்த போல்நிரந்
திரைப்ப தேன்கனே
விரைக்கொள் மாலையாய் !' 1

இது குறளடியான் வந்த செய்யுள்.

[வஞ்சி விருத்தம்.]

'இருது வேற்றுமை இன்மையால்
சுருதி மேற்றுறக் கத்தினோ
டரிது வேற்றுமை யாகவே
கருது வேற்றடங் கையினாய் !' 2

இது சிந்தடியான் வந்த செய்யுள்.

[கலி விருத்தம்.]

'தேம்பழுத் தினியநீர் மூன்றுந் தீம்பலா
மேம்பழுத் தளிந்தன சுனையும் வேரியும்
மாம்பழக் கனிகளும் மதுத்தண் டட்டமும்
தாம்பழுத் துளசில தவள மாடமே.' 3

இஃது அளவடியான் வந்த செய்யுள்.

[கலி நிலைத் துறை.]

'வென்றான் வினையின் றொகையாய் விரிந்து தன்கண்
ஒன்றாய்ப் பரந்த உணர்வின்ஒழி யாது முற்றும்
சென்றான் றிகழும் சுடர்சூழ்ஒளி மூர்த்தி யாகி
நின்றான் அடிக்கீழ்ப் பணிந்தார்வினை நீங்கி நின்றார்.' 4

இது நெடிலடியான் வந்த செய்யுள். பிறவும் வந்தவழிக் கண்டுகொள்க.

## 35] கழிநெடிலடி [ந.

கழிநெடி லடியே கசடறக் கிளப்பின்
அறுசீர் முதலா ஐயிரண் டீறா
வருவன பிறவும் வகுத்தனர் கொளலே.

என்பது என் நுதலிற்றோ ?' எனின், கழிநெடிலடி ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் : கழிநெடிலடியே கசடு அறக் கிளப்பின் அறுசீர் முதலா ஐயிரண்டு ஈறா வருவன—கழிநெடிலடி என்பது ஐயுறவு தீர உரைக்குங்கால் அறுசீர் முதலா ஒன்றுதலைச்சிறந்து பத்துச்சீர் இறுதியாக வரும் அடியெல்லாம்,

---

1 சூளா. சீய. 179. 2 சூளா. சீய. 171. 3 சூளா. நகரப். 14. 4 சூளா. காப்பு.
பி-ம்: *அளவென்ப

பிறவும் வகுத்தனர் கொளலே—பத்துச் சீரின் மிக்குப் பதிமூன்று* சீரின்காறும் வருவனவும் உள, அவற்றையும் கழிநெடிலடியின்பாற்படுத்து வழங்குக (என்றவாறு).

''கசடற' என்பது 'ஐயுறவு தீர' என்பதனைச் சொல்லுமோ?' எனின், சொல்லும்; 'கற்க கசடற'1 என்றார் ஆகலின்.

'கழிநெடிலடியே' என்றவழி ஏகாரம் பிரிநிலை. 'அஃது எற்றிற் பிரிக்கப் பட்டதோ?' எனின்,

'குறளடி சிந்தடி அளவடி நெடிலடி
கழிநெடி லடியெனக் கட்டுரைத் தனரே.'2

என்னும் சூத்திரத்தினின்றும் பிரிக்கப்பட்டது; 'இசைநிறை ஏகாரம் எனினும் அமையும்.

'கழிநெடி லடியே அறுசீர் முதலா ஐயிரண் டீறு'

என்னாது, 'கசடறக் கிளப்பின்' என்று மிகுத்துச் சொல்லிய அதனால், 'எண் சீரின் மிக்கு வந்த செய்யுட்கள் சிறப்பில,' எனக் கொள்க.

'இரண்டு முதலா எட்டீ றுகத்
திரண்ட சீரான் அடிமுடி வுடைய;
இறந்தன வந்து நிறைந்தடி முடியினும்
சிறந்த அல்ல செய்யு ளுள்ளே.' [காக்கைபாடினியார்]

என்றார் பிறரும் எனக் கொள்க.

'ஐயிரண் டீறு' என்று எடுத்து ஓதினமையால், ஒன்பதின்சீரடியும் பதின் சீரடியும் 'இடையாகு கழிநெடிலடி' எனப்படும். 'பிறவும் வகுத்தனர் கொளலே' என்றமையான், பதின்சீரின் மிக்கு வருவன எல்லாம் 'கடையாகு கழிநெடிலடி' எனப்படும் எனக் கொள்க.

அவற்றிற்குச் செய்யுள் வருமாறு:

[அறுசீர் ஆசிரிய விருத்தம்]

'இரைக்கும் அஞ்சிறைப் பறவைகள் எனப்பெயர்
இனவண்டு புடைசூழ
நுரைக்கள் என்னுமக் குழம்புகள் திகழ்ந்தெழ
நுடங்கிய இலையத்தால்
திரைக்க ரங்களிற் செழுமலைச் சந்தனத்
திரள்களைக் கரைமேல்வைத்
தரைக்கும் மற்றிது குணகடற் றிரையொடு
பொருதல தவியாதே.'3

இஃது அறுசீர்க் கழிநெடிலடியான் வந்த செய்யுள்.

[எழுசீர் ஆசிரிய விருத்தம்]

'கணிகொண் டலர்ந்த நறவேங்கை யோடு
கமழ்கின்ற காந்தள் இதழால்
அணிகொண் டலர்ந்த வனமாலை சூடி
அகிலாவி குஞ்சி கமழ

1 குறள். 391. 2 யா. வி. 23. 3 சூளா. கலியாண. 51. பி-ம்: *பதினாறு

மணிகுண் டலங்கள் இருபாலும் வந்து
    வரையாக மீது திவளத்
துணிகொண் டிலங்கு சுடர்வேலி னோடு
    வருவானி தென்கொல் துணிவே!' 1

இஃது எழுசீர்க் கழிநெடிலடியான் வந்த செய்யுள்.

[எண்சீர் ஆசிரிய விருத்தம்]

'மூவடிவி னுலிரண்டு சூழ்சுடரும் நாண
    முழுதுலக மூடியெழின் முளைவயிரம் நாற்றித்
தூவடிவி னிலிலங்கு வெண்குடையின் நீழற்
    சுடரோய்! நின் அடிபோற்றிச் சொல்லுவதொன் றுண்டால்;
சேவடிகள் தாமரையின் சேயிதழ்கள் தீண்டச்
    சிவந்தனவோ? சேவடியின் செங்கதிர்கள் பாயப்
பூவடிவு கொண்டனவோ பொங்கொளிகள் சூழ்ந்து?
    புலங்கொள்ளா வாலெமக்கெம்* புண்ணியர்தங் கோவே!' 2

இஃது எண்சீர்க் கழிநெடிலடியான் வந்த செய்யுள்.

[ஒன்பதின்சீர் ஆசிரிய விருத்தம்]

'இடங்கை வெஞ்சிலை வலங்கை வாளியின்
    எதிர்ந்த தானையை இலங்கும் ஆழியின் விலங்கியோன்
முடங்கு வாலுளை மடங்கல் மீமிசை
    முனிந்து சென்றுடன் முரண்ட ராசனை முருக்கியோன்
வடங்கொள் மென்முலை நுடங்கு நுண்ணிடை
    மடந்தை சுந்தரி வனங்கொள் பூண்முலை† மகிழ்ந்தகோன்
தடங்கொள் தாமரை இடங்கொள் சேவடி
    தலைக்கு வைப்பவர் தமக்கு வெந்துயர் தவிர்க்குமே.'

இஃது ஒன்பதின்சீர்க் கழிநெடிலடியான் வந்த செய்யுள்.

[பதின்சீர் ஆசிரிய விருத்தம்]

'கொங்கு தங்கு கோதை ஓதி மாத ரோடு
    கூடி நீடும் ஓடை நெற்றி
வெங்கண் யானை வேந்தர் போந்து வேத கீத
    நாத என்று நின்று தாழ
அங்க புவ்வம்‡ ஆதி யாய ஆதி நூலின்
    நீதி யோடும்§ ஆதி யாய
செங்கண் மாலைக் காலை மாலை சேர்வர்¶ சேர்வர்
    சோதி சேர்ந்த சித்தி தானே.' 3

இது பதின்சீர்க் கழிநெடிலடியான் வந்த செய்யுள்.

---

1 சூளா. அரசியல். 197. 2 சூளா. துறவு. 64. 3 யா வி. 53 உரைமேற்-பி-ம், * வாலெமக்குப் † பூமழை ‡ பூர்வம் § யேர்தும் ¶ சென்று

[பதினொரு சீர் ஆசிரிய விருத்தம்]

'அருளாழி ஒன்றும் அறனோர் இரண்டும்
அவிர்சோதி மூன்றொ டணியோகு நான்கும்
மதமைந்தும்* ஆறு பொருண்மேல்
மருளாழி போழும் நயமேழும் மேவி
நலமெட்டும் பாடும்† வகையொன்ப தொன்ற‡
வரதற்கோ§ பத்தின் மகிழ¶
இருளாழி மாய எறியாழி அன்ன
எழிலாழி தன்னுள் எழுநாடர் ஓடிt
இவர்கின்றu எல்லை அளவும்
உருளாழி செல்ல ஒளியானை மல்கv
உலவாத செல்வ முடனாகி ஒண்பொன் w
உலகுச்சி சேர்வ துளதே.'

இது பதினொருசீர்க் கடையாகு கழிநெடிலடியான் வந்த செய்யுள்.

[பன்னிருசீர் ஆசிரிய விருத்தம்]

'கோளரி வாளரி வல்லிய மொல்லொலி
கொண்ட கொலைத்தொழில் எண்கொடு கேழல்கள்
கொட்டும் நெடுஞ்சிமை யுட்கியர் மால்வரை
யாளியை அஞ்சிய வெஞ்சின மால்களி
றந்தளி ரன்னத சைந்து மறைந்தகல்
அஞ்சுரம் நீவரின் அஞ்சு மனத்தெழு
நீளா வல்குல் நிறங்கிளர் நுண்டுகில்
நீத்தமை வைத்து நிரைத்த மணிக்கலை
நேரிழை மென்முலை ஏர்கெழு நன்னுதல்
வாளரி சிந்தி அவிர்ந்து விலங்கின
மைந்தரும் உண்கண் வணங்கு நுணங்கிடை
வண்டிமிர் வார்குழல் ஒண்டொடி மாதே!'*

இது பன்னிருசீர்க் கடையாகு கழிநெடிலடியான் வந்த செய்யுள்.

[ஆசிரியச் சந்த விருத்தம்]

நாடி மீட லல்ல தில்லை நல்ல பூவி னல்லி மேய
நம்பி போலு நம்பி தன்னோ டன்பளாய்
ஆடு மஞ்சை அன்ன சாயல் அஞ்சொல் மாதர் பஞ்சி துஞ்சும்
அல்குல் நோவ மெல்ல ஒல்கி அல்லல்சேர்
வேட ரோடி வேழம் வீழ வெய்ய அம்பின் எய்து சுட்ட
வேய்கொள் தீயின் வெந்து விண்டு வெம்மைசேர்
கோடை யோடு நீடு வாடு குன்றி னின்று மின்று சென்று
கோடி மாட கூட ளுடு கூடுமே.'

இது பதின்மூன்றுசீர்க் கடையாகு கழிநெடிலடியான் வந்த செய்யுள்.

---

பி-ம்: * பதமைந்தும் † வாட்டும் ‡ தென்றல் ‡ வழுதற்கோ ‖ மகிழா.
t எழுஞாயி றோடு u வவிர்கின்ற v ஒழியானம் பக்கல் w முடனேயொடொல்கி.

* பழைய பதிப்புப் பாடம் பல பிழைகளையுடையதாயிருத்தலின் இஃது ஏட்டுப்பிரதியி லுள்ளபடி காட்டப்பட்டது.

'கொன்றூர்ந் தமைந்த' 1 என்னும் ஆசிரியத் துறையுள் முதலடியும் மூன்றாமடியும் பதினைஞ்சீர்க் கடையாகு கழிநெடிலடியானும், அல்லாத அடி இரண்டும் பதினாறுசீர்க் கடையாகு கழிநெடிலடியானும் வந்தன.

பதினேஞ்சீர்க் கடையாகு கழிநெடிலடியான் வந்த செய்யுளும் வந்த வழிக் கண்டுகொள்க.

> 'கழிநெடி லடியே கசடறக் கிளப்பின்,
> அறுசீர் முதலா ஐயிரண் டீறா
> வருவன பிறவும் கொளலே.'

என்றாலும் கருதிய பொருளைப் பயக்கும்; 'வகுத்தனர் கொளலே' என்று மிகுத்துச் சொல்ல வேண்டியது என்னை? நாற்சீரடிதன்னையே 'நாலெழுத்து முதலாக ஆறெழுத்தின்காறும் உயர்ந்த மூன்றடியும் குறளடி; ஏழெழுத்து முதல் ஒன்பதெழுத்தின்காறும் உயர்ந்த மூன்றடியும் சிந்தடி; பத்தெழுத்து முதல் பதினான்கெழுத்தின்காறும் உயர்ந்த ஐந்தடியும் அளவடி, நேரடி; பதினைந்தெழுத்து முதலாகப் பதினேழெழுத்தின்காறும் உயர்ந்த மூன்றடியும் நெடிலடி; பதினெட்டெழுத்து முதலாக இருபதெழுத்தின்காறும் உயர்ந்த மூன்றடியும் கழிநெடிலடி; இருபதெழுத்தின் மிக்க நாற்சீரடிப்பா இல்லை,' என்று இவ்வாறு அடி வகுத்து, பின்னைக் 'குறளடி முதலாகிய ஐந்தடியும் ஆசிரியப்பாவிற்கு உரிய; சிந்தடியும், அளவடியும், நெடிலடியின் முதற்கண் இரண்டடியும் வெண்பாவிற்கு உரிய; அளவடியுள் கடைக்கண் இரண்டடியும், நெடிலடியும், கழிநெடிலடியும் இலக்கணக் கலிப்பாவிற்கு உரிய; அல்லதூஉம், நான்கெழுத்து முதலாகப் பனிரண்டெழுத்தின்காறும் இருசீரடி வஞ்சிப் பாவிற்கு உரிய; முச்சீரடி வஞ்சிப்பாவிற்கு எழுத்து வரையறை இல்லை யாயினும், எட்டெழுத்து முதலாக நெடிலடிக்கு ஓதிய எழுத்தளவும் வரப் பெறும்,' என்றும்; பின்னை, 'வெண்பா, ஆசிரியம், கலியுள் வரும் சீர் ஐந்தெழுத்தின் மிகா; வஞ்சிப்பாவின் சீர் ஆறெழுத்தின் மிகா; சிறுமை, மூன்றெழுத்தாவது சிறப்புடைத்து; இரண்டெழுத்தினாலும் அருகி வரப் பெறும்,' என்றும் கூறினார் ஆசிரியர் தொல்காப்பியனார் என்பது அறிவித்தற்கு வேண்டப்பட்டது, இது சார்புநூல் ஆகலின். என்னை?

> 'நாற்சீர் கொண்ட தடியெனப் படுமே.' 2

என்று, பின்னை,

> 'நாலெழுத் தாதி ஆறெழுத் தெல்லை
> ஏறிய நிலத்த குறளடி என்ப.' 3

> 'ஏழெழுத் தென்ப சிந்தடிக் களவே;
> ஈரெழுத் தேற்றம் இவ்வழி யான.' 4

> 'பத்தெழுத் தென்ப நேரடிக் களவே;
> ஒத்த நாலெழுத் தொற்றலங் கடையே.' 5

> 'மூவைந் தெழுத்து நெடிலடிக் களவே;
> ஈரெழுத்து மிகுதலும் இயல்பென மொழிப.' 6

> 'மூவா றெழுத்துக் கழிநெடிற் களவே;
> ஈரெழுத்து மிகுதலும் இவட்பெறும் என்ப.' 7

> 'தன்சீர் எழுத்தின் சின்மை மூன்றே.' 8

என்றார் ஆசிரியர் தொல்காப்பியனார் ஆகலின்.

---

1 யா. வி. 16, 76 உரைமேற். 2 தொல். பொ. 344.
3–7 தொல். பொ. 348—352. 8 தொல். பொ., 358.

இவற்றுக்கு எழுத்து எண்ணுமின்றுழிக் குற்றியலிகரமும், குற்றிய லுகரமும், ஆய்தமும், ஒற்றும் இவை ஒழித்து எண்ணப்படும் எனக் கொள்க.

[நேரிசை வெண்பா]

'ஈரிரண்டும் ஏழெழுத்தும்* ஈரைந்தும் மூவைந்தும்
பாரியன்ற † நாற்சீர் பதினெட்டும்—ஓரா ‡
விளையும் பதினேழ் நிலத்துக் குறள்சிந்
தளவு நெடில் கழியோ டைந்து.'

'ஐந்தும் அகவற்கு வெள்ளைக் களவடியும்
சிந்து நெடிலடிக்கண் தொல்லிரண்டும்—வந்த
தளவிரண்டும் ஆன்ற § நெடில்கழியும் ஒண்பாற் ¶
றளிசிதைவில் தண்டாக் கலிக்கு.' 1

ஈரிரண்டோ டீரா றெழுவாய் இறுவாயாச்
சேரும் எழுத்திருசீர் வஞ்சிக்காம்—ஓரும்
நெடிலடிக்கு நேர்ந்தனவும் மூவொருசீர் வஞ்சிக்
கடிவகுத்தார் எட்டாதி ஆய்ந்து.' 2

'அளவியற்பா ஆன்றசீர் ஐந்தெழுத்திற் பல்கா;
வளவஞ்சிக் காறுமாம் மாதோ;—வளவஞ்சிச்
சின்மையொரு மூன்றுகும் என்பர் சிறப்புடைமைத்
தன்மை தெரிந்துணர்வோர் தாம்.' 3

'குற்றிகரம் குற்றுகரம் என்றிரண்டும் ஆய்தமும்
ஒற்றும் எனவொரு நான்கொழித்துக்—கற்றோர்
உயிரும் உயிர்மெய்யும் ஓதினர் எண்ணச்
செயிரகன்ற செய்யுள் அடிக்கு.' 4

இவற்றை விரித்து உரைத்துக்கொள்க.

அல்லதூஉம் இயற்சீரான் வந்ததனை 'இயலடி' என்றும்; உரிச்சீரான் வந்ததனை 'உரியடி' என்றும்; இரு சீரும் விரவியும், பொதுச்சீர் விரவியும், பொதுச்சீரானே வந்தும் நிகழ்வனவற்றை எல்லாம் 'பொதுவடி' என்றும் வழங்குப என்பது அறிவித்தற்கு வேண்டப்பட்டது. ஐந்தடியினையும் இம் மூன்றனே உறழப் பதினைந்தடியாம்; பிறவற்றாற் கூறப் பலவுமாம்.

[கட்டளைக் கலித்துறை]

'குறளிரு சீரடி; சிந்துமுச் சீரடி; நாலொருசீர்
அறைதரு காலை அளவொடு நேரடி; ஐயொருசீர்
நிறைதரு பாதம் நெடிலடி யாம்; நெடு மென்பணைத்தோட்
கறைகெழு வேற்கணல் லாய்! மிக்க பாதம் கழிநெடிலே.' 5

'திரைத்த இருது குறள்சிந்து; அளவடி தேம்பழுத்து;
விரிக்கும் நெடிலடி வேல்நெடுங் கண்ணி! வென்றான் வினையின்
இரைக்கும் கணிகொண்ட மூவடி வோடிடங் கொங்குமற்றும்
கரிக்கைக் கவான்மருப் பேர்முலை மாதர்! கழிநெடிலே.' 6

இவற்றை விரித்து உரைத்துக்கொள்க.

---

1—3 யா. வி. 94 உரைமேற். 4 யா.வி. 36 உரைமேற், 5 யா. கா. 12 6 யா. கா. 13

பி-ம். * ஓரேழும். † பாவாய் ‡ பாரியைந்த $ ஒன்ற ¶ தன்பாற். a என்ற சீர் b தெரிந்துணர்ந்தோர்.

சிந்தடி குறளடி என்றிரண் டடியான்
வஞ்சி நடக்கும் என்மனார் புலவர்.

என்பது சூத்திரம். மேற்கூறப்பட்ட அடியினை எல்லாப் பாவிற்கும் பாவினத்திற்கும் பகுத்து உணர்த்துவான் எடுத்துக்கொண்டார். அவற்றுள், இச்சூத்திரம் வஞ்சிப்பாவிற்கு உரிய அடி உணர்த்துதல் நுதலிற்று.

**இதன் பொழிப்பு**: சிந்தடியும் குறளடியும் என்ற இவ்விரண்டடியானும் வஞ்சிப்பா நடக்கும் என்ப புலவர் (என்றவாறு).

**'என்மனார் புலவர்'** என்பது, **'என்ப புலவர்'** என்பதனைச் சொல்லுமோ?' எனின், சொல்லும். என்னை? **'என்ப'** என்பது நிலைமொழியாய், **'புலவர்'** என்பது வருமொழியாய், **'மன், ஆர்'** என்பன இரண்டு இடைச்சொல் வந்து, நிலைமொழி, ஈற்றின்கட் பகரம் கெட்டு, 'என்மனார் புலவர்' என்று முடிந்தது ஆகலின்.

'குறளடி, சிந்தடி' என்னாது, 'சிந்தடி, குறளடி' என்று முறை பிறழச் சொன்னமையால், 'குறளடி வஞ்சிப்பாச் சிறப்புடைத்து,' எனக் கொள்க.

'தலைதடு மாற்றம் தந்துபுணர்ந் துரைத்தல்' 1

தந்திர உத்தி ஆகலின்.

பிறரும் வஞ்சிப்பாவிற்கு அடி வகுத்து உரைத்தார் எனக் கொள்க. என்னை?

'சிந்தடி குறளடி என்றா யிரண்டும் *
வஞ்சிக் கிழமை வகைப்பட் டனவே.'

என்றார் **காக்கைபாடினியார்.**

'வஞ்சி அடியே இருசீர்த் தாகும்.' 2
'முச்சீ ரானும் வருமிடன் உடைத்தே.' 3

என்றார் **தொல்காப்பியனார்.**

'இருசீர் அடியும் முச்சீர் அடியும்
வருதல் வேண்டும் வஞ்சி யுள்ளே.'

என்றார் **மயேச்சுரர்.**

அவற்றிற்குச் செய்யுள் வருமாறு:

'பானல்வாய்த் தேன்விரிந்தன;
கானல்வாய்க் கழிமணந்தன;
ஞாழலொடு நறும்புன்னை
தாழையொடு முருகுயிர்ப்ப
வண்டல்வாய் நறுநெய்தல்
கண்டலொடு கடலுடுத்துத்
தவளமுத்தம் சங்கீன்று
பவளமொடு ஞெமர்ந்துசாய்
இன்னதோர்

1 தொ. பொ. 665. 2 தொ. பொ. செய். 45. 3 ஷ 46.
பி-ம். * என் றாயிரு திறமும்.

கடிமண முன்றிலும் உடைத்தே
படுமீன் பரதவர் பட்டினத் தானே.' 1

இது குறளடியான் வந்த வஞ்சிப்பா.

'தொன்னலத்தின் புலம்பலைப்பத் தொடித்தோள்மேல்
பன்னலத்த கலந்தொலையப் பரிவெய்தி
என்னலத்தகை இதுவென்னென எழில்காட்டிச்
சொன்னலத்தகைப் பொருள்கருத்தினிற் சிறந்தாங்கெனப்
பெரிதும்
கலங்கஞர் எய்தி விடுப்பவும் †
சிலம்பிடைச் செலவும் சேணிவந் தற்றே.' 2

எனவும்,

'பரலத்தம் செலவிவளொடு படுமாயின்
இரவத்தை நடைவேண்டா இனிநனியென
நஞ்சிறு குறும்பிடை மூதெயிற்றியர்
சிறந்துரைப்பத் தெறுகதிர் சென்றுறும்
ஆங்கட் டெவிட்டினர் கொல்லோ
எனவாங்கு,
நொதுமலர் வேண்டி நின்னொடு
மதுரை முற்ற ஆடவர் தாமே.' 3

எனவும் இவை சிந்தடியான் வந்த வஞ்சிப்பா. பிறவும் அன்ன.

27] வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா அடிகள் [ரு

கலியொடு வெண்பா அகவல் கூறிய
அளவடி தன்னல் நடக்குமன் அவையே.

'இஃது என் நுதலிற்றோ?' எனின், மேல் ஒழிந்த மூன்று பாவிற்கும் உரிய அடி உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொழிப்பு: கலிப்பாவும் வெண்பாவும் ஆசிரியப்பாவும் மேற் சொல்லப்பட்ட அளவடியால் நடக்கும் (என்றவாறு).

'அகவல்' என்பது, 'ஆசிரியம்' என்றவாறு. என்னே?

'அகவல் என்ப தாசிரியப் பாவே.'

என்றார் சங்கயாப்பு உடையார் ஆகலின்.

'வெண்பா அகவல் கலி' என்னாது, 'கலியொடு வெண்பா அகவல்' தலைதடு மாற்றம் தந்துபுணர்த் துரைத்ததனால், 'கலியுள் அம்போ தரங்க உறுப்புச் சில இருசீர் அடியாலும் முச்சீர் அடியாலும் வரும்; அராக உறுப்பு நாற்சீரடி யின் மிக்கு வரும்,' எனக் கொள்க. அவை போக்கிக் கலிப்பாச் சொல்லும் வழிச் சொல்லுதும்.

'கூறிய' என்று மிகுத்துச் சொல்லிய அதனல், வெண்பாவின் ஈற்றடியும், நேரிசை ஆசிரியப்பாவின் ஈற்றயல் அடியும், கலிவெண்பாவின் ஈற்றடியும் முச்சீரான் வரும்; இணைக்குறள் ஆசிரியப்பாவின் இடையடி இரண்டும் பலவும் இருசீரடியானும் முச்சீரடியானும் வரும் எனக் கொள்க.

---

1 யா. வி. 90 மேற். 2—3 யா. வி. 90 உரைமேற். † மிருப்பவும்

'**தன்**' என்று மிகுத்துச் சொல்லிய அதனால், ஆசிரிய விருத்தமும் கலித் துறையும் ஒழித்து, மூன்று பாவினமும் பெரும்பான்மையும் நாற்சீரடியான் வரும் எனக் கொள்க.

'**அவை**' என்று மிகுத்துச் சொல்லிய அதனால், ஒருசார் ஆசிரிய அடியும் கலியடியும் ஐஞ்சீரான் அருகி வருவனவும் உளவெனக் கொள்க. அவை போக்கி, 'மிக்கும் குறைந்தும்' 1 என்னும் சூத்திரத்துட் காட்டுதும்.

> '**விதப்புக் கிளவி வேண்டியது விளக்கும்.**'

என்பவாகலின் இவ்வாறு கூறப்பட்டது.

பிறரும் இவ்வாறு இவற்றிற்கு அடிவகுத்து உரைத்தார். என்னை?

> 'ஆசிரியம் வெண்பாக் கலியொடு மும்மையும்
> நாற்சீர் அடியால் நடைபெற் றனவே.'

> '**சிந்தும் குறளும் வருதலும் அவ்வழி**
> **உண்டென் றறைப உணர்த்திசி னோரே.**'

என்றார் **காக்கைபாடினியார்.**

> 'இருசீர் அடியும் முச்சீர் அடியும்
> வருதல் வேண்டும் வஞ்சி யுள்ளே.'

> 'அல்லாப் பாவின் அடிவகை தெரியின்
> எல்லாம் நாற்சீர் அல்லடி இயலா;
> இறுதியும் அயலும் இடையும் முச்சீர்
> பெறுதியும் 2 வரையார் வெள்ளைமுதல் மூன்றும்.'

என்றார் **நீர்மலிந்த வார்சடையோன் பேர் மகிழ்ந்த பேராசிரியர். 3**

> 'இரண்டினும் மூன்றினும் வஞ்சி ஆகும்;
> நாற்சீர் அடியாற் பாப்பிற மூன்றே.'

என்றார் **அவிநயனார்.**

> 'ஆசிரி யத்தொடு வெள்ளையும் கலியும்
> நேரடி தன்னால் நிலைபெற நிற்கும்.'

என்றார் **பல்காயனார்.**

> 'ஆசிரி யப்பா வெண்பா கலியென
> மூவகைப் பாவும் நேரடிக் குரிய.'

என்றார் **நற்றத்தனார்.**

> 'வஞ்சி அல்லா மூவகைப் பாவும்
> எஞ்சுதல் இலவே நாற்சீர் அடிவகை.'

என்றார் **சிறுகாக்கைபாடினியார்.**

---

1 **யா. வி.** 93. 2 பெறுதலும். 3 **மயேச்சுரர்.**

அவற்றிற்குச் செய்யுள் வருமாறு :

[நேரிசை வெண்பா]

'அரக்காம்பல் நாறும்வாய் அம்மருங்குற் கன்னே
பரற்கானம் ஆற்றின கொல்லோ—அரக்கார்ந்த
பஞ்சிகொண் டூட்டினும் பையெனப் பையெனவென்
றஞ்சிப்பின் வாங்கும் அடி!' 1

என **வெண்பா** அளவடியான் வந்தவாறு.

[நேரிசை ஆசிரியப்பா]

'நிலத்தினும் பெரிதே; வானினும் உயர்ந்தன்று;
நீரினு மாரள வின்றே சாரற்
கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு
பெருந்தேன் இழைக்கும் நாடனெடு நட்பே.' 2

என **ஆசிரியப்பா** அளவடியான் வந்தவாறு.

[நேரிசை ஒத்தாழிசைக் கலிப்பா]

[தரவு]

'அரிதாய அறனெய்தி அருளியோர்க் களித்தலும்
பெரிதாய பகைவென்று பேணுரைத் தெறுதலும்
புரிவமர் காதலிற் புணர்ச்சியும் தருமெனப்
பிரிவெண்ணிப் பொருள்வயிற் சென்றநம் காதலர்
வருவர்கொல் வயங்கிழாஅய்! வலிப்பல்யான் கேளினி.'

[தாழிசை]

'அடிதாங்கும் அளவின்றி அழலன்ன வெம்மையாற்
கடியவே கனங்குழாஅய்! காடென்றார்; அக்காட்டுள்
துடியடிக் கயந்தலை கலக்கிய சின்னீரைப்
பிடியூட்டிப் பின்னுண்ணும் களிறெனவும் உரைத்தனரே! 1

'இன்பத்தின் இகந்தொரீஇ இலைதீந்த உலவையால்
துன்புறாஉம் தகையவே காடென்றார்; அக்காட்டுள்
அன்புகொள் மடப்பெடை அசைஇய வருத்தத்தை
மென்சிறக ராலாற்றும் புறவெனவும் உரைத்தனரே! 2

'கன்மிசை வேய்வாடக் கனைகதிர் தெறுதலால்
துன்னரூஉந் தகையவே காடென்றார்; அக்காட்டுள்
இன்னிழல் இன்மையான் வருந்திய மடப்பிணைக்குத்
தன்னிழலைக் கொடுத்தளிக்கும் கலையெனவும் உரைத்தனரே! 3

அதனால், * [தனிச்சொல்]

---

1 நாலடி. 396 2 குறுந். 3 பி-ம் : * எனவாங்கு

[சுரிதகம்]

'இனைநல முடைய கானம் சென்றோர்
புனைநலம் வாட்டுநர் அல்லர்; மனைவயிற்
பல்லியும் பாங்கொத் திசைத்தன;
நல்லெழில் உண்கணும் ஆடுமால் இடனே.' 1

**எனக் கலிப்பா** அளவடியான் வந்தவாறு.

28] **பாவினங்களுக்கு உரிய அடி** [சூ

பாவினம் எல்லா அடியினும் நடக்கும்.

'இஃது என் நுதலிற்றோ?' எனின், பொது வகையாற் பாவினங்கட்கு அடி ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

**இதன் பொழிப்பு:** குறளடி முதலிய எல்லா **அடியானும் பாவினங்கள்** நடக்கும் (என்றவாறு).

உம்மை, முற்றும்மை, இன்ன பாவின் இனம் இன்ன **அடியால் நடக்கும்** என்று சிறப்பித்துப் போக்கிச் செய்யுள் ஓத்துள்ளே **கூறுதும்.**

பிறரும் இவ்வாறு கூறினர். என்னை?

'விருத்தம் துறையொடு தாழிசை என்ற
இனச்செய்யுள் எல்லா அடியினும் நடக்கும்.'

என்றார் **காக்கைபாடினியார்.**

'எல்லா அடியினும் இனப்பா நாற்சீர்
அல்லா மேலடிய பாவினுக் கியலா.'

என்றார் **அவிநயனார்.**

அவற்றிற்குச் செய்யுள் வருமாறு:

[வஞ்சித்துறை]

'மைசிறந்தன மணிவரை;
கைசிறந்தன காந்தளும்;
பொய்சிறந்தனர் காதலர்;
மெய்சிறந்திலர் விளங்கிழாய்!'

**எனக் குறளடி**யாற் பாவினம் வந்தவாறு.

[வஞ்சி விருத்தம்]

'சோலை ஆர்ந்த சுரத்திடைக்
காலை யார்கழல் ஆர்ப்பவும்
மாலை மார்பன் வருமாயின்
நீல வுண்கணிவள் வாழுமே.'

**எனச் சிந்தடி**யாற் பாவினம் வந்தவாறு.

---

1 கலி. 11.

[கலி விருத்தம்] *

'கற்பிறங்கு சாரற் கறங்கருவி நன்னுடன்
எற்றுறந்தான் என்னில் உடையுமால் என்னெஞ்சம்
முற்றுறந்தான் நிற்ப முகிழ்முலையாய்! யானினிப்
பிற்றுறக்க லாவதோர் பெண்ணுப் பிறப்பேனே.'

எனவும்,

[கலி விருத்தம்]

'தேம்பழுத் தினியநீர் மூன்றும் தீம்பலா
மேம்பழுத் தளிந்தன சுளையும் வேரியும்
மாம்பழக் கனிகளும் மதுத்தண் டீட்டமும்
தாம்பழுத் துளசில தவள மாடமே.' 1

எனவும் அளவடியாற் பாவினம் வந்தவாறு.

[கலிநிலைத் துறை]

'யானும் தோழியும் ஆயமும் ஆடும் துறைநண்ணித்
தானும் தேரும் பாகனும் வந்தென் நலனுண்டான்
தேனும் பாலும் போல்வன சொல்லிப் பிரிவானேல்,
கானும் புள்ளும் கைதையும் எல்லாம் கரியென்றே.' 2

என நெடிலடியாற் பாவினம் வந்தவாறு.

[அறுசீர் ஆசிரிய விருத்தம்.]

'பூந்தண் இரும்புனத்துப் பூசல் புரியாது பூழி யாடிக்
காந்தள் கமழ்குலையாற் காதல் மடப்பிடிதன் கவுள்வண் டோப்ப
வேந்தன்போல் நின்ற வியன்களிற்றை வில்லினுற் கடிவார் தங்கை
ஏந்தெழில் ஆகம் இயையா தியைந்தநோய் இயையும் போலும்!'

என அறுசீர்ச் சிறப்புடைக் கழிநெடிலடியாற் பாவினம் வந்தவாறு.

[எழுசீர் ஆசிரிய விருத்தம்.]

'சிறுநுதற் பேரமர்க்கண் செய்யவாய்க் கருங்கூந்தற்
பெருந்தோட் பேதைக் கொன்றுனும்
உறுமதி வாண்முகமும் ஒல்கு மருங்குலும்
ஒருகாழ் முத்து மேற்கொண்ட
மறுநுதி மென்முலையும் வாட வாழாள்
வருந்தும் என்று பணிந்தாலும்
இறுமருங்குல் என்று சுரும்புதானும் இரங்கா
கள்ளும்பூவும் இணைந்து * வேண்டி.'

என எழுசீர்ச் சிறப்புடைக் கழிநெடிலடியாற் பாவினம் வந்தவாறு.

---

1 சூளா. நகரப். 11 2 யா. வி. 88, 94, உரைமேற்.

* இதனைத் தரவு கொச்சகம் எனலுமாம்.

பி-ம் * இணைந்து.

[எண்சீர் ஆசிரிய விருத்தம்.]

'திருமொழியாற் சினனகுவச் † சிலப்பு பாடும்;
சிறையன்னம் திருந்தடிமேற் சிலம்பு பாடும்;
அருமானின் ‡ முரணவிய அரிசேர்ந் தாடும்;
அயில்புரையும் நெடுத்தடகண் அரிசேர்ந் தாடும்;
விரிமலர்சேர் நறுங்குழல்மேல் விரியும் கந்தம்;
வியன்ஞாலம் வியப்பெய்த விரியும் கந்தம்;
இருளனங்கன் பெருந்துயரம் இரிக்கும் என்றும்;
இணைந்தியக்கி § என்றுயரம் இரிக்கும் என்றும்.'

என எண்சீர்ச் சிறப்புடைக் கழிநெடிலடியான் பாவினம் வந்தவாறு.

[ஆசிரியத் துறை.]

'அறிவா ரறிவு மான்றன் படைந்தின்ப மாமருளே
பூண்டு மாண்ட செல்வவாண் டகையார்
மறிவார் மறியு மனத்தா னமர்செயனப் பூண்டென்று
மருளார் செல்வ மருளாராய்ப்
புரிவா ரெனிற்றுன்பம் புரிவார் போலும் கீழ்க்கீழென்று
பொருளே சிந்தித் திருள்நீங்கப்
பெரியார் பெருநெறி யேபிழை யார்நின் றுபிறப்பங்
குணரவல் லாரென்று முணரவல் லாரே.' 1

என ஒன்பதின் சீர் இடையாகு கழிநெடிலடியான் பாவினம் வந்தவாறு.

[வெண்டுறை.]

'கல்லடைந்த சீறூர்க் கணையடைந்த வெஞ்சிலையர்
கடுவாய் வேடர் கற்பொன் றில்லாக் கலையேற் றூர்தி
சொல்லடைந்த பெண்மைச் சுரும்படைந்த பூங்கோதைச்
செவ்வாய்ச் சிதரரிக்கண் அவ்வாய் மென்றோளாள்
கொல்லடைந்த வேலன்ன கூர்ம்பரவ்வெவ் வியலாகக்
குறும்பாற்றோர்க் குரல்கொடிதே மலரும் கொடிதே.' 2

எனப் பதின்சீர் இடையாகு கழிநெடிலடியான் பாவினம் வந்தவாறு.

'கல்லாற் கடங்கழிய நோக்கி
யரிய வென்றும் பெரிய கூறிக்
கலங்கி நாளும் புலம்பா யென்றும்
சொல்லா லுணர்ந்த வதனை * * *.' 3

எனப் பதினொரு சீர்க் கடையாகு கழிநெடிலடியான் பாவினம் வந்தவாறு. பிறவும் கடையாகு கழிநெடிலடியாற் பாவினம் வந்தன, சங்க யாப்பிற் கண்டு கொள்க.

---

1 இ.·.து இடையீரடி குறைந்து நான்கடியாய் வந்த ஆசிரியத்துறை ஆதலின், முதலாயும் நான்காமடியுமே உதாரணமாகக் கொள்க.

2 இது வெண்டுறையாதலின், இதன் முதலடியையே உதாரணமாகக் கொள்க.

3 இச்செய்யுளின் முதலடியையே உதாரணமாகக் கொள்க.

பி-ம். † சிறுமொழியாற் சின்னவணிச் அருமரபின் ‡ இயைந்தியக்கி.

29] ஆசிரியப்பாவில் பிற பாவடிகள் மயங்குதல். [௨

இயற்சீர் வெள்ளடி வஞ்சி அடியிவை
அகப்பட வரூஉம் அகவலும் உளவே.

என்பது சூத்திரம். 'இஃது என் நுதலிற்றோ?' எனின், அடி மயக்கம் ஆமாறு உணர்த்துவான் எடுத்துக்கோடலின், இச்சூத்திரம் ஆசிரியப்பாவினுள் அல்லாப் பாவின் அடி மயங்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

**இதன் பொருள்:** ஈரசைச் சீராலாகிய வெண்பா அடியும் வஞ்சி அடியும் என இவற்றைத் தமக்கு அடியாகக் கொண்டு நடக்கும் ஒருசார் ஆசிரியப் பாக்களும் உள (என்றவாறு).

'அகப்படுத்துதல்' என்பது, 'தமக்கு ஆகச் செய்தல்' என்றவாறு: 'பொருள் அகப்படுத்தார்' என்றாற்போலக் கோள்க.

பிறரும் இவ்வாறு மயக்கம் சொன்னார். என்னை?

'இயற்சீர் வெள்ளடி ஆசிரிய மருங்கின்
நிலைக்குரி மரபின் நிற்கவும் பெறுமே.' 1

என்றார் தொல்காப்பியனார்.

'வஞ்சி விரவல் ஆசிரியம் உரித்தே;
வெண்பா விரவினும் கலிவரை வின்றே.'

என்றார் பல்காயனார்.

அவற்றிற்குச் செய்யுள் வருமாறு:

[நேரிசை ஆசிரியப்பா.]

'எறும்பி அளையிற் குறும்பல் சுனைய
உலைக்கனல்* அன்ன பாறை ஏறிக்
கொடுவில் எயினர் பகழி மாய்க்கும்
கவலைத் தென்பவவர் தேர்சென்ற வாறே;
அதுமற் றவலம் கொள்ளாது
நொதுமற் கழறுமிவ்† வழுங்க லூரே.' 2

எனவும்,

[நேரிசை ஆசிரியப்பா.]

'கொலைவில் எயினர் குறும்பல் உறங்கும்
மலைவிலங் கருஞ்சுரம் சிலையொடு கழிமார்
அன்புகெழு காதல் கூர
நன்பெருந் திருநலம் பிறிதா கின்றே.'

எனவும் இவற்றுள், 'எறும்பி அளையிற் குறும்பல் சுனைய' எனவும், 'கொலைவில் எயினர் குறும்பில் உறங்கும்' எனவும் இயற்சீர் வெள்ளடி வந்தவாறு. இவற்றை,

[குறள் வெண்பா.]

எறும்பி அளையிற் குறும்பல் சுனைய
குறுந்தொடி! யாம்செல் சுரம்.'

எனவும்,

1 தொல். பொ. செய். 62 2 குறுந். 12
பி-ம். * உலைக்கல், † கலுழுமிவ்

[குறள் வெண்பா.]

கொலைவில் எயினர் குறும்பில் உறங்கும்
மலைவிலங்கு நீள்சுரம் செல்.

எனவும் இவ்வாறு உச்சரித்து இயற்சீர் வெள்ளடி ஆமாறு கண்டுகொள்க.

'இவை' என்று மிகுத்துச் சொல்லிய அதனால், வெண்பா உரிச்சீரோடு விரவி வந்த இயற்சீர் வெள்ளடியும் ஆசிரியத்துள் வரப்பெறும் எனக் கண்டு கொள்க.

வரலாறு :

[நேரிசை ஆசிரியப்பா.]

'அங்கண் மதியம் அரவின்வாய்ப் பட்டெனப்
பூசல் வாயா * புலம்புமனைக் கலங்கி
ஏதின் மாக்களை † நோவர் தோழி!
ஒன்றும் ‡ நோவார் இல்லை
தெண்கடற் சேர்ப்பன் உண்டவென் னலக்கே.'

இதனுள் 'அங்கண் மதியம் அரவின்வாய்ப் பட்டென' என்பது, வெண்சீர் விரவி வந்த இயற்சீர் வெள்ளடி. இதனை,

அங்கண் மதியம் அரவின்வாய்ப் பட்டெனப்
பொங்கிய பூசல் பெரிது.

என உச்சரித்து வெள்ளடி ஆமாறு கண்டுகொள்க.

இனி, வஞ்சி விரவி வருமாறு :

[நேரிசை ஆசிரியப்பா.]

'இருங்கடல் தானையொடு பெருநிலங் கவைஇ §
உடையிலை நடுவண திடைபிறர்க் கின்றித்
தாமே ஆண்ட ஏமங் காவலர்
இடுதிரை மணலினும் பலரே சுடுபிணக்
5. காடுபதி யாகிப் ‖ போகித் தத்தம்
நாடு பிறர்கொளச் சென்றுமாய்ந் தோரே ¶;
அதனால், நீயும் கேண்மதி யத்தை : வீயா
துடம்பொடு நின்ற உயிரும் இல்லை;
மடங்கல் உண்மை; மாயமோ அன்றே;
10. கள்ளி வேய்ந்த முள்ளியம் பெருங்காட்டு
வெள்ளில் போகிய வியனு ** ளாங்கண்
உப்பிலாஅ அவிப்புழுக்கல்
கைக்கொண்டு பிறர்க்கு நோக்கா ††
இழிபிறப்பினோன் ஈயப் பெற்று

பி-ம். * வாயா. † மாக்களு ‡ என்றும் § இருங்கட லுடுத்தவிப் பெருங்கண் மாநிலங் ‖ யாக ¶ தனரே ** வியனு †† பிறக்கு நோக்கப

15. நிலங்கலன் ஆக விலங்குபலி மிசையும்
இன்னு வைகல் வாரா முன்னே
செய்ந்நனி * முன்னிய வினையே
முந்நீர் வரைப்பகம் முழுதுடன் துறந்தே.' 1

இதனுள் 'உப்பிலாஅ அவிப்புழுக்கல்' எனவும், 'கைக்கொண்டு பிறர்க்குநோக் காது' எனவும், 'இழிபிறப்பினேன் ஈயப்பெற்று' எனவும் வஞ்சியடி விரவி வந்தவாறு.

'இயற்சீர் வெள்ளடி வஞ்சி அடியிவை
வருஉம் அகவலும் உளவே.'

என்றலும் கருதிய பொருளைப் பயக்கும். 'அகப்பட' என்று மிகுத்துச் சொல்ல வேண்டியது என்னை? எனின், 'அகத்திணையாகிய ஆசிரியப்பாவினகத்து வஞ்சியடி விரவி வரப்பெறு,' என்றதற்கும், 'ஒருசார் கலியடி விரவி வரும் ஆசிரியமும் உள,' என்றற்கும் வேண்டப்பட்டது.

'அகத்திணை யல்வழி ஆங்கதன் மருங்கின்
வகுத்த சொற்சீர் வஞ்சியொடு மயங்கும்.'

என்றார் பனம்பாரனார் என்னும் ஆசிரியர் ஆகலின். 'ஆசிரிய மருங்கின்' என்னாது, 'ஆங்கதன் மருங்கின்' என்றார் அதிகார வசத்தால் அவ்வாசிரியர் என்று உணர்க.

சொற்சீர் அடியாவன,

'கட்டுரை வகையால் எண்ணொடு புணர்ந்து
முற்றடி யின்றிக் குறைசீர்த் தாகியும்
ஒழியிசை யாகியும் வழியசை புணர்ந்தும்
சொற்சீர் திறுதல் சொற்சீர்க் கியல்பே.' 2

என்று செய்யுளியல் உடையார் ஓதிய பெற்றியால் வருவன எனக் கொள்க.

இனி, கலியடி விரவிய ஆசிரியம் வருமாறு:

[நேரிசை ஆசிரியப்பா.]

'ஆனுப் பெருமை அணங்கும் நனியணங்கும்
வானேங்கு சிமையத்து மனமகிழ்ந்து பிரியாது
முருகவேள் உறையும் சாரல்
அருகுநீ வருதல் அஞ்சுவல் யானே.'

இதனுள் இரண்டாமடி கலியடி; அதனை,

வானேங்கு சிமையத்து மனமகிழ்ந்து பிரியாது
தேனேங்கு நறும்பைந்தார்ச் சேயமரும் திருவிற்றே.

என உச்சரித்துக் கலியடியாமாறு கண்டுகொள்க.

---

1 புறம் 363 2 தொல். பொ. செய். 123

பி-ம். * செயந்நீ

'குருகுவேண் டாளி கோடுபுய்த் துண்டென
மாவழங்கு பெருங்காட்டு மழகளிறு காணது
மருள்பிடி திரிதருஞ் சோலை
அருளா னுகுதல் ஆயிழை! கொடிதே!' 1

இதனுள்ளும் இரண்டாமடி கலியடி ; அதனை,

மாவழங்கு பெருங்காட்டு மழகளிறு காணது
தீவழங்கு சுழல்விழிக்கண் சீயஞ்சென் றுழலுமே.

என உச்சரித்துக் கலியடி ஆமாறு கண்டுகொள்க.

30] கலிப்பாவில் பிற பா விரவுமாறு. [அ

வெள்ளடி கலியினுள் விரவவும் பெறுமே.

'இஃது என் நுதலிற்றோ?' எனின், கலிப்பாவினுள் பிற பா விரவுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள் : வெண்பா அடி ஒருசார்க் கொச்சகக் கலிப்பாவினுள் மயங்கவும் பெறும் (என்றவாறு).

'வெள்ளடி கலியினுள் விரவவும் பெறும்' என்ற உம்மையால், ஆசிரிய அடியும் வந்து மயங்கப்பெறும் எனக் கொள்க.

'காமர் கடும்புனல் கலந்தெம்மோ டாடுவாள்' 2

என்னும் மயங்கிசைக் கொச்சகக் கலிப்பாவினுள்ளும்,

'நறுவேங்கைத் துறுமலர் நன்னுதலார் கொண்டணிய' 3

என்னும் மயங்கிசைக் கொச்சகக் கலிப்பாவினுள்ளும் வெண்பாவும் ஆசிரியமும் மயங்கி வந்தன. அவை போக்கி, மயங்கிசைக் கொச்சகக் கலிப்பாக் காட்டும் வழிக் காட்டுதும். என்னை?

'வஞ்சி விரவல் ஆசிரியம் உரித்தே
வெண்பா விரவினும் கலிவரை வின்றே.'

என்றார் பல்காயனார் ;

'பொதுவகையாற் சொற்றனவும் பொய்தீர் சிறப்பிற்
குதவி ஓரோவிடத்து நிற்கும்—விதிவகையால்
நின்ற பொருளை நிகழ்விப் பதுநியமம்
என்றுரைப்பர் தொல்லோர் எடுத்து.'

என்றார் நற்றத்தனார் எனக் கொள்க.

31] வஞ்சிப்பாவில் பிற பா மயங்குமாறு. கூ]

வஞ்சியுள் அகவல் மயங்கினும் வரையார்.

'என்பது என் நுதலிற்றோ?' எனின், வஞ்சிப்பாவினுள் பிற பா மயங்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொழிப்பு : வஞ்சிப்பாவினுள் ஆசிரிய அடி விரவவும் பெறும் (என்றவாறு).

---

1 யா. வி. 94 உரைமேற். 2 கலி. 39 யா. வி. 86 உரைமேற். 3 யா. வி. 86 உரைமேற்.

'அகவல் மயங்கினும் வரையார்,' என்ற உம்மையால், 'கலியடியும் ஒருசார் வெள்ளடியும் மயங்கி வரவும் பெறும்; சிந்தடியும் குறளடியும் தம்முள் மயங்கி வரும் வஞ்சிப்பாவும் உள,' எனக் கொள்க:

'பட்டினப் பாலை' என்னும் வஞ்சிநெடும்பாட்டினுள்,

'நேரிழை மகளிர் உணங்குணுக் கவரும்' 1

என்றித் தொடக்கத்தன ஆசிரிய அடி;

— 'வயலாமைப் புழுக்குண்டும் வறளடும்பின் மலர்மலைந்தும்' 2

என்பது கலியடி; அதனை,

வயலாமைப் புழுக்குண்டும் வறளடும்பின் மலர்மலைந்தும்' 2
கயல்நாட்டக் கடைசியர்தம் காதலர்தோள் கலந்தனரே.

என உச்சரித்துக் கலியடி ஆமாறு கண்டுகொள்க.

'கோழி எறிந்த கொடுங்காற் கனங்குழை' 3

என்பது வெள்ளடி; அதனை,

கோழி எறிந்த கொடுங்காற் கனங்குழை
ஆழிசூழ் வையக் கணி.

என உச்சரித்து வெள்ளடி ஆமாறு கண்டுகொள்க.

'தாழிரும் பிணர்த்தடக்கை' 4
என்னும் வஞ்சிப்பாவினுள்ளும் கலியடி வந்தன எனக் கொள்க.

'குருகு நாரையொடு கொட்பாணு
விரிதிரைநீர் வியன்கழனி
மறுகெழீஇய மலிசும்மை
எனவாங்கு,
தண்பணை தழீஇய இருக்கை
மண்கெழு நெடுமதில் மன்னன் ஊரே.' 5

இது குறளடியும் சிந்தடியும் மயங்கி வந்த வஞ்சிப்பா. பிறவும் அன்ன.

'வஞ்சியுள் அகவல் மயங்கவும் பெறும்,' என்னுது, 'மயங்கினும் வரையார்,' என்று மற்றெருரு வாய்பாட்டாற் சொல்ல வேண்டியது என்னை? 'வஞ்சிப் பாவினுள் ஆசிரியம் மயங்கி வருவது, அகத்திணை அல்லாது வழியே,' என்ப 'ஒருசாராசிரியர்,' என்றற்கு வேண்டப்பட்டது. என்னை?

'அகத்திணை மருங்கின் அளவு மயங்கி
விதப்ப மற்றவை வேறு வேண்டி
வஞ்சி அடியின் யாத்தனர் வஞ்சி
அகத்திணை மருங்கின் அணையு மாறே.'

என்பது பன்னிருபடலத்துட் பெருந்திணைப்படலத்துச் சூத்திரம் ஆகலின்.

---

1 பத்துப். பட்டினப். 22 2 பத்துப். பட்டினப். 64—5. 3 பத்துப். பட்டினப். 23
4 யா. வி. 55, 93, 94 உரைமேற். 5 யா வி 32 உரைமேற்.

'அஃதே எனின், பட்டினப்பாலைத் தொடக்கத்தன அகத்திணை வஞ்சி அமையா பிற,' எனின், 'அத்திணையகத்து வஞ்சி வருவது சிறப்பின்றாயினும், சிறுபான்மை வரப்பெறும்,' என்பார் உளராகலின், அவையும் அமையும் என்பது. என்னை ?

'அகத்திணை யகவயின் நிற்ப வஞ்சி
சிறப்பில எனினும் சிலவிடத் துளவே.'

என்பது மாபுராணச் சூத்திரம் ஆகலின்.

[கட்டளைக் கலித்துறை.]

'அகப்பா அகவலுள் வஞ்சிசொற் சீரடி யாயிரண்டும்
புகப்பா லனவல்ல என்பதொல் லோர்கள்; புகரில்வஞ்சி
அகப்பாப் பொருளணை யாதென்பர் நாவலர்; ஆங்கருகிப்
புகப்பான் மையுமொரு சார்ப்புல வாணர் புகன்றனரே.'

'இயற்றளை வெள்ளடி வஞ்சியின் பாதம் அகவலுள்ளால்
மயக்கப் படாவல்ல வஞ்சி மருங்கினெஞ் சாவகவல்
கயற்கணல் லாய்!கலிப் பாதமும் நண்ணும் கலியினுள்ளால்
முயக்கப் படுமுதற் காலிரு பாவும் முறைமையினே.' 1

இக்காரிகையை விரித்து உரைத்துக் கொள்க.

'ஆசிரியப் பாவின் அயற்பா அடிமயங்கும்;
ஆசிரியம் வெண்பாக் கலிக்கணும்;—ஆசிரியம்
வெண்பாக் கலிவிரவும்; வஞ்சிக்கண் வெண்பாவின்
ஒண்பா அடிவிரவா உற்று.'

'சீர்வண்ணம் வெள்ளைக் கலிவிரவும்; வஞ்சியுள்
ஊரும் கலிப்பாச் சிறுச்சிறிதே;—பாவினும்
வெண்பா ஒழித்துத் தளைவிரவும்; செய்யுளாம்
வெண்பாக் கலியுட் புகும்.'

என்றார் நாலடி நாற்பது உடையார் எனக் கொள்க.

32] ஒவ்வொரு பாவிற்கும் அடிச்சிறுமை [ம

ஈரடி வெண்பாச் சிறுமை; மூவடி
ஆசிரி யத்தொடு வஞ்சி; எஞ்சிய
நீரிரண் டடியே இழிபென மொழிப.

'என்பது என் நுதலிற்றோ?' எனின், நான்கு பாவிற்கும் சிறுமைக்கு எல்லையாகிய அடி வரையறை உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொழிப்பு : ஈரடி வெண்பாவிற்குச் சிறுமை; மூன்றடி ஆசிரியப்பாவிற்கும் வஞ்சிப்பாவிற்கும் சிறுமை; ஒழிந்த கலிப்பாவிற்கு நான்கடி சிறுமை என்று சொல்லுவர் புலவர் (என்றவாறு).

1 யா. கா. 41

ஏகாரம், தேற்றேகாரம்.

'ஒருதொடை ஈரடி வெண்பாச் சிறுமை;
இருதொடை மூன்றும் அடியின் இழிந்து
வருவன ஆசிரியம் இல்லென மொழிப;
வஞ்சியும் அப்பா வழக்கின ஆகும்.'

'நான்காம் அடியினும் மூன்றும் தொடையினும்
தாழ்ந்த கலிப்பாத் தழுவுதல் இலவே.'

என்றார் **காக்கைபாடினியார்.**

அவற்றிற்குச் செய்யுள் வருமாறு:

[குறள் வெண்பா.]

'தன்னுயிர்க் கின்னாமை தானறிவான் என்கொலோ
மன்னுயிர்க் கின்னா செயல்?' 1

என இரண்டடியால் **வெண்பாவிற்குச் சிறுமை வந்தவாறு.**

[நேரிசை ஆசிரியப்பா.]

'அவரோ வாரார் தான்வந் தன்றே
எழிற்றகை இளமுலை பொலியப்
பொரிப்பூம் புன்கின் முறிதிமிர் பொழுதே.' 2

எனவும்,

[நேரிசை ஆசிரியப்பா.]

'முதுக்குறைந் தனளே முதுக்குறைந் தனளே
மலையன் ஒள்வேற் கண்ணி
முலையினம் வாராள் * முதுக்குறைந் தனளே.' 3

எனவும் மூன்றடியால் **ஆசிரியப்பாவிற்குச் சிறுமை வந்தவாறு.**

'குருகு நாரையொடு கொட்பாற
விரிதிரைநீர் வியன்கழனி
மறுகெழீஇய மலிசும்மை
  எனவாங்கு,
தண்பணை தழீஇய இருக்கை
மண்கெழு நெடுமதில் மன்னன் ஊரே.'

எனவும்,

'மந்தாநிலம் வந்தசைப்ப
வெண்சாமரை புடைபெயர்தரச்
செந்தாமரை நாண்மலர்மிசை
  எனவாங்கு,
இனிதின் ஒதுங்கிய இறைவனை
மனமொழி மெய்களின் வணங்குதும் மகிழ்ந்தே.' 4

எனவும் மூன்றடியான் வஞ்சிப்பாவிற்குச் சிறுமை வந்தவாறு.

---

1 குறள். 318. 2 ஐங்குறு. 347. 3 சிற்றெட்டகம்; யா. வி. 73 உரைமேற்.
4 திருப்பாமாலை,

'செல்வப்போர்க் கதக்கண்ணன் செயிர்த்தெறிந்த சினவாழி
முல்லைத்தார் மறமன்னர் முடித்தலையை முருக்கிப்போய்
எல்லைநீர் வியன்கொண்மூ இடைநுழையும் மதியம்போல்
மல்லலோங் கெழில்யானை மருமம்பாய்ந் தொளித்ததே.' 1

எனவும்,

'திருந்திலையி னிலங்குவேற் றிகழ்தண்டார்க் கதக்கண்ணன்
விரிந்திலங்கு வெண்குடைக்கீழ் வேந்தட்ட வியன்களத்து
முரிந்திரைஞ்சி முத்துரைக்கு முடியெல்லாம் தத்துந்தம்
அருந்திறன்மா மறமன்னர்க் கழுவனவே போன்றனவே.' 2

எனவும் நான்கடியாற் கலிப்பாவிற்குச் சிறுமை வந்தவாறு.

'இச்சூத்திரத்துள் 'வெண்பா, ஆசிரியம், கலி, வஞ்சி' என்று முறையிற் கூறுது, 'வெண்பா ஆசிரியம் வஞ்சி' என்று தலைதடுமாற்றம் தந்து புணர்ந் துரைத்தல் வேண்டியது என்னை?' எனின், 'பெருமைக்கெல்லை, பாடுவோனது பொருள் முடியும் குறிப்பே; வரையறை இல்லை,' என்பாரும்; அடி வரை யறுத்துச் சொல்லுவாரும் என இரு திறத்தார் ஆசிரியர் எனும் நூல் நயம் அறியாதார் ஆயுங்கால், வேறுபாடு இல்லை என்பது அறிவித்தற்கு ஒரு தோற்றம் உணர்த்தியது. 'யாதோ வேறுபாடு இல்லாதவாறு?' எனின், 'பெருமைக்கு எல்லை, பாடுவானது பொருள் முடிவு குறிப்பே; வரையறை இல்லை,' என்பார், 'விளங்கக் கூறல்' என்னும் நூல் மாண்பு கடைப்பிடித்து மயங்காமை கூறினர். அடி வரையறுத்து ஓதினர், 'சிறப்புடைப் பொருளை எடுத்துக் கூறல்' என்னும் தந்திர உத்தி பற்றிச் சிறப்புடைமையால் எடுத்தோதி, மிக்கனவும் உடன்பட்டமை உய்த்துணர வைத்தார்;

'மிக்கடி வருவது செய்யுட் குரித்தே.' 3

என்ப ஆகலானும், 'வாயுறை வாழ்த்து முதலா உடைய வரைவில' என்றார் ஆகலானும் எனக் கொள்க.

அவர் கூறுமாறு:

'படைப்போர் * குறிப்பினை நீக்கிப் † பெருமை
வரைத்தித் துணையென வைத்துரை இல்லென்
றுரைத்தனர் மாதோ உணர்ந்திசிசி னோரே.'

என்றார் காக்கைபாடினியார்.

'ஒன்றும் இரண்டும் மூன்றும் நான்கும்
என்றிம் முறையே பாவின் சிறுமை;
தத்தங் குறிப்பின ‡ தொடையின் பெருமை.'

என்றார் அவிநயனார்.

'ஆசிரியப் பாவின் சிறுமைக் கெல்லை
மூவடி யாகும்; பெருமை ஆயிரம்;
ஈரடி முதலா ஒன்று தலைச்சிறந்
தேழடி காறும் வெண்பாட் டுரிய;

1 சூளா. (தக்கயாகப். பக். 259). 2 இது சூளாமணிச் செய்யுள்போலும். 3 சங்கயாப்பு.
பி-ம், * உ.ளாயோர். † அன்றி. ‡ தங்குறிப் பினவே,

வாயுறை வாழ்த்தே செவியறி வுறூஉவே
கைக்கிளை அங்கதம் கலியியற் பாட்டே *
தத்தம் குறிப்பின அளவென மொழிப.'

என்றார் நற்றத்தனார்.

'ஆசிரியப் பாவின் அளவிற் கெல்லை
ஆயிர மாகும்; இழிபுமூன் றடியே.' 1

'ஆசிரிய நடைத்தே வஞ்சி என்ப.' 2

'நெடுவெண் பாட்டே முந்நான் கடித்தே;
குறுவெண் பாட்டுக் களவெழு சீரே.' 3

'அங்கதப் பாட்டவற் றளவோ டொக்கும்.' 4

'கலிவெண் பாட்டே கைக்கிளைச் செய்யுள்
செவியறி வாயுறை புறநிலை எனவிவை
தொகைநிலை வகையான் அளவில என்ன.' 5

'முடிபொருள் அல்லா தடியள விலவே.' †

என்றார் தொல்காப்பியனார்.

'ஏழடி இறுதி ஈரடி முதலா
ஏறிய வெள்ளைக் கியைந்த அடியே.'

'மிக்கடி வருவது செய்யுட் குரித்தே.'

'மூவடிச் சிறுமை; பெருமை ஆயிரம்
ஆகும் ஆசிரி யத்தின் அளவே.'

என்றார் சங்கயாப்பு உடையார்.

'ஆயிரம் இறுதி மூவடி இழிபா
ஆசிரியப் பாட்டின தடித்தொகை அறிப.'

'ஈரடி முதலா ஏழடி காறும்
தீர்பில வெள்ளைக் கடித்தொகை தானே.'

என்றார் பல்காயனார்.

'ஐயிரு நூறடி ஆசிரியம்; வஞ்சிச்
செய்யுள் நடப்பினும் சிறப்பென மொழிப.'

'பேணுபொருள் முடிபே பெருமைக் கெல்லை
காணுங் காலைக் கலியலங் கடையே.'

'கலியுறுப் பெல்லாங் கட்டளை உடைமையின்
நெறியின் முறைவழி ‡ நிறுத்தல் வேண்டும்.'

'கொச்சகக் கலிவயிற் குறித்தபொருள் முடிவாம்
தாழிசை பலவாய் முடிவு முடிவுழி.' §

என்றார் பிறை நெடுமுடிக் கறைமிடற் றரனார் பெயர் மகிழ்ந்த பேராசிரியர். 6

---

1–5. தொல். * பொ. செய். 157, 107, 158–160, 6. மயேச்சுரர்

§ கைக்கிளை மயக்கம் கலிவெண் பாட்டே

பி–ம். † இச்சூத்திரம் தொல்காப்பியம் அச்சுப்பிரதியிற் காணப்படவில்லை.
‡ மொழிவழி. § தாழிசை பலவுந் தழுவுதல் முடிபே.

'வஞ்சி ஆசிரியம் என்றிரு பாட்டும்
எஞ்சா மூவடி இழிபுயர் பாயிரம்.'

என்றாரும் உளரெனக் கொள்க.

'அவற்றுள்,
ஆசிரியம் என்ப தகவலின் வழாது
கூறிய சீரொடும் தளையொடும் தழீஇ
முச்சீர் அடியாய் ஈற்றயல் நின்றும்
முச்சீர் அடியிடை ஒரோவழித் தோன்றியும்
அவ்வியல் பின்றி மண்டில மாகியும்
மூவடி முதலா முறைசிறந் தேறித்
தொள்ளா யிரத்துத் தொண்ணூற் றெண்ணிரண்
டெய்தும் என்ப இயல்புணர்ந் தோரே.'

'வஞ்சி தானே அடிவரம் பின்றி
எஞ்சா இசைநிலை தூங்கல் எய்தி
ஆசிரிய மாகி முடியும் என்ப.'

'செப்பல் ஓசையிற் சீர்தளை சிதையாது
மெய்ப்படக் கிளந்த வெண்பா விரிப்பிற்
குறள்நேர் நெடிலென மூன்றாய் அவற்றின்
இறுதி அடியே முச்சீர்த் தாகி
அதனீற் றசைச்சீர் எய்தி அடிவகை
ஓரிரண்டு முதலா முறைசிறந் தீரா
றேறும் என்ப இயல்புணர்ந் தோரே.'

என்றார் பரிமாணனார்.

[கட்டளைக் கலித்துறை.]

'வெள்ளைக் கிரண்டடி வஞ்சிக்கு மூன்றடி மூன்றகவற்
கெள்ளப் படாக்கலிக் கீரிரண் டாகும் இழிபுரைப்போர்
உள்ளக் கருத்தின் அளவே பெருமையொண் போதலைத்த
கள்ளக் கருநெடுங் கட்சுரி மென்குழற் காரிகையே!' 1

'அறத்தா றிதுவென வெள்ளைக் கிழிபக வற்கிழிபு
குறித்தாங் குறைப்பின் முதுக்குறைந் தாம்; குறையாக்கலியின்
திறத்தா றிதுசெல்வப் போர்ச்செங்கண் மேதிவஞ் சிச்சிறுமை
புறத்தாழ் கருமென் குழற்றிரு வேயன்ன பூங்கொடியே!' 2

என்னும் யாப்பருங்கலப் புறநடைகளைப் பதம் நெகிழ்த்து உரைத்துக்கொள்க.

'எழுத்தினால் ஆகும் அசை; அசையாற் சீராம்;
இழுக்கிகந்த சீராற் றளையென்—றெழுக்கினார்
சீரால் அடி; அடியாற் செய்யுளாம் என்றிடையிட்
டோராதே ஓதுவதோ ஓத்து?'

இது கடா.

---

1, 2. யா. கா. 14, 15.

'ஒருதளை ஆதியா ஓரேழின் காறும்
வருவது மன்னும் அடியென்—றுரையா
திருசீர் முதலாக எண்சீர்கா றென்ற
அருமுனிவர்க் காய்த்தோ அலர்.'

இது விடை.

'ஒருதொடை ஈரடியென் றோதிய துள்ளிட்
டிருதிறமாச் சொல்லிய தெல்லாம்—இருதிறமும்
நல்லா சிரியர் நயமென்றற் கந்நயத்தால்
எல்லாரும் தீர்வர் இழுக்கு.'

'எண்ணெழுத்திற் றிண்ணியராய் எஃகு செவியராய்
நுண்ணுணர்விற் சேர்ந்த நுழைவினராய்—மண்மேல்
நடையறிந்து கட்டுரைக்கும் நாவினோர்க் கல்லால்
அடியறியும் தன்மை அரிது.'

'தடுத்த தளையொன்றும் தாம்பலவும் கூடி
அடுத்து நடப்பின் அடியாம்—வடுத்தீர்ந்த
பாத வடமொழியைப் * பைதீர் தமிழ்ப்புலமை †
நாதரடி என்றார் நமக்கு.' ‡

என இவற்றை விரித்து உரைத்துக்கொள்க.

அடி ஓத்து முடிந்தது.

பி–ம். * வடிமொழியைப் † தமிழ்ப் புலவர் ‡ நன்கு

## ௬. தொடை ஓத்து

33] **தொடை தோன்றுமாறு.** [௧

தொடையே அடியிரண் டியையத் தோன்றும்.

என்பது சூத்திரம். 'இவ்வோத்து என்ன பெயர்த்தோ?' எனின், அடியினுல் தொடை ஆமாறு உணர்த்திற்று ஆகலான், 'தொடை ஓத்து' என்னும் பெயர்த்து.

'இச்சூத்திரம் என் நுதலிற்றோ?' எனின், பொது வகையால் தொடை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

**இதன் பொழிப்பு**: தொடை என்று சொல்லப்படுவது, அடி இரண்டு இயைந்தவழிப் பெறப்படும் (என்றவாறு).

'தொடையே' என்பதில் ஏகாரம் பிரிநிலை. 'எற்றிற்பிரிக்கப்பட்டதோ?' எனின்,

'எழுத்தசை சீர்தளை அடிதொடை தூக்கோ
இழுக்கா நடைய தியாப்பெனப் படுமே.' 1

என்பதனிற் பிரிக்கப்பட்டது.

பிறரும் இவ்வாறு சொன்னுர். என்னை?

'தொடையெனப் படுவ தடைவகை தெரியின்,
எழுத்தொடு சொற்பொருள் என்றிவை மூன்றில்
திரல்பட* வந்த நெறிமைய தாகி
அடியோ டடியிடை யாப்புற நிற்கும்
முடிவின தென்ப முழுதுணர்ந் தோரே.'

என்றுர் **காக்கைபாடினியார்.**

'அடுத்த அடியிரண் டியாவகைப் பாவினும்
தொடுத்து வழங்கலின் † தொடையெனப் படுமே.'

என்றுர் வாம மேகலை மாதையோர் பாகனுர் நாமம் மகிழ்ந்த நல்லாசிரியர்.

தொடைக்கு உதாரணம் போக்கிச் சொல்லுதும்.

34] **தொடையின் வகை.** [௨

மோனை எதுகை முரணியை பளபெடை
பாதம் இணையே பொழிப்போ டொரூஉத்தொடை
கூழை கதுவாய் மிசையதூஉம் கீழதூஉம்
சீரிய முற்றெடு சிவணுமார் அவையே.

'இஃது என் நுதலிற்றோ?' எனின், ஒருசார்த் தொடைகளது பெயரும், அவற்றின் விகற்பமும் உணர்த்துதல் நுதலிற்று.

---

1. யா. வி. 1

பி-ம். * இயற்பட † தொடுத்தனர் வழங்கலின்

இதன் பொழிப்பு : மோனை, எதுகை, முரண், இயைபு, அளபெடை என்றிவை ஐந்தும், அடி, இணை, பொழிப்பு, ஒரூஉ, கூழை, மேற்கதுவாய், கீழ்க்கதுவாய், முற்று என இவற்றொடு பொருந்தி, அவை ஓரோவொன்று எட்டுப் பாகுபாட்டைச் சொல்லும் (என்றவாறு).

'பாதம்' என்பது, 'அடி' என்றவாறு. 'இணையே' என்றவழி ஏகாரம் எண்ணேகாரம். 'கதுவாய் மிசையதூஉம் கீழதூஉம்' என்பது, 'மேற்கது வாய், கீழ்க்கதுவாய்' என்றவாறு. 'சிவணுதல்' என்பது, 'பொருந்துதல்' என்றவாறு. என்னை ?

'மெய்யின் இயக்கம் அகரமொடு சிவணும்.' 1

என்றாற்போலக் கொள்க. 'மார்' என்பது இடைச்சொல். 'அவை' என்பது சுட்டுச்சொல். 'அவையே' என்பதில் ஏகாரம் ஈற்றசை; தேற்றேகாரம் எனினும் அமையும்.

இனி, அவை கூட்டி வழங்குமாறு :

அடி மோனை, இணை மோனை, பொழிப்பு மோனை, ஒரூஉ மோனை, கூழை மோனை, மேற்கதுவாய் மோனை, கீழ்க்கதுவாய் மோனை, முற்று மோனை—என மோனையோடு கூட்டி வழங்கினவாறு.

அடி எதுகை, இணை எதுகை, பொழிப்பு எதுகை, ஒரூஉ எதுகை, கூழை எதுகை, மேற்கதுவாய் எதுகை, கீழ்க்கதுவாய் எதுகை, முற்று எதுகை— என எதுகையோடு கூட்டி வழங்கினவாறு.

அடி முரண், இணை முரண், பொழிப்பு முரண், ஒரூஉ முரண், கூழை முரண், மேற்கதுவாய் முரண், கீழ்க்கதுவாய் முரண், முற்று முரண்—என முரணோடு கூட்டி வழங்கினவாறு.

அடி இயைபு, இணை இயைபு, பொழிப்பு இயைபு, ஒரூஉ இயைபு, கூழை இயைபு, மேற்கதுவாய் இயைபு, கீழ்க்கதுவாய் இயைபு, முற்று இயைபு—என இயைபினோடு கூட்டி வழங்கினவாறு.

அடி அளபெடை, இணை அளபெடை, பொழிப்பு அளபெடை, ஒரூஉ, அளபெடை, கூழை அளபெடை, மேற்கதுவாய் அளபெடை, கீழ்க்கதுவாய் அளபெடை, முற்று அளபெடை—என அளபெடையோடு கூட்டி வழங்கினவாறு.

இவை ஓரோவொன்று எட்டெட்டுப் பாகுபாட்டைச் சொன்னவாறு கண்டு கொள்க.

'சீரிய' என்று மிகுத்துச் சொல்லிய அதனால், இயைபுத்தொடையை இவ்வாறு வழங்குகின்றுழி இறுவாய் 2 முதலாகக்கொண்டு வழங்கப்படும் எனக் கொள்க, அஃது ஈறுபற்றி அறியும் தன்மைத்து ஆகலின்.

இயைபுத்தொடைக்கு இவ்வாறு எட்டு வகையும் சொன்னார் கையனாரும் தொல்காப்பியரும் முதலாகிய ஒருசார் ஆசிரியர். ஈண்டு அவர் மதம் பற்றிச் சொல்லப்பட்டது, இது சார்பு நூல் ஆகலின். இவற்றிற்குச் செய்யுள், போக்கித் தத்தம் இலக்கணச் சூத்திரத்துள்ளே காட்டுதும்.

[கலி விருத்தம்]

'எழுத்தியற் றொடைகளின் இடைக்கண் மாறுகோள்
மொழிப்பொருட் டொடைமுறை பிறழ வைத்ததோர்
இழுக்கியல் பிலாநிரல் நிரையும் எட்டென
ஒழுக்கினர் உண்மையை உணர்த்தல் வேண்டியே.'

இதனை விரித்து உரைத்துக்கொள்க.

---

1 தொல். எழுத். 46 2 முடிவிடம்.

அவை ஆமாறு போக்கி, 'நிரனிறை முதலிய' 1 என்னும் சூத்திரத்துள்ளே காட்டுதும்.

35] **அடி மோனைத் தொடை** [௬

ஆதி எழுத்தே அடிதொறும் வரினடி
மோனைத் தொடையென மொழிமனர் புலவர்.

'என்பது என் நுதலிற்றோ?' எனின், நிறுத்த முறையானே **அடிமோனைத் தொடை** ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

**இதன் பொழிப்பு:** முதலடி முதற்கண் வந்த எழுத்தே எல்லா அடி முதற்கண்ணும் வரின், அதனை **'அடிமோனைத் தொடை'** என்று வழங்குவர் புலவர் (என்றவாறு).

'ஆதியெழுத்தே' என்றவழி ஏகார விதப்பினால், 'ஆதிச்சொல் அடிதோறும் ஒன்றி வரத் தொடுப்பது சிறப்புடைத்து,' எனக் கொள்க. "ஆதியெழுத்தே அடிதொறும் ஆதிக்கண் வரின்' எனச் சிறப்பியாது, பொது வகையாற் கூறிற்றாகலின், முதலடி முதற்கண் வந்த எழுத்து அடிதோறும் இறுதிக்கண் வரினும், இடைக்கண் வரினும், முதற்கண் வரினும் அடி மோனைத் தொடையாம் பிற,' எனின், அற்றன்று; சூத்திரத்துள் 'ஆதியெழுத்து' என்று சொல்லப்பட்டது ஆகலின், அதனோடு சார்த்தி, 'ஆதி எழுத்தே அடிதோறும் ஆதிக்கண் வரின்' என்று இவ்வாறே கொள்ளப்படும். என்னை?

வேறுபடு வினையினும் இனத்தினும் சார்பினும்
தேறத் தோன்றும் பொருள்தெரி நிலையே.'

எனவும்,

'வேற்றுமை இன்றியும் இடமுத லாவறிந்
தேற்பன பொதுவின் இசைப்பினும் இழுக்கா.'

எனவும்,

கேட்டமொழி ஒழித்துக் கேளாக் கிளவியொடு
கூட்டியுரை கொளுத்தல் கோட்பா டன்றே.'

எனவும்,

'அடிமுதல் ஓரெழுத் தடிமுதற் றொடையே.'

எனவும் சொன்னார் பிறரும் ஆகலின்.

'அளபெடை ஒன்றுவ தளபெடைத் தொடையே,' என்பதன்காறும் 'அடி தொறும்' என்பதும் 'முதல்' என்பதும் அதிகாரம் செலுத்தி உரைக்க.

வரலாறு:

[நேரிசை ஆசிரியப்பா]

'மாவும் புள்ளும் வதிவயிற் படர
மாநீர் விரிந்த பூவும் கூம்ப
மாலை தொடுத்த கோதையும் கமழ
மாலை வந்த வாடை
மாயோன் இன்னுயிர் † புறத்திறுத் தற்றே.' 2

---

பி-ம். * வதுவையிற் † இன்னுயிர்ப் 1 யா. வி. 95 2 யா. வி. 37. உரைமேற்.

இஃது அடிதோறும் முதலெழுத்து ஒன்றி வரத் தொடுத்தமையான், **அடி மோனை.** சீர்தோறும் வந்த எழுத்தே முறையான் வந்தால் தொடை விகற்பமாம். வரலாறு :

[நேரிசை ஆசிரியப்பா]

‘அணிமலர் அசோகின் தளிர்நலம் கவற்றி [இணை]
அரிற்குரற் கிண்கிணி அரற்றும் சீரடி [பொழிப்பு]
அம்பொற் கொடிஞ்சி நெடுந்தேர் அகற்றி [ஒரூஉ]
அகன்ற அல்குல் அம்நுண் மருங்குல் [கூழை]
அரும்பிய கொங்கை அவ்வளை அமைத்தோள் [மேற்கதுவாய்]
அவிர்மதி அனைய திருநுதல் அரிவை [கீழ்க்கதுவாய்]
அயில்வேல் அனுக்கி அம்பலைத் தமர்த்த* [முற்று]
கருங்கயல் நெடுங்கண் நோக்கமென்
திருந்திய சிந்தையைத் திறைகொண் டனவே!’

இதனுள் இணை மோனை முதலாகிய ஏழு விகற்பமும் முறையானே வந்தவாறு கண்டு கொள்க.

36] **அடியெதுகைத் தொடை** [ச

இரண்டாம் எழுத்தொன் றியைவதே எதுகை.

‘இஃது என் நுதலிற்றோ?’ எனின், அடி எதுகை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொழிப்பு : அடிதோறும் இரண்டாம் எழுத்து ஒன்றி வரத் தொடுப்பது **‘அடியெதுகை’** எனப்படும் (என்றவாறு).

‘இரண்டாவது இயைவது எதுகை.’ என்றாலும், ‘இரண்டாம் எழுத்து’ என்பது பெறலாம், அதிகார வசத்தானும், பிறரும்,

‘முதலெழுத் தொன்றி முடிவது மோனை;
ஏனைய தொன்றின் எதுகைத் தொடையே.’

என்றார் ஆகலானும்; பெயர்த்தும் ‘எழுத்து’ என்று சொல்லவேண்டியது என்னை?’ எனின், ‘அடிக்கு எழுத்து எண்ணுமாறே போலாது,† தொடைக்கு எல்லா எழுத்தும் கொள்ளப்படும்,’ என்பது அறிவித்தற்குச் சொல்லப் பட்டது.

[நேரிசை வெண்பா]

‘எழுத்தென் றதிகாரம் ஈண்டியலா நிற்ப
எழுத்தென்று மீண்டும் இயம்பிற்—றிழுக்காமை
எல்லா எழுத்தும் தொடைக்காம்; அடிக்கெழுத்
தல்லா தனவுமென் றற்கு.’

‘குற்றிகரம் குற்றுகரம் என்றிரண்டும் ஆய்தமும்
ஒற்றும் எனவொரு நான்கொழித்துக்—கற்றோர்
உயிரும் உயிர்மெய்யும் ஓதினர் எண்ணச்
செயிரகன்ற செய்யுள் அடிக்கு.’

இவற்றை விரித்து உரைத்துக் கொள்க.

---

* அமர்ந்த. † அடிக்கு எழுத்து எண்ணுங்கால் ஒற்றெழுத்துக்களை நீக்கி, உயிர் எழுத்துக்களும் உயிர்மெய்யெழுத்துக்களுமே எண்ணிக்கொள்ளப்படும்; தொடையில் அவ்வாறன்றி, எல்லா எழுத்துக்களும் எண்ணப்படும் என்பதாம் [யா. வி. 25, உரை நோக்குக].

'இரண்டாம் எழுத்து ஒன்றி வரினும், முதலெழுத் தெல்லாம் தம்முள் ஒத்த அளவினவாய் வந்து, 'பட்டு' என்பதற்குக் 'கட்டு' என்பதல்லது, 'காட்டு' என்பது எதுகை ஆகாது; 'காட்டு' என்பதற்குப் 'பாட்டு' என்ப தல்லது, 'பட்டு' என்பது எதுகை ஆகாது; 'அரம்' என்பதற்குப் 'பரம்' என்பதல்லது, 'பாரம்' என்பது எதுகை ஆகாது; 'பாரம்' என்பதற்குக் 'காரம்' என்பதல்லது, 'கரம்' என்பது எதுகை ஆகாது,' என்பது அறிவித் தற்கு 'இயைவதே' என்றார்.

'முதலெழுத் தளவொத் தயலெழுத் தொன்றுவ
தெதுகை அதன்வழி இயையவும் பெறுமே.'

எனவும்,

'முதலெழுத் தொன்றுவ மோனை; எதுகை
முதலெழுத் தளவோ டொத்தது முதலா
அதுவொழித் தொன்றின் ஆகும் என்ப.'

எனவும் சொன்னார் பல்காயனார் எனக் கொள்க.

"இரண்டாம் எழுத்து இயைவதே எதுகை,' என்னாது, 'ஒன்று' என்று மிகுத்துச் சொல்ல வேண்டியது என்னை?" எனின், 'ஒருசார் ஆசிரியர், இரண் டாம் எழுத்தின்மேல் ஏறிய உயிர் ஒன்றி வந்தாலும், மூன்றும் எழுத்து ஒன்றி வந்தாலும் எதுகைப்பாற்படுத்து வழங்குவர்,' என்பது அறிவித்தற்கு வேண் டப்பட்டது.

வரலாறு:

[நேரிசை ஆசிரியப்பா]

'துளியொடு மயங்கிய தூங்கிருள் நடுநாள்
அணிகிளர் தாரோய்! அருஞ்சுரம் நீந்தி
வடியமை எஃகம் வலவயின் ஏந்தித்
தனியே வருதி நீயெனின்,
மையிருங் கூந்தல் உய்தலோ அரிதே!'

இஃது இரண்டாம் எழுத்தின்மேல் ஏறிய உயிர் ஒன்றிய எதுகை. இது செய்யுளியல் உடையார் காட்டும் பாட்டு.

[குறள் வெண்பா]

'பவழமும் பொன்னும் குவைஇ* முத்தின்
திகழரும் பீன்றபுன்†னை.'

'பொய்மையும் வாய்மை இடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கும் எனின்.' 1

இவை மூன்றும் எழுத்து ஒன்றிய எதுகை.

[இன்னிசை வெண்பா]

'ஊசி யறுகை யுறுமுத்தம் கோப்பனபோல்
மாசி யுகுபனிநீர் வந்துறைப்ப—மூசும்
முலைக்கோடு புல்லுதற்கொன் றில்லாதான் காண்மோ
விறக்கோடு கொண்டெறிக்கின் றேன்.'

இந் நக்கீரர் வாக்கினுள் கடை யிரண்டையும் மூன்றும் எழுத்து ஒன்றி வந்த வாறு கண்டு கொள்க.

---

1 குறள். 292.

பி-ம். * குவைஇய. † ஈன்றதுபுன்.

[நேரிசை வெண்பா]

'அவிழ்ந்த துணியசைக்கும்* அம்பலமும் சிக்கும்
மகிழ்ந்திடுவார் முன்னர் மலரும்—கவிழ்ந்து
நிழறுழா யானை நெடுமான்றேர்க் கிள்ளி
கழறெழா மன்னவர்தங் கை.' 1

இப்பொய்கை‡ வாக்கினுள்ளும் மூன்றும் எழுத்து ஒன்றி வந்தவாறு கண்டு கொள்க. இதனை இரண்டாம் எழுத்தின்மேல் ஏறிய உயிர் ஒன்றினமையால், **உயிர் எதுகை** என்பாரும் உளர்.

[இன்னிசை வெண்பா]

'மனைக்குப்பாழ் வாணுதல் இன்மை; தான் செல்லும்
திசைக்குப்பாழ் நட்டோரை இன்மை; இருந்த
அவைக்குப்பாழ் மூத்தோரை இன்மை: தனக்குப்பாழ்
கற்றறி வில்லா உடம்பு. 2

இதுவும் அதுபோலக் கொள்க.

இனி, எட்டுத் திறத்தானும் எதுகை வருமாறு:

[இன்னிசை வெண்பா]

'வடியோர்கண் ணீர்மல்க வான்பொருட்கட் சென்றார்
கடியார் கனங்குழாய்! காணார்கொல் காட்டில்
இடியின் முழக்கஞ்சி ஈர்ங்கவுள் வேழம்
பிடியின் புறத்தசைத்த கை?'

எனவும்,

[குறள் வெண்பா]

'அன்பிற்கும் உண்டோ அடைக்குந்தாழ்? ஆர்வலர்
புன்கணீர் பூசல் தரும்.' 3

எனவும்,

[குறள் வெண்பா]

'அஃகி அகன்ற அறிவென்னும் யார்மாட்டும்
வெஃகி வெறிய செயின்?'4

எனவும்,

[குறள் வெண்பா]

'போதுசேர் கோதாய்! பொருப்பன் தரக்குறித்தான்
தாதுசேர் மார்பின் தழை.'

எனவும்,

---

1 தண்டி. 21 மேற். 2 நான்மணி. 22 யா. வி. 57 உரைமேற். 3 குறள். 71. 4 குறள் 175.

பி–ம். ‡ பொய்கையார்; துணியியைக்கும்.

[குறள் வெண்பா]

'ஆறியாய் முன்புக்* கழுந்து வதுதவிர்த்தான்
கூறியாய் சொல்லுமோ என்று.' †

எனவும் இரண்டாம் எழுத்து ஒன்றி வந்தமையால், **அடியெதுகை.**

[நேரிசை ஆசிரியப்பா]

'பொன்னின் அன்ன பொறிசுணங் கேந்திப் [இணை]
பன்மலர்க் கோங்கின் நன்னலம் கவற்றி [பொழிப்பு]
மின்னவிர் ஒளிவடம் தாங்கி மன்னிய [ஒரூஉ]
நன்னிற மென்முலை மின்னிடை வருத்தி [கூழை]
என்னையும் இடுக்கட் டுன்னுவித் தின்னடை [மேற்கதுவாய்]
அன்ன மென்பெடை போலப் பன்மலர்க் [கீழ்க்கதுவாய்]
கன்னியம் புன்னை இன்னிழற் றுன்னிய [முற்று]
மயிலேர் சாயலவ் வாணுதல்
அயில்வேல் உண்கணெம் அறிவுதொலைத் தனவே.'

இதனுள் இணையெதுகை முதலாகிய ஏழு விகற்பமும் முறையானே வந்தவாறு கண்டு கொள்க.

37] **வருக்கம், நெடில், இனம் ஆகிய மோனை எதுகைகள்** [ரு

வருக்க நெடில்இனம் வரையார் ஆண்டே.

'இஃது என் நுதலிற்றோ?' எனின், மோனைக்கும் எதுகைக்கும் எய்தியதோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

**இதன் பொழிப்பு:** வருக்கமும் நெடிலும் இனமும் வந்தாலும் நீக்கப்படா; மோனையும் எதுகையும் ஆம் (என்றவாறு).

அவற்றை **வருக்க மோனை, வருக்க எதுகை; நெடில் மோனை, நெடில் எதுகை; இன மோனை, இன எதுகை** என்று வழங்குப.

அவற்றிற்குச் செய்யுள் வருமாறு:

[நேரிசை ஆசிரியப்பா]

'பகலே, பலபூங் கானல் கிள்ளை ஓப்பியும்
பாசிலைக் குளவியொடு கூதளம் விரைஇப்
பின்னுப்பிணி அவிழ்ந்த நன்னெடுங் கூந்தல்
பீர்ங்கப் பெய்து தேம்படத் திருத்திப் ‡
புனையிர் ஓதி செய்குறி நசைஇப்
பூந்தார் மார்ப! புனத்துட் டோன்றிப்
பெருவரை அடுக்கத் தொருவேல் ஏந்திப்
பேயும் அறியா மாவழங்கு பெருங்காட்டுப்
பைங்கண் உழுவைப் படுபகை வெரீஇப்
பொருதுசினம் தணிந்த § பூநுதல் ஒருத்தல்
போகாது வழங்கும் ஆரிருள் நடுநாள்
பௌவத் தன்ன பாயிருள் நீந்தியிப்
பொழுது வருகுவை யாயின்
நற்றூர் மார்ப! தீண்டலெம் கதுப்பே.'

---

பி-ம். * ஆறியா முள்புக். † இன்று. ‡ திருகிப். § பொங்குசினம் தணியாப்.

**இது பகரமெய் வருக்க மோனை.** இவ்வகை வருவன முதலெழுத்து ஒன்றா விடினும், தமது வருக்க ஒப்புமை நோக்கி மோனைப்பாற்படுத்து, வருக்க **மோனை** என்று வழங்கப்படும் என்றவாறு.

[இன்னிசை வெண்பா]

'நீடிணர்க் கொம்பர்க் குயிலாலத் தாதூதிப்
பாடுவண் டஞ்சி அகலும் பருவத்துத்
தோடார் தொடிநெகிழ்த்தார் உள்ளார் படரொல்லா
பாடமை சேக்கையுட் கண்.'

**இது டகரமெய் வருக்க எதுகை.** இவ்வாற்றால் வருவன இரண்டாம் எழுத்து ஒன்றி வாராவிடினும், இரண்டாம் எழுத்தின் வருக்க ஒப்புமை நோக்கி எதுகைப்பாற்படுத்து, **வருக்க எதுகை** என்று வழங்கப்படும்.

**நெடில் மோனை** வருமாறு :

[குறட்செந்துறை.]

'ஆர்கலி உலகத்து மக்கட் கெல்லாம்
ஓதலிற் சிறந்தன் றொழுக்கம் உடைமை.' 1

இது முதலெழுத்து ஒன்றாமையின், மோனையும் அன்று; இரண்டாம் எழுத்து ஒன்றுதலும், இரண்டாம் எழுத்தின்மேல் ஏறிய உயிர் ஒன்றுதலும், மூன்றாம் எழுத்து ஒன்றுதலும் இன்மையால் எதுகையும் அன்று; சொல்லும் பொருளும் பகைத்து வாராமையின், முரணும் அன்று; இறுவாய் ஒத்து வாராமையின், இயைபும் அன்று; அளபெடுத்து ஒன்றி வாராமையின், அளபெடையும் அன்று; ஒவ்வாமைத் தொடுத்ததின்மையால், செந்தொடையும் அன்று; அடி முழுதும் ஒரு சொல்லே வரத் தொடுத்ததின்மையான், இரட்டைதொடையும் அன்று; ஈறு முதலாகத் தொடுத்ததின்மையின், அந்தாதித்தொடையும் அன்று. இதனை நெட்டெழுத்து என்னும் மாத்திரையே ஒப்புமை நோக்கி, இயைந்து இனிதாய்க் கிடத்தலான், நெடில் மோனை என்று வழங்குப.*

இனி, **நெடில் எதுகை** வருமாறு :

[வெளி விருத்தம்.]

'ஆவா வென்றே அஞ்சினர் ஆழ்ந்தார் †—ஒருசாரார்;
கூகூ வென்றே கூவிளி கொண்டார்—ஒருசாரார்;
மாமா வென்றே மாய்ந்தனர் நீந்தா—ஒருசாரார்;
ஏகீர் நாய்கீர்! என்செய்தும் என்றார்—ஒருசாரார்.'

இன்னவெல்லாம் இரண்டாம் எழுத்து ஒன்றாவாயினும், இரண்டாம் எழுத்தின் நெடில் ஒப்புமை நோக்கி, இயைந்து இனியவாய்க் கிடைத்தலின், நெடில் எதுகைப்பாற்படுத்து, **நெடில் எதுகை** என்று வழங்கப்படும்.

இன மோனை மூன்று வகைப்படும்: **வல்லின மோனையும், மெல்லின மோனை யும், இடையின மோனையும்** என.

அவற்றுள் **வல்லின மோனை** வருமாறு :

[நேரிசை ஆசிரியப்பா.]

'கயலேர் உண்கண் கலுழ நாளும்
சுடர்புரை திருநுதல் பசலை பாயத்
திருந்திழை அமைத்தோள் அரும்படர் உழப்பப்
போகல் வாழி ஐய! பூத்த

1. முதுமொழிக். 1—1; யா. வி. 63 மேற்.
பி—ம். * வழங்கப்படும். † ஆழ்.

கொழுங்கொடி அணிமலர் தயங்கப்
பெருந்தண் வாடை வரூஉம் பொழுதே.'

இஃது எல்லா அடியும் முதற்கண்ணே வல்லினமே வந்தமையால், **வல்லின மோனை** என்று கையனர் காட்டிய பாட்டு. பிறவும் அன்ன.

மெல்லின மோனையும் இடையின மோனையும் வந்துழிக்* கண்டுகொள்க.

இன எதுகை மூன்று வகைப்படும்: வல்லின எதுகையும், மெல்லின எதுகையும், இடையின எதுகையும் என.

அவற்றிற்குச் செய்யுள் வருமாறு:

[குறள் வெண்பா.]

'தக்கார் தகவிலர் என்பத தவரவர்
எச்சத்தாற் காணப் படும்.' 1

இஃது இரண்டாம் எழுத்து வல்லினம் வந்தமையால், **வல்லின எதுகை.**

[குறள் வெண்பா.]

'அன்பீனும் ஆர்வம் உடைமை; அதுவீனும்
நண்பீனும் நாடாச் சிறப்பு.' 2

இது **மெல்லின எதுகை.**

[குறள் வெண்பா.]

'எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு.' 3

இஃது **இடையின எதுகை.** பிறவும் அன்ன.

'வருக்க நெடிலினம் வரையார்,' என்றாலும், அதிகார வசத்தால் **'அவை'** என்பது பெறலாம்; பிறரும்,

'அடிதொறு முதலெழுத் தடைவதை முதற்றொடை;
இடையதன் முன்னொன் றியைவதை எதுகை;
நெடிய பிறவும் இனத்தினும் ஆகும்.'

என்றார் ஆகலானும். பெயர்த்தும் **'ஆண்டு'** என்று மிகுத்துச் சுட்டிக் கூறல் வேண்டியது என்னை?'

எதுகைத் தொடையிற் சீர் முழுதும் வருவது **தலையாகு எதுகை;** ஓரெழுத்தே வரத் தொடுப்பது **இடையாகு எதுகை;** இனத்தானும் மாத்திரையானும் பிறவாற்றானும் வரத் தொடுப்பது **கடையாகு எதுகை** என்றும், 'முன் இரண்டடியும் ஓர் எதுகைத்தொடையாய் வந்து, பின் இரண்டடியும் மற்றொரு திறத்தான் வரினும் குற்றம் இல்லை; அஃது **இரண்டடி எதுகை,'** என்பார் ஒருசார் ஆசிரியர் என்றற்கும், ஒருசார் ஆசிரியர் எதுகைத் தொடையுள் **ய, ர, ல, ழ** என்னும் நான்கு ஒற்றும் வந்து மிகத் தொடுத்தால், அதனை **'ஆசிடை எதுகை'** என்று வேண்டுவர் என்பது அறிவித்தற்கும் வேண்டப் பட்டது.

---

1 குறள். 114 2 குறள். 74. 3 குறள். 299.

* சங்கவரப்பிற்.

அவர் கூறுமாறு :

'சீர்முழு தொன்றிற் றலையா கெதுகை;
ஓரெழுத் தொன்றின் இடை; கடை பிறவே.'

என்றார் ஆகலின்.

அவை வருமாறு :

[நேரிசை வெண்பா.]

'சிலைவிலங்கு நீள்புருவம் சென்றொசிய நோக்கி
முலைவிலங்கிற் றென்று முனிவாள்—மலைவிலங்கு
தார்மாலை மார்ப! தனிமை பொறுக்குமோ
கார்மாலை கண்கூடும் போழ்து?' 1

இது தலையாகு எதுகை.

[குறள் வெண்பா.]

'அகர முதல எழுத்தெல்லாம்; ஆதி
பகவன் முதற்றே உலகு.' 2

இஃது இடையாகு எதுகை.

[நேரிசை வெண்பா]

'ஆவின் இடையர் விதையழிப்பர்; 'அவ்விதையைக்
காமினோ!' என்றூற் கதம்படுவர்;—நாமினிப்
பொல்லா தெனினுமப் பூந்தோட்ட வாழ்நருங்
கொள்ளாரா நஞ்சொற் குணம்.'

இது கடையாகு எதுகை.

மோனைக்கும் இவ்வாறே கொள்க. என்னை?

'ஒன்றினம் முடித்தல் தன்னினம் முடித்தல்
என்றிவ் வகையால் யாவையும் முடியும்.'

என்ப ஆகலின்.

வரலாறு :

[குறள் வெண்பா.]

'சுடச்சுடரும் பொன்போல் ஒளிவிடும் துன்பம்
சுடச்சுட நோக்கிற் பவர்க்கு.' 3

இது தலையாகு மோனை.

'மாவும் புள்ளும் வதியிற் படர
மாநீர் விரிந்த பூவும் கூம்ப' 4

இஃது இடையாகு மோனை.

'பகலே பல்பூங் கானற் கிள்ளை ஓப்பியும்'

என்பது கடையாகு மோனை.

---

1 தண்டி; 16 மேற். யா. வி. 60 உரைமேற். 2 குறள். 1; யா. வி 57 உரைமேற், 3 குறள்; 267; யா. வி. 59 உரைமேற். 4 யா. வி. 35 உரைமேற்.

இனி, இரண்டடி எதுகைக்குச் சொல்லுமாறு :

‘இரண்டடி எதுகை திரண்டொருங் கியைந்தபின்
முரண்ட எதுகையும் இரண்டினுள் வரையார்.’

என்றார் ஆகலின்.

வரலாறு :

[கலி விருத்தம்.]

‘உலகம் மூன்றும் ஒருங்குடன் ஏத்துமாண்
திலக மாய திறலறி வன்னடி
வழுவில் நெஞ்சொடு வாலிதின் ஆற்றவும்
தொழுவல் தொல்வினை நீங்குக என்றியான்.’

எனவும்,

[எண்சீர் ஆசிரிய விருத்தம்.]

‘மணியுமிழ்ந்து மாமலைமேல் மேய்வனவும் நாகம்;
மடவர லார்கொய்ய மலர்வனவும் நாகம்;
பிணியவிழ்ந்து நன்னுளாற் பூப்பனவும் வேங்கை;
பிறனமர்த் * தொலைத்தவற்றான் துப்பனவும் வேங்கை;
இறைக்காசாம் † நேசமருள் மாலையும் மாலை;
எமக்கினிதா யாமனைச் சூட்டுவதும் மாலை;
நிறைகாய்த்தி நெஞ்சஞ்சச் சுடுவதுவும் காமம்; 1
நிலங்காக்கும் சேஎய்தன் நெடுநகரும் காமம்.’

எனவும்,

[கலி விருத்தம்.]

‘மந்திரி கடிதோடி மதிபுரை குடையசையத்
தந்திர வகைகாணிற் றன்னெடு நிகரில்லாப்
பூவிரி கமழ்குஞ்சிச் சாகர மகளோப்பாய்
யாவரு மிவணில்லென் றுசற வதுகூறும்.’

எனவும் கொள்க.

மோனைக்கும் இவ்வாறே கூறப்படும், ‘ஒன்றினம் முடித்தல் தன்னினம் முடித்தல்,’ 2 என்பது தந்திர உத்தியாகலின்.

வரலாறு :

[கலி விருத்தம்.]

‘ஆகங் கண்டகத் தாலற்ற ஆடவர்
ஆகங் கண்டகத் தாலற்ற வன்பினர்
பாகங் கொண்டு பயோதரம் சேர்த்தினர்
பாகங் கொண்டு பயோதரம் நண்ணினர்.’ 3

எனக் கொள்க. பிறவும் அன்ன.

---

1 காமம், என்பது ஈழ நாட்டில் உள்ள கதிர்காமம் என்னுந் திருப்பதி. 2 நன். 14.
3 இஃது இரண்டடிமோனை.
பி-ம். * பிறங்கன்மாத்; † இரைக்காச்சான்.

இனி, ஆசிடை எதுகைக்குச் சொல்லுமாறு :

'யரலழ என்னும் ஈரிரண் டொற்றும்
வரன்முறை பிறழாது வந்திடை உயிர்ப்பினஃ
தாசிடை எதுகையென் றறிந்தனர் கொளலே.' 1

என்றார் ஆகலின்.

அவை வருமாறு :

[நேரிசை வெண்பா.]

'தக்கோலம் தின்று தலைநிறையப் பூச்சூடிப்
பொய்க்கோலம் செய்ய ஒழியுமோ—எக்காலும்
உண்டி வினையு ளுறைக்கும் எனப்பெரியோர்
கண்டுகை விட்ட மயல்?' 2

எனவும்,

[கலிநிலைத் துறை.]

'காய்மாண்ட தெங்கின் பழம்வீழக் கமுகின் எற்றிப்
பூமாண்ட தீந்தேன் றொடைகீறி வருக்கை போழ்ந்து
தேமாங் கனிசிதறி வாழைப் பழங்கள் சிந்தும்
ஏமாங் கதமென் றிசையாற் றிசைபோய துண்டே.' 3

எனவும் இவை யகர ஒற்று இடை வந்த ஆசிடை எதுகை.

[கலி விருத்தம்]

'மாக்கொடி யானையும் * மவ்வற் பந்தரும்
கார்க்கொடி முல்லையும் கலந்து † மல்லிகைப்
பூக்கொடிப் பொதும்பரும் பொன்னின் ஞாழலும்
தூக்கொடி ‡ கமழ்ந்துதான் றுறக்கம் ஒத்ததே.' § 4

எனவும்,

[இன்னிசை வெண்பா.]

'நார்த்தொடுத் தீர்க்கிலென் நன்றாய்ந் தடக்கிலென்
பாத்துழிப் பெய்யிலென் பல்லோர் பழிக்கிலென்
தோற்பையு ணின்று தொழிலறச் செய்தூட்டும்
கூத்தன் புறப்படக் கால்.?' 5

எனவும்,

[குறட் செந்துறை.]

'ஆர்கலி உலகத்து மக்கட் கெல்லாம்
ஓதலிற் சிறந்தன் றொழுக்கம் உடைமை.' 6

எனவும் இவை ரகர ஒற்று இடை வந்த ஆசிடை எதுகை.

[நேரிசை வெண்பா.]

'ஆவே றுருவின ஆயினும் ஆபயந்த
பால்வே றுருவன அல்லவாம் ;—பால்போல்
ஒருதன்மைத் தாகும் அறநெறி ; ஆபோல்
உருவு பலகொளல் ஈங்கு.' 7

இது லகர இடை வந்த ஆசிடை எதுகை.

---

1 காக்கை பாடினியார் (யா. கா. 43 உரைமேற்). 2 நாலடி. 43. 3 சீவக நாம. 31. 4 சூளா. நாடு. 29. 5 நாலடி. 26. 6 முதுமொழிக். 1—1. யா. வி. 19, 37. 63 உரைமேற். 7 நாலடி. 1180.

பி–ம், * மாலையும், † கமழ்ந்த. ‡ தூக்கடி. § ஒக்குமே.

[நேரிசை வெண்பா.]

'அந்தரத் துள்ளே அகங்கை புறங்கையாம்;
'மந்தரமே போலும் மனைவாழ்க்கை—மந்தரத்துள்
வாழ்கின்றேம்!' என்று மகிழன்மின்; வாணாளும்
போகின்ற பூளையே போன்று.'

இது ழகர ஒற்று இடை வந்த **ஆசிடை எதுகை.**

இவை எல்லாம் வரலாற்று முறைமையோடும் கூடி இயைந்து இனியனவாய்க் கிடப்பனவே கொள்ளப்படும் என்க.

'ஆண்டே' என்ற ஏகார விதப்பினால், 'எதுகைத் தொடையானே பாவினம் வருவது, பிற தொடையால் வருமாயினும்; அல்லதூஉம், தலையாகு மோனை யானும் வரப்பெறும்.' எனக் கொள்க.

எதுகைத் தொடைபால் இனம்பிற விரவினும்
சிறப்புடை மோனையும் சிவணும் ஆண்டே.'

எனப் பிறரும் சொன்னார்.

மேற்காட்டிய பாவினத்துள்ளும் பிறவற்றுள்ளும் எதுகைத்தொடையானே வருமாறு கண்டுகொள்க.

[வெளி விருத்தம்.]

'ஆவா என்றே அஞ்சினர் ஆழ்ந்தார்—ஒருசாரார்;
கூகூ என்றே கூவிளி கொண்டார்—ஒருசாரார்;
மாமா என்றே மாய்ந்தனர் நீந்தா—ஒருசாரார்;
'ஏகீர் நாய்கீர்! என்செய்தும்!' என்றார்—ஒருசாரார்.'1.

என்பது இறுதி இயைபாய் வந்ததாயினும், நெடில் எதுகையால் வந்தது.

முரணாய் வரும் பாவினமும், அளபெடையாய் வரும் பாவினமும் எதுகை யிற்றீர்ந்தும் மோனையிற்றீர்ந்தும் வாரா எனக் கொள்க.

தலையாகு மோனையாற் பாவினம் வருமாறு:

[வஞ்சி விருத்தம்.]

'கருநீலம் அணிந்த கதுப்பினயற்
கருநீலம் அணிந்தன கண்ணிணைகள்
கருநீல மணிக்கதிர் கட்டியெனக்
கருநீலம் அணிந்த கருங்குழலே.' 2

எனக் கொள்க.

மிகுதி வகையால் **ய, ர, ல, ழ** என்னும் நான்குமே ஆசு என்றார் ஆயினும், வல்லினத்தாறும், வகரளகாமும்,* மெல்லினத்து **ங, ஞ, ந**† என்னும் மூன்றும் ஒழித்து அல்லா ஒன்றும் ஒரோ இடத்து ஆசாய் வரப்பெறும். **ண, ம, ன** என்னும் மூன்றும் வல்லினம் சார்ந்து ஆசாகா; வகார நகார‡ மகாரத்தோடு இயைந்தும் **ஆசாகா** எனக் கொள்க.

---

[1]. யா. வி. 37. 68 உரைமேற். [2]. சூளா. சீய. 235.

பி-ம். *வல்லினக்துப் பகாமும். † ங, ஞ, ண. ‡ வகார நகார தகார.

இன்னும் அவ்வேகார விதப்பினல், விட்டிசை மோனையும், இடையிட்டெதுகையும் கொள்ளப்படும். என்னை ?

'விட்டிசை மோனையும் இடையிட் டெதுகையும்
ஒட்டி வரூஉம் ஒருசாரும் உளவே.'

என்ருர் ஆகலின்.

வரலாறு :

[குறள் வெண்பா.]

'அஉ அறியா அறிவில் இடைமகனே!
நொஅலையல் நின்ஞட்டை நீ.' 1

இதனுள் முதலெழுத்து இரண்டும் அளவொத்து விட்டிசைத்தமையால், **விட்டிசை மோனே.**

[நேரிசை ஆசிரியப்பா.]

'தோடார் எல்வளை நெகிழ நாளும்
நெய்தல் உண்கண் பைதல் கலுழ
வாடா அவ்வரி வகைஇப் * பசலையும்
வைகல் தோறும் பைப்பயப் பெருகலின் †
நீடார் இவணென நீள்மணங் ‡ கொண்டோர்
கேளார் கொல்லோ காதலர் தோழி!
வாடாப் பௌவம் அறமுகந் § தெழிலி
பருவம் செய்யாது வலனேர்பு வளைஇ
ஓடா மலையன் வேலிற்
கடிது மின்னுமிக் கார்மழைக் குரலே.' 2

இஃது அடி இடையிட்டு எதுகை வந்தமையால், **இடையிட்டெதுகை.**

எல்லா எதுகைக்கும் முதலசை நேர்க்கு நிரையும், நிரைக்கு நேரும் வாரா; நேர்க்கு நேரும், நிரைக்கு நிரையுமே வருவது எனக் கொள்க. என்னை ?

'நிரைநேர் மறுதலை அடையா தம்முளும்
எதுகை முதலசை என்மனர் புலவர்.'

எனவும்,

'யாவகை எதுகையும் அசைமுறை பிறழாப்
பாவகை நான்காம் பகருங் காலை.'

எனவும் சொன்னர் ஆகலின்.

'விதிப்புக் கிளவி வேண்டியது விளைக்கும்.'

என்பது தந்திர உத்தி ஆகலின், இவ்வாறு உரைக்கப்பட்டது.

பிறரும், மோனைக்கும் எதுகைக்கும் இவ்வாறே சொன்னர். என்னை ?

'அடிதொறு முதலெழுத் தொப்பது மோனை.' 3
'அஃதொழித் தொன்றின் எதுகை யாகும்.' 4
'ஆயிரு தொடைக்கும் கிளையெழுத் துரிய.' 5

என்ருர் தொல்காப்பியனர்.

---

1 இடைக்காடனர் பாடல் : யா. வி. 7. 95 உரை மேற். 2 யா. வி. 95 உரைமேற்.
3—5 தொல். பொ. 404-6.
பி-ம். *புதைஇ, ததைஇ. † பெரிகின. ‡ நீமனங் § வார்முகற்.

'முதலெழுத் தொன்றின் மோனை யாகும்;
அஃதொழித் தொன்றின் எதுகை யாகும்;
அவ்விரு தொடைக்கும் கிளையெழுத் துரிய.'

என்றார் **நற்றத்தனார்.**

'முதலெழுத் தொன்றுவ மோனை; எதுகை
முதலெழுத் தளவோ டொத்தது முதலா
அதுவொழித் தொன்றின் ஆகும் என்ப.'

'இவ்விரு தொடைக்கும் கிளையெழுத் துரிய.'

என்றார் **பல்காயனார்.**

'முதலெழுத் தொன்றி முடிவது மோனை;
ஏனைய தொன்றின் எதுகைத் தொடையே;
உறுப்பின் ஒன்றின் விகற்பமும் அப்பால்
நெறிப்பட வந்தன நேரப் படுமே.'

என்றார் **சிறுகாக்கைபாடினியார்.**

38] **முரண் தொடை** [சூ

மொழியினும் பொருளினும் முரணுதல் முரணே. 1

'என்பது என் நுதலிற்றோ?' எனின், நிறுத்த முறையானே **அடி முரண்** ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

**இதன் பொழிப்பு:** அடிதொறும் சொல்லும் பொருளும் மறுதலைப்படத் தொடுப்பது **அடி முரண் தொடை** எனப்படும் (என்றவாறு).

அம்முரண் மூன்று வகைப்படும்: அவை சொல்லால் முரணுதலும், பொருளான் முரணுதலும், சொல்லும் பொருளும் தம்முள் முரணுதலும் என.

இனி, ஒருசார் ஆசிரியர், அவைதாம் ஐந்து விகற்பத்தன என்ப. 'அவை யாவையோ?' எனின், சொல்லும் சொல்லும் முரணுதலும், பொருளும் பொருளும் முரணுதலும், சொல்லும் பொருளும் சொல்லொடு முரணுதலும், சொல்லும் பொருளும் பொருளொடு முரணுதலும், சொல்லும் பொருளும் சொல்லொடும் பொருளொடும் முரணுதலும் என இவை. 2

வரலாறு:

[நேரிசை ஆசிரியப்பா.]

'செந்தொடைப் பகழி வாங்கிச் சினஞ்சிறந்து
**கருங்கைக்** கானவன் களிற்றுநிறத் தழுத்தலிற்
**பசும்புண்** வார்ந்த அசும்புடைக் குருதியொடு
**வெள்ளிளி** பயிற்றும் நாடன்
உழைய நகவும் விழையுமென் நெஞ்சே.'

**இது சொல்லும் சொல்லும்** முரணியது. 'செந்தொடை' எனபுழிச் செய்யதாய வண்ணம் இல்லை; 'செம்மை' என்னும் சொல்லே. 'கருங்கைக் கானவன்' என்புழியும் 'கருமை' என்னும் வண்ணம் இல்லை; 'கொன்று வாழும் கை' **என்பது உணர்த்தியது.**

---

1. தொல். பொ. 407. 2. மாறனலங்காரம், 182 உரை நோக்குக.

[நேரிசை ஆசிரியப்பா.]

'தீமேய் திறல்வரை நுழைஇப் பரிமெலிந்து
நீர்நசை பெருஅ நெடுநல் யானை
வானதிர் தழங்குகுரல்* மடங்கல் ஆனுது
நிலஞ்சேர்பு முயங்கு புலஞ்சேர்ந் தந்தி
நிலவென விளக்கு நிரைவளைப் பணிந்தோள்
இருளோர் ஐம்பால் ஒழியப்
பொருள்புரிந் தகறல் புரைவதோ அன்றே.'

இது பொருளும் பொருளும் முரணியது: 'தீ' என்னும் பொருட்கு 'நீர்' பொருளும், 'வான்' என்னும் பொருட்கு 'நிலம்' என்னும் பொருளும், 'நிலவு' என்னும் பொருட்கு 'இருள்' என்னும் பொருளும் மறுதலைப்பட முரணியது.

[நேரிசை ஆசிரியப்பா.]

'பெருமலைக் † குறுமகள் பிறிதோர்த்து ‡ நடுங்கலிற்
சிறுமை கூர்ந்த செல்சுடர் மாலையொடு
நெடுநீர்ப் பொய்கைக் குறுநர் § தந்த
தண்பனி அவிழ்மலர் நாறுநின்
கண்பனி துடைமார் வந்தனர் நமரே.'

இது சொல்லும் பொருளும் சொல்லொடு முரணியது. 'நெடுநீர்' என்புழி 'நெடுமை' என்னும் சொல்லும் உண்டு; நீரும் நெடிது. 'குறுநர்தந்த' என் புழிக் 'குறிது' என்னும் சொல்லுண்டு; குறும்பொருள் இல்லை.

[நேரிசை ஆசிரியப்பா]

'செந்தீ யன்ன சினந்த யானை
நீர்நசை பெருஅக் கானற்
றேர்நசைஇ ஓடும் சுரனிறந் தனரே!'

இது சொல்லும் பொருளும் பொருளொடு முரணியது. 'செந்தீ' என்புழிச் செம்மையும் உண்டு; 'தீக்கட் செய்யது' என்னும் சொல்லும் உண்டு; 'நீர் நசை பெருஅ' என்புழிச் சொல் இல்லை; முரணியது; பொருள் எனக் கொள்க.

[நேரிசை ஆசிரியப்பா]

'ஓங்குமலைத் ‖ தொடுத்த ¶ தாழ்ந்திலங் ** கருவி
செங்குரல் ஏனற் பைங்கிளி இரியச்
சிறுகுடித் ததும்பும் பெருங்கல் நாடனை
நல்லன் என்றும் யாமே;
தீயன் என்னுமென் றடமென் றோளே.' 1

இது சொல்லும் பொருளும் சொல்லொடும் பொருளொடும் முரணியது 'செங்குரல்' என்புழிச் சொல்லும் உண்டு; 'செம்மை' குரற்கண்ணுமுண்டு. 'பைங்கிளி' என்புழிச் சொல்லும் உண்டு; 'பசுமை' கிளிக்கண்ணும் உண்டு. 'செம்மை' என்பதும் 'பசுமை' என்பதும் முரணின. 'ஓங்குமலைத் தொடுத்த தாழ்ந்திலங் கருவி' என்பதூஉம் அதுவெனக் கொள்க.

---

1 யா. வி. 43 உரைமேற்.

பி - ம். * வெங்குரல். † முழங்கு; பெருநிலைக். ‡ பிறிதோர்ந்து. § குறுநீர். ‖ ஓங்குவரைத். ¶ தொடுத்துத். ** தாழ்ந்திரங்.

இனி, அவை எட்டுத் திறத்தானும் முறையே வருமாறு :

[நேரிசை ஆசிரியப்பா]

'இருள்விரிந் தன்ன மாநீர் மருங்கில்
நிலவுகுவிந் தன்ன வெண்மணல் ஒருசிறை
இரும்பின் அன்ன கருங்கோட்டுப் புன்னை
பொன்னின் அன்ன நுண்டா திறைக்கும்
சிறுகுடிப் பரதவர் மடமகள்
பெருமதர் மழைக்கணும் உடையவால் அணங்கே.'

இஃது அடிதோறும் மறுதலைப்படத் தொகுத்தமையால், அடிமுரண்.

[நேரிசை ஆசிரியப்பா]

| | |
|---|---|
| 'சீறடிப் பேரகல் அல்குல் ஒல்குபு | [இணை] |
| சுருங்கிய நுசுப்பிற் பெருகுவடம் தாங்கி | [பொழிப்பு] |
| குவிந்துசுணங் கரும்பிய கொங்கை விரிந்து | [ஒரூஉ] |
| சிறிய பெரிய நிகர்மலர்க் கோதைதன் | [கூழை] |
| வெள்வளைத் தோள்களும் சேயரிக் கருங்கணும் | [மேற்கதுவாய்] |
| இருக்கையும் நிலையும் ஏந்தெழில் இயக்கமும் | [கீழ்க்கதுவாய்] |
| துவர்வாய்த் தீஞ்சொலும் உவந்தெனை முனியா | [முற்று] |
| தென்றும் இன்னணம் ஆகுமதி | |
| பொன்றிகழ் நெடுவேற் போர்வல் லோயே!' | |

இதனுள் இணைமுரண் முதலாய ஏழு விகற்பமும் முறையாக வந்தவாறு கண்டு கொள்க.

முரண் தொடை இலக்கணம் இவ்வாறே பிறரும் சொன்னார். என்னை ?

'மொழியினும் பொருளினும் முரணுதல் முரணே.' 1

என்றார் தொல்காப்பியனார்.

'சொல்லினும் பொருளினும் மாறுகோள் முரணே.'

என்றார் நற்றத்தனார்.

'பொருளினும் மொழியினும் முரணுதல் முரணே.'

என்றார் பல்காயனார்.

'பொருளினும் சொல்லினும் முரணத் தொடுப்பின்
முரணென மொழிப முந்தை யோரே.'

என்றார் மயேச்சுரர்.

'மறுதலை உரைப்பினும் பகைத்தொடை ஆகும்'

என்றார் அவிநயனார்.

'மொழியினும் பொருளினும் முரணத் தொடுப்பின்
இரணத் தொடையென் றெய்தும் பெயரே.'

என்றார் காக்கைபாடினியார்.

---

1 தொல். பொ. 407.

39] **முரண் தொடை விகற்பம்.** [எ

கடையிணை பின்முரண் இடைப்புணர் முரணென
இவையும் கூறுப ஒருசா ரோரே.

என்பது என் நுதலிற்றோ' எனின், முரண் தொடைக்கு ஒருசார் ஆசிரியா வேண்டும் விகற்பம் உணர்த்துதல் நுதலிற்று.

**இதன் பொழிப்பு :** கடையிணை முரணும், பின் முரணும், இடைப்புணர் முரணும் என்று சொல்லுவர் ஒருசார் ஆசிரியர் (என்றவாறு).

கடையிருசீரும் மறுதலைப்படத் தொடுப்பது, கடையிணை முரண்; கடைச் சீரும் இரண்டாம் சீரும் மறுதலைப்படக் தொடுப்பது **பின்முரண் ;** இடை இருசீரும் மறுதலைப்படத் தொடுப்பது **இடைப்புணர் முரண்** எனக் கொள்க.

'கடையிணை பின்முரண் இடைப்புணர் முரண்'

என்றதல்லது, அவற்றிற்கு இலக்கணம் கூறிற்றில்லையாயினும்,

'சொல்லின் முடிவின் அப்பொருள் முடித்தல்' 1

என்பது தந்திர உத்தி ஆகலானும், 'உரையிற்கோடல்' 2 என்பதாகலானும் இவ்வாறு உரைக்கப்பட்டது எனக் கொள்க.

அவற்றிற்குச் செய்யுள் வருமாறு :

[நேரிசை ஆசிரியப்பா]

'மீன்தேர்ந்து வருந்திய கருங்கால் வெண்குருகு
தேனார் ஞாழல் விரிசினைக் குழூஉம்
தண்ணந் துறைவன் தவிர்ப்பவும் தவிரான் ;
தேரோ காணலம் ; காண்டும்
பீரேர் வண்ணமும் சிறுநுதல் ! பெரிதே.'

இது கடையிரு சீரும் மறுதலைப்படத் தொடுத்தமையாற் **கடையிணை முரண்.**

[நேரிசை ஆசிரியப்பா]

'சாரல் ஓங்கிய தடந்தாள் தாழை
கொய்மலர் குவிந்து தண்ணிழல் விரிந்து
தமியம் இருந்தன மாக நின்றுதன்
நலனுடைப் பணிமொழி நன்குபல புகழ்ந்து *
விங்குதொடிப் பணைத்தோள் நெகிழத்
துறந்தோன் நல்லன்எம் மேனியோ தீதே.'

இது கடைச்சீரும் இரண்டாம் சீரும் மறுதலைப்படத் தொடுத்தமையால், **பின் முரண்.**

[நிலைமண்டில ஆசிரியப்பா]

'போதவிழ் குறிஞ்சி நெகுந்தண் மால்வரைக்
கோதையிற் ருழ்ந்த ஓங்குவெள் ளருவிக்
காந்தளஞ் செங்குலைப் பசுங்கூ தாளி

---

1 நன். 14. 2 இறை. 27 உரை.

பி - ம். * புகன்று, பயிற்றி.

வேரல் விரிமலர் முகையொடு விரைஇப்
பெருமலைச் சீறூர் இழிதரு நலங்கவர்ந்
தின்னு வாயின இனியோர் மாட்டே.'

இஃது இடை இரு சீரும் மறுதலைப்படத் தொடுத்தமையால், இடைப்புணர் முரண். இப்பாட்டுக் கையனுர் காட்டியது எனக் கொள்க.

'இவையும் கூறுப,' என்ற உம்மையால், முதற்சீர் ஒழித்து மூன்று சீர்க்கண்ணும் முரணி வந்தால் **கடைக்கூழை முரண்** எனப்படும்.

வரலாறு :

[நேரிசை ஆசிரியப்பா]

'காவியங் கருங்கட் செவ்வாய்ப் பைந்தொடி
பூவிரி சுரிமென் கூந்தலும்
வேய்புரை தோளும் அணங்குமால் எம்மே.' 1

இதன் முதலடியில், 'கருங்கட் செவ்வாய்ப் பைந்தொடி' எனக் கடைச்சீர் மூன்றும் மறுதலைப்படத் தொடுத்தமையாற் **கடைக்கூழை முரண்** எனக் கொள்க.

'ஒன்றினம் முடித்தல் தன்னினம் முடித்தல்'

என்பது தந்திர உத்தி ஆகலின், ஏனைத் தொடைக்கும் இவ்வாறே கொள்க.

அவை சொல்லுமாறு :

கடையிணை மோனை, பின் மோனை, இடைப்புணர் மோனை, கடைக் கூழை மோனை எனவும்; கடையிணை எதுகை, பின் எதுகை, இடைப்புணர் எதுகை, கடைக் கூழை எதுகை எனவும்; கடையிணை இயைபு, பின் இயைபு, இடைப் புணர் இயைபு, கடைக் கூழை இயைபு எனவும்; கடையிணை அளபெடை, பின் அளபெடை, இடைப்புணர் அளபெடை, கடைக்கூழை அளபெடை எனவும் கண்டு கொள்க.

அவற்றிற்குச் செய்யுள் :

[நேரிசை ஆசிரியப்பா]

'பூந்தார்ச் சிறுகிளி புலம்பொடு புலம்ப [கடையிணை]
மைம்மலர் நெடுங்கண் வாங்காமை நெடுந்தோள் [பின்]
அந்நுண் கொடியிடை கொடியேற் றுறந்து [இடைப்புணர்]
சீறடிச் சிலம்பு சிலம்பொடு சிலம்ப [கடைக்கூழை]
ஏதில் காளையோ டிவ்வழிப்
போதல்கண் டனையோ வாழிய புறவே!'

இதனுள், கடையிணை மோனை முதலாகிய நான்கு விகற்பமும் முறையானே வந்தவாறு கண்டுகொள்க.

[நேரிசை ஆசிரியப்பா]

'வஞ்சியங் கொடியின் வணங்கிய நுணங்கிடை [கடையிணை]
மலர்புரை வடிக்கண் வாங்கமைத் தொடித்தோள் [பின்]
மதிபுரை சிறுநுதல் நறுமென் கூந்தல் [இடைப்புணர்]
வான்கதிர் வடமலி தடமுலை மடவரல் [கடைக்கூழை]

1 தமிழ்நெறி. பொருள். 16 மேற்; களவியற். 28 மேற்.

பஞ்சியஞ் சீரடி பனிப்பவிவ்
வெஞ்சுரம் மிதிப்ப விளைந்ததால் விதியே!'

இதனுள், கடையிணை எதுகை முதலாகிய நான்கு விகற்பமும் முறையானே வந்தவாறு கண்டுகொள்க.

[நேரிசை ஆசிரியப்பா]

'புயலும் போலும் பூங்குழற் பிழம்பே; [கடையிணை]
தொய்யிலும் பொன்னே; சாயலும் மயிலே; [பின்]
சிலையே நுதலும்; முறுவலும் முத்தே; [இடைப்புணர்]
குயிலும் பாலும் ஆம்பலும் மொழியே; [கடைக்கூழை]
அரிமதர் நெடுங்கணும் அயிலே;
வரிவளைத் தோளி முகமுமோர் மதியே.'

இதனுள், கடையிணை இயைபு முதலாகிய நான்கு விகற்பமும் முறையானே வந்தவாறு கண்டுகொள்க. இஃது எழுவாய் இறுவாயாகக்[1] கண்டு கொள்க.

[நேரிசை ஆசிரியப்பா]

'மெல்லிணர் நறும்பூ விடாஅள் தொடாஅள் [கடையிணை]
செய்கையும் வுழாஅள் தெய்வமும் தொழாஅள்; [பின்]
இனிதினின் நகாஅள் இராஅள் யாவதும் [இடைப்புணர்]
விரிமலர் மராஅம் கராஅம் விராஅம் [கடைக்கூழை]
பின்னிருங் கூந்தல் நன்னுதல்
என்னு குவள்கொள் என்னுமென் நெஞ்சே'

இதனுள், கடையிணை அளபெடை முதலாகிய நான்கு விகற்பமும் முறையானே வந்தவாறு கண்டுகொள்க.

இன்னும், 'இவையும் கூறுப ஒருசா ரோரே,' என்று உம்மை விதப்பினுல், அடியடி தோறும் கடைச்சீர்க்கண் முதலெழுத்தும் மொழியும் ஒன்றி வந்தால் கடை மோனை என்றும், இரண்டாம் எழுத்து ஒன்றி வந்தால் கடை எதுகை என்றும், கடை முரணி வந்தால் கடை முரண் என்றும், அடிதொறும் கடைச்சீர் இறுதி எழுத்து ஒன்றி வந்தால் கடை இயைபு என்றும், கடைச்சீர் அளபெடுத்து வந்தால் கடை அளபெடை என்றும் இவ்வாறு பெயரிட்டு வழங்குவாரும் உளர் எனக் கொள்க.

வரலாறு :

[நேரிசை ஆசிரியப்பா.]

'வளரிளங் கொங்கை வான்கெழு மருப்பே;
பொறிவண் டோதியிற் பாடுமா மருளே;
வாணுதல் ஒண்மதி மருட்டும்
மாயோள் இவளென் நோய்தணி மருந்தே.'

இஃது அடிதோறும் கடைச்சீர்க்கண் முதலெழுத்து ஒன்றி வரத் தொடுத்தமையால், கடைமோனை.

---

[1]. முதலிடம் முடிவிடமாக.

[கலிநிலைத் துறை.]

'சுரிதரு மென்குழல் மேலும் மாலைகள் சூட்டினீர்;
புரிமணி மேகலை யானை ஆரமும் பூட்டினீர்;
அரிதவழ் வேனெடுங் கண்களும் அஞ்சனம் ஊட்டினீர்;
வரிவளை பெய்திளை யானை நுண்ணிடை வாட்டினீர்.'

இஃது அடிதோறும் கடைச்சீர்க்கண் இரண்டாம் எழுத்து ஒன்றிவரத் தொடுத்தமையால், **கடை எதுகை.**

[நேரிசை ஆசிரியப்பா.]

'கயல்மலைப் பன்ன கண்ணிணை கரிதே;
தடமுலைத் தவழும்* தனிவடம் வெளிதே;
நூலினும் நுண்ணிடை சிறிதே;
ஆடமைத் தோளிக் கல்குலோ பெரிதே.'

இஃது அடிதோறும் கடைச்சீர் மறுதலைப்படத் தொடுத்தமையால், **கடை முரண்.**

[நேரிசை ஆசிரியப்பா.]

'மாமலர் நெடுங்கண் மானேக் கினவே;
பொன்மலர் வேங்கை புணர்முலைச் சுணங்கே;
நறுமலர்க் கூந்தலும் அறலே;
ஒண்மலர்க்† கமலம் அலைந்தது முகமே.'

எனவும்,

[குறள் வெண்பா.]

'ஈத்துவக்கும் இன்பம் அறியார்கொல் தாமுடைமை
வைத்திழக்கும் வன்க ணவர்?'[1]

எனவும்,

[குறள் வெண்பா.]

'அளவுறியான் நட்டவன் கேண்மையை கிழ்நீர்த்
தறியறியான் பாய்ந்தாடி அற்று.'

எனவும் இவை முதற்சீர்க்கடை ஒத்து வந்தமையால், **கடை இயைபு.**

[நேரிசை ஆசிரியப்பா.]

'தொடுகடற் றுறைதுறை திரிதரும் சுறாஅ;
கருங்கழி கலந்து கலிதரும் காராஅ;
மறிதிரை மகரமும் வழாஅ;
எறிநீர்ச் சேர்ப்ப!இந் நெறிவரத் தகாஅ.'

இஃது அடிதோறும் கடைச்சீர்கண் அளபே தொடுத்து வந்தமையால், **கடை அளபெடை.** பிறவும் அன்ன.

---

[1]. குறள். 228.

**பி-ம்.** * திவளும். † குறுமலர்க்.

## அடி இயைபுத்தொடை.

40] ௪அ

இறுவாய் ஒப்பினஃ தியைபெனப் படுமே.

'இஃது என் நுதலிற்றோ?' எனின், நிறுத்த முறையானே **அடி இயைபுத்தொடை** ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

**இதன் பொழிப்பு :** அடிதோறும் இறுதிக்கண் எழுத்தானும், சொல்லானும் ஒன்றிவரின், அஃது 'அடி இயைபுத்தொடை' எனப்படும் (என்றவாறு).

**வரலாறு :**

[நேரிசை ஆசிரியப்பா.]

'மாயோள் கூந்தற் குரலும் நல்ல;
கூந்தலில் வேய்ந்த* மலரும் நல்ல;
மலரேர் உண்கணும் நல்ல;
பலர்புகழ் ஓதியும் நனிநல் லவ்வே.' 1

எனவும்,

[நேரிசை ஆசிரியப்பா.]

'இன்னகைத் துவர்வாய்க் கிளவியும் அணங்கே;
நன்மா மேனிச் சுணங்குமா ரணங்கே;
ஆடமைத் தோளி ஊடலும்† அணங்கே;
அரிமதர் மழைக்கணும் அணங்கே;
திருநுதற் பொறித்த திலதமும் அணங்கே.'

எனவும் இவை அடிதோறும் இறுவாய் ஒன்றி வந்தமையான், **அடி இயைபுத் தொடை.**

இனி, அவை எட்டுத் திறத்தானும் வருமாறு :

[நேரிசை ஆசிரியப்பா.]

'மொய்த்துடன் தவழும் முகிலே பொழிலே; [இணை]
மற்றதன் அயலே முத்துறழ் மணலே; [பொழிப்பு]
நிழலே இனியதன் அயலது கடலே; [ஒரூஉ]
மாதர் நகிலே வல்லே இயலே; [கூழை]
வில்லே நுதலே வேற்கண் கயலே; [மேற்கதுவாய்]
பல்லே தளவம்; பாலே சொல்லே; [கீழ்க்கதுவாய்]
புயலே குழலே மயிலே இயலே; [முற்று]
அதனால்,
இவ்வயின் இவ்வுரு இயங்கலின்,
எவ்வயி னோரும் இழப்பர்தம் நிறையே.'

இதனுள், இணை இயைபு முதலாகிய ஏழு விகற்பமும் முறையானே வந்தவாறு கண்டுகொள்க.

'இறுவாய் ஒப்பினஃ தியைபெனப் படுமே.'

என்று சிறப்பித்த அதனால், மோனையாய் வந்து இறுவாய் ஒத்தால் 'மோனை இயைபு' என்றும், எதுகையாய் வந்து இறுவாய் ஒத்தால் 'எதுகை இயைபு'

---

1. யா. வி. 53 உரைமேற்.

பி - ம். * கூந்தற் பெய்த. † கூடலும்.

என்றும், முரணாய் வந்து இறுவாய் ஒத்தால் 'முரண் இயைபு' என்றும், அளபெடையாய் வந்து இறுவாய் ஒத்தால் 'அளபெடை இயைபு' என்றும், பலவாய் வந்து இறுவாய் ஒத்தால் 'மயக்கு இயைபு' என்றும், பிற வாராது இறுவாய் ஒத்தால் 'செவ்வியைபு' என்றும் வழங்கப்படும் எனக் கொள்க.

அவற்றுட் சில வருமாறு :

[நிலைமண்டில ஆசிரியப்பா.]

'பூந்தண் பொழிலிடை வாரணம் துஞ்சும்;
பூங்கண் அன்னை இல்லிடைத் துஞ்சும்;
பூங்கொடிப் புனத்தயற் குறவன் துஞ்சும்;
பூசலிக் களவென யாந்துஞ் சலமே.' 1

இது மோனை இயைபுத் தொடை.

[இன்னிசை வெண்பா.]

'அலைப்பான் பிறவுயிரை ஆக்கலும் குற்றம்;
விலைப்பாலிற் கொண்டூன் மிசைதலும் குற்றம்;
சொலற்பால அல்லாத சொல்லுதலும் குற்றம்;
கொலைப்பாலும் குற்றமே யாம்.' 2

இஃது எதுகை இயைபுத் தொடை.

[இன்னிசை வெண்பா.]

'இருளிற் கொிவிளக் கென்றும் பகையே;
அருளிற் கலைவாழ்க்கை அஃதும் பகையே;
மருளிற்கு வாலறிவு மாயாப் பகையே;
பொருளிற்கஃ தின்மை பகை.'

இது முரண் இயைபுத் தொடை.

[குறள் வெண்பா.]

'ஏஎ வழங்கும் சிலையாய்! இரவாரல்
மாஅ வழங்கும் வரை.'

இஃது அளபெடை இயைபுத் தொடை.

[நேரிசை ஆசிரியப்பா.]

'பரவை மாக்கடல் தொகுதிரை* வரவும்
பண்டைச் செய்தி இன்றிவண் வரவும்
பகற்பின் முட்டா திரவினது வரவும்
பசியும் ஆர்கையும் வரவும்
பரியினும் போகா துவப்பினும் வருமே.' 3

இது மோனையும் முரணுமாய் வந்து இறுவாய் ஒத்தாமையால், மயங்கு இயைபுத் தொடை.

---

1 யா. வி. 53 உரைமேற். 2 நான்மணி. 26. 3 யா. வி. 95 உரைமேற்,
பி - ம். * படுதிரை.

[நேரிசை ஆசிரியப்பா.]

'ஓங்குவரை அமன்ற வேங்கைநறு மலரும்
ஊர்கெழு நெய்தல் வார்கெழு மலரும்
பழனத் தாமரை எழினிற மலரும்
இல்லயற் புறவின் முல்லைவெண் மலரும்
உராஅங் கடற்றிரை விராஅ மலரும்
வேறுபட மிலைச்சிய நாறிருங் குஞ்சி
ஏந்தல் பொய்க்குவன் எனவும்
பூந்தண் உண்கண் நலம்பா ருவே.' 1

இது பொழிப்பு எதுகையும் பொழிப்பு அளபெடையுமாய் வந்து இறுவாய் ஒத்தமையால், மயக்கு இயைபுத் தொடை.

மயக்கு இயைபுத் தொடைக்கு இலக்கணம் பலரும் 'ஈறு பிறிதாய் வந்த தாயினும் ஆம்,' என உரைப்பாரும் உளர் எனக் கொள்க. அது போக்கித் 'தொடைபல தொடுப்பினும்' 2 என்னும் சூத்திரத்துட் காட்டுதும்.

இயைபுத் தொடைக்கு இலக்கணம் பிறரும் இவ்வாறு சொன்னர். என்னை?

'இறுவாய் ஒன்றல் இயைபின் யாப்பே.' 3

என்றார் தொல்காப்பியனர்.

'இறுவாய் ஒப்பினஃ தியைபென மொழிப.'

என்றார் அவிநயனர்.

'இயைபே இறுசிர் ஒன்றும் என்ப.'

என்றார் பல்காயனர்.

'இறுசீர் ஒன்றின் இயைபெனப் படுமே.'

என்றார் நற்றத்தனர்.

41] அடி அளபெடைத் தொடை. [கூ

அளபெடை ஒன்றுவ தளபெடைத் தொடையே.

என்பது என் நுதலிற்றோ?' எனின், நிறுத்தமுறையானே 'அடி அளபெடைத் தொடை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொழிப்பு: அடிதொறும் முதற்சீர்க்கண் அளபெடுத்து ஒன்றி வரின், அஃது 'அடி அளபெடைத் தொடை' எனப்படும் (என்றவாறு).

இச் சூத்திரத்துள் 'முதற்சீர்' என்பது இல்லை யாயினும்
'இருசீர் மிசைவரத் தொடுப்பதை இணையே.' 4

என்னும் சூத்திரத்தினின்றும், 'சீர்' என்றும் 'முதல்' என்றும் சிங்க நோக்கு அதிகாரம் வர உரைக்கப்பட்டது எனக் கொள்க.

'ஒன்றுவது' என்பது,

'தனிநிலை முதனிலை இடைநிலை ஈறெண
நால்வகைப் படூஉமள பாய்வரும் இடனே.' 5

என்று சொல்லப்பட்ட உயிரளபெடையும், ங, ஞ, ண, ந, ம, ன, வ, ய, ல, ள ஆய்தம் என இவை பதினொன்றும் குறிற்கீழும் குறிலிணைக்கீழும் என்று சொல்லப்பட்ட ஒற்றளபெடையும் தம்முள் ஒன்றி வருவது எனக் கொள்க.

---

1. யா. வி. 53. உரைமேற் 2. யா: வி.55 3. தொல் பொ. 408.
4. யா. வி. 42. 5. யா. வி. 2 உரைமேற்.

நான்கிடத்தும் ஏழு நெட்டெழுத்தும் அளபெடுப்ப இருபத்தெட்டு உயிரள பெடையாம். அவ்விருபத்தெட்டினையும் எட்டு விகற்பத்தானும் உறழ, இரு நூற்று இருபத்து நாலாம்.

பதினோர் ஒற்றும் குறிற்கீழும் குறிலிணைக்கீழும் அளபெடுப்ப இருபத்திரண் டாம். அவ்விருபத்திரண்டினையும் எட்டு விகற்பத்தானும் உறழ, நூற்றெழுபத் தாறு ஒற்றளபெடையாம். அவை இறுதி இடைநிலையாய்க் கூறுபடுப்ப இரட்டி பாம். அவை எல்லாம் செய்யுள் வந்துழிக் கண்டு கொள்க.

[குறள் வெண்பா.]

'ஏஎ வழங்கும் சிலையாய் ! இரவாரல்*
மாஅ வழங்கும் வரை.'

இது சீர்க்கு முன்னும் பின்னும் எழுத்தின்றி ஓரோவோரெழுத்தே நின்று அளபெடுத்தமையால், தனிநிலை அளபெடைத் தொடை.

[குறள் வெண்பா.]

'காஅரி கொண்டான் கதச்சோ மதனழித்தான்
ஆஅழி ஏந்தல் அவன்.' 1

இது முதல் நின்ற சொல்லின்கட் பின்னும் எழுத்துப் பெற்று முதலெழுத்து அளபெழுந்தமையால், முதல் நிலை அளபெடைத் தொடை.

[குறள் வெண்பா.]

'கடாஅக் களிற்றின்மேற் கட்படா மாதர்
படாஅ முலைமேற் றுகில்.' 2

இது முதல் நின்ற சீரின் இறுதி எழுத்து அளபெடுத்து ஒன்றிவரத் தொடுத் தமையால், இறுதி நிலை அளபெடைத் தொடை.

[குறள் வெண்பா.]

'உராஅய தேவர்க் கொழிக்கலு மாமோ
விராஅய கோதை விளர்ப்பு ?'

இது முதல் நின்ற சீரின் நடுநின்ற எழுத்து அளபெடுத்து ஒன்றிவரத் தொடுத் தமையால், இடைநிலை அளபெடைத் தொடை.

இனி, ஒற்றளபெடை :

[குறள் வெண்பா.]

'வண்ண்டு வாழும் மலர்நெடுங் கூந்தலாள்
பண்ண்டை நீர்மை பரிது.' †

இஃது இடைநிலை ஒற்றளபெடைத் தொடை.

[குறள் வெண்பா.]

'உரன்ன் அமைந்த உணர்வின ராயின்
அரண்ண் அவர்திறத் தில்.'

இஃது இறுதிநிலை ஒற்றளபெடைத் தொடை.

1. யா. வி. 95 உரைமேற். 2. குறள். 1087.
பி - ம். * இனிவாரல். † ஊரிது.

'தொடையே' என அதிகாரம் வர வைத்து, பெயர்த்தும் 'அளபெடைத் தொடையே' என்றதனுல், முதல் எழுத்து ஒன்றி வந்து அளபெழுந்தால் 'மோனை அளபெடைத் தொடை' என்றும், இரண்டாம் எழுத்து ஒன்றி வந்து அளபெழுந்தால் 'எதுகை அளபெடைத்தொடை' என்றும் முரணுய் வந்து அளபெழுந்தால் 'முரண் அளபெடைத் தொடை' என்றும், அவை பலவாய் வந்து அளபெழுந்தால் 'மயக்கு அளபெடைத் தொடை' என்றும், பிற வாராது அளபெழுந்தால் 'செவ்வளபெடைத் தொடை' என்றும் வழங்கப்படும். அவற்றிற்குச் செய்யுள் வந்தவழிக் கண்டு கொள்க.

'அஃதே எனின், 'அளபெடை ஒன்றுவது அளபெடைத் தொடை' என்னுது, 'அளபெடைத் தொடையே' என்று ஏகாரம் மிகுத்துச் சொல்ல வேண்டியது என்னை? எனின், 'ஒருசார் ஆசிரியரால் இணை முதலாகிய ஒருசார் அளபெடை விகற்பங்கள் சிறுபான்மை ஒன்ருது அளபெடுத்து வரினும், கொள்ளப்படும்,' என்பது அறிவித்தற்கு வேண்டப்பட்டது.

தொடை விகற்பத்து நான்கு உயிரளபெடையும், இரண்டு ஒற்றளபெடையும் தம்முள் மயங்கி வரப்பெறும்:

உதாரணம்:

'ஏஎ ராஅர் நீஇ ணீஇர்.'

என்பது கொள்க.

இனி, அவை எட்டு வகையானும் வழங்குமாறு:

[பஃறெடை வெண்பா.]

'ஆஅ அளிய அலவன்றன் பார்ப்பினே
டீஇர் இரையுங்கொண் டீரளைப் பள்ளியுள்
தூஉம் திரையலைப்பத் துஞ்சா துறைவன்றேள்
மேஎ வலைப்பட்ட நம்போல் நறுநுதால்!
ஓஒ உழக்கும் துயர்!'

இஃது அடிதோறும் முதற்சீர்க்கண் அளபெடுத்து ஒன்றி வரத் தொடுத்தமையால், அடி அளபெடைத் தொடை.

[நேரிசை ஆசிரியப்பா.]

'தாஅட் டாஅ மரைமலர் உழக்கிப் [இணை]
பூஉக் குவளைப் போஒ தருந்திக் [பொழிப்பு]
காஅய்ச் செந்நெற் கறித்துப் போஒய் [ஒரூஉ]
மாஅத் தாஅள் மோஒட் டெருமை [கூழை]
தேஎம் புனலிடைச் சோஒர் பாஅல் [மேற்கதுவாய்]
மீஇன் ஆஅர்ந் துகளும் சீஇர் [கீழ்க்கதுவாய்]
ஏஎர் ஆஅர் நீஇள் நீஇர் [முற்று]
ஊரன் செய்த கேண்மை
ஆய்வளைத் தோளிக் கலரா னதே.'

இதனுள் இணை அளபெடை முதலாகிய ஏழு விகற்பமும் முறையானே வந்தவாறு கண்டுகொள்க.

அளபெடைக்கு இலக்கணம் பிறரும் சொன்னர். என்னை?

'அளபெடைத் தொடைக்கே அளபெடை யாகும்.'

என்றூர் பல்காயனர்.

'அளபெடைத் தொடைக்கே அளபெடை ஒன்றும்.'

என்றார் நற்றத்தனார்.

'அளபெழின் மாறல தொடுப்பதை அளபெடை.'

என்றார் அவிநயனார்.

'சொல்லிசை அளபெழ நிற்பதை அளபெடை.'

என்றார் சிறுகாக்கைபாடினியார்.

'அளபெழுந் தியாப்பினஃ தளபெடைத் தொடையே.'

என்றார் உயரும்புரம் நகரச் செற்றவன் * பெயர் மகிழ்ந்த பேராசிரியர். 1

[கட்டளைக் கலித்துறை.]

'எழுவாய் எழுத்தொன்றின் மோனை; இறுதி இயைபிரண்டாம்
வழுவா எழுத்தொன்றின் மாதே! எதுகை; மறுதலைத்த
மொழியான் வரினும் முரண்; அடி தோறும் முதன்மொழிக்கண்
அழியா தளபெடுத் தொன்றுவ தாகும் அளபெடையே.' 2

'மாவும்புள் மோனை; இயைபின் னகை; வடி யேரெதுகைக்
கேவின் முரணும் இருள்பரந் தீண்டள பாஅவளிய
ஓவிலந் தாதி உலகுட னும்; ஒக்கு மேயிரட்டை;
பாவருஞ் செந்தொடை பூத்தவென் றுரும் பணிமொழியே!' 3

இவற்றைப் பதம் நெகிழ்த்து உரைத்துக்கொள்க.

42] **இணைத் தொடை.** [சுo

இருசீர் மிசைவரத் தொடுப்பது இணையே.

மோனை முதலாகிய ஐந்து தொடையும் உணர்த்தி, அவற்றின் விகற்பமும் உணர்த்துவான் எடுத்துக்கொண்டார். அவற்றுள் இச்சூத்திரம் 'இணை' ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

**இதன் பொழிப்பு:** முதல் இருசீர்க்கண்ணும், மேல் அடிக்கண் வரத் தொடுத் தாற்போல, மோனை முதலாயின வரத் தொடுத்தால், அவை 'இணை மோனை, இணை எதுகை, இணை முரண், இணை இயைபு, இணை அளபெடை' எனப்படும் (என்றவாறு).

பிறரும்,

'இரண்டாம் சீர்வரின் இணையெனப் படுமே.'

என்றார் ஆகலின்.

அவற்றிற்குச் செய்யுள் வருமாறு:

[நேரிசை ஆசிரியப்பா.]

'தண்ணறுந் தகரம் நீவிய கூந்தல்
தாதார் தண்போ தட்டுபு முடித்த †
தயங்குமணித் தளர்நடைப் புதல்வர ‡ தாயொடும்

---

1. ஐபேசுரார். 2. யா. கா. 76. 3. யா. கா. 18.

பி. ம். * உயரும்பர் நகர்ச் செற்றவன் † முடித்துத். ‡ புதல்வர்

தம்மனைத் தமரொடும் கெழீஇத்
தனிநிலைத் தலைமையொடு பெருங்குறை வின்றே.'

இது முதல் இருசீர்க்கண்ணும் முதல் எழுத்து ஒன்றி வரத் தொடுத்தமையால், இணை மோனை.

[இன்னிசை வெண்பா.]

'கல்லிவர் முல்லைக் கணவண்டு* வாய்திறப்பப்
பல்கதிரோன் செல்லும் பகல்நீங் கிருள்மாலை
மெல்லியலாய்! மெல்லப் படர்ந்த திதுவன்றே
சொல்லியலார்† சொல்லிய போழ்து?'

இது முதல் இரு சீர்க்கண்ணும் இரண்டாம் எழுத்து ஒன்றி வரத் தொடுத்தமையால், இணை எதுகை.

[நேரிசை ஆசிரியப்பா.]

'கருங்கால் வெண்குருகு கனைதுயில் மடியும்
இடுகுதுறை அகன்கழி இனமீன் மாந்தி
ஓங்கிருங் குனிகோட் டிருஞ்சினை‡ உறையும்
தண்டுறை வெஞ்செலல் மான்றேர்ச் சேர்ப்பன்
பகல்கழீஇ எவ்வம் தீரக்
கங்குல் யாமத்து வந்துநின் றனனே.'

இது முதல் இரு சீர்க்கண்ணும் மறுதலைப்படத் தொடுத்தமையால், இணை முரண்.

[நேரிசை வெண்பா.]

'பிரிந்துறை வாழ்க்கையை யாமும் பிரிதும்
இருந்தெய்க்கும் நெஞ்சே! புகழும்§—பொருந்தும்¶
பெரும்பணைத் தோளி குணனும் மடனும்
அருஞ்சுரத் துள்ளும் வரும்.

இது கடை இரு சீர்க்கண்ணும் ஈற்றெழுத்து ஒன்றி வந்தமையால், இணை இயைபு.

[நேரிசை ஆசிரியப்பா.]

'உலாஅ உலாஅ தொருவழிப் படாஅ
எலாஅ! எலாஅ! என்றிது வினவவும்
வெரீஇ வெரீஇ வந்தி||
ஓரீஇ ஓரீஇ ஊரலர் எழவே.'

இது முதல் இரு சீர்க்கண்ணும் அளபெடுத்தமையால், இணை அளபெடை.

'அஃதே எனின், இணை முதலாகிய தொடை விகற்பங்கட்கு இலக்கியம் ஈண்டன்றே காட்டற்பாலது? மேற்காட்டியது என்னை? எனின், எழு விகற்பமும் முறையானே ஒரு செய்யுளுள்ளே வந்தது கண்டு கற்பார்க்கு எளிமை நோக்கித் தத்தம் தொடைகளோடும் இயையக் காட்டியதல்லது, இலக்கண முறைமையாவது ஈண்டுக் காட்டுவது எனக் கொள்க.

---

* களிவண்டு † சொல்லியார்.

|| வருதீஇ. ஓங்கிருங் குளிர்தோட் டிருஞ்சுனை, ஓங்கிருங் குளிர்கோட் டிருஞ்சுனை, ஓங்கிருங் குனிக்கோட்டிருஞ்சுனை. § இருந்து. ¶ பாருளும். ‡ வருதீஇ.

43] பொழிப்புத் தொடை [கக

முதலொடு மூன்றுஞ் சீர்த்தொடை பொழிப்பே.

'என்பது என் நுதலிற்றோ?' எனின், பொழிப்பு ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொழிப்பு: முதற்சீர்க்கண்ணும் மூன்றுஞ்சீர்க்கண்ணும் மோனை முதலாயின வரத் தொடுத்தால், பொழிப்புத்தொடை எனப்படும் (என்றவாறு).

அவை பொழிப்பு மோனை, பொழிப்பு எதுகை, பொழிப்பு முரண், பொழிப்பு இயைபு, பொழிப்பு அளபெடை எனப்படும்.

'சீரிடை விட்டினி தியாப்பது பொழிப்பாம்.'

எனவும்,

'ஒருசீர் இடைவிடிற் பொழிப்பொரூஉ இருசீர்.'

எனவும் பிறரும் சொன்னர் ஆகலின்.

வரலாறு:

[நேரிசை ஆசிரியப்பா.]

'கணங்கொள் வண்டினம் கவர்வன மொய்ப்பக்
கழிசேர் அடைகரைக் கதிர்வாய் திறந்த
கண்போல் நெய்தல் கமழும் ஆங்கட்
கலிமாப் பூண்ட கடுந்தேர்
கவ்வைசெய் தன்றூற் கங்குல் வந்தே.'

இது முதற்சீர்க்கண்ணும் மூன்றுஞ்சீர்க்கண்ணும் முதலெழுத்து ஒன்றி வந்தமையால், பொழிப்பு மோனை.

[நேரிசை ஆசிரியப்பா.]

'பல்கால் வந்து மெல்லக் கூறிச்
சொல்லல் வனமையின் இல்லவை * உணர்த்தும் †
செல்புனல் உடுத்த ‡ பல்பூங் கழனி
நல்வயல் ஊரன் வல்லன்
ஒல்கா துணர்த்தும் § பல்குறை மொழியே.'

இது முதற்சீர்க்கண்ணும், மூன்றுஞ்சீர்க்கண்ணும் இரண்டாம் எழுத்து ஒன்றி வந்தமையால், பொழிப்பு எதுகை.

[நேரிசை ஆசிரியப்பா.]

'ஓங்குமலைத் தொடுத்த தாழ்ந்திலங் கருவி
செங்குரல் ஏனற் பைங்கிளி இரியச்
சிறுகுடித் ததும்பும் பெருங்கல் நாடனை
நல்லன் என்றும் யாமே;
தீயன் என்னுமென் தடமென் றோளே.' [1]

இது முதற்சீர்க்கண்ணும் மூன்றுஞ்சீர்க்கண்ணும் மறுதலைப்படத் தொடுத்தமையால், பொழிப்பு முரண்.

---

1. யா. வி. 38 உரைமேற்.

பி - ம். * நல்லவை, † எடுத்த. ‡ புணர்த்தும். § ஒல்லா துணர்த்தும்

[நேரிசை ஆசிரியப்பா.]

'பெருங்கண் கயலே; சிறியாழ் சொல்லே;
முருந்தம் பல்லே; புருவம் வில்லே;
மயிலே மற்றிவள் இயலே;
தண்கதுப் பறலே; திங்களும் நுதலே.'

இது கடைச்சீர்க்கண்ணும் இரண்டாஞ்சீர்க்கண்ணும் ஈற்றெழுத்து ஒன்றி வரத் தொடுத்தமையால், பொழிப்பு இயைபு.

[நேரிசை ஆசிரியப்பா.]

'சுரூஅக் கொட்கும் அரூஅ இருங்கழிக்
காராஅம் கலித்தலின் விராஅல் மீனினம்
படாஅ என்னையர் வலையேஎ
கெடாஅ நாமிவை விடாஅம் விலக்கே.'

இது முதற்சீர்க்கண்ணும் மூன்றாஞ்சீர்க்கண்ணும் அளபெடுத்து ஒன்றி வரத் தொடுத்தமையாற் பொழிப்பு அளபெடை.

44] ஒரூஉத் தொடை [சுஉ

சீரிரண் டிடைவிடத் தொடுப்ப தொரூஉத்தொடை..
'என்பது என் நுதலிற்றோ?' எனின், ஒரூஉத்தொடை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொழிப்பு: நடு இரு சீர்க்கண்ணும் இன்றி, முதற்சீர்க்கண்ணும் நாலாஞ்சீர்க்கண்ணும் மோனை முதலாயின வரத் தொடுப்பது ஒரூஉத்தொடை எனப்படும் (என்றவாறு).

அவை ஒரூஉ மோனை, ஒரூஉ எதுகை, ஒரூஉ முரண், ஒரூஉ இயைபு ஒரூஉ அளபெடை என வழங்கப்படும்.

'சீரிரண் டிடைவிடத் தொடுப்ப தொரூஉ.'

என்றாலும் அதிகார வசத்தால் அப்பொருளைப் பயக்கும்;

'இருசீர் இடையிடின் ஒரூஉவென மொழிப.' 1

என்றார் தொல்காப்பியனார் ஆகலானும்,

'சீரிரண் டிடைவிடின் ஒரூஉவென மொழிப.'

என்றார் பல்காயனார் ஆகலானும்; பெயர்த்தும் 'தொடை' என்று சொல்ல வேண்டியது என்னை?' எனின், தொடை விகற்பம் எல்லாம் நாற்சீர் அடியுள்ளே வழங்கப்படும் என்பது எல்லா ஆசிரியர்க்கும் துணிபென்பது அறிவித்தற்கு ஒரு தோற்றம் உணர்த்தியது எனக் கொள்க.

வரலாறு:

[நேரிசை ஆசிரியப்பா.]

'புயல்விற் றிருந்த காமர் புறவிற்
புல்லார் இனநிரை ஏறொடு புகலப்
புன்கண் மாலை உலகுகண் புதைப்பப்
புரிவளைப் பணைத்தோட் குறுமகள்
புலம்புகொண் டனளாம் நம்வயிற் புலந்தே.'

1. தொல். செய். 411.

இஃது இடை இருசீர்க்கண்ணும் இன்றி, முதற்சீர்க்கண்ணும் கடைச் சீர்க்கண்ணும் முதலெழுத்து ஒன்றி வரத் தொடுத்தமையால், ஒரூஉ மோனை.

[நேரிசை ஆசிரியப்பா.]

'பரியல் யாவதும் பைந்தொடி அரிவை!
பொரியரை மராஅத்து வாலிணர்ச் சுரிமலர்
எரியிணர்க் காந்தளோ டெல்லுற விரியும்
வரிவண் டார்க்கும் நாடன்
பிரியா நுதல் பேணின்மற் றரிதே.'

இஃது இடை இரு சீர்க்கண்ணும் இன்றி, முதற்சீர்க்கண்ணும் நான்காஞ்சீர்க் கண்ணும் இரண்டாம் எழுத்து ஒன்றி வரத் தொடுத்தமையால், ஒரூஉ எதுகை

[நேரிசை ஆசிரியப்பா.]

'குறுங்கால் ஞாழல் கொங்குசேர் நெடுஞ்சினை
ஓங்குதிரை உதைப்ப மருங்கிற் சூழ்ந்த
தண்ணந் துறைவன் பின்னிலை வெம்படர்
பரிந்துநாம் களையா மாயிற் பரியான்
பெருங்கடற் படப்பைநம் சிறுகுடிப்
பொங்குதிரைப் பெண்ணை மடலொடு வருமே.'

இஃது இடை இரு சீர்க்கண்ணும் இன்றி, முதற்சீர்க்கண்ணும் கடைச்சீர்க் கண்ணும் ஈற்று எழுத்து ஒன்றி வரத் தொடுத்தமையால், ஒரூஉ இயைபு.

[நிலைமண்டில ஆசிரியப்பா.]

'பல்லே முத்தம்; புருவம் வில்லே;
சொல்லே அமுதம்; அணங்கவள் நுதலே;
இயலே எண்ணினும் தெரியினும் மயிலே;
கயலே கண்ணும்; நற் கூந்தலும் அறலே.'

இஃது இடை இரு சீர்க்கண்ணும் இன்றி, முதற்சீர்க்கண்ணும் கடைச் சீர்க் கண்ணும் ஈற்று எழுத்து ஒன்றி வரத் தொடுத்தமையால், ஒரூஉ இயைபு.

[நேரிசை ஆசிரியப்பா.]

'வழாஅ நெஞ்சிற்றந் தெய்வந் தொழாஅ *
செறுஅச் செய்தியின் யாங்கணும் பெறுஅ †
தேளம் பகலல்கல் ‡ ஓரீஇத்
தாஅம் செய்வதே செய்வ மனஅ.' §

இது முதற்சீர்க்கண்ணும் கடைச்சீர்க்கண்ணும் அளபெழுந்து வரத் தொடுத் தமையால், ஒரூஉ அளபெடை.

'ஒரூஉத்தொடை,
இருசீர் இடைவிடில் என்மனார் புலவர்.'

என்றார் அவிநயனார்.

---

பி-ம். * நெஞ்சிற் றெய்வமுந் தொழாஅள் † பெறுஅள் ‡ பல்பகல் § தாஅள் செய்வதுவே செய்வ மெனஅ.

45] கூழைத் தொடை. [கரு

மூவொரு சீரும் முதல்வரத் தொடுப்பது
கூழை என்மனுர் குறியுணர்ந் தோரே.

'என்பது என் நுதலிற்ரே?' எனின், கூழைத் தொடை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொழிப்பு: கடைச்சீர்க்கண் இன்றி, முதல் மூன்று சீர்க்கண்ணும் மோனை முதலாயின வரத் தொடுப்பின், அவற்றைக் கூழை மோனை, கூழை எதுகை, கூழை முரண், கூழை இயைபு, கூழை அளபெடை என்று சொல்லுவர் புலவர் (என்றவாறு).

பிறரும்,

'மூன்றுவரிற் கூழை; நான்குவரின் முற்றே.'

என்ருர் ஆகலின்.

வரலாறு:

[நேரிசை ஆசிரியப்பா.]

'அருவி அரற்றும் அணிதிகழ்* சிலம்பின்
அரக்கின் அன்ன அவிழ்மலர்க் காந்தள்
அஞ்சிறை அணிவண் டரற்றும் நாடன்
அவ்வளை அமைத்தோள் அழிய
அகன்றனன் அல்லனோ அளியன் எம்மே.'†

இது முதல் மூன்று சீர்க்கண்ணும் முதல் எழுத்து ஒன்றி வரத் தொடுத்தமையால், கூழை மோனை.

[நேரிசை ஆசிரியப்பா.]

'பொன்னின் அன்ன புன்னை நுண்டா
தன்ன மென்பெடை தன்னிறம் இழக்கும்
பன்மீன் மூன்றுறைத் தொன்னீர்ச் சேர்ப்பன்
பின்னிலே என்வயின் நின்றனன்
என்னோ நன்னுதல்! நின்வயிற் குறிப்பே?'

இது கடைச்சீர்க்கண் இன்றி, முதல் மூன்று சீர்க்கண்ணும் இரண்டாம் எழுத்து ஒன்றி வரத் தொடுத்தமையால், கூழை எதுகை.

[நிலைமண்டில ஆசிரியப்பா.]

'கரிய வெளிய செய்ய கானவர்
பெரிய சிறிய இட்டிய பிறழ்ந்த‡
நெடிய குறிய நிகரில் நீலம்
படிய பாவை மாயோள் உண்கண்§
கடிய கொடிய தன்மையும்|| உளவே.'

இது முதல் மூன்று சீர்க்கண்ணும் மறுதலைப்படத் தொடுத்தமையால், கூழை முரண்.

---

பி-ம்- * அணிதிகழ் † எமையே ‡ வீட்டிய விறந்த § படிய பாவை யொண்கண் || தன்மை.

[நேரிசை வெண்பா.]

'நின்றழல் செந்தீயும் தண்புனலும் இவ்விரண்டும்
மின்கலி வானம் பயந்தாங்கும்—என்றும்
பெருந்தோளி கண்ணும் இலங்கும் எயிறும்
மருந்தும் பிணியும் தரும்.'

இது கடை மூன்று சீர்க்கண்ணும் ஈற்றெழுத்து ஒன்றி வரத் தொடுத்தமையால், கூழை இயைபு.

[நிலைமண்டில ஆசிரியப்பா.]

'விடாஅ விடாஅ வெரீஇப் பெயரும்
தொடாஅத் தொடாஅத் தொடாஅப் பகழியாப்ப்*
பெறுஅப் பெறுஅப் பெறுஅப் பெயரெனச் †
செறுஅச் செறுஅச் செறுஅ நிலையே.'

இது முதல் மூன்று சீர்க்கண்ணும் அளபெழுத்து ஒன்றி வரத் தொடுத்தமை யால், கூழை அளபெடை.

46] மேற்கதுவாய்த் தொடை. [சச

முதலயற் சீரொழித் தல்லன மூன்றின்
மிசைவரத் தொடுப்பது மேற்கது வாயே.

'என்பது என் நுதலிற்றோ?' எனின், மேற்கதுவாய் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொழிப்பு: இரண்டாம் சீர்க்கண் இன்றி, அல்லாத மூன்று சீர்க் கண்ணும் மோனை முதலாயின வரத் தொடுத்தால், அவை மேற்கதுவாய் மோனை, மேற்கதுவாய் எதுகை, மேற்கதுவாய் முரண், மேற்கதுவாய் இயைபு, மேற்கதுவாய் அளபெடை என்று வழங்கப்படும் (என்றவாறு).

அவை வருமாறு:

[நிலைமண்டில ஆசிரியப்பா.]

'கணைக்கால் நெய்தல் கண்போல் கடிமலர்
கருங்கால் ஞாழலொடு கவின்பெறக் கட்டிக்
கமழ்தார் மார்பன் கவளம் கடிப்பக்
கங்குல் வந்த கறங்குமணிக் கலிமா
கடல்கெழு பாக்கம் கல்லெனக் கடுப்பக்
கங்குல்வந் தன்றாற் கதம்பரி கலந்தே.'

இஃது இரண்டாம் சீர்க்கண் இன்றி, ஒழிந்த மூன்று சீர்க்கண்ணும் முதல் எழுத்து ஒன்றி வரத் தொடுத்தமையால், மேற்கதுவாய் மோனை.

[நேரிசை ஆசிரியப்பா.]

'கண்டலங் கைதையொடு விண்டன ‡ முண்டகம்
தண்டா நாற்றம் வண்டுவந் துண்டவின்
நுண்டா துறைக்கும் வண்டலந் தண்டுறை
கண்டனம் வருதல் விண்டன §
தெண்கடற் ‖ சேர்ப்பனைக் கண்டவெம் கண்ணே.'

---

பி-ம். * பகழியர் † பெயர்கள் ‡ விண்ட § கண்டன வருதல் விண்ட ‖ தெண்டிரைச்.

இஃது இரண்டாம் சீர்க்கண் இன்றி, ஒழிந்த மூன்று சீர்க்கண்ணும் இரண்டாம் எழுத்து ஒன்றி வரத் தொடுத்தமையால், மேற்கதுவாய் எதுகை.

[நேரிசை ஆசிரியப்பா.]

'வெளியவும் வெற்பிடைக் கரியவும் செய்யவும்
ஒளியுடைச் சாரல் இருளவும் வெயிலவும்
பரியவும் பன்மணி சிறியவும் திகரவும்
முத்தொடு செம்பொனும் விரைஇச்
சிற்றிலும் எங்கள் பேரிலும் நடுவே.'

இஃது இரண்டாம் சீர்க்கண் இன்றி, ஒழிந்த மூன்று சீர்க்கண்ணும் மறுதலைப்படத் தொடுத்தமையால், மேற்கதுவாய் முரண்.

[இன்னிசை வெண்பா.]

'இருங்கண் விசும்பின்கண் மான்ற * முகங்காண்
கருங்கண் முலையின்கண் வேங்கை மலர்காண்
குறுந்தண் சுனைக்கண் மலர்ந்த உவக்காண் †
நறுந்தண் கதுப்பினுள் கண்.'

இஃது இரண்டாம் சீர்க்கண் இன்றி, ஒழிந்த மூன்று சீர்க்கண்ணும் ஈற்றெழுத்து ஒன்றி வரத் தொடுத்தமையால், மேற்கதுவாய் இயைபு.

[நிலைமண்டில ஆசிரியப்பா.]

'கூஉம் புடைக்கலம் சுறுஅ அருஅ ‡
வருஅ இடைக்கழி காஅம் உாஅம்
ஏஎம் எமக்கள மாஅல்! எனுஅத் §
தாஅம் சொல்லவும் பெருஅர் இதோஓ.'

இஃது இரண்டாம் சீர்க்கண் இன்றி, ஒழிந்த மூன்று சீர்க்கண்ணும் அளபெழுந்து ஒன்றி வரத் தொடுத்தமையால், மேற்கதுவாய் அளபெடை.

47] கீழ்க்கதுவாய்த் தொடை. [கரு

ஈற்றயற் சீரொழித் தெல்லாம் தொடுப்பது
கீழ்க்கது வாயின் கிழமைய தாகும்.

'என்பது என் நுதலிற்றோ?' எனின், கீழ்க்கதுவாய் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொழிப்பு: மூன்றாஞ்சீர்க்கண் இன்றி, முதல் இருச்சீர்க்கண்ணும் கடைச்சீர்க்கண்ணும் மோனை முதலாயின வரத் தொடுத்தால், அவை கீழ்க்கதுவாய் மோனை, கீழ்க்கதுவாய் எதுகை, கீழ்க்கதுவாய் முரண், கீழ்க்கதுவாய் இயைபு, கீழ்க்கதுவாய் அளபெடை எனப்படும் (என்றவாறு).

'கீழ்க்கது வாயின் கிழமைய தாகும்,' என்பது, 'கீழ்க்கதுவாய் என்னும் பெயரினை உரிமையாக உடைத்தாம்,' என்றவாறு.

'முடிவதன் முதலயல் கதுவாய் கீழ்மேல்'

என்றார் பிறரும்.

---

பி-ம். * ஈன்ற. † உவைக்காண். ‡ கூறுஅ. § வேஎ மெமக்குள்ள மாஅலே நாஅத்.

அவை வருமாறு :

[நேரிசை ஆசிரியப்பா.]

'குழலிசைக் குரல தும்பி குறைத்த*
குண்டுசுனைக் குற்ற மாயிதழ்க் குவளை
குலைவேற்† குறவன் பாசிலைக் குளவியொடு
குறிநெறிக்‡ குரல்வகுத் தடைச்சிய
குறிஞ்சிசூழ் குவட்டிடைச் செய்தநம் குறியே.'

இது மூன்றுஞ்சீர்க்கண் இன்றி, ஒழிந்த மூன்றுசீர்க்கண்ணும் முதலெழுத்து ஒன்றி வரத் தொடுத்தமையால், கீழ்க்கதுவாய் மோனை.

[நேரிசை வெண்பா.]

'அடும்பின் நெடுங்கொடி ஆழி எடுப்பக்
கடுந்தேர் நெடும்பகற் றேன்றும்—கொடுங்குழாய்!
பாடுவண் டாடும் பனிமலர் நீடுறை
நாடுவாம் கூடும் பொழுது.'

இது மூன்றுஞ்சீர்க்கண் இன்றி, ஒழிந்த மூன்றுசீர்க்கண்ணும் இரண்டாம் எழுத்து ஒன்றி வரத் தொடுத்தமையால், கீழ்க்கதுவாய் **எதுகை.**

[நேரிசை ஆசிரியப்பா.]

'விரிந்தும் சுருங்கியும் வில்லென ஒசிந்தும்
குவிந்தும் மலர்ந்தும் குலையுறக் குலாவியும்
பெருகியும் சிறுகியும் பின்னெறி நின்றும்§
இருந்தோள் உண்கண் மலர்ந்தும்‖
பொருந்தா பொருந்திய புருவம்புடை பெயர்ந்தே.'¶

எனவும்,

'கருங்கண் வெள்வளை வார்குழைச் சேயிழை
இரும்பும் பொன்னும் இயல்காழ் மணியும்'

எனவும் இவை மூன்றுஞ்சீர்க்கண் இன்றி, ஒழிந்த மூன்றுசீர்க்கண்ணும் மறுதலைப்படத் தொடுத்தமையால், கீழ்க்கதுவாய் முரண்.

[தரவு கொச்சகம்.]

'அன்னையும் என்னையும் தன்னில் கடியும்
பன்னுளும் பாக்கமும் ஓவா தலர்தூற்றும்
பூக்கமழும் மெல்லம் புலம்பன் பிரியினும்
இன்னுயிர்யாம் இன்னும் இறந்தி ரேமுளேம்.'**

இது மூன்றுஞ்சீர்க்கண் இன்றி, ஒழிந்த மூன்றுசீர்க்கண்ணும் ஈற்றெழுத்து ஒன்றி வரத் தொடுத்தமையால், கீழ்க்கதுவாய் **இயைபு.**

[நேரிசை ஆசிரியப்பா.]

'ஆஅம் பூஉ மணிமலர் தொடாஅ
யாஅம் தேஎம் தண்புனம் தழாஅம்
நாஅம் குறியிடை நண்ணும்
தேஎ மாஅம் பொருப்பிடை எஞஅ.'

இது மூன்றுஞ்சீர்க்கண் இன்றி, ஒழிந்த மூன்றுசீர்க்கண்ணும் அளபெழுத் தமையால், கீழ்க்கதுவாய் அளபெடை.

---

பி-ம். *குழலிசை குரற்றும்பி காணக் குறைத்த †கொலைவேற் ‡குறுநெறிக் §பின்னை நிமிர்ந்தும் ‖இருந்து முண்கண் மலர்ந்தும் பொருந்தா ¶பொருந்திய புருவம் புடைபெயர்ந் தனவே. **இன்னுமியாம் இன்னுயிரிறந்திரேமுளேம்.

அஃதே எனின்,

'ஈற்றயற் சீரொழித் தெல்லாம் தொடுப்பது
கீழ்க்கதுவாய் ஆகும்.'

என்றாலும், கருதிய பொருளைப் பயக்கும். 'கிழமைய தாகும்,' என்று மிகுத்துச் சொல்ல வேண்டியது என்னை?' [எனின்], கையனார் முதலாகிய ஒருசார் ஆசிரியர் இரண்டாஞ்சீர்க்கண் இல்லாததனைக் 'கீழ்க்கதுவாய்' என்பது, மூன்றாஞ்சீர்க்கண் இல்லாததனை 'மேற்கதுவாய்' என்றும் வழங்குவர் என்பது அறிவித்தற்கு ஒரு தோற்றம் உணர்த்தியது எனக் கொள்க.

48] முற்றுத் தொடை [கக

சீர்தொறும் தொடுப்பது முற்றெனப் படுமே.

'என்பது என் நுதலிற்றோ?' எனின், முற்றுத் தொடை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொழிப்பு: நான்கு சீர்க்கண்ணும் மோனை முதலாயின வரத் தொடுத்தவை முற்று மோனை, முற்று எதுகை, முற்று முரண், முற்று இயைபு, முற்று அளபெடை என்று சிறப்பித்துச் சொல்லப்படும் (என்றவாறு).

'சீர்தொறும் தொடுப்பது முற்று,' என்னாது, 'முற்றெனப் படுமே' என்று சிறப்பித்தது,

'கரியவும் வெளியவும் செய்யவும் பசியவும்'

என்றாற்போல முற்றும் முரணாது, முதலிரு சீரும் முரணிப் பின்னைக்கடை இரு சீரும் மற்றொருவாற்றான் முரணினும் முற்று முரணேயாம் என்றற்கும், இணை முதலாகிய விகற்பமும், கடையிணை முதலாகிய விகற்பமும் அடிதோறும் வருவது சிறப்புடைத்து, ஓரடியுள்ளும் வரப்பெறுமாயினும் என்றற்கும் எனக் கொள்க.

'விதப்புக் கிளவி வேண்டியது விளைக்கும்.'

என்ப ஆகலின்.

'மூன்றுவரிற் கூழை; நான்குவரின் முற்றே.'

என்றார் பிறரும் எனக் கொள்க.

அவை வருமாறு:

[நேரிசை ஆசிரியப்பா.]

'அணியிழை அமைத்தோள் அம்பசப் படைய
அரிமதர் அலர்க்கண் அரும்பனி அரும்ப
அரும்பொருட் ககன்ற அறவோர்
அருளிலர் அகற்பின் அழியுமென் அறிவே.'

இஃது கல்லாச்சீர்க்கண்ணும் முதலெழுத்து ஒன்றி வாத தொடுத்தமையால், முற்று மோனை.

[நேரிசை வெண்பா.]

'கல்லிவர் முல்லையும் மெல்லியலார் பல்லரும்பும்
புல்லார்ந்து * கொல்லேறு நல்லானைப்—புல்லின
பல்கதிரோன் எல்லைக்கட் செல்லுமா றில்லைகொல்
சொல்லியலார் † சொல்லிய சொல்?'

இது சீர்தொறும் இரண்டாம் எழுத்து ஒன்றி வந்தமையால், முற்று எதுகை.

---

பா-ம். * புல்லருந்து † சொல்லியார்

[நேரிசை ஆசிரியப்பா.]

'நெடுந்தோட் குறுந்தொடி வீங்குபிணி நெகிழ
அரும்பொருள் எளிதெனச் சென்றவர் வருதல்
செய்த்தன் றணித்தெனத் தேற்றவும் தேறாய்
அகஞ்சுடப் புறஞ்செவி நிறுத்தனை கிடத்தல்
சின்மொழிப் பல்லிருங் கூந்தல்
பெருந்தகு சீறடி நன்னுதல்! நீதே.'

இஃது எல்லாச்சீர்க்கண்ணும் மறுதலைப்படத் தொடுத்தமையால், முற்று முரண்.

[இன்னிசை வெண்பா.]

'கண்ணும் புருவமும் மென்றோளும் இம்மூன்றும்
வள்ளிதழும் வில்லும் விறல்வேயும் வெல்கிற்கும்;
பல்லும் பகரும் மொழியும் இவையிரண்டும்
முல்லையும் யாழும் இகும்.'

இஃது எல்லாச்சீர்க்கண்ணும் ஈற்றெழுத்து ஒன்றி வந்தமையால், முற்று இயைபு.

[நேரிசை ஆசிரியப்பா.]

'குராஅம்* விராஅம் பராஅம்† உராஅம்
தொழாஅள் எழாஅள் விடாஅள் தொடாஅள்
இதோஒ இதோஒ என்மகள்
எலாஅ! எலாஅ! யாங்குற் றனளே?'

இது சீர்தோறும் அளபெழுந்தமையால் முற்று அளபெடை. பிறவும் அன்ன.

'அவைதாம்,
முதலோ டயல்கொள்வ திணை; அயல் இன்றி
மூன்றுஞ் சீரது பொழிப்பிரண் டிடையிட்
டிறுதியொடு கொள்வ தொரூஉ; இறுதிச்
சீரொழித் தேனைய தொன்றிற் கூழை;
முதலீ றடைந்தவற் றின்மை இருவகைக்
கதுவாய்; முற்றும் நிகழ்வது முற்றே;
முதலொடெட் டாகும் என்மனர் புலவர்.'

என்றார் பரிமாணனார். அவர் இயைபுத்தொடைக்கு விகற்பம் வேண்டிற்றிலர். என்னை?

'செந்தொடை இயைபிவை அல்லா நான்கும்[1]
முதற்சீர் அடியால் விகற்பம் கொள்ப.'

[பரிமாணனார்]

என்றார் ஆகலின்.

---

1 'நான்கும்' என்றது மோனை, எதுகை, முரண், அளபெடை என்பவற்றை என்க.
* காராஅம் † மாராஅம்.

[கட்டளைக் கலித்துறை.]

'இருசீர் மிசையிணை யாகும் பொழிப்பிடை யிட்டொரூஉவாம்
இருசீர் இடையிட்ட தீறிலி கூழை முதலிறுவாய்
வருசீர் அயலில மேல்கீழ் வகுத்தமை தீர்கதுவாய்
வருசீர் முழுவதும் ஒன்றின்முற் றுமென்ப மற்றவையே.' 1

'மோனை விகற்பம் அணிமலர் மொய்த்துட னுமியைபிற்
கேனை எதுகைக் கினம்பொன்னின் அன்ன இனிமுரணிற்
கான விகற்பமும் சிறடிப் பேர தளபெடையின்
தான விகற்பமும் தாட்டா மரையென்ப தாழ்குழலே!' 2

இவற்றை விரித்து உரைத்துக்கொள்க.

49] செந்தொடை, இரட்டைத்தொடை, அந்தாதித்தொடை. [கஎ

செந்தொடை இரட்டையொ டந்தாதி எனவும்
வந்த வகையான் வழங்குமன் பெயரே.

'என்பது என் நுதலிற்றோ?' எனின், இன்னும் சில தொடைகளது பெயர் வேறுபாடு உணர்த்துவான் எடுத்துக்கொண்டார்; அவற்றுள் இச்சூத்திரம் செந்தொடையும், இரட்டைத்தொடையும், அந்தாதித்தொடையும் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

**இதன் பொழிப்பு:** செந்தொடையும், இரட்டைத்தொடையும், அந்தாதித் தொடையும் என்று பெயரிட்டு வழங்கப்படும். மற்றொழிந்த தொடைகளும், வரலாற்று முறைமையானே பெயரிட்டு வழங்கப்படும் (என்றவாறு).

செந்தொடையும், இரட்டைத்தொடையும், அந்தாதித்தொடையும் ஆமாறு போக்கிக் கூறுப.

'எனவும், வந்த வகையான் வழங்குமென் பெயரே.'

என்றதனால், 'தொடையெல்லாம் ஆராய்ந்து விகற்பித்துக் காணியபுகின், பல்கும்; சொல்லி உலப்பிக்கலாகா, அவற்றை வந்த வகையாற் பெயர் கொடுத்து வழங்கிப் போக்கின் அல்லது,' என்பது சொல்லப்பட்டதாயிற்று.

அவைதாம் பதின்மூவாயிரத்து அறுநூற்றுத் தொண்ணூற்றென்பது என்பாரும் 3, வரம்பில என்பாரும் என இரு திறத்தர் ஆசிரியர். என்னை?

'முந்திய மோனை எதுகை அளபெடை
அந்தமில் முரணே செந்தொடை இயைபே
பொழிப்பே ஒரூஉவே இரட்டை என்னும்
இயற்படு தொடைகள் இவைமுத லாகப்
பதின்மூ வாயிரத் தறுநூ றன்றியும்
தொண்ணூற் றென்பதென் றெண்ணினர் புலவர்.'

'வல்லொற்றுத் தொடர்ச்சியும் மெல்லொற்றுத் தொடர்ச்சியும்
இடையொற்றுத் தொடர்ச்சியும் முறைபிறழ்ந் தியலும்.'

என்றார் சங்கயாப்பு உடையார்.

---

1, 2 யா.கா. 19, 20. 3 இங்ஙனம் கூறியவர் இளம்பூரணர் (தொல். பொ. 413 உரை).

'மெய்பெறு மரபிற் றொடைவகை தானே
ஐயீ ராயிரத் தாறைஞ் ஞூற்றொடு
தொண்டுதலை இட்ட பத்துக்குறை எழுநூற்
றொன்றும் என்ப* உணர்ந்திசி னோரே.' 1

என்றார் தொல்காப்பியனார்.

'மோனை எதுகை முரணே அளபெடை
ஏனைச் செந்தொடை இயைபே பொழிப்பே
ஒரூஉவே இரட்டை ஒன்பதும் பிறவும்
வருவன விரிப்பின் வரம்பில என்ப.'

என்றார் பல்காயனார்.

பதின்மூவாயிரத்து அறுநூற்றுத் தொண்ணூற்று ஒன்பது தொடை ஆமாறும், அவற்றுள் மிக்கு வருமாறும் உபதேச முறையான் உறழ்ந்து கொள்க.

உபதேச முறைமையால் உறழுமாறு: நான்கு பாவும் பெற்ற ஐம்பத்தொரு நிலத்தவாகி விரிந்த அறுநூற்று இருபத்தைந்தடியும், அவற்று ஓரோ அடி இருபத்திரண்டு தொடையும் பெற்று பெறப் பதின்மூவாயிரத்து எழுநூற்றைம்பதாய் வரும். அவற்றுள் ஐம்பத்தொரு நிலமும் களையப் பதின்மூவாயிரத்து அறுநூற்றுத் தொண்ணூற்றென்பது தொடையாம். அடியிரண்டு இயைந்த வழித் தொடையாம் என்ப வாகலின், ஐம்பத்தொரு நிலமும் களையப்பட்டன. என்னை?

[நேரிசை வெண்பா.]

'ஆறிரண்டோ டைந்தடியை 2 ஐந்நான் கிருதொடையான்
மாறி நிலமைம்பத் தொன்றகற்றத்—தேறும்
ஒருபதின்மூ வாயிரத்தோ டொன்றான மாகி
வருமெழுநூ றென்னும் வகை.

அறுநூற்று இருபத்தைந்து அடியாவன: ஆசிரிய அடி இருநூற்று அறுபத்தொன்றும், வெண்பா அடி இருநூற்று முப்பத்திரண்டும், கலியடி நூற்று முப்பத்திரண்டும் என இவை. என்னை?

---

1 தொல். பொ. 413. 2 'ஆறிரண்டோடைந்தடி' என்றது, முறையே ஆறு இரண்டு ஐந்து என்னும் எண்களை நிறுவி நோக்க அமையும் 625 அடிகளை என்க.

பி-ம். * றென்பஃ தென்ப (இப்பாட பேதங் கொண்டார் பேராசிரியரும் நச்சினார்க்கினியருமாவர்).

பத்துக்குறை எழுநூற்றென்பஃது, அறுநூற்றுத் தொண்ணூற்றென்பது, தொண்டு தலையிட்ட அறுநூற்றுத் தொண்ணூற்றென்பது, எழுநூற்றெட்டாதல் காண்க. இக்கணக்கிட்டவர் பேராசிரியர்.

இனி நச்சினார்க்கினியர், 'பத்துக்குறை எழுநூற்றென்பஃது, அறுநூற்றுத் தொண்ணூற்றென்பஃது எனக் கொண்டு, அதனைத் தெரண்டு தலையிடுதலாவது, ஒன்பதாற் பெருக்கல் எனக் கருதி, 'ஒன்பதாற் பெருக்கிய அறுநூற்றுத் தொண்ணூற்றென்பது, ஆறாயிரத்து இருநூற்றுத் தொண்ணூற் றொன்று,' என்று கொண்டு இதனை ஐயீராயிரத்து ஆறைஞ்ஞூற்றொடு கூட்டித் தொடை வகை பத்தொன்பதினாயிரத்து இருநூற்றுத் தொண்ணூற்றொன்று என்றார்.

[நேரிசை வெண்பா.]

'இருநூற் றிருமுப்பத் தொன்றகவற் கேனை
இருநூற்றே டெண்ணான்கு வெள்ளைக்—கொருநூற்று
முப்பத் திரண்டாம் முரற்கைக்1 கிவையறுநூற்
றற்றமில் ஐயைந் தடி.2

இருபத்திரண்டு தொடையாவன ;

[நேரிசை வெண்பா.]

'மோனை இரண்டாம் ; எதுகையோர் எட்டாகும் ;
ஏனை முரணைந் தியைபொன்றும் ;—ஏனைப்
பொழிப்பாதி ஐந்தும் குறிப்புத் தொடையோ
டிழுக்கா இருபத் திரண்டு.'

என இவை.

மோனை இரண்டாவன : அடிமோனையும் கிளைமோனையும் என இவை.

எதுகை எட்டாவன : இரண்டாம் எழுத்து ஒன்றியதூஉம், மூன்றாம் எழுத்து ஒன்றியதூஉம், சீர்முழுது ஒன்றியதூஉம், கிளை எதுகையும், வன்பால் எதுகையும், மென்பால் எதுகையும், இடைப்பால் எதுகையும், உயிர்ப்பால் எதுகையும் என இவை.

முரண் ஐந்தாவன : சொல்லும் சொல்லும் முரணுதலும், பொருளும் பொருளும் முரணுதலும், சொல்லும் பொருளும் சொல்லொடு முரணுதலும், சொல்லும் பொருளும் பொருளொடு முரணுதலும், சொல்லும் பொருளும் சொல்லினொடும் பொருளினொடும் முரணுதலும் என இவை.

இயைபுத் தொடை, கிளை இன்மையின் ஒன்றே.

பொழிப்பாதி ஐந்தாவன : பொழிப்பும், ஒரூஉம், செந்தொடையும், இரட்டைத் தொடையும, நிரனிறையும் என இவை.

குறிப்புத் தொடையாவது, எழுத்து அல்லாது மொழிக் குறிப்பு ஓசை. அது மாத்திரை குறித்து அலகு பெற வைக்கப்படும் என்று வேண்டினாமையான், அதனானும் தொடை கொள்ளபபடும்.

இருபத்திரண்டு தொடையாவன :

[குறள் வெண்பா.]

'அடிமோனை ஏனைக் கிளைமோனை என்று
முடியுமாம் மோனைப் பெயர்.'

[மோனை, 2.]

[நேரிசை வெண்பா.]

'இரண்டாம் எழுத்தொன்றல் மூன்றாவ தொன்றல்
திரண்டமைந்த சீர்முழுதும் ஒன்றல்—முரண்டீர்
கிளைவன்பால் மென்பால் இடைப்பால் உயிர்ப்பால்
விளையும் எதுகையோர் எட்டு.'

[எதுகை, 8.]

---

1 கலிக்கு   2 யா. வி. 95 உரைமேற்.

'மொழியும் மொழியும் பொருளும் பொருளும்
மொழியும் பொருளும் மொழியோ—டழியாத
சொல்லும் பொருளும் பொருளோடு சொற்பொருளும்
சொல்லும் பொருளுமோர் ஐந்து.'

[முரண், 5.]

'பொழிப்பொரூஉச் செந்தொடை பொய்தீர் இரட்டை
அழிப்பில் நிரனிறையோ டைந்தும்—எழுத்தல்
குறிப்புத் தொடையியையும்* கொண்டுரைப்பார்க் கல்லால்
நெறிப்படுமோ நூலின் நிலை?'†

[பிற தொடை, 7.]

ஐம்பத்தொரு நிலமாவன:

[நேரிசை வெண்பா.]

'வெள்ளை நிலம்பத் தகவல் பதினேழு
துள்ளல் இருநான்கு தூங்கல்பத்—தெள்ளா
இருசீர் அடிமுச்சீர் ஐந்தாறே ஐெண்சீர்
ஒருவா நிலமைம்பத் தொன்று.'

[நிலம், 51.]

இவற்றால் அடியும், தொடையும், நிலமும் ஆமாறு உரைத்துக்கொள்க.

'வரம்பில' என்பார் கருத்து, ஈண்டு உரைத்த பாவும் தொடையும் பிறவாற்றாற் பெருகி வரும் என்பதும், இவ்வாற்றானும் பிறவாற்றானும் உறழப் பெருகும் என்பதும். அவை போக்கி,

'நிரனிறை முதலிய பொருள்கோட் பகுதியும்'1

என்னும் சூத்திரத்துட் கூறுப.

[நேரிசை வெண்பா.]

'இணைகூழை முற்றாே டிருகதுவா யுள்ளிட்
டணையும் தொடையனைத்தும் கூட்டிக்—கணிதநூல்
வல்லார் தொடைப்பெருமை நோக்கி வரம்பின்மை
சொல்லார்; மற் றஃதன்றாே தோம்?‡

50] செந்தொடை. [கஅ

செந்தொடை ஒவ்வாது இறத்தன வாகும்.

'என்பது என் நுதலிற்றாே?' எனின், நிறுத்த முறையானே செந்தொடை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொழிப்பு: செந்தொடை என்பது, மேற் சொல்லப்பட்ட தொடையும் தொடை விகற்பமும் போலாமை, வேறுபடத் தொடுப்பது (என்றவாறு).

'ஒன்றிய தொடையொடும் விகற்பந் தம்மொடும்
ஒன்றாது கிடப்பது செந்தொடை தானே.'

என்றார் சிறுகாக்கைபாடினியார்.

'சொல்லிய தொடையொடு வேறுபட் டியலின்,
சொல்லியற் புலவரது செந்தொடை என்ப.'2

என்றார் தொல்காப்பியனார்.

---

1 யா. வி. 95. 2 தொல். பொ. 412.

பி-ம் * தொடையிவையும் † தொன்னூல் நிலை ‡ சொல்லாய்ந்தார் சொல்லும் தொகை.

'செந்தொடை ஒவ்வாத் திறத்தன வாகும்' என்பது: நேரசைக்கு நிரையசை வந்தும், நிரையசைக்கு நேரசை வந்தும், நேரசைக்கு நேரசையே வரினும் நான்கு நேரசையும் தம்முள் ஒவ்வாதே வந்தும், நிரையசைக்கு நிரையசையே வரினும் நான்கு நிரையசையும் தம்முள் ஒவ்வாதே வந்தும், இயற்சீருக்கு உரிச்சீரே வந்தும் உரிச்சீருக்கு இயற்சீரே வந்தும், இயற்சீருக்கு இயற்சீரே வரினும் தம்முள் ஒவ்வாது வந்தும், உரிச்சீருக்கு உரிச்சீரே வரினும் தம்முள் ஒவ்வாது வந்தும், ஓரடி ஒரு வண்ணத்தால் வந்து மற்றையடி மற்றொரு வண்ணத்தால் வந்தும், அசை சீர் இசை என்னும் மூன்றும் ஒவ்வாது வந்தும், அனுவும் இனமும் இன்றி முரணுக் கிடப்பது செந்தொடை என்றவாறு. என்னை?

'அசையினும் சீரினும் இசையினும் எல்லாம்
இசையா தாவது செந்தொடை தானே.'

என்றார் பல்காயனார்.

'ஒன்று தாவது செந்தொடைக் கியல்பே.'

என்றார் நற்றத்தனார்.

'செம்பகை யல்லா * மரபினதாம் தம்முள்
ஒன்று நிலையது செந்தொடை யாகும்.'

என்றார் காக்கைபாடினியார்.

'மாறல தொவ்வா மரபின செந்தொடை.'

என்றார் அவிநயனார்.

அவற்றை அசை விரளச் செந்தொடை, சீர் விரளச் செந்தொடை, இசை விரளச் செந்தொடை, முழு விரளச் செந்தொடை எனப் பெயரிட்டு வழங்குவாரும் உளரெனக் கொள்க. அவற்றுட் சில வருமாறு:

[நேரிசை ஆசிரியப்பா.]

'பூத்த வேங்கை வியன்சினை ஏறி
மயிலினம் அகவும் நாடன்
நன்னுதற் கொடிச்சி மனத்தகத் தோனே.' 1

எனவும்,

[நேரிசை ஆசிரியப்பா]

'இருங்கழி மலர்ந்த வள்ளிதழ் நீலம்
புலாஅன் † மறுகிற் சிறுகுடிப் பாக்கத்
தினமீன் வேட்டுவர் ஞாழலொடு மலையும் ‡
மெல்லம் புலம்ப! நெகிழ்ந்தன தோளே;
5. சேயிறு முகந்த நுரைபிதிர்ப் படுதிரைப்
பராஅரைப் புன்னை வாங்குசினைத் தொடுத்த
கானலம் பெருந்துறை நோக்கி இவளே
கொய்சுவற் புரவிக் கைவண் கோமான்
நற்றேர்க் குட்டுவன் கழுமலத் தன்ன
10. அம்மா மேனி தொன்னலம் சிதையத்
துஞ்சாக் கண்ணள் அலமரும்; நீயே
கடவுள் மராஅத்த முண்மிடை குடம்பைச்

1 தமிழ் நெறி. பொருள். 17 மேற்.

பி-ம். * இல்லா † ஊன்புலாஅன் ‡ மிலையும்.

சேவலொடு வதியும் சிறுகரும் பேடை
இன்னு துயவும் கங்குலும்
15. நும்மூா உள்ளுநவை; நோகோ யானே.' 1

எனவும் செந்தொடை வந்தவாறு. பிறவும் வந்தவழிக் கண்டுகொள்க.

51] இரட்டைத் தொடை [ கசு

இரட்டை அடிமுழு தொருசீர் இயற்றே.

'என்பது என் நுதலிற்றோ?' எனின், இரட்டைத் தொடை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொழிப்பு: ஓர் அடி முடியும் அளவும் ஒரு சீரே நடப்பது இரட்டைத் தொடை (என்றவாறு).

என்னை?

'முழுவதும் ஒன்றின் இரட்டை யாகும்.'

என்றார் பல்காயனார்.

'சீர்முழு தொன்றின் இரட்டை யாகும்.'

என்றார் நற்றத்தனார்.

'ஒருசீர் அடிமுழு தாயின் இரட்டை.'

என்றார் அவிநயனார்.

'ஒருசீர் அடிமுழுதும் வருவ திரட்டை.'

என்றார் மயேச்சுரர்.

'அடிமுழு தொருசீர் வரினஃ திரட்டை.'

என்றார் பரிமாணனார்.

அவற்றிற்குச் செய்யுள் வருமாறு:

[இன்னிசைச் சிந்தியல் வெண்பா]

'ஒக்குமே ஒக்குமே ஒக்குமே ஒக்கும்
விளக்கினிற் சீறெரி ஒக்குமே ஒக்கும்
குளக்கொட்டிப் பூவின் நிறம்.' 2

எனவும்,

[இன்னிசை வெண்பா]

'பாடுகோ பாடுகோ பாடுகோ பாடுகோ
பாவீற் றிருந்த புலவீர்காள்! பாடுகோ
ஞாயிற் றொளியான் மதிநிழற்றே தொண்டையார்
கோவீற் றிருந்தான் கொடை.' * 3

எனவும்,

[இன்னிசைச் சிந்தியல் வெண்பா]

'நிற்பவே நிற்பவே நிற்பவே நிற்பவே
செந்நெறிக் கண்ணும் புகழ்க்கண்ணும் சால்பினும்
மெய்ந்நெறிக் கண்ணும்வாழ் வார்.'

எனவும் இரட்டைத் தொடை ஆமாறு கண்டு கொள்க.

---

1 அகம். 270. 2 யா. வி. 53 உரைமேற். 3 நேமிநாதம், பக். 30.
பி-ம். § குடை.

'இரட்டை, அடி முழுதும் ஒரு சீர்த்து,' என்றது, 'ஒருசீர் இயற்றே' என்று மிகுத்துச் சொல்ல வேண்டியது என்னை?

[குறள் வெண்பா]

'குருத்துக் குறைத்துக் கொணர்ந்து நமது
கருப்புச் செறுப்புப் பாப்பு.'

எனவும்,

'குன்றேறி யானைப்போர் கண்டற்றாற் றன்கைத்தொன்
றுண்டாகச் செய்வான் வினை.' 1

எனவும்,

[நேரிசை ஆசிரியப்பா]

'மாயோன் மார்பில் ஆரம் போலச்
சேயுயர் நெடுவரைப் பெருந்தேன் ஒழுகு
சாரல் நாடன் நம்மோ டொருசிறை
சாரிற் சாரா நோயே
சாரா னாயின் நோய்தணி வின்றே.'

எனவும் இவ்வாறு சொல் வேறுபட்டு அடிமுழுதும் அலகிடுகையான் ஒரு சீரான் வரின் ஆகாது; சொல் வேறுபடாது, பொருள் பிறிதாகியும் ஆகாதும் வருவதே கொள்ளப்படும் என்பது அறிவித்தற்கு வேண்டப்பட்டது.

[பஃறொடை வெண்பா]

'ஓடையே 2 ஓடையே ஓடையே ஓடையே
கூடற் பழனத்தும் கொல்லி மலைமேலும்
மாறன் மதகளிற்று வண்பூ நுதல்மேலும்
கோடலங் கொல்லைப் புனத்தும் கொடுங்குழாய்!
நாடி உணர்வார்ப் பெறின்.'

இது பொருள் வேறாய் ஒரு சொல்லே வந்த இரட்டைத் தொடை.

'இயற்று' என்றதை, 'இயற்றே' என்று ஏகாரம் மிகுத்துச் சொல்ல வேண்டியது என்னை? ஓரடி முற்றெதுகையாய், மற்றையடி மற்றொரு முற்றெதுகையாய் வந்தால், அதனை 'இரு முற்று இரட்டை' என்பர்; நிரனிறையினையும் இரட்டைத் தொடைப்பாற்படுத்து வழங்குவர் ஒரு சார் ஆசிரியர் என்பது அறிவித்தற்கு வேண்டப்பட்டது.

வரலாறு:

[நேரிசை ஆசிரியப்பா]

'அடியியற் கொடியன மடிபுனம் விடியல்
மந்தி தந்த முந்து செந்தினை
உறுபார்ப் பருத்தும் நாடனொடு
சிறிதால் அம்ம நம்மிடைத் தொடர்பே.'

இஃது இருமுற்று இரட்டை.

'நிரல்நிறுத் தமைத்தலும் இரட்டைத் தொடையும்
மொழிந்தவற் றியலான் முற்றும் என்ப.' 3

என்னும் சூத்திரத்துக் காட்டிய நிரல்நிரைத் தொடைக்கு உதாரணம்,

---

1. குறள், 785 2 ஓடை - குடை வேலமரம், மலைவழி; யானை நெற்றிப்பட்டம், நீரோடை எனக்கொள்க. 3 தொல். பொ. 403.

[இன்னிசை வெண்பா]

'அடல்வேல் அமர்நோக்கி! நின்முகம் கண்டே
உடலும் இரிந்தோடும் ஊழ்மலரும் பார்க்கும்
கடலும் கனையிருளும் ஆம்பலும் பாம்பும்
தடமதியம் ஆமென்று தாம்.' 1

என்பதும் கண்டுகொள்க.

அவற்றை ஒரு பொருள் இரட்டை, பல பொருள் இரட்டை, ஒரு முற்று இரட்டை, இரு முற்று இரட்டை என்று பெயரிட்டு வழங்குவாரும் உளர் எனக் கொள்க.

52] அந்தாதித் தொடை [உ0

ஈறு முதலாத் தொடுப்பதந் தாதியென்
றோதினர் மாதோ உணர்ந்திசி னோரே.

'என்பது என் நுதலிற்றோ?' எனின், அந்தாதித் தொடை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொழிப்பு: 'எழுத்தும், அசையும், சீரும், அடியும் இறுவாய் எழுவாயாகத் தொடுப்பது அந்தாதித் தொடை', என்று மொழிந்தனர் புலவர் (என்றவாறு).

'ஈறு முதலா' எனவே, எழுத்தும், அசையும், சீரும், அடியும் இவற்றது முதலாகவே அடங்கும் எனக் கொள்க. என்னை?

'அடியும் சீரும் அசையும் எழுத்தும்
முடிவு முதலாச் செய்யுள் மொழியினஃ
தந்தாதித் தொடையென் றறையல் வேண்டும்.' 2

எனவும்,

'அசையினும் சீரினும் அடிதொறும் இறுதியை
முந்தா இசைப்பினஃ தந்தாதித் தொடையே.'

எனவும் பிறரும் கூறினர் ஆகலின்;

'பிறநூல் முடிந்தது தானுடம் படுதல்' 3

என்னும் தந்திர உத்தி ஆகலின், இவ்வாறு உரைக்கப்பட்டது எனினும் இழுக்காது.

'ஈறு முதலா' என்றது, 'இறுதி முதலாக' என்றவாறு.

வரலாறு:

[ஆசிரிய இணைக்குறட்டுறை]

'இரங்கு குயின்முழவா இன்னிசையாழ் தேனா
அரங்கம் அணிபொழிலா ஆடும்போலும் இளவேனில்!
அரங்கம் அணிபொழிலா ஆடி மாயின்
மரங்கொல் மணந்தகன்றார் நெஞ்சமென் செய்த திளவேனில்.' 4

என்றாற்போலக் கொள்க.

---

1. யா.வி. 95 உரைமேற். 2 நற்றத்தனார் (யா. கா. 17, உரைமேற். 3 நன். 14, 4. யா. வி. 76 உரைமேற்.

ஈறு முதலாத் தொடுப்பதந்தாதி என்ப உணர்ந்திசினோரே,' என்னாது 'ஓதினர் மாதோ' என்று மிகுத்துச் சொல்ல வேண்டியது எனின்?

இறுதியடியின் இறுதியும், முதலடியின் முதலும் ஒன்றாய் வருவனவற்றை 'மண்டல அந்தாதி' என்றும், அவ்வாறு வாராதனவற்றைச் 'செந்நடை அந்தாதி' என்றும், பல விரவி வருவனவற்றை 'மயக்கு அந்தாதி' என்றும், எழுத்து அசை சீர்களால் இடையிட்டு வந்த அடியந்தாதியை 'இடையிட்ட அடியாந்தாதி' என்றும் வழங்குவர் ஒரு சார் ஆசிரியர் என்பது அறிவித்தற்கு வேண்டப்பட்டது.

அவர் கூறுமாறு: மண்டல எழுத்தந்தாதி, செந்நடை எழுத்தந்தாதி, மண்டல அசையந்தாதி, செந்நடை அசையந்தாதி, மண்டலச் சீரந்தாதி, செந்நடைச் சீரந்தாதி, மண்டல அடியந்தாதி, செந்நடை அடியந்தாதி, மண்டல மயக்கந்தாதி, செந்நடை மயக்கந்தாதி, மண்டல இடையிட்ட அடியாந்தாதி, தெந்நடை இடையிட்ட அடியாந்தாதி எனக் கொள்க.

அவற்றுட் சில வருமாறு:

[நிலைமண்டில ஆசிரியப்பா]

'வேங்கையஞ் சாரல் ஓங்கிய மாதவி
விரிமலர்ப் பொதும்பர் மெல்லியல் முகமதி
திருந்திய சிந்தையைத் திறைகொண் டதுவே. *

இது மண்டல எழுத்தந்தாதி.

[நிலைமண்டில ஆசிரியப்பா.]

'பேதுற விகந்த பெருந்தண் காவிரி
விரிதிரை தந்த வெறிகமழ் வாசம்
சந்தனக் குழப்பு முலைமிசைத் தடவிய
வியனறுங் கோதைக்கு மெல்லிதால் நுசுப்பே.'

இது மண்டல அசையந்தாதி.

[நேரிசை ஆசிரியப்பா]

'முந்நீர் ஈன்ற அந்நீர் இப்பி
இப்பி ஈன்ற இலங்குகதிர் நித்திலம்
நித்திலம் பயந்த நேர்மணல் எக்கர்
எக்கர் இட்ட எறிமீன் உணங்கல்
5. உணங்கல் கவரும் ஓய்தாள் † அன்னம்
அன்னம் காக்கும் நன்னுதல் மகளிர்
மகளிர் கொய்த மயங்குகொடி அடம்பி ‡
அடம்பி அயலது § நெடும்பூந் தாழை
தாழை அயலது வீழ்குலைக் கண்டல்
10. கண்டல் அயலது முண்டகக் கானல்
கானல் அயலது காமரு நெடுங்கழி
நெடுங்கழி அயலது நெருங்குகுடிப் ‖ பாக்கம்
பாக்கத் தோளே பூக்கமழ் ஓதி
பூக்கமழ் ஓதியைப் புணர்குவை யாயின்

பி-ம். * திறைகொண் பனவே. † செந்தாள். ‡ அடம்பம் § அடம்பினயலது. ‖ நெடுங்குடிப்.

15. இடவ குடவ தடவ ஞாழலும்
இணர துணர்புணர் புன்னையும் கண்டலும்
கெழீஇய கானலஞ் சேர்ப்பனை இன்றித் *
தீரா நோயினள் † நடுங்கி
வாராள் அம்ம வருதுயர் பெரிதே!'

இத்தொடக்கத்தன செந்நடைச் சீரந்தாதி.

[நேரிசை ஆசிரியப்பா]

'உலகுடன் விளக்கும் ஒளிகிளர் அவிர்மதி [அசை]
மதிநலன் அழிக்கும் வளங்கெழு முக்குடை [சீர்]
முக்குடை நீழற் பொற்புடை ஆசனம்
ஆசனத் திருந்த திருந்தொளி அறிவன்
ஆசனத் திருந்த திருந்தொளி அறிவனை [அடி]
அறிவுசேர் உள்ளமோ டருந்தவம் புரிந்து
துன்னிய மாந்தரஃ தென்ப [எழுத்து]
பன்னருஞ் சிறப்பின் விண்மிசை உலகே.' 1

இது மண்டல மயக்கந்தாதி.

[நேரிசை ஆசிரியப்பா]

'பொன்னலர் துதைந்த பொரிதாள் வேங்கை [சீர்]
வேங்கை ஓங்கிய வியன்பெருங் குன்றம்
குன்றத் தயலது கொடிச்சியர் கொய்புனம் [அசை]
புனத்தயற் சென்ற சிலம்பன்
சிலம்படி மாதர்க்கு நிறைதோற் றனனே.'

இது சீரந்தாதியும் அசையந்தாதியும் வந்த செந்நடை மயக்கந்தாதி.

[நிலைமண்டில ஆசிரியப்பா]

'வேத முதல்வ! ஏதமில் அகணித!
தத்துவர் தலைவ! முத்தி முதல்வ!
வழுவா ஞானக் குழுவுடன் வந்து
துன்னுப் பாவ மன்னரை அவித்த
தரும நேமிப் பரமனேன † வியந்து
துன்னின ராகி மின்னென மிளிர்ந்த
தகைமுடி சாய்த்துச் சத்துவர் ‡ வணங்குவ
வகைமுடி வில்வினை ‖ வாடுக எனவே.' 2

இஃது அசையந்தாதியும் எழுத்தந்தாதியும் மயங்கி வந்த மண்டல மயக்கந் தாதி. இதனை எழுத்தந்தாதி என்று வேண்டுவாரும் உளர்.

1 திருப்பா மாலை (இதில் எழுத்து அசை சீர் அடி என்னும் நான்கும் மயங்கி 'உலகு' என்னும் முதற்சீர் 'உலகே' என்னும் ஈற்றுச்சீரோடு மண்டலித்து முடிந்தமை காண்க.
2 திருப்பா மாலை

-ம். * இயின்றித் † நோயென ‡ பிரமனென ‖ சாய்த்துக் சுத்துவர் ¶ வல்வினை.

[கலி விருத்தம்]

'ஆதியங் கடவுளை அருமறை பயந்தனை
போதியங் கிழவனை பூமிசை ஒதுங்கினை
போதியங் கிழவனை பூமிசை ஒதுங்கிய
சேதியஞ் செல்வ! நின் திருவடி பரவுதும்.' 1

இஃது அடியந்தாதி.

'இரங்கு குயின்முழவா' என்னும் பாட்டினுள் இடையிட்ட அடியந்தாதி வந்தது.

[தரவு கொச்சகம்]

'கழிமலர்ந்த காவிக் களிவண்டு பாடக்
குழிமலர்ந்த நீலம் குறுமுறுவல் கொள்ளும்;
குழிமலர்ந்த நீலம் குறுமுறுவல் கொள்ளப்
பொழில்மலர்ப்பூம் புன்னையின் நுண்டாது சிந்தும்.'

இதுவும் இடையிட்ட அடியந்தாதி.

பன்மணி மாலையும், மும்மணிக் கோவையும், உதயணன் கதையும், தேசிக மாலையும் முதலா உடைய தொடர்நிலைச் செய்யுட்களும் அந்தாதியாய் வந்தவாறு கண்டு கொள்க.

செந்நடை எழுத்தந்தாதியும், செந்நடை அசையந்தாதியும், மண்டலச் சீரந்தாதியும், மண்டல இடையிட்ட அடியாந்தாதியும், செந்நடை இடையிட்ட அடியந்தாதியும் வந்தவழிக் கண்டு கொள்க.

மோனையாய் வந்தன மோனையந்தாதி, எதுகையாய் வந்தன எதுகையந்தாதி, முரணாய் வந்தன முரணந்தாதி, இயைபாய் வந்தன இயைபந்தாதி, அளபெடையாய் வந்தன அளபெடையந்தாதி என இவ்வாற்றால் வந்த வகையாற் பெயர் கொடுத்து வழங்கப்படும்.

வரலாறு:

[நிலைமண்டில ஆசிரியப்பா]

'மேனமக் கருளும் வியனருங் கலமே
மேலக விசும்பின் விழுவொடு வருமே
மேருவரை அன்ன விழுக்குணத் தவமே
மேவதன் றிறநனி மிக்கதென் மனமே.' 2

இது மோனையந்தாதி. பிறவும் வந்தவழிக் கண்டு கொள்க.

[கட்டளைக் கலித்துறை]

'அந்தம் முதலாத் தொடுப்பதந் தாதி; அடிமுழுதும்
வந்த மொழிய வருவ திரட்டை; வரன்முறையால்
முந்திய மோனை முதலா முழுதுமொவ் வாதுவிட்டால்
செந்தொடை நாமம் பெறும்நறு மென்குழற் றேமொழியே!' 3

'மாவும்புள் மோனை; இயைபின் னகை; வடியே ரெதுகைக்
கேவில் முரணும் இருள்பரந் தீண்டள பாவளிய;
ஓவிலந் தாதி உலகுட னும்; ஒக்கு மேயிரட்டை;
பாவருஞ் செந்தொடை பூத்தவென் றுரும் பனிமொழியே!' 4

இவற்றை விரித்து உரைத்துக் கொள்க.

---

1 சூளா. இரத. 96. 2 யா. வி. 96 உரைமேற். 3-4. யா. கா. 17, 18.

53] ஒரு செய்யுட்கண் தொடை தளைகளிற் பல விரவி வரின் அவற்றை வழங்குமாறு [உக

தொடைபல தொடுப்பினும் தளைபல விரவினும்
முதல்வந் ததனுல் மொழிந்திசிற் பெயரே.

'என்பது என் நுதலிற்றோ?' எனின், ஒரு செய்யுட்கண் பல தொடையும் பல தளையும் வந்தால், அவற்றை வழங்கும் முறை உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொழிப்பு: ஒரு செய்யுளகத்துத் தொடை பல தொடுத்து வந்தாலும், தளை பல விரவி வந்தாலும், அவற்றை முதல் வந்த தொடையாலும் முதல் வந்த தளையாலும் பெயர் கொடுத்து வழங்குக (என்றவாறு).

'மயங்கிய தொடைமுதல் வந்ததன் பெயரால்
இயங்கினும் தளைவகை இன்னணம் ஆகும்.'

என்றார் அவிநயனார்.

'பல்வகைத் தொடையொரு பாவினிற் றொடுப்பின்,
சொல்லிய முதற்றொடை சொல்லினர் கொளலே.'

என்றார் சிறுகாக்கைபாடினியார்.

'தொடையடி யுட்பல வந்தால் எழுவாய்
உடையத னற்பெயர் ஒட்டப் படுமே.'

என்றார் காக்கைபாடினியார்.

'விகற்பம் கொள்ளா தோசைய தமைதியும்
முதற்கண் அடிவயின் முடிவ தாகும்.'

என்றார் பல்காயனார்.

'முதற்சீர்த் தோற்றம் அல்ல தேனை
விகற்பம் கொள்ளார் அடியிறந்து வரினே.'

என்றார் நற்றத்தனார்.

அவை வருமாறு :

[நேரிசை ஆசிரியப்பா]

'தாமரை புரையும் காமர் சேவடிப் [பொழிப்பெதுகை]
பவழத்* தன்ன மேனித் திகழொளிக்
குன்றி ஏய்க்கும் உடுக்கைக் குன்றின் [ஒரூஉ எதுகை]
நெஞ்சுபக எறிந்த அஞ்சுடர்† நெடுவேற் [ஒரூஉ மோனை]
சேவலங் கொடியோன் காப்ப
ஏம வைகல் எய்தின்றால் உலகே.' 1 [பொழிப்பு மோனை]

இதனுள் பொழிப்பெதுகையும், ஒரூஉ எதுகையும், ஒரூஉ மோனையும், பிறிதும் வந்தனவாயினும், முதல் வந்ததனானே பெயர் கொடுத்துப் பொழிப் பெதுகைச் செய்யுள் என்று வழங்கப்படும்.

[நிலைமண்டில ஆசிரியப்பா]

'வேரல் வேலி வேர்க்கோட் பலவின் [கூழை மோனை]
[அடி எதுகை] சாரல் நாட! செவ்வியை ஆகுமதி;
யாரஃ தறிந்திசி னோரே? சாரற் [ஒரூஉ எதுகை]

1 குறுந். கட. வாழ்த்து.
பா-ம் : * பவளத் † வெஞ்சுடர்.

[இணை முரண்] சிறுகோட்டுப் பெரும்பழம் தூங்கி யாங்கிவள்
[கடை இணை எதுகை]
உயிர்தவச் சிறிது; காமமோ பெரிதே!' 1
[பின் முரண்]

இதனுள் அடி எதுகையும், கூழை மோனையும், ஒரூஉ எதுகையும், இணை முரணும், கடையிணை எதுகையும், பின் முரணும் வந்தனவாயினும், முதல் வந்ததனுற் பெயர் கொடுத்து, அடி எதுகைச் செய்யுள் என்று வழங்கப்படும்.

[நேரிசை ஆசிரியப்பா]

அடி 'கடிமலர் புரையும் காமர் சேவடி [பொழிப்பு மோனை]
[எதுகை] கொடிபுரை நுசுப்பிற் பணைத்தேந் திளமுலை
அடி வளையொடு கெழீஇய வாங்கமை நெடுந்தோள் [பொ.மோ.]
[மோனை] வளர்மதி புரையும் திருநுதல் அரிவை
அடி சேயரி நாட்டமும் அன்றிக்
[முரண்] கருநெடுங் கூழையும் உடையவால் அணங்கே.'

இதனுள் எதுகையும், மோனையும், முரணும் முறையே வந்தனவாயினும், முதல் வந்ததனுற் பெயர் கொடுத்து, அடி எதுகைச் செய்யுள் என்று வழங்கப்படும்.

[நேரிசை ஆசிரியப்பா]

'பரவை மாக்கடல் தொகுதிரை * வரவும் [பொ. முரண்]
பண்டைச் செய்தி இன்றிவண் † வரவும் „
[அடி.மோ.] பகற்பின் முட்டா திரவினது வரவும் „
பசியும் ஆர்கையும் வரவும்
பரியினும் போகா துவப்பினும் வருமே.' 2

'இதனுள் மோனையும், இயைபும், முரணும் வந்தனவாயினும், முதல் வந்த தனுற் பெயர் கொடுத்து அடிமோனைச் செய்யுள் என்று வழங்கப்படும் பிற,' எனின், அற்றன்று; முறையானே வேறு வேறு தொடைகள் பெற்று வாராது. பலவாய் வந்து, இறுவாய் ஒத்தமையின், மயக்கு இயைபு எனக் கொள்க.

[நேரிசை ஆசிரியப்பா.]

'ஓங்குவரை ‡ அமன்ற வேங்கைநறு மலரும்
ஊர்கெழு நெய்தல் வார்கெழு மலரும்
பழனத் தாமரை எழினிற மலரும்
இல்லயற் புறவின் முல்லைவெண் மலரும்
உராஅம் கடற்றிரை விராஅ மலரும்
வேறுபட மிலைச்சிய நாறிருங் குஞ்சி
ஏந்தல் பொய்க்குவன் எனவும்
பூந்தண் உண்கண் § புலம்பா ஞவே.' 3

இதுவும் மயக்கு இயைபுத்தொடை என்று வழங்கப்படும். மயக்கு அளபெடைத் தொடையும் வந்தவழிக் கண்டுகொள்க.

---

1 குறுந். 18, யா. வி 74 உரை மேற். 2–3. யா. வி. 40 உரைமேற்.
பி-ம்: * படுதிரை † செய்தியி னின்றிவள் ‡ ஓங்குமலை § ஒண்கண்

[கட்டளைக் கலித்துறை.]

'காய்ந்துவிண் டார்நையக் காமரு கூடலிற் கண்சிவந்த
வேந்துகண் டாயென்ன வெள்வளை சோரக் கலைநெகிழப்
போந்துகண் டாரொடும் போந்துகண் டேற்கவன் பொன்முடிமேற்
போந்துகண் டாளென்று போந்ததென் மாட்டோர் புறனுரையே.' 1

இதனுள் எதுகையும் அதற்கேற்ற மோனையும் வந்தனவாயினும், முதல் வந்த தனாற் பெயர் கொடுத்து, ஆசிடை எதுகைச் செய்யுள் என்று வழங்கப்படும்.

இனித் தளைக்குச் சொல்லுமாறு :

[நேரிசை ஆசிரியப்பா.]

'நெடுவரைச் சாரற் குறுங்கோட்டுப் பலவின்
விண்டுவார் தீஞ்சுளை வீங்குகவுட் கடுவன்
உண்டுசிலம் பேறி ஓங்கிய இருங்கழைப்
படிதம் பயிற்றும் என்ப
மடியாக் கொலைவில் என்னையர்* மலையே.'

இதனுள் வெண்டளையும், கலித்தளையும், வஞ்சித்தளையும் வந்தன எனினும், முதல் வந்ததனாற் பெயர் கொடுத்து, வெண்டளையால் வந்த ஆசிரியப்பா என்று வழங்கப்படும்.

[எண்சீர் ஆசிரிய விருத்தம்.]

'கடுநாக மதனடக்கி நெடுநீர்ப் பொய்கைக்
கடிமலர்வேய்ந் துலகளவும் பரந்த† கந்த
நெடுமாலை நறுமுடிமேல் வைத்தி யேனும்
நின்னையெற் பொன்னயக்க‡ நின்றார் எல்லாம்
கொடுமாலை வினையரக்கர் குறும்பு சாயக்
குளிரிளம்பூம் பிண்டிக்கீழ் அமர்ந்த கோமான்
தடுமாற்றம் தலைப்பிரிக்கும் சரணம் அல்லால்
தலைக்கணியாள் என்றுரைத்தல் தகவோ வாழி!'

இதனுட் கலித்தளையும், ஆசிரியத்தளையும், வெண்டளையும் வந்தவாயினும், முதல் வந்த தளையாற் பெயர் கொடுத்து, கலித்தளையால் வந்த ஆசிரிய விருத்தம் என்று வழங்கப்படும். பிறவும் இவ்வாறே பெயர் கொடுத்து வழங்குக.

'தொடையும் தளையும் பலவிர விவரின்
முதல்வந் ததனால் மொழிந்திசிற் பெயரே.'

என்றாலும் கருதிய பொருள் பயக்கும், 'தொடைபல தொடுப்பினும் தளைபல விரவினும்' என்று மிகுத்துச் சொல்ல வேண்டியது என்னை?

விகற்பமும் இனமும் வாராமைத் தொடுத்த மோனை, எதுகை, முரண், இயைபு, அளபெடைகளைச் செம்மோனை, செவ்வெதுகை, செம்முரண், செவ் வியைபு, செவ்வளபெடை என வழங்கப்படும் என்பதூஉம்; கடையாகு மோனைக்கும் கடையாகு எதுகைக்கும் ஏற்று வந்தால், எதுகைத் தொடை யானே பெயரிட்டு வழங்கப்படும் என்பதூஉம்; மோனையும் எதுகையுமாய் வந்து முரணினால், மோனை முரண் என்றும் எதுகை முரண் என்றும் பெயரிட்டு

1 யா. வி. 94 உரைமேற்.

பிஃம். * எம்மையர் † பரந்து. ‡ நின்னையே போன யக்க.

வழங்கப்படும் என்பதூஉம்; இணை மோனை முதலாகிய தொடை விகற்பங்களும் ஓரடியுட் பல விரவி வந்தால், வரன்முறையாற் பெயரிட்டு வழங்கப்படும் என்பதூஉம்; 'வரனடை இல்லாதவழி யாதானும் ஒன்றாற் பெயர் கொடுத்து வழங்கப்படும்' என்பாரும், 'விகற்ப மயக்கம்' என்பாரும் என இரு திறத்தார் ஆசிரியர் என்பதூஉம்; ஓரடியுள் முதற் குறில் விட்டிசைத்து, மற்றை அடியுள் முதற்கட் குற்றெழுத்து வல்லொற் றடுத்து வந்தால், அதனை விட்டிசை வல்லொற்றெதுகை என்று வழங்குவர் ஒருசார் ஆசிரியர் என்பதூஉம்; செய்யுள் ஈற்றடி இறுதி எழுத்தொன்றும் இரண்டும் மிகினும் இழுக்காது என்பதூஉம்; இரட்டைத் தொடை இறுதிக்கண் ஓரெழுத்துக் குறையினும் இழுக்காது என்பதூஉம்; செய்யுளந்தாதி தொடுக்கின் ஈற்றெழுத்தானும் சொல்லானும் இடையிட்டேறத் தொடுப்பினும் இழுக்காது என்பதூஉம்; அவற்றின் வழியெதுகை முதலிய வந்து முன் சொல்லப்பட்ட தொடையும் தொடை விகற்பமும் போலாமைத் தொடுத்து வருவனவற்றைச் செந்தொடை மருள் என்றும் மருட்செந்தொடை என்றும் வேண்டுவர் ஒருசார் ஆசிரியர் என்பதூஉம்; மகார வகாரங்கள் அருகி எதுகையாய் வரினும் இழுக்காது என்பதூஉம் அறிவித்தற்கு வேண்டப் பட்டது;

'விதப்புக் கிளவி வேண்டியது விளக்கும்.'

ஆகலின்.

அவற்றிற்குச் செய்யுள் வருமாறு:

[நேரிசை ஆசிரியப்பா.]

'சிலம்படி மாதர் நன்னலம் குறித்துச்
சிலம்பதர் நள்ளென் கங்குற்
சிலம்பநீ வருதல் தகுவதோ அன்றே.'

இஃது இன எழுத்தும் விகற்பமும் வரத் தொடுத்ததின்மையால், செம்மோனை.

[குறள் வெண்பா.]

'கொன்றன்ன இன்னா செயினும் அவர்செய்த
ஒன்றுநன் றுள்ளக் கெடும்.' 1

எனவும்,

[கலி விருத்தம்.]

'வண்டு படக்குவ ளைப்பிணை நக்கலர்
விண்ட நறப்பரு கிக்கிளி யின்மதர்
கொண்டு நடைக்களி அன்னம் இரைப்பதொர்
மண்டு புனற்புரி சைப்பதி சார்ந்தார்.' 2

எனவும் இவை இனம் முதலாயின வரத் தொடுத்திலாமையின், செவ்வெதுகை.

[நேரிசை ஆசிரியப்பா.]

'கருங்கடல் உடுத்த மல்லல் ஞாலத்துச்
செம்மையின் வழாஅது கொடைக்கடம் பூண்டு
வாழ்வது பொருந்தா தாகிற்
சாவதும் இனிதவர் வீவதும் உறுமே.'

இது செம்முரண்.

1 குறள். 109. 2 சூளா; சீய. 85.

[நேரிசை ஆசிரியப்பா.]

'துப்புறழ் செவ்வாய்க் கிளவியும் அணங்கே;
கருங்கண் வெம்முலைத் தொய்யிலும் அணங்கே;
வாணுதற் றிலகமும் அணங்கே;
சிலம்படி மாதர் நாட்டமும் அணங்கே.'

இதில் இனம் முதலாயின. வரத் தொடுத்திலாமையான் செவ்வியையு.

[குறள் வெண்பா.]

'தாஅ மரைமேல் உறையும் திருமகள்
போலூம் மாதர் இவள்.'

இது செவ்வளபெடை.

'நன்றறி வாரிற் கயவர் திருவுடையார்
நெஞ்சத் தவலம் இலர்.' 1

எனவும்,

'கொல்லா நலத்தது நோன்மை; பிறர்தீமை
சொல்லா நலத்தது சால்பு.' 2

எனவும் இவற்றுள் முதலது வருக்க மோனைக்கும் மெல்லின எதுகைக்கும் ஒத்து வந்ததாயினும்; இரண்டாவது எதுகைக்கும் இன மோனைக்கும் ஒத்து வந்ததாயினும், எதுகை என்று வழங்கப்படாது, கடையாகு மோனை என்று வழங்கப்படும். பிறவும் அன்ன.

[குறள் வெண்பா.]

'சொல்லுப சொல்லப் பொறுப்பவே *; யாதொன்றும்
சொல்லாத † சொல்லப் பொரு.' ‡

இது மோனையாய் வந்து முரணினமையால், மோனை முரண்.

'இன்பம் விழையான் வினைவிழைவான், தன்கேளிர்
துன்பம் துடைத்தூன்றும் தூண்.' 3

எனவும்,

'அறத்துக்கே அன்புசார் பென்ப அறியார்;
மறத்துக்கும் அஃதே துணை.' 4

எனவும் இவை எதுகையாய் வந்து முரணினமையான், எதுகை முரண்.

[நேரிசை ஆசிரியப்பா.]

'மீன்றேர்ந்து வருந்திய கருங்கால் வெண்குருகு
தேனார் ஞாழல் விரிசினைக் குழூஉம்
தண்ணந் துறைவன் தவிர்ப்பவும் தவிரான்;
தேரோ காணலம்; காண்டும்
பீரேர் வண்ணமும் சிறுநுதல்! பெரிதே.' 5

கடையிணை முரண் என்று காட்டப்பட்ட இச்செய்யுளுள், 'தண்ணந் துறைவன் தவிர்ப்பவும் தவிரான்' என்னும் அடியுள் மேற்கதுவாய் மோனையும் கடையிணை முரணும் வந்தவாயினும், அவற்று ஐயடியின் வரனடை முறையான் அதனையும் கடையிணை முரண் என்று வழங்கப்படும்.

---

1 குறள். 1072 2 குறள் 984, யா. வி. 57 உரைமேற். 3 குறள். 615.
4 குறள் 76 யா. வி. உரைமேற். 5 யா. வி. 39 உரைமேற்.
பி-ம் *பெறுபவே † சொல்லாது ‡ பெரு

'வேரல் வேலி வேர்க்கோட் பலவின்' 1

என்னும் பாட்டினுள்,

'சிறுகோட்டுப் பெரும்பழம் தூங்கி யாங்கிவள்'

என்னும் அடியினுள் இணைமுரணும், கடையிணை எதுகையும் வந்தன வாயினும், யாதானும் ஒன்றினாற் பெயர் கொடுத்து, 'இணை முரண்' என்றானும், 'கடையிணை எதுகை' என்றானும் வழங்கப்படும். அல்லாத அடி ஒரு தொடையாகிய வரனடை இல்லாமையால், அதனை 'விகற்ப மயக்கம்'* எனினும் இழுக்காது.

[குறள் வெண்பா.]

'பற்றிப் பலகாலும் பான்மறி உண்ணுமை
நொஅலையல் நின்னாட்டை நீ.'

எனவும்,

[கலி நிலைத்துறை.]

'அஇ உஎ ஒஎனும்† ஐந்தொழித் தல்லாத
ஒத்தொலி‡ நீண்டிசை வண்ணமென் றோதிய தோத்தாமோ?
கசட §தப்பவிந் நாலய னுன்கும் கருதாதே
முத்தொடு கோத்த முழாத்தலை வைப்பது மூடன்றே.

இவற்றுள் முதற்குறில் விட்டிசைத்து வல்லொற்று அடுத்தாற்போன்று அல்லாத அடி முதற்கண் குற்றெழுத்து வல்லொற்று அடுத்து வந்தமையால், விட்டிசை வல்லொற்று எதுகை.

[நேரிசை ஆசிரியப்பா.]

'மாயோள் கூந்தற் குரலும் நல்ல;
கூந்தலில் வேய்ந்த மலரும் நல்ல;
மலரேர் உண்கணும் நல்ல;
பலர்புகழ் ஓதியும் நனிநல் லவ்வே.' 2

எனவும்,

[நிலைமண்டில ஆசிரியப்பா.]

'பூந்தண் பொழிலிடை வாரணம் துஞ்சும்;
பூங்கண் அன்னை இல்லிடைத் துஞ்சும்;
பூங்கொடிப் புனத்தயற் குறவன் துஞ்சும்;
பூசலிக் களவென யாந்துஞ் சலமே.' 3

எனவும் இயைபுத் தொடைச் செய்யுள் என்று சொல்லப்பட்டனவற்றுள் ஈற்றடி ஒன்றும் இரண்டும் எழுத்து மிக்கவாறு கண்டுகொள்க.

'ஒக்குமே ஒக்குமே ஒக்குமே ஒக்கும்'

என்னும் இரட்டைத் தொடையின் ஈற்றுச்சீர் ஈற்றெழுத்து ஒன்று குறைந்து வந்தவாறு கண்டுகொள்க.

இறுதி குறைந்து வரும் ஒரு பொருள் இரட்டையைக் 'குறையீற்று ஒரு பொருள் இரட்டை' என்றும், குறையாததனை 'நிறையீற்று ஒரு பொருள்

---

1 குறுந் 18

2—3 யா. வி. 40 உரைமேற். (முதற் செய்யுளில் 'வே' என்னும் ஓரெழுத்தும், இரண்டாஞ் செய்யுளில் 'லமே' என்னும் ஈரெழுத்தும் மிக்க எழுத்தெனக் கொள்க.)

பி-ம்.: * மயக்கம் † அஇ உண்ணிருலுக் கென்னும் ‡ ஒறரெுலி § கச்சட

இரட்டை' என்றும்; இறுதி குறைந்த பல பொருள் இரட்டையைக் 'குறை யீற்றுப்பல பொருள் இரட்டை' என்றும், குறையாததனை 'நிறையீற்றுப் பல பொருள் இரட்டை' என்றும் பெயரிட்டு வழங்குவாரும் உளர் எனக் கொள்க. குறையீற்றுப் பல பொருள் இரட்டையும், நிறையீற்றுப் பல பொருள் இரட்டையும் வந்த வழிக் கண்டுகொள்க.

இறுதி எழுத்தும் சொல்லும் இடையிட்டுத் தொடுத்த செய்யுளந்தாதி, உதயணன் கதையும் கலியாண கதையும், பன்மணி மாலையும் மும்மணிக் கோவையும் [1] என்றிவற்றுட் கண்டுகொள்க.

[குறள் வெண்பா.]

'அமிழ்தினும் ஆற்ற இனிதேதம் மக்கள்
சிறுகை அளாவிய கூழ்.' [2]

என்பது, இனவெழுத்துப் பெற்று,* முன் சொல்லப்பட்ட தொடையும் தொடை விகற்பமும் போலாமைத் தொடுத்தமையின், செந்தொடை மருள் எனக் கொள்க.

[நேரிசை ஆசிரியப்பா.]

'தொடிநெகிழ்ந் தனவே கண்பசந் தனவே [பொ. இ.]
யான்சென் றுரைப்பின் மானமின் றெவனோ
சொல்லாய் வாழி தோழி! வரைய [இ. பு. எதுகை.]
முள்ளில் பொதுளிய பல்குரல் நெடுவெதிர்
பொங்குவரல் இளமழை துவைப்ப
மணிநிலா விரியும் குன்றுகிழ வோற்கே.' [3]

இது பொழிப்பு இயைபும், இடைப்புணர் எதுகையும் வந்து இனமின்றித் தொடுத்தமையாற் செந்தொடை மருள் என்றும் மருட்செந்தொடை என்றும் வழங்கப்படும். இதனைச் செந்தொடையே என்று வழங்கினர் செய்யுளியல் உடையார் எனக் கொள்க.

'தாமரை புரையும் காமர் சேவடி' [4]

என்னும் பாட்டினுள் ஈற்றடி இரண்டும் மகார வகாரங்கள் எதுகையாய் வந்தன.

[கலி விருத்தம்.]

'அமரீர்! அசுரீர்! அழனு கரையீர்!
எமரீர்! பிறரீர்! எறிவேல் ஒருவன்
நமரீர்! பகவீர்! † தகவோ தகவென்
றவனூர் திரைபாய்ந் துரையா தொழிதல்?'

இதுவும் அது. இதனை மூன்றும் எழுத்தொன்று எதுகை என்பாரும் உளர்.

இனவெழுத்து ஆமாறு சொல்லுதும்:

அகரமும், ஆகாரமும், ஐகாரமும், ஔகாரமும் தம்முள் இனமாம்.
இகரமும், ஈகாரமும், எகரமும், ஏகாரமும், தம்முள் இனமாம் ‡
உகரமும், ஊகாரமும், ஒகரமும், ஓகாரமும் தம்முள் இனமாம்.

இவ்வாறே இவ்வுயிர்மெய்க்கும் ஒட்டிக்கொள்க. ஒற்றுக்களுள்,

---

1. யா.வி. 52 உரையை நோக்குக 2. குறள். 64; யா. வி. 59 உரைமேற். 3. யா. வி. 95 உரைமேற். 4. குறுந். கட. வாழ்த்து.

பி-எம் * இனவெழுத்து முதலாயின பெற்று † அயலீர் ‡ இகர ஈகார எகர ஏகாரங்ளும் 'யா என்பதும் தம்முள் இனமாம்.

சகர தகரங்களும் தம்முள் இனமாம்.

ஞகர நகரங்களும் தம்முள் இனமாம்.

வகர மகரங்களும் தம்முள் இனமாம்.

இவற்றை 'அனு' என்று வழங்குவாரும் உளர். இவற்றுக்குச் செய்யுள் வந்த வழிக் கண்டுகொள்க.

[நேரிசை வெண்பா.]

'அகரமோ டாகாரம் ஐகாரம் ஔகான்
இகரமோ டீகாரம் எஏ—உகரமோ
டூகாரம் ஒஓ ஞநமவ தச்சகரம்
ஆகாத அல்ல அனு.'

இதனை விரித்து உணர்த்துக்கொள்க.

'அஆ ஐஔ என்றிவை எனுஅ
இஈ எஏ என்றிவை எனுஅ
உஊ ஒஓ என்றிவை எனுஅத்
தசமவ ஞநவெனும் என்றிவை எனுஅ
மூந்நா லுயிரும் மூவிரு மெய்யும்
தம்முள் மயங்கினும் தவறின் றென்ப.'

என்றிவை இனம் ஆமாறு எடுத்து ஓதினர் நல்லாறனர் எனக் கொள்க.

இனி, அவற்றுக்குச் செய்யுள் வருமாறு :

[எண்சீர் ஆசிரிய விருத்தம்.]

'அருந்தவர்கட் காதியாய் ஐயம் நீக்கி
ஔவியந்தீர்த் தவிரொளிசேர் ஆக்கை எய்தி
இருந்திரள்கை இனமருப்பின் யானை யூர்தி
ஈரைஞ்ஞூ றெழில்நாட்டத் திமையோன் ஏத்த
ஒருங்குலகின் நூல்கற்றோர் ஓத முந்நீர்
ஒலிவளர அறம்பகர்ந்த உரவோன் பாதம்
கருங்கயற்கட் காரிகையார் காதல் நீக்கிக்
கைதொழுதாற் கையகலும் கவ்வை தானே.'

எனவும்,

'வண்டிவரும் மலர்வெட்டி மாலை மார்பன்
மால்வேண்ட மண்ணளித்த மலிதோள் வள்ளல்
ஞண்டிவரும் தண்படப்பை ஞாழல் மூதூர்
நரபதிக்கு வான்கொடுத்த நகைவேல் நந்தி
தண்டிவரும் தடவரைத்தோள் சயந்தன் வாடச்
சதுமுகனைச் சயஞ்செய்த சங்க பாலன்
தெண்டிரைவாய்த் திருமகளோ டமிர்தம் கொண்டான்
சீர்பரவச் சென்றகலும் செல்லல் தானே.'

எனவும் இனவெழுத்து வந்தவாறு கண்டுகொள்க.

'மாகந் திவண்டு . . . . கடிமா ணகரத்து நாமம்'

என்னும் பாட்டின் மூன்றும் அடியும்,

'மாயாத தொல்லிசைச் சாகர தத்தன் என்பான்'

என்னும் பாட்டினுள் நடுவிரண்டடியும் இனவெழுத்து வந்திலாமையாற் பிற,' எனின்,

'அருகி இனவெழுத் தணையா வாயினும்
வரைவில என்ப வயங்கி யோரே.'

என்ப வாகலின் அமையும்.

இனி வழி எதுகை ஆமாறு :

[பதின்சீர் ஆசிரிய விருத்தம்.]

'கொங்கு தங்கு கோதை ஓதி மாத ரோடு
கூடி நீடும் ஓடை நெற்றி
வெங்கண் யானை வேந்தர் போந்து வேத கீத
நாத என்று நின்று தாழ
அங்க புவ்வம்* ஆதியாய ஆதி நூலின்
நீதி யோடும்† ஆதி யாய
செங்கண் மாலைக் காலை மாலை சேர்வர்‡ சேர்வர்
சோதி சேர்ந்த சித்தி தானே. 1

எனவும்,

[கட்டளைக் கலித்துறை.]

'மண்டலம் பண்டுண்ட திண்டோள் வரகுணன் தொண்டியின்வாய்க்
கண்டலம் தண்டுறைக் கண்டதொன் றுண்டு கனமகரக்
குண்டலம் கெண்டையி ரண்டொடு தொண்டையும் கொண்டோர் [திங்கள்
மண்டலம் வண்டலம் பக்கொண்டல் தாழ வருகின்றதே.'

எனவும் கண்டுகொள்க.

'அனுப்பிராசம்' என்னும் வடமொழியை 'அனு' என்பதும், 'வழி எதுகை' என்பதும் தமிழ் வழக்கெனக் கொள்க.

வழி முரணுவனவற்றை 'முரண்' என்று வழங்குவர் ஒருசார் ஆசிரியர். வரலாறு :

[அறுசீர் ஆசிரிய விருத்தம்.]

'செய்யவாய்ப் பசும்பொன் ஓலைச் சீறடிப் பரவை அல்குல்
ஐயநுண் மருங்குல் நோவ அடிக்கொண்ட குவவுக் கொங்கை
வெய்யவாய்த் தண்ணேர் § நீலம் விரிந்தென விலங்கி நீண்ட
மையவாம் மழைக்கண் கூந்தல் மகளிரை வருக என்றான்.' 2

எனவும்,

[கட்டளைக் கலித்துறை.]

'ஒருமால் வரைநின் றிருசுடர் ஓட்டிமுந் நீர்க்கிடந்த
பெருமா நிலனும் சிறுவிலைத் தாவுண்டு பேதையர்கண்
பொருமா தவித்தொங்கல் எங்கோன் பொரவல் லவன்பொதியிற்
கருமா விழிவெண்பல்¶ செவ்வாய்ப் பசும்பொற் கனங்குழைக்கே.'

எனவும் கொள்க.

---

1 யா. வி. 53 உரைமேற். 2 சூளா. சீய. 101

பி-ம் : * பூர்வம் † யோதும் ‡ சென்று § தண்ணெண் ¶ நிறைவெண்பல்

வல்லின நடையானும், மெல்லின நடையானும், இடையின நடையானும் எடுத்துக்கொண்ட நடையின் வழுவாது வரத்தொடுத்து முடிப்பது செய்யுள் கட்குச் சிறப்புடைத்து. வல்லின நடையாவது, வல்லெழுத்து மிகத் தொடுப்பது; மெல்லின நடையாவது, மெல்லெழுத்து மிகத் தொடுப்பது: இடையின நடையாவது, இடையெழுத்து மிகத் தொடுப்பது.

பிறவும் வல்லார்வாய்க் கேட்டுணர்க.

[நேரிசை வெண்பா.]

"எழுத்து மொழிபொருளென் றெண்ணிய மூன்றின்
வழுக்கின் முறைமை வகையா—விழுக்கில்
அடியோ டடியியைந்து மந்தரித்தும் வந்தாற்
றொடையென்பர் தொன்னூ லவர்."

"தொடையுந் தொடைவிகற்புந் தொல்புலவோர் சொற்ற
நடையின் வழுவாமை நாடிக்—கடல்பயந்த
சீரார் திருவீசுஞ் செய்யுட் கெழுவாயு
மாராயத் தீரு மரில்."

தொடையோத்து முடிந்தது.

உறுப்பியல் முற்றிற்று.

---

பி-ம்: * சீரார் திருவீசும் செய்யுட் கெழுவாயும்,......கெழுகாண்டம்

# II. செய்யுள் இயல்

## செய்யுட்களின் வகை

54] [க

செய்யுட் டாமே மெய்பெற விரிப்பின்
பாவே பாவினம் எனவிரண் டாகும்.

'இவ்வோத்து என்ன பெயர்த்தோ?' எனின், தொடையினும் அடியினும் செய்யுள் உணர்த்திற்று ஆகலான், 'செய்யுள் ஓத்து' என்னும் பெயர்த்து.

'இவ்வோத்தினுள் இச்சூத்திரம் என் நுதலிற்றோ?' எனின், செய்யுட்களது பெயர் வேறுபாடும், அவற்றது எண்ணும் உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொழிப்பு: செய்யுள் எனப்படுவனதாம், பொருள் பெற விரிக்குங் கால், பாவும் பாவினமும் என்று இரண்டு திறத்தனவாம் (என்றவாறு).

'தாம்' என்பது, செய்யுட்களைச் சிறப்பித்தற்குச் சொல்லப்பட்டது; 'தேவர் தாமே தின்னினும், வேம்பு கைக்கும்'[1] என்றாற் போலக் கொள்க. அவ்வாறு சிறப்பிக்கவே, சொற் பொருள் உணர்வு வண்ணங்கள் தொடர்ந்து, குற்றமின்றி அவை தத்தமுள் தழுவுங்கோள் உடையவாய், இன்பம் பெருக்கி, அம்மை முதலாகிய வனப்பு அலங்காரமும் செம்மையும் செறிவும் பெறுவுழிப் பெற்று, இம்மை மறுமைக்கு நன்மை பயந்து, எல்லார்க்கும் புலனுற நடைபெறுவது, 'யாப்பு, பாட்டு, செய்யுள்' என்று சொல்லப்படுவது ஆயிற்று. எனவே, 'செய்யுள்' எனப் பெயர் பெற்றும், ஓசைப் பொலிவு முதலாகிய உறுப்பொடு புணர்ந்து, உரையும் நூலும் வகையும் மந்திரமும் முதுசொல்லும் பிசியும் ஆகிய செய்யுள் அல்ல, ஈண்டு வேண்டப்படும் செய்யுள் என்பதூஉம் சொல்லப்படும் எனக் கொள்க.

'மெய் பெற' என்று மிகுத்துச் சொல்லிய அதனால், செய்யுட்கள் இடத்தினும், தொழிலினும், பொழுதினும், பிறவாற்றானும் பெயர் பெற்று நடப்பனவும் உள எனக் கொள்க.

அறம், பொருள், இன்பம், வீடு என இவற்றைப் பாவி நடத்தலின் 'பா' என்பதூஉம் காரணக்குறி; ஒருபுடையாற் பாவினோடு ஒத்த இனத்தவாய் நடத்தலின், 'பாவினம்' என்பதூஉம் காரணக்குறி. இவற்றை 'இடுகுறி' எனினும் இழுக்காது.

55] [உ

பாக்களின் பெயர் வேறுபாடு.

வெண்பா ஆசிரியம் கலியே வஞ்சியெனப்
பண்பாய்ந் துரைத்த பாநான் காகும்.

'இஃது என் நுதலிற்றோ?' எனின், நிறுத்த முறையானே பாக்களது பெயர் வேறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

---

1 நாலடி, 112.

**இதன் பொழிப்பு :** வெண்பாவும், ஆசிரியப்பாவும், கலிப்பாவும், வஞ்சிப்பாவும் எனத் தத்தம் தன்மையால் தெரிந்து சொல்லப்பட்ட பா, நான்கு வகைப் படும் (என்றவாறு).

ஏகாரம், எண்ணேகாரம். 'கலியே' என்ற வழியதால், ஏகாரம் ஒழிந்த வழி இல்லையால், அஃது யாங்ஙனம் எண்ணுமோ?' எனின், ஒரு வழி நின்றேயும் ஒழிந்தவற்றைக் கொள்ளும். என்னை?

'எண்ணே காரம் இடையிட்டுக் கொளினும்
எண்ணுக்குறித் தியலும் என்மனார் புலவர்.' 1

என்பது இலக்கணம் ஆகலின், 'நான்கு' என்றது என்னை? எண்ணேகாரத் தால் எண்ணப்பட்ட நான்கும் என்பது பெறலாம் அன்றோ?' எனின், ஆம்; ஆயினும், அது நூல்நடை எனக் கொள்க. என்னை?

'கழிவே ஆக்கம் ஒழியிசைக் கிளவியென்
றம்மூன் றென்ப மன்னைச் சொல்லே.' 2

'ஓதல் காவல் பகைதணி வினையே
வேந்தற் குற்றுழி பொருட்பிணி பரத்தையென்
றாங்கவ் வாறே அவ்வயிற் பிரிவே.' 3

எனப் பிறரும் சொன்னார் எனக் கொள்க.

'வெண்பா ஆசிரியம் கலியே வஞ்சியெனப் பாநான்கு ஆகும்,' என்றது, 'பண்பாய்ந் துரைத்த பாநான் காகும்,' என்று சிறப்பித்துச் சொல்ல வேண்டியது என்னை?' எனின், வெண்பா முதல் வந்து ஆசிரியமாய் இறுவன, சிறப்பின்மையால், மருட்பா என்பது அறிவித்தற்கு வேண்டப்பட்டது. என்னை?

'வெள்ளை முதலா ஆசிரியம் இறுதி
கொள்ளத் தொடுப்பது மருட்பா வாகும்.' 4

என்றாராகலின்.

அவ்வாறு வருவனதாம், **புறநிலை வாழ்த்தும், வாயுறை வாழ்த்தும், செவி யறிவுறூஉவும்** என இவை. என்னை?

'புறநிலை வாயுறை செவியறி வுறூஉவெனத்
திறநிலை மூன்றும் திண்ணிதிற் றெரியின்,
வெண்பா இயலினும் ஆசிரிய இயலினும்
பண்புற முடியும் பாவின என்ப.' 5

என்றாராகலின்.

அவை வருமாறு :

[மருட்பா.]

'தென்றல் இடைபோழ்ந்து தேனார் நறுமுல்லை
முன்றில் முகைவிரியும் முத்தநீர்த் தண்கோளூர்க்
குன்றமர்ந்த கொல்லேற்றான் நிற்காப்ப என்றும்
தீரா நண்பிற் றேவர்
சீர்சால் செல்வமொடு பொலிமதி சிறந்தே.'

இது, 'வழிபடு தெய்வம் நிற்புறங் காப்பப் பழிதீர் செல்வமொடு ஒரு காலைக் கொருகாற் சிறந்து பொலிவாய்!' என்றமையான், **புறநிலை வாழ்த்து மருட்பா.** 6

---

1 தொல். சொல். இடை. 40. 2 தொல். சொல். இடை. 4.
3 இறையனார். 35. 4 காக்கைபாடினியார் (தொன்னூல். பக். 176.)
5 தொல். பொ. 473. 6 தொல். பொ. 422.

[மருட்பா.]

'பலமுறையும் ஓம்பப் படுவன கேண்மின் :
சொலன்முறைகட்* டோன்றச் சுடர்மணித்தேர் ஊர்ந்து
நிலமுறையின் ஆண்ட நிகரிலார் மாட்டும்
சிலமுறை அல்லது செல்வங்கள் நில்லா ;
இலங்கும் எறிபடையும் ஆற்றலும் அன்பும்†
கலந்ததம் கல்வியும் தோற்றமும் ஏனைப்
பொலஞ்செய் புனைகலனே டிவ்வாற றுலும்
விலங்கிவருங் கூற்றை விலக்கலும் ஆகா
தனைத்தாதல் நீயிரும் காண்டிர் ;—நினைத்தகக்
கூறிய வெம்மொழி பிழையாது
தெறிநீர் ஒழுகிற் சென்றுபயன் தருமே.'

இது மெய்ப்பொருள் சொன்னமையான், வாயுறை வாழ்த்து மருட்பா. என்னை ?

'வாயுறை வாழ்த்தே வயங்க நாடின்,
வேம்பும் கடுவும்‡ போல§ வெஞ்சொல்
தாங்குதல் இன்றி வழிநனி பயக்குமென்
றோம்படைக் கிளவியின் வாயுறுத் தன்றே.' 1

என்றாராகலின்.

[மருட்பா.]

'பல்யானை மன்னர் முருங்க அமருழந்து
கொல்யானை தேரோடு கோட்டந்து—நல்ல
தலையாலங் கானம் பொலியத்—தொலையாப்
படுகளம் பாடுக் காற்றிப் பகைஞர்
அடுகளம் வேட்டோன் மருக !—அடுதிறல்
ஆளி** நிமிர்தோள் பெருவழுதி ! எஞ்ஞான்றும்
ஈரம் உடையையாய் என்வாய்ச்சொற் கேட்டி :
உடைய உழவரை நெஞ்சனுங்கக் கொண்டு
வருங்கால் உழவர்க்கு வேளாண்மை செய்யல் ;
மழவர் இழைக்கும் வரைகாண் நிதியீட்டம்¶
காட்டும் அமைச்சரை ஆற்றத் தெளியல் ;
அடைத்த‖ அரும்பொருள் ஆறன்றி வெளவல் ;
ஈகை†† பெரும்பொருள் ஆசையாற் சென்று
பெருங்குழிசி, மன்ற மறுக அகழாதி ; என்றும்
மறப்புற மாக மதுரையார் ஓம்பும்
அப்புறம் ஆசைப் படேற்க ;—அறத்தால்‡‡
அவையார் கொடுநாத் திருத்தி—நவையாக
நட்டார் குழிசி சிதையாதி ;—ஒட்டார்
செவிபுதைக்கும் தீய கடுஞ்சொற்#கலிபடைத்தாய் !¶¶

1 தொல். பொ. 424.
பி-ம். * சொன்முறைக்கட் † மாண்பும் ‡ கரும்பும் § போல்வன
** ஆமி ¶ வரைக்கா னிதியீட்டம் ‖ படைத்த †† இனத்தைப் # வரத்தால்
¶¶ கவியுடைத்தாய்.

கற்றூர்க் கினனுகிக் கல்லார்க் கடிந்தொழுகிச்
செற்றூர்ச் செகுத்துநிற* சேர்ந்தாரை ஆக்குதி;
அற்றம் அறிந்த அறிவினுய் !—மற்றும்
இவையிவை நீயா † தொழுகின் நிலையாப் ‡
பொருகடல் ஆடை நிலமகள்
ஒருகுடை நீழல் துஞ்சுவள் மன்னே.'

இது, 'வியப்பின்றி உயர்ந்தோர்கண் அவிந்து ஒழுகுதல் கடன்,' என்று அரசற்கு உரைத்தமையான், செவியறிவுறூஉ மருட்பா எனப்படும். என்னே?

'செவியறி தானே,
பொங்குதல் இன்றிப் புரையோர் நாப்பண்
அவிதல் கடனெனச் செவியுறுத் தன்றே.' 1

என்றூராகலின்.

இவை இவ்வாறே அன்றி, வெண்பாவேயாயும், ஆசிரியமேயாயும் வரப் பெறும்; கலியும் வஞ்சியுமாய் வரப் பெறு. என்னே?

'வழிபடு தெய்வம் நிற்புறங் காப்பப்
பழிதீர் செல்வமொடு வழிவழி சிறந்து
பொலிமின் என்னும் புறநிலை வாழ்த்தே
கலிநிலை வகையும் வஞ்சியும் பெறூஅ.' 2

'வாயுறை வாழ்த்தே அவையடக் கியலே
செவியறி வுறூஉவென இவையும் அன்ன.' 3

என்றூராகலின்.

கைக்கிளையும் வெண்பா முதலாக ஆசிரிய இயலான் இறும். என்னே?

'கைக்கிளை தானே வெண்பா வாகி
ஆசிரிய இயலான் முடியவும் பெறுமே.' 4

என்றூராகலின்.

வரலாறு:

[மருட்பா.]

'திருநுதல் வேரரும்பும்; தேங்கோதை வாடும்;
இருநிலம் சேவடியும் தோயும்—அரிபரந்த — —
போகிதழ் § உண்கணும் இமைக்கும்;
ஆகும் மற்றிவள் அகலிடத் தணங்கே.' 5

எனவும்,

[மருட்பா.]

'நிழன்மணி நின்றிமைக்கும் நீளார மார்பின்
அழன்மணி நாகத் தணையான்—சுழன்மணிசூழ்
பொன்னகரம் போகிய ¶ பூம்பனிச்சை நன்னீர்
இளந்தளிர் மாவனுக்கும் மேனி—விளங்கும்

1 தொல். பொ. 426 2 தொல் பொ. 422. 3 தொல். பொ. 423. 4 தொல்.பொ. 431. 5 புறப். வெண். கைக்கிளை, 3.

பி-ம். * செனுத்துநிற் † வீயா ‡ நிலையாம். § சேயிதழ் ¶ போக்கிய

நளிமலர் நறுநுதல் * அரிவை
அளிமதி யிஃதோ † அகலுமென் உயிரே.'

எனவும் கொள்க.

கைக்கிளையும் வெண்பா முதலாய் ஆசிரியம் ஈருய் வரும் வழி, ஆசிரிய அடி இரண்டேயாய், அவற்றுள் ஈற்றடி நாற்சீராய், ஈற்றயலடி முச்சீராய் வருவது எனக் கொள்க. என்னை ?

'இருதலைக் காமம் இன்றிக் கைக்கிளை
ஒருதலைக் காம மாகக் கூறிய
இலக்கண மரபின் இயல்புற நாட்டி
அதர்ப்பட மொழிந்தனர் புலவர் அதுவே
பெறுதி வெண்பா உரித்தாய் மற்றதன்
இறுதி எழுசீர் ஆசிரி யம்மே.'

'வெண்பா ஆசிரி யத்தாய் மற்றதன்
இறுதி எழுசீர் ஆசிரி யம்மே.'

'கைக்கிளை மருட்பா வாகி வருகால்
ஆசிரியம் வருவ தாயின் மேவா
முச்சீர் எருத்திற் ருகி முடிவடி
எச்சீ ரானும் ஏகாரம் இறுமே.'

என்பது கடியநன்னியார் ‡ செய்த கைக்கிளைச் சூத்திரம் ஆகலின்.

'புறநிலை வாயுறை செவியறி வவையடக்கு
எனவிவை வஞ்சி கலியவற் றியலா.'

அவற்றுள்,

இடையிரு செய்யுளும் கைக்கிளை பாட்டும்
கடையெழு சீரிரண் டகவியும் வருமே.'

என்ருர் நல்லாறனுர்.

[தரவு கொச்சகம்.]

'வேதவாய் மேன்மகனும் வேந்தன் மடமகளும்
நீதியாற் சேர நிகழ்ந்த நெடுங்குலம்போல்
ஆதிசால் பாவும் அரசர் வியன்பாவும்
ஓதியவா றென்ற மருட்பாவாய் ஓங்கிற்றே.' 1

எனவும்,

[கட்டளைக் கலித்துறை.]

'பண்பார் புறநிலை பாங்குடைக் கைக்கிளை வாயுறை வாழ்த்
தொண்பாச் செவியறி வென்றிப் பொருண்மிசை ஊனமில்லா
வெண்பா முதல்வந் தகவல்பின் ருக விளையுமென்ருல்
வண்பால் மொழிமட வாய்! மருட் பாவெனும் வையகமே.' 2

எனவும் இவற்றை விரித்துரைத்துக்கொள்க.

---

1 யா. வி. உரை மேற், 2 யா. கா. 36.

பி-ம்- * நன்னுதல் † யாதோ ‡ கடிய நன்னியார்

பி-ம்: 4 கடிய நன்னியார் 4 சமிலை மருட்பா 3 வியநிலை மருட்பா.

'கங்கை யமுனைகளது சங்கமம் போலவும், சங்கர நாராயணரது சட்டகக் கல்வியே போலவும் வெண்பாவும் ஆசிரியமுமாய் விராய்ப் புறநிலை வாழ்த்து முதலாகிய பொருள்கண்மேல் யாப்புற்று மருட்சியுடைத்தாகப் பாவி நடத்தலின், 'மருட்பா' என்று வழங்கப்படும்,' என்பாரும் உளர்.

இனி, ஒருசார் ஆசிரியர், வெண்பாவும் ஆசிரியப்பாவும் ஒத்து வருவனவற்றைச் 'சம மருட்பா'* என்றும், ஒவ்வாது வருவனவற்றை 'வியன் மருட்பா'† என்றும் பெயரிட்டு வழங்குவர்.

அவை கூட்டி வழங்குமாறு: புறநிலை வாழ்த்துச் சம மருட்பா, புறநிலை வாழ்த்து வியன் மருட்பா, வாயுறை வாழ்த்துச் சம மருட்பா, வாயுறை வாழ்த்து வியன் மருட்பா, செவியறிவுறூஉச் சம மருட்பா, செவியறிவுறூஉ வியன் மருட்பா, கைக்கிளைச் சம மருட்பா, கைக்கிளை வியன் மருட்பா எனக் கொள்க.

வரலாறு:

[மருட்பா.]

'கண்ணுதலான் காப்பக் கடல்மேனி மால்காப்ப
எண்ணிருந்தோள் ஏர்நகையாள் தான்காப்ப—மண்ணியநூற்‡
சென்னியர் புகழுந் தேவன்¶
மன்னுக நாளும் மண்மிசைச் சிறந்தே.'‖ 1

என்பது புறநிலை வாழத்துச் சம மருட்பா.

'தென்ற லிடைபோழ்ந்து' 2 என்பது, புறநிலை வாழ்த்து வியன் மருட்பா.

[மருட்பா.]

'நில்லாது செல்வம்; நிலவார் உடம்படைந்தார்;
செல்லார் ஒருங்கென்று சிந்தித்து—நல்ல
அருளறம் புரிகுவி ராயின்
இருளறு சிவகதி எய்தலோ எளிதே.'

இது வாயுறை வாழ்த்துச் சம மருட்பா.

'பலமுறையும் ஓம்பப் படுவன கேண்மின்:' 3

என்பது, வாயுறை வாழ்த்து வியன் மருட்பா.

[மருட்பா.]

'இருமூன்றில் ஒன்றுகொண் டேதம் கடிந்து
பெருநீர்மை யார்தொடர்ச்சி பேணி—இருநிலம்
காப்பா யாகுமதி கடனென
மாப்பெருந் தானை மன்னர் ஏறே!'

இது செவியறிவுறூஉச் சம மருட்பா.

'பல்யானை மன்னர்' 4

என்பது, செவியறிவுறூஉ வியன் மருட்பா.

'திருநுதல் வேரரும்பும்' 5

என்பது, கைக்கிளைச் சம மருட்பா.

---

1 பெரும் பொருள் விளக்கம். 2 யா. வி. பக். 167, 3 யா. வி. பக். 168
4 யா. வி. பக். 168, 5. யா. வி. பக் 169.

பி-ம் - * சமநிலை மருட்பா † வியநிலை மருட்பா ‡ பண்ணியனூல் ¶ களிக்கும் செல்வனி ‖ மண்மிசை யானே.

'நிழன்மணி நின்றிமைக்கும்' 1

என்பது, கைக்கிளை வியன் மருட்பா.

பிறவும் வந்தவழிக் கண்டுகொள்க.

'வெண்பா, ஆசிரியம், கலியே, வஞ்சி' என இவற்றை இடுகுறியானும் காரணக்குறியானும் வழங்குப.

காரணக்குறியான் வழங்குமாறு :

[வெண்பா.]

வேற்று வண்ணம் விரவாது தூய்மை பெற்ற வெள்ளை வண்ணம் எல்லா வண்ணத்துள்ளும் சிறப்புடைத்து. அவ்வாறே, வேற்றுத் தளையும் அடியும் விரவாது தூய்மை பெற்று எல்லாப் பாவினுள்ளும் சிறப்புடைத்து ஆகலின், 'வெள்ளை' என்பது காரணக்குறி; திருவே போலச் சிறப்புடையானைத் 'திரு' என்றாற்போலக் கொள்க.

[ஆசிரியப்பா.]

சீரினானும் பொருளினானும் ஓசையினானும் ஆகிய நுண்மையைத் தன்கண் நிறுவிற்றாகலானும், புறநிலை வாழ்த்து முதலாகிய பொருள்களை ஆசிரியனே போல நின்று அறிவிக்கும் ஆகலானும், 'ஆசிரியம்' என்பதும் காரணக்குறி. 'ஆசு' எனினும், 'சிறிது' எனினும், 'நுண்ணிது' எனினும் ஒக்கும்.

[கலிப்பா.]

சீர், பொருள், இசைகளால் எழுச்சியும், பொலிவும், கடுப்பும் உடைமைத் தாகலின், 'கலி' என்பதும் காரணக்குறி.

'கலித்தல் கன்றல் கனறல் பம்மல்
எழுச்சியும் பொலிவும் எய்தும் என்ப.'

எனவும்,

'கம்பலை சும்மை அமுங்கல் கலிமுழக்
கென்றிவை எல்லாம் அரவப் பெயரே.'

எனவும், சொன்னாராகலின்.

[வஞ்சிப்பா.]

குறளும் சிந்தும் அல்லாத அடிகளை எல்லாம் வஞ்சித்து வருதலானும், புறநிலை வாழ்த்தும் வாயுறை வாழ்த்தும் அவையடக்கியலும் செவியறிவுறூஉம் என்றிப்பொருள்களை வஞ்சித்து வருதலானும், வஞ்சி என்னும் திறமே போலும் வனப்பும் ஏற்புடைத்தாகலானும், 'வஞ்சி' என்பதும் காரணக்குறி.

இவை எல்லாம் ஒருபுடை ஒப்பினாற் பெயர் சென்றன எனக் கொள்க. ஒன்றுக்கு ஒன்று சிறப்புடைமையின், 'வெண்பா, ஆசிரியம், கலி, வஞ்சி' என்று இம்முறையே பாற்படுத்து உடைத்தார் எனக் கொள்க. 'வெள்ளை' என்றும், 'பா' என்றும் நின்று, 'வெண்பா' என்று முடிந்தது எனக் கொள்க.

வேதியர், அரசர், வணிகர், சூத்திரர் என்னும் சாதிமேல் சார்த்தி வழங்குவாரும் உளர் எனக் கொள்க.

'வெண்பா முதலாம் நால்வகைப் பாவும்
எஞ்சா நாற்பால் வருணக் குரிய.' 2
'பாவினத் தியற்கையும் அதனோ ரற்றே.' 3

என்றார் வாய்ப்பியம் உடையார் ஆகலின்.

1. யா. வி. பக். 169. 2—3. யா. வி. 90, 95. உரைமேற்.

வெண்பாவினை 'வன்பா' என்றும், ஆசிரியப்பாவினை 'மென்பா' என்றும், கலிப்பாவினை 'முரற்கை' என்றும் வழங்குப.

[நேரிசை வெண்பா.]

'வெண்பா முதலாக வேதியர் ஆதியா
மண்பால் வகுத்த வருணமாம் ;—ஒண்பா
இனங்கட்கும் இவ்வாறே என்றுரைப்பர் தொன்னூல்
மனந்தட்பக் கற்றோர் மகிழ்ந்து.' 1

இதனை விரித்துரைத்துக் கொள்க.

இன்னும், 'வெண்பா, ஆசிரியம், கலி, வஞ்சி' என்னும் கிடக்கைக்கு ஒரு சார் ஆசிரியர் உரைக்குமாறு :

நாற்சீரடியான் நடைபெறுதலும், வேற்றுப்பாவினால் இறுமையும், எல்லாப் பொருண்மேலும் சொல்லப்படுதலும் என்று இவ்வாற்றால் ஆசிரியத்தோடு ஒத்தலும், உயர்ந்த ஓசைத்தாகலும், உத்தம சாதி ஆகலும், வேற்றுத்தளையும் வேற்றுப்பாவும் விரவாமையும், என்னும் மிகுதிக்குணம் உடைமை நோக்கி, வெண்பா ஆசிரியப்பாவின் முன் வைக்கப்பட்டது.

அளவடியால் நடைபெறுதலும், தனது நடையால் தான் இனிது இறுதலும், எல்லாப் பொருள்களையும் தன்கண்ணே அடக்கலும், ஒருவாத பொருளிற் றுதலும் என்னும் ஒருபுடையால் வெண்பாவோடு ஒத்தலும், அகவிய ஓசைத் தாகலும், அரசர் குலத்தினதாகலும், வேற்றுத்தளையும் அடியும் விரவி வருதலும் என்னும் வேறுபாடு உடைமை நோக்கி வெண்பாவின் பின் வைக்கப் பட்டது ஆசிரியப்பா.

நேரடியால் நிலைபெறுதலும், அயலடியும் அயற்றளையும் விரவி வருதலும், இவ்வாற்றான் ஆசிரியத்தோடு ஒத்தலும், அயற்பாவினால் இறுதலும், புறநிலை வாழ்த்து முதலிய பொருள்கண்மேற் புகாமையும், வணிகர் குலத்தினதாகலும், துள்ளல் ஓசைத்தாகலும், நோக்கி ஆசிரியத்தின் பின் வைக்கப்பட்டது கலிப்பா.

புறநிலை வாழ்த்து முதலிய பொருள்கண்மேற் புகாமையும், அயற்றளையும் அயலடியும் விரவி வருதலும், அயற்பாவினால் இறுதலும் என்றிவற்றாற் கலிப் பாவினோடு ஒத்தலும், நாற்சீரடியால் வாராமையும், சூத்திர குலத்தினதாகலும், தூங்கல் ஓசைத்தாகலும், அகப்பொருண்மேல் அருகியன்றி வாராமையும் நோக்கிக் கலிப்பாவின் பின் வஞ்சிப்பா வைக்கப்பட்டது.

அல்லதூஉம், எடுத்துக்கொண்ட இனவெழுத்து இரண்டாமடி முதற்கட் பெற்றும், இடையிட்டெதுகை பெற்றும், பெரும்பாலும் வந்தது ஒருசார் ஈரடி வஞ்சிப்பா இரண்டடியை உடன் கூட்டி இடையருமை அசைத்து உச்சரிப்ப எழுத்தும் எதுகையும் பெற்றும் பெரும்பாலும் வந்த ஒலித்தொடர்ச்சியால் கலிப்பா அடியாய்க் கை கலத்தலும், அனுவும் அடியெதுகையும் பொழிப் பெதுகையும் பெற்றும் பெரும்பாலும் வந்த கலிப்பா அடியினைக் கண்டித்து இரண் டாக்கிக் கால இடையீடும் கடைபற்றியது காகூவும்பட உச்சரிப்பத் துள்ளல் ஓசை வழுவித் தூங்கல் ஓசைத்தாய் வஞ்சித்தலும்* உடைத்தென்று கலியும் வஞ்சியும் ஒருங்கு வைக்கப்பட்டன என்ப. அவர் காட்டும் உதாரணம்:

'தாழிரும் பிணர்த்தடக்கைத் தண்கவுள் இழிகடாத்துக்
காழ்வரக் கதம்பேணுக் கடுஞ்சினத்துக் களிற்றெருத்தின்.' 2

எனவும்,

---

1 யா. வி. 95. உரைமேற். 2. யா. வி. 31, 93, 95 உரைமேற்.

பி-ம்- * தூங்கலிசை வஞ்சியாகலும்.

'ஓங்குதிரை வியன்பரப்பின் ஒலிமுந்நீர் வரம்பாகத்
தேன்தூங்கும் உயர்சிமய மலைநாறிய வியன்ஞாலத்து' 1

எனவும் கொள்க. பிறவும் அன்ன.

[நேரிசை வெண்பா.]

'அறமுதலுன் கென்றும் அகமுதலுன் கென்றும்
திறனமைந்த செம்மைப் பொருண்மேல்—குறைவின்றிச்
செய்யப் படுதலாற் செய்யுள்; செயிர்தீரப்
பையத்தாம் பாவுதலாற் பா.'

இதனை பிரித்துரைத்துக் கொள்க.

56] பாவினங்களின் பெயரும் வழங்கும் முறையும். [ந-

தாழிசை துறையே விருத்தம் என்றிவை
பாவினம் பாவொரு பாற்பட் டியலும்.

'இஃது என் நுதலிற்றோ?' எனின், நிறுத்த முறையானே பாவினங்களது பெயர் வேறுபாடும், அவற்றை வழங்கும் முறைமையும் உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொழிப்புரை தாழிசையும் துறையும் விருத்தமும் என்றிம் மூன்றும் 'பாவினம்' எனப்படும். இவை பாவினோடும் கூடிப் பெயர் பெற்று நடக்கும் (என்றவாறு).

பாவினோடும் கூடி வழங்குமாறு: வெண்டாழிசை, வெண்டுறை, வெளி விருத்தம் எனவும்; ஆசிரியத்தாழிசை, ஆசிரியத்துறை, ஆசிரியவிருத்தம் எனவும்; கலித்தாழிசை, கலித்துறை, கலிவிருத்தம் எனவும; வஞ்சித் தாழிசை, வஞ்சித்துறை, வஞ்சிவிருத்தம் எனவும் இவ்வாறு வழங்கப்படும். இவற்றுக்குச் செய்யுள், போக்கித் தத்தம் இலக்கணச் சூத்திரத்துள்ளே காட்டுதும்.

பிறரும் பாவினங்கட்கு இவ்வாறே சொன்னார். என்னை?

'வெண்பா விருத்தம் துறையொடு தாழிசை
என்றிம் முறையின் எண்ணிய மும்மையும்
தத்தம் பெயரால் தழுவும் பெயரே.'

என்றார் காக்கைபாடினியார்.

'பாவே தாழிசை துறையே விருத்தமென
நால்வகைப் பாவும் நானுன் காகும்.'

என்றார் சிறுகாக்கைபாடினியார்.

'வெண்பாத் தாழிசை வெண்டுறை விருத்தமென்
றிந்நான் கல்ல முந்நான் கென்ப.'

என்றார் அவிநயனார்.

'ஒத்தா ழிசைதுறை விருத்தம் எனப்பெயர்
வைத்தார் பாவினம் என்ன வகுத்தே.'

என்றார் மயேச்சுரர்.

---

1. பத்துப்: மதுரைக், 1-4.

ஒருபுடையால் தத்தம் பாவினேடு ஒத்த தாழத்தால் இசைத்தலானும், ஒத்த பொருண்மேற் பெரும்பான்மையும் மூன்றுய்த் தாழ்ந்திசைத்தலானும், 'தாழிசை' என்பதூஉம் காரணக்குறி.

ஒருபுடையால் தத்தம் பாவிற்குத் துறை போன்று நெறிப்பாடு உடைத்தாய்க் கிடத்தலானும், எல்லாத் துறைமேலும் இனிது நடத்தலானும், 'துறை' என்பதூஉம் காரணக்குறி.

ஒருபுடையால் தத்தம் பாவினேடு ஒத்த ஒழுக்கத்தாகலானும், எல்லா அடியும் ஒத்து நடத்தலானும், புராணம் முதலாகிய விருத்தம் உரைத்தலானும், 'விருத்தம்' என்பதுஉம் காரணக்குறி. இது வடமொழித்திரிசொல் எனக் கொள்க.

இவை ஒருபுடை ஒப்புமை வரலாற்று முறையாற் பெயர் பெற்றன எனக் கொள்க.

பாவினங்களை 'விருத்தம், துறை, தாழிசை 'என்று காக்கை பாடினியார் வைத்த முறையானே வையாது, 'தாழிசை, துறை, விருத்தம்' என்று தமது மதம் படுத்தும் முறை பிறழச் சொன்னாரல்லர் இந்நூலுடையார்; சிறுகாக்கை பாடினியார் முதலாகிய ஒருசார் ஆசிரியர் வைத்த முறைபற்றிச் சொன்னாரா கலின், குற்றம் இல்லை என்று கொள்க.

[நேரிசை வெண்பா.]

'விருத்தம் வியன்றுறை தாழிசையென் றேதா
தொருத்திறுதி யாதியா ஓத—உரைப்பிற்
சிறுகாக்கை பாடினியார் செப்பக்கேட் டஃது
மறுத்தாரே வண்மையால் வைத்து.'

'பண்ணும் திறமும்போற் பாவும் இனமுமாம்;
வண்ண விகற்ப வகைமையால்—பண்மேல்
திறம்விளரிக் கில்லதுபோற் செப்பல் அகவல்
இசைமருட்கும் இல்லை இனம்.'

இதனை விரித்துரைத்துக் கொள்க.

57] [சூ

[வெண்பா.]

செப்பல் இசையன வெண்பா; மற்றவை
அந்தடி சிந்தடி ஆகலும், அவ்வடி
அந்தம் அசைச்சீர் ஆகலும் பெறுமே.

'இஃது என் நுதலிற்றோ' எனின், அதிகாரம் பாரித்த பாக்களுள் நிறுத்த முறையானே 'வெண்பா' ஆமாறு பொதுவகையால் உணர்த்துதல் நுதலிற்று.

**இதன் பொருள்:** செப்பல் இசையன வெண்பா—செப்பல் ஓசையைத் தனக்கு ஓசையாக உடைய ஐந்து வெண்பாவும்; மற்றவை அந்தடி சிந்தடி. ஆகலும் அவ்வடி அந்தம் அசைச்சீர் ஆகலும் பெறுமே—அவ்வெண்பாக்கள் ஈற்றடி முச்சீராகியும், அவ்வீற்றடியின் இறுதி அசைச்சீராகியும் சீர்ச்சீர் ஆகியும் நிற்கப் பெறும் (என்றவாறு).

'அசைச்சீர் ஆகலும் பெறும்' என்ற உம்மையால், 'சீர்ச்சீர் ஆகலும் பெறும்,' என்று சொல்லப்பட்டது.

'அந்தடி சிந்தடியாகிய அடி" என்னது, 'ஆகலும்' என்ற உம்மை விதப்பினல், ஆண்டு அசைச்சீராய் வருகின்றுழி, தனிக்குறில் நேரசையும் நெடிலுடைய நிரையசையும் வருதல் சிறப்பில்லை. அல்லது சீர்ச்சீராய்

வருகின்றுழி, ஆண்டு இயற்சீரன்றி வாரா. அவைதம்முள் நேர்நேர் ஆகிய சீரும் நிரைநேர் ஆகிய சீரும் அன்றி வாரா. அவைதாம் உகர ஈறுய் அன்றி வாரா. அவற்றுட் குற்றியலுகரம் ஈறுய் வருவது சிறப்புடைத்து. முற்றியலு கரம் ஈறுய் வரினும் பெரியதோர் சிறப்பில. அவைதாம் அருகியன்றி வாரா எனக் கொள்க. அவற்றிற்கு உதாரணம், 'காசு, பிறப்பு' என வரும். வெண் பாவின் இறுதிச் சீர்க்கு உகரம் ஈறுக வேறு உதாரணம் காட்டி, அலகிட்டு ஓசையூட்டும்பொழுது பிற வாய்பாட்டான் ஓசையூட்டல் ஆகாது ஆகலின், எனக் கொள்க. அவ்வாறு ஓசையூட்டுமாறு :

[குறள் வெண்பா]

'கொல்லா நலத்தது நோன்மை; பிறர்தீமை
சொல்லா நலத்தது சால்பு.' 1

என்பதனை அலகிட்டு,

'தேமா கருவிளம் தேமா புளிமாங்காய்
தேமா கருவிளம் காசு.'

எனவும்,

[குறள் வெண்பா]

'அகர முதல எழுத்தெல்லாம்; ஆதி
பகவன் முதற்றே உலகு.' 2

என்பதனை அலகிட்டு,

'புளிமா புளிமா புளிமாங்காய் தேமா
புளிமா புளிமா பிறப்பு.'

எனவும் இவ்வாற்றுல் ஓசையுண்டவாறு கண்டுகொள்க.

பிறவும் இவ்வாறே ஓசையூட்டிக் கண்டுகொள்க.

அசைச்சீர்க்கு உதாரணம், 'நாள், மலர்' என வரும். அவ்வாற்றுல் ஓசையூட்டுமாறு :

[குறள் வெண்பா]

'இன்பம் விழையான் வினைவிழைவான், தன்கேளிர்
துன்பம் துடைத்தூன்றும் தூண்.' 3

என்பதனை அலகிட்டு,

'தேமா புளிமா கருவிளங்காய் தேமாங்காய்
தேமா புளிமாங்காய் நாள்.'

எனவும்,

[குறள் வெண்பா]

'குன்றேறி யானைப்போர் கண்டற்றுல் தன்கைத்தொன்
றுண்டாகச் செய்வான் வினை.' 4

என்பதனை அலகிட்டு,

'தேமாங்காய் தேமாங்காய் தேமாங்காய் தேமாங்காய்
தேமாங்காய் தேமா மலர்.'

எனவும் வெண்பா ஓரசைச்சீர் இறுதி ஓசையுண்டவாறு கண்டு கொள்க.

---

1. குறள். 984. 2 குறள். 1. 3. குறள். 615. 4 குறள். 785

இவ்வாறே பிற வெண்பாக்களையும் ஓசையூட்டிச் செப்பலோசை வழுவாமற் **கண்டுகொள்க.**

'செப்பல் இசையன வெண்பா; அவை அந்தடி சிந்தடி ஆகலும், அவ்வடி அந்தம் அசைச்சீர் ஆகலும் பெறுமே' என்றது, 'மற்று' என்று மிகுத்துச் சொல்ல வேண்டியது என்னை?

**ஏந்திசைச்** செப்பலும், தூங்கிசைச் செப்பலும், ஒழுகிசைச் செப்பலும் என்று மூன்று வகைப்படும் செப்பலோசை என்பது அறிவித்தற்கு ஒரு தோற்றம் உணர்த்தியதாம்.

பிறரும் வெண்பாவிற்கு ஓசையும் ஈறும் இவ்வாறே கூறினர். என்னை?

'செப்பல் ஓசை வெண்பா வாகும்.'

என்றார் **சங்கயாப்பு உடையார்.**

'அகவல் என்ப
தாசிரிய யம்மே.' 1
'அதாஅன் றென்ப வெண்பா யாப்பே.' 2

என்றார் **தொல்காப்பியனர்.**

'சிறந்துயர் செப்பல் இசையன வாகி,
அறைந்த உறுப்பின் அகறல் இன்றி,
விளங்கிக் கிடப்பது வெண்பா வாகும்,*

என ஓசை கூறி,

'சிந்தடி யானே இறுதலும், அவ்வடி
அந்தம் அசைச்சீர் வருதலும், யாப்புற
வந்தது வெள்ளை வழக்கியல் தானே.'

என்று ஈறு சொன்னர் **காக்கைபாடினியார்.**

'ஏந்திசைச் செப்பல் இசையன வாகி
வேண்டிய உறுப்பின் வெண்பா வாகும்.'

என்று ஓசை கூறி,

'முச்சீர் அடியான் இறுதலும், நேர்நிரை
அச்சீர் இயல்பின் அசையின் இறுதியாம் †

என்று ஈறு சொன்னர் **அவிநயனர்.**

[கட்டளைக் கலித்துறை.]

'வெண்பா அகவல் கலிப்பா அளவடி; வஞ்சியென்னும்
ஒண்பா அடிகுறள் சிந்தென் றுரைப்ப; ஒலிமுறையே
திண்பா மலிசெப்பல் சீர்சால் அகவல்சென் றேங்குதுள்ளல்
நண்பா அமைந்த நலமிகு நூல்கள் நறுதலே! 3

எனவும்,

'நேரிசை இன்னிசை போல நடந்தடி மூன்றின்வந்தால்
நேரிசை இன்னிசைச் சிந்திய லாகும்; நிகரில்வெள்ளைக்
கோரசைச் சீரும் ஒளிசேர் பிறப்புமொண் காகம்இற்ற
சீருடைச் சிந்தடி யேமுடி வாமென்று தேறுகவே.' 4

எனவும் இவற்றை விரித்து உரைத்துக்கொள்க.

---

1, 2. தொல். பொ, 393-94. 3, 4. யா, கா. 22, 26.
பி-ம்: * வெண்பா யாப்பே. † அசையின இறினும்.

[கட்டளைக் கலித்துறை]

'மாவாழ் புலிவாழ் சுரமுள வாக மணியிறுவாய்
ஓவா தளபெடுத் தூஉவும் கெழுஉவும், 1 உதாரணமாய்
நாவாழ் பெரும்புகழ் நற்றத்தர் யாப்பில் நடந்ததுபோல்
தேய்வாம் உகரம்வந் தாலியற் சீரிங்குச் செப்பியதே.'

இதன் கருத்தாவது, **'மாவாழ்சுரம்'**, **'புலிவாழ்சுரம்'** என்னும் இரண்டு வஞ்சியுரிச்சீரும் உளவாக வைத்து, ஒரு பயன் நோக்கித் 'தூஉமணி, கெழுஉ மணி' என்றளபெடையாக நேர்நடுவாகிய வஞ்சியுரிச்சீர் எடுத்துக் காட்டினார் நற்றத்தனாரும் வாய்ப்பியனாரும். அதுபோல, இந்நூலுடையாரும் வெண்பா இறுதிச்சீருக்கு வேறு உதாரண வாய்பாட்டால் ஓசையூட்டுதற்பொருட்டாக, குற்றியலுகரம் ஈறுகிய 'காசு, பிறப்பு' என்னும் வாய்ப்பாட்டான் நேரீற்று இயற்சீருக்கு வேறு உதாரணம் எடுத்தோதினார் என்றவாறு.

'அஃதே எனில், **'காசு, பிறப்பு'** என்னும் இரண்டு சீருமே கொண்டு **'தேமா, புளிமா'** என்னும் இரண்டு சீரும் களையாமோ?' எனின், அற்றன்று; வெண்பா இறுதி ஓசையூட்டல் வேண்டிக் காட்டின காசு பிறப்புக்களே அமைய வைத்துப் பேர்த்தும் 'தேமா, புளிமா' என்னும் இரண்டு சீரும் காட்டிய தாவது, காசு பிறப்பும் குற்றியலுகர ஈறாய் ஓசை சுருங்கி ஈற்றின்கண் நிற்கும் வழி அல்லாதவழி ஏந்திசைச் செப்பலோசை பூண்டு நில்லாத 'தேமா, புளிமா' என்னும் இரண்டு நெட்டெழுத்திறுதி அவ்வேந்திசைச் செப்ப லோசையைத் தழுவி நிற்குமாகலின், அந்நுட்ப ஆராய்ச்சி வகையினால் அவையும் ஓதினாராதலின், 'கூறியது கூறல்' என்னும் குற்றமாகாது. என்னை?

'கூறியது கூறினும் குற்றம் இல்லை
வேறும் ஒருபொருள்* விளக்கு மாயின்.'

என்ப ஆகலின். என்னை?

[நேரிசை வெண்பா]

'காசு பிறப்புமே காட்டாது, தேமாவும்
ஆசில் புளிமாவும் ஆய்ந்துரைத்த—தோசைமேல்
நேறித்தாஞ் செப்பல் தெளிவிப்ப தன்றாகிற்
கூறிற்றே கூறார் கொணர்ந்து.'

என்றார் பிறரும்.

அவற்றிற்குச் செய்யுள் வருமாறு:

[நேரிசை வெண்பா]

'மந்தரமும் மாகடலும் மண்ணுலகும் விண்ணுலகும்
அந்தரமும் எல்லாம ளப்பதே—இந்திரர்கள்
பொன்சகள ஆசனமாப் போர்த்து மணிகுயின்ற
இன்சகள வாசனத்தான் ஈடு.' 2

இன்னவை பிறவும் ஏந்திசைச் செப்பலோசை.

[நேரிசை வெண்பா]

7 'திருநந்து பூம்பொய்கை தேர்ந்துண்ணும் நாராய்!
ஒருநன் றுரைத்தல் தவறோ?—கருநந்து
முத்துப்பந் தீனும் முழங்கருவி நாடற்கென்
பத்தினிமை அல்குற் பசப்பு.'

இன்னவை பிறவும் முத்தொள்ளாயிரத்து வண்ணத்தால் வருவன எல்லாம் ஒழுகிசைச் செப்பலோசை,

---

1 ஈண்டு அளபெடைகள் அலகு பெற்றில. 2 யா. வி. 93 உரை மேற்.
பி-ம்: * வேறொரு பொருளை.

[நேரிசை வெண்பா]

'அரக்காம்பல் நாறும்வாய் அம்மருங்குற் கன்னே
பரற்கானம் ஆற்றின கொல்லோ !—அரக்கார்ந்த
பஞ்சிக்கொண் டூட்டினும் பையெனப் பையெனவென்
றஞ்சிப்பின் வாங்கும் அடி.' 1

இன்னவை பிறவும் நாலடி நானூற்றில் வண்ணத்தால் வருவனவும் **எல்லாம் தூங்கிசைச் செப்பலோசை.** பிறவும் அன்ன.

இவை அம்மூன்றிசைச் செப்பலோசைக்கும் அவிநயனுர் காட்டிய பாட்டு.

இவை ஈற்றடி முச்சீர் ஆயினவாறும், இறுதி அசைச்சீர் ஆயினவாறும், குற்றியலுகரம் வந்து 'காசு, பிறப்பு' என்னும் சீரால் இற்றவாறும் கண்டு கொள்க.

இனி, ஒருசார் ஆசிரியர், 'வெண்சீரே வந்து வெண்டளை தட்ப ஏந்திசைச் செப்பல் பிறக்கும்; இயற்சீரே வந்து வெண்டளை தட்ப ஒழுகிசைச் செப்பல் பிறக்கும்; வெண்சீரும் இயற்சீரும் வந்து வெண்டளை தட்பத் தூங்கிசைச் செப்பல் பிறக்கும்,' என்ப. அவை வந்தவழி உச்சரித்துக் கண்டுகொள்க.

இனி, மற்றொருசார் ஆசிரியர், **'செப்பல், வெண்கூ, அகவல்** என்னும் மூவகை ஓசை உடைத்து வெண்பா,' என்ப. என்னை ?

'பண்பாய்த் தடங்கிய பாநடை தெரியின்,
வெண்பா மூவிசை விரிக்குங் காலே.'

எனவும்,

'செப்பல் வெண்பா, வெண்கூ வெண்பா,
அகவல் வெண்பா என்றனர் அவையே.'

எனவும் சொன்னாராகலின்.

அவற்றுள், **'செப்பல் வெண்பா'** என்பது, எழுசீரால் நடப்பது. என்னை ?

'செப்பல் வெண்பாச் சீரே ழாகித்
தொடைநிலை பெறாஅ தடிநிலை பெறுமே.'

என்றாராகலின்.

அவர் காட்டும் பாட்டு :

[செப்பல் வெண்பா]

'சிறப்பீனும் செல்வமும் ஈனும் அறத்தினூங்
காக்கம் என்னோ உயிர்க்கு ?' 2

எனவும்,

'அறத்தா றிதுவென வேண்டா சிவிகை
பொறுத்தானோ டூர்ந்தா னிடை.' 3

எனவும் கொள்க.

**'வெண்கூ வெண்பா'** என்பது, நேரிசை வெண்பா இனவெழுத்து மிக்கு இசைப்பது. அஃது, ஆசுகவிகள் கூறுமாற்றாற் கூறப் பிறப்பது. என்னை?

'வெண்கூ வெண்பா எழுத்திறந் திசைக்கும்.'

என்றாராகலின்.

வரலாறு :

[நேரிசை வெண்பா]

'தண்டடைந்த திண்டோளாய் ! தாங்கலாம் தன்மைத்தோ
கண்டடைவார் * தம்மைக் கனற்றுமா—வண்டடைய †
நாணீலம் நாறுந்தார் நன்னன் கலைவாய
வாணீலக் கண்ணார் வடிவு ?'

எனவும்,

---

1 நாலடி 396. 2 குறள். 31. 3 குறள். 37.

பி—ம், * கண்டடையார். † வண்டடைந்த.

அறந்தரு தண்செங்கோ லையன்ன மாந்தைச்
சிறந்தன சேவலோ டேடி—மறந்தொருகால்
தன்னம் அகன்றாலும் தம்முயிர் வாழாவால்
என்ன மகன்றில் இவை!'

எனவும் இவை வெண்கூ வெண்பா என்று செய்யுளியலுடையார் காட்டிய பாட்டு.

இனி, அகவல் இசையாவது, இன்னிசை வெண்பா. என்னை?

'அகவல் வெண்பா அடிநிலை பெற்றுச்
சீர்நிலை தோறும் தொடைநிலை திரியாது
நடைவயின் ஓரடி
நெய்யார்ந் தன்ன நேயமுடைத் தாகிப்
பொருளொடு புணர்ந்த ஏழுத்தழி யாதே.'

என்றாராகலின்.

வரலாறு :

[அகவல் வெண்பா]

'வைகலும் வைகல் வரக்கண்டும் அஃதுணரார்
வைகலும் வைகலை வைகுமென் றின்புறுவர்;
வைகலும் வைகற்றம் வாணுண்மேல் வைகுதல்
வைகலை வைத்துணரா தார்.' 1

இஃது அகவல் வெண்பா என்று அணியியல் உடையார் காட்டிய பாட்டு.

இவ்வோசை விகற்பம் எல்லாம் சொல்வல்லார்வாய்க் கேட்பின் அல்லது காட்டலாகா என்று உணர்க.

'மருளொடு புணர்ந்தோர் மருட்கை தீரச்
சொல்ல வன்மை வெண்பா இயல்பே.'*

என்றாராகலின்.

[குறள் வெண்பா]

'இனமலர்க் கோதாய்! இலங்குநீர்ச் சேர்ப்பன்
புனைமலர்த் தாரகலம் புல்லு.'

எனவும்,

'மஞ்சுசூழ் சோலை மலைநாட! மூத்தாலும்
அஞ்சொல் மடவார்க் கருளு.'

எனவும்,

[நேரிசை வெண்பா]

'அரிமலர் ஆய்ந்தகண் அம்மா கடைசி
திருமுகமும் திங்களும் செத்துத்—தெருமந்து
வையத்தும் வானத்தும் செல்லா தணங்காகி
ஐயத்துள் நின்ற தரவு.'

எனவும்,

1. நாலடி. 39. பி–ம். * இயலே

'பாலன் றனதுருவாய் ஏழுலகுண் டாலிலையின்
மேலன்று நீகிடந்தாய் மெய்யென்பர் ;—ஆலன்று
*வேலைநீ ருள்ளதோ விண்ணதோ மண்ணதோ?
சோலைசூழ் குன்றெடுத்தாய் ! சொல்லு.' 1

எனவும்,

'எளிதின் இரண்டடியும் † காண்பதெற்கென் உள்ளம் ‡
தெளியத் § தெளிந்தொழியும் செவ்வே—களியிற் ¶
பொருந்தா தவனைப் பொரலுற் ‖ றரியாய்
இருந்தான் திருநாமம் எண்ணு.' 2

எனவும் இவை முற்றியலுகரம் அருகிக் 'காசு, பிறப்பு' என்னும் இரண்டு சீரானும் இற்றனவாயினும், சிறப்பிலபோலும் எனக் கொள்க.

'அரிமலர் ஆய்ந்தகண் என்பது [முதலியன] பொய்கையார் வாக்கு.

[குறள் வெண்பா.]

'நுண்மைசால் கேள்வி நுணங்கியோர் சொல்லையாய்
தொன்மைசால் நன்மருந் து.'

எனவும்,

'நெடுநுண் சிலையலைக்கும் நீர்மைத்தே பேதை
கொடிநுண் புருவக் குலா.'

எனவும்,

[நேரிசை வெண்பா.]

'நிழலிடையிஃ தோபுகுந்து நிற்கவே ** என்றேற்
கழலிடை அம்மலரே போன்றுய்—கழலுடைக்காற்
காம்போச ஞமூர்க் கடலார் மடமகளே !
வேம்போவென் வாயின் விஞு ?'

எனவும்,

[குறள் வெண்பா.]

'சொல்லுப சொல்லப் பொறுப்பவே ; †† யாதொன்றும்
சொல்லாத சொல்லப் பொரு.' ‡‡

எனவும் தனிக்குறில் நேரசையும் நெடிலுடை நிரையசையும் இறுதிக்கண் அருகி வந்தனவாயினும், சிறப்பின்மை உச்சரித்துக் கண்டுகொள்க.

[நேரிசை வெண்பா.]

'குற்றுகரச் சீரோ டோ வகாரச்சீர்
இற்ற எழுவாயாப் பின்னிசைத்தாய்—முற்றுகரம்
ஈறுய் வருமே எனினும் நிரையவாய்க்
கூறுர் சிறப்புடைத்தாக் கொண்டு.'

இதுவும் ஒருசார் ஆசிரியர் மதம்.

---

1 இயற்பா. மு.தி. 69 ; யா.வி. 95; உரைமேற். தண்டி 43. உரைமேற். 2 இயற்பா மு.தி. 51.

பி–ம். † வேலை சூழ் நிரதோ † இருவரையும் ‡ நெஞ்சே. § தெளிதின் ¶ அளிகள்
‖ இரணியனைக் கொல்லுற் ** நிற்கினே †† பெறுபவே ‡‡ பெரு

அவர் காட்டும் உதாரணம் :

[குறள் வெண்பா.]

'அஞ்சாமை ஈகை அறிவூக்கம் இந்நான்கும்
எஞ்சாமை வேந்தற் கியல்பு.' 1

எனவும்,

'ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம்
பேரறி வாளன் திரு.' 2

எனவும் முற்றுகர ஈற்றடிக்குச் சீர் இவை. குற்றுகர முற்றுகரங்கட்கு மேற் காட்டினவும் கொள்க.

58] **வெண்பாவின் வகை.** [ரு

குறள்சிந் தின்னசை நேரிசை பஃறொடை
எனவைந் தாகும் வெண்பாத் தானே.

இச்சூத்திரம், செப்பலோசைத்தாய், ஈற்றடி முச்சீராய், ஏனையடி நாற்சீராய், வெண்சீரும் இயற்சீரும் வந்து, வெண்டளை தட்டு, வேற்றுத்தளை விரவாது, ஈற்றடியின் இறுதிச்சீர் 'காசு, பிறப்பு, தோள், வளை' என்னும் வாய்ப்பாட்டான் இறும் என்றும், குற்றியலிகரமும், குற்றியலுகரமும், ஒற்றும் ஆய்தமும் அல்லாத எழுத்து ஏழு முதலாகப் பதினாறு எழுத்தின்காறும் உயர்ந்த பத்து நிலமும் பெற்ற நாற்சீர் அடித்தாய், ஐந்தெழுத்து முதலாகப் பத்தெழுத்தின்காறும் உயர்ந்த ஆறு நிலமும் பெற்ற முச்சீர் அடியான் முடியும் என்றும் வேண்டப்பட்ட வெண்பாவினது விகற்பம் உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொழிப்பு : 'குறள் வெண்பாவும், சிந்தியல் வெண்பாவும், இன்னிசை வெண்பாவும், நேரிசை வெண்பாவும், பஃறொடை வெண்பாவும் என ஐந்து வகைப்படும் வெண்பா,' என்பர் ஆசிரியர் (என்றவாறு).

'குறள், சிந்து, நேரிசை, இன்னிசை, பஃறொடை' என்று முறையிற் கூறுது, 'குறள், சிந்து, இன்னிசை, நேரிசை, பஃறொடை' என்று முறை பிறழச் சொல்லவேண்டியது என்னை? எனின், அஃது ஒரு பயன் நோக்கிச் சொல்லப்பட்டது. 'தலைதடு மாற்றம் தந்துபுணர்த் துரைத்தல்' என்பது தந்திர உத்தி ஆகலின். 'யாது அப்பயன்?' எனில், குறள் வெண்பாவினை ஓரடி முக்கால் என்றும், சிந்தியல் வெண்பாவினை ஈரடி முக்கால் என்றும், நேரிசை வெண்பாவினை நேரடி மூவடி முக்கால் என்றும், இன்னிசை வெண்பாவினை இன்னிசை மூவடி முக்கால் என்றும், பஃறொடை வெண்பாவினைப் பலவடி முக்கால் என்றும் வழங்குவர் ஒருசார் ஆசிரியர் என்பது அறிவித்தற்கு வேண்டப்பட்டது.

'குறள்சிந் தின்னிசை நேரிசை பஃறொடை
எனவைந் தென்ப வெண்பா?'

என்னுது, 'ஆகும்' என மிகுத்துச் சொல்ல வேண்டியது என்னை?' எனின், செப்பலோசையிற் சிறிது சிதைந்த பஃறொடை வெண்பாவினைக் கலி வெண்பாவாகவும், அல்லாத வெண்பாக்களது சிதைவினை ஒருபுடை ஒப்புமை நோக்கித் தத்தம் இனமாகவும் கொண்டு வழங்கப்படும் என்பது அறிவித்தற்கு வேண்டப்பட்டது.

இவற்றை இடுகுறியானும் காரணக்குறியானும் வழங்குப.

காரணக்குறியான் வழங்குமாறு : குறளும் சிந்தும் என இவற்றை மேல் அடிக்குச் சொன்னாற்போல் 3 உரைத்துக்கொள்க.

'நேர்' என்பது, மாறுதற்கண்ணும், ஒத்தற்கண்ணும், தனிமைக்கண்ணும், மிகுதிக்கண்ணும், சமனுதற்கண்ணும், உடம்படுதற்கண்ணும், பாதிக்கண்ணும், தலைப்பாட்டின்கண்ணும், நிலைப்பாட்டின்கண்ணும், கொடைக்கண்ணும் நிகழும். என்னை?

1. குறள் 382. 2. குறள். 215. 3. யா. வி. 24 உரைமேற்.

'நேர்ந்தார், அரண்பல கடந்த அடுபோர்ச் செழிய!'

எனவும்,

'நேர்பொருள் நிறுத்தனன்.'

எனவும்,

'நேரின மணியை நிரல்பட வைத்தாங்கு.' 1

எனவும்,

'நேரசை'

எனவும்,

'நேரே நல்லன, நேரே செல்வன.'

எனவும்,

'நேர்நூல், நேர் ஆடை.'

எனவும்,

'நாற்சீர் கொண்டது நேரடி.' 2

எனவும்,

'நெட்டெழுத்தா நேரப்படும்.' 3

எனவும்,

'நேர் போகி'

எனவும்,

'நேர்பட்ட இரண்டு படையும்.'

எனவும்,

'நேர்ந்திருந்தன.'

எனவும்,

'நேராமற் கற்பது கல்வி அன்றே.'

எனவும்,

'நேரா நோன்பு.'

எனவும்,

'நேரா நெஞ்சத்தான் நட்டான் அல்லன்.'

எனவும்,

'உப்பு நேர்ந்தார்.'

எனவும்,

'புளி நேர்ந்தார்.'

எனவும்,

'நேரிழை மகளிர்.' 4

எனவும் வழங்குவர் ஆகலின்.

'இசை' என்பது, ஓசைக்கண்ணும், சொல்லின்கண்ணும், புகழின்கண்ணும் நிகழும். என்னே?

"இசையெலாம் இசைப்படும்.'

எனவும்,

---

1 நன். ப்பாயிரம். 15. 2 யா. வி. 24 உரைமேற். 3 யா. வி. 2 உரைமேற்.
4 பத்துப். பட்டினப். 22.

'நுவற்சி நொடியே கிளவி இசைத்தல்
புகற்சி அனைய சொல்லின் பாலே.'

எனவும்,

'இசையிற் பெரியதோர் எச்சம் இல்லை.' 1

எனவும் சொல்லப்படுதலின். இனி, ஒரு நாட்டார் 'இயை' என்பதனை 'இசை' என்று வழங்குவரெனக் கொள்க.

முன்னும் பின்னும் ஒவ்வாதாய் மறுதலைப்பட்ட விகற்பத்தாற் சொல்லுவ ராகலானும், ஒத்த ஒரு விகற்பத்தால் இசைத்தலானும், தனிச்சொல் உடைமை யாலும், மிக்க புகழிற்றாகலானும், நுண்ணிய பொருண்மேற் சொல்லப்படுத லானும், அளவிற்பட்ட நான்கடியாற் சொல்லப்படுதலானும், புலவரான் உடம் பட்ட ஓசையும் சொல்லும் புகழும் உடைத்தாகலானும், முதற்குறளோடு தனிச்சொல் இடை ஒன்றும் இரண்டும் அசை கூட்டி இசைக்கப்படுதலானும், தலைப்பட்ட சொல்லும் பொருளும் உடைத்தாகலானும், புகழ் வேண்டும் ஒருவற்குத் தாயப்பாட்டாய்க் கொடைக்கடம் பூண்பித்துப் போய்ப்பாடு உடைத்தாய்க் கிடத்தலானும் 'நேரிசை வெண்பா' என்பது காரணக்குறி.

இனிதாய் இயலும் ஓசையும் சொல்லும் உண்டாய்ப் போய்ப்பாடு உடைத் தாகலின், 'இன்னிசை வெண்பா' என்பதூஉம் காரணக்குறி.

பல தொடையானும் தொடுக்கப்படுதலாற் 'பஃறொடை வெண்பா' என்ப தூஉம் காரணக்குறி.

59] குறள் வெண்பாவும் சிந்தியல் வெண்பாவும். [சூ

ஈரடி குறள்;சிந் திருதொடை இயற்றே.

இச்சூத்திரம், அதிகாரம் பாரித்த ஐந்து வெண்பாவினுள்ளும் முறையானே குறள் வெண்பா ஆமாறும், சிந்தியல் வெண்பா ஆமாறும் உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள்: ஈரடி குறள்—(பொது இலக்கணத்தோடு மாறு கொள்ளாது பொருந்திய) இரண்டடியால் வருவது குறள் வெண்பா எனப் படும்; ('ஈரடி குறள்' என்னும் சொற்பொருள், 'இருசீர் குறளடி; சிந்தடி முச்சீர்' 2 என்றாற்போலக் கொள்க). சிந்து இரு தொடை இயற்றே—மூன்றடி யால் வருவது சிந்தியல் வெண்பா எனப்படும் (என்றவாறு).

'இரு தொடை' எனவே, 'மூன்றடி' என்பது பெறப்பட்டது; அடியிரண்டு இயைந்தவழித் தொடை' என்பது ஆகலின்.

'ஈரடி குறள்; சிந்து இரு தொடைத்தே,' என்னாது, 'இயற்றே' என்று விகற்பித்துச் சொல்ல வேண்டியது என்னை?

மோனை, எதுகை, முரண், இயைபு, அளபெடை என்னும் ஐந்து தொடை யானும் வருவனவற்றை 'இனக்குறள் வெண்பா' என்றும், செந்தொடை யானும் ஒழிந்த தொடைவிகற்பத்தாலும் வருவனவற்றை 'விகற்பக் குறள் வெண்பா' என்றும், மூன்றடியால் நேரிசை வெண்பாவே போல வருவனவற்றை 'நேரிசைச் சிந்தியல் வெண்பா' என்றும், இன்னிசை வெண்பாவே போல மூன்றடியால் வருவனவற்றை 'இன்னிசைச் சிந்தியல் வெண்பா' என்றும் வழங்குவர் ஒருசார் ஆசிரியர் என்பது அறிவித்தற்கு வேண்டப்பட்டது.

---

1 முதுமொழிக். இல்லாப். 8. 2 யா. வி. 24 உரைமேற்.

அவற்றிற்குச் செய்யுள் வருமாறு :

[இனக்குறள் வெண்பா]

'சுடச்சுடரும் பொன்போல் ஒளிவிடும் துன்பம்
சுடச்சுட நோற்கிற் பவர்க்கு.' 1

எனவும்,

'தன்னுயிர்க் கின்னாமை தானறிவான் என்கொலோ
மன்னுயிர்க் கின்னா செயல்! 2 [எதுகை]

எனவும்,

'இன்பம் விழையான் வினைவிழைவான் தன்கேளிர்
துன்பம் துடைத்தூன்றும் தூண்.' 3 [முரண்]

எனவும்,

'சுடிகை நுதல்மடவாள் சொல்லும் கரும்பு [இயைபு]
படாஅ முலைமேல் றுகில்.' 4

எனவும்,

'கடாஅக் களிற்றின்மேற் கட்படா மாதர்
படாஅ முலைமேல் றுகில்.' 4. [அளபெடை]

எனவும் முறையானே ஐந்து தொடையானும் இனக்குறள் வெண்பா வந்த வாறு கண்டுகொள்க.

[விகற்பக் குறள் வெண்பா]

'அமிழ்தினும் ஆற்ற இனிதேதம் மக்கள்
சிறுகை அளாவிய கூழ்.' 5

எனவும்,

'அணங்குகொல் ஆய்மயில் கொல்லோ கனங்குழை
மாதர்கொல்! மாலுமென் நெஞ்சு.' 6 [வி. தொடை]

எனவும்,

'அறிஞர் இயம்பிய உள்ளத்தும் வைக்குமே
நன்னுதல் நோக்கோர் * வளம்.' [செந்தொடை]

எனவும் இவை செந்தொடையானும் விகற்பத் தொடையானும் வந்தமையான், விகற்பக் குறள் வெண்பா.

[நேரிசைச் சிந்தியல் வெண்பா]

'நற்கொற்ற வாயி னறுங்குவளைத் தார்கொண்டு
சுற்றும்வண் டார்ப்பப் புடைத்தாளே—பொற்றேரான்
பாலைநல் வாயின் மகள்.' 7 [இரு விகற்பம்]

எனவும்,

'காளையோ டாடிக் கதக்காரி தோன்றுங்கால்
வாளமுவ மக்களோ டாகுமாம் ;—கோளொடும்
பொன்றுமாம் நங்காய்!நம் கேள்.' [இரு விகற்பம்]

எனவும்,

---

1. குறள் 267. 2. குறள் 318. 3. குறள் 615. 4. குறள் 1087. 5. குறள் 64. 6. குறள் 1081. 7. யா. வி. 95 உரை மேற்.

பி-ம் : *நன்னுத லாட்கோர், நன்னுதல் நக்கோர்.

'அறிந்தானை ஏத்தி அறிவாங் கறிந்து
சிறந்தார்க்குச் செவ்வன் உரைக்கும்*—சிறந்தார்
சிறந்தமை ஆராய்ந்து கொண்டு.' [ஒரு விகற்பம்]

எனவும் இவை இரண்டாம் அடியின் இறுதி தனிச்சொல்லால் அடி மூய், மூன்றடியாய் இரு விகற்பத்தானும் ஒரு விகற்பத்தானும் நேரிசை வெண் பாவே போல வந்தமையான், **நேரிசைச் சிந்தியல் வெண்பா.**

[**இன்னிசைச் சிந்தியல் வெண்பா**]

6 'நறுநீல நெய்தலும் கொட்டியும் தீண்டிப்
பிறநாட்டுப் பெண்டிர் முடிநாறும் பாரி
பறநாட்டுப் பெண்டிர் அடி.' [ஒரு விகற்பம்]

எனவும்,

'சுரையாழ அம்மி மிதப்ப வரையனைய
யானைக்கு நீத்து முயற்கு நிலையென்ப
கானக நாடன் சுனை.' 1 [பல விகற்பம்]

எனவும்,

'முல்லை முறுவலித்துக் காட்டின; மெல்லவே
சேயிதழ்க் காந்தள் துடுப்பீன்ற; போயினர்
திண்டேர் வரவுரைக்கும் கார்.' [பல விகற்பம்]

எனவும் இவை மூன்றடியாய் இன்னிசை வெண்பாவே போலத் தனிச்சொல் இன்றி, ஒரு விகற்பத்தானும் பல விகற்பத்தானும் வந்தமையான், **இன்னிசைச் சிந்தியல் வெண்பா.**

இவற்றுக்கு இலக்கணம் பிறரும் இவ்வாறே சொன்னார். என்னை?

'தொடையொன் றடியிரண் டாகி வருமேற்
குறளின் பெயர்க்கொடை கொள்ளப் படுமே.'

என்றார் **காக்கைபாடினியார்.**

'ஈரடி இயைந்தது குறள்வெண் பாவே.'

என்றார் **அவிநயனார்.**

'ஐம்பெருந் தொடையின் இனக்குறள் விகற்பம்
செந்தொடை விகற்பொடு செயிர்தீர் ஈரடி.'

எனவும்,

'நேரிசைச் சிந்தும் இன்னிசைச் சிந்துமென்
றீரடி முக்கால் இருவகைப் படுமே.'

எனவும் சொன்னார் பிறரும் எனக் கொள்க.

[**கட்டளைக் கலித்துறை**]

'நேரிசை இன்னிசை போல நடந்தடி மூன்றின்வந்தால்
நேரிசை இன்னிசைச் சிந்திய லாரும்; நிகரில்வெள்ளைக்
கோரசைச் சீரும் ஒளிசேர் பிறப்புமொன் காசுமிற்ற
சீருடைச் சிந்தடி யேமுடி வாமென்று தேறுகவே.' 2

**இவ்வியாப்பருங்கலப் புறநடையை விரித்து உரைத்துக் கொள்க.**

---

1. யா. வி. 95 உரை மேற். 2. யா. கா. **26.**

பி—ம்: * செறிந்தார்க்குச் செல்வன் உரைப்பச். † செறிந்தமை. ‡ வீகற்பத் தொடையொடு சிவணும்.

60] [நேரிசை வெண்பா.] [எ

நாலோ ரடியாய்த் தனியிரண் டாவதன்
ஈறொரூஉ வாய்முற் றிருவிகற் பொன்றினும்
நேரிசை வெண்பா எனப்பெயர் ஆகும்.

இச்சூத்திரம் நேரிசை வெண்பா ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

**இதன் பொருள்:** நாலோர்அடியாய்—நான்கு அடியாய், **தனி இரண்டாவதன்** ஈறு—தனிச்சொல் இரண்டாம் அடியின் இறுதியாய், ஒரூஉ வாய் முற்று—அவ்விரண்டாமடி ஒரூஉத் தொடையாயும் கதுவாய்த் தொடையாயும் முற்றுத் தொடையாயும், ('**ஆய்**' என்னும் சொல் **ஆதிதீபகம்** ஆதலின், இரு வழியும் கூட்டி உரைக்கப்பட்டது) இரு விகற்பு ஒன்றினும் நேரிசை வெண்பா எனப் பெயர் ஆகும்—இரண்டு விகற்பத்தானும் ஒரு விகற்பத்தானும் வருவது **நேரிசை வெண்பாவாம் (என்றவாறு).**

'**வாய்**' என்பது, பல பொருட்டு ஆயினும், ஒரூஉவினோடும் முற்றினோடும் வந்தமையால், **கதுவாயைத்** தலைக்குறைத்து '**வாய்**' என்று சொல்லப்பட்டது எனக் கொள்க. என்னை?

'வேறுபடு வினையினும் இனத்தினும் சார்பினும்
தேறத் தோன்றும் பொருள்தெரி நிலையே.' 1

என்பது இலக்கணம் ஆகலின். அல்லதூஉம், பிறரும் '**கண்ணாடி**' என்பதனைத் **தலைக்குறைத்து, 'ஆடி** நிழலின் அறியத் தோன்றி' **2 என்றார் எனக் கொள்க.**

இரண்டாமடி ஒரூஉத் தொடையாய் வருவது சிறப்புடைத்து ஆகலின், முன் வைக்கப்பட்டது; 'சிறப்புடைப் பொருளை முந்துறக் கிளத்தல்', என்பது **தந்திர உத்தி ஆகலின்.**

முற்றுத்தொடை, அருகியன்றி வாராமையின், **கடைக்கண் வைக்கப் பட்டது.**

கதுவாய்த்தொடை, இடையாய இயல்பினதாகலின், இடைக்கண் வைக்கப் பட்டது.

அவற்றிற்குச் செய்யுள் வருமாறு:

[இருவிகற்ப நேரிசை வெண்பா]

'சிலைவிலங்கு நீள்புருவம் சென்றொசிய நோக்கி
முலைவிலங்கிற் றென்று முனிவாள்—மலைவிலங்கு
தார்மாலை மார்ப! தனிமை பொறுக்குமோ
கார்மாலை கண்கூடும் போழ்து?' 3

எனவும்,

'வண்மை மதம்பொழிந்து மாற்றார் திறல்வாடத்
திண்மை பொழிந்து திகழும்போன்ம்—ஒண்மைசால்
நற்சிறைவண் டார்க்கும் நளிநீர் வயற்பம்பைக்
கற்சிறை என்னும் களிறு.'

எனவும் இவை இரண்டாமடி ஒரூஉத்தொடையாய், 4 இரண்டு விகற்பத்தால் **வந்த நேரிசை வெண்பா.**

---

1. யா. வி. 35 உரைமேற். 2. தொல். பொ. 481. 3. தண்டி. 16 உரைமேற். யா. வி. 4, 18, 37 உரைமேற். 4. ஈண்டு 'ஒரு உத்தொடை' என்றது ஒரூஉ எதுகைத் தொடையை.

[ஒரு விகற்ப நேரிசை வெண்பா]

'வில்லுடையான் வானவன்; வியாத் தமிழுடையான்
பல்வேற் கடற்றுனைப் பாண்டியன்;—சொல்லிகவா
இல்லுடையான் பாலை இளஞ்சாத்தன் வேட்டனே;
நெல்லுடையான் நீர்நாட்டார் கோ.'

எனவும்,

'ஆர்த்த அறிவினர் ஆண்டிளைஞ ராயினும்
காத்தோம்பித் தம்மை அடக்குப;—மூத்தொறூஉம்
தீத்தொழிலே கன்றித் திரிதந் தெரிவைபோற் *
போத்தனுர் புல்லறிவி னுர்.' 1

எனவும் இவை இரண்டாமடி ஒரூஉத்தொடையாய், ஒரு விகற்பத்தால் வந்த நேரிசை வெண்பா.

[இரு விகற்ப நேரிசை வெண்பா]

'எல்லைநீர் ஞாலம் முதலாய ஏழுலகும்
வல்லனுய் முன்னளந்தான் அல்லனே—தொல்லமரை 2 †
வேட்டானை விய புலிப்பல் ‡ வெஞ்சடித்து
வாட்டானைக் கூட்டழித்த மால்.'

எனவும்,

[ஒரு விகற்ப நேரிசை வெண்பா]

'எற்றே பலியிரக்கும் இட்டால் அதுவேலான்
நெற்றிமேல் ஒற்றைக்கண் நீருடி—முற்றத்துப் 3
பொற்றெடிப்பந் தாடிப் பொடியாடித் § தீயாடிக்
கற்றூடும் நம்மேற் கழற்று.' ¶

எனவும் இவை இரண்டாமடி கதுவாய்த்தொடையாய், இரு விகற்பத்தானும் ஒரு விகற்பத்தானும் வந்த நேரிசை வெண்பா.

[இரு விகற்ப நேரிசை வெண்பா]

'பல்வளையார் கூடிப் பகர்வதூஉம் பண்புணர்ந்த
தொல்லவையார் எல்லாரும் சொல்வதூஉம்—மெல்லிணர்ப் 4
பூந்தாம நீள்முடியான் பூழியர்கோன் தாழ்தடக்கைத்
தேந்தாம வேலான் திறம்.'

எனவும்,

[ஒரு விகற்ப நேரிசை வெண்பா]

'பொன்னிணர் ஞாழற் புகல்வதியும் ‖ நாரைகாள்!
கன்னியம் புன்னைமேல் அன்னங்காள்!—என்னேநீர் 5
இன்னொலிநீர்ச் ** சேர்ப்பன் இரவில் வருவதன்முன்
கொன்னே குறிசெய்த வாறு?'

எனவும் இவை இரண்டாமடியின் இறுதி தனிச்சொல்லான் அடிமூய், முற்றுத் தொடையாய், இரு விகற்பத்தானும் ஒரு விகற்பத்தானும் வந்த நேரிசை வெண்பா.

---

1. நாலடி. 351. 2. இது மேற்கதுவாய் எதுகைத்தொடை. 3. இது கீழ்க்கதுவாய் எதுகைத்தொடை. 4, 5. இவ்வடிகள் முற்றெதுகைத் தொடை.

பி-ம்: * தெரிதந் தெருவைபோல் † சொல்லுங்கால் ‡ புலியை § பெற்றுடிப் மந்தாடிப் பேயாடித் ¶ கற்றுடி நம்மேற் கழறு. ‖ புதல்வதியும் ** இன்னொலி.

[ஒரு விகற்ப நேரிசை வெண்பா]

'வஞ்சியேன் என்றவன்றன் ஊருரைத்தான்; யானுமவன்
வஞ்சியான் என்பதனால் வாய்நேர்ந்தேன்—வஞ்சியான்
'வஞ்சியேன் வஞ்சியேன்' என்றுரைத்தும் வஞ்சித்தான்
வஞ்சியாய்! வஞ்சியார் கோ.'

இது மோனைத் தொடையாய், இரண்டாமடியின் இறுதி, தனிச் சொல்லான் அடிமூய், ஒரூஉத்தொடையாயும், ஒரு விகற்பத்தானும் வந்த நேரிசை வெண்பா.

[இரு விகற்ப நேரிசை வெண்பா]

'கானலம் பட்ட கலிமாத்தன் கைக்கொண்டு
கானலம் பட்டினத்துக் கண்ணுற்றான்—கானலம்
போதிற மோதிப் புரிவான்று மால்கடல்வாய்ப்
போதிற மோதிப் புரிந்து.'

இது மோனையாய், இரண்டு விகற்பத்தான் வந்தது.

'கடையாயார் நட்பிற் கமுகனையர்; ஏனை
இடையாயார் தெங்கின் அனையர்;—தலையாயார்
எண்ணரும் பெண்ணைபோன் றிட்டஞான் றிட்டதே
தொன்மை உடையார் தொடர்பு.' 1

இது முரணாய், இரு விகற்பத்தான் வந்தது.

'தாஅய்த்தாஅயச் செல்லும் தளர்நடைப் புன்சிறார் *
போஒய்ப்போஒய்ப் பூசல் இடச்செய்து—போஒய்ப்போஒய்
நிற்குமோ நீடு நெடும்புதவம் † தானணைந்து
பொற்குமோ என்னுது போர்ந்து.' ‡

இஃது அளபெடையாய், இரு விகற்பத்தான் வந்தது.

நேரிசை வெண்பாவினுள் முதலிரண்டடியும் மோனையும் எதுகையும் ஒரு சார் முரணும் அளபெடையும் என்னும் இந்நான்கு தொடையானும் அல்லது, செந்தொடையானும் இயைபுத்தொடையானும் வாரா. என்னை?

'இரண்டாம் அடியின் ஈற்றொரூஉ எய்தி
முரண்ட எதுகை ஆகியும், § ஆகா
திரண்டு துணியாய் இடைநனி ¶ போழ்ந்தும்
நிரந்தடி நான்கின நேரிசை ‡ வெண்பா.'

என்றார் காக்கைபாடினியார்.

'அஃதே எனின், முற்றும் கதுவாயும் சொல்லிற்றிலர் பிற', எனின், அற்றன்று; சிறப்புடைமை நோக்கி ஒரூஉத்தொடையை எடுத்து ஓதினார்; அல்லனவும் விதப்பானும், பிறவாற்றானும் உடன்பட்டார் எனக் கொள்க. என்னை?

'குறட்பா இரண்டவை நால்வகைத் தொடையாய்,
முதற்பாத் தனிச்சொலின் அடிமூய், இருவகை
விகற்பினும் நடப்பது நேரிசை வெண்பா.'

என்றார் அவிநயனார்.

---

1. நாலடி. 216.

பி—ம்: *புன்சிறுவர் † நெடும் புதல்வன் ‡ என்னுத போது § துகைய தாகியும் ¶ இடைதனி s நான்கி னேரிசை.

'இதன் கருத்தியாதோ?' எனின், 'இரண்டு குறட்பாவாய், நடுவுத் தொடைக்கேற்ற தனிச்சொல்லால் அடிமூய், முதற்குறட்பாவின் முதற்றொடை, எதுகை, பகைத்தொடை, அளபெடை என்னும் நான்கு தொடையாய், ஒத்த விகற்பத்தானும் ஒவ்வா விகற்பத்தானும் வருவது நேரிசை வெண்பா', **என்று** மொழி மாற்றுப் பொருள்கோள் வகையால் கூறினர் என்று உணர்க.

"நாலோர் அடியாய்த் தனியிரண் டாவதன்
ஈரொரூஉ வாய்முற் றிருவிகற் பொன்றினும்
நேரிசை வெண்பா ஆகும்.'

என்றாலும், கருதிய பொருளைப் பயக்கும்;

'நேரிசை வெண்பா **எனப்பெயர்** ஆகும்.'

என்று விகற்பித்துச் சொல்ல வேண்டியது என்னை?

இரண்டு குறள் வெண்பாவாய், நடுவுத் தொடைக்கேற்ற தனிச்சொற் பெற்று, ஒரு விகற்பத்தானும் இரு விகற்பத்தானும் வருவனவும், ஒற்றுமைப் படாத உலோகங்களை ஒற்றுமைப்படப் பற்றாசிட்டு விளக்கினாற்போல முதற் குறட்பாவினோடு தனிச்சொலிடை வேறுபட்டால் ஒன்றும் இரண்டும் அசை கூட்டி உச்சரிக்கப்பட்டு, ஒரு விகற்பத்தானும் இரு விகற்பத்தானும் வருவன என்று அறியுமாற்றால் ஆறு விகற்பம் படுத்துச் சொல்லுவர் ஒருசார் ஆசிரியர் என்பது அறிவித்தற்கு என்க. என்னை?

'இருகுறள் நடுவண் தனிச்சொற் பெற்றும்,
இரண்டொன் றாசும் அவணிடை யிட்டும்,
ஒருவிகற் பாகியும் இருவிகற் பாகியும்
நிகழ்வன நேரிசை வெண்பா ஆகும்.'

என்றாராகலின்.

அவர் காட்டும் பாட்டு:

[இரு விகற்ப நேரிசை வெண்பா]

'படைகுடி கூழமைச்சு நட்பரண் ஆறும்
உடையான் அரசருள் ஏறு; 1—[நடைமுறையின்] *
அஞ்சாமை ஈகை அறிவூக்கம் இந்நான்கும்
எஞ்சாமை வேந்தர்க் கியல்பு.' 2

எனவும்,

'தடமண்டு தாமரையின் தாதா டலவன்
இடமண்டிச் செல்வதனைக் கண்டு—பெடைஞெண்டு
பூழிக் கதவடைக்கும் புத்தூரே பொய்கடிந்
தூழி நடாயினான் ஊர்.'

எனவும் இவை இரு குறள் நடுவண் தனிச்சொற்பெற்ற மாத்திரையானே வந்த இரு விகற்ப நேரிசை வெண்பா.

[ஒரு விகற்ப நேரிசை வெண்பா]

'மறந்தும் பிறன்கேடு சூழற்க; சூழின்,
அறஞ்சூழும் சூழ்ந்தவன் கேடு; 3—சிறந்தீர் †
துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்
திறந்தாரை எண்ணிக்கொண் டற்று.' 4

எனவும்,

1. குறள் 381. 2. குறள் 382. 3. குறள் 204. 4. குறள் 22.
பி-ம்: *இங்கு அமைத்தற்குரிய தனிச்சொல் ஏடுகளிற் காணப்படவில்லை. † பிறந்து.

'அரிய வரைகீண்டு காட்டுவார் யாரே
பெரிய வரைவயிரம் கொண்டு? தெரியின்,
கரிய வரைநிலையார் காய்ந்தாலென் செய்வார்
பெரிய வரைவயிரம் கொண்டு?' 1

எனவும் இவை இரு குறள் தனிச்சொற் பெற்று ஒரு விகற்பத்தால் வந்த **நேரிசை வெண்பா.**

[இரு விகற்ப நேரிசை வெண்பா.]

'எய்தற் கரிய இயன்றக்கால் அந்நிலையே
செய்தற் கரிய செயல் 2 என்று—வய்யகத்
தீதல் இசைபட வாழ்தல்; அதுவல்ல
தூதியம் இல்லை உயிர்க்கு.' 3

இது முதற் குறட்பாவினேடு தனிச்சொலிடை இரண்டசையால் ஆசிட்டு, இரு விகற்பத்தால் வந்த **நேரிசை வெண்பா.**

'வஞ்சியேன் என்றவன்றன்' 4 என்பது, இரண்டசையால் ஆசிட்டு, ஒரு விகற்பத்தால் வந்த **நேரிசை வெண்பா.**

'சிலை விலங்கு நீள்புருவம்' 5 என்பது, இரண்டு விகற்பத்தால், ஓரசையால் ஆசிட்ட **நேரிசை வெண்பா.**

'ஆர்த்த அறிவினர் ஆண்டிளைஞ ராயினும்' 6 என்பது, ஓரசையால் ஆசிட்டு ஒரு விகற்பத்தால் வந்த **நேரிசை வெண்பா.**

ஈண்டுத் தொல்லாசிரியர் வைத்த முறையானே சொல்லப்பட்டது.

61] **இன்னிசை வெண்பா.** [அ

விகற்பொன் ருகியும் மிக்கும் தனிச்சொல்
இயற்றப் படாதன இன்னிசை வெண்பா.

இஃது இன்னிசை வெண்பா ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

**இதன் பொழிப்பு:** ஒரு விகற்பத்தானும் பல விகற்பத்தானும் தனிச் சொல் இன்றி நான்கடியான் வருவன **இன்னிசை வெண்பா** எனப்படும் (என்றவாறு).

'நான்கடி' என்பது, அதிகாரவசத்தால் உரைக்கப்பட்டது.

பிறரும் இவ்வாறே சொன்னுர் என்க. என்னை?

'தனிச்சொல் தழுவல வாகி, விகற்பம்
பலபல தோன்றினும் ஒன்றே வரினும்
இயற்பெயர் * இன்னிசை என்றிசி னேரே.'

என்ருர் **காக்கைபாடினியார்.**

'ஒன்றும் பலவும் விகற்பாய்த் தனிச்சொல்
இன்றி வருவன இன்னிசை வெண்பா.'

என்ருர் **சிறுகாக்கைபாடினியார்.**

'ஒன்றும் பலவும் விகற்பாய்த் தனிச்சொல்
இன்றி நடப்பினஃ தின்னிசை வெண்பா.'

என்ருர் **அவிநயனர்.**

---

1 நீதி வெண்பா. 2 குறள் 489. 3 குறள் 231. 4 யா. வி. பக் ..189.. 5 யா. வி. பக் ..187. 6 நாலடி 351.
பி—ம்: * அதற்பெயர்.

அவற்றிற்குச் செய்யுள் வருமாறு :

[ஒரு விகற்ப இன்னிசை வெண்பா.]

'துகடீர் பெருஞ்செல்வம் தோன்றியக்கால் தொட்டுப்
பகடு நடந்தகூழ் பல்லாரோ டுண்க :
அகடுற யார்மாட்டும் நில்லாது செல்வம்
சகடக்கால் போல வரும்.' 1

எனவும்,

'வைகலும் வைகல் வரக்கண்டும் அஃதுணரார்' 2

எனவும் இவை ஒரு விகற்பத்தால் வந்த **இன்னிசை வெண்பா.**

[பல விகற்ப இன்னிசை வெண்பா]

'வளம்பட வேண்டாதார் யார்யாரும் இல்லை;
அளந்தன போகம் அவரவ ராற்றல்;
விளங்காய் திரட்டினர் இல்லை; களங்கனியைக்
காரெனச் செய்தாரும் இல்.' 3

எனவும்,

'தலைக்கட் டலையைந்தும் காணேன் கடைக்கணேல்
என்று இருவரும் இங்கில்லை ;—பொன்னுடை
ஆழியாய் ! நன்மை அறிந்தேன் அலைகடல்சூழ்
ஏழியான் * இக்கிடந்த ஏறு.'

எனவும்,

'வடிமலர்த்தார் நாகர் மணிக்கவரி வீச,
முடிமலர்த்தேம் போதிமையோர் தன்னடிக்கீழ்ப் பெய்ய,
இனிதிருந்து நல்லறம் சொல்லியான் எல்லாத்
துனியிருந்த துன்பந்தீர்ப் பான்.'

எனவும்,

'தேனார் மலர்க்கூந்தற் றேமொழியாய் ! மேனாள்
பொருளைப் பொருளென்று நம்மறந்து போனார்
உருடேர் மணியோசை யோடும்—இருள்தூங்க
வந்த திதுவோ மழை.'

எனவும்,

'கொடுத்தலும் துய்த்தலும் தேற்று இடுக்குடை *
உள்ளத்தான் பெற்ற பெருஞ்செல்வம் இல்லத்து
உருவுடைக் கன்னியரைப் † போலப் பருவத்தால் ‡
ஏதிலான் துய்க்கப் படும்.' 4

எனவும்,

'கடற்குட்டம் போழ்வார் கலவர்; படைக்குட்டம்
பாய்மா உடையான் உடைக்கிற்கும்; தோமில்
தவக்குட்டம் தன்னுடையான் நீந்தும்; அவைக்குட்டம்
கற்றான் கடந்து விடும்.' 5

எனவும் இவையெல்லாம் பல விகற்பத்தான் வந்த **இன்னிசை வெண்பா.**

---

1 நாலடி 2. 2 நாலடி. 39 ; யா. வி. 57. உரைமேற். 3 நாலடி. **103.**
4 நாலடி. 274. 5 நான்மணி. 16
பி—ம் : * மேழியான் * **இழுக்குடை** † **கன்னியைப்** ‡ பருவத்துள்

பிறவும் வந்தவழிக் கண்டுகொள்க.

'விகற்பொன் ருகியும் மிக்கும் தனிச்சொற்
படாதன இன்னிசை வெண்பா.'

என்றாலும் கருதிய பொருளைத் தழுவி நிற்கும்; 'இயற்றப்படாதன' என்று மிகுத்துச் சொல்ல வேண்டியது என்னை?

இரண்டாமடியின் இறுதி தனிச்சொற் பெற்றுப் பல விகற்பத்தான் வருவனவும் உள என்பது அறிவித்தற்கு ஒரு தோற்றம் உணர்த்தியது.

வரலாறு:

[பல விகற்ப இன்னிசை வெண்பா.]

'பகலவன்செய் தூதி! நிற் * பண்பன்றி † வந்தால் ‡
இகலினில் நின்றார் வலியும்—இகலுடைய
நன்னயத்தோ டாயாக்காற் § சந்தியாம் அன்னன் ¶
நடைநட்பின் ‖ நட்டாருட் பேறு.'

இப்பொய்கையார் வாக்கினுள், தனிச்சொற்பெற்றுப் பல விகற்பத்தால் [இன்னிசை வெண்பா] வந்தவாறு கண்டுகொள்க.

[பல விகற்ப இன்னிசை வெண்பா.]

'மலிதேரான் கச்சியும் மாகடலும் தம்முள்
ஒலியும் பெருமையும் ஒக்கும்;—மலிதேரான்
கச்சி படுவ கடல்படா; கச்சி
கடல்படுவ எல்லாம் படும்.' 1

எனவும்,

'அங்கண் விசும்பின் அகனிலாப் பாரிக்கும்
திங்களும் சான்றோரும் ஒப்பர்மன் :—திங்கள்
மறுவாற்றும் சான்றோரஃ தாற்றார், தெருமந்து
தேய்வர் ஒருமா சுறின்.' 2

எனவும் இவை தனிச்சொற்பெற்றுப் பல விகற்பத்தான் வந்தன. என்னை?

'ஒருவிகற் பாகித் தனிச்சொல் இன்றியும்,
இருவிகற் பாகித் தனிச்சொல் இன்றியும்,
தனிச்சொற் பெற்றுப் பலவிகற் பாகியும்,
தனிச்சொல் இன்றிப் பலவிகற் பாகியும்,
அடியடி தோறும் ஒரூஉத்தொடை அடைநவும்
எனவைந் தாகும் இன்னிசை தானே.'

என்று இவ்வாறு சொன்னாரும் உளர் எனக் கொள்க.

தனிச்சொற்பெற்றுப் பலவிகற்பத்தால் வருவன விதப்பினால் உடன்பட்டார் காக்கைபாடினியார்.

---

1 தண்டி. 49 உரைமேற். 2 நாலடி. 151

பி—ம்: * தூதிற் † பண்பின்றி ‡ வந்தார் § டாயக்காற் ¶ நட்டாரா ‖ மன்னனைட்

'பாதம் பலவரின் பஃறொடை வெண்பா.

இச்சூத்திரம், பஃறொடை வெண்பா ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொழிப்பு: நான்கடியின் மிக்க பல அடியால் வருவது பஃறொடை வெண்பா எனப்படும் (என்றவாறு).

நேரிசை வெண்பாவிற்கும் இன்னிசை வெண்பாவிற்கும் நான்கடி உரிமை சொன்னாராகலின், 'நான்கடியின் மிக்க பல அடி' என்பது ஆற்றலாற் பெறப் பட்டதுபோலும் எனக் கொள்க.

'பல தொடையான் வருவது பஃறொடை வெண்பா,' எனக் காரணக் குறியோடு வாசகம் தழுவச் சூத்திரம் செய்யாது, வேறொரு வாய்பாட்டாற் சொல்ல வேண்டியது என்னை?

ஒத்த விகற்பப் பஃறொடை வெண்பா, ஒவ்வா விகற்பப் பஃறொடை வெண்பா என்று இரண்டு விகற்பப்படும் என்பது அறிவித்தற்குச் சொல்லப் பட்டது.

வரலாறு:

[ஒரு விகற்பப் பஃறொடை வெண்பா.]

'சேற்றுக்கால் நீலம் செருவென்ற வேந்தன்வேல்,
கூற்றுறழ் மொய்ம்பிற் பகழி, பொருகயல்,
தோற்றம் தொழில்வடிவு தம்முள் தடுமாற்றம்
வேற்றுமை இன்றியே ஒத்தன மாவடர் *
ஆற்றுக்கா லாட்டியர் கண்.'

இஃது ஒரு விகற்பத்தான் வந்த ஐந்தடிப் பஃறொடை வெண்பா.

[பல விகற்பப் பஃறொடை வெண்பா.]

'பன்மாடக் கூடல் மதுரை நெடுந்தெருவில் †
என்னோடு நின்றார் இருவர் அவருள்ளும்
பொன்னோடை நன்றென்றாள் நல்லளே—பொன்னோடைக்
கியானைநன் றென்றாளும் அந்நிலையள்—யானை
எருத்தத் திருந்த இலங்கிலைவேற் றென்னன்
திருத்தார்நன் றென்றேன் தியேன்.'

இது பல விகற்பத்தால் வந்த ஆறடிப் பஃறொடை வெண்பா.

[பல விகற்பப் பஃறொடை வெண்பா.]

'வையக மெல்லாம் கழனியாம்;—வையகத்துச்
செய்யகமே நாற்றிசையும் ‡ தேயங்கள்;—செய்யகத்து
வான்கரும்பே தொண்டை வளநாடு;—வான்கரும்பின்
சாறே அந்நாட்டுத் தலையூர்கள்;—சாறட்ட
கட்டியே கச்சிப் புறமெல்லாம்;—கட்டியுள் §
தானேற்ற மான சருக்கரை மாமணியே
ஆனேற்றான் கச்சி யகம்.'

இது பல விகற்பத்தால் வந்த ஏழடிப் பஃறொடை வெண்பா.

---

பி-ம்: * மாவேடர் † பெருந்தெருவில் ‡ நாற்றிசையின் § கச்சியுள்

[பல விகற்பப் பஃறொடை வெண்பா.]

'மலைமேல்* மரங்கொணர்ந்து மாண்புடைத்தாச் செய்த
நிலையொத்த வீதி நெடுமாடக் கூடல்
'விலைத்தயிர் கொள்ளீரோ?' என்பாள் முலையிரண்டும்
சோழன் உறந்தைக் குரும்பையோ! தொண்டைமான்
வேழஞ்சேர் வேங்கடத்துக் கோங்கரும்போ! ஈழத்துத்
தச்சன் கடைந்த இணைச்செப்போ! அச்சுற்றுள்
அன்னமோ! ஆய்மயிலோ! ஆரஞர்நோய் செய்தாளை
இன்னந் தெரிகிற் றிலம்.'

இஃது எட்டடியால் வந்த பல விகற்பப் பஃறொடை வெண்பா.

[பல விகற்பப் பஃறொடை வெண்பா.]

'சிற்றியாறு பாய்ந்தாடும் சேயரி உண்கணாய்!
வற்றா வளவயலும் வாய்மாண்ட ஏரியும்
பற்றார்ப் பிணிக்கும் மதிலும் படுகிடங்கும்
ஒப்ப உடைத்தாய் ஒலியோவா நீர்ப்புட்கள்
தத்தி இரைதேரும் தையலாய்! நின்னூர்ப்பேர்
ஒத்தாய வண்ணம் உரைநீ எனக்கூறக்
'கட்டலர் தாமரையுள் ஏழும், கடுமான்றேர்க்
கத்திரியர் ஐவரும், காயா மரமொன்றும்,
பெற்றவிழ்தேர்ந் துண்ணாத பேயே இருதலையும்,
வித்தாத நெல்லின் இறுதியும் கூட்டியக்கால்
ஒத்தியைந்த தெம்மூர்ப் பெயர்', என்றாள் வானவன்கை
விற்பொறித்த வேற்புருவத் தாள்.'

இது பன்னீரடியாற் பெருவல்லத்தைச் சொன்ன பஃறொடை வெண்பா.

இன்னும் பல அடியால் வந்த பஃறொடை வெண்பா இராமாயணமும், புராணசாகரமும் முதலாகவுடைய செய்யுட்களிற் கண்டு கொள்க.

'தொடையடி இத்துணை என்னும் வழக்கம்
உடையதை இன்றி உறுப்பழி வில்லா
நடையது பஃறொடை நாமம் கொளலே.'

என்றார் காக்கைபாடினியார்.

'தொடைபல தொடுப்பன பஃறொடை வெண்பா.'

என்றார் சிறுகாக்கைபாடினியார்.

'தொடைமிகத் தொடுப்பது பஃறொடை வெண்பா.'

என்றார் அவிநயனார்.

'ஏழடி இறுதி ஈரடி முதலா
ஏறிய வெள்ளைக் கியைந்தன அடியே;
மிக்கடி வருவது செய்யுட் குரித்தே.' 1

எனவும்,

---

1 சங்கயாப்பு; யா. வி. 32 உரைமேற்.

பா-ம்: * மலையன்

'ஆறடி முக்காற் பாட்டெனப் படுமே;
ஏறிய அடியும் செய்யுளுள் வரையார்.'

எனவும் ஒருசார் ஆசிரியர், சிறப்புடைமை நோக்கி, 'ஏழடி' என்று எடுத்தோதினுர். அல்லவும் உடம்பட்டார், தொடர்நிலைப்* பஃறொடை வெண்பாப் பல அடியாலும் வரும் என்று இவ்வாறு சொன்னுர் எனக் கொள்க.

குறள், சிந்து, நேரிசை, இன்னிசை, பஃறொடை என்னும் ஐந்து வெண்பாவும் இனக்குறள் வெண்பா, விகற்பக்குறள் வெண்பா நேரிசைச் சிந்தியல் வெண்பா, இன்னிசைச் சிந்தியல் வெண்பா, ஒரு விகற்ப நேரிசை வெண்பா, இரு விகற்ப நேரிசை வெண்பா, ஒரு விகற்ப இன்னிசை வெண்பா, பல விகற்ப இன்னிசை வெண்பா, ஒத்த விகற்பப் பஃறொடை வெண்பா, ஒவ்வா விகற்ப பஃறொடை வெண்பா என்று இவ்வாறு விகற்பிக்கப் பத்தாம். அவை தன்சீர் வெண்டளையாலும் இயற்சீர் வெண்டளையாலும் கூறுபடுப்ப, இருபதாம். அவை தன்சீர்ச் சிறப்புடை வெண்டளையாலும் தன்சீர்ச் சிறப்பில் வெண்டளையாலும், இயற்சீர்ச் சிறப்புடை வெண்டளையாலும் இயற்சீர்ச் சிறப்பில் வெண்டளையாலும் இவ்வாறு கூறுபடுப்ப, நாற்பதாம். மூன்று செப்பலோசையாலும் பத்து வெண்பாவினையும் உறழ முப்பதாம். ஓசையும் தளையும் கூட்டி உறழ நூற்றிருபதாம். மற்றும் பிறவகையாலும் விகற்பித்து நோக்கப் பலவுமாம்.

[கட்டளைக் கலித்துறை]

'ஒன்றும் பலவும் விகற்பொடு நான்கடி யாய்த்தனிச்சொல்
இன்றி நடப்பினஃ தின்னிசை; துன்னும் அடிபலவாய்ச்
சென்று நிகழ்வ பஃறொடை யாம்; சிறை வண்டினங்கள்
துன்றும் கருமென் குழற்றுடி யேரிடைத் தூமொழியே!' 1

என்னும் இக்காரிகையை விரித்து உரைத்துக் கொள்க.

[நேரிசை வெண்பா]

'பண்பாய்ந்த ஏழு பதினு றிழிபுயர்வா
வெண்பா அடிக்கெழுத்து வேண்டினுர்—வெண்பாவின்
ஈற்றடிக் கைந்தாதி ஈரைந் தெழுத்தளவும்
பாற்படுத்தார் நூலோர் பயின்று.'

எனவும்,

'குற்றிகரம் குற்றுகரம் என்றிரண்டும் ஆய்தமோ
டொற்றும் எனவொரு நான்கொழித்துக்—கற்றோர்
உயிரும் உயிர்மெய்யும் ஓதினுர் எண்ணச்
செயிர்தீர்ந்த செய்யுள் அடிக்கு.'

எனவும்,

'முற்றுகரந் தானும் முதற்பாவின் ஈற்றடிப்பின்
நிற்றல் சிறுபான்மை நேர்ந்தமையால்—மற்ற
அடிமருங்கின் ஐயிரண்டோ டோரெழுத்து மாதல்
துடிமருங்கின் மெல்லியலாய்! சொல்லு.'

எனவும் (இதன் ஈற்றடி எழுத்துப் பதினொன்று),

1. யா. கா. 25. பி—ம்: * தொடைநிலை.

'ஆதியாய் ஆற்றல் உடைத்தாய் வசம்பிகவா
நீதிசால் நூல்பொருந்தி நிற்றலால்—ஓதநீர்
மண்பாவு தொல்சீர் மறைவாணர் பாற்சார்த்தி
வெண்பா உரைத்தார் விரித்து.'

எனவும்,

'வெண்பாவோர் ஐந்தும் விகற்பத்தாற் பத்தாகித்
தண்பாற் றனைநான்கின் நாற்பதாய்த்—திண்பான்மைச்
செப்பல் ஒருமூன்றின் வந்துறழச் சேர்ந்தபாத்
தப்பாத முந்நாற்ப தாம்.'

எனவும் இவற்றை விரித்து உரைத்துக் கொள்க.

63] வெண் செந்துறை [சo

ஒழுகிய ஓசையின் ஒத்தடி இரண்டாய்
விழுமிய பொருளது வெண்செந் துறையே.

'இஃது என் நுதலிற்றோ?' எனின், வெண்பாவின் இனம் ஆமாறு உணர்த்துவான் எடுத்துக்கொண்டார், அவற்றுள் இச்சூத்திரம் **வெண்செந்துறை** ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

**இதன் பொழிப்பு**: ஒழுகிய ஓசையினை உடைத்தாய், தம்முள் ஒத்து வந்த இரண்டு அடித்தாய், விழுமிய பொருளைப் பயந்து நிற்பது யாது? அது **வெண்செந்துறை** என்றும் **செந்துறை வெள்ளை** என்றும் வழங்கப்படும் (என்றவாறு).

சீர் வரையறுத்திலாமையின், எனைத்துச் சீரானும் வரப்பெறும்.

'அந்தம் குறையா தடியிரண் டாமெனிற்
செந்துறை என்னும் சிறப்பின தாகும்.'

என்றார் **காக்கைபாடினியார்.**

'ஈரடி இயைந்தது குறள்வெண் பாவே;
ஒத்த அடித்தே செந்துறை வெள்ளை.' 1

என்றார் **அவிநயனார்.**

இனி அதற்குச் செய்யுள் வருமாறு:

[வெண் செந்துறை]

'ஆர்கலி உலகத்து மக்கட் கெல்லாம்
ஓதலிற் சிறந்தன் றொழுக்கம் உடைமை.' 2

எனவும்,

'கொன்றை வேய்ந்த செலவன் அடியிணை
என்றும் ஏத்தித் தொழுவோம் யாமே.' 3

எனவும் இவை நாற்சீர் இரண்டடியால் வந்த செந்துறை வெள்ளை.

[வெண் செந்துறை]

'நன்றி யாங்கள் சொன்னக்கால் நாளும் நாளும் நல்லுயிர்கள்
கொன்று தின்னும் மாந்தர்கள் குடிலம் செய்து கொள்ளாரே.'

இஃது அறுசீர் அடியால் வந்த செந்துறை வெள்ளை.

பிறவும் வந்தவழிக் கண்டு கொள்க.

---

1 யா. வி. 59 உரைமேற். 2 முதுமொழிக். 1—1. 3 கொன்றை. காப்பு.

64] குறட்டாழிசை [கக

அந்தடி குறைநவும் செந்துறைச் சிதைவும்
சந்தழி குறளும் தாழிசைக் குறளே.

இச்சூத்திரம், குறட்டாழிசை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள்: அந்தடி குறைநவும்—இரண்டடியாய் ஈற்றடி குறைந்து வருவனவும் ('இரண்டடி' என்பது, அதிகார வரைவினுல் உரைக்கப்பட்டது), செந்துறைச் சிதைவும்—விழுமிய பொருளும் ஒழுகிய ஓசையும் இன்றி வெண் செப்பலோசையிற் சிதைந்து வந்த குறள் வெண்பாவும் தாழிசைக் குறளே—செப்பலோசையிற் சிதைந்து வந்த குறள் வெண்பாவும், சந்தழி குறளும்—'குறட்டாழிசை' என்றும் 'தாழிசைக் குறள்' என்றும் வழங்கப்படும் (என்றவாறு).

அவற்றுக்குச் செய்யுள் வருமாறு:

[குறட்டாழிசை]

'நீல மாகடல் நீடு வார்திரை நின்ற போற்பொங்கிப்
பொன்றும் ஆங்கவை
காலம்பல காலம் சென்று செல்வ * யாக்கை கழிதலுமே.'

எனவும்,

'பாவடிமத யானை மன்னர்கள்
பைம்பொன் † நீள்முடி மேல்நிலாவிய
சேவடி எங்கோமான் செழும்பொன் எயிலவனே.'

எனவும்,

'நண்ணு வார்வினை நைய நாடொறும்
நற்ற வர்க்கர சாய ஞானநற்
கண்ணினுன் அடியே அடைவார்கள் கற்றவரே.'

எனவும்,

'தண்ணந் தூநீர் ஆடச் சேந்த
வண்ண ஓதி கண்.'

எனவும் இவை இரண்டடியாய், ஈற்றடி குறைந்து வந்த குறட்டாழிசை.

'உறிபோல் நரம்பெ ழுந்தும் பளத்தி
சிறியள் செவிசிந் திலபொரித் தனவே.'

எனவும்,

'திடுதிம் மெனநின் றுமுழா அதிரப்
படிதம் பயில்கூத் தருமார்த் தனரே.'

எனவும்,

'அற்ந்தருவா னன்றே ‡ புறந்தருவா னன்றே §
மறந்தேயு மையாங் கிறுங்கிடுதிர் கண்டீர்.'

எனவும்,

'அறுவர்க் கறுவரைப் பெற்றுங் கவுந்தி
மறுவறு பத்தினி போல்வையி ‖ னீரே.'

எனவும்,

---

பி-ம். * செவ்வ † மன்னர் பைம்பொன்னின் ‡ ஞென்றே § ஞென்றே
‖ போல் வ'யி.

'பிண்டியி னீழற் பெருமான் பிடர்த்தலை
மண்டிலந் தோன்றுமால் வாழி அன்னாய்!'

எனவும்,

'என்னே சொல்லுதி * வாழி நங்காய்!
பொன்னே சொல்லுவன் போகு நங்காய்!'

எனவும் இவை ஒழுகிய ஓசையும் விழுமிய பொருளும் இன்றி, இரண்டடியும் ஒத்து வந்தமையாற் செந்துறை சிதைந்த குறட்டாழிசை.

'கோடல் மன்னு பூங்கானல் குயில்கள்
மன்னு நீள்சோலை
நாட வருநம் மினியர் நயந்து.'

எனவும்,

'வண்டார்பூங் கோதை வரிவளைக்கைத் திருநுதலாள்
பண்டையள் அல்லள் படி.'

எனவும் இவை நாலசைச்சீரால் வந்தும், வேற்றுத்தளை விரவியும் செப்பலோசை அழிந்தும் வந்தமையால், சந்தழி குறட்டாழிசை. பிறவும் அன்ன.

[கட்டளைக் கலித்துறை]

'அந்தமில் பாதம் அளவிரண் டொத்து முடியின்வெள்ளைச்
செந்துறை ஆகும் திருவே! அதன்பெயர்; சீர்பலவாய்
அந்தம் குறைநவும் செந்துறைப் பாட்டின் இழிபுமங்கேழ்
சந்தம் சிதைந்த குறளும் குறளினத் தாழிசையே.' 1

இக்காரிகையை விரித்து உரைத்துக் கொள்க.

65] குறட்பாவின் இனம் [கூ

உரைத்தன இரண்டும் குறட்பா இனமே.

இச்சூத்திரம், வெண்செந்துறையும் குறட்டாழிசையும் இன்ன பாவின் இனம் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொழிப்பு: இங்ஙனம் சொல்லப்பட்ட செந்துறை வெள்ளையும் தாழிசைக் குறளும், குறள் வெண்பாவின் இனம் (என்றவாறு).

பிறரும் இவற்றிற்கு இலக்கணச் சூத்திரம் சொல்லிப் பின்னையும்,

'கூறிய இரண்டும் குறட்பா இனமே.'

என்றார் எனக் கொள்க.

செந்துறை வெள்ளையும் தாழிசைக் குறளும் ஏழுதளையாலும் கூறுபடுப்ப, இரண்டுமாய்ப் பதினான்கு செய்யுளாம்; சிறப்புடைத் தளையும் சிறப்பில் தளையும் என்றிவ்வாற்றாற் கூறுபடுப்ப, இருபத்தெட்டாம்; மற்றும் விகற்பிக்கப் பலவுமாம்.

வெண்பாவிற்கு இனமாய், செவ்விதாய், ஒழுகிய ஓசைத்தாய், விழுமிய பொருளை உள்புக்குத் துறைபோய நெறிப்பாடு உடைத்தாய்க் கிடத்தலின், 'வெண்செந்துறை' என்பதூஉம், 'செந்துறை வெள்ளை' என்பதூஉம் காரணக் குறி.

இரண்டடியாம் நேரடித்தாய்த் தாழ்ந்திசைத்தலானும், ஒழுகலோசையினும் செப்பலோசையினும் வழுவித் தாழ்ந்த ஓசைத்தாகலானும், விழுப்பமின்றித் திண்ணிதாகிய பொருளைச் சொல்லுதலானும் 'குறட்டாழிசை' என்பதூஉம், 'தாழிசைக் குறள்' என்பதூஉம் காரணக்குறி.

பி—ம்: * செல்லுதி 1 யா. கா. 27.

66] வெண்டாழிசை [கக

அடியொரு மூன்றுவந் தந்தடி சிந்தாய்
விடினது வெள்ளொத் தாழிசை யாகும்.

இச்சூத்திரம், வெண்டாழிசை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

**இதன் பொழிப்பு:** அடி மூன்றாய், ஈற்றடி முச்சீராய், இறுவன யாவை? அவை **'வெள்ளொத்தாழிசை'** என்றும் **'வெண்டாழிசை'** என்றும் வழங்கப் படும் (என்றவாறு).

'அடியொரு மூன்றுவந் தந்தடி சிந்தாய்
**வெள்ளொத் தாழிசை ஆகும்.'**

என்றாலும், கருதிய பொருளைப் பயக்கும். **'விடினது'** என்று மிகுத்துச் சொல்லவேண்டியது என்னை?

சிந்தியல் வெண்பா ஒரு பொருண்மேல் மூன்று வந்து நடப்பன **'வெள்ளொத்தாழிசை'** எனப்படும் என்றற்கும்; வெள்ளொத்தாழிசை கொள்ளாது, பிற தளைதட்டு, ஒன்றாயும் இரண்டாயும் ஒரு பொருண்மேல் மூன்றாயும், மூன்றின் மிக்கு வருவனவும் எல்லாம் **'வெண்டாழிசை'** எனப் படும் என்பது அறிவித்தற்கும் வேண்டப்பட்டது.

பிறரும்,

'ஈரடி முக்கால் இசையினும் தளையினும்
வேறுபட் டியல்வன வெண்டா ழிசையே.'

என்றார் எனக் கொள்க.

வெள்ளோசை கொண்டு வேற்றுத்தளை விரவாது ஒரு பொருண்மேல் மூன்றாயும்; வெள்ளோசை தழுவாது வேற்றுத்தளை விரவி ஒரு பொருண்மேல் ஒன்றாயும், இரண்டு இணைந்தும், மூன்றின் மிக்கும், மூன்று அடுக்கிப் பொருள் வேறாயும் வருவன எல்லாம் 'ஈரடி முக்கால்' என்னும் வெண்பாவின் இன மெனக் கொள்க.

அவற்றிற்குச் செய்யுள் வருமாறு:

[வெள்ளொத்தாழிசை]

'அன்னாய்! அறங்கொல் நலங்கிளர் சேட்சென்னி
ஒன்னார் உடைபுறம் போல நலங்கவர்ந்து
துன்னான் துறந்து விடல்?' 1

'ஏடீ! அறங்கொல் நலங்கிளர் சேட்சென்னி
கூடார் உடைபுறம் போல நலங்கவர்ந்து
வீடான் * துறந்து விடல்?' 2

'பாவாய்! அறங்கொல் நலங்கிளர் சேட்சென்னி
மேவார் உடைபுறம் போல நலங்கவர்ந்து
காவான் துறந்து விடல்?' 3

என இவை வெள்ளோசை கொண்டு, வேற்றுத்தளை விரவாது; ஒரு பொருண் மேல் மூன்றடுக்கி வந்தமையின், வெள்ளொத்தாழிசை.

---

பா-ம்: * நீடான்

[வெண்டாழிசை.]

'போதார் நறும்பிண்டிப் பொன்னர் மணியணையான் *
தாதார் மலரடியைத் தணவாது வணங்குவார்
தீதார் வினைகெடுப்பார் சிறந்து.' 1

இது வெள்ளோசை தழுவாது, வேற்றுத்தளை விரவி, முதற்கண் வெண்டளை தட்டு வந்தமையான், 'வெண்டாழிசை' எனப்படும்.

[வெண்டாழிசை.]

'நன்பி † தென்று தீய சொல்லார்
முன்பு நின்று முனிவ ‡ செய்யார்
அன்பு வேண்டு பவர்.' 2

இஃது ஆசிரியத்தளையான் வந்த வெண்டாழிசை.

[வெண்டாழிசை.]

'சீர்கொண்ட கருங்கடலிற் றிரைமுகந்து வலனேந்திக்
கார்வந்த ததனோடும் கமழ்குழலாய்! நிற்பிரிந்தார்
தேர்வந்த திதுகாணாய் சிறந்து.'

இது கலித்தளையான் வந்த வெண்டாழிசை.

[வெண்டாழிசை.]

'முழங்குகடல் முகந்த மூரிக் கொண்மூத்
தழங்குகுரல் முரசிற் றலைசிறந் ததிர்ந்து
வழங்கினஇவை காணாய் வந்து.'

இது வஞ்சித்தளையான் வந்த வெண்டாழிசை. பிறவும் வந்தவழிக் கண்டு கொள்க.

'வெள்ளொத்தாழிசை, வெண்டாழிசை' என்றவற்றை வேறுபடாதே வெள்ளாத்தாழிசையே என்று வழங்கவும் அமையும்.

'தன்பா அடித்தொகை மூன்றாய் இறும்படி
வெண்பாப் புரைய இறுவது வெள்ளையின்
தண்பா இனங்களிற் றாழிசை யாகும்.'

என்றார் காக்கைபாடினியார்.

'அடிமூன் றாகி வெண்பாப் போல
இறுவன மூன்றே வெள்ளொத் தாழிசை.'

என்றார் சிறுகாக்கைபாடினியார்.

'அடிமூன் றாகி வெண்பாப் போல
இறுவ தாயின் வெள்ளொத் தாழிசை.'

என்றார் அவிநயனார்.

67] வெண்டுறை. [ கஎ

மூன்றடி முதலா ஏழடி காறும்வந்
தீற்றடி சிலசில சீர்பத நிற்பினும்
வேற்றொலி விரவினும் வெண்டுறை யாகும்.

இச்சூத்திரம், வெண்டுறை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

---

1 யா. வி. 15 உரைமேற். 2 யா. வி. 15 உரைமேற்.

பி—ம்: * மணியனையான் † நண்பி ‡ முனிவு

இதன் பொழிப்பு: மூன்று அடி முதலாக ஒன்று தலைச் சிறந்து ஏழடி காறும் வந்து, கடைக்கண் ஓரடியும் பல அடியும் ஒரு சீரும் இரு சீரும் பல சீரும் குறைந்து, அவை எல்லாம் ஓர் இசையாய் வரினும்; முதல் ஓர் இசையாய்ப் பின் ஓர் இசையாய் வரினும், வெண்டுறையாம் (என்றவாறு).

அவற்றை ஓரொலி வெண்டுறை என்றும் வேற்றொலி வெண்டுறை என்றும் வழங்குப.

வரலாறு:

[ஓரொலி வெண்டுறை.]

'தாளாளர் அல்லாதார் தாம்பலர் ஆயக்கால்
என்னும் என்னும்
யாளியைக் கண்டஞ்சி யானைதன் கோடிரண்டும்
பீலிபோற் சாய்த்து விடும்பிளிற்றி யாங்கே.'

இது மூன்றடியாய், ஈற்றடி இரண்டும் இரு சீர் குறைந்து வந்த ஓரொலி வெண்டுறை.

"குழலிசைய வண்டினங்கள் கோழிலைய செங்காந்தட்
குலைமேற் பாய,
'அழலெரியின் மூழ்கினவால் அந்தோ! அளிய!' என்
றயல் வாழ் மந்தி
கலுழ்வனபோல் நெஞ்சகைந்து கல்லருவி தூஉம்
நிழல்வரை நன்னுடன் நீப்பனோ அல்லன்."

இது நான்கடியாய், ஈற்றடி இரண்டும் இரண்டு சீர் குறைந்து வந்த ஓரொலி வெண்டுறை.

'வெறியுறு கமழ்கண்ணி வேந்தர்கட் காயினும்
உறவுற வருவழி உரைப்பன உரைப்பன்மின்
செறிவுறும் எழிலினர் சிறந்தவர் இவர்நமக்
கறிவுறு தொழிலரென் றல்லவை சொல்லன்மின்
பிறபிற நிகழ்வன பின்.'

இஃது ஐந்தடியாய், ஈற்றடி ஒன்று ஒரு சீர் குறைந்து வந்த ஓரொலி வெண்டுறை.

[வேற்றொலி வெண்டுறை.]

'கல்லாதார் நல்லவையுட் கல்லேபோற் சென்றிருந்தாற்
கருமம் யாதாம்?
இல்லாதார் செல்வரைக்கண் டிணங்கியே ஏமுற்றால்
இயைவ தென்னும்?
பொல்லாதார் நன்கலன்கள் மெய்புதையப் பூண்டாலும்
பொலிவ தென்னும்?
புல்லாதார் பொய்க்கேண்மை புனைந்துரைத்தால் ஆவதென்னோ?
அல்லாதார் பொய்யாவ தறிபவேல் அமையாதோ?'

இஃது ஐந்தடியாய், ஈற்றடி இரண்டும் இரண்டு சீர் குறைந்து வந்த வேற்றொலி வெண்டுறை.

'முழங்கு களியானை மூரிக் கடற்படை முறித்தார் மன்னர்
வழங்கும் இடமெல்லாம் தன்புகழே போக்கிய வைவேல் விண்ணன்
செழுந்தண்பூம் பழைசையுட் சிறந்துநா ளுஞ்செய
எழுந்தசே திகத்துள் இருந்தவண் ணல்லடி
விழுந்தண்பூ மலர்களால் வியந்துநா ளுந்தொழத்
தொடர்ந்துநின் றவ்வினை துறந்துபோ மாலரோ.'

இஃது ஆறடியாய், முதலடி இரண்டும் அறுசீராய், பின் நான்கடியும் நாற்சீராய், முதலிரண்டடியும் ஓர் இசையாய், பின் நான்கடியும் மற்றோர் இசையாய் வந்தமையால், வேற்றொலி வெண்டுறை எனப்படும்.

'முழங்குதிரைக் கொற்கை வேந்தன்
முழுதுலகும் ஏவல்செய முறைசெய்கோமான்
வழங்குதிறல் வாள்மாறன் மாச்செழியன்
றுக்கரிய வைவேல் பாடிக்
கலங்கிநின் றுரெலாம் கருதலா காவணம்
இலங்குவாள் இரண்டினால் இருகைவீ சிப்பெயர்ந்
தலங்கல்மா லையவிழ்ந் தாடவா டும்மிவள்
புலங்கொள்பூந் தடங்கட்கே புரிந்துநின் றுரெலாம்
விலங்கியுள் ளந்தப விளிந்துவே றுபவே.'

இஃது ஏழடியாய், முதலிரண்டடியும் அறுசீராய், ஓரோசையால் வந்து, பின் ஐந்தடியும் நாற்சீராய், வேறோர் ஓசையால் வந்த வேற்றொலி வெண்டுறை.

அல்லது பிறரும் சொன்னார். என்னை?

'அடியைந் தாகியும் மிக்கும் ஈற்றடி
ஒன்றும் இரண்டும் சீர்தப வரினும்,
வெண்டுறை என்னும் விதியின வாகும்.'

என்றார் காக்கைபாடினியார்.

'பெற்றவடி ஐந்தினும் பிறவினும் பாட்டாய்
இற்ற அடியும் ஈற்றயல் அடியும்
ஒன்றும் இரண்டும் நின்ற தனசீர் *
கண்டன குறையின் வெண்டுறை யாகும்.'

என்றார் மயேச்சுரர்.

'ஐந்தா றடியின் நடந்தவும் அந்தடி
ஒன்றும் இரண்டும் ஒழிசீர்ப் படுநவும்
வெண்டுறை நாமம் விதிக்கப் படுமே.'

என்றார் அவிநயனார்.

இவர்களும் விதப்பான் † மூன்றடி முதலா ஏழடிகாறும் இவ்வாறே உடன் பட்டார் எனக் கொள்க.

---

பி—ம்: * அதன்சீர் † இச் சூத்திரங்களால்

68] **வெளி விருத்தம்.** [கரு

நான்கடி யானும் நடைபெற் றடிதொறும்
தான்றனிச் சொற்கொளின் வெளிவிருத் தம்மே.

இச்சூத்திரம், வெளி விருத்தம் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

**இதன் பொருள்:** நான்கு அடியானும் நடைபெற்று—நான்கு அடியால் வந்து, ('நான்கு அடியானும்' என்ற உம்மையான், மூன்று அடியானும் அருகி வரப்பெறும் எனக் கொள்க), அடிதொறும் தான் தனிச்சொல் கொளின் வெளி விருத்தமே—அடிதொறும் இறுதிக்கண் ஒரு சொல்லே தனிச்சொல்லாய்ப் பொருள் கொண்டு முடியின் 'வெளி விருத்தம்' எனப்படும் (என்றவாறு).

'இறுதி' என்பது, 'மூன்றடி முதலா எழுடி காறும்' 1 என்னும் சூத்திரத் தினின்றும் அதிகாரம் வருவித்து உரைக்கப்பட்டது.

'அடிதொறும் தனிச்சொற்கொளின் வெளி விருத்தம்மே,' என்னுது, **'தான்'** என்று மிகுத்துச் சொல்லிய அதனுல், தனிச்சொல்லை அடி உட்படச் சொன்னுல் **இயைபுத் தொடையாம்;** அஃது அப்பெற்றியன்றியே வேருய் வந்தது போலும் இங்குத் 'தனிச்சொல்லாவது' என்று அடியுட்படாதே பிரித்து அலகிட்டு வழங்கப்படும். அல்லாது, அடிதொறும் பொருள் அற்று மண்டிலமாய் வருவன **'அடிமறி மண்டில வெளி விருத்தம்'** என்றும், **அல்லாதன 'நிலை வெளி விருத்தம்'** என்றும் வழங்கப்படும் எனக் கொள்க.

அவற்றிற்குச் செய்யுள் வருமாறு:

**[அடி மறி மண்டில வெளி விருத்தம்.]**

'சொல்லல் சொல்லல் தியவை சொல்லல்—எஞ்ஞான்றும்;
புல்லல் புல்லல் தீநெறி புல்லல்—எஞ்ஞான்றும்;
கொல்லல் கொல்லல் செய்நலம் கொல்லல்—எஞ்ஞான்றும்;
நில்லல் நில்லல் நீசரைச் சார்ந்தங்—கெஞ்ஞான்றும்.'

எனவும்,

'ஆவா!' என்றே அஞ்சினர் ஆழா *—ஒருசாரார்;
கூகூ! என்றே கூவிளி கொண்டார்—ஒருசாரார்;
மாமா! என்றே மாய்ந்தனர் நீந்தா—ஒருசாரார்,
ஏகிர் நாய்கீர்! † என்செய்தும்! என்ருர்—ஒருசாரார்.

எனவும்,

'மாலே மணங்கமழும் மௌவல் முகைவிரியும்—எந்தைகுன்றம்;
காலே மணிக்குவளே காதலர்போற் கண்விழிக்கும்—எந்தைகுன்றம்;
நீல மழைமுழங்கி நின்று சிலம்பதிரும்—எந்தைகுன்றம்;
ஆலி ‡ மயிலகவ அந்தண் டுவனமே §—எந்தைகுன்றம்.'

எனவும் இவை நான்கு அடியாய், அடிதோறும் பொருள் அற்று, அடிமறியாய் வந்தமையால், அடிமறி மண்டில வெளி விருத்தம்.

**[நிலே வெளி விருத்தம்.]**

'சேயரி நாட்டமும் செவ்வாயும் அல்குலுமோ—அம்மானுய்!
ஆய்மலரும் தொண்டையும் ஆழியந் திண்டேரும்—அம்மானுய்!
மாயிருந் தானே மயிடன் றலேயின்மேல்—அம்மானுய்!
பாயின சீறடிப் பாவை பகவதிக்கே—அம்மானுய்!'

இஃது அடிமறியாய் வாராமையின், நிலே வெளி விருத்தம்.

---

1 யா. வி. 67.

பி—ம்: * ஆழ்ந்தார் † நாகீர் ‡ மாலே § வந்தண் டுவணமே, வந்தன்று வானமே.

[அடி மறி மண்டில வெளி விருத்தம்.]

'உற்ற படையினுர் பெற்ற பகையினுர்—புருவே!
பெற்றம் உடையார் பெருஞ்சிறப் பாண்டகை—புருவே!
மற்றை யவர்கள் மனையிற் களிப்பதோ—புருவே!'

எனவும்,

'ஆடு கழைகிழிக்கும் அந்தண் புயலிற்றே—எந்தைகுன்றம்;
நீடு கழைமேல் நிலாமதியம்* நிற்குமே—எந்தைகுன்றம்;
கூடு மழைதவழும் கோடுயர் சந்தமே—எந்தைகுன்றம்.'

எனவும் இவை மூன்றடியாய் வந்த அடி மறி மண்டில வெளி விருத்தம்.

[நிலை வெளி விருத்தம்.]

'ஏதங்கள் நீங்க எழிலிளம் பிண்டிக்கீழ்ப்—புருவே!
வேதங்கள் நான்கும் விரித்தான் விரைமலர்மேற்—புருவே!
பாதம் பணிந்து பரவுதும் பல்காலும்—புருவே!'

இது மூன்றடியால் வந்த நிலை வெளி விருத்தம்.

பிறரும் இலக்கணம் இவ்வாறே சொன்னுர். என்னை?

'ஒருமூன் றொருநான் கடியடி தோறும்
தனிச்சொற் றழுவி நடப்பன வெள்ளை
விருத்தம் எனப்பெயர் வேண்டப் படுமே.'

என்றுர் காக்கைபாடினியார்.

'நான்கு மூன்றடி தோறும் தனிச்சொல்
தோன்ற வருவன வெளிவிருத் தம்மே.'

என்றுர் சிறுகாக்கைபாடினியார்.

'மூன்று நான்கடி தோறும் தனிச்சொற்
கொளீஇய † எல்லாம் வெளிவிருத் தம்மே.'

என்றுர் அவிநயனுர்.

'மூவடி யாகியும் நாலடி யாகியும்
பாவடி வீழ்ந்து பாடலுள் நடந்தும்
கடிவரை விலவாய் அடிதொறும் ‡ தனிச்சொல்
திருத்தகு நிலைய விருத்த மாகும்.'

என்றுர் நீர் மலிந்த வார் சடையோன் பேர் மகிழ்ந்த பேராசிரியர்.

மூன்றடியால் வரும் வெளி விருத்தமும், மூன்றடியால் வரும் வெண்டுறையும் வெள்ளொத்தாழிசையும் சிந்தியல் வெண்பாவின் இனம் என்றும்; தனிச்சொல் உடைமையால், நான்கடி வெளி விருத்தம் நேரிசை வெண்பாவின் இனம் என்றும், நான்கடி வெண்டுறை இன்னிசை வெண்பாவின் இனம் என்றும்; ஐந்தடி முதலா ஏறிய அடியுடைய வெண்டுறைகள் பஃறொடை வெண்பாவின் இனம் என்றும் ஒருபுடை ஒப்புமை நோக்கி, அப்பாற்சார்த்தி வழங்கப்படும்.

வெண்பாவிற்கு இனமாகிய 'தாழிசை, துறை, விருத்தம்' என்னும் மூன்றும், 'வெள்ளொத்தாழிசை, வெண்டாழிசை, ஓரொலி வெண்டுறை, வேற்றொலி வெண்டுறை, அடிமறி மண்டில வெளி விருத்தம், நிலை வெளி விருத்தம்' என்று கூறுபடுப்ப, ஆறும்; அவற்றுள் வெள்ளொத்தாழிசை, வெண்டலை நான்கினுலும் கூறுபடுப்ப, நான்கே ஆவது, வேற்றுத்தலை விரவாதாகலின்.

---

பா—ம்: * நிலாமதி. † கொளுவிய ‡ வில்லா அடிதொறும்.

வெண்டாழிசை முதலாகிய ஐந்தும், சிறப்புடைய ஏழு தளையாலும் சிறப்பில் ஏழு தளையாலும் கூறுபடுப்ப, எழுபதாம்; வெள்ளொத்தாழிசையோடும் கூட்டிச் சொல்ல, எழுபத்து நாலாம்; பிறவாற்றால் விகற்பிக்கப் பலவாம்.

[கட்டளைக் கலித்துறை.]

'மூன்றடி யானும் முடிந்தடி தோறும் முடிவிடத்துத்
தான்றனிச் சொற்பெறும் தண்டா விருத்தம்; வெண் டாழிசையே
மூன்றடி யாய்வெள்ளை போன்றிறும்; மூன்றிழி பேழுயர்வாய்
ஆன்றடி தாஞ்சில அந்தம் குறைந்திறும் வெண்டுறையே.' 1

இவ்வியாப்பருங்கலப் புறநடையை விரித்து உரைத்துக்கொள்க.

வெண்பாவும் அதன் இனமும் முடிந்தன.

69] ஆசிரியப்பா. [சுகூ

அகவல் இசையன அகவல்; மற்றவை
ஏஓ ஈஆய் என்ஐயென் றிறுமே.

'இஃது என் நுதலிற்றோ?' எனின், நிறுத்த முறையானே ஆசிரியப்பா ஆமாறு, பொதுவகையான் உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொழிப்பு: அகவல் ஓசையைத் தமக்கு ஓசையாக உடைய நான்கு ஆசிரியப்பாவும்; அவைதாம், 'ஏ' என்றும், 'ஓ' என்றும், 'ஈ' என்றும், 'ஆய்' என்றும், 'என்' என்றும், 'ஐ' என்றும் இறும் (என்றவாறு).

'அகவல்' என்பது, 'ஆசிரியம்' என்றவாறு. என்னை?

'அகவல் என்ப தாசிரியப் பாவே.' 2

என்றாராகலின்.

'ஏ, ஓ, ஈ' என்புழி, 'ஏ' என்னும் அசைச்சொல்லை முன் வைத்தமையால், 'ஏ' என்று இறுவது சிறப்புடைத்து. என்னை?

'சிறப்புடைப் பொருளை முந்துறக் கிளத்தல்.'

என்பது தந்திர உத்தியாகலின்.

'அகவல் இசையன அகவல்; அவை
ஏஓ ஈஆய் என்ஐ என்றிறும்.'

என்னாது, 'மற்று' என்று மிகுத்துச் சொல்ல வேண்டியது என்னை?

ஏந்திசை அகவலும், தூங்கிசை அகவலும், ஒழுகிசை அகவலும் என மூன்று வகைப்படும் அகவல் ஓசை என்பது அறிவித்தற்கு வேண்டப்பட்டது;

'நேர்நேர் இயற்றளை யான்வரும் அகவலும்,
நிரைநிரை இயற்றளை யான்வரும் அகவலும்,
ஆயிரு தளையுமொத் தாகிய அகவலும்,
ஏந்தல் தூங்கல் ஒழுகல் என்றா
ஆய்ந்த நிரல்நிரை ஆகும் என்ப.'

என்றாராகலின்.

---

1 யா. கா. 28. 2 சங்கயாப்பு; யா. வி. 16, 27 உரைமேற்.

[நேரிசை ஆசிரியப்பா.]

'போது சாந்தம் பொற்ப எந்தி
ஆதி நாதற் சேர்வோர்
சோதி வானம் துன்னுவோரே.'

என்பது ஏந்திசை அகவல் ஓசை.

[நேரிசை ஆசிரியப்பா.]

'அணிநிழல் அசோகமர்ந் தருள்நெறி நடாத்திய
மணிதிகழ் அவிரொளி வரதனைப்
பணிபவர் பவநனி பரிசறுப் பவரே.'

என்பது தூங்கிசை அகவல் ஓசை.

[நேரிசை ஆசிரியப்பா.]

'குன்றக் குறவன் காதல் மடமகள்
வரையர மகளிர் புரையும் சாயலள்
ஐயள் அரும்பிய முலையள்
செய்ய வாயினள் மார்பினள் சுணங்கே.'

என்பது ஒழுகிசை அகவல் ஓசை.

இன்னும் பிறவாற்றான் வருவன :

[நேரிசை ஆசிரியப்பா.]

'கொன்னூர் துஞ்சினும் யாம்துஞ் சலமே;
எம்மில் அயல தேழில் உம்பர்
மயிலடி இலைய மாக்குரல் நொச்சி
அணிமிகு மென்கொம் பூழ்த்த
மணிமருள் பூவின் பாடுநனி கேட்டே.' *[1]

இன்னவை பிறவும் தூங்கிசை அகவல் ஓசை எனப்படும்.

[நிலைமண்டில ஆசிரியப்பா.]

'பொழிலே
இரவோ ரன்ன இருளிற் றுகியும்,
நிலவோ ரன்ன வெண்மணல் ஒழுகியும்,
அரைசுமணம் நயந்த பந்தர்ப் போலவும்,
வரைவாழ் இயக்கியர் உறைவிடம் போலவும்
வண்ணனை † முற்று தாகியும், ஒண்ணிழற்
பூவிரி நாற்றம் அன்றியும் ஏர்வரக் ‡
குங்குமம் கமழும் எங்கோன் வரையென §
வியந்தனள் இருந்து வீணை பண்ணி
நயந்த கீதம் பாடும் என்ப
வயந்த மாகிய பொழிலி னனே.'

இன்னவை பிறவும் ஏந்திசை அகவல் ஓசை எனப்படும்.

---

1 குறுந். 138.

பி—ம் : * ஓர்ந்தே † வண்ணம் ‡ மேவரக் § எனுங்கோன் மற்றென.

[நூற்பா.]

'இமிழ்கடல் வரைப்பின் எல்லையின் வழாஅத்
தமிழியல் வரைப்பின் தானினிது விளங்கி
யாப்பியல் தானே யாப்புற விரிப்பின்
எழுத்தசை சீர்தளை அடிதொடை தூக்கொ
டிழுக்கா மரபின் இவற்றொடு பிறவும்
ஒழுக்கல் வேண்டும் உணர்ந்திசி னோரே.'

எனவும்,

'முழுதுல கிறைஞ்ச முற்றொருங் குணர்ந்தோன்' 1

எனவும் இன்னவை எல்லாம் நூற்பா அகவல் ஓசையாய், ஒழுகிசை அகவல் ஓசை எனப்படும்

இவை 'ஏ' என்று இற்றவாறு கண்டுகொள்க.

[நேரிசை ஆசிரியப்பா.]

'பிண்ட நெல்லின் அள்ளூர் அன்னவள்
ஒண்டொடி நெகிழினும் நெகிழ்க
சென்றீ பெரும! நிற் றகைக்குநர் யாரோ.' 2

இஃது 'ஓ' என்று இற்ற ஆசிரியம்.

'குவளை உண்கண் இவள்வயிற் பிரிந்து
பெருந்தோள் கதுப்பொடு விரும்பினை நீவி
இரங்குமென் றழுங்கல் வேண்டா
செழுந்தேர் ஓட்டிய வென்றியொடு சென்றீ.'

இஃது 'ஈ' என்று இற்ற ஆசிரியம்.

'முள்ளி நீடிய முதிநீர் அடைகரைப்
புள்ளிக் கள்வன் ஆம்பல் அறுக்கும்
தண்டுறை ஊரன் தெளிப்பவும்
உண்கண் பசப்ப தெவன்கொல் அன்னாய்!' 3

இஃது 'ஆய்' என்று இற்ற ஆசிரியம்.

[நிலைமண்டில ஆசிரியப்பா.]

'அலந்த மஞ்ஞை யாமம் கூவப்
புலர்ந்தது மாதோ புரவலற் கிரவென்.' 4

இன்னவை பிறவும் உதயணன் கதையின்கண் 'என்' என்று இற்ற ஆசிரியம் எனக் கொள்க.

[நேரிசை ஆசிரியப்பா.]

'நின்றன நின்று தன்றுணை ஒருசிறைப்
பூந்தண் சிலம்பன் 'தேந்தழை இவை,' எனக்
காட்டவும் காண்டல் செல்லாள் கோட்டிப்
பூண்முலை நோக்கி இறைஞ்சி
வாண்முக எருத்தம் கோட்டினள் மடந்தை.'

இஃது 'ஐ' என்று இற்ற ஆசிரியம்.

---

1 யா. வி. பாயிரம் 2 அகம். 46 3 ஐங்குறு. 21 4 பெருங்கதை. 1 54 : 144-5.

'என்' என்னும் அசைச்சொல் ஆசிரியத்துள் அருகியன்றி வாராது; வரினும், சிறப்பிலது எனக் கொள்க.

'தன்பால் உறுப்புத் தழுவிய மெல்லிய
இன்பா அகவல் இசையதை இன்னுயிர்க்
கன்பா வறைந்த ஆசிரியம் என்ப.'

என்று ஓசை சொல்லி,

'ஏயெனச் சொல்லின் ஆசிரியம் இறுமே;
ஓஆய் என * ஒரோவழி ஆகும்.'
'என்னென் சொல்லும் பிறவும் ஒன்றித் †
துன்னவும் பெறூஉம் நிலைமண் டிலமே.'

என்று ஈறு சொன்னார் அவிநயனார்.

'இயற்சீர்த் தாகியும், அயற்சீர் விரவியும்,
தன்றளை தழுவியும், பிறதளை தட்டும்,
அகவல் ஓசைய தாசிரி யம்மே.'

என்று ஓசை சொல்லி,

'ஏயென் றிறுவ தாசிரியத் தியல்பே;
ஓஆய் இறுதியும் உரியவா சிரியம்.'
'நின்ற தாதி நிலைமண் டிலத்துள்
என்றும் என்னென் றிறுதிவரை வின்றே.'
'அல்லா ஒற்றும் அகவலின் இறுதி
நில்லா அல்ல; நிற்பன வரையார்.'

என்று ஈறு சொன்னார் மயேச்சுரர்.

'ஈ' என்றும் 'ஐ' என்றும் இறும் என்று இவர்கள் சொற்றிலரால்' எனின், இவர்களும் இலேசு எச்ச உம்மை விதப்புக்களால் உடம்பட்டார்; இந்நூலுடையார் எடுத்து ஓதினர். இது வேற்றுமை.

'அகவல் ஓசை ஆசிரி யம்மே.'

என்று பிறரும் சொன்னார் எனக் கொள்க.

70] ஆசிரியப்பாவின் பெயர் வேறுபாடு. [கஎ

நேரிசை இணைக்குறள் மண்டிலம் நிலைப்பெயர்
ஆகுமண் டிலமென் றகவல் நான்கே.

'இஃது என் நுதலிற்றோ?' எனின் அகவல் ஓசையோடு அளவடித்தாகியும், இயற்சீர் பயின்றும் அயற்சீர் விரவியும், தன் தளை தழுவியும் பிற தளை மயங்கியும், நிரை நடுவாகிய வஞ்சியுரிச்சீர் வாராது அயற்பா அடி மயங்கியும் மயங்காதும், ஐஞ்சீர் அடியால் அருகி வரும் என்றும், நாலெழுத்து முதலாக இருபதெழுத்தின்காறும் உயர்ந்த பதினேழ் நிலமும் பெற்ற நாற்சீரடியால் நடைபெறும் என்றும் வேண்டப்பட்ட ஆசிரியப்பாவினது பெயர் வேறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

**இதன் பொழிப்பு**: நேரிசை ஆசிரியமும், இணைக்குறள் ஆசிரியமும், நிலைமண்டில ஆசிரியமும், அடிமறி மண்டில ஆசிரியமும் என ஆசிரியப்பா நான்காகும் (என்றவாறு).

---

பி. - ம். * ஓஆஅஐயும். † பிறவு ‡ மென்றிவற்.

இது மொழி மாற்றுச் சூத்திரம். 'எவ்வாறோ?' எனின், 'நிலைப் பெயர் ஆகும் மண்டிலம்' என்றவழி, 'நிலை' என்பதனையும் 'மண்டிலம்' என்பதனையும் கூட்டி 'நிலை மண்டிலம்' என்றும்; பின்னை 'அகவல்' என்பதனையும் 'பெயர்' என்பதனையும் 'நான்கு' என்பதனையும் 'ஆகும்' என்பதனையும் கூட்டி, அகவற் பெயர் நான்காகும்,' என்றும் கொள்க.

மிக்க புகழும் சொல்லும் ஓசையும் உடைத்தாகலினால், 'நேரிசை' என்பதூஉம் காரணக்குறி.

இணைந்து குறைந்த அடியுடைத்தாகலின், இணைக்குறள்' என்பதூஉம் காரணக்குறி.

எல்லா அடியும் முதல் நடு இறுதியாக உச்சரித்தாலும் ஓசையும் பொருளும் ஒத்து வருதலின், 'அடி மறி மண்டிலம்' என்பதூஉம் காரணக்குறி.

ஒரு பெற்றியே நின்று எல்லா அடியும் ஒத்து நடத்தலின், 'நிலை மண்டிலம்' என்பதூஉம் காரணக்குறி.

என்னை?

'நேரிசை இணைநிலை மண்டிலம் மண்டிலம்

ஈரிரண் டியல எண்ணுங் காலை.'

என்றார் பிறரும்.

மூன்று அகவல் ஓசையானும் நான்கு ஆசிரியப்பாவையும் உறழப் பன்னிரண்டாம். நான்கு ஆசிரியப்பாவினையும் 'சிறப்புடை ஏழ்தளை, சிறப்பில் ஏழ்தளை' எனக் கூறுபடுப்ப, ஐம்பத்தாறும். அவை ஓசையும் தளையும் கூட்டி உறழ, நூற்றுஅறுபத்தெட்டாம்.

'பெயர்' என்ற விதப்பு என்னை?' எனின், ஒருசார் ஆசிரியர் வேற்றடி விரவி வந்த ஆசிரியங்களை 'விரவியல் ஆசிரியம்' என்றும், விரவாதனவற்றை 'இன்னியல் ஆசிரியம்' என்றும் சொல்லுவர் என்பது அறிவித்தற்கு எனக் கொள்க.

நான்கு ஆசிரியத்தினையும் இவ்விரு பெயராற் கூறுபடுப்ப, எட்டாம். அவை ஓசையும் தளையும் கூட்டி உறழ, முந்நூற்று முப்பத்தாறும். பிறவாற்றான் விகற்பிக்கப் பலவாம்.

71] [நேரிசை ஆசிரியப்பா.] [கஅ

அந்த அடியின் அயலடி சிந்தடி

வந்தன நேரிசை ஆசிரி யம்மே.

'இஃது என் நுதலிற்றோ?' எனின், மேல் அதிகாரம் பாரித்த நான்கனுள் நேரிசை ஆசிரியப்பா ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள்: அந்த அடியின் அயல் அடி—ஈற்றடியின் மேலையடி, சிந்தடி வந்தன—முச்சீரடியான் வந்தன, நேரிசை ஆசிரியம்மே—நேரிசை ஆசிரியப்பா எனப்படும் (என்றவாறு).

வரலாறு:

[நேரிசை ஆசிரியப்பா.]

'சிறுவெள் ளரவின் அவ்வரிக் குருளை

கான யானை அணங்கி யாஅங்கு

இளையள் முளைவாள் எயிற்றள்

வளையுடைக் கையளெம் அணங்கி யோளே.'1

இது தூங்கிசை அகவற் சிறப்புடை இயற்சீரான் வந்த நேரிசை ஆசிரியப்பா. பிறவும் வந்தவழிக் கண்டுகொள்க.

---

1. குறுந். 119.

**'சிந்து வந்தன'** என்றது, பெயர்த்தும் **'அடி'** என்றது என்னை? 'கைக்கிளைப் பொருளைமேல் ஆசிரியம் வருவுழி எருத்தடி முச்சீரான் வரப் பெறுது,' என்பர் **கடியநன்னியார்** என்பது அறிவித்தற்கு எனக் கொள்க. என்னை?

> 'கைக்கிளை ஆசிரியம் வருவ தாயின்,
> முச்சீர் எருத்தின் ருகி, முடிவடி
> எச்சீ ரானும் ஏகாரத் திறுமே.'[1]

என்றாராகலின்.

> 'இற்றதன் மேலடி ஒருசீர் குறைய
> நிற்பது நேரிசை ஆசிரி யம்மே.'

என்றார் **அவிநயனார்.**

> 'இருசீர் அடிமேல் ஒருசீர் குறையடி
> பெறுவன நேரிசை ஆசிரி யம்மே.'

என்றார் **சிறுகாக்கைபாடினியார்.**

72] **[இணைக்குறள் ஆசிரியப்பா.]**

[இணைக்குறள் இடைபல குறைந்திறல்* இயல்பே. [கக

'இஃது என் நுதலிற்றோ?' எனின், **இணைக்குறள் ஆசிரியப்பா** ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொருள்: இணைக்குறள்—இணைக்குறள் ஆசிரியப்பா, இடை பல குறைந்து இறல் இயல்பே—ஈற்றடியின் மேலையடி இரண்டு சீரும் ஒரு சீரும் குறைந்து இறுதல் இயல்பு எனப்படும் (என்றவாறு).

'ஈற்றடியின் மேலையடி' என்பது, அதிகாரம் வருவித்து உரைத்தது.

**'இயல்பே'** என்ற விதப்பால், முதலடியும் ஈற்றடியும் ஒழித்து ஏனையடி ஓரோவொன்று ஒரு சீரும் இரு சீரும் குறைந்து வரும் என்க.

வரலாறு:

**[இணைக்குறள் ஆசிரியப்பா.]**

> 'நீரின் தண்மையும் தீயின் வெம்மையும்
> சாரச் சார்ந்து
> தீர்த் தீரும்
> சாரல் நாடன் கேண்மை,
> சாரச் சாரச் சார்ந்து,
> தீரத் தீரத் தீர்பொல் லாதே.'[2]

இது சிறப்புடை நேரொன்றாசிரியத் தளையான் வந்து, ஈற்றயலடி இரண்டும் முச்சீரான் வந்த **இணைக்குறள் ஆசிரியப்பா.**

> 'இவனினும் இவனினும் † இவள்வருந் தினளே;
> இவனினும் ‡ வருந்தினன் இவனே;
> இவளைக் கொடுத்தோன் ஒருவனும் உளனே;
> தொடிக்கை பிடித்தோன் ஒருவனும் உளனே;
> நன்மலை நாடனும் உளனே;
> புன்னையங் கானற் சேர்ப்பனும் உளனே.'

இது சிறப்புடை நிரையொன்றாசிரியத் தளையான் வந்த **இணைக்குறள் ஆசிரியப்பா.**

---

1. இது கடிய நன்னியார் சூத்திரம். 2. இப்பாவில் ஒருசீர் குறைந்தமைக்கு ஈற்றயலடியிரண்டும், இருசீர் குறைந்தமைக்கு ஏனைக் குறளடி இரண்டும் உதாரணமாகக் கொள்ளத் தகும். பி - ம். * குறைந்திறின் † இவளினும் இவளினும் ‡ இவளினும்.

'கொன்றுவாழ்* கொடிச்சியர் சிறார் எடுத்த
அம்மெல் லாகத் தலரிவ னேனைது
நீங்கிய வண்ணமும் நீங்கிப்†
பாங்கியற் றமரொடும் வந்து
தாங்கிய இன்பம் தணந்தனே பெரிதே.'

இது சிறப்பில் கலித்தளையான் வந்த **இணைக்குறள் ஆசிரியப்பா.**

'சிறியகட் பெறினே எமக்கீயு மன்னே!
பெரியகட் பெறினே
யாம்பாடத் தான்மகிழ்ந் துண்ணு மன்னே!
சிறுசோற் றானும் நனிபல கலத்தன் மன்னே!
5. பெருஞ்சோற் றானும் நனிபல கலத்தன் மன்னே!
என்பொடு தடிபடு வழியெல்லாம் எமக்கீயு மன்னே!
அம்பொடு வேல்நுழை வழியெல்லாம் தானிற்கு மன்னே
நரந்தம் நாறும் தன்கையாற்
புலவுநாறும் என்றலை தைவரு மன்னே!
10. அருந்தலை இரும்பாணர் அகன்மண்டைத் துளையுரீஇ,
இரப்போர் கையுளும் போகிப்
புரப்போர் புன்கண் பாவை சோர
அஞ்சொண் டேர்ச்சிப் புலவர் நாவிற்
சென்றுவீழ்ந் தன்றவன்
15. அருநிறத் தியங்கிய வேலே;
ஆசா கெந்தை யாண்டுளன் கொல்லோ!
இனிப் பாடுநரும் இல்லை;
பாடுந ருக்கொன் றீகுநரும் இல்லை;
பனித்துறைப் பகன்றை நறைகொள் மாமலர்
20. சூடாது வைகி யாங்குப் பிறர்க்கொன்று
ஈயாறு வியும் உயிர்தவப் பலவே.' 1

இதனுள் இருசீர் அடியும் முச்சீரடியும் வந்தன.

என்னை?

'இடைபல குறைவ திணைக்குற ளாகும்.'

என்றார் **அவிநயனார்.**

'ஈற்றயல் குறைந்த நேரிசை; இணையாம்
ஏற்ற அடியின் இடைபல குறைந்தன.'

என்றார் **மயேச்சுரர்.**

'அளவடி அந்தமும் ஆதியும் ஆகிக்
குறளடி சிந்தடி என்று யிரண்டும்
இடைவர நிற்ப திணைக்குறள் ஆகும்.'

என்றார் காக்கைபாடினியார்.

'இடையிடை சீர்தபின் இணைக்குறள் ஆகும்.'

என்றார் சிறுகாக்கைபாடினியார்.

---

* குன்றுவாழ் † நீங்கிய

1. புறம். 235.

73] [அடி மறி மண்டில ஆசிரியப்பா.] [உ0

மனப்படும் அடிமுத லாயிறின் மண்டிலம்.

'இஃது என் நுதலிற்றோ?' எனின், மண்டில ஆசிரியப்பா ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று

**இதன் பொருள்:** மனம் படும் அடி முதலாய் இறின்—யாதானும் மனப்பட்டது ஓர் அடி முதலாகச் சொல்லப்பட முடிவது, மண்டிலம்—மண்டில ஆசிரியப்பா எனப்படும் (என்றவாறு).

வரலாறு:

**[அடி மறி மண்டில ஆசிரியப்பா.]**

'மாறுக் காதலர் மலைமறந் தனரே;
ஆறுக் கட்பனி வரலா னாவே;*
ஏறு மென்றோள் வளைநெகி ழும்மே;
கூறுய் தோழியாம் வாழு மாறே.' 1

இது தன் சீர் நேர்த்தளையான் வந்த **மண்டில ஆசிரியப்பா.**

'பூங்கட் குறுந்தொடி யாங்குற் றனளே?-
புனல்சேர் ஊரன் பொதுமகன் அன்றோ?
ஏதில் மாக்கட் கெவனு கியரோ?
போதி பாண! நின் பொய்ம்மொழி எவனோ?'

இது சிறப்புடை இயற்சீர் வெண்டளையான் வந்த **மண்டில ஆசிரியப்பா.**

'சூரல் பம்பிய சிறுகான் யாறே;
சூரர மகளிர் ஆரணங் கினரே;
வாரலை எனினே யானஞ் சுவலே;
சாரல் நாட! நீவா லாறே.'

இது சிறப்புடை ஆசிரிய நேர்தளையான் வந்த **மண்டில ஆசிரியப்பா.**

இவற்றை மனப்பட்டது ஓர் அடி முதலாக உச்சரித்து, ஓசையும் பொருளும் பிழையாதவாறு கண்டுகொள்க.

என்னை?

'உரைப்போர் குறிப்பின் உணர்வகை அன்றி †
இடைப்பால் முதலீ றென்றிவை தம்முள்
மதிக்கப் படாதது மண்டில யாப்பே.'

என்றார் **காக்கைபாடினியார்.**

'கொண்ட அடிமுத லாயொத் திறுவது
மண்டில யாப்பென வகுத்தனர் புலவர்.'

என்றார் **சிறுகாக்கைபாடினியார்.**

'கொண்ட அடிமுத லாயொத் திறுவது
மண்டிலம் ஒத்திறின் நிலைமண் டிலமே.'

என்றார் **அவிநயனார்.**

'எவ்வடி யானும் முதனடு இறுதி
அவ்வடி பொருள்கொளின் மண்டில யாப்பே.'*

என்றார் **மயேச்சுரர்.**

---

1. யா. வி. 95உரைமேற்.

பி - ம். * கண்ணீர் வரலானாதே. † இன்றி.

அஃதேல், 'அடிமுதலாய் வரின்' என்னாது, 'இறின்' என்று வெறுத் திசைப்பக் கூறியது என்னை ?

நேரிசை, இணைக்குறள், நிலைமண்டில ஆசிரியங்கள், முதலும் இறுதியும் ஒன்றி வந்தால், அவற்றை **நேரிசை மண்டில ஆசிரியப்பா, இணைக்குறள் மண்டில ஆசிரியப்பா, மண்டில ஆசிரியப்பா, நிலைமண்டில ஆசிரியப்பா** எனப் பெயரிட்டு வழுங்குவர் ஒருசார் ஆசிரியர் என்பது அறிவித்தற்கு எனக் கொள்க. என்னை ?

'எழுவாய் இரட்டித் திறுதி ஒன்றாய்
வரினது மண்டில ஆசிரி ய*ம்மே.'

என்றாராகலின்.

வரலாறு :

'முதுக்குறைந் தனளே முதுக்குறைந் தனளே
மலையன் ஒள்வேற் கண்ணி
முலையினம் வாராள் † முதுக்குறைந் தனளே.' 1

இது **நேரிசை மண்டில ஆசிரியப்பா.**

பிறவும் வந்தவழிக் கண்டுகொள்க.

74] [உக

## நிலைமண்டில ஆசிரியப்பா

ஒத்த அடியின ஆகியும் ஒற்றிற
நிற்பவும் என்னும் நிலைமண் டிலமே.

'இஃது என் நுதலிற்றோ' எனின், **நிலைமண்டில ஆசிரியப்பா** ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

**இதன் பொருள் :** ஒத்த அடியின ஆகியும்—(நேரிசை, இணைக் குறள் போலாது) எல்லா அடியும் சீர் ஒத்து நின்றவாறே நின்று முடிவன ஆகியும், ஒற்று இற நிற்பவும்—அவ்வவற்று ஈற்றினும் யாதானும் ஓர் ஒற்றினையும் ஈறாக நிற்பனவும், என்னும்—'**என்**' என்னும் அசைச்சொல் ஈறாக நிற்பனவும், நிலைமண்டிலமே—நிலைமண்டில ஆசிரியப்பா எனப்படும் (என்றவாறு).

'**நிற்பவும்**' என்ற உம்மையான், **நூற்பா நிலை மண்டில**மும் பிறவும் ஏ, ஓ, ஈ, ஆ, ஐ என்னும் ஐந்து உயிரும் அல்லாப் பிற உயிரும் இசைவன எல்லாம் ஈறாகி வரப்பெறும் எனக் கொள்க.

வரலாறு :

### [நிலைமண்டில ஆசிரியப்பா]

'வேரல் வேலி வேர்க்கோட் பலவின்
சாரல் நாட! செவ்வியை ஆகுமதி;
யாரஃ தறிந்திசி னோரே? சாரற்
சிறுகோட்டுப் பெரும்பழம் தூங்கி யாங்கியவள்
உயிர்தவச் சிறிது; காமமோ பெரிதோ!' 2

இஃது எல்லா அடியும் ஒத்துச் சிறப்புடை நேர்த்தளையான் வந்த **நிலைமண்டில ஆசிரியப்பா.**

---

1. சிற்றெட்டகம். தமிழ்நெறி. பொருள். 22 மேற்., யா. வி. 32 உரைமேற்.
2. குறுந். 18, யா. வி. 53 உரைமேற்.

ழி - ம் * மாகும். † முலையும் வாரா.

'பானலொடு கமழும் கானலந் தண்கழி
முத்துகுத் தன்ன * கொத்துதிர் புன்னைக்
கொடுஞ்சினை நெடுங்கோட் டிருந்தபார்ப் பிற்குத்
குண்டுறை அன்னம் மீன்கவர்ந்து கொடுக்கும்
தண்டுறை ஊரன் தக்கானெனல் † கொடிதே.'

இது சிறப்பில் வஞ்சித்தளை ஒன்றி வந்த நிலைமண்டில ஆசிரியப்பா.

இவை எல்லாம் அடியும் ஒத்து நின்றவாறே நின்று இற்றன. பிற தளையானும் வந்தவாறு கண்டுகொள்க.

'கோண்மாக் கொட்குமென் றன்சுவல் ஒன்னார்க்
கிருவிசும்பு கொடுக்கும் நெடுவேல் வானவன்
ஆடமை மென்றோள் நசைஇய ‡ நாடொறும்
வடிநுனை எஃகம் வலவயின் ஏந்திக்
கைபோற் காந்தட் கடிமலர் அவிழும்
மைதோய் சிலம்பன் நள்ளிருள் வருவிடம்.'

இது மகரம் ஈறாய் வந்த நிலைமண்டிலம்.

உதயணன் கதையும் கலியாண கதையும் 'என்' என்னும் அசைச் சொல்லால் இற்ற நிலைமண்டிலம்.

'ஆற்றுச் செலவும் அளைமறி நாகமும்
தாப்பிசைத் தளையும் தனிநிலைப் § பெய்தியோ
டேற்கும் பொருள்கோள் இவையாம் எனலான்.'

இது னகரம் ஈறாய் வந்த நூற்பா நிலைமண்டிலம்.

பிறவும் வந்துழிக் காண்க. என்னை?

'ஒத்த அடித்தாய் உலையா மண்டிலம்
என்னென் கிளவியை ஈறு கப்பெறும்;
அன்ன பிறவுமந் நிலைமண் டிலமே.'

என்றார் அவிநயனார்.

'ஒத்த அடியின நிலைமண் டிலமே.'
'என்னெனும் அசைச்சொலும் பிறவும் ஒன்றித்
துன்னப்' ‖ பெறூஉம் நிலைமண் டிலமே;
என்னென் றிறுதல் வரைதல் ¶ இன்றே.'
'அல்லா ஒற்றினும் அதனினும் ** இறுதி
நில்லா அல்ல; நிற்பன வரையார்.'

என்றார் மயேச்சுரர்.

[நேரிசை வெண்பா]

'நான்கு முதலாக நாலைந் தெழுத்தளவும்
ஆன்ற அகவல் அடிக்கெழுத்தாம்;—மூன்றுடைய
பத்தாதி யாகப் பதிற்றிரட்டி ஈறாக
வைத்தார் முறற்கைக் கெழுத்து' 1

---

1 யாவி. 86 உரைமேற்.

பி–ம். * முத்துக் கன்ன † தகானெனல். ‡ நசைஇ. § தூக்குநிலைப். ‖ துனனவு. ¶ வரைநிலை. ** அதனினும்.

'எல்லா நிலமும் அடிப்படுத் திரிரண்டு
நல்லா கமப்பொருளை நண்ணுதலால்—பல்லோர்க்கும்
சீரா சிரியத்தைத் தேர்வேந்தன் என்றுரைத்தார்
**பேரா சிரியர் பெயர்.'**

இவற்றை விரித்து உரைத்துக்கொள்க.

75] [உஉ

## ஆசிரியத் தாழிசை

மூன்றடி ஒத்த முடிபின ஆய்விடின்
ஆன்ற அகவற் றாழிசை ஆகும்.

**'இஃது** என் நுதலிற்றோ?' எனின், ஆசிரியப்பா உணர்த்தி இனம் உணர்த்துவான் எடுத்துக்கொண்டார்; அவற்றுள் இச் சூத்திரம் **தாழிசை** ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

**இதன் பொருள்:** மூன்று அடி ஒத்த முடிபின ஆய்விடின்—அடி மூன்றாய்த் தம்முள் அளவொத்து இறுவனவாயின், ஆன்ற அகவல் தாழிசை ஆகும்—(அவை) அமைந்த **ஆசிரியத் தாழிசையும் ஆசிரிய ஒத்தாழிசையும்** ஆம் (என்றவாறு).

சீர் வரையறை இன்மையின், எனைத்துச் சீரானும் அடியாய் வரப்பெறும்.

**'ஆன்ற'** என்றை மிகுத்துச் சொல்லிய அதனால், ஒரு பொருண்மேல் மூன்று அடுக்கி வருவது சிறப்புடைத்து. என்னை?

'ஒத்த ஒருபொருள் மூவடி முடியினஃ
தொத்தா ழிசையாம் உடன்மூன் றடுக்கின்.'

என்றார் **மயேச்சுரர்.**

அவ்வாறே ஒரு பொருண்மேல் மூன்று அடுக்கி வருவன ஆசிரிய ஒத்தாழிசை என்றும், ஒரு பொருண்மேல் ஒன்றாயும் இரண்டாயும் மூன்று அடுக்கிப் பொருள் வேறாயும், மூன்றின் மிக்கவும் **ஆசிரியத் தாழிசை** என்றும் விகற்பித்துக் கூறுவர் ஒருசார் ஆசிரியர்.

வரலாறு:

### [ஆசிரிய ஒத்தாழிசை.]

'சாருண் ஆடைச் சாய்கோல் இடையன்
நேர்கொள் முல்லை நெற்றி வேய
வாரார் வாரார் எற்றே எல்லே!*

'அத்துண் ஆடை ஆய்கோல் இடையன்
நற்கார் முல்லை நெற்றி வேய
வாரார் வாரார் எற்றே எல்லே!

'துவருண் ஆடைச் சாய்கோல் இடையன்
கவர்கான்† முல்லை நெற்றி வேய
வாரார் வாரார் எற்றே எல்லே!'

**இவை** ஒரு பொருண்மேல் மூன்று அடுக்கி, நாற்சீர் **அடியான் சிறப்புடை** ஆசிரிய நேர்த்தளையான் வந்த **ஆசிரிய ஒத்தாழிசை.**

---

பி—ம்: * வாரான் வாரான் † கவர்கார்

'**கன்று குணிலாக் கனியுகுத்த மாயவன்**
இன்றுநம் மானுள் வருமேல் அவன்வாயில்
கொன்றையந் தீங்குழல் கேளாமோ தோழீ!
'பாம்பு கயிருக் கடல்கடைந்த மாயவன்
ஈங்குநம் மானுள் வருமேல் அவன்வாயில்
ஆம்பலந் தீங்குழல் கேளாமோ தோழீ! 2
'கொல்லையஞ் சாரற் குருந்தொசித்த மாயவன்
எல்லைநம் மானுள் வருமேல் அவன்வாயில்
முல்லையந் தீங்குழல் கேளாமோ தோழீ!' 1 3

இவை இயற்சீர்ச் சிறப்புடை வெண்டளையான் வந்த **ஆசிரிய ஒத்தாழிசை.**

[**ஆசிரியத் தாழிசை.**]

'நீடற்க வினையென்று நெஞ்சின் உள்ளி
நிறைமலராஞ் சாந்தமொடு புகையும் நீவி
வீடற்குந்* தன்மையினுன் விரைந்து சென்று
விண்ணேடு மண்ணினிடை நண்ணும் பெற்றி
பாடற்கும் பணிதற்கும் தக்க தொல்சீர்ப்
பகவன்றன் அடியிணையைப் பயிறும் † நாமே.'

இஃது ஒரு பொருண்மேல் ஒன்ருய், எண்சீர்க் கழிநெடிலடியாற் சிறப்புடைக் கலித்தளையான் வந்த **ஆசிரியத் தாழிசை.**

'வானுற நிமிர்ந்தனை வையகம் அளந்தனை
பான்மதி விடுத்தனை. பல்லுயிர் ஓம்பினை
நீனிற வண்ணநின் நிரைகழல் தொழுதனம்.'

இது சிறப்புடை ஆசிரியத் தளையான் வந்த **ஆசிரியத் தாழிசை.**

இனி, ஒரு பொருண்மேல் இரண்டாகியும், மூன்ருகிப் பொருள் வேருகியும், அதின் மிக்கனவும் வந்தவழிக் காண்க.

'**ஆசிரியத் தாழிசை**' எனினும், '**ஆசிரிய ஒத்தாழிசை**' எனினும் இழுக்காது. என்னை?

'அடிமுன் ருெத்திறின் ஒத்தா ழிசையே.'

என்ருர் **சிறுகாக்கைபாடினியார்.**

76] [உடு

**ஆசிரியத் துறை.**

கடையதன் அயலடி கடைதடி நடையவும்
நடுவடி மடக்காய் நான்கடி யாகி
இடையிடை * குறைநவும் அகவற் றுறையே.

'இஃது என் நுதலிற்ருே?' எனின், **ஆசிரியத் துறை** ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

**இதன் பொழிப்பு:** ஈற்றயல் அடி குறைந்து நான்கடியாய் வருவனவும், ஈற்றயல் அடி குறைந்து இடையந்தத்து அடி மடக்காய் நான்கடியாய் வருவனவும், இடையடி குறைந்து நான்கடியாய் வருவனவும், இடையிடை குறைந்து இடை மடக்காய் நான்கடியாய் வருவனவும் **ஆசிரியத் துறையாம்** (என்றவாறு).

---

1. சிலப். 17 : 1—3.
பி—ம் : * வீடறத்த † பற்று

நடுவடி மடக்காய்' என்பதனை ஒருகால் இருதலையும் கூட்டி, 'நான்கடி' என்பதனை எல்லாவற்றோடும் கூட்டி, மத்திம தீபமாக உரைக்க.

சீர் வரையறை இன்மையின், எனைத்துச் சீரானும் அடியாய் வரப்பெறும்.

'**நடையவும்**' என்ற மிகையான், முதல் அயலடி குறைந்தும், நடு ஈரடி குறைந்தும் மிக்கும் வருவனவும் ஆசிரியத் துறையாம். அல்லது, ஓரடி குறைந்து வருவன 'ஆசிரிய நேர்த்துறை'யும் ஈரடி குறைந்து வருவன 'ஆசிரிய இணைக்குறட்டுறை'யும் எனப்படும்.

வரலாறு :

**[ஆசிரிய நேர்த்துறை.]**

'கரைபொரு கான்யாற்றங் கல்லதர் எம்முள்ளி வருதி ராயின்
அரையிருள் யாமத் தடுபுலி யேறஞ்சி† அகன்றுபோக
நரையுரு மேறுநுங்கை வேலஞ்சும்‡ நும்மை
வரையர மங்கையர் வவ்வுதல் அஞ்சுதும் வாரலையோ !' 1

எனவும்,

'வானகச் சோலை வரையதர் எம்முள்ளி வருதியாயின்
யானைகண் டார்க்கும் அரியேறு § நும்மஞ்சி அகன்றுபோக
யானையோ நுங்கைமேல் அஞ்சுக நும்மை
வானர மகளிர் வவ்வுதல் அஞ்சுதும் வாரலையோ !'

எனவும் இவை ஈற்றயல் அடி குறைந்து, இயற்சீர்ச் சிறப்புடை வெண்டளையானும், சிறப்பில் வெண்டளையானும் வந்த ஆசிரிய நேர்த்துறை.

'வண்டுளர் பூந்தார் வளங்கெழு செம்பூட்சேய் வடிவே போலத்
தண்டளிர்ப் பிண்டித் தழையேந்தி மாவினவித் தணந்தோன் யாரே ?
தண்டளிர்ப் பிண்டித் தழையேந்தி வந்துநம்
பண்டைப் பதிவினவிப் பாங்கு படமொழிந்து படர்ந்தோ னன்றே ?'

எனவும்,

'கண்ணியோர் கண்ணி¶ வலத்தசைத்த காரி
கமழ்தண்டார் காமம் புனைபவோ காரி ?
பண்ணியோர் பாடல் எழப்பண்ணி காரி
பணைமுழவின் || சீர்தயங்கப் பாடானோ காரி ?
சீர்தயங்கத் தார்தயங்கச் செய்யாத செய்திவன் **
நீர்தயங்கு கண்ணினளாய் நிற்கவோ காரி ?
நினக்கினியார்க் கெல்லாம் இனையையோ காரி?

எனவும் இவை ஈற்றயலடி குறைந்து, இடை மடக்காய், நான்கடியாய், வெண்டளையான் வந்த ஆசிரிய நேர்த்துறை.

'கொன்றூர்ந் தமைந்த . . . . . கற்பன்றே.' 2

இது முதலடியும் மூன்றும் அடியும் பதினான்கு சீராய், ஏனையடி இரண்டும் பதினாறு சீராய், இடையிடை குறைந்து வந்த ஆசிரிய இணைக்குறட்டுறை.

'இரங்கு குயின்முழவா இன்னிசையாழ் தேனா
அரங்கம் அணிபொழிலா ஆடும் போலும் இளவேனில் !
அரங்கம் அணிபொழிலா ஆடு மாயின்
மரங்கொல் மணந்தகன்றார் நெஞ்சமென் செய்த திளவேனில்.'

எனவும்,

---

1. தொல். பொ. 376 உரைமேற். 2. யா. வி. 16, 25 உரைமேற்.

பி—ம்: * இடையடி † அடுபுலியோ நும்மஞ்சி ‡ நரையுருமே றுங்கைவேலஞ்சுக § அரிமாவோ ¶ கண்ணே || பணைமுழவம் ** செய்தவள்

'போதுறு முக்குடைப் பொன்னெயில் ஒருவன்
தாதுறு தாமரை அடியிணை பணிந்தார்
தாதுறு தாமரை அடியிணை பணிந்தார்
தீதுறு தீவினை இலரே.'

எனவும் இவை இடையிடை குறைந்து இடை மடக்காய், நான்கடியாய் வந்த ஆசிரிய இணைக்குறட்டுறை.

[ஆசிரிய நேர்த்துறை.]

'வரிகொள் அரவும் மதியும் சுழலக்
கரிகால் ஏந்தி ஆடுமே ;
கரிகால் ஏந்தி ஆடு மிறைவன்,
புரிபுன் சடைமேற் புனலும் பிறழுவே.' *

இது முதல் அயலடி ஒரு சீர் குறைந்து, ஏனை மூன்றும் நாற்சீர் அடியாய், இடை மடக்காய் வந்த ஆசிரிய நேர்த்துறை.

[ஆசிரிய இணைக்குறட்டுறை.]

பாடகஞ்சேர் காலொருபாற் பைம்பொற் கனைகழற்கால்
ஒருபால் தோன்றும் ;
நீடு குழலொருபால் நீண்ட சடையொருபால்
வீடிய மானின் அதளொருபால் மேகலைசேர்ந்
தாடும் துகிலொருபால் அவ்வுருவம் ஆண்பெண்ணென்
றறிவார் யாரோ.!'

இது நடு இரு சீர் குறைந்து, ஏனையடி இரண்டும் ஆறு சீரான் அந்த ஆசிரிய இணைக்குறட்டுறை.

[ஆசிரியத்துறை.]

'கோடல் விண்டு கோபம் ஊர்ந்த கொல்லைவாய்
மாடு நின்ற கொன்றை ஏறி மௌவல் பூத்த பாங்கெலாம்
ஆடல் மஞ்ஞை அன்ன சாயல் அஞ்சொல் வஞ்சி மாதராய்!
வாடல்; மைந்தர் தேரும் வந்து தோன்றுமே.'

இது நடு ஈரடியும் மிக்கு வந்த ஆசிரியத்துறை.

பிறவும் வந்தவழிக் காண்க.

மடக்கு மூவகை : அடி மடக்கும், சீர் மடக்கும், அசை மடக்கும் என. என்னை ?

'இரண்டாம் அடியை இனிதின் மடக்கலும்,
இரண்டாம் அடியின் இறுதிச்சீர் மடக்கலும்,
இரண்டாம் அடியின் ஈற்றசை மடக்கலும்
இவ்வா றென்ப மடக்குதல் தானே.'

என்றாராகலின்.

வரலாறு :

'வண்டுளர் பூந்தார்' [1] எனவும், 'இரங்கு குயின்முழவா' [2] எனவும் இவை அடி மடக்கு.

'கண்ணியோர் கண்ணி' என்பது சீர் மடக்கு.

---

1. யா. வி. பக் 218. 2. யா.வி.பக்..
பி—ம் : * பிறழ்வே

[ஆசிரிய நேர்த்துறை.]

'முத்தரும்பிப் பைம்பொன் மலர்ந்து முருகுயிர்த்துத்
தொத்தலரும் கானற் றுறையேம் *
துறைவழி வந்தெனது தொன்னலனும் நாணு
நிறைவளையும் வெளவி நினையானச் † சேர்ப்பன்.' 1

இஃது அசை இடை மடக்கு.

பிறவும் வந்தவழிக் கண்டுகொள்க. என்னை?

'அடித்தொகை நான்குபெற் றந்தத் தொடைமேற்
கிடப்பது நாற்சீர்க் கிழமைய தாகி
எடுத்துரை பெற்ற இருநெடில் ஈற்றின்
அடிப்பெறின் ஆசிரி யத்துறை ஆகும்.'

'அளவடி ஐஞ்சீர் நெடிலடி தம்முள்
உறழத் தோன்றி ஒத்த தொடையாய்
விளைவதும் அப்பெயர் வேண்டப் படுமே.'

என்றார் காக்கைபாடினியார்.

'எண்சீர் அடியீற் றயலடி குறைநவும்
ஐஞ்சீர் அடியினும் பிறவினும் இடையொன்ற
அந்தத் தொடையாய் அடிநான் காகி
உறழக் குறைநவும் துறையெனப் படுமே.'

என்றார் மயேச்சுரர்.

'நாற்சீர் அடிநான் கந்தத்தொடை நடந்தவும்
ஐஞ்சீர் அடிநடந் துறழ்வடி ‡ குறைந்தவும்
அறுசீர் எழுசீர் அவ்வியல் § நடந்தவும்
எண்சீர் நாலடி யீற்றயல் ‖ குறைந்தும்
தன்சீர்ப் பாதியின் அடிமுடி வுடைத்தாய்
அந்தத் தொடையின் அவ்வடி ** நடப்பிற்
குறையா உறுப்பினது துறையெனப் படுமே.'

என்றார் அவிநயனார்.

77] [ உச

ஆசிரிய விருத்தம்.

கழிநெடில் அடிநான் கொத்திறின் விருத்தமஃ
தழியா மரபின் தகவல் ஆகும்.

'இஃது என் நுதலிற்றோ?' எனின், ஆசிரிய விருத்தம் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொழிப்பு: கழிநெடில் அடி நான்காய்த் தம்முள் அளவொத்து முடியின், அஃது ஆசிரிய விருத்தமாம் (என்றவாறு).

'அழியா மரபினது அகவல்' என்று ஆசிரியப்பாவினைச் சிறப்பித்துச் சொல்ல வேண்டியது என்னை?

ஒருசார் ஆசிரியர், 'அகப்பா அகவல், புறப்பா அகவல், நூற்பா அகவல், சித்திர அகவல், உறுப்பின் அகவல், ஏந்திசை அகவல் என்று ஆறு விகற்பிற்று அகவல் ஓசை,' என்பர் என்பது அறிவித்தற்கு வேண்டப்பட்டது. என்னை?

---

1. இஃது ஈரடி ஓரெதுகைச் செய்யுள்.

பி-ம் * துறையெம் † நினையானஞ் ‡ துறழடி திவலிய ‖ ஈற்றடி ** தொடையிவை அடியா.

'அகவல் ஆறும் வெண்பா மூன்றும்
பண்புறத் தெரியும் பகுதிய; மற்றது
நன்றறி புலவர் நாட்டினர் என்ப.'

எனவும்,

'ஆறு வகையின் அகவலொடு கொள்ளாது
வேறுபட வரினது வெண்பா ஆகும்.'

எனவும்,

'அவைதாம்,
அகப்பா அகவல், புறப்பா அகவல்,
நூற்பா அகவல், சித்திர அகவல்
உறுப்பின் அகவல், ஏந்திசை அகவலென்
றவ்வா றென்ப அறிந்திசி னோரே.'

எனவும் சொன்னாராகலின்.

அவற்றுள் **அகப்பா அகவலாவன**, அகப்பொருளை தழுவி, ஐயீருறுப்பின வாய், வஞ்சி விரவாது வந்து முடியும் ஆசிரியப்பா எல்லாம் எனக் கொள்க. என்னை ?

'அகப்பா அகவல்,
ஐயீ ருறுப்பின் ஆசிரி யம்மே.'

'அவைதாம்,
முன்னும் பின்னும் தூங்கல் இன்றிச்
சென்னெறி மருங்கிற் சென்றிசைக் கும்மே.'

என்றாராகலின்.

**புறப்பா அகவலாவன**, பாடாண்டுறை மேற்பாடும் ஆசிரியம் எனக் கொள்க. என்னை ?

'நூற்பா அகவல் நுணங்க நாடின்
சூத்திரம் குறித்த * யாப்பின வாகி
இசைவரம் பின்றி விழுமிதின் நடக்கும்.' †

என்றாராகலின்.

**சித்திர அகவல் என்பது**, சீர்தொறும் அகவி வருவது. என்னை ?

'சித்திர அகவல்,
சீர்தொறும் அகவும் சித்திரம் உடைத்தே.'

என்றாராகலின்.

**உறுப்பின் அகவலாவது**, ஒரு பொருண்மேற் பரந்திசைப்பது. என்னை ?

'உறுப்பின் அகவல் ஒருபொருள் நுதலி
இசைபரந் தியலும் இயற்கைத் தென்ப.'

என்றாராகலின்.

**ஏந்திசை அகவல் என்பது**, எழுத்திறந்து இசைப்பது. என்னை ?

---

பா—ம் * வகுத்த † விழுமியது பயக்கும்

'ஏந்திசை அகவல் எழுத்திறந் திசைக்கும்
பாங்கறிந் துணர்ந்தோர் பகருங் காலே.'

என்றாராகலின்.

அல்லதூஉம், 'அஃது' என விகற்பித்த அதனால், அடிமறியாய் வருவன வற்றை ஆசிரிய மண்டில விருத்தம் என்றும், அடிமறியாகாது நிற்பனவற்றை ஆசிரிய நிலை விருத்தம் என்றும் வழங்குவர் ஒருசார் ஆசிரியர் எனக் கொள்க.

வரலாறு :

[அறுசீர் ஆசிரிய விருத்தம்]

'விடஞ்சூழ் அரவின் இடைநுடங்க விறல்வாள் * வீசி விரையார்வேம்
கடஞ்சூழ் நாடன் காளிங்கன் † கதிர்வேல் பாடும் மாதங்கி
மடஞ்சேர் நோக்கம் மாதாந்தாம் ‡ வடிக்கண் நீல மலர்தாந்தாம்
தடந்தோள் இரண்டும் வேய்தாந்தாம் என்னும் தன்னகத்தி
[தண்ணுமையே.'

இஃது அறுசீர்ச் சிறப்புடைக் கழிநெடிலடியான் வந்த ஆசிரிய விருத்தம்.

[எழுசீர் ஆசிரிய விருத்தம்]

'படையொன்றும் இல்லை அணியில்லை சுற்ற
மதுவில்லை பற்றும் இனியொன்
றடைகின்ற தில்லை அமிழ்துண்ப ¶ தில்லை
அறிவொன்றும் ‖ எண்ணி அறியார்
புடைநின்று நான்ற மணிமாலை போத
நிலவீசு மாகம் உறநீள்
குடையொன்ற ** தொன்றும் அதன்மேல தொன்றும்
உடையார்க்கி தென்ன குணனே.'

இஃது எழுசீர்ச் சிறப்புடைக் கழிநெடில் அடியான் வந்த ஆசிரிய நிலை விருத்தம்.

[எண்சீர் ஆசிரிய விருத்தம்]

'அருகிவரும் †† கிளிமொழியால் அமிழ்தம் தோற்றி
அகன்பொழில்வாய் உளைப்பரவி அடைந்த மாந்தர்
கருதியதே கொடுத்துயர்ந்த காட்சி நோக்கிக்
கற்பகத்தோ டொப்புரைப்பர் சிலவர் ; அல்லார் ‡‡
வருதளிரின் நறுமேனி மயிலஞ் சாயல்
வாணுதலாட் கரிதில்லை யதற்க னுண்டென்
றொருதலையாய் ¶¶ ஒவ்வாமை உரைப்பர் யானே
ஒளியியக்கி இருதிறமும் ‖‖ உடன்பட் டேனே.'

இது சிறப்புடைக் கலித்தளை தட்டு, எண்சீர்ச் சிறப்புடைக் கழிநெடில் அடியான் வந்த ஆசிரிய நிலை விருத்தம்.

ஒன்பதின் சீராலும் பதின்சீராலும் ஆகிய இடையாகு கழிநெடில் அடியாலும், பதினொருசீர் முதலாகிய கடையாகு கழிநெடில் அடியாலும் வந்த ஆசிரிய நிலை விருத்தம் அடியோத்தினுட் கண்டுகொள்க. 1

---

1 யா.வி. உரைமேற்

பி-ம் :— * மினல்வாள் † காளிம்பன் ‡ வடஞ்சேர் கொங்கை மலைதாந்தாம் தந்ததை ¶ அமிழ்துண்ட ‖ அறிவென்று ** குடையென்ற †† அரிதிவரு ‡‡ சிலவாய் வல்லார் ¶¶ ஒருதலையாய் ‖‖ ஒளியியக்க இருதிறமும

**இனி, ஆசிரிய மண்டில விருத்தம் வருமாறு :**

[அறுசீர் அடிமறி மண்டில ஆசிரிய விருத்தம்]

'செங்கயலும் கருவிளையும் செருவேலும்* பொருகணையும்
செயிர்க்கும் நாட்டம்;
பங்கயமும் இலவலரும்† பனிமுருக்கும் பவழமுமே
பழிக்கும் செவ்வாய்;‡
பொங்கரவின் இரும்படமும் புனைதேரும் பொலிவழிக்கும்
புடைவீங் கல்குல்;
கொங்கிவரும் கருங்கூந்தற் கொடியிடையாள் வனமுலையும்
கூற்றம் கூற்றம்.'

இஃது அறுசீர்க் கழிநெடில் அடியான் அடிமறியாய்க் கூறப்படுதலால், **அடிமறி மண்டில ஆசிரிய விருத்தம்.**

[எண்சீர் ஆசிரிய மண்டில விருத்தம்]

'வெறிவிரவு புன்சடைமேல் வெள்ளம் பரக்கும்;
விறல்விசயன் ஆகத்து§ வெள்ளம் பரக்கும்;
கரைவிரவு நஞ்சுண்டு கண்டங் கறுக்கும்;
கழலடைந்தார் தீவினையைக் கண்டங் கறுக்கும்;
பொறிவிரவு பூண்முலையாள் போகத்த ருகும்;
பொதுநீக்கித் தன்னடைந்தார்‖ போகத்த ருகும்;
நெறிவிரவு காஞ்சி நெறிக்காரைக் காட்டான்;
நிழலடைந்தார் தம்மை நெறிக்காரைக் காட்டான்.'

எனவும்,

'நிலங்கா ரணமாக நீர்க்கங்கை ஏற்றான்;
நீண்டதா ளாலங்கோர் நீர்க்கங்கை ஏற்றான்;
சலங்கா ரணமாகச் சங்குவாய் வைத்தான்;
தாயலாள் வியநஞ் சங்குவாய் வைத்தான்;
துலங்காச்சீர்த் தானவரைத் துன்னத்தா னட்டான்;
துன்னுவார்க்** கின்னமிர்தம் தின்னத்தா னட்டான்;
இலங்கா புரத்தார்தம் கோமானை எய்தான்;
எத்தாதார்†† நெஞ்சத்துள் எஞ்ஞான்றும் எய்தான்.'

இவை எல்லா அடியும் முதல் நடு இறுதியாகச் சொன்னாலும் பொருள் கொண்டு நிற்குமாகலின், **ஆசிரிய மண்டில விருத்தம்.**

பிறவும் வந்தவழிக் கண்டுகொள்க.

[வெண்டளைக் கலித்துறை]

'தருக்கியல் தாழிசை மூன்றடி ஒப்பன நான்கடியாய்
எருத்தடி நைந்தும் இடைமடக் காயும் இடையிடையே
சுருக்கடி யாயும் துறையாம்; குறைவில்தொல் சீரகவல்
விருத்தம் கழிநெடில் நான்கொத் திறுவது மெல்லியலே!' 1

இக்காரிகையை விரித்து உரைத்துக்கொள்க.

---

1. யா. கா. 30.

பி—ம்* செவ்வேலும் † இலைமலரும் ‡ பாதம் § ஆகத்தும் ‖ தனையடைந்தார்
** துன்னலார்க் †† எய்தாதார்

'அறுசீர் முதலா நெடியவை எல்லாம்
நெறிவயின் திரியா* நிலத்தவை நான்காய்
விளகுவ தப்பா இனத்துள விருத்தம்.'

என்றார் **காக்கைபாடினியார்.**

'அறுசீர் எழுசீர் அடிமிக வரூஉம்
முறைமைய நாலடி விருத்தம் ஆகும்.'

என்றார் **சிறுகாக்கைப்பாடினியார்.**

'அறுசீர் எழுசீர் அடிமிக நின்றவும்
குறைவில் நான்கடி விருத்தம் ஆகும்.'

என்றார் **அவிநயனார்.**

'ஆறு முதலா எண்சீர் காறும்
கூறும் நான்கடி ஆசிரிய விருத்தம்.'

என்றார் பிறை நெடுமுடிக் கறைமிடற்றோன் பெயர் மகிழ்ந்த **பேராசிரியர்.**

ஆசிரியத்து இனமாகிய **தாழிசை, துறை, விருத்தம்** என்னும் மூன்றும்; ஆசிரிய ஒத்தாழிசை, ஆசிரியத் தாழிசை, ஆசிரிய நேர்த்துறை, ஆசிரிய இணைக்குறட்டுறை, ஆசிரிய நிலை விருத்தம், ஆசிரிய மண்டில விருத்தம் என்று கூறப்படுப, ஆறும். அவை சிறப்புடை ஏழு தளையாலும் சிறப்பில் ஏழு தளையாலும் கூறுபடுப்ப, எண்பத்துநான்காம். பிறவாற்றாலும் விகற்பிக்கப் பலவாம்.

அவற்றுள் ஓரடி குறைந்து வருவனவற்றை நேரிசை ஆசிரியப்பாவின் இனம் என்றும், ஈரடி குறைந்து வருவனவற்றை இணைக்குறள் ஆசிரியப்பாவின் இனமென்றும், அடிமறியாய் வருவனவற்றை மண்டில ஆசிரியப்பாவின் இனம் என்றும், அடிமறி இன்றியே நின்றவாறே நின்று பொருள் பயப்பன நிலை மண்டில் ஆசிரியப்பாவின் இனம் என்றும், இவ்வாறே ஒருபுடை ஒப்புமை நோக்கிப் பாச்சார்த்தி வழங்கப்படும் எனக் கொள்க. என்னை?

[நேரிசை வெண்பா]

'அகவற் கினமாய ஆறினையும் ஈரேழ்
பகுதித் தளையவற்றாற் பார்ப்பத்—தொகுதிக்கண்
எண்பத்து நான்காம்; இனியவற்றின் மிக்கனவும்
பண்புற்றுப் பார்த்துக் கொளல்.'

ஆசிரியப்பாவும் அதன் இனமும் முடிந்தன.

---

ய-மை * திரிமின்

78] [உரு

கலிப்பா

துள்ளல் இசையன கலிப்பா ; மற்றவை
வெள்ளையும் அகவலு மாய்விளைந் திறுமே.

இஃது என் நுதலிற்றோ?' எனின், நிறுத்த முறையானே பொது வகையாற் கலிப்பா ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொழிப்பு: துள்ளல் ஓசைக்குத் தமக்கு ஓசையாக உடைய எல்லாம் கலிப்பா ; அவை வெண்பாவும் ஆசிரியப்பாவுமாய் இறும் (என்ற வாறு).

'பிறிதின் நடப்பினும் வஞ்சியும் கலியும்
இறுதி மருங்கின் ஆசிரி யம்மே.'
'கலியே வெண்பா வாயினும் வரையார்.'

என்றார் ஆகலின்.

'துள்ளல் இசையன கலியே ;
வெள்ளையும் அகவலு மாய்விளைந் திறும்.'

என்றாலும், சார்ச்சியால், 'அவை' என்பது பெறலாம் ; 'மற்றவை' என்று மிகுத்துச் சொல்ல வேண்டியது என்னை?

'ஏந்திசைத் துள்ளலும், அகவற்றுள்ளலும், பிரிந்திசைத் துள்ளலும் என மூன்று வகைப்படும் துள்ளல் ஓசை,' என்பது அறிவித்தற்கு வேண்டப் பட்டது.

'வெள்ளையும் அகவலுமாய்' என்பதனை, 'வெண்பாவும் ஆசிரியப்பாவுமாய் விராயும், ஆசிரியப்பாவும் வெண்பாவுமாய் விராயும்' என்று கொள்ளாமோ?' எனின், கொள்ளாம். என்னை? பிறநூலுள் இவ்வாறு சொல்லிற்றிலர் ஆகலானும், 'பிறநூல் முடிந்தது தானுடம் படுதல்,' என்பவாகலானும், 'பல் பொருட் கேற்பின் நல்லது கோடல்'1 என்பது தந்திர உத்தி ஆகலானும், 'வெண்பாவாயும் இறும் ; ஆசிரியமாயும் இறும்,' என்று வேறு வேறே கூட்டித் தீபகப் பொருளாகக் கொள்ளப்படும்.

'வெள்ளையும் அகவலுமாய் இறும்,' என்னாது, 'விளைந்து இறும்,' என்று மிகுத்துச் சொல்ல வேண்டியது என்னை?

ஒருசார்க் கொச்சகக் கலிப்பாக்கள் கலியடியானே இறுவனவும் உள என்பதூஉம், ஆசிரிய நேர்த்தளையாற் கலிப்பா மிக்கு வாரா என்பதூஉம் அறிவித்தற்கு வேண்டப்பட்டது ; 'விதப்புக் கிளவி வேண்டியது விளைக்கும்,' என்பவாகலின்.

அம்மூன்று ஓசையானும் செய்யுள் வருமாறு :

[தரவு கொச்சகம்.]

'முருகவிழ்தா மரைமலர்மேல் முடியிமையோர் புடைவரவே
வருசினனார் அருமறைநூல் வழிபிழையா மனமுடையார்
இருவினைபோய் விழமுறியா எதிரியகா தியையெறியா
நிருமலராய் அருவினராய் நிலவுவர்சோ தியினிடையே.'

இன்னவை பிறவும் ஏந்திசைத் துள்ளலோசை.

---

1. தொல. பொ. 665.

'செல்வப்போர்க் கதக்கண்ணன் செயிர்த்தெறிந்த சினவாழி
முல்லைத்தார் மறமன்னர் முடித்தலையை முருக்கிப்போய்
எல்லைநீர் வியன்கொண்மூ இடைநுழையும் மதியம்போல்
மல்லலோங் கெழில்யானை மருமம்பாய்ந் தொளித்ததே.' 1

இன்னவை பிறவும் அகவற்றுள்ளல் ஓசை.

'மணிகிளர் நெடுமுடி வானவனும் தம்முனும்போன்
றணிகிளர் நெடுங்கடலும் கானலும் தோன்றுமால்
நுரைநிவந் தவையன்ன நொப்பறைய சிறையன்னம்
இரைநயத் திறைகூரும் ஏமஞ்சார் துறைவ கேள்.' 2

இன்னவை பிறவும் பிரிந்திசைத் துள்ளல் ஓசை.

[கலித்தாழிசை.]

'முற்றொட்டு மறவினையை முறைமையான் முயலாதார்
சொற்றொட்ட வாய்மையாற் சோர்வுமங் குளதாமோ?
'தொன்மைக்கண் வினைசெய்யார் துப்புரவின் இரங்குவார் *
பன்மைக்கண் உள்ளந்தேர் பயமின்றிக் கழிவாரே? 2
'செல்வதூஉம் வருவதூஉம் சிறந்தாங்குத் தமக்கறிந்து †
நல்லறமே புரிவதூஉம் நல்லார்கள் கடனன்றே?' 3

இன்னவை பிறவும் பிரிந்திசைத் துள்ளல் ஓசையால் வந்தன எனக் கொள்க.

சுரிதகத்தால் இறுமாறு, இனிக் காட்டும் கலிப்பாவினுள் கண்டுகொள்க.

'வகுத்த உறுப்பின் வழுவுதல் இன்றி
எடுத்துயர் துள்ளல் இசையன வாகல்
கலிச்சொற் பொருளெனக் கண்டிசி னோரே.'

என்றார் காக்கைபாடினியார்.

'ஆய்ந்த உறுப்பின் அகவுதல் இன்றியே
ஏந்திய துள்ளல் இசையது கலியே.'

என்றார் அவிநயனார்.

'சீரதிற் கிளர்ந்த தன்றளை தழுவி
நேரீற் றியற்சீர் சேரா தாகி
துள்ளல் ஓசையிற் றள்ளா தாகி
ஓதப் பட்ட உறுப்புவேறு பலவாய்
ஏதம் இல்லன கலியெனப் படுமே.'

என்றார் நீர் மலிந்த வார் சடையோன் பேர் மகிழ்ந்த போசிரியர்.

79] [உசு

## கலிப்பாவின் வகை

ஒத்தா ழிசைக்கலி வெண்கலிப் பாவே
கொச்சகக் கலியொடு கலிமுன் றாகும்.

'இஃது என் நுதலிற்றோ?' எனின், துள்ளல் ஓசைத்தாய், நேரீற்று இயற்சீரும் நிரை நடுவாகிய வஞ்சியுரிச்சீரும் வாராது, நிரை முதலாகிய வெண்பா உரிச்சீர் மிக்கு, நேரடித்தாய், தன்றளையும் அயற்றளையும் தட்டு வரும் என்றும்;

1. சூளா. (தக்கயாகப். 5 உரை விசேடக் குறிப்புப் பார்க்க) 2. யா. வி. 86 உரைமேற்.
பி—ம்: * துப்புரவிற் கிறங்குவார் † தமக்கெறிந்து

புறநிலை வாழ்த்தும் வாயுறை வாழ்த்தும் அவையடக்கியலும் செவியறிவுறூஉம் என்னும் பொருண்மேல் வாராது, பதின்மூன்றெழுத்து முதலாக இருபது எழுத்தின்காறும் உயர்ந்த எட்டு நிலமும் பெற்று அளவடி மிகுத்து வரும் கலிப்பாவினது பெயர் வேறுபாடும் அவற்றது எண்ணும் உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொழிப்பு: ஒத்தாழிசைக் கலியும், கலி வெண்பாவும், கொச்சகக் கலியும் என மூன்று வகைப்படும் கலிப்பா (என்றவாறு).

அளவிற்பட்டு ஆழமுடைத்தாகிய பொருளைச் சொல்லுதலானும், ஓதப்பட்ட கலிப்பாவினுளும், பொது இலக்கணத்தோடு ஒத்து ஆழமுடைத்தாய் இசைத்தலானும், ஒத்துத் தாழ்ந்த புகழ்ந்த ஆகலானும், ஒத்த பொருள்மேல் மூன்றாய்த் தாழ்ந்திசைக்கும் ஒத்தாழிசையைத் தனக்குச் சிறப்புறுப்பாக உடைத்து ஆகலானும், ஒத்தாழிசைக்கலி என்பதூஉம் காரணக்குறி.

கலியாய் வந்து ஈற்றடி முச்சீராய் வெண்பாவே போன்று இறுதலானும், வெண்பாவினிற் சிறிதே வேறுபட்டுக் கலித்த ஓசைத்து ஆகலானும், கலி வெண்பா என்பதூஉம் வெண்கலிப்பா என்பதூஉம் காரணக்குறி.

கொச்சகம் போல மிக்கும் குறைந்தும் பிறழ்ந்தும் உறழ்ந்தும் கிடக்கும் உறுப்பிற்று ஆகலானும், கலி ஓசைக்குச் சிறப்பில்லாத நேரீற்று இயற்சீரை உட்கொண்டு நிற்றலானும், கொச்சகக் கலிப்பா என்பதூஉம் காரணக்குறி. சிறப்பில்லாததனை ஒருசாரார் 'கொச்சை' என்றும் 'கொச்சகம்' என்றும் வழங்குவர் எனக் கொள்க.

ஒத்தாழிசைக்கலி, சிறப்புடைத்து ஆகலின், முன்னர் வைக்கப்பட்டது; வெண்கலி, அளவிற்படாத அமைதித்தாய், ஈற்றடி முச்சீராகலின், இடைக்கண் வைக்கப்பட்டது; கொச்சகக் கலி, சிறப்பின்மையின், இறுதிக்கண் வைக்கப் பட்டது எனக் கொள்க.

'ஒத்தா ழிசைக்கலி கலிவெண் பாட்டே
கொச்சகக் கலியொடு கலிமூன் றாகும்.'

என்றார் நற்றத்தனார்.

'வெண்கலி ஒத்தா ழிசைக்கலி கொச்சகம்
என்றொரு மூன்றே கலியென மொழிப.'

என்றார் காக்கைபாடினியார்.

'கொச்சகம் வெண்கலி ஒத்தா ழிசையென
முத்திற மாகும் கலியின் பகுதி.'

என்றார் சங்கயாப்பு உடையார்.

இவர்களும் ஒரு பயன் நோக்கி முறை பிறழ வைத்தார்கள்.

'ஒத்தா ழிசைக்கலி வெண்கலி கொச்சகமென
முத்திறத் தான்வரும் கலிப்பா என்ப.'

என்றார் அவிநயனார்.

'ஒத்தா ழிசைக்கலி வெண்கலி கொச்சகம்
முத்திறத் தடங்கும் எல்லாக் கலியும்.'

என்றார் பெண்ணொரு பாகன் பெயர் மகிழ்ந்த பேராசிரியர்.

30] ஒத்தாழிசைக் கலியின் வகை ௨௭

நேரிசை அம்போ தரங்கம்வண் ணகமென்
றோதிய மூன்றே ஒத்தா ழிசைக்கலி.

'இஃது என் நுதலிற்றோ?' எனின், பொது வகையாற் கலிப்பாவினைத் தொகுத்தும் வகுத்தும் சொன்னார், விரித்து உணர்த்துவான் எடுத்துக்கொண்டார்; அவற்றுள் இஃது ஒத்தாழிசைக் கலிப்பாவின் பெயர் வேறுபாடும் எண்ணும் உணர்த்துதல் நுதலிற்று.

**இதன் பொழிப்பு**: நேரிசை ஒத்தாழிசைக் கலிப்பாவும், அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பாவும், வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பாவும் என மூன்று வகைப்படும் ஒத்தாழிசைக் கலிப்பா (என்றவாறு).

'ஓதிய' என்று மிகுத்துச் சொல்ல வேண்டியது என்னை?

பொது வகையால் 'ஒத்தாழிசைக் கலிப்பாவினுள் நேரீற்று இயற்சீர் புகப்பெறுது,' என்று சொல்லப்பட்டது ஆயினும், 'கலி ஒலி வழுவாது வரும் தரவு தாழிசைகள் உள்ளே வரப்பெறு; வேற்றொலியால் வரும் அம்போதரங்க் உறுப்பினுள்ளும், ஒருசார் அராகத்துள்ளும் வரப்பெறும்,' என்று மயக்கம் தீர வேண்டப்பட்டது.

'தரவு, தாழிசை, தனிச்சொல், சுரிதகம்' என்று அளவிற்பட்ட நான்கு உறுப்பினாற் கூறப்படுதலானும், உடன்பட்ட ஒலியிற்று ஆகலானும், நுண் பொருண்மேற் சொல்லப்படுதலானும், மிக்க புகழிற்று ஆகலானும், '**நேரிசை ஒத்தாழிசைக் கலிப்பா**' என்பதூஉம் காரணக்குறி.

அழகிற்றாய் ஒழுகித் தரங்கம்பட்ட உறுப்பிற்று ஆகலானும், உயர்ந்து எழுந்து ஒருகாலைக்கு ஒருகால் கலி சார்ந்து சுருங்கித் தரங்கம்பட்ட நீர்த் திரை போலும் உறுப்புக்களை உடைத்தாகலானும், '**அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பா**' என்பதூஉம் காரணக்குறி.

'அம்போதரங்கம்' என்பது நீர்த்திரையைச் சொல்லுமோ? எனின், சொல்லும்; 'அம்புத் தரங்கம்' என்னும் வட மொழியை 'அம்போதரங்கம்' என்று திரித்துச் சொன்னார் ஆகலின்.

தேவரது விழுப்பமும் வேந்தரது புகழும் வண்ணித்து வருதலானும், வாரா நின்ற ஒலியிற்றிரிந்து வேறு ஒரு வண்ணத்தாற் சொல்லப்பட்ட முடுகியல் அடி உடைத்தாகலானும், '**வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பா**' என்பதூஉம் காரணக்குறி.

ஒன்றுக்கு ஒன்று ஓரோ உறுப்பு மிக்கு வருதலின், 'நேரிசை, அம்போ தரங்கம், வண்ணகம்' என்று இம்முறையே வைக்கப்பட்டன.

81] **வெண்கலி கொச்சகக்கலிகளின் வரையறை** [உஅ

வெண்கலி ஒன்றே கொச்சகம் ஐந்தெனப்
பண்பறி புலவர் பாற்படுத் தனரே.

'இஃது என் நுதலிற்றோ?' எனின், வெண்கலிப்பாவினதூஉம், கொச்சகக் கலிப்பாவினதூஉம் வரையறை உணர்த்துதல் நுதலிற்று.

**இதன் பொழிப்பு**: 'கலி வெண்பா ஒன்று,' எனவும், 'தரவு கொச்சகக் கலிப்பாவும், தரவிணைக்கொச்சகக் கலிப்பாவும், சிஃறாழிசைக் கொச்சகக் கலிப்பாவும், பஃறாழிசைக் கொச்சகக் கலிப்பாவும், மயங்கிசைக் கொச்சகக் கலிப்பாவும் என ஐந்து வகைப்படும் கொச்சகக் கலிப்பா,' எனவும் இவ்வாற்றாற் கூறுபடுத்துச் சொன்னார் புலத்துறை முற்றிய பொய்தீர் புலவர் (என்றவாறு).

'**பண்பறி புலவர்**' என்று சிறப்பித்த அதனால், நேரீற்று இயற்சீர் வரும் ஒத்தாழிசைக் கலிப்பா உளவாயினும், ஒரு புடை ஒப்புமை நோக்கிக் கொச்சகக் கலிப்பாவின்பாற்படுத்து வழங்கப்படும் எனக் கொள்க.

ஏந்திசைத்துள்ளலும், அகவற்றுள்ளலும், பிரிந்திசைத்துள்ளலும் என்னும் இம்மூன்று துள்ளல் ஓசையானும் ஒன்பது கலிப்பாவினையும் கூறுபடுப்ப, இருபத்தேழாம். ஒன்பது கலிப்பாவினையும், ஆசிரிய நேர்த்தளை இரண்டும் ஒழித்து அல்லாத சிறப்புடை ஆறுதளையாலும் கூறுபடுப்ப, நூற்றெட்டாம். ஓசையும் தளையும் கூட்டி உறழ, முந்நூற்று இருபத்து நான்கு கலிப்பாவாம். கலி வெண்பாவினுள்ளும் கொச்சகக் கலிப்பாவினுள்ளும் ஆசிரிய நேர்த்தளை இரண்டும் அருகி வரப்பெறும் என்று அவற்றோடும் கூட்டிச் சொல்லுங்கால் முந்நூற்று அறுபது கலிப்பாவாம். பிறவாற்றானும் விகற்பிக்க, எழுநூற் றிருபதாம். என்னை ?

[நேரிசை வெண்பா]

'ஒத்தா ழிசைக்கலியென் றோதிய ஆறினையும்
முத்திறத் தோசையான் முன்முரணி—வைத்து
வழுவற்ற ஆறிரண்டு வான்றளையால் மாற
எழுமுப்பத் தாறும் எனல்.'1

'கொச்சகம் ஈரைந்தும் வெண்கலி ஓரிரண்டும்
வைத்திசையோர் மூன்றினால் மாறியபின்—மற்றவற்றை
மாசில் பதினான்கு வான்றளையால் மாறவாம்
ஆசில்கலிக் கைஞ்ஞூற்று நான்கு.' 2

ஒத்தாழிசைக்கலி இருநூற்று ஒருபத்தாறும், வெண்கலி எண்பத்து நான்கும், கொச்சகக்கலி நானூற்றிருபதுமாய், எழுநூற்றிருபதாம். பிறவாற் றானும் விகற்பிக்கப் பலவுமாம்.

தரவு கொச்சகம் முதலாக உடையன, காரணக் குறியாய் நின்றன. அவற்றை விரித்து உரைத்துக்கொள்க.

82] நேரிசை ஒத்தாழிசைக் கலிப்பா [உகூ

தரவொன்று தாழிசை மூன்றும் சமனாய்த்
தரவிற் சுருங்கித் தனிநிலைத் தாகிச்
சுரிதகம் சொன்ன இரண்டினுள் ஒன்றாய்
நிகழ்வது நேரிசை ஒத்தா ழிசையே.

'இஃது என் நுதலிற்றோ?' எனின், நிறுத்த முறையானே நேரிசை ஒத்தா ழிசைக் கலிப்பா ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

'தரவு' எனினும், 'எருத்தம்' எனினும் ஒக்கும்.

'தாழிசை' எனினும், 'இடைநிலைப்பாட்டு' எனினும் ஒக்கும்.

'தனிச்சொல்' எனினும், 'இடைநிலை' எனினும், 'கூன்' எனினும் ஒக்கும்.

'சுரிதகம்' எனினும், 'அடக்கியல்' எனினும், 'வாரம்' எனினும் 'வைப்பு' எனினும், 'போக்கியல்' எனினும் ஒக்கும்.

**இதன் பொருள்:** தரவு ஒன்று—'தரவு' என்னும் உறுப்பு முதற்கண்ணே வந்து, தாழிசை மூன்றும் சமனாய்—(தரவின் பின்னர்த்) 'தாழிசை' என்னும் இரண்டாம் உறுப்பும் தம்முள் ஒத்து மூன்றாய் வந்து, தரவிற் சுருங்கி—(அத்தாழிசை ஓரோ ஒன்றாய்த்) தரவிற் குறைந்து, (தரவிற் சுருங்கி' என்பதனை 'மூன்று தாழிசையுமாய்த் தரவிற் சுருங்கி' என்று கொள்ளலாமோ?" எனின், கொள்ளலாம். என்னை ?

---

1—2. யா. வி. 86 உரைமேற்.

'இடைநிலைப் பாட்டே,

தரவகப் பட்ட மரபிற் றென்ப.' 1

என்றார் தொல்காப்பியனார் ஆகலானும், 'ஓரோ ஒன்றே அத்தரவினகப் பட்டது,' என்றே கொள்ளப்பட்டது ஆகலானும்,

'பல்பொருட் கேற்பின் நல்லது கோடல்.' 2

என்பது தந்திர உத்தி ஆகலானும், அதுவே துணிபு.) தனிநிலைத்து ஆகி— (தாழிசைப்பின்) 'தனிச்சொல்' என்னும் மூன்றும் உறுப்பு உடைத்தாய், சுரிதகம் சொன்ன இரண்டினுள் ஒன்றாய்—'சுரிதகம்' என்னும் நான்காம் உறுப்பு மேற்சொல்லப்பட்ட வெண்பாவானும் ஆசிரியப்பாவானுமாய் வந்து, நிகழ்வது நேரிசை ஒத்தாழிசை—(நான்கு உறுப்பினானும் வந்து) நிகழ்வது யாது? அது நேரிசை ஒத்தாழிசைக் கலிப்பா என்று வழங்கப்படும் (என்ற வாறு).

எல்லா உறுப்பின் பொருளையும் தொகுத்துக்கொண்டு தந்து முன் நிற்றலின், 'தரவு' என்பதூஉம் காரணக்குறி.

ஒத்த ஒரு பொருள் முடிவினால் ஒத்த தாழ்ச்சியால் இசைத்தலானும், தரவிற் குறைந்து இசைத்தலானும், 'ஒத்தாழிசை' என்பதூஉம் 'தாழிசை' என்பதூஉம் காரணக் குறி.

ஒரு சொல்லாய்ப் பொருள் நிரம்பித் தனியே நிற்றலின், 'தனி நிலை' என்பதூஉம் காரணக்குறி.

ஓரிடத்து ஓடாநின்ற நீர் குழியாயினும் திடரானும் சார்நததுவிடத்துச் சுரிந்தோடும் அதனைச் 'சுரிந்து' என்றும் 'சுழி' என்றும் வழங்குவது போல, தான் கலியோசையாய் வாராநின்றது வெள்ளையானும் ஆசிரியமானுமாய்த் தக்கதொரு பொருளை உட்கொண்டு நிற்றலான், 'சுரிதகம்' என்பதூஉம் காரணக்குறி.

பிறரும்,

'தந்துமுன் நிற்றலின் தரவே; தாழிசை
ஒத்தா ழத்தின * தொத்தா ழிசையே.'
'தனிதர நிற்றலின் தனிநிலை; குனிதிரை
நீர்ச்சுழி போல நின்றுகரிந் திறுதலின்
சோர்ச்சியில் புலவர் சுரிதகம் என்ப.'

என்றார் ஆகலின்,

'நிகழ்வது' என்று விதந்த அதனால், அம்போதரங்கமும், வண்ணகமும் இருமூன்றடியே தரவின் பெருமை; அல்லன, மூன்றடிச் சிறுமையின் மிக வாரா.

'அம்பு வண்ணகம் இருமூன் றடியின;
முந்திய மூன்றடிச் சிறுமையின் மிகாவாய்த்
தந்துமுன் நிற்றலின் தரவா கும்மே.'
'இரண்டடி சிறுமை; பெருமையதன் இரட்டி
தரவிற் குறைந்தன தாழிசை ஆகும்.'
'தனிநிலை சுரிதகம் வரைநிலை இலவே.'
'சிறுமை இரண்டடி; பெருமைபொருள் முடிவே
சுரிதகம் என்ப தொல்லை யோரே.'

என்றார் ஆகலின். இவற்றை விரித்து உரைத்துக்கொள்க.

---

1. தொல். பொ. 446. 2. தொல். பொ. 665

பி—ம்: *ஒத்தாழ்ந் திறின ∴

கலியுறுப்புக்கு அளவை, செயன்முறையுள்ளும், செயிற்றியத்துள்ளும், அகத்தியத்துள்ளும் முடிந்தவாறு அறிந்து கண்டு கொள்க. அவை ஈண்டு உரைப்பிற் பெருகும். வல்லார்வாய்க் கேட்டு உணர்க.

வரலாறு :

[நேரிசை ஒத்தாழிசைக் கலிப்பா]

[தரவு]

'வாணெடுங்கண் பனிகூர வண்ணம்வே றுய்த்திரிந்து
தோணெடுந் தகைதுறந்து துன்பங்கூர் பசப்பினவாய்ப்
பூணடுங்கு* முலைகண்டும் பொருட்பிரிதல் வலிப்பவோ?

[தாழிசை]

'சூருடைய கடுங்கடங்கள் சொலற்கரிய என்பவாற்
பீருடைய நலந்தொலையப் பிரிவாரோ பெரியவரே? 1

'சேணுடைய கடுங்கடங்கள் செலற்கரிய என்பவால்
நாணுடைய நலந்தொலைய நடப்பாரோ நலமிலரே? 2

'சிலம்படைந்த வெங்கானம் சீரிலவே என்பவாற்
புலம்படைந்து நலந்தொலையப் போவாரோ பொருளிலரே? 3

[தனிச்சொல்]

எனவாங்கு,

[சுரிதகம்]

அருளெனும் இலராய்ப் பொருள்வயிற் பிரிவோர்
பன்னெடுங் காலமும் வாழியர்
பொன்னெடும்† தேரொடும் தானையிற் பொலிந்தே.'

இது தரவு மூன்றடியால் வந்து, தாழிசை மூன்றும் இரண்டடியால் வந்து, தனிச்சொற் பெற்று, மூன்றடி ஆசிரியச் சுரிதகத்தால் இற்ற நேரிசை ஒத்தாழிசைக் கலிப்பா. இது சிறப்புடைக் கலித்தளையால் வந்தது.

[இதுவும் அது]

[தரவு]

'முத்தொடு மணிதயங்கு முக்குடைக்கீழ் முனைவனுய்
எத்திசையும் பல்லுயிர்கள் இன்புற இனிதிருந்து
பத்தறு காவதம் பகைபசி பிணிநீங்க
உத்தமர்கள் தொழுதேத்த ஒளிவரைபோற் செவ்வியோய்!‡

[தாழிசை]

'எள்ளனைத்தும் இடரின்றி எழில்மாண்ட பொன்னெயிலின்
உள்ளிருந்த உன்னையே உயர்துணையென்|| றடைந்தோரை
வெள்ளில்சேர் வியன்காட்டுள் உறைகென்றல் விழுமிதோ? 1

'குணங்களின் வரம்பிகந்து கூடிய பன்னிரண்டு
கணங்களும்வந் தடியேத்தக் காதலித்துன் அடைந்தோரைப்
பிணம்பிறங்கு பெருங்காட்டுள் உறைகென்றல் பெருமையோ? 2

---

பி—ம்: * பூணெடுங்கு † பொன்னெடுந் ‡ ஒளிவரை செலவினோய்
|| உயிர்த்துணை, உறுதுணை

'விடத்தகைய வினைநீக்கி வெள்வளைக்கைச் செந்துவர்வாய்
மடத்தகைய மயிலனையார் வணங்கநின் அடைந்தோரைத்
தடத்தகைய காடுறைக என்பதுநின் தகுதியோ? 3

[தனிச் சொல்]

எனவாங்கு,

[சுரிதகம்]

'அனைத்துணையை ஆயினும் ஆகமற் றுன்கட்
டினைத்துணையும் தீயவை இன்மையிற் சேர்தும்
வினைத்தொகையை வீட்டுக என்று.'

இது நான்கடியாய்த் தரவு வந்து, தாழிசை மூன்றும் மூன்றடியாய், **தனிச் சொல்** வந்து, வெள்ளைச் சுரிதகமாய், ஆசிரியச் சிறப்பில் **நிரைத்தளையால் வந்த நேரிசை ஒத்தாழிசைக் கலிப்பா.**

பல அடியானும் வேற்றுத் தளையானும் வருவன வந்தவழிக் கண்டு கொள்க.

பிறரும் இதற்கு இலக்கணம் இவ்வாறே சொன்னார். என்னை?

'தரவே தாழிசை தனிநிலை சுரிதகம்
எனநான் குறுப்பின தொத்தா ழிசையே.'

'தன்னுடை அந்தமும் தாழிசை யாதியும்
துன்னு மிடத்துத் துணிந்தது போலிசை
தன்னொடு நிற்றல் தரவுக் கியல்பே.'

'தத்தமில் ஒத்துத் தரவின் அகப்பட
நிற்பன மூன்று நிரந்தவை தாழிசை.'

'ஆங்கென் கிளவி அடையாத் தொடைபட
நீங்கி இசைக்கும் நிலையது தனிச்சொல்.'

'ஆசிரியம் வெண்பா எனவியை தம்முள்
ஒன்றாகி அடிபெற் றிறுதி வருவது
சுழியம் எனப்பெயர் சுரிதக மாகும்.'

என்றார் **காக்கைப்பாடினியார்.**

'விட்டிசை முதற்பாத் தரவடி ஒத்தாங்
கொட்டிய மூன்றிடைத் தாழிசை அதன்பின்
மிக்கதோர் சொல்லாம் தனிநிலை சுரிதகம்
ஆசிரி யத்தொடு வெள்ளையின் இறுதலென்
றோதினர் ஒத்தா ழிசைக்கலிக் குறுப்பே.'

என்றார் **அவிநயனார்.**

'தரவொன் றாகித் தாழிசை மூன்றாய்த்
தனிச்சொல் இடைக்கிடந்து சுரிதகம் தழுவ
வைத்த மரபின தொத்தா ழிசைக்கலி.'

'தரவின் அளவிற் சுரிதகம் அயற்பா
விரவும் என்ப ஆசிரியம் வெள்ளை.'

என்றார் காம வேளைக் கறுத்த புத்தேள் நாமம் தாங்கிய **நல்லாசிரியர்.**

**அவர்** தரவின்றுணையே சுரிதகம் ஆவது சிறப்புடைமையால் **எடுத்து ஓதினார்**, தரவின் மிக்கும் குறைந்தும் வருவன உளவாயினும் எனக் கொள்க.

83] அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பா. [நூல்

முந்திய தாழிசைக் கீழுய் முறைமுறை
ஒன்றினுக் கொன்று சுருங்கும் உறுப்பின
தம்போ தரங்கவொத் தாழிசைக் கலியே.

'இஃது என் நுதலிற்றோ?' எனின் அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பா ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

**இதன் பொழிப்பு**: (தரவு, தாழிசை, தனிச்சொல், சுரிதகம் உடைத்தாய்) மேற்கூறிய தாழிசைக்குப் பின்னாய் (அடியினானும் சீரினானும் முறையே) ஒன்றினுக்கு ஒன்று சுருங்கி வரும் உறுப்பு உடையது அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பா என்று வழங்கப்படும் (என்றவாறு).

'தரவு, தாழிசை, தனிச்சொல், சுரிதகம்' என்றது, அதிகாரம் வருவித்து உரைக்கப்பட்டது.

**'அம்போதரங்க உறுப்பு'** எனினும், **'அசையடி'** எனினும், **'பிரிந்திசைக் குறள்'** எனினும், **'சொற்சீர் அடி'** எனினும், **'எண்'** எனினும் ஒக்கும். அவற்றையே **'பேரெண், சிற்றெண், இடையெண், அளவெண்'** என்றும் சொல்லுவர்.

அவை உறுப்புத் தாழிசைப்பின் ஈரடியால் இரண்டும், அதன்பின் நாற்சீர் அடியால் நான்கும், அதன்பின் முச்சீர் அடியால் எட்டும், அதன்பின் இருசீர் அடியாற் பதினாறுமாய் வரும். என்னை?

'ஈரடி இரண்டும் ஓரடி நான்கும்
முச்சீர் எட்டும் இருசீர் இரட்டியும்
அச்சீர் குறையினும் அம்போ தரங்கம்.'

எனவும்,

'இரண்டும் நான்கும் எட்டும் இரட்டியும்
வருவன முறையே ஒருநிரை படாஅ
திரண்டடி ஓரடி முச்சீர் இருசீர்
அசையடி வரினே அம்போ தரங்கம்.'

எனவும் சொன்னார் ஆகலின்.

முச்சீர் அடியால் எட்டும், இருசீர் அடியாற் பதினாறும் என்று சொல்லப் பட்டன குறைந்து வரவும் பெறும்.

'இப்பொருள் எல்லாம் எற்றாற் பெறுதும்?' எனின், 'உரையிற்கோடல்' என்னும் தந்திர உத்தியானும், 'முறைமுறை' என்னும் விதப்பினானும், 'பிற நூல் முடிந்தது தானுடம் படுதல் என்பதனானும் பெறுதும் எனக் கொள்க.

வரலாறு :

[அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பா]

[தரவு]

'கெடலரு மாமுனிவர் கிளர்ந்துடன் தொழுதேத்தக்
கடல்கெழு கனைசுடரிற் கலந்தொளிரும் வாலுளைஇ
அழலவிர் சுழல்செங்கண் அரிமாவாய் மலைந்தானைத்
தாரோடு முடிபிதிரத் தமனியப் பொடிபொங்க
ஆர்புனல் இழிகுருதி அகலிடம் உடனனைப்பக்
கூருகிரான் மார்பிடந்த கொலைமலி தடக்கையோய்!

[தாழிசை]

'முரைசதிர் வியன்மதுரை முழுவதூஉம் தலைபனிப்பப்
புரைதொடித் திரடிண்டோட் போர்மலைந்த மறமல்லர்
அடியோடு முடியிறுப்புண் டயர்ந்தவண் * நிலஞ்சேரப்
பொடியெழ வெங்களத்துப் புடைத்ததுநின் புகழாமோ ?

'கலியொலி வியனுலகம் கலந்துட னனிநெடுங்க
வலியியல் அவிராழி மாறெதிர்ந்த மருட்சோவும் †
மாணுதார் உடம்போடு மறம்பிதிர வெதிர்கலங்கச்
சேணுயர் இருவிசும்பிற் செகுத்ததுநின் சினமாமோ ? 2

'படுமணி இனநிரைகள் பரந்துடன் இரிந்தோடக்
கடுமுரண் எதிர்மலைந்த காரொலி எழிலேறு
வெரிநொடு மருப்பொசிய விழ்த்துதிறல் ‡ வேறாக
எருமலி பெருந்தொழுவின் இறுத்ததுநின் இல்லாமோ ? 3

[அம்போதரங்கம்]

[பேரெண்]

'இலங்கொளி மரகதம் எழில்மிகு வியன்கடல்
வலம்புரித் தடக்கை மாஅல் ! நின்னிறம். 1

'விரியிணர்க் கோங்கமும் வெந்தெரி பசும்பொனும்
பொருகளி றட்டோய் ! புரையும் நின்னுடை. 2

[சிற்றெண்]

'கண்கவர் கதிர்மணி கனலும் சென்னியை ; 1
தண்சுடர் உறுபகை தவிர்த்த ஆழியை; 3
ஒலியியல் உவணம் ஓங்கிய கொடியினை ; 3
வலிமிகு சகடம் மாற்றிய அடியினை. 4

[இடையெண்]

'போரவுணர்க் கடந்தோய் நீ ; 1
புணர்மருதம் பிளந்தோய் நீ ; 2
நீரகலம் அளந்தோய் நீ ; 3
நிழல்திகழும் படையோய் நீ. 4

[அளவெண்]

'ஊழி நீ ; 1 உலகு நீ ; 2
உருவு நீ ; 3 அருவு நீ ; 4
ஆழி நீ ; 5 அருளு நீ ; 6
அறமு நீ ; 7 மறமு நீ. 8

[தனிச் சொல்]

எனவாங்கு,

[சுரிதகம்]

'அடுதிறல் ஒருவ ! நிற் பரவுதும் எங்கோன்
தொடுகழற் கொடும்பூட் பகட்டெழில் மார்பிற்

பி—ம் : * அயர்ந்தவர். † மருட்சோர்வும் ‡ வீழ்ந்துதிறல், வீழ்ந்துநிறம்

கயலொடு கலந்த சிலையுடைக் கொடுவரிப்
புயலுறழ் தடக்கைப் போர்வேல் அச்சுதன்
தொன்றுமுதிர் கடலுலகம் முழுதுடன்
ஒன்றுபுரி திகிரி உருட்டுவோன் எனவே.'1

இஃது எட்டும் பதினாறும் என்று சொல்லப்பட்ட முச்சீர் அடி அம்போதரங்கமும் இருசீர் அடி அம்போதரங்கமும் குறைந்து, முச்சீர் அடி நான்காய் இருசீர் அடி எட்டாய், சிறப்பில் இயற்சீர் வெண்டளையால் வந்த அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பா.

[இதுவும் அது]

[தரவு]

'நலங்கிளர் திருமணியும் நன்பொன்னும் குயின்றழகார்
இலங்கெயிற் றழலரிமான் எருத்தஞ்சேர் அணையின்மேல்
இருபுடையும் இயக்கரசர் இணைக்கவரி எடுத்தெறிய
விரிதாமம் துயல்வரூஉம் வெண்குடைமூன் றுடனிழற்ற
வண்டாற்ற நாற்காதம் வகைமாண உயர்ந்தோங்கும்
தண்டளிர்ப்பூம் பிண்டிக்கீழ்த் தகைபெறவீற் றிருந்தனையே.

[தாழிசை]

'ஒல்லாத பிறப்புணர்த்தும் ஒளிவட்டம் புடைசூழ
எல்லார்க்கும் எதிர்முகமாய் இன்பஞ்சேர் திருமுகமோ
ஏர்மலர மணிப்பொய்கை எழிலாம்பற் பொதியவிழ
ஊர்கோளோ டுடன்முளைத்த ஒளிர்வட்டம் உடைத்தன்றே? 1

'கனல்வயிரம் குறடாகக் கனற்பைம்பொன் சூட்டாக
இனமணி ஆரமா இயன்றிருள் இரிந்தோட
அந்தரத் துருளுநின் அலர்கதிர் அறவாழி
இந்திரர்கள் இனிதேத்த இருவிசும்பிற் றிகழ்ந்தன்றே? 2

'வாடாத மணமாலை வானவர்கள் உள்ளிட்டார்
நீடாது தொழுதேத்த நிற்சேர்ந்த பெருங்கண்ணு
முகிழ்பருதி முகநோக்கி முறுவலித் துண்ணெகிழ்ந்து
திகழ்தகைய கோட்டைசூழ் திருநதிகள் திளைத்தன்றே? 3

[அம்போதரங்கம்]

[பேரெண்]

'மல்லல் வையம் அடிதொழு தேத்த
அல்லல் நீக்கற் கறப்புணை ஆயினை. 1

'ஒருதுணி வழிய உயிர்க்கரண் ஆகி
இருதுணி ஒருபொருட் கியல்வகை கூறினை. 2

[சிற்றெண்]

'ஏடலர் தாமரை ஏந்தும் நின்னடி; 1
வீடொடு கட்டினை விளக்கும் நின்மொழி; 2
விருப்புறு தமனிய விளக்கு நின்னிறம்; 3
ஒருக்குல கூடுற உளுற்றும் நின்புகழ். 4

1. விளக்கத்தனார் பாடல்.

[இடையெண்]

'இந்திரர்க்கும் இந்திரன் நீ; 1
இணையில்லா இருக்கையை நீ; 2
மந்திர மொழியினை நீ; 3
மாதவர்க்கு முதல்வனும் நீ; 4
அருமைசால் அறத்தினை நீ; 5
ஆருயிரும் அளித்தனை நீ; 6
பெருமைசால் குணத்தினை நீ; 7
பிறர்க்கறியாத் திறத்தினை நீ. 8

[அளவெண்]

'பரமன் நீ; 1 பகவன் நீ; 2
பண்ணவன் நீ; 3 புண்ணியன் நீ; 4
உரவன் நீ; 5 குரவன் நீ; 6
ஊழி நீ; 7 உலகு நீ; 8
அருளும் நீ; 9 அறமும் நீ; 10
அன்பும் நீ; 11 அணைவும் நீ; 12
பொருளும் நீ; 13 பொருப்பும் நீ; 14
பூமி நீ; 15 புணையும் நீ; 16.

[தனிச் சொல்]

எனவாங்கு,

[சுரிதகம்]

'அருணெறி ஒருவ! நிற் பரவுதும் எங்கோத்
திருமிகு சிறப்பிற் பெருவரை அகலத்
தெண்மிகு தானைப் பண்ணமை நெடுந்தேர்
அண்ணல் யானைச் செங்கோல் விண்ணவன்
செருமுனை செருக்கறத் தொலைச்சி
ஒருதனி வெண்குடை ஓங்குக எனவே.'

இதனுள் எட்டும் பதினாறும் என்று சொல்லப்பட்ட உறுப்புக் குறையாதே வந்தவாறு கண்டுகொள்க.

இஃது அம்போதரங்க உறுப்பு அழகு குறையாதே, ஆசிரியச் சிறப்பில் நிரைத்தளையால் வந்த அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பா.

பிற தளையாலும் வந்தவழிக் கண்டுகொள்க.

[கட்டளைக் கலித்துறை]

'தரவொன்று தாழிசை மூன்று தனிச்சொல் சுரிதகமாய்
திரிலொன்றின் நேரிசை ஒத்தா ழிசைக்கலி; நீர்த்திரைபோல்
மரபொன்றும் நேரடி முச்சீர் குறள்நடு வேமடுப்ப
தரவொன்றும் அல்குல்! அ தம்போ தரங்கவொத் தாழிசையே.' 1

இக்காரிகையை விரித்து உரைத்துக்கொள்க.

1. யா. கா. 31.

பிறரும் இதற்கு இலக்கணம் இவ்வாறே சொன்னார். என்னை?

'நீர்த்திரை போல நிரலே முறைமுறை
ஆக்கம் சுருங்கி அசையடி தாழிசை*
விட்டிசை வியத்† தொடுத்துச் சுரிதகம்
தாக்கித் தவிர்ந்த‡ தரவினோ டேனவும்
யாப்புற் றமைந்தன அம்போ தரங்கம்.'

என்றார் காக்கைபாடினியார்.

'தரவே தாழிசை தனிச்சொற் சுரிதகம்
வருவன எல்லாம் தாழிசைக் கலியே.'

'சேர்த்திய தரவொடு தாழிசைப் பின்னர்
நீர்த்திரை போல நெறிமையிற் சுருங்கி
மூவகை எண்ணும் முறைமையின் வழாஅ
அளவின எல்லாம் அம்போ தரங்கம்.'

என்றார் சிறுகாக்கைபாடினியார்.

'உரைத்த உறுப்பொடு தாழிசைப் பின்னர்
நிரைத்த அடியால் நீர்த்திரை போல
அசையடி பெறினவை அம்போ தரங்கம்.'

என்றார் அவிநயனார்.

'தாழிசைக் கீறாய் முறைமுறை
ஒன்றினுக் கொன்று சுருங்கும் உறுப்பின
தம்போ தரங்கவொத் தாழிசைக் கலியே.'

என்பது சூத்திரமாகக் கொண்டு, 'தரவு, தாழிசை, தனிச்சொல், சுரிதகம் உடைத்தாய் நிகழ்வது' என்று அதிகாரம் வருவித்து உரைத்தாலும் கருதிய பொருளைப் பயக்கும். 'முந்திய' என்று மிகுத்துச் சொல்ல வேண்டியது என்னை?

ஒருசார் ஆசிரியர் தரவும் சுரிதகமும் ஆறடியால் வந்து, நான்கடியாய்த் தாழிசை மூன்றும் வந்து, தாழிசைப் பின்னர்த் தனிச்சொல் முன் இரண்டடியால் ஓர் அராகம் வந்து, அதன் பின் இரண்டடியால் இரண்டு பேரெண் வந்து, ஓரடியால் நான்கு இடையெண் வந்து, சிற்றெண் இரு சீரால் எட்டாய், அவை இரண்டு கூடி ஓரடியே போன்று இம்முறை அம்போதரங்க உறுப்புப் பெற்று முடிவது **தலையளவு அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பா** என்றும், தரவும் சுரிதகமும் ஐந்தடியான் வந்து, தாழிசை மூன்றும் மூன்றடியால் வந்து, தாழிசைப் பின்னர்த் தனிச்சொல் முன் இரண்டடியால் ஓர் அராகம் வந்து, இரண்டு ஓரடியால் பேரெண் அறு சீரால் வந்து, இடையெண் முச்சீரால் வந்து, எட்டுச் சிற்றெண் ஒரு சீரும் ஓர் அசையுமாய் இம்மூன்று அம்போதரங்க உறுப்பும் பெற்று முடிவது **இடையளவு அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பா** என்றும்; தரவும் சுரிதகமும் நான்கடியால் வந்து, ஈரடியால் மூன்று தாழிசை வந்து, தாழிசைப் பின்னர்த் தனிச்சொல் முன் இரண்டடியால் ஓர் அராகம் வந்து, ஓர் அடியால் இரண்டு பேரெண் வந்து, இரு சீரால் நான்கு இடையெண் வந்து, ஒரு சீரால் எட்டுச் சிற்றெண் வந்து, இம்மூன்று அம்போதரங்க உறுப்பும் பெற்று முடிவது **கடையளவு அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பா** என்றும் வேண்டுவர் என்பது அறிவித்தற்கு வேண்டப்பட்டது. என்னை?

---

பி—ம். * அசையடித்தாழி. † விரியத் ‡ தழுவும், தொடுத்த

'தாழிசைப் பின்னர்த் தனிச்சொல் முன்னர்
ஆழ்புனற் றிரைபுரை அம்போ தரங்கம்
உம்பர் மொழிந்த தாழிசை வழியே
அம்போ தரங்கம்வண் ணகமும் ஆகும்.'

'அவையே,
தேவ பாணியென் றேவவும் படுமே.'

'வழிபடு தெய்வம் வழுத்திவழி மொழியின்
தலையிடை கடையென அம்போ தரங்கம்
நிலையினவ் வளவின் நிலையுங் காலை
அராகம் பேரெண் இடையெண் சிற்றெண்
விராக * என்ப தாழிசைப் பின்னர்க்
கூறிய தரவே ஆறடித் தாகும்.'

'தரவின் வழிமுறை தாழிசை மூன்றும்
வரன்முறை பிறழா நாலடிக் குரிய;
தந்துமுன் நிறீஇத் தரவினிற் றாழிசை
உறுப்பினும் குணத்தினும் நெறிப்படப் புணரும்.'

'தாழிசைப் பின்னர் அராகவடி இரண்டே
அராகத் திறுதி பேரெண் இரண்டு
விராக என்ப இரண்டிரண் டடியால்
பேரெண் வழியால் இடையெண் நாலடி
நேரல் வேண்டும் நெறியறி புலவர்.'

'பெற்ற நாலடி அரையடி முடிவின
சிற்றெண் பகுதி இருநான் காகும்.'

'மூவகை எண்ணின் பொருள்வகை முடிவும்
யாவகை எண்ணிற்கும் அகப்பட முடியும்.'

'சிற்றெண் அகத்தே சேர்த்தப் † படுவோன்
பெற்றபுகழ் தொடுப்பினும் பிழைப்ப தில்லை.'

'அடக்கியல் உறுப்பும் ஆறடித் தாகத்
தொடுக்கு மாகிற் றெல்லையோர் துணிவே.'

'கொள்ளப் பட்ட உறுப்பொடிரு தலையும்
தள்ளாது வருவது தலையள வாகும்.'

'உடையதம் உறுப்பின் ஒன்றுகுறை வின்றி
இடையள விலக்கணம் இருதலை உறுப்பும்
அவ்வைந் தடியாய், அமைவுறு தாழிசை
மூன்றுமூன் றடியான் மூன்றுமுடி வெய்திப்
பேரெண் அறுசீர் இடையெண் முச்சீர்
சேரும் சிற்றெண் சீருமோர் அசையும்
நேரல் வேண்டும் நெறியறி புலவர்.'

'கடையள வென்ப துடையுறுப் பெஞ்சாது
முடிவும் முதலும் நாலடித் தாகி

பி—ம்: * விராகம். † சேர்க்கப்.

அடிவகை இரண்டிற் றாழிசை மூன்றாய்ப்
பேரெண் இரண்டடி பெற்றபின் இடையெண்
நேரடி நான்கும் அரையடி முடிவிற
சிற்றெண் எட்டும் சீர்நால் இரட்டியும்
பெற்ற தாயினது கடையள வென்ப.'

'அம்மு வளவிற்கும் அராகவடி இரண்டே
ஈறும் முதலும் எல்லா அளவிற்கும்
கூறிய முறைமையிற் கொள்ளல் வேண்டுப.'

என்றார் ஆகலின்.

அவர்கள் காட்டும் உதாரணம்:

**[தலையளவு அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பா—தேவ பாணி]**

**[தரவு]**

அலைகடற் கதிர்முத்தம் அணிவயிரம் அவையணிந்து
மலையுறைமா சுமந்தேந்தும் மணியணைமேல் மகிழ்வெய்தி
ஓசனைசூழ் திருநகருள் உலகொருமூன் றுடனேத்த
ஈசனையாய் இனிதமர்ந்தங் கிருடிகட்கும் இறையவர்க்கும்*
அருளறமே அறமாக அயலார்கண் மயலாக
இருளறநன் கெடுத்தியம்பி இருவினை† கடிந்திசினோய்!

**[தாழிசை]**

'துன்றாத வினைப்பகையைத் துணிசெய்யும் துணிவினையாய்
இன்றாத பகைமுனைபோல் எரித்தடக்கும் நினைப்பினால்
இருளில்லா உணர்வென்னும் இலங்கொளியால் எரித்தனையாய்
அருளெல்லாம் அடைந்தெங்கண் அருளுவதுன் அருளாமோ? 1

'மதிபுரைமுக் குடைநீழல் மகிழ்வெய்தி அடைந்தோரைக்
கதிபொருதக் கருவரைமேல் கதிர்பொருத முகம்வைத்துக்
கொன்முனைபோல் வினைநீங்கக் குளிர்நிழற்கண் மகிழ்ந்தனிர்போல்
நின்மினீர் எனவுணர்த்தல் நிருமல! நின் பெருமையோ? 2

'மனைதுறந்து வனம்புகுமின் மலமறுக்கல் உறுவீரேல்
வினையறுக்கல் உறுவார்க்கு விழுச்செல்வம் பழுதென்றீங்
கலகில்லாப் பெருஞ்செல்வத் தமராசர் புடைசூழ
உலகெல்லாம் உடன்றுறவா உடைமையுநின் உயர்வாமோ? 3

**[அராகம்]**

'அரசரும் அமரரும் அடிநிழல் அமர்தர
முரசதிர் இமிழிசை முரணிய மொழியினை.

**[அம்போதரங்கம்]**

**[பேரெண்]**

'அணிகிளர் அவிர்மதி அழகெழில் அவிர்சுடர்
மணியொளி மலமறு கனலி நின்னிறம்; 1

'மழையது மலியொலி மலிகடல் அலையொலி
முழையுறை அரியது முழக்கம் நின்மொழி. 2

---

பி—ம்: * இறைவற்கும் † இரு வினைகள்

[இடையெண்]

'வெலற்கரும் வினைப்பகை வேரொடும் வென்றனை ; 1
'சொலற்கரு மெய்ப்பொருள் முழுவதும் சொல்லினை ; 2
'அருவினை வெல்பவர்க் கரும்புணை ஆயினை ; 3
'ஒருவனை ஆகி உலகுடன் உணர்ந்தனை. 4

[சிற்றெண்]

'உலகுடன் உணர்ந்தனை ; 1 உயிர்முழு தோம்பினை ; 2
நிலவுறழ் நிலத்தனை ; 3 நிழலியல் ஆக்கையை ; 4
மாதவர் தாதையை ; 5 மலர்மிசை மகிழ்ந்தனை ; 6
போதிவர் பிண்டியை ; 7 புலவருட் புலவனை. 8

(இவை 'அரையடி எண்' எனவும் அமையும்.)

[தனிச்சொல்]

எனவாங்கு,

[சுரிதகம்]

'அருளுடை ஒருவ ! நிற் பரவுதும் எங்கோ
இருளறு திகிரியொடு வலம்புரித் தடக்கை
ஒருவனை வேண்ட இருநிலம் கொடுத்த
நந்தி மால்வரைச் சிலம்பு நந்தி *
ஒற்றைச் செங்கோல் ஓச்சிக்
கொற்ற வெண்குடை நிழற்றுக எனவே.'

இது தலையளவு அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பாப் பெருந்தேவ பாணி.

இஃது அல்லாதன செயன்முறையோடும் செயிற்றியத்தோடும் அகத்தியத் தோடும் ஒக்கப் பாடின இல்லை என்ப.

இடையளவு அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பா வருமாறு :

[தரவு]

'பிறப்பென்னும் பிணிநீங்கப் பிரிவரிய வினைக்கடலை
அறப்புணையே புணையாக மறுகரைபோய்க் கரையேறி
இறப்பிலதின் அருள்புரிந்தாங் கெமக்கெல்லாம் அருளினையாய்
மறவாழி ஒளிமழுங்க மனையவர்க்கும் முனையவர்க்கும்
அறவாழி வலனுயரி அருணெறியே அருளியோய் !

[தாழிசை]

'அருளெல்லாம் அகத்தடக்கி அடிநிழலை அடைந்தோர்க்குப்
பொருளெல்லாம் நீவிளங்கப் புகரில்லா வகையினால்
இருளில்லா வியன்ஞானம் † இயம்பியதுன் ‡ இயலாமோ ? 1

'தீதில்லா நயமுதலாத் திருந்தியநல் அளவைகளால்
கோதில்லா அரும்பொருளைக் குறைவின்றி அறைந்ததற்பின்
பேதில்லா இயற்காட்சி அருளியதுன் பெருமையோ ? 2

---

பா—ம் : * சிலம்ப நந்தி, சிலம்ப னந்தி † மனஞானம் ‡ இயம்புவதுன்.

'துணையில்லாப் பிறப்பிடைக்கட் டுயரெல்லாம் உடனகலப்
புணையில்லா உயிர்கட்குப் பொருவில்லா * அருளினுல்
இணையில்லா இயலொழுக்கம் † இசைத்ததுநின் இறைமையோ? 3

[அராகம்]

'அருள்புரி திருமொழி அமரரும் அரசரும்
மருள்வழி மனிதரும் மகிழ்வுற இயம்பினே.

[பேரெண்]

'பூமலர் துதைந்த பொழிலணி கொழுநிழற் றேமலர் அசோகினே; 1
தூமலர் விசும்பின் விஞ்சையர் பொழியும் மாமலர் மாரியை. 2

[இடையெண்]

'காமரு கதிர்மதி முகத்தினே; 1
'சாமரை இடையிடை மகிழ்ந்தனே; 2
'தாமரை மலர்புரை அடியினே; 3
'தாமரை மலர்மிசை ஒதுங்கினே. 4

[சிற்றெண்]

'அறிவனே நீ; 1 அதிசயம் நீ; 2
அருளினே நீ; 3 பொருளினே நீ; 4
உறுவனே நீ; 5 உயர்வினே நீ; 6
உலகினே நீ; 7 அலகினே நீ. 8

[தனிச்சொல்]

எனவாங்கு,

[சுரிதகம்]

'இனையை ஆதலின் முனைவருள் முனைவ!
நினையுங் காலே நின்னடி அடைதும்
ஞானமும் காட்சியும் ஒழுக்கமும் நிறைந்து
துன்னிய தீவினைத் துகள்தீர்
முன்னிய பொருளது முடிகவெமக் கெனவே.'

இஃது இடையளவு அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பாப் பெருந்தேவ பாணி.

கடையளவு அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பாப் பெருந்தேவ பாணி வருமாறு:

[தரவு]

'கடையில்லா அறிவோடு ஞானமும் காட்சியும்
உடையையாய் உலகேத்த ஒண்பொருளை தியல்புணர்ந்து
மறவாழி இறைவரும் மாதவரும் புடைசூழ
அறவாழி வலனுயரி அருணெறியே அருளியோய்!

[தாழிசை]

'வினையென்னும் வியன்பகையை வேரோடும் உடன்கீழ்ந்து
முனைவர்கள் தொழுதேத்த இருப்பதுநின் முறைமையோ? 1

பி—ம்: * பொருவில்லா † நல்லொழுக்கம்

'பொருளாடல் புரியீரேல் புகர்தீரும் எனவருளி
மருளாறு மணியணைமேல் மகிழ்வதுநின் மாதவமோ? 2

'வேந்தற்கும் முனைவற்கும் விலங்கிற்கும் அருள்துறவாத்
தோந்நீரத் துறந்தநின் துறவரசும் துறவாமோ? 3

[அராகம்]

'முழுதுணர் முனைவருள் முனைவா! முனைவர்கள்
தொழுதெழு துதியொலி துதைமலர் அடியினை.

[அம்போதரங்கம்]

[பேரெண்]

'நிழன்மணி விளையொளி நிகர்க்கும் நின்னிறம்; 1
'எழின்மதி இதுவென இகலும் நின்முகம். 2

[இடையெண்]

'கருவினை கடந்தோய் நீ; 1
'காலனை அடர்ந்தோய் நீ; 2
'ஒருவினையும் இல்லோய் நீ; 3
'உயர்கதிக்கு முனைவனீ. 4

[சிற்றெண்]

அறவனீ 1; அமலனீ 2; அருளு நீ 3; பொருளு நீ 4;
உறுவனீ 5; உயர்வு நீ 6; உலகு நீ 7; அலகு நீ 8.

[தனிச்சொல்]

எனவாங்கு,

[சுரிதகம்]

'அருளுடை ஒருவ! நின் அடியிணை பரவுதும்
இருளுடை நாற்கதி இடர்முழு தகலப்
பாடுதற் குரிய பல்புகழ்
வீடுபே றுலகம் கூடுக எனவே.'

இது கடையளவு அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பாப் பெருந்தேவ பாணி.

இவ்வாறு விரித்து வெளிப்படச் சொன்னார், திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுள் திருப்பெயர் மகிழ்ந்த தொன்னூற் கவிஞர்.

இம்மூன்றினையும் அளவியல் அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பா என்றும், அல்லாதனவற்றை அளவழி அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பா என்றும் வழங்குவாரும் உளர் எனக் கொள்க.

84] வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பா [ருக

அவற்றொடு முடுகியல் அடியுடை அராகம்
மடுப்பது வண்ணக ஒத்தா ழிசைக்கலி.

'இஃது என் நுதலிற்றோ?' எனின், வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பா ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

**இதன் பொழிப்பு :** மேற்சொல்லப்பட்ட தரவும், தாழிசையும், அம்போ தரங்க உறுப்பும், தனிச்சொல்லும், சுரிதகமும் என்றிவற்றொடும் ஒருங்கு கடுகி நடக்கும் அடியுடை அராக உறுப்பும் தாழிசைப் பின்னைக் கூட்டிச் சொல்லப் படுவது யாது? அது வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பா என்று வழங்கப்படும் (என்றவாறு).

'தாழிசைப் பின்னை'* என்பது அதிகாரத்தால் வருவித்து உரைக்கப் பட்டது.

'தரவு, தாழிசை, அராகம், அம்போதரங்கம், தனிச்சொல், சுரிதகம்' எனக் கொள்க.

**'அராகம்'** எனினும், **'வண்ணகம்'** எனினும், **'அடுக்கியல்'** எனினும், **'முடுகியல்'**† எனினும், ஒக்கும்.

'அவற்றொடும் அராகம் மடுப்பது
வண்ணக ஒத்தா ழிசைக்கலி.'

என்றாலும் 'முடுகியலுடைய அராகம்' என்பது பெறலாம்; அராக அடி முடுகி நடக்கும் இயற்கையது ஆகலானும்,

'அச்சொலப் பட்ட உறுப்பொ டராகவடி
வைத்த நடையது வண்ணகம் ஆகும்.'

என்றார் **காக்கைபாடினியார்** ஆகலானும், முடுகியலடியே கொள்ளப்பட்டது ஆகலானும்; பெயர்த்தும், 'முடுகியல் அடியுடை அராகம்' என்று எடுத்து ஓத வேண்டியது என்னை?

அவ்வராக உறுப்பு, அளவடி முதலாகிய எல்லா அடியாலும், வரப்பெறும்; அடி வரையாது, சிறுமை நான்கடி, பெருமை எட்டடி, இடையிடை எத்துணை யாயினும் வரப்பெறும் என்பதூஉம், ஒரு சாரனவற்றுள் அகவலும் வெள்ளையும் விரவி அராகமாயும் அருகி வரப்பெறும் என்பதூஉம், அம்போதரங்க உறுப்புச் சில குறைந்தும் வரப்பெறும் என்பதூஉம் அறிவித்தற்கு வேண்டப்பட்டது. என்னை?

'அளவடி முதலா அனைத்தினும் நான்கடி
முதலா இரட்டியும் முடுகியல் நடக்கும்.'

என்றார் ஆகலின்.

அஃதே எனின், அவற்றொடு முடுகடி அராகம் மடுப்பது' என்றாலும், உரைத்த எல்லாம் பெறலாம், 'விதப்புக் கிளவி வேண்டியது விளைக்கும்,' என்பவாகலின்; 'இயல்' என்று விகிதப்படுக்கி ஓதியது என்னை?

இதன் பயன், இவற்றிற்கு உதாரணம் காட்டிப் பின்னர்ச் சொல்லுதும்.

இவற்றுக்குச் செய்யுள் வருமாறு:

[வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பா]

[தரவு]

'விளங்குமணிப் பசும்பொன்னின் விரித்தமைத்துக் கதிர்கான்ற
துளங்குமணிக் கனைகழற்காற் றுறுமலர் நறும்பைந்தார்ப்
பரூஉத்தடக்கை மதயானைப் பகட்டெழில் நெரிகுஞ்சி‡
குரூஉக்கொண்ட மணிப்பூணோய்! குறையிரந்து முன்னாட்கண்
மாயாத வனப்பினையாய் மகிழ்வார்க்கும் அல்லார்க்கும்
தயாகித் தலையளிக்கும் தண்டுறை ஊர! நீ : §

பி—ம் : * தாழிசைக் கீறாய். † முடுகிசை. ‡ பணையெருத்தின் மிசைத்தோன்றும். † ஊரகேள்.

[தாழிசை]

'காட்சியாற் கலப்பெய்தி எத்திறத்துக் கதிப்பாகி*
மாட்சியா றறியாத† மரபொத்தாய் கரவினாற்
பிணிநலம் பிரிவெய்திப்‡ பெருந்தடந்தோள் வனப்பழிய
அணிநலம் தனியேவந் தருளுவதும் அருளாமோ? 1

'அன்பினால் அமிழ்தளைஇ அறிவினாற் பிறிதின்றிப்
பொன்புனை பூணகம் பசப்பெய்தப் பொழிலிடத்துப்
பெருவரைத்தோள் அருளுதற் கிருளிடைத் தமியையாய்க்
கருவரைத்தோள் கதிர்ப்பிக்கும் காதலும் காதலோ? 2

'பாங்கனையே வாயிலாப் பலகாலும் வந்தொழுகும்
தேங்காத கரவினையும் தெளியாத இருளிடைக்கட்
குடவரைவேய்த் தோளிணைகள் குளிர்ப்பிப்பான் தமியையாய்த்
தடவரைத்தார் அருளுநின் தகுதியும் தகுதியோ? 3

[அராகம்]

'தாதுறு முறிசெறி தடமலர் இடையிடை தழலென விரவின பொழில்; 1
'போதுறு நறுவிரை புதுமலர் தெரிதரு கருநெய்தல் விரிவன கழி; 2
'தீதுறு திறமறு கெனநனி முனமுனம் துணையொடு பிணைவன துறை; 3
'மூதுறும் ஒலிகலி நுரைதரு திரையொடு கழிதொடர் புடையது கடல். 4

[அம்போதரங்கம்]

'கொடுந்திறல் உடையன சுறவேறு கொட்பதனால்
இடுங்கழி இரவருதல் வேண்டாவென் றிசைத்திலமோ? 1
'கருநிறத் தெறுதொழிற் கராம்பொரி தடைமையால்
இருணிறத் தொருகானல்§ திரவாரல் என்றிலமோ?

(இவை நாற்சீர் ஈரடி இரண்டம் போதரங்கம்.)

'நாணொடு கழிந்தன்றாற் பெண்ணரசி நலத்தகையே; 1
துஞ்சலும் ஒழிந்தன்றாற் றொடித்தோளி தடங்கண்ணே;
'அரற்றொடு கழிந்தன்றால் ஆரிருளெம்‖ ஆயிழைக்கே;
'நயப்பொடு கழிந்தன்றால் நனவினும்¶ நன்னுதற்கே.

(இவை நாற்சீர் ஓரடி நான்கு அம்போதரங்கம்.)

'அத்திறத்தால் அசைந்தன தோள்; 1 அலரதற்கு** மெலிந்தனகண்; 2
'பொய்த்துறையால் புலர்ந்தது முகம்; 3 பொன்னிறத்தாற் போர்த்தன முலை; 4
'அழலினால் அசைந்தது நகை; 5 அணியினால் ஒசிந்ததிடை; 6
குழலினால் அவிர்ந்தது†† முடி; 7 குறையினாற் கோடிற்றுநிறை.'8

(இவை முச்சீர் ஓரடி எட்டு அம்போதரங்கம்.)

'உட்கொண்ட தகைத்தொருபால்; 1 உலகறிந்த அலர்த்தொருபால்; 2
'கட்கொண்டல் துளித்தொருபால்; 3 கழிவெய்தும் படித்தொருபால்; 4
'பரிவுறூஉம் தகைத்தொருபால்; 5 படர்வுறூஉம்‡‡ பசப்பொருபால்; 6
'இரவுறூஉம் துயரொருபால்; 7 இளிவந்த எழிற்றொருபால்; §§ 8

---

பி—ம்: * எத்திறத்தும் கதிர்ப்பாகி. † மாட்சியாற் றறியாத. ‡ பிரிதெய்திப். § கானில். ‖ ஆரிருளும். ¶ நனவதுவும். ** அலர்தற்கு. †† நிமிர்ந்தது. ‡‡ படிறுறூஉம். §§ வெளிற்றொருபால்.

'மெலிவுவந் தலைத்தொருபால்; 9 விளர்ப்புவந் தடைந்தொருபால்; 10
'பொலிவுசென் றகன்றொருபால்; 11 பொறைவந்து கூர்ந்தொருபால்; 12
'காதலிற் கதிர்ப்பொருபால்; 13 கட்படாத் துயரொருபால்; 14
'ஏதிலர்சென் * றணைந்தொருபால்; 15 இயனணிற் செறிவொருபால். 16

(இவை இருசீர் ஓரடிப் பதினாறு அம்போதரங்கம்.)

[தனிச்சொல்]

எனவாங்கு,

[சுரிதகம்]

'இன்னதிவ் வழக்கம் இத்திறம் இவணலம்
என்னவும் முன்னாட் டுன்னாய் ஆகிக்
கலந்த வண்மையை † ஆயினும் நலந்தகக்
கிளையொடு கெழீஇத் தளையவிழ் ‡ கோதையைக்
கற்பொடு காணிய § யாமே
பொற்பொடு பொலிகநும் புணர்ச்சி தானே.'

இஃது ஆறு உறுப்பும் குறைவின்றி வந்த வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பா.

[இதுவும் அது]

[தரவு]

'தெரிவில்லா வினைகெடுத்துத் தீவினையிற் றெரிந்தோங்கிச்
சரிவில்லா இன்புத்தாற் சங்கரனாய் ‖, முழுதுலகும்
தெரிந்தொன்றி உணர்ந்துநின் ¶ றிப்பியஞா னந்தன்னால்
விரிந்தெங்கும் சென்றமையால் விண்ணுவாய், ** மண்மிசைத்
தேர்வுற்ற ஆரிடம் நான்மையினும் திரிவில்லாச்
சார்வுற்ற நான்மையினும் †† சதுமுகனாய் ஓங்கினையே!

[தாழிசை]

'இருத்தியும் ‡‡ நூனெறிய தியல்வகை §§ தன்னாலும்
வருத்தாத கொள்கையால் மன்னுயிரைத் தலையளிப்போய்!
தொடர்த்தமுக்கும் பிணியரசன் தொடர்ந்தோட ஞானத்தால்
அடர்த்தமுக்க வென்றதுநின் அறமாகிக் காட்டுமோ?

'ஏதிலா உயிர்களை எவ்வகைத் தியக்கத்தும் ‖‖
காதலால் உழப்பிக்கும் காமனைக் கறுத்தவன்
வடிவுகெடச் சிந்தையால் எரித்ததூஉம் வல்வினையைப்
பொடிபட வென்றதுநின் பொறையுடைமை ஆகுமோ?

'எவ்வுயிர்க்கும் ஓரியல்பே என்பவை தமக்கெல்லாம்
செவ்விய நெறிபயந்து சிறந்தோங்கு குணத்தகையாய்த்
கொலைத்திறத்தாற் கூட்டுண்ணும் கூற்றப்பே ரரசனுங்க
அலைத்தவனை வென்றதுநின் அருளாகிக் கிடக்குமோ? 3

பா—ம்: * ஏதில்சென். † கலந்தவ ணிலைமை. ‡ கெழீஇய. தலையவிழ். § காணியம். ‖ சங்கரனும். ¶ உணர்ந்த நின். ** விண்ணுமாய். †† நன்மையினும். ‡‡ இருக்கையும். §§ தியல்வகையும். ‖‖ எவ்வகைக் கதியகத்தும்.

[அராகம்]

'தாருறு நனைசினை தழலெழில் சுழல்சுழற்
தைவகை * முகைநகு தடமலர் அசோகினை ; 1

'சீருறு கெழுதகு செழுமணி முழுதணி
அரியுளை † விலங்கரை சணிபொனின் அணையினை ; 2

'வாருறு கதிரெதிர் மரகதம் நிரைநிரை
விரிபுரி ‡ தெளிர்மதி வெருவரு குடையினை ; 3

'போருறு தகையன புயவுளர் வியலொளி
புதுமது நறவின புனைமலர் மழையினை ; 4

'பொறிகிளர் அமரர்கள் புகலிடம் எனமனு
பொலிமலி கலிவெலும் § பொருவுறும் எயிலினை ; 5

'வெறிகிளர் உருவின விரைவினின் இனிதெழ
எறிவரு தெரிதக வினிதுளர் கவரியை ; 6

'விறலுணர் பிறவியை வெருவரு முரைதரு
வியலெரி கதிரென மிடலுடை ஒளியினை ; 7
'அறிவளர் அமரர்கள் அதிபதி இவனெனக் ‖
கடலுடை இடிபட எறிவன விசையினை. 8

[அம்போதரங்கம்]

[பேரெண்]

'மன்னுயிர் காத்தலான் மறம்விட்ட அருளினோ
டின்னுயிர் உய்கென்ன இல்லறமும் இயற்றினையே ! 1
'புன்மைசால் அறம்நீக்கிப் புலவர்கள் தொழுதேத்தத்
தொன்மைசால் குணத்தினால் துறவரசாய்த் தோற்றினையே ! 2

[சிற்றெண்]

'பீடுடைய இருக்கையைநின் பெருமையே பேசாதோ? 1
'வீடுடைய நெறியைநின் மேனியே விளக்காதோ ? 2
'ஒல்லாத வாய்மையைநின் உறுபுகழே உரையாதோ ? 3
'கல்லாத அறிவுநின் கட்டுரையே காட்டாதோ ? 4

[இடையெண்]

'அறிவினால் அளவிலைநீ ; அன்பினால் அசைவிலைநீ ;
'செறிவினாற் சிறந்தனைநீ ; செம்மையாற் செழுங்கதிர்நீ ;
காட்சியாற் கடையிலைநீ ; கடஞ்சூழ்ந்த கதிர்ப்பினைநீ ;
மாட்சியால் மகிழ்வினைநீ ; மணிவரைபோல் வறவினைநீ. [1–8]

[அளவெண்]

'வலம்புரி கலந்தொருபால் ; வால்வளை ஞெமிர்ந்தொருபால் ;
'நலந்தரு கொடியொருபால் ; நலம்புணர் குணமொருபால் ;
'தீதறு திருவொருபால் ; திகழொளி மணியொருபால் ;
'போதுறும் அவரொருபால் ; புணர்கங்கை யாறொருபால் ;

பி-ம். : * சைவகை. † செறியுளை. ‡ வரிபுரி. $ கலிவெலும் ‖ இதுவெனக்.

'ஆடியின் ஒளியொருபால்; அழலெரி யதுவொருபால்;
'மூடிய முரசொருபால்; முழங்குநீர்க் கடலொருபால்:
'பொழிலொடு கயமொருபால்; பொருவறு களிறொருபால்;
'எழிலுடை ஏறொருபால்; இணையரி மானொருபால். [1-16]

[தனிச்சொல்]

எனவாங்கு,

[சுரிதகம்]

'இவைமுத லாகிய இலக்கணப் பொறிகிளர்
நவையில் காட்சி நல்லறத் தலைவ! நின்
தொல்குணம் தொடர்ந்துநின் றேத்துதும் பல்குணப்
பெருநெறி அருளியெம் பிறவியைத் தெறுவதோர்
வரமிகத் தருகுவை எனநனி
பரவுதும் பரம! நின் அடியிணை பணிந்தே.'

இஃது அராக அடி எண்சீரால் எட்டாய், அல்லா உறுப்புக் குறையாதே வந்த வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பா.

[இதுவும் அது.]

[தரவு]

'கல்லின்மேல் நாறிய கனபவளக் கொடியேய்ப்பக்
கொல்சின மதவெருமைத் தலையொதுங்கி மற்றதன்
சில்குருதி சீறடிமேற் சிலம்போடு கழல்நனைப்ப
விளங்குபொன் நெடுவரைமேல் வெய்துறுமி எழுந்தாங்குத்
துளங்காச்சீர்ப் படையோடும் தொழிலோடும் பொலிந்தோடக்
களங்கொண்டு முடியுகைத்த கலைமானேற் றூர்தியோய்!

[தாழிசை]

'பெருந்தகைமை பிறக்கொழியப் பிடிக்கோடும் களிறேபோல்
அருஞ்சமத்து நினக்குடைந்த அவுணரை நினைக்குங்காற்
கரும்புருவ நுதல்வியர்ப்பக் கச்சினுல் விசித்தநின்
மருங்குல தளவெண்ணின் மாயமும் போலுமே! 1

'பேழ்வாய விறற்கூளி பின்னார்ப்ப முன்சென்று
வீழ்வாயா நீயெறிந்த வீரரை நினைக்குங்காற்
கேழ்கிளர் விரன்முன்கைக் கிளியிருப்ப எடுக்கில்லா
மாழைமை காணுங்கால் மம்மரும் போலுமே! 2

'வாளுறழ் உயர்விசும்பின் வாய்மடித்து விரற் சுட்டித்
தாள்சோர நினக்குடைந்த தானவரை நினைக்குங்காற்
பூளையார்ந் தெழிலெய்தப் பொறியணி புரையுநின்
தோளின தளவெண்ணிற் றேற்றரும் போலுமே!* 3

பி—ம்: * போலாரே

[தனிச்சொல்]

எனவாங்கு,

[அராகம்]

'கடிகமழ் பூங்குலைக் கலங்கிருந் துடுப்பிற்
கார்க்காந்தள் முகைவென்றன விரல்;
விரலுற விரித்தமைத்து விசும்புதை வந்து
முலையொடு முகத்தொடு தடுமாறின பந்து;
பந்தவிழ் பணிச்சென்னி கையயற் றெரீஇய
அசோகின் அந்தளிர் அணியியற்ற அணிகொண்டது நுதல்;
நுதலிவர் கதுப்புக் குதவியபொன் கலுழின மணி;
மணிமகரம் உருவாக நிகரொத்தன முத்து;
முத்துநகைக் கதிர்முன்னுக அவிர்துகிலிடைப்
பூங்கண்ணின் உனக்கு.

[அம்போதரங்கம்]

[பேரெண்]

'அரியொண்கண் அம்பிற் பிறழும்; வரியல்குல்
வண்டிருப் பன்ன தகைத்து. 1
'கூழை புறமுறத் தாழ்ந்தன; வாழை
வருமுகிழ் ஏய்க்கும் முலை. 2

[சிற்றெண்]

'பெருமட மான்பிணை வென்றது நோக்கு; 1
'சிறுமருங்குற் கொல்கின முல்லைக் கொடி. 2

[இடையெண்]

'படுமணி படுமொருகை; பைங்கிளி யதுவொருகை; 1
'வடிநுதி வேலொருகை; வாள்கொண்ட தகைத்தொருகை; 2
'சேடகத்தாற் சேடொருகை; சிலைசேர்ந்த தொழிற்றொருகை. 3

[அளவெண்]

'கோடொரு கை; 1
'இயமொரு கை. 2

[தனிச்சொல்]

எனவாங்கு,

[சுரிதகம்]

'இருபாற் பட்டநின் இணையடி பரவுதும்
ஒருபாற் பட்டெமக் கருளுவோய் எனவே.'

இஃது அகவலும் வெள்ளையும் விரவிய ஓசையால் அராகம் வந்து, பேரெண் வெண்குறளாய், சிற்றெண் இரண்டாய், இடையெண் மூன்றாய், அளவெண் இரண்டாய், இவற்றாற் சில அம்போதரங்க உறுப்புக் குறைந்து, உரிச்சீர்ச் சிறப்பில் வெண்டளையால் வந்த வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பா.

'நுழைதுகில் அகலல்குல் நுசுப்பின்கீழ்க் கலையிமைப்ப
விழைதகுபூண் முலைநெருங்க விற்கிடந்த திருநுதல்' 1

என்னும் வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பா அகவலும் வெள்ளையுமாய் அராகம் வந்து, பேரெண் குறள்வெண்பாவாய், அல்லா அம்போதரங்க உறுப்புக் குறைந்து, ஆறு உறுப்பும் உடைத்தாய் வந்தது எனக் கொள்க. அது வந்த வழிக் கண்டு கொள்க.

'அவற்றொடு முடுகியல் அடியுடை அராகம்' என்று விதப்படுக்கிச் சொல்ல வேண்டியது என்னே?

ஒருசார் ஆசிரியர், 'தலையளவு அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பாவுக்கு ஓதப்பட்ட தரவும் தாழிசையும் பெற்ற அடியளவு பெற்று, தாழிசைப் பின்னர்த் தனிநிலை பெற்றும் அதன்பின் அராக அடி நான்கு முதலாக எட்டு ஈருக, நாற்சீர் முதலாகப் பதின்மூன்று சீர் ஈருக, இடை அந்தாதித்து, இத்துணைச் சீரானும் அராக அடி பெற்று, அம்போதரங்கத்துக்கு ஓதப்பட்ட அராக அடியின்றிக் குறிலிணை பயின்ற அடி பெற்று, 'அடுக்கிசை, முடுகியல், அராகம்' என்னும் மூன்று பெயரும் பெற்று, தேவாது விழுப்பமும் வேந்தாது புகழும் வண்ணித்து வருதலின், வண்ணகம் எனப்படும்; இடை அந்தாதித் தொடையானும் வரப்பெறும்,' என்று இவ்வாற்றாற் சொன்னார்; அஃது இந்நூலுள்ளும் உடம்பட்டது என்பது அறிவித்தற்கு ஒரு தோற்றம் உணர்த்தியது.

'வண்ணகத் தியற்கை திண்ணிதிற் கிளப்பின்,
தரவொடு தாழிசை தலையள வெய்தித்
தாழிசைப் பின்னர்த் தனிநிலை எய்திப்
பேரெண்,
நேரப் பட்ட* எண்ணுடைத் தாகி
இடையெண் † வழியால் அராகவடி நான்கும்
கீழள வாகப் பேரள வெட்டாச்
சீர்வகை நான்கு முதல்பதின் மூன்று
நேரப் பட்ட இடைநடு எனைத்தும்
சீர்வகை முறைமையின் அராகம் பெற்றும்
அம்போ தரங்கத் தராகவடி இன்றி
மடக்கடி மேலே முச்சீர் எய்திக்
குறிணை பயின்ற அசைமிசை முடுகி
அடுக்கிசை முடுகியல் அராகம் என்னும்
உடைப்பெயர் மூன்றிற்கும் உரிமை எய்தி
விண்ணோர் விழுப்பமும் வேந்தரது புகழும்
வண்ணித்து வருதலின் வண்ணகம் என்ப.'
‡ 'அந்தாதித் தொடையினும் அடிநடை உடைமையும்
முந்தையோர் கண்ட முறைமை என்ப.'

என்றார் பிறை நெடுமுடிக் கறை மிடற்றோன் பெயர் மகிழ்ந்த பேராசிரியர்.

வரலாறு :

[வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பா]

[தரவு]

'சிலம்பொலிக்கும் இணையடியும் செறிகுறங்கும் பணைத்தோளும்
நலம்புகழ்தற் கரிதாய நகைமுகமும் புரிகுழலும்

---

1 இப்பாவின் முழுமையும் கிடைத்திலது.

பா—ம் : * பேரெண் ணிட்ட † சிற்றெண் ‡ அந்தத்

இலங்கிழையாற் பொலிவுற்ற எழில்நிறமும் இவைகவற்ற
அந்தணனுய் அறமொரீஇ அணியிழைநின் பணிபிழைத்து
முந்துணரான் பிரிவாற்ரு முகிலுறங்கு மணிவரைமேல்
வந்தவிழ்ந்த மலரயனுய் வரம்வேண்ட அருளியோய்!

[தாழிசை]

'போதிவரும் மலர்ப்பிண்டிப் புங்கவன்றன் அறநெறியைத்
தீதிலா வினைபெருகத்* திருநலமும் ஒருமனத்தாற்
பேதிவரும் பிறவிகளைப் பிரித்தருளு கெனவணங்கிக்
காதிவரும் மணிக்குழையாய்! கடவுளடி அடைந்தனையே! 1

'மதுவார்ந்த மலர்ப்பிண்டி மாதவன தருணெறியைக்
கதுவாய்ப்பட் டியலாமைக் கழிகாவல் மிகைபூண்டு
பொதுவாய்வண் டறைசோலைப் பொழிலணியும் சந்தத்துள்
இதுவாகும் அறநெறியென் றினிதமர்ந்த இயல்பினையே! 2

'தேனுலாம் மலர்ப்பிண்டித் தேவர்கோன் றிருந்தடியை
வானுலாம் அமரர்களும் விஞ்சையரும் வந்தேத்த
ஊனுலாம் உடம்பெய்தி உச்சந்த மால்வரைமேல்
வேனிலான் மனங்கனல விஞடகனை விரும்பினையே! 3

[தனிச்சொல்]

எனவாங்கு,

[அராகம்]

'அணிகிளர் துகிலல்குல் மணிமலி கலையினை;
பணிமொழி நினதருள் பலரிவண் அருளென மருள்குவை;
கறையறு துறவுடை இறைவன திருவடி கவவுறு காதலே;

முறையற முழுவது மலிபொருள் நிலைமையை
மலவுற வுணர்தலும் மகிழ்ந்தனை;
திருமலர் கஞலிய சிகழிகை திகழ்தரு மணிமலி மகரமும்
மறுவறு திலகமும் அணிந்தனை;
முழுமதி இதுவென முதுபுதல் மதுவிரி திருமலர் இதுவென
ஒளியினும் மணியினும் இகலிய முகத்தினை;
நகையென மினலென நளிர்சுடர் ஒளியென
வகையமை அமிழ்தென வளைகடல் மணியென
முகைவிரி மலரென முறுவலை;

குழலென அமிழ்தென நனியினி கனியென
மலியொலி மருவிய மலருறை மிஞிறென
மகிழ்தரு குயிலென மழலைய மொழியினை;
பெறலரு மரபின திருவமர் அருள்மொழி
உருவருள் உறுவர்கள் ஒழிவிலர்
விரவலின் மருளற அருளிய
அறிவன தருள்மொழி மகிழ்ந்தனை.

---

பி—ம்: * தீதகல மிசைபெருகத்

[பேரெண்]

'குரும்பையும் பொற்செப்பும் கோங்கின் அரும்பும்
விரும்பின வீங்கு முலை. 1

'முலைத்தலை நெஞ்சுணங்கு * வேங்கை மலரோ
டலைத்தன அம்பொற் பிதிர். 2

[சிற்றெண்]

அணிபுனைந்த அல்குலைநீ ; அரும்புறமும் முறுவலைநீ ;
அணிபுனைந்த அல்குலைநீ ; அரும்புறமும் முறுவலை நீ ;
காதணிந்த குழையினைநீ ; கதுப்பணிந்த கண்ணியைநீ ;
போதணிந்த குழலியைநீ ; பொருவரிய புகழினைநீ. [1–8]

[தனிச்சொல்]

அதனால்,

[சுரிதகம்]

'அருள்நெறி † பயந்த அறிவருள் அறிவன்
பொருள்நெறி புகன்ற வாய்மொழி வழாது
குணந்துறை போகிய எண்ணரும் பெருமைக்
கணந்துறை போகிய காவலன் கண்ணி
உலவுபுகழ் உரவோன் திருநகர்
நிலவி எம்மிடர் நீக்குமதி நீயே.'

இது வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பாவிற்கு ஓதப்பட்ட உறுப்புப் பிழையாது வந்தவாறு: தரவும் தாழிசையும் தலையளவு பெற்று, தாழிசைப் பின்னர் அராகம் பெறுது தனிச்சொல் இடையிட்டு வந்தவை நாற்சீர் முதலாகப் பதின்மூன்று சீர் இறுதியாக அராக அடி வருக என்னும் ஓத்தினுல் வந்து, அராகத்து இறுதிக்கண் வெண்பாவாய் பேரெண் இரண்டடியால் இரண்டு வந்து, அவை அந்தாதித் தொடையால் வந்தது இடையெண் வாராதாய், சிற்றெண் தலையளவிற்கு ஓதிய அரையடி எண் எட்டும் வந்து, தனிச் சொற் பெற்றுக் கடைக்கண் அடக்கியலுள் வண்ணித்து வந்தது.

மற்றையன இவ்வாறு செயிற்றியத்துள்ளும் அகத்தியத்துள்ளும் ஓதிய இலக்கணம் தழுவிக் கிடந்தன இல்லை என்பது.

இவ்வாறு சொன்னுர் நீர் மலிந்த வார் சடையோன் பேர் மகிழ்ந்த **பேராசிரியர்.**

இவ்வாறு வருவனவற்றை **அளவியல் வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பா** என்றும், அல்லனவற்றை **அளவழி வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பா** என்றும் வழங்குவாரும் உளர் எனக் கொள்க.

'குறில்வயின் நிரையசை கூட்டிய வாரா
தடியவட் பெறினே வண்ணக மாகும்.'

என்றுர் **அவிநயனுர்** எனக் கொள்க.

85] **கலி வெண்பா** [௩௨

தன்றளை ஓசை தழீஇயுநின் றீற்றடி
வெண்பா இயலது கலிவெண் பாவே.

'இஃது என் நுதலிற்றோ?' எனின், நிறுத்த முறையானே **கலிவெண்பா** ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

---

பி—: * செஞ்சுணங்கு † அறநெறி

இதன் பொழிப்பு: கலித்தளை தட்டுக் கலியோசை தழுவிக் கடை அடி வெண்பா இறுமாறே போல முச்சீர் அடியால் இறுவது யாது? அது கலி வெண்பா என்று வழங்கப்படும் (என்றவாறு).

'தன்றளை ஓசை தழீஇயும்' என்னும் உம்மை விதப்பினுல், ஈற்றடி கலி யோசை கொண்டு, வேற்றுத்தளை தட்டு, முச்சீரால் இறுவனவும் 'வெண் கலிப்பா' என்று வழங்கப்படும் எனக் கொள்க.

'தன்றளை ஓசை தழீஇயுநின் றீற்றடி
வெண்பாக் கலிவெண் பாவே.'

என்னுது, ஈற்றடி வெண்பா இயலது' என்று விதப்பித்த அதனுல், ஈற்றடி வெள்ளோசை கொண்டும் கொள்ளாதும் முச்சீர் அடியால் இறுவதே கொள் ளப்படும் எனக் கொள்க. என்னே?

'கலியொலி கொண்டு தன்றளை விரவா
இறுமடி வரினே வெண்கலி ஆகும்.'

என்ருர் அவிநயனுர்.

'தளைகலி தட்டன தன்சீர் வெள்ளை
களையுந இன்றிக் கடையடி குறையின்
விரவிவரல் இல்லா வெண்கலி ஆகும்.'

என்ருர் மயேச்சுரர்.

'வெண்டளை தன்றளை என்றிரு தன்மையின்
வெண்பா இயலது வெண்கலி ஆகும்.'

என்ருர் காக்கைபாடினியார்.

'வெண்கலிப்பா' எனினும், 'கலி வெண்பா' எனினும் ஒக்கும்.

வரலாறு:

[கலி வெண்பா]

'பண்கொண்ட வரிவரண்டும் பொறிக்குயிலும் பயில்வானு
விண்கொண்ட அசோகின்கீழ் விழுமியோர் பெருமானைக்
கண்ணுலும் மனத்தாலும் மொழியாலும் பயில்வார்கள்
விண்ணுளும் வேந்தரா வார்.'

இது சிறப்புடைக் கலித்தளையால் வந்த கலி வெண்பா.

'நாகிளம்பூம் பிண்டிக்கீழ் நான்முகனுய் வானிறைஞ்ச
மாகதஞ்சேர் வாய்மொழியான் மாதவர்க்கும்* அல்லார்க்கும்
தீதகல எடுத்துரைத்தான் சேவடிசென் றடைந்தார்க்கு
மாதுயரம் தீர்ப்ப தெளிது.'

இஃது உரிச்சீர் வெண்டளையால் வந்த கலி வெண்பா.

'ஏர்மலர் நறுங்கோதை எருத்தலைப்ப இறைஞ்சித்தண்
வார்மலர்த் தடங்கண்ணுள் வலைப்பட்டு வருந்தியவென்
தார்வரை அகல்மார்பன் தனிமையை அறியுங்கொல்
சீர்நிறை கொடியிடை சிறந்து!'

இது சிறப்பில் ஆசிரிய நிரைத்தளையால் வந்த கலி வெண்பா.

---

பி—ம்: * வாசவர்க்கும்

'முழங்குகுரல் முரசியம்ப * முத்திலங்கு நெடுங்குடைக்கீழ்ப் †
பொழிந்தமதக் கருஞ்சுவட்டுப் பொறிமுகத்த களிறூர்ந்து
பெருநிலம் பொதுநீக்கிப் பெயராத பெருமையாற்
பொருகழற்கால் வயமன்னர் போற்றிசைப்ப வீற்றிருப்பார்
மருள்சேர்ந்த நெறிநீக்கி வாய்மைசால் குணந்தாங்கி
அருள்சேர்ந்த அறம்புரிந்தார் அமர்ந்து.'

இது சிறப்பில் வஞ்சித் தளையால் வந்த வெண்கலிப்பா.

ஒழிந்த தளைதட்ட வெண்கலிப்பாவும் வந்த வழிக் கண்டு கொள்க.

இச்சூத்திரத்துள் 'தன்றளை ஓசை தழீஇயுநின்று' என்பது, வேண்டா. 'ஈற்றடி வெண்பா இயலது கலிவெண்பா,' என அமையும். என்னே?

'வெள்ளையுட் பிறதளை விரவா; அல்லன
எல்லாத் தளையும் மயங்கியும் வழங்கும்.' 1

என்னும் இலக்கணத்தால், வெண்பா ஒழித்து அல்லாத செய்யுட்களுள் வேற்றுத் தளை விரவும் என்பதூஉம், விரவினும் தன்றளையால் வருவது சிறப்புடைத்து என்பதூஉம் கூறப்பட்டன.

'துள்ளல் இசையன கலியே,' 2 என்னும் பொது இலக்கணத்தால், கலி எல்லாம் துள்ளல் ஓசையாலே வரும் என்பதூஉம் சொல்லப்பட்டது ஆகலின், பெயர்த்தும் 'தன்றளை ஓசை தழீஇயுநின்று' என்று கூறியது கூற வேண்டியது என்னே?

ஒருசார் ஆசிரியர், 'செப்பல் ஓசையிற் சிறிது வழுவிற்று வழுவாது என்னும் பெற்றியானும், செப்பல் ஓசையிற் சிதையாதும் ஒரு பொருண்மேல் வெள்ளடியால் வந்து வெண்பா இறுமாறே இறுவன கலி வெண்பா என்னும் சிறப்புடைய,' என்று எடுத்து ஓதினர் என்பது அறிவித்ததற்கு வேண்டப் பட்டது. என்னே?

'ஒருபொருள் நுதலிய வெள்ளடி இயலான்
திரிபின்றி வருவது ‡ கலிவெண் பாட்டே' 3

என்றார் தொல்காப்பியனார் ஆகலின்.

வரலாறு:

[கலி வெண்பா]

'சுடர்த்தொடீஇ! கேளாய்: தெருவினம் ஆடும்
மணற்சிற்றில் காலிற் சிதையா, அடைச்சிய
கோதை பரிந்து வரிப்பந்து கொண்டோடி
நோதக்க செய்யும் சிறுபட்டி, மேலோர்நாள்
அன்னையும் யானும் இருந்தேமா, 'இல்லிரே!
உண்ணுநீர் வேட்டேன்,' எனவந்தாற் கன்னை
அடர்பொற் சிரகத்தால் வாக்கிச் 'சுடரிழாய்!
உண்ணுநீர் ஊட்டிவா,' என்றாள்; எனயானும்
தன்னை அறியாது சென்றேன்;மற் றென்னை
வளைமுன்கை பற்றி நலியத் தெருமந்திட்(டு),
'அன்னாய்! இவனொருவன் செய்ததுகாண்!' என்றேனா,
அன்னை அலறிப் படர்தரத் தன்னையான்

1. யா. வி. 22, 2. யா. வி. 78 3. தொல். பொ. 465
பி—ம்: * முழவியம்ப † வெண்குடை ‡ வழுவின்றி நடப்பது.

'உண்ணுநீர் விக்கினன்,' என்றேனா, அன்னையும்
தன்னைப் புறம்பழித்து நீவ,மற் றென்னைக்
கடைக்கணாற் கொல்வான்போல் நோக்கி நகைக்கூட்டம்
செய்தானக் கள்வன் மகன்.' 1

இது வெள்ளோசை கொண்டு ஒரு பொருண்மேல் வெள்ளடியால் **வந்த கலி வெண்பா.**

வெள்ளோசையின் வழுவி வேற்றுத்தளையால் வருவனவும் வந்துழிக் கண்டு கொள்க. இதுவும் விதப்பினால் உரைத்துக் கொள்க.

'கலிவெண் பாவே' என்றவழி ஏகார விதப்பினால், வெள்ளோசையினால் வருவதனைக் '**கலி வெண்பா**' என்றும், பிறவாற்றால் வருவனவற்றை '**வெண்கலிப்பா**' என்றும் வேறுபடுத்துச் சொல்வாரும் உளர் எனக் கொள்க.

**[கட்டளைக் கலித்துறை]**

'அசையடி முன்னர் அராகம்வந் தெல்லா உறுப்புமுண்டேல்
வசையறு வண்ணக ஒத்தா ழிசைக்கலி; வான்றளைதட்
டிசைதன தாகியும் வெண்பா இயைந்துமின் பான்மொழியாய்!
விசையறு சிந்தடி யாலிறு மாய்விடின் வெண்கலியே.' 2

இவ்வியாப்பெருங்கலப் புறநடைக் காரிகையை விரித்துரைத்துக் கொள்க.

86] **கொச்சகக் கலிப்பா** [௩௩

தரவே தரவிணை தாழிசை தாமும்
சிலவும் பலவும் சிறந்து மயங்கியும்
மற்றும் விகற்பம் பலவாய் வருநவும்
கொச்சகம் என்னும் குறியின ஆகும்.

'இஃது என் நுதலிற்றோ?' எனின், **கொச்சகக் கலிப்பா** ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

**இதன் பொருள்:** தரவே தரவிணை தாழிசை தாமும் சிலவும் பலவும் சிறந்து மயங்கியும்—தரவே வந்தும், தரவு இரண்டாய் வந்தும், தாழிசை சில வந்தும், தாழிசை பல வந்தும், தரவு முதலாகிய ஆறு உறுப்பும் தம்முள் மயங்கியும் வெண்பாவினோடும் ஆசிரியத்தினோடும் மயங்கியும் வருவன எல்லாம் கொச்சகக் கலிப்பா என்றும்;

[தரவு ஒன்றே வந்தால் '**தரவு கொச்சகக் கலிப்பா**' என்றும், தரவு இரண்டாய் வந்தால் '**தரவிணைக் கொச்சகக் கலிப்பா**' என்றும், சில தாழிசையால் வந்தால் '**சிஃறாழிசைக் கொச்சகக் கலிப்பா**' என்றும், பல தாழிசையால் வந்தால் '**பஃறாழிசைக் கொச்சகக் கலிப்பா**' என்றும், தரவு முதலாகிய ஆறு உறுப்பும் தம்முள் மயங்கியும் பிற பாவினோடு மயங்கியும் வந்தால் அதனை '**மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா**' என்றும் வழங்குப.

'சொல்லின் முடிவின் அப்பொருள் முடித்தல்,' என்பது தந்திர உத்தி ஆகலின், இவ்வாறு உரைக்கப்பட்டது.

'தாமும்' என்று மிகுத்துச் சொல்லிய அதனால், 'தனிச்சொல் இடையிடையே வரவும் அமையும்; அம்போதரங்க உறுப்பும் அருகி வரும்; சுரிதகமும் அருகி வரப்பெறும்,' எனக் கொள்க.

1 கலி 51 2. யா. கா. 32

**'சிறந்து'** என்று மிகுத்துச் சொல்லிய அதனால், இவற்றின் தாழிசை ஈற்றடி குறைந்து வரவும் அமையும் எனக் கொள்க.]

மற்றும் விகற்பம் பலவாய் வருநவும் கொச்சகம் என்னும் குறியின ஆகும் —கலிக்கு ஓதப்பட்ட உறுப்பெல்லாம் குறைவின்றிக் கலியது தன்மை பெற்ற உறுப்புக்கள் மிக்கும், குறைந்தும், பிறழ்ந்தும், உறழ்ந்தும், வண்ணமும் அடியும் தொடையும் மயங்கியும், அராக அடி அந்தாதித் தொடை தொடுத்தும், அத்தொடை பலவாய் வந்தும், கலிக்கண் வாரா என்ற நேரீற்று இயற்சீர் வந்தும், நிரை நடுவாகிய வஞ்சியுரிச்சீர் வந்தும், ஐஞ்சீர் அடி வந்தும், முச்சீராலும் இரு சீராலும் அம்போதரங்க உறுப்புப் பெற்றும் இவ்வாறு ஒத்தாழிசைக் கலிப்பாக்களோடு ஒவ்வாது வருவன எல்லாம் மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா என்றும் வழங்கப்படும் (என்றவாறு).

தரவு ஒன்றாய்ச் சுரிதகம் பெற்றதனைச் **சுரிதகத் தரவு கொச்சகம்** என்றும், சுரிதகம் இல்லாததனை **இயற்றரவு கொச்சகம்** என்றும், தரவு இரட்டித்துச் சுரிதகம் பெற்று வந்ததனைச் **சுரிதகத் தரவிணைக் கொச்சகம்** என்றும், சுரிதகம் இல்லாததனை **இயற்றரவிணைச் கொச்சகம்** என்றும், ஈற்றடி குறையாது சில தாழிசையால் வந்ததனை **இயற்சிஃறாழிசைக் கொச்சகம்** என்றும், ஈற்றடி குறைந்து சில தாழிசையால் வந்ததனைக் **குறைச்சிஃறாழிசைக் கொச்சகம்** என்றும், ஈற்றடி குறையாது பல தாழிசையால் வந்ததனை **இயற்பஃறாழிசைக் கொச்சகம்** என்றும், ஈற்றடி குறைந்து பல தாழிசையால் வந்ததனைக் **குறைப் பஃறாழிசைக் கொச்சகம்** என்றும், கலிக்கு ஓதப்பட்ட உறுப்புக்களோடு மயங்கி வந்ததனை **இயல்மயங்கிசைக் கொச்சகம்** என்றும், பிற பாவினோடு மயங்கி வந்ததனை **அயல் மயங்கிசைக் கொச்சகம்** என்றும் இவ்வாறு வேறு படுத்துச் சொல்வாரும் உளர் எனக் கொள்க. என்னை?

'ஓதப் பட்ட உறுப்புவகை எல்லாம்
ஏதப் படாமைக் கலிக்கியல் பெய்தி
மிக்கும் குறைந்தும் பிறழ்ந்தும் உறழ்ந்தும்
வண்ணமும் அடியும் தொடையும் மயங்கியும்
அடக்கியல்* அந்தம் தொடுத்தன பல்கியும்
கலிவயிற் கடிந்த சீரிடை மிடைந்தும்
நாற்சீர் இறந்த சீரொடு சிவணியும்
முச்சீர் இருசீர் அம்போ தரங்கம்
அச்சீர் முடிவடி † அழிவில தழுவியும்
கொச்சகக் கலியெனக் ‡ கூறவும் படுமே.' 1

என்றார் பிறரும் எனக் கொள்க.

அவற்றை **இயல் மயங்கிசை** என்று வழங்குவர் எனக் கொள்க.

'மற்றும் விகற்பம் பலவாய் வருநவும்
கொச்சகம் என்னும் குறியின ஆகும்.'

என்பதனாலே, இப்பொருள் எல்லாம் விரித்து உரைத்துக் கொள்க.

அவற்றிற்குச் செய்யுள் வருமாறு:

**[இயற்றரவு கொச்சகக் கலிப்பா]**

**'செல்வப்போர்க் கதக்கண்ணன் செயிர்த்தெறிந்த சினவாழி
முல்லைத்தார் மறமன்னர் முடித்தலையை முருக்கிப்போய்
எல்லைநீர் வியன்கொண்மூ இடைநுழையும் மதியம்போல்
மல்லலோங் கெழில்யானை மருமம்பாய்ந் தொளித்ததே.'** 2

எனவும்,

---

1. யா. கா. 33 உரைமேற். 2. யா.வி. 15, 20, 32, 78 உரைமேற்.
பி—ம்: 1 அகேக்கியல் முடிவிடை கலிவயின்

'வெறிகொண் டலரும் பொழிலார் சிமயம்
முறிகொண் டறையும் முரல்வார் சுரும்பின்
ஒலிகொண் டதனின் னிசைபா டிவர
நலமின் புறுநா டகமா டிதிற்ப
மகமத் திசென்றந் திதொழப் படுஞ்சீர்
மிகநந் தியவிஞ் சையன்வென் றனனே.'

எனவும் இவை இயற்றரவு கொச்சகக் கலிப்பா.

[இயற்றரவிணைக் கொச்சகக் கலிப்பா]

'வார்பணிய தாமத்தால் வளைக்கையோர் வண்டோச்ச
ஊர்பணிய மதியம்போல் நெடுங்குடைக்கீழ் உலாப்போந்தான்
கூர்பணிய வேற்றானைக் கொற்கையார் கோமானே.
'அவற்கண்டு,
பூமலர் நறுங்கோதை புலம்பலைப்ப நறுங்கொண்டைத் *
தாமலர்க்கண் மடவார்க்குத் தொல்பகையே அன்றியும்
காவலற்குப் பெரியதோர் கடனாகிக் கிடவாதே.'

இது வெண்டளையால் வந்த இயற்றரவிணைக் கொச்சகக் கலிப்பா.

[சுரிதகத் தரவு கொச்சகம்]

[தரவு]

'குடநிலைத் தண்புறவிற் கோவலர் எடுத்தார்ப்பத்
தடநிலைப் பெருந்தொழுவிற் றகையேறு மரம்பாய்ந்து
வீங்குபிணிக் † கயிற்றுரீஇத் தாங்குவனத் தொன்றப்போய்க் ‡
கலையினொடு முயலிரியக் கடிமுல்லை முறுவலிப்ப

[தனிச்சொல்]

எனவாங்கு,

[சுரிதகம்]

கானொடு புல்லிப் பெரும்புதல் ¶ முனையும்
கானுடைத் தவர்சேர் சென்ற வாறே.' 1

இது சுரிதகத் தரவு கொச்சகக் கலிப்பா.

[சுரிதகத் தரவிணைக் கொச்சம்]

[தரவு]

'வடிவுடை நெடுமுடி வானவர்க்கும் ‖ வெலற்கரிய
கடிபடு நறும்பைந்தார்க் காவலர்க்கும் காவலனைக் **
கொடிபடு வரைமாடக் கோழியார் †† கோமானே!

[தனிச்சொல்]

எனவாங்கு,

[தரவு]

'துணைவளைத்தோள் இவள்மெலியத் தொன்னலம் துறப்புண்டாங்
கிணைமலர்த்தார் அருளுமேல் இதுவதற்கோர் மாறென்று
துணைமலர்த் தடங்கண்ணார் துணையாகக் கருதாரோ? 2

---

1.: யா. வி. 22 உரை மேற்.
பி—ம: * நறுங்கொண்டாற † வீங்கு மணிக் ‡ தேறப்போய்க் ¶ ஆனொடு § பெரும்புகு வானவற்கும் ** காவலனும் †† மணிமாடக் கூடலார்.

[தனிச்சொல்]

அதனால்,

[சுரிதகம்]

'செவ்வாய்ப் பேதை இவள்திறத்
தெவ்வா றாங்கொலிஃ தெண்ணிய வாறே?'

**இது** சிறப்புடை ஆசிரியத்தளையால் வந்த சுரிதகத் தாவிணைக் கொச்சகக் **கலிப்பா.**

பிற தளையாலும் வந்த வழிக் கண்டுகொள்க.

[இயற்சிஃறாழிசைக் கொச்சகம்]

[தரவு]

'பரூஉத்தடக்கை மதயானைப் பணையெருத்தின் மிசைத்தோன்றிக்
குரூஉக்கொண்ட வெண்குடைக்கீழ்க் குடைமன்னர் புடைசூழப்
படைப்பரிமான் றேரினெடும் பரந்துலவு மறுகினிடைக்
கொடித்தானை யிடைப்பொலிந்தான் கூடலார் கோமானே. 1

[தனிச்சொல்]

ஆங்கொருசார்,

[தாழிசை]

'உச்சியார்க் கிறைவனாய் உலகமெலாம் காத்தளிக்கும்
பச்சையார் மணிப்பைம்பூண் புரந்தரனாப் பாவித்தார்
வச்சிரங்கைக் காணாத காரணத்தான் மயங்கினரே; 1

[தனிச்சொல்]

ஆங்கொருசார்,

'அக்காலம் அணிநிரைகாத் தருவரையாற் பனிதவிர்த்து
வக்கிரனை வடிவழித்த மாயவனாப் பாவித்தார்
சக்கரங்கைக் காணாத காரணத்தாற் சமழ்த்தனரே; 2

[தனிச்சொல்]

ஆங்கொருசார்,

'மால்கொண்ட பகைதணிப்பான் மாத்தடிந்து மயங்காச்செங்
கோல்கொண்ட சேவலங் கொடியோனாப் பாவித்தார்
வேல்கொண்ட தின்மையால் விம்மிதராய் நின்றனரே. 3

[தனிச்சொல்]

அஃதான்று,

[சுரிதகம்]

'கொடித்தேர் அண்ணல் * கொற்கைக் கோமான்
நின்றபுகழ் † ஒருவன் செம்பூட் சேஎய்
என்றுநனி அறிந்தனர் பலரே; தானும்
ஐவருள் ஒருவனென் றறியல் ஆகா

பி—ம்: * தோன்றல் † நிறைபுகழ்.

மைவரை யானை மடங்கா வென்றி
மன்னவன் வாழியென் றேத்தத்
தென்னவன் வாழி திருவொடும் பொலிந்தே!'

இஃது இடையிடை தனிச்சொல் வந்து, நேரிசை ஒத்தாழிசைக் கலிப்பாவிற் சிறிது வேறுபட்டு, தாழிசை மூன்றேயாய், தன்றளையால் வந்த இயற்சிஃறாழிசைக் கொச்சகக் கலிப்பா.

[குறைச்சிஃறாழிசைக் கொச்சகம்]

[தரவு]

'மாயவனுய் முற்றோன்றி மணிநிறைகாத் தணிபெற்ற
ஆயநீள் குடையினராய் அரசர்கள் பலர்கூடி
மணிநின்ற மேனியாள் மதநகையைப் பெறுகுவார்
அணிநின்ற விடைகொண்டார் எனச்சொல்லி அறைந்தனரே.'

[தாழிசை]

[தனிச்சொல்]

'தானவ்வழி,

'எழுப்பற்றிச் சனந்துறுமி எவ்வழியும் இயமியம்ப
விழுக்குற்று நின்றாரும் பலர்; 1

[தனிச்சொல்]

'ஆங்கே,

'வாளுற்ற கண்ணாளை மகிழ்விப்பாம் எனக்கருதிக்
கோளுற்று நின்றாரும் பலர்; 2

[தனிச்சொல்]

'ஆண்டே,

'இத்திறத்தாற் குறையென்னை இருங்கிளைக்கும் கோடன்னப்
பற்றாது நின்றாரும் பலர்.

[தனிச்சொல்]

'அதுகண்டு,

[சுரிதகம்]

'மைவரை நிறத்துத்தன் * மாலை இயருழக்
கைவரை நில்லாது கடிதேற் றெருத்தொடிப்ப
அழுங்கினர் ஆயம் அமர்ந்தது சுற்றம்
எழுந்தது பல்சனம் ஏறுதொழு விட்டன
கோல வரிவளை தானும்
காலன் † போலும் கடிமகிழ் வோர்க்கே!'

இஃது இடையிடை தனிச்சொல் வந்து, ஈற்றடி குறைந்து வந்த மூன்று தாழிசை பெற்று வந்தமையால், குறைச்சிஃறாழிசைக் கொச்சகக் கலிப்பா, சிறப்பில் வெண்டளையால் வந்து, நாலடித்தரவாகி, இரண்டடித் தாழிசையாலும் ஆறடிச் சுரிதகத்தாலும் வந்தது எனக் கொள்க. பிற தளையாலும் வந்த வழிக் கண்டுகொள்க.

---

பி—ம்: * நாத்தன் † காலவன

[இயற்பஃறாழிசைக் கொச்சகம்]

[தரவு]

'தண்மதியேர் முகத்தாளைத் தனியிடத்து நனிகண்டாங்
குண்மதியும் உடனிறையும் உடன்றளர முன்னாட்கண்
கண்மதியோர்ப் பிவையின்றிக் காரிகையின் நிறைகவர்ந்து
பெண்மதியின் மகிழ்ந்தநின் பேரருளும் பிறிதாமோ?

[தாழிசை]

'இளநலம் இவள்வாட இரும்பொருட்குப் பிரிவாயேல்,
தளநல முகைவெண்பல் தாழ்குழல் தளர்வாளோ? 1

'தகைநலம் இவள்வாடத் தரும்பொருட்குப் பிரிவாயேல்,
வகைநலம் இவள்வாடி வருந்தியில் இருப்பாளோ? 2

'அணிநலம் இவள்வாட அரும்பொருட்குப் பிரிவாயேல்,
மணிநலம் மகிழ்மேனி மாசோடு மலிவாளோ?* 3

'நாம்பிரியோம் அணியென்று நறுநுதலைப் பிரிவாயேல்,
ஓம்பிரியோம் என்றநின் உயர்மொழியும் பழுதாமோ? 4

'குன்றளித்த திரள்தோளாய்! கொய்புனத்துக் கூடியநாள்
அன்றளித்த அருண்மொழியால் அருளியதும் அருளாமோ? 5

'சில்பகலும் ஊடியக்கால் சிலம்பொலிச்சீ றடிபரவிப்
பல்பகலும் தலையளித்த பணிமொழியும் பழுதாமோ? 6

[தனிச்சொல்]

'அதனால்,

[சுரிதகம்]

'அரும்பெறல் இவளினும் தரும்பொருள் அதனினும்
பெரும்பெறல் அரியன; வெறுக்கையும் அற்றே;
விழுமிய தறிமதி அறிவாம்
கழுமிய காதலிற் றரும்பொருள் சிறிதே.'

இது சிறப்புடைத் தன்றனையால் நாலடித் தரவும், இரண்டடித் தாழிசை ஆறும், தனிச்சொல்லும், நாலடிச் சுரிதகமும் பெற்று வந்த இயற்பஃறாழிசைக் கொச்சகக் கலிப்பா.

குறைப்பஃறாழிசைக் கொச்சகக் கலிப்பாவும் வந்த வழிக் கண்டு கொள்க.

[இயல் மயங்கிசைக் கொச்சகம்]

[தரவு]

'மணிகிளர் நெடுமுடி மாயவனும் தம்முனும்போன்
றணிகிளர் நெடுங்கடலும் கானலும் தோன்றுமால்;
நுரைநிவந் தவையன்ன நொப்பறைய சிறையன்னம்
இரைநயந் திறைகூரும் ஏமஞ்சார் துறைவ! கேள்: 1

'வரையென † மழையென மஞ்செனத் திரைபொங்கிக்
கரையெனக் கடலெனக் ‡ கடிதுவந் திசைப்பினும்,
விழுமியோர் வெகுளிபோல் வேலாழி இறக்கில்லா §
தெழுமுந்நீர் பரந்தோங்கும் ஏமஞ்சார் துறைவ! கேள்: 2

---

பா-ம்: * மடிவாளோ † மலையென ‡ கடலெனக் காற்றெனக் § இறக்கல்லா

[தாழிசை]

'கொடிபுரையும் நுழைநுசுப்பிற் குழைக்கமர்ந்த திருமுகத்தோள்
தொடிநெகிழ்ந்த தோள்கண்டும் துறவலனே என்றியால்; 1
'கண்கவர் மணிப்பைம்பூண் கயில்கவைச் சிறுபுறத்தோள்
தெண்பனிநீர் உகக்கண்டும் தெரியலனே என்றியால்; 2
'நீர்பூத்த நிரையிதழ்க்கண் நின்றுரெசிந்த புருவத்தோள்
பீர்பூத்த நுதல்கண்டும் பிரியலனே என்றியால்; 3
'கனைவரல்யாற் றிடுகரைபோற் கைந்நில்லா துண்ணெகிழ்ந்து
நினையுமென் நிலைகண்டும் நீங்கலனே என்றியால்; 4
'வீழ்சுடரில் நெய்யேபோல் விழுமநோய் பொறுக்கில்லா *
தாழுமென் நிலைகண்டும் அகல்கிலனே என்றியால்; 5
'கலங்கவிழ்ந்த நாய்கன்போற் களைதுணை பிறிதின்றிப்
புலம்புமென் நிலைகண்டும் போகலனே என்றியால். 6

[தனிச்சொல்]

'அதனால்,

[அராகம்]

'அடும்பயில் இறும்பிடை நெடும்பனை † மிசைதொறும்
கொடும்புற மடலிடை ஒடுங்கின குருகு; 1
'செறிதரு செருவிடை எறிதொழில் இளையவர்
நெறிதரு புரவியின் மறிதரும் திமில்; 2
'அரைசுடை நிரைபடை விரைசெறி முரசென
நுரைதரு திரையொடு கரைபொரும் கடல்; 3
'அலங்கொளி விரிசுடர் ‡ இலங்கெழில் மறைதொறும் §
கலந்தெறி காலொடு புலம்பின பொழில். 4

[தாழிசை]

'விடாஅது கழலுமென் வெள்வளையும் தவிர்ப்பாய்மன்;
கெடாஅது பெருகுமென் கேண்மையும் நிறுப்பாயோ? 1
'ஒல்லாது கழலுமென் ஒளிவளையும் தவிர்ப்பாய்மன்;
நில்லாது பெருகுமன் நெஞ்சமும் நிறுப்பாயோ? 2
'தாங்காது கழலுமென் தகைவளையும் தவிர்ப்பாய்மன்;
நீங்காது பெருகுமென் நெஞ்சமும் நிறுப்பாயோ? 3
'மறவாத அருளுடையேன் மனநிற்கு மாறுரையாய்;
துறவாத தமருடையேன் துயர்தீரு மாறுரையாய். 4
'காதலார் மார்பன்றிக் காமக்கு மருந்துரையாய்;
ஏதிலார் தலைசாய யானுய்யு மாறுரையாய். 5
'இணைபிரிந்தார் மார்பன்றி இன்பக்கு மருந்துரையாய்;
துணைபிரிந்த தமருடையேன் துயர்தீரு மாறுரையாய். 6

---

பி—ம்: * பொறுக்கல்லா † இறும்பி னெடும்பனை ‡ அலங்கொளி : தவிர்சுடர்
§ இலங்கொளி மலர்தோறும்

[தனிச்சொல்]

'எனவாங்கு,

[அம்போதரங்கம்]

'பகைபோன்றது துறை; 1 பரிவாயின குறி; 2
நகையிழந்தது முகம்; 3 நனிநாணிற் றுளம்; 4
தகையிழந்தது தோள்; 5 தலைசிறந்தது துயர்; 6
புகைபரந்தது மெய்; 7 பொறையாகின்றென் உயிர். 8

[தனிச்சொல்]

'அதனால்,

[சுரிதகம்]

'இனையது நிலையால் அனையது பொழுதால்
இனையல் வாழி தோழி! துனைவரல்*
பனியொடு கழிக உண்கண்;
என்னோடு கழிகவித் துன்னிய நோயே!'

இது தரவு இரட்டியது, தாழிசை ஆறும், தனிச்சொல்லும், அராகம் நான்கும், பெயர்த்தும் ஆறு தாழிசையும், தனிச்சொல்லும், எட்டு அம்போதரங்க உறுப்பும், தனிச்சொல்லும், சுரிதகமும் இவ்வாறு கலிக்கு ஓதப்பட்ட ஆறு உறுப்புமே மிக்கும் குறைந்தும் பிறழ்ந்தும் உறழ்ந்தும் மயங்கியும் வந்தமையால், இயல் மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா.

[அயல் மயங்கிசைக் கொச்சகம்]

[தரவு]

'காமர் கடும்புனல் கலந்தெம்மோ டாடுவாள்
தாமரைக்கண் புதைத்தஞ்சித் தளர்ந்ததனோ டொழுகலான்
நீணாக நறும்பைந்தார் தயங்கப்பாய்ந் தருளினாற்
பூணாகம் உறத்தழீஇப் போதந்தான் அகனகலம்
வருமுலை புணர்ந்தன என்பதனால் என்றோழி
அருமழை தரல்வேண்டின் தருகிற்கும் பெருமையளே;

[தாழிசை]

'அவனுந்தான்,
ஏனல் இதணத் தகிற்புகை உண்டியங்கும்
வானூர் மதியம் வரைசேரின் அவ்வரைத்
தேனின் இறாலென ஏணி இழைத்திருக்கும்
கானக நாடன் மகன்;
'சிறுகுடி யீரே! சிறுகுடி யீரே!
வள்ளிகீழ் வீழா, வரைமிசைத் தேன்றொடா,
கொல்லை குரல்வாங்கி ஈனா, மலைவாழ்நர்
அல்ல புரிந்தொழுக லான்;
'காந்தள் கடிகமழும் கண்வாங் கிருஞ்சிலம்பின்
வாங்கமை மென்றோள் குறவர் மடமகளிர்
தாம்பிழையார் கேள்வற் றொழுதெழலாற் றம்மையாரும்
தாம்பிழையார் தாந்தொடுத்த கோல்;

---

பி—ம்: *தொலையாப்

[தனிச்சொல்]
'எனவாங்கு,

'அறத்தொடு நின்றேனைக் கண்டு திறப்பட
என்னையர்க் குய்த்துரைத்தாள் பாய்;

'அவரும்,
தெரிகணை நோக்கிச் சிலைநோக்கிக் கண்சேந்
தொருபகல் எல்லாம் உருத்தெழுந் தாறி
இருவர்கட் குற்றமும் இல்லையால் என்று
தெருமந்து சாய்த்தார் தலை;
'தெரியிழாய்! நீயுநின் கேளும் புணர
வரையுறை தெய்வம் உவப்ப உவந்து
குரவை தழீஇயாம் ஆடக் குரவையுட்
கொண்டு நிலைபாடிக் காண்;

'நல்லாய்!
நன்னாட் டலைவரும் எல்லை நமர்மலைத்
தந்நாண்தாம் தாம்தாங்குவார் என்னோற் றனர்கொல்!
'புனவேங்கைத் தாதுறைக்கும் பொன்னறை முன்றில்
நனவிற் புணர்ச்சி நடக்குமா மன்றோ?
நனவிற் புணர்ச்சி நடக்கலும் ஆங்கே
கனவிற் புணர்ச்சி கடிதுமாம் அன்றோ?
'விண்டோய்கல் நாடனும் நீயும் வதுவையுட்
பண்டறியா தீர்போற் படர்கிற்பீர் மற்கொலோ?
பண்டறியா தீர்போற் படர்ந்தீர் பழங்கேண்மை
கண்டறியா தேன்போற் கரக்கிற்பென் மற்கொலோ?
'மைதவழ் வெற்பன் மணவணி காணாமற்
கையாற் புதைபெறூஉம் கண்களும் கண்களோ!
என்னைமன், நின்கண்ணாற் காண்பென்மன் யான்;
நெய்தல் இதழுண்கண், நின்கண்ணா கென்கண் மன:

[தனிச்சொல்]
'எனவாங்கு,
[சுரிதகம்]

'நெறியறி செறிகுறி புரிதிரி பறியா அறிவனை முந்துறீஇத்
தகைமிகு* தொகைவகை அறியும் சான்றவர் இனமாக
வேய்புரை மென்றோட் பசலையும் அம்பலும்
மாயப் புணர்ச்சியும் எல்லாம் உடனீங்கச்
சேயுயர் வெற்பனும் வந்தனன்†
போதெழில்‡ உண்கணும் பொலிகமா இனியே!'[1]

இது வெள்ளை பலவும் மயங்கி, ஆசிரிய அடியும் விரவி வந்தமையால், அயல் மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா. இதன் முதற்கண் நேரீற்று இயற்சீர் வந்தவாறு கண்டுகொள்க.

1. கலி. 39.

பி—ம்: * தகைமிகை. † புகுந்தனன். ‡ பூ வெழில்.

[மயங்கிசைக் கொச்சகம்]

[தரவு]

'நறுவேங்கைத் துறுமலர் நன்னுதலார் கொண்டணிய
உறுபாங்கர்ப் புனத்தருகர் ஒருசிறைநின் றேமாகக்
கடிகாவற் குறவர்தம் காப்பினுற் கதஞ்சிறந்திட்
டிடியோடு முழக்கிற்ருய் இருங்களிறு தோன்றலும்
அஞ்செமக்கு வந்தடைய அருளினுல் வேல்விடலை
வெஞ்சினத்தால் அதன்றிறல்வீழ்த் தெந்தடந்தோள் கவைஇக் [கோளப
பொற்பின்றி முலைபொதிர்த்த என்பதனுல் என்றேழி
கற்பினுல் உலகினுட் கருதியதே அருமே.

[அராகம்]

'அவனே,
அயன்மலைக் காவலன் காதல னமே;
'இவளே,
அதற்கொண்டும் பயப்பெய்தினளே;
'யானே,
இதற்கொண்டும் பெரும்படர் எய்தினனே;
'அதனுல்,
இதுவிதன் நிலைமையெனும் அதுவிதி யுணரா
மதுவிளும் மலரியள் உறுவனள் அலர்;
அலர்சிலர் பலரறி குறியுறு வகைகொடி
தனையிது மிகநொது மலர்வரை வதைகடன் நுமர்;
நுமர்தரு விதியென நுணுகிய விலகிடை
தமலர்பல ருடன்மகிழ் தகையின திவடகை;
தகைபெறு குழலெழில் அழல்சுழல் பழியினள்;
பழிபடர் இடரொடு பலர்
பலதுயர் செலப்புரி
புரிதெரி விலர்தமர்;
தமர்பல தகுதியொ டெமரிவர்
தகைமிகை நலவிற லதுவிதி.
'இனியே,
ஆடல் நடைப்புரவிச் செம்பூட் சேஎய்
கூடலெனக் குயின்றன தோள்;
'மறந்தரு தானைச் செங்கோற் கிள்ளி
உறந்தையிற் சிறந்தன முலை;
'மஞ்சுவரைத் திணிதோட் பூழியர் மன்னவன்
வஞ்சியென மலர்ந்தன கண்;
'இன்றே,
பொலிகநும் வினையே! பொலிகநும் வினையே!
நாணணி கொண்ட நன்னுதல் அரிவைக்கும்

பூணணி கொண்ட பொங்குவரை மார்பற்கும்
மனையி ரோதி வாழ்வொடு மல்கிய
புனையி ரோதிக்கும் பொலிகநும் வினையே!

'இவ்வகை;
வினைசெய் மாக்களும் விரும்பினர் வாழ்த்திப்
புனைநலம் எய்தின்றிப் பதியே;
நொதுமலர்க் கறைந்தன்று * முரசு;
கதுமெனக் கதிர்த்தது கடி;
மணமொடு † மகிழ்ந்தது மனை;
கண்ணொடு கழீஇயின ‡ கிளை;

[தனிச்சொல்]

'அதான்று, §

[சுரிதகம்]

'முன்னாட் களவொடு பழகிப்
பின்னாட் கற்பொடு புணர்ந்தன்றால் இதுவே.'

இதுவும், பிரிந்திசைக்குறள் அடிகளும், அந்தாதித் தொடையாகிய அராக அடிகளும், தனிச்சொற்களும் விரவி, மிக்கும் குறைந்தும் பிறழ்ந்தும் உறழ்ந்தும், இவை இடையிடை ஆசிரியங்களும் வெள்ளைகளும் மயங்கியும் வந்தமையான், மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா எனப்படும்.

பிரிந்திசைக் குறளடியாவன, இருசீர் அடியும் முச்சீர் அடியுமாய் வரும் அம்போதரங்கம் எனக் கொள்க.

பிறரும் இவற்றுக்கு இவ்வாறே இலக்கணம் சொன்னார். என்னை?

'தாவே யாகியும் இரட்டியும் தாழிசை
சிலவும் பலவும் மயங்கியும் பாவே
றொத்தா ழிசைக்கலிக் கொவ்வா உறுப்பின
கொச்சகக் கலிப்பா ஆகும் என்ப.'

என்றார் அவிநயனார்.

'தரவே தரவிணை தாழிசை சிலபல
வரன்முறை பிறழ அயற்பா மயங்கியும்
தனிச்சொற் பலவாய் இடையிடை நடந்தவும்
ஒத்தா ழிசைக்கலி உறுப்பினிற் பிறழ்ந்தவும்
வைத்தவழி முறையால் வண்ணக இறுவாய்
மயங்கி வந்தவும் இயங்குநெறி முறைமையிற்
கொச்சகக் கலியெனக் கூறினர் புலவர்.'

என்றார் காமவேளைக் கறுத்த புத்தேள் நாமம் தாங்கிய **நல்லாசிரியர்.**

'எருத்தியல் இன்றி இடைநிலை பெற்றும்,
இடைநிலை இன்றி எருத்துடைத் தாயும்,
எருத்தம் இரட்டித் திடைநிலை பெற்றும்,
இடைய திரட்டித் தெருத்துடைத் தாயும்,
இடையும் எருத்தும் இரட்டுற வந்தும்,

---

பி—ம்: * கரைந்தன்று. † மனனொடு. ‡ கெழீஇயின. § அ: தான்று

எருத்தம் இரட்டித் திடைநிலே ஆறும்
அடக்கியல் காறும் அமைந்த உறுப்புக்
கிடக்கை முறைமையிற் கிழமைய தாயும்,
தரவொடு தாழிசை அம்போ தரங்கம்
முடுகியல் போக்கியல் என்றிவை எல்லாம்
முறைதடு மாற மொழிந்தவை யின்றி
இடைநிலே வெண்பாச் சிலபல சேர்ந்தும்
மற்றும் பிறபிற ஒப்புறுப் பில்லன
கொச்சகம் என்னும் குறியின ஆகும்.'

என்றுர் **காக்கைபாடினியார்.**

இனி ஒரு சார்க் கொச்சகங்களே 'ஒருபோகு' என்று வழங்குவாரும் உளர்.

**மயேச்சுரரா**ற் சொல்லப்பட்ட அம்போதரங்கமும் வண்ணகமும் என்றிரண்டு தேவ பாணியும் திரிந்து, தரவு ஒழிந்து அல்லா உறுப்புப்பெறினும், தாழிசை ஒழித்து அல்லா உறுப்புப் பெறினும், அம்போதரங்கத்துள் ஓதப் பட்ட மூவகை எண்ணும் நீங்கினும், வண்ணகத்துக்கு ஓதப்பட்ட இரு வகை எண்ணும் நீங்கினும், நீங்கிய உறுப்பு ஒழியத் தனிச்சொல்லும் சுரிதகமும் பெற்று வருவன '**ஒரு போகு**' எனப்படும்.

அவை அம்போதரங்க உறுப்புத் தழீஇயின '**அம்போதரங்க ஒரு போகு**' எனவும், வண்ணக உறுப்புத் தழீஇயின '**வண்ணக ஒரு போகு**' எனவும் படும். என்னே ?

'கூறிய உறுப்பிற் குறைபா டின்றித்
தேறிய இரண்டு தேவ பாணியும்
தரவே குறையினும் தாழிசை ஒழியினும்
இருவகை முத்திறத் தெண்ணே நீங்கினும்
ஒருபோ கென்ப உணர்ந்திசி னேரே.'

என்றுர் **மயேச்சுரர்.**

வரலாறு :

[அம்போதரங்க ஒரு போகு]

[**தாழிசை**]

'கரைபொருநீர்க் கடல்கலங்கக் கருவரைமத் ததுவாகத்
திரைபொருது புடைபெயரத் திண்டோளாற் கடைந்தனையே ; 1
'முகில்பொரு துடல்கலங்க முழவுத்தோள் புடைபெயர
அகல்விசும்பின் அமரர்க்கும் ஆரமுதம் படைத்தனையே ; 2
'வரைபெரிய மத்தாக வாளரவம் கயிறுகத்
திரையிரியக் கடல்கடைந்து திருமகளேப் படைத்தனையே. 3

[அராகம்]

[பேரெண்]

'அமரரை அமரிடை அமருல கதுவிட
நுமரது புகழ்மிக மிகவிகல் அடுத்தனே ; 1
'அலேகடல் உலகமும் அந்தணர்க் கீந்தனே,
உலகொடு நிலவிய ஒருபுகழ் சுமந்தனே. 2

[இடையெண்]

'ஆதிக்கண் அரசெய்தினை ; 1

'நீதிக்கண் மதிநிரம்பினை ; 2

'விளங்கெரி முதல்வேட்டனை ; 3

'துளங்கெரியவர் புகழ்துளக்கினை. 4

[அளவெண்]

'அலகு நீ ; 1 உலகு நீ ; 2 அருளு நீ ; 3 பொருளு நீ ; 4
நிலவு நீ ; 5 வெயிலு நீ ; 6 நிழலு நீ ; 7 நீரு நீ ; 8

[தனிச்சொல்]

'எனவாங்கு,

[சுரிதகம்]

'பவழம் எறிதிரைப் பரதைக் கோவே !
புகழ்துறை நிறைந்த பொருவேல் நந்தி !
உலகுடன் அளந்தனை நீயே ;
உலகொடு நிலவுமதி உதயவரை ஒத்தே.'

இஃது அம்போதரங்க ஒரு போகு.

பிறவும் அம்போதரங்க உறுப்புப் பெற்று வந்த அம்போதரங்க ஒரு போகு, வந்த வழிக் கண்டு கொள்க.

வண்ணக உறுப்புப் பெற்று வந்தன எல்லாம் வண்ணக ஒரு போகு. அவை வருமாறு :

[வண்ணக ஒரு போகு]

[அராகம்]

'அகலிடமும் அமருலகும் அமர்பொருதும் அறந்தோற்றுப்
புகலிடநின் குடைநிழலாப் புகுமாணம் பிறிதின்றி
மறந்தோற்று நிறங்கருகி மாற்புகழும் நிறைதளரப்
புறந்தோற்றுக் கழலார்ப்பப் பொருதகளம் வெறிதாக
மண்ணுலகும் மறிகடலும் மாமலையும் நிலைகலங்க
விண்ணுலகம் வியப்பெய்த வெஞ்சமத்துள் அலைத்தனையே ;
அதனால்,
கனைகடல் உடைதிரை கரைபொரக் கடைந்தனை ;
முனைவரும் அமரரும் முறைமுறை வந்துநின்
இணைமலர் பலர்புகழ் பயில்வதொர் பண்பினை ;
மருளுறு துதைகதிர் மணியது
மணிநிற மருளும் நின்குடை ;
குடையது குளிர்நிழல் அடைகுன
உயிர்களை அளிக்கும் நின்கோல் ;
கோலது செம்மையிற் குரைகடல் வளாகம்
மாலையும் காலையும் மகிழ்தூங் கின்று.

[பேரெண்]

'ஆருயிர்க் கெல்லாம் அமிழ்தின் றமையா
நீரினும் இனிதுநின் அருள் ; 1
'அருளும் அலைகடலும் ஆயிரண்டும் ஒக்கும்
இருள்கொடிமேற் கொண்டாய் நினக்கு. 2

[சிற்றெண்]

'நீரகலம் காத்தோய்நீ; நிலவுலகம் ஈந்தோய்நீ;
போரமர் கடந்தோய்நீ; புனையெரிமுன் வேட்டோய்நீ;
ஒற்றைவெண் குடையோய்நீ; கொற்றச்செங் கோலோய்நீ:
பாகையந் துறைவனீ; பரியவர் இறைவனீ.

[தனிச்சொல்]

'எனவாங்கு,

[சுரிதகம்]

"பொருகடல் வளாகம் ஒருகுடை நிழற்றி
இருபிறப் பாளர்க் கிருநிதி ஈந்து
மனமகிழ்ந்
தருள்புரி பெரும்புகழ் அச்சுதர் கோவே
இனையை ஆதலின் பனிமதி தவழும்
நந்தி மாமலைச் சிலம்ப
நந்திநிற் பரவுதல் நாவலர்க் கரிதே!'

இது வண்ணக ஒரு போகு.

பிறவும் வண்ணக உறுப்பும் பெற்று வந்த வண்ணக ஒரு போகு, வந்த வழிக் கண்டு கொள்க. என்னை?

'தரவின் றாகித் தாழிசை பெற்றும்,
தாழிசை இன்றித் தரவுடைத் தாகியும்,
எண்ணிடை யிட்டுச் சின்னம் குன்றியும்,
அடக்கியல் இன்றி அடிநிமிர்ந் தொழுகியும்,
யாப்பினும் பொருளினும் வேற்றுமை உடையது
கொச்சக ஒருபோ காகும் என்ப.' 1

என்றார் தொல்காப்பியனார். அவையெல்லாம் வந்த வழிக் கண்டுகொள்க.

இவையெல்லாம்,

'மற்றும் விகற்பம் பலவாய் வருநவும்
கொச்சகம் என்னும் குறியின ஆகும்.'

என்பதனால் உரைத்துக்கொள்க.

நேரிசை ஒத்தாழிசைக் கலிப்பா, அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பா, வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பா, கலி வெண்பா, தரவு கொச்சகக் கலிப்பா, தரவிணைக் கொச்சகக் கலிப்பா, சிஃறாழிசைக் கொச்சகக் கலிப்பா, பஃறாழிசைக் கொச்சகக் கலிப்பா, மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா என்னும் ஒன்பது கலிப்பாவும்; வெள்ளைச் சுரிதக நேரிசை ஒத்தாழிசைக் கலிப்பா, அகவற் சுரிதக நேரிசை ஒத்தாழிசைக் கலிப்பா, அளவியல் அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பா, அளவழி அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பா, அளவியல் வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பா, அளவழி வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பா, கலி வெண்பா, வெண் கலிப்பா, இயற்றரவு கொச்சகக் கலிப்பா, சுரிதகத் தரவு கொச்சகக் கலிப்பா, இயற்றரவிணைக் கொச்சகக் கலிப்பா, சுரிதகத் தரவிணைக் கொச்சகக் கலிப்பா, இயற்சிஃறாழிசைக் கொச்சகக் கலிப்பா, குறைச்சிஃறாழிசைக் கொச்சகக் கலிப்பா, இயற்பஃறாழிசைக் கொச்சகக் கலிப்பா, குறைப்பஃறாழிசைக் கொச்சகக் கலிப்பா, இயல் மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா, அயல் மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா என இவ்வாறு விகற்பிக்கப் பதினெட்டாம்.

---

1. தொல். பொ. 461

அவை மூன்று துள்ளல் ஓசையானும் உறழ, ஐம்பத்து நான்காம்.

பதினெட்டுக் கலியினையும், ஆசிரிய நேர்த்தளை இரண்டும் **ஒழித்து,** அல்லாத பன்னிரு தளையானும் கூறுபடுப்ப, இருநூற்று **ஒருபத்தாறும்;** ஓசையும் தளையும் கூட்டி உறழ, அறுநூற்று நாற்பத்தெட்டாம். **ஒத்தாழிசைக் கலிப்பா ஒழித்து,** அல்லாக் கலியுள் ஆசிரிய நேர்த்தளை இரண்டும் அருகி **வரம்** பெறும் என அவற்றோடும் கூட்டி உரைக்குங்கால், **எழுநூற்றிருபது** கலிப்பாவாம்; பிற வகையாலும் விகற்பிக்கப் பலவுமாம். என்னை?

[நேரிசை வெண்பா]

'ஒத்தா ழிசைக்கலியென் றோதிய ஆறினையும்
முத்திறத் தோசையால் முன்முரணி—வைத்து
வழுவற்ற ஆறிரண்டு வான்றளையால் மாற
எழுமுப்பத் தாறும் எனல்.' 1

'கொச்சகம் ஈரைந்தும் வெண்கலி ஓரிரண்டும்
வைத்திசையோர் மூன்றினால் மாறியபின்—மற்றவற்றை
மாசில் பதினன்கு வான்றளையால் மாறவாம்
ஆசில்கலிக் கைஞ்ஞூற்று * நான்கு.' 2

என்றார் ஆகலின்.

'நான்கு முதலாக நாலைந் தெழுத்தளவும்
ஆன்ற அகவல் அடிக்கெழுத்தாம்—மூன்றுடைய
பத்தாதி யாகப் பதிற்றிரட்டி ஈறாக
வைத்தார் முரற்கைக் கெழுத்து.' 3

'ஏதம் தழுவா திசைசேர்ந் திருநான்கு
நீதி நலஞ்சேர்ந்து நிற்றலால்—ஓதிய
மூன்றாங் கிடக்கை முறைமை முரற்கைக்கு
மூன்றாங் குலம்வகுத்தார் முன்.'

வணிகர்க்கு எண்ணிலமாவன:

'தனிமை ஆற்றல், † முனிவிலன் ஆதல்,
இடத்துத் தெருமரல், ‡ பொழுதொடு புணர்தல்,
உறுவது தெரிதல், இறுவதஞ் சாமை,
வகுத்தல், ஈட்டல், வாணிகன் துறையே.' § 4

இவற்றை விரித்து உரைத்துக்கொள்க.

[கட்டளைக் கலித்துறை]

'தரவே தரவிணை தாழிசை தாமும் சிலபலவாய்
மரபே பயின்றும் மயங்கியும் வந்தன வாங்கமைத்தோள்
அரவேர் அகலல்குல் அம்பேர் நெடுங்கண்வம் பேறுகொங்கைக்
குரவே கமழ்குழ லாய்! கொண்ட வான்பெயர் கொச்சகமே.' 5

இவ்வியாப்பருங்கலப் புறநடையை விரித்து உரைத்துக்கொள்க.

---

1. 2. யா: வி: 81 உரைமேற்; 3: யா. வி. 74 உரைமேற். 4. திவா. 12:126
5. யா. கா. 33.

பி—ம்: * ஆசிகந்த ஐஞ்ஞாற்று † தனிமையன் ஆதல் ‡இடனறிந் தொழுகல் † வகுத்தல் ஈட்டல் என்றிவை எட்டும், வாட்டம் இல்லா வணிகர தியற்குணம்.

87] [நுச

கலித்தாழிசை

அடியெனைத் தாகியும் ஒத்துவந் தளவினிற்
கடையடி மிகுவது கலித்தா ழிசையே.

'இஃது என் நுதலிற்றோ?' எனின், கலிப்பா ஆமாறு உணர்த்திக் கலிப்பாவின் இனம் ஆமாறு உணர்த்துவான் எடுத்துக்கொண்டார்; இச் சூத்திரம், கலிப்பாவின் இனத்தினுள் 'தாழிசை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

**இதன் பொழிப்பு:** அடி சிலவாயும் பலவாயும் வந்து, தத்தமில் ஒத்து, ஈற்றடிக்கு மிக்கு வருவன எல்லாம் '**கலியொத்தாழிசை**' என்றும் '**கலித் தாழிசை**' என்றும் வழங்கப்படும் (என்றவாறு).

'அடியெனைத் தாகியும் ஒத்துக் கடையடி மிகுவது கலித்தா ழிசையே,' என்னாது, 'வந்து' என்றும், அளவினில்' என்றும் மிகுத்துச் சொல்ல வேண்டியது என்னை?

'**வந்து**' என்று மிகுத்துச் சொல்லியதாவது, இரண்டடியினவாய் ஈற்றடி மிக்கு வருவனவும், ஈற்றடி மிக்கு ஏனையடி தம்முள் ஒவ்வாது அருகி வருவனவும் உள ஒருசார்த் தாழிசை என்பது அறிவித்தற்கு எனக் கொள்க.

'**அளவினில்**' என்று மிகுத்துச் சொல்லிய அதனால், ஒரு பொருண்மேல் மூன்றாய் வருவனவற்றைக் '**கலியொத்தாழிசை**' என்றும், ஒன்றாயும் இரண்டாயும் மூன்றின் மிக்கும் மூன்றாய்ப் பொருள் வேறாயும் வருவனவற்றைக் '**கலித்தாழிசை**' என்றும் பெயர் வேறுபடுத்துச் சொல்லுவாரும் உளர் ஒரு சார் ஆசிரியர் என்பது அறிவித்தற்கு எனக் கொள்க.

'கலித்தாழிசையே' என்று ஏகார விதப்புச் சொல்ல வேண்டியது என்னை?

ஈற்றடி மிக்கு ஏனையடி ஒத்து வருவனவற்றை எல்லாம் '**சிறப்புடைக் கலித்தாழிசை**' என்றும், ஒவ்வாது வருவனவற்றைச் '**சிறப்பில் கலித்தாழிசை**' என்றும், ஈரடியானும் ஈற்றடி மிக்கு வருவனவும் '**சிறப்பில் கலித்தாழிசை**' என்றும் சொல்லுவர் ஒருசார் ஆசிரியர் என்பது அறிவித்ததற்கு வேண்டப் பட்டது எனக் கொள்க.

வரலாறு:

[கலியொத்தாழிசை]

'**கொய்தினை** காத்தும் குளவி அடுக்கத்தெம்
பொய்தற் சிறுகுடி* வாரல்நீ ஐய! நலம்வேண்டின்; 1
'**ஆய்தினை** காத்தும் அருவி அடுக்கத்தெம்
ஆசில் சிறுகுடி* வாரல்நீ ஐய! நலம்வேண்டின்; 2
'**மென்றினை** காத்தும் மிகுபூங் கமழ்சோலைக்
குன்றச் சிறுகுடி* வாரல்நீ ஐய! நலம்வேண்டின். 3

இவை இரண்டடியாய், ஈற்றடி மிக்கு, ஒரு பொருண்மேல் மூன்றடுக்கி வந்தமையால், கலியொத்தாழிசை எனப்படும்.

[சிறப்புடைக் கலித்தாழிசை]

'**வாள்வரி** வேங்கை வழங்கும் சிறுநெறியெம்
**கேள்வரும் போழ்தின் எழால்வாழி வெண்டிங்காள்!**
கேள்வரும் போழ்தின் எழாதாய்க் குறாலியரோ
நீள்வரி நாகத் தெயிறே வாழி வெண்டிங்காள்!'

இஃது ஒரு பொருண்மேல் ஒன்றாய், ஈற்றடி மிக்கு, ஏனையடி தம்முள் ஒத்து வந்தமையால், சிறப்புடைக் கலித்தாழிசை எனப்படும்.

---

பி—ம்: * சிறுகுடில்

[சிறப்பில் கலித்தாழிசை]

'நிலமகள் கேள்வனும் நேர்கழலி னானும்
நலமிகு கச்சியார் கோவென்பவே;
நலமிகு கச்சியார் கோவாயி னானும்
சிலைமிகு தோட்சிங்கன் அவனென்பவே;
செருவிடை யானை அவனென்பவே.'

எனவும்,

'பூண்ட பறையறையப் பூதம் மருள
நீண்ட சடையான ஆடுமே;
நீண்ட சடையான் ஆடும் என்ப
மாண்ட சாயல் மலைமகள் காணவே காணவே.'

எனவும் இவை ஒரு பொருண்மேல் ஒன்றாய், ஈற்றடி மிக்கு, இரண்டாமடி குறைந்து, ஏனையடி இரண்டும் ஒத்து வந்த சிறப்பில் கலித்தாழிசை.

பிறவும் வந்த வழிக் கண்டுகொள்க.

'கலியொத்தாழிசை, கலித்தாழிசை என்று வேறுபடாதே அவற்றை கலித்தாழிசை என்று வழங்கவும் அமையும்.

இவற்றை எல்லாம் விகற்பித்து, 'சிறப்புடைக் கலியொத்தாழிசை, சிறப்பில் கலியொத்தாழிசை, சிறப்புடைக் கலித்தாழிசை, சிறப்பில் கலித்தாழிசை, என்று கூறுபடுப்ப, நான்காம். அவை சிறபபுடைத் தளையானும், சிறப்பில் தளையானும் கூறுபடுத்து நோக்க, ஐம்பத்தாறும். அவை எல்லாம் வந்தவழிக் கண்டுகொள்க.

'அந்தடி மிக்குப் பலசில வாயடி
தந்தமில் ஒன்றிய தாழிசை ஆகும்.'

என்றார் **காக்கைபாடினியார்.**

'அந்த அடிமிக் கல்லா அடியே
தந்தமுள் ஒப்பன கலித்தா ழிசையே.'

என்றார் **சிறுகாக்கைபாடினியார்.**

'ஈற்றடி மிக்கள வொத்தன வாகிப்
பலவும் சிலவும் அடியாய் வரினே
கலிப்பா இனத்துத் தாழிசை ஆகும்.'

என்றார் **அவிநயனார்.**

'அடிபல வாகியும் கடையடி சீர்மிகிற்
கடிவரை யில்லைக் கலித்தா ழிசையே.'

என்றார் காமவேளைக் கறுத்த புத்தேள் நாமம் தாங்கிய **நல்லாசிரியர்.**

88] [

## கலித்துறை

நெடிலடி நான்காய் நிகழ்வது கலித்துறை.

'இஃது என் நுதலிற்றோ?' எனின், கலித்துறை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

**இதன் பொழிப்பு:** **ஐஞ்சீர் அடி நான்காய் நடப்பது கலித்துறை எனப்படும் (என்றவாறு).**

'நெடிலடி நான்காயது கலித்துறை' என்னாது, நிகழ்வது' என்று மிகுத்துச் சொல்ல வேண்டியது என்னை?

அடி மறியாய் ஐஞ்சீர் நாலடியால் வருவனவற்றை '**கலி மண்டிலத்துறை**' என்றும், அடி மறி ஆகாதே ஐஞ்சீர் நாலடியால் வருவனவற்றைக் '**கலி நிலைத்துறை**' என்றும் வழங்கப்படும் என்பது அறிவித்தற்கு வேண்டப் பட்டது.

அவை வருமாறு:

[கலி மண்டிலத் துறை]

'மிக்க மாதவம் வீட்டுல கடைதலை விளக்கும்;
தக்க தானங்கள் தணப்பரும் போகத்தைப் பிணிக்கும்;
தொக்க சீலங்கள் ஏச்சமில் துறக்கத்தைப் பயக்கும்;
சிக்கென் பூசனை திகழொளிப் பிழம்பினைத் திருத்தும்.'

இஃது அடிதோறும் பொருள் முடிந்து, அடி மறியாய், ஐஞ்சீர் அடியான் வந்தமையால், **கலி மண்டிலத் துறை** எனப்படும.

[கலி நிலைத் துறை]

'யானும் தோழியும் ஆயமும் ஆடும் துறைநண்ணித்
தானும் தேரும் பாகனும் வந்தென் நலனுண்டான்,
தேனும் பாலும் போல்வன சொல்லிப் பிரிவானேல்
கானும் புள்ளும் கைதையும் எல்லாம் கரியன்றே?' 1

இஃது அடி மறி ஆகாதே ஐஞ்சீர் அடியான் வந்தமையால், **கலி நிலைத் துறை** எனப்படும்.

பிறவும் வந்த வழிக் கண்டுக்கொள்க.

இவை பதினறு தளையாற் கூறுபடுத்து நோக்க, இருபத்தெட்டுத் துறையாம் போலும் எனக் கொள்க.

'ஐஞ்சீர் முடிவின் அடித்தொகை நான்மையொ
டெஞ்சா மொழிந்தன எல்லாம் கலித்துறை.'

என்றார் **காக்கைபாடினியார்.**

'ஐஞ்சீர் நான்கடி கலித்துறை ஆகும்.'

என்றார் **அவிநயனார்.**

89] [கலி விருத்தம்] [௩௬

அளவடி நான்கின் கலிவிருத் தம்மே.

'இஃது என நுதலிற்றோ?' எனின், கலி விருத்தம் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

**இதன் பொழிப்பு:** நாற்சீரால் ஆகிய நான்கடி உடையன எல்லாம் கலி விருத்தம் எனப்படும் (என்றவாறு).

'அளவடி நான்கின கலிவிருத் தம்மே.'

என்றவழி ஏகார விதப்பினால், அடி மறியாய், நாற்சீர் நாலடியால் வருவன **கலி மண்டில விருத்தம்** என்றும்; அடி மறி ஆகாதே நாற்சீர் நாலடியால் வருவன **கலி நிலை விருத்தம்** என்றும் வழங்கப்படும் எனக் கொள்க.

1. யா. வி. 28, 95 உரைமேற்.

வரலாறு:

[கலி மண்டில விருத்தம்]

'இந்திரர்கள் ஏத்துமடி ஈண்டுயிர்கள் ஓம்புமடி;
வெந்திறல் ஞாயிற்றெழில் வீவிலொளி வெல்லுமடி;
மந்திரத்தின் ஓதுமடி மாதுயரம் தீர்க்குமடி;
அந்தரத்தின் ஆயவிதழ்த் தாமரையி னங்கணடி.'

இஃது அடி மறியாய் நிற்றலின், **கலி மண்டில விருத்தம்** என்று வழங்கப்படும் எனக் கொள்க.

[கலி நிலை விருத்தம்]

'விரிகதிர் மதிமுக மடநடை கணவனொ
டரியுறு கொழுநிழல் அசையின பொழுதினில்
எரிதரு தளிர்சினை இதழ்மிசை உறைவோன்
தரவிலன் எனின்மனம் உரைமினம் எனவே.'

இஃது அடி மறி ஆகாதே நின்றவாறே நின்று பொருள்பயத்தலின், **கலி நிலை விருத்தம்** என்று வழங்கப்படும்.

இவை பதினாறு தளையாற் கூறுபடுத்து நோக்க, இருபத்தெட்டு விருத்தமாம். அவை எல்லாம் வந்த வழிக் கண்டுகொள்க.

'அளவடி நான்கின' என்று பன்மை சொல்லிய அதனால், கலி ஒலி வழுவாது நாற்சீர் நாலடியான் வருவன எல்லாம் **தரவு கொச்சகக் கலிப்பா** என்று வழங்கப்படும் எனக் கொள்க.

வரலாறு:

'செல்வப்போர்க் கதக்கண்ணன்' [1] என்பது கலித்தளையான் வந்தது.

'நாற்சீர் நாலடி வருவ தாயின்
ஒலியின் இயைந்த கலிவிருத் தம்மே.'

என்றார் **அவிநயனார்.**

'ஐஞ்சீர் நாற்சீர் அடிநான் காயின்
எஞ்சாக் கலியின் துறையும் விருத்தமும்.'

என்றார் **மயேச்சுரர்.**

'நாலொரு சீரால் நடந்த அடித்தொகை
ஈரிரண் டாகி இயன்றவை யாவும்
காரிகை சான்ற கலிவிருத் தம்மே.'

என்றார் **காக்கைபாடினியார்.**

'நாற்சீர் நாலடி கலிவிருத் தம்மே.'

என்றார் **சிறுகாக்கைபாடினியார்.**

கலிக்கு இனமாகிய 'தாழிசை, துறை, விருத்தம்' என்னும் மூன்றினுள்ளும் ஒரு பொருண் மேல் மூன்றாய் வரும் தாழிசையை ஒருபுடை ஒப்புமை நோக்கி, ஒரு பொருண்மேல் மூன்றாய் வரும் தாழிசையைச் சிறப்புறுப்பாக உடைய ஒத்தாழிசைக் கலிப்பாவின் இனம் என்றும்; ஒரு பொருண் மேல் ஒன்றாயும், இரண்டாயும், மூன்றின் மிக்கும் வரும் தாழிசையை மிக்கும் குறைந்தும் கிடத்தல் என்னும் ஒப்புமை நோக்கி, கொச்சகக் கலிப்பாவின் இனம் என்றும்; ஐஞ்சீர் அடி கொச்சகத்துள் அருகி வரும் ஆகலின்,

---

[1] யா. வி. 15, 20, 32, 78, 86, உரைமேற்.

அவ்வொப்புமையால் கலித்துறையையும் கொச்சகக் கலிப்பாவின் இனம் என்றும்; விருத்தம் நாற்சீர் நாலடியால் வருதலின், கலி வெண்பாவின் இனம் என்றும் அவற்றுல் ஒரு புடை ஒப்புமை நோக்கிப் பாச்சார்த்தி வழங்கப்படும் எனக் கொள்க.

[கட்டளைக் கலித்துறை]

> 'அடிவரை யின்றி அளவொத்தும் அந்தடி நீண்டிசைப்பின்
> கடிதலில் லாக்கலித் தாழிசை யாகும்; கலித்துறையே
> நெடிலடி நான்காய் நிகழ்வது; நேரடி ஈரிரண்டாய்
> விடின்து வாகும் விருத்தம் திருத்தகு மெல்லியலே!' 1

இவ்வியாப்பருங்கலப் புறநடையை விரித்து உரைத்துக் கொள்க.

**கலிப்பாவும் அதன் இனமும்**
**முடிந்தன.**

---

1. யா. கா. 34

'தூங்கல் இசையன வஞ்சி ; மற்றவை
ஆய்ந்த தனிச்சொலோ டகவலின் இறுமே.

'இஃது என் நுதலிற்றோ?' எனின், நிறுத்த முறையானே வஞ்சிப்பாவிற்கு ஓசையும் ஈறும் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொழிப்பு: தூங்கல் ஓசையைத் தமக்கு ஓசையாக உடையன வஞ்சிப்பாக்கள். அவை, தனிச்சொல்லோடு புணர்ந்து, ஆசிரியச் சுரிதகத்தால் இறும் (என்றவாறு).

'தூங்கல் இசையன வஞ்சி ;
ஆய்ந்த தனிச்சொலோ டகவலின் இறுமே.'

என்றாலும் கருதிய பொருளைப் பயக்கும் ; 'மற்றவை' என்று மிகுத்துச் சொல்ல வேண்டியது என்னை ?

'ஏந்திசைத் தூங்கலும், அகவற் றூங்கலும், பிரிந்திசைத் தூங்கலும் என மூன்று வகைப்படும் தூங்கல் ஓசை,' என்பது அறிவித்தற்கு வேண்டப் பட்டது.

இரண்டு வஞ்சிப்பாவினையும் பதினான்கு தளையானும் உறழ, இருபத் தெட்டாம் ; ஓசையும் தளையும் கூட்டி உறழ, எண்பத்து நான்காம் எனக் கொள்க.

'தூங்கல் இசையன வஞ்சி ; மற்றவை
தனிச்சொலோ டகவலின் இறுமே.'

என்னாது, 'ஆய்ந்த' என்று மிகுத்துச் சொல்லியது, ஒரு சாரார் வேற்றடி விரவாத வஞ்சிப்பாக்களை இன்னியல் வஞ்சிப்பா எனவும், வேற்றடி விரவி வந்த வஞ்சிப்பாக்களை விரவியல் வஞ்சிப்பா எனவும் வேண்டுவர் என்பது அறிவித்தற்கு வேண்டப்பட்டது.

இவ்விரண்டு வஞ்சிப்பாவினையும் இவ்விரு பெயரானும் கூறுபடுப்ப, நான்காம் ; இன்னியற் குறளடி வஞ்சிப்பா, விரவியற் குறளடி வஞ்சிப்பா, இன்னியற் சிந்தடி வஞ்சிப்பா, விரவியற் சிந்தடி வஞ்சிப்பா என. இவை மூன்று தூங்கல் ஓசையானும் உறழ, பன்னிரண்டாம். அவை பதினாறு தளையாலும் கூறுபடுப்ப, ஐம்பத்தாறும் ; ஓசையும் தளையும் கூட்டி உறழ, நூற்றறுபத்தொட்டாம் ; பிறவகையாலும் விகற்பிக்கப் பலவுமாம் எனக் கொள்க.

அவற்றிற்குச் செய்யுள் வருமாறு :

[குறளடி வஞ்சிப்பா]

'பார்பரவிய பருவரைத்தாய்க்
கார்கவினிய கதழொளியாய்
நீர்மல்கிய நீண்மலரவாய்த்
திறமல்கிய தேனினமுமாய்,
'அதனால்,
'மொய்மலர் துவன்றிய தேம்பாய்
மலரடி இணையை வைத்தவா மனனே !'

என்பது, ஏந்திசைத் தூங்கல் ஓசையான் வந்த குறளடி வஞ்சிப்பா.

'பூந்தாமரைப் போதலமரத்
தேம்புனலிடை மீன்றிரிதர *
வளவயலிடைக் களவயின்மகிழ்
வினைக்கம்பலை மனைச்சிலம்பவும்
மனைச்சிலம்பிய மணமுரசொலி
வயற்கம்பலைக் கயலார்ப்பவும்
'நாளும்,
'மகிழும் மகிழ்தூங் கூரன்
புகழ்தல் ஆனுப் பெருவண் மையனே.' 1

என்பது, ஏந்திசைத் தூங்கல் ஓசையான் வந்த குறளடி வஞ்சிப்பா.

'பானல்வாய்த் தேன்விரிந்தன;
கானல்வாய்க் கழிமணந்தன; †
ஞாழலொடு நறும்புன்னை
தாழையொடு முருகுயிர்ப்ப,
வண்டல்வாய் நறுநெய்தல்
கண்டலொடு கடலுடுத்துத்
தவளமுத்தம் சங்கீன்று
பவளமொடு ஞெமர்ந்துராஅய்
'இன்னதோர்
'கடிமண முன்றிலும் உடைத்தே
படுமீன் பரதவர் பட்டினந் தானே.' 2

இஃது அகவற் றூங்கல் குறளடி வஞ்சிப்பா.

'தொடியுடைய தோண்மணந்தனன்;
கடிகாவிற் பூச்சூடினன்;
நறைகமழுஞ் ‡ சாந்தநீவினன்;
செற்றோரை வழிதபுத்தனன்;
நட்டோரை உயர்வுகூறினன்;
வலியரென வழிமொழியலன்; §
மெலியரென மேற்செல்லலன்;
பிறரைத்தான் இரப்பறியலன்;
இரப்போர்க்கு மறுப்பறியலன்;
வேந்துடை அவையகத்
தோங்குபுகழ் தோற்றினன்;
வருபடை எதிர்தாங்கினன்; ‖
பொருபடை புறங்கண்டனன்;
கடும்பரிய மாக்கடவினன்;
நெடுந்தெருவிற் றேர்வழங்கினன்;
ஓங்கியல ‡ களிறூர்ந்தனன்;

---

1. யா. வி. 9,15, 21 உரைமேற். 2. யா.வி. 27 உரைமேற்.

பி-ம் : * மீன்றிரிதரும். † கழிமலர்ந்தன. ‡ தண்கமழும். $ வாய்மொழியலன். எதிர்கழறினன், ‡ உடல் சினத்த.

தீந்தேறற் * றசும்புதொலைச்சினன் ;
பாணுவப்பப் பசிதீர்த்தனன் ;
மயக்குடைய மொழிவிடுத்தனன் ;
'ஆங்கு,
'செய்வகை எல்லாம் செய்தனன் ஆகலின்,
இடுக ஒன்றோ சுடுக ஒன்றோ
படுவழிப் படுகவிப் புகழ்வெய்யோன் † றலையே.' 1

இது பிரிந்திசைத் தூங்கல் குறளடி வஞ்சிப்பா.

[சிந்தடி வஞ்சிப்பா]

'கொடிவாலன குருநிறத்தன குறுந்தாளன
வடிவாலெயிற் றழலுளையன வள்ளுகிரன
பணையெருத்தின் இணையரிமான் அணையேறித்
துணையில்லாத் துறவுநெறிக் கிறைவனாகி
எயினடுவண் இனிதிருந் தெல்லோர்க்கும்
பயில்படுவினை பத்தியலாற் செப்பியோன்
'புணையெனத்
'திருவுறு திருந்தடி திசைதொழ
வெருவுறும் நாற்கதி ; வீடுநனி எளிதே !' 2

இஃது ஏந்திசைத் தூங்கற் சிந்தடி வஞ்சிப்பா.

'தொன்னலத்தின் புலம்பலைப்பத் தொடித்தோண்மேல்
பன்னலத்த கலந்தொலையப் பரிவெய்தி
என்னலத்தகை இதுவென்னென எழில்காட்டிச்
சொன்னலத்தகைப் பொருள்கருத்தினிற் சிறந்தாங்கெனப்
'பெரிதும்,
'கலங்கஞர் எய்தி விடுப்பவும் ‡
சிலம்பிடைச் செலவும் சேணிவந் தற்றே.' 3

இஃது அகவற் றூங்கல் சிந்தடி வஞ்சிப்பா.

'பரலத்தம் செலவிவளொடு படுமாயின்
இரவத்தை நடைவேண்டா இனிநனியென
நஞ்சிறு குறும்பிடை மூதெயிற்றியர்
சிறந்துரைப்பத் தெறுகதிர் சென்றுறும்
ஆங்கட் டெவுட்டினர் கொல்லோ
'எனவாங்கு,
'நொதுமலர் வேண்டி நின்னொடு
மதுகரம் உற்ற ஆடவர் தாமே.' 4

இது பிரிந்திசைத் தூங்கற் சிந்தடி வஞ்சிப்பா.

பட்டினப்பாலை என்னும் வஞ்சி நெடும்பாட்டு, ஆசிரிய அடி விரவி வந்த ஏந்திசைத் தூங்கல் விரவியற் குறளடி வஞ்சிப்பா. விரவியற் சிந்தடி வஞ்சிப்பா வந்தவழிக் கண்டுகொள்க. தனை விகற்பங்களால் வருவனவும் வந்தவழிக் கண்டுகொள்க.

---

1. புறம், 239 2. திருப்பாமாலை'; யா.வி. 95 உரைமேற். 3. யா.வி. 26 உரைமேற்,
4. (யா.வி, 26 உரைமேற்.

பா-ம்: * தீஞ்சொற், † இகல்வெய்யோன் ‡ இருப்பவும்.

'தன்றளை பாதம் தனிச்சொற் சுரிதகம்
என்றிவை நான்கும் அடுக்கிய தூங்கிசை
வஞ்சி யெனப்பெயர் வைக்கப் படுமே.'

என்றார் காக்கைபாடினியார்.

'தூங்கல் இசையாய்த் தனிச்சொற் சுரிதகம்
தான்பெறும் அடிதளை தழீஇவரை வின்றாய்
எஞ்சா வகையது வஞ்சிப் பாவே.'

என்றார் அவிநயனார்.

'தூங்கல் ஓசை நீங்கா தாகி
நாற்சீர் நிரம்பா அடியிரண் டுடைத்தாய்
மேற்சீர் ஓதிய ஐஞ்சீர் பெற்றுச்
சுரிதகம் ஆசிரியம் உரியதனின் அடுத்து
வந்த தாயின் வஞ்சிப்பாவே.'

என்றார் நீர் மலிந்த வார்சடையோன் பேர் மகிழ்ந்த பேராசிரியர்.

[நேரிசை வெண்பா]

'ஈரிரண்டோ டீரா றெழுவாய் இறுவாயாச்
சேரும் எழுத்திருசீர் வஞ்சிக்காம்;—ஒரும்
நெடிலடிக்கு நேர்ந்தனவும் மூவொருசீர் வஞ்சிக்
கடிவகுத்தார் எட்டாதி ஆய்ந்து.'

எனவும்,

'பன்னிய சீர்பயின்று பத்து நிலத்தவாய்
மன்னவனைச் சேர்ந்து வனப்பெய்தி—மன்னுதலால்,
நான்காம்பா என்றுரைக்கும் நாமநூல் வஞ்சியை
நான்காம் குலமென்றார் நன்கு.'

எனவும் இவற்றை விரித்து உரைத்துக் கொள்க.

இரு சீர் அடி வஞ்சிக்கு ஒன்பது நிலத்தோடு முச்சீர் அடி வஞ்சி சிறப்பின்மையால், ஒரு நிலமேயாகக் கொண்டு, வஞ்சி எல்லாமாய்ப் பத்து நிலம் என்ப தொல்காப்பியனார் முதலாகிய தொல்லாசிரியர். அதுவே இந் நூலுள்ளும் துணிபு.

நான்காம் குலத்திற்குப் பத்து நிலமாவன:

'ஆணைவழி நிற்றல், மாண்வினை தொடங்கல்,
கைக்கடன் ஆற்றல், கசிவகத் துண்மை,
ஓவா முயற்சி, ஒக்கல் போற்றல்,
மன்றிடை மகிழ்தல், ஒற்றுமை கோடல்,
திருந்திய அறத்திற் றீரா தொழுகல்,
விருந்துபுறந் தருதல் வேளாண் டுறையே.'

என்று ஓதப்பட்டன.

'மன்னவன் என்ப தாசிரி யம்மே.'
'வெண்பா முதலாம் நால்வகைப் பாவும்
எஞ்சா நாற்பால் வருணர்க் குரிய.'

என்றார் வாய்ப்பியம் உடையார் ஆகலின். இதனை விரித்து உரைத்துக் கொள்க.

91] **வஞ்சித்தாழிசையும் துறையும்** [நூ-அ

குறளடி நான்மையிற் கோவை மூன்றாய்
வருவன வஞ்சித் தாழிசை; தனிவரின்
துறையென மொழிப துணிந்திசி னோரே.'

'இஃது என் நுதலிற்றோ?' எனின், வஞ்சித்தாழிசையும் வஞ்சித் துறையும் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொழிப்பு: இரு சீர் அடி நான்காய் ஒரு பொருண்மேல் மூன்றாய் வருவன வஞ்சித் தாழிசை; அச்செய்யுள் நான்கடியாய் ஒரு பொருண்மேல் ஒன்றாய் வருவது வஞ்சித் துறை என்று நூற்றுணிவு உடையார் கூறுவார் (என்றவாறு).

ஒரு பொருண்மேல் ஆகிய தொடர்ச்சி ஈண்டும் கோவைக் கிளவியாற் கூறுபடுப்பது எனக் கொள்க.

'தனிவரின்,
துறையென மொழிப துணிந்திசி னோரே.'

என்றாலும் கருதிய பொருளைக் கொண்டு நிற்கும்; 'வருவன' என்று மற்றொரு வாய்பாட்டாற் சொல்ல வேண்டியது என்னை?

ஒரு பொருண்மேல் மூன்றாய் அடி மறி ஆகாதே வருவனவற்றை 'வஞ்சி நிலைத் தாழிசை' என்றும்; அடி மறியாய் வருவனவற்றை 'வஞ்சி மண்டிலத் தாழிசை' என்றும்; ஒரு பொருண்மேல் ஒன்றாய் அடி மறி ஆகாதே வருவனவற்றை 'வஞ்சி நிலைத்துறை' என்றும் அடி மறியாய் வருவனவற்றை 'வஞ்சி மண்டிலத் துறை' என்றும் வழங்குவர் ஒருசார் ஆசிரியர் என்பது அறிவித்தற்கு வேண்டப்பட்டது.

அவற்றிற்குச் செய்யுள் வருமாறு:

**[வஞ்சி நிலைத் தாழிசை]**

'இரும்பிடியை இகல்வேழம்
பெருங்கையால் வெயில்மறைக்கும்
அருஞ்சுரம் இறந்தார்க்கே
விரும்புமென் மனனேகாண்; 1

'மடப்பிடியை மதவேழம்
தடக்கையால் வெயில்மறைக்கும்
இடைச்சுரம் இறந்தார்க்கே
நடக்குமென் மனனேகாண்; 2

'பேடையை இரும்போத்துத்
தோகையால் வெயில்மறைக்கும்
காடகம் இறந்தார்க்கே
ஓடுமென் மனனேகாண்.' 1 3

இவை ஒரு பொருண்மேல் மூன்றாய் அடி மறி ஆகாதே வந்தமையால் வஞ்சி நிலைத் தாழிசை.

வஞ்சி மண்டிலத் தாழிசை வந்த வழிக் கண்டுகொள்க.

1. யா.வி. 95 உரைமேற்.

[வஞ்சி நிலைத் துறை]

'மார்வுற அணிந்தாலும்
மார்வுறாய் மணிவடமே!
தோளுறச் செறித்தாலும்
தோளுறாய் கிளர்வளையே!

இஃது ஒரு பொருண்மேல் ஒன்றாய் அடி மறி ஆகாதே வந்தமையால், வஞ்சி நிலைத் துறை.

[வஞ்சி மண்டிலத் துறை]

'முல்லைவாய் முறுவலித்தன;
கொல்லைவாய்க் குருந்தீன்றன;
மல்லல்வான் மழைமுழங்கின;
செல்வர்தேர் வரவுண்டாம்.' 1

இஃது ஒரு பொருண்மேல் ஒன்றாய் அடி மறியாய் வந்தமையால், வஞ்சி மண்டிலத் துறை.

பிறவும் வந்த வழிக் கண்டுகொள்க.

பிறரும் இவ்வாறே சொன்னார். என்னை?

'ஒன்றினை நான்மை உடைத்தாய்க் குறளடி
வந்தன வஞ்சித் துறையெனல் ஆகும்.'

'குறளடி நான்கின் கூடின வாயின்
முறைமையின் அவ்வகை மூன்றிணைந் தொன்றி
வருவன வஞ்சித் தாழிசை ஆகும்.'

என்றார் காக்கை பாடினியார்.

'எஞ்சா இருசீர் நாலடி மூன்றெனில்
வஞ்சித் தாழிசை; தனிவரிற் றுறையே.'

என்றார் சிறுகாக்கைபாடினியார்.

'இருசீர் நாலடி மூன்றிணைந் திறுவது
வஞ்சித் தாழிசை; தனிவரிற் றுறையே.'

என்றார் அவிநயனார்.

'இருசீர் நாலடி மூன்றிணைந் தொன்றி
வருவது வஞ்சித் தாழிசை; தனிநின்
றொருபொருள் முடிந்தது துறையென மொழிப.'

என்றார் மயேச்சுரர்.

92] வஞ்சி விருத்தம் [௯௬

சிந்தடி நான்காய் வருவது வஞ்சிய
தெஞ்சா விருத்தம் என்மனார் புலவர்.

'இஃது என் நுதலிற்றோ?' எனின், வஞ்சி விருத்தம் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொழிப்பு: முச்சீர் அடி நான்கு உடைத்தாய் வரும் செய்யுள் வஞ்சி விருத்தம் என்பர் புலவர் (என்றவாறு).

---

1. யா. வி. 95 உரைமேற்.

'சிந்தடி நான்காய் வருவது
வஞ்சியது விருத்தம் என்மனுர் புலவர்.'

என்றாலும் கருதிய பொருளைப் பயக்கும்; 'எஞ்சா' என்று மிகுத்துச் சொல்ல வேண்டியது என்னை?

முச்சீர் அடி நான்காய் அடி மறி ஆகாதே வருவனவற்றை வஞ்சி நிலை விருத்தம் என்றும், அடி மறியாய் வருவனவற்றை வஞ்சி மண்டில விருத்தம் என்றும் வழங்குவர் ஒருசார் ஆசிரியர் என்பது அறிவித்தற்கு வேண்டப் பட்டது.

வரலாறு :

[வஞ்சி நிலை விருத்தம்]

'வாளார் * வார்கழல் வீக்கிய
தாளார் தாமுடைந் தோடினுர்
நாளை நாணுடை மங்கைமார்
தோளை நாணிலர் தோயவே.'

எனவும்,

'முந்து கொன்ற மொய்ம்பினுன்
வந்து தோன்ற வார்சிலை
அம்பின் எய்து கொன்றுதாய்க்
கின்பம் எய்து வித்தபின்.'

எனவும் இவை அடி மறி ஆகாதே வந்தமையால், வஞ்சி நிலை விருத்தம்.

[வஞ்சி மண்டில விருத்தம்]

'சொல்லல் † ஓம்புமின் தோம்நனி;
செல்லல் ஓம்புமின் தீநெறி;
கல்லல் ஓம்புமின் கைதவம்;
மல்லல் ஞாலத்து மாந்தர்காள்!'

இஃது அடி மறியாய் வந்தமையால், வஞ்சி மண்டில விருத்தம்.

பிறவும் வந்தவழிக் கண்டு கொள்க.

[கட்டளைக் கலித்துறை]

'குறளடி நான்கின மூன்றெரு தாழிசை; கோதில்வஞ்சித்
துறையொரு வாது தனிவரு மாய்விடின்; சிந்தடிநான்
கறைதரு காலை அமுதே! விருத்தம்; தனிச்சொல்வந்து
மறைதலில் வாரத்தி ருலிறும் வஞ்சிவஞ் சிக்கொடியே!' 1

இக் காரிகையை விரித்து உரைத்துக் கொள்க.

'முச்சீர் நாலடி ஒத்தவை வரினே
வஞ்சி விருத்தம் என்றனர் கொளலே.'

என்றார் சிறுகாக்கைபாடினியார்.

'சிந்தடி நான்காய் வருவது வஞ்சிய
தெஞ்சா விருத்தம்.'

என்று பிறிதொரு வாய்பட்டாற் சொல்ல வேண்டியது என்னை?

---

1. யா.கா. 35.

பா-ம்: * வளோர். † சொல்வல்.

எல்லாப் பாவும் தன் சீராலும் தன் தளையாலும் வருவன, 'தலையாகு இன்பா' என்றும்; தன் சீரும் தன் தளையும் பிற பாவின் சீரோடும் தளையோடும் மயங்கி வருவன, 'இடையாகு இன்பா' என்றும்; தன் சீரும் தன் தளையும் இன்றியே வருவன 'கடையாகு இன்பா' என்றும் வழங்குவர் ஒருசார் ஆசிரியர் என்பது அறிவித்தற்கு வேண்டப்பட்டது. என்னை?

'தன்சீர் நிலையிற் றளைதம தழீஇய
இன்பா என்பர் இயல்புணர்ந் தோரே.'

'ஏனையவை விரவின் இடையெனப் படுமே;
தானிடை இல்லது கடையெனப் படுமே.'

என்றார் மயேச்சுரர்.

வஞ்சி நிலைத் தாழிசை முதலாக உடையன செய்யுள், சிறப்புடை ஏழு தளையாலும் சிறப்பில் ஏழு தளையாலும் கூறுபடுப்ப, ஓரோ ஒன்று பதினான்கு பாகுபாட்டைச் சொல்லும்; பிற வகையாலும் விகற்பிக்கப் பலவுமாம்.

[நேரிசை வெண்பா]

'வஞ்சிப்பா நான்குந்தன் வாலியமூன் றோசையால்
எஞ்சாத ஈராறும்; ஈண்டவற்றை—எஞ்சாத
பந்தம் பதினான்கின் மாறப் பழுதின்றி
வந்தன நூற்றறுபத் தெட்டு.'

எனவும்,

'அந்தத்திற் பாவிற் கினமாய ஆறினையும்
பந்தம் பதினான்கி னாற்பாப்ப—வந்தன
எண்பத்து நான்காம் இனியவற்றின் மிக்கனவும்
பண்புற்றுப் பாத்துக் கொளல்.'

எனவும் இவற்றை விரித்து உரைத்துக்கொள்க.

வஞ்சிப்பாவும் அதன் இனமும்
முடிந்தன.

93] புறநடை [சூ௰

மிக்கும் குறைந்தும் வரினும் ஒருபுடை
ஒப்புமை நோக்கி ஒழிந்தவும் கொளலே.

'இஃது என் நுதலிற்றோ?' எனின், மேற்சொல்லப்பட்ட பாக்கட்கெல்லாம் எய்தியதோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொழிப்பு: (மேற்சீரும் அடியும் வரையறுக்கப்பட்ட பாவும் பாவினமும் சொன்ன பெற்றியிற் றிரிந்து) மிக்கும் குறைந்தும் வந்தாலும், அவற்றை ஒருபுடை ஒப்புமை நோக்கி, ஒழிந்த செய்யுட்களையும் அவற்றின் பாற்படுத்து வழங்கப்படும் (என்றவாறு).

வரலாறு:

[கலி விருத்தம்]

'கோழியும் கூவின; குக்கில் அழைத்தன;*
தாழியுள் நீலத் தடங்கணீர்! போதுமினோ;
ஆழிசூழ் வையத் தறிவன் அடியேத்தி†
கூழை நனையக் குடைந்தும் குளிர்புனல்
ஊழியும் மன்னுவாம் என்றேலோர் எம்பாவாய்!'

'நாற்சீர் நாலடியால் வருவது கலி விருத்தம்,' என்று வரையறுத்துச் சொன்னார், இஃது ஐந்தடியால் வந்ததாயினும், ஒரு புடை ஒப்புமை நோக்கிக் கலிவிருத்தத்தின்பாற்படுத்து வழங்கப்படும். இதனைத் தரவு கொச்சகம் என்பாரும் உளர். இஃது அவிநயனார் காட்டிய பாட்டு.

[கலி விருத்தம்]

'நீல நிறத்தனவாய் நெய்கனிந்து போதவிழ்ந்து
கோலம் குயின்ற குழல்வாழி நெஞ்சே!
கோலம் குயின்ற குழலும் கொழுஞ்சிகையும்
காலக் கனலெரியின் வேம்வாழி நெஞ்சே!
காலக் கனலெரியின் வேவனகண்டாலும்,
சால மயங்குவ தென்வாழி நெஞ்சே!' 1

எனவும்,

'வித்தகர் செய்த விளங்கு முடிகவித்தார்
மத்தக மாண்பழிதல் காண்வாழி நெஞ்சே!
மத்தக மாண்பழிதல் கண்டால் மயங்காதே
உத்தம நன்னெறிக்கண் நில்வாழி நெஞ்சே!
உத்தம நன்னெறிக்கண் நின்றாக்கம் செய்தியேல்
சித்தி படர்தல் தெளிவாழி நெஞ்சே!' 2

எனவும் இத்தொடக்கத்தன ஒருசார் வளையாபதிப் பாட்டும்,

'கல்வினைக் கதிர்மணிக் கவண்பெய்து கானவற்
கொல்லையிற் களிறெறி வெற்பே யாதே;
கொல்லையிற் களிறெறி‡ வெற்பனிவ் வியனாட்டார்
பல்புகழ் வானவன் றானே யாதே;

1, 2. வளையாபதி

பி-ம்: * குரவியம்பும், குரல்காட்டும். † அண்ணல் அடிபோற்றி. ‡ களி றேறி.

பல்புகழ் வானவன் ருளொடு மன்னர்க்கோர்*
நல்ல படாஅ பறையே யாதே.' 1

எனவும்,

'ஈரிதழ் இணர்நீலம் இடைதெரியா தரிந்திடூஉம்
ஆய்கதிர் அழற்செந்நெல் அரியே யாதே;
ஆய்கதிர் அழற்செந்நெல் அகன்செறுவில் அரிந்திடூஉம்
காவிரி வளநாடன் கழலே யாதே;
காவிரி வளநாடன் கழல்சேர்ந்த மன்னர்க்
காரர ணிற்றல் அரிதே யாதே.' 2

எனவும்,

'நித்திலம் கழலாக நிரைதொடி மடநல்லார்
எக்கர்வான் இருமணல் இணரே யாதே;
எக்கர்வான் இருமணல் இணர்புணர்ந் திசைத்தாடும்
கொற்கையார் கோமான் கொடியே யாதே;
கொற்கையார் கோமான் கொடித்திண்டேர் மாறற்குச்
செற்றர ணிற்றல் அரிதே யாதே' 3

எனவும் இத் தொடக்கத்தன ஒருசார் முப்பேட்டுச் செய்யுளும் ஆறடியான் மிக்கனவேனும், ஒருபுடை ஒப்புமை நோக்கிக் கலிவிருத்தத்தின்பாற்படுத்து வழங்கப்படும்; கொச்சகக் கலியின்பாற்படுத்தினும் ஆம். இவை மிக்கன.

இனிக் குறைந்து வருவன, ஆசிரியப்பாவிற்கு மூன்றடிச் சிறுமை என்றார் ஆயினும், கலிக்கும் வஞ்சிக்கும் சுரிதகமாய் இரண்டடியால் வந்தனவும் உள. அவற்றையும் இவ்விலக்கணத்தாற் குற்றம் இல்லை என்று வழங்கும். மருட்பாவும் அவ்வாறே எனக் கொள்க.

வரலாறு :

[வஞ்சிப்பா]

'சுற்றும்நீர் சூழ்கிடங்கிற்
பொற்றாமரைப் பூம்படப்பைத்
'தெண்ணீர்
'நல்வயல் ஊரன் கேண்மை
அல்லிருங் கூந்தற் கலரா னதே!'

வஞ்சிப் பாவிற்கு மூன்றடிச் சிறுமை என்று வரையறுத்துச் சொன்னார். இஃது இரண்டடியால் வந்ததாயினும், ஒரு புடை ஒப்புமை நோக்கி, வஞ்சிப்பாவின்பாற்படுத்து வழங்கப்படும்.

'இரண்டடியால் வஞ்சி வரும்,' என்று எடுத்து ஓதினார், மயேச்சுரர் முதலாகிய ஒருசார் ஆசிரியர் எனக் கொள்க. என்னை?

'வெண்பா ஆசிரியம் கலியே வஞ்சியென [மயேச்சுரர்]
நுண்பா உணர்ந்தோர் நுவலுங் காலை
இரண்டும் மூன்றும் நான்கும் இரண்டும்
திரண்ட அடியின் சிறுமைக் கெல்லை.' 4

என்றார் ஆகலின்.

1, 2, 3. முப்பேட்டுச் செய்யுள் 4. யா.கா. 14 உரைமேற்.

பி-ம் : * தாள்சேரா மன்னர்க்கோர்.

அவர் காட்டும் பாட்டு :

[வஞ்சிப்பா]

'பூந்தண்சினை மலர்மல்கிய பொழிற்பிண்டி
வேந்தன்புகழ் பரவாதவர் வினைவெல்லார் ;
'அதனால்
'அறிவன தடியிணை பரவப்
பெறுகுவர் யாவரும் பிறவர் நெறியே.' 1

இதனை முச்சீர் அடி வஞ்சியாக அலகிட்டு, அகவல் இரண்டடி ஆமாறு கண்டுகொள்க.

'சிறியகட் பெறினே' 2 என்னும் இணைக்குறள் ஆசிரியப்பாவினுள் ஐஞ்சீர் அடியும் அருகி வந்தன எனக் கொள்க.

'அணிகிளர் சிறுபொறி அவிர்துத்தி மாநாகத் தெருத்தேறித்
துணியிரும் பனிமுன்னீர் தொட்டுழந்து மலைந்தனையே.' * 3

இக்கலியுள் ஐஞ்சீர் அடியும் வந்தன எனக் கொள்க.

'கலியொடு வெண்பா அகவல் கூறிய
அளவடி தன்னால் நடக்குமன் அவையே.' 4

என்ற சூத்திரத்தில் 'அவை' என்ற விதப்பினாலும், இச்சூத்திரத்தாலும் இவற்றையும் குற்றம் இல்லை என்று கொண்டு வழங்குப, புராண கவிஞராற் சொல்லப்பட்டன ஆகலின்.

[குறள் வெண்பா]

'நிலம்பாஅய்ப்பாஅய்ப் பட்டன்று நீலமா மென்றேன்
கலம்போலப்போலக் கௌவை தரும்.' 5

'இவ்வெண்பாவுள் ஐஞ்சீர் அடியும் வந்தது பிற,' எனின்,, அளபெடை சீரும் தளையும் அடியும் தொடையும் கெடாமைப்பொருட்டு வேண்டுவதல்லது, அள பெழுந்து கெடநின்றவிடத்து வேண்டப்படாது. என்னை ?

'மாத்திரை வகையாற் றளைதபக் கெடாநிலை
யாப்பழி யாமைநின் றளபெடை வேண்டும்.'

என்றார் ஆகலின்.

அதனுள் முதற்சீர் புளிமாங்காயாகவும் இரண்டாஞ்சீர் தேமாங்காயாகவும் அலகிட்டு, நாற்சீரேயாகக் கொள்க.

'ஐஞ்சீர் வெள்ளையுட் புகாமை எற்றாற் பெறுதும் ?' எனின்

'ஐஞ்சீர் அடுக்கலும் மண்டிலம் ஆக்கலும்
வெண்பா யாப்பிற் குரிய அல்ல.' 6

என்று நக்கீரனார் அடி நூலுள் எடுத்து ஓதப்பட்டமையாற் பெறுதும் ; 'பிறநூல் முடிந்தது தானுடம் படுதல்,' என்பது தந்திர உத்தி ஆகலின்.

இனி, 'ஆசிரியத்துள்ளும் கலியுள்ளும் ஐஞ்சீர் அடி வரும் என்பது எற்றாற் பெறுதும் ?' எனின்,

---

1. திருப்பா மாலை
2. யா. வி. 72 உரைமேற்.
3. யா. வி. 95 உரைமேற்.
4. யா. வி. 27
5. யா. வி. 4, 95 உரைமேற்
6. நக்கீரனார் அடி நூல்

பி—ம்: * தொட்டுத்துயி லமர்ந்தனையே, தோட்டவிழ்ந்து ...ர்ந்தனையே.

'வெள்ளை விரவியும் ஆசிரியம் விரவியும்
ஐஞ்சீர் அடியும் உளவென மொழிப.' 1

என்று தொல்காப்பியனர் எடுத்து ஓதினமையாற் பெறுதும்.

இப்பாட்டுக்களும் செய்யுளியலுட் காட்டின எனக் கொள்க

[குறளடி வஞ்சிப்பா]

'தாழிரும் பிணர்த்தடக்கைத்
தண்கவுள் இழிகடாத்துக்
காழ்வரக் கதம்பேணுக்
கடுஞ்சினத்த களிற்றெருத்தின்
5. நிலனெளியத் தொகுபீண்டிக்
கடல்மருளப் படைநடுவண்
ஏற்றுரியின் இமிழ்முரசம்
கூற்றுட்க எழீஇச்சிலைப்பக்
கேளல்லவர் மிடல்சாய
10. வாள்வலியால் நிலம்வௌவி
முழுதாண்டவர் வழிகாவல்
குன்றுமருளச் சோறுகுவைஇப்
புனல்மருளநன் னெய்சொரிந்து
திருமறைமுதல்வர் வழிகாட்ட
15. ஆகுதியின் அழலருத்திப்
பல்கேள்வித் துறைபோகிய
தொல்லிசையான் மீக்கூறும்
கொற்கையார் குலவேறே!
கூடலார் அடுபொருந!
20. என்றியான், அல்கியார்ந்த அரிக்கிணையின்
மரபுளியின் வரவிசைப்ப
நனிவிரும்பி நயனேக்கி
இனிவேண்டாநின் கிணைத்தொழிலென
எனக்கொவ்வாமைப் பெரிதருளித்
25. தனக்கொப்பத் தலையளித்தனன்
அதற்கொண்டும், கலங்கொண்டன கள்ளென்கோ!
காழ்கோத்தன சூடென்கோ!
நெய்கனிந்தன வறையென்கோ!
குய்கொண்டன துவையென்கோ!
30. எனைப்பல எமக்குத்தண்டாது
வைகற்றொறுங்கைகவி சொரிதரலை
விலங்குகதிர் அவிர்வெள்ளி
அலங்குபெண்ணை வழியுறையினும்
குளஞ்சேர்ந்து சனிகொட்பினும்
35. அருந்தே மாந்தனம்* யாமே;
வருந்தல் வேண்டா வாழ்கநின் ருளே!' †

---

1. தொல். பொ. 375.

பி-ம்: * மார்ந்தனம் † அருளே.

முப்பத்தாறு அடியான் வந்த இக்குறளடி வஞ்சியுள் 'என்றியான்' எனவும் 'அதற்கொண்டும்' எனவும் சீர் கூறாய் வந்தன.

'தூங்கல் இசையன வஞ்சி; மற்றவை
ஆயந்த தனிச்சொலோ டகவலின் இறுமே.' 1

என்றார், இது சுரிதகத்தருகு தனிச்சொல் இன்றி வந்ததாயினும், 'வஞ்சிப்பா' என்றே வழங்கப்படும்.

பிறவும் புராண கவிஞராற் பாடப்பட்டு, மிக்கும் குறைந்தும் வருவன வற்றை இவ்விலக்கணத்தால் ஒரு புடை ஒப்புமை நோக்கிப் பெயரிட்டு வழங்கப்படும். என்னை?

'உணர்த்திய பாவினுள் ஒத்த அடிகள்
வகுத்துரை பெற்றியும் அன்றிப் பிறவும்
நடக்குந ஆண்டை நடைவகை யுள்ளே.'

என்றார் காக்கைபாடினியார்.

'ஒத்த அடியினும் ஒவ்வா விகற்பினும்
மிக்கடி வரினும் அப்பாற் படுமே.'

என்றார் அவிநயனார்.

'பாவும் இனமும் மேவிய அன்றியும்
வேறுபட நடந்தும் கூறுபட வரினும்
ஆறறி புலவர் அறிந்தனர் கொளலே.'

என்றார் பிறை நெடுமுடிக் கறைமிடற்றோன் பெயர் மகிழ்ந்த பேராசிரியர்.

[ஆரிடச் செய்யுள்]

'வரிசை பெரிதுடையர் கட்கலமுந் தூயர்
புரிசை ஒருசாரார் அம்பலமும் தண்ணீரும்
தன்னிலத்த அல்ல—புரிசைக்குத்
தெற்கொற்றித் தோன்றும் திருநென் மலியேநம்
பொற்கொற்றி புக்கிருக்கும் ஊர்.'

எனவும்,

'கிடங்கிற் கிடங்கிற் கிடந்த கயலைத்
தடங்கட் டடங்கட் டளிரியலார் கொல்லார்—கிடங்கில்
வளையாற் பொலிந்ததோள் * வையெயிற்றுச் செவ்வாய்
இளையாட்டி † கண்ணெக்கும் என்று.'

உடவும்,

'வஞ்சி வெளிய குருகெல்லாம்; பஞ்சவன்
நான்மாடக் கூடலிற் கல்வலிது;
சோழன் உறந்தைக் கரும்பினிது; தொண்டைமான்
கச்சியுட் காக்கை கரிது.'

எனவும் வரும் இத்தொடக்கத்துப் பொய்கையார் வாக்கும், குடமூக்கிற்பகவர் செய்த வாசுதேவனார் சிந்தம் முதலாகிய ஒருசார்ச் செய்யுட்களும் எப்பாற் படுமோ எனின், ஆரிடச் செய்யுள் எனப்படும்.

---

1 யா.வி. 90.

பா-ம்: * பொலிந்தகை † இளையாடன்.

'ஆரிடம்' என்பது, உலகியற் செய்யுள்கட்கு ஓதிய உறுப்புக்களின் மிக்கும் குறைந்தும் கிடப்பன எனக் கொள்க.

'வரிசை பெரிதுடையர்' என்பது மிக்கது. அல்லன, மிக்கும் குறைந்தும் வந்தன.

அவ்வாரிடச்செய்யுள் பாடுதற்கு உரியர், ஆக்குதற்கும் கெடுத்தற்கும் ஆற்றலுடையார் ஆகி, முக்காலத்துப் பண்பும் உணரும் இருடிகள் எனக் கொள்க. என்னை?

'உலகியற் செய்யுட் கோதிய அளவியற்*
குறையவும் விதப்பவும் குறையா ஆற்றல்
இருடிகள் மொழிதலின் ஆரிடம் என்ப.' 1

எனவும்,

'ஆரிடச் செய்யுள் பாடுதற் குரியோர்
கற்றோர் அறியா அறிவுமிக் குடையோர்
மூவகைக் காலப் பணபுமுறை உணரும்
ஆற்றல் சான்ற அருந்தவத் தோரே.†' 2

எனவும் சொன்னார் பாட்டியல் மரபு உடையார் ஆகலின்.

அல்லது, வடநூல் உடையாரும், பிங்கலம் முதலாகிய சந்தோபிசிதிகளுள் விருத்தச் சாதி விகற்பங்களாற் கிடந்த உலகியற் சுலோகங்களில் மிக்கும் குறைந்தும் கிடப்ப இருடிகளாற் சொல்லப்படுவனவற்றை 'ஆரிடம்' என்று வழங்குவர் எனக் கொளக.

'அஃதே எனின்,

'ஏரி இரண்டும் சிறகா, எயில்வயிறுக்
காருடைய பீலி கடிகாவாச்—சீரிய
அத்தியூர் வாயா, அணிமயிலே போன்றதே
பொற்றேரான் கச்சிப் பொலிவு.' 3

எனவும்,

'உடையராய்ச் சென்றக்கால் ஊரெலாம் சுற்றம்;
முடையவராய்க்‡ கோனூன்றிச் சென்றக்கால்—சுற்றம்
உடைவயிறும்§ வேறு படும்.' 4

எனவும்,

'கண்டகம் புற்றிக் கடக மணிதுளங்க
ஒண்செங் குருதியுள் ஓஓ கிடந்ததே—கெண்டிக்
கெழுதகைமை இல்லேன் கிடந்தூடப் பன்னாள்
அழுதகண் ணீர்துடைத்த கை!' 5

எனவும் இத்தொடக்கத்துப் பெருஞ்சித்திரனார் செய்யுளும் ஔவையார் செய்யுளும், பத்தினிச் செய்யுளும் முதலாக உடையன எல்லாம் எப்பாற் படும்?' எனின், 'ஆரிடப் போலி' என்றும், 'ஆரிட வாசகம்' என்றும் வழங்கப்படும் என்க.

இவையெல்லாம், இருடிகள் அல்லா ஏனையோராகிய மனத்தது பாடவும், சாவவும் கெடவும் பாடல் தரும் கபில பரண கல்லாட மாமூலப் பெருந்தலைச் சாத்தர் இத்தொடக்கத்தோராலும், பெருஞ்சித்திரனார் தொடக்கத்தோராலும் ஆரிடச் செய்யுட்போல மிகவும் குறையவும் பாடப்படுவன எனக் கொள்க. என்னை?

---

1,2. பாட்டியல் மரபு 3. தண்டி- 39 உரைமேற். 4. இன்னிலை, 12 5. தண்டி 116 3 உரைமேற்.

பி-ம் * ‡ அளவையிற் † தோமில் ஆற்றல் துணிந்திசினோரே. ‡ முடவராய் § உடையானும்.

'மனத்தது பாடும் மாண்பி னோரும்
சினத்திற் கெடப்பாடும் செல்வியோரும்
முனிக்கணச் செய்யுள் மொழியவும் பெறுப.'*

என்பது பாட்டியல் மரபு ஆகலின்.

வரலாறு :

'இலைநல வாயினும் எட்டி பழுத்தாற்
குலைநல வாங்கனி கொண்டுண லாகா ;—விலையாள்
முலைநலம் கண்டு† முறுவலிக் கின்ற
வினையுடை நெஞ்சினை வேதுகொ‡ ளீரே.' 1

இம்மூலர் வாக்கு மிக்கு வந்தவாறு கண்டுகொள்க.

'வச்சிரம் வாவி நிறைமதி முக்குடை
நெற்றிநேர் வாங்கல் விலங்கறுத்தல்
உட்சக் கரவடத் துட்புள்ளி என்பதே
புட்கரனார் கண்ட புணர்ப்பு.'

இது மந்திர நூலுட் புட்கரனார் கண்ட எழுத்துக்குறி வெண்பா. இஃது இரண்டாம் அடி குறைந்து வந்தது.

'கிடங்கிற் கிடங்கில்' என்றும் பொய்கையார் வாக்கு, மிக்கு வந்தது.

'கறைப்பற் பெருமோட்டுக் காடு கிழவோட்
கரைத்திருந்த சாந்துதொட் டப்பேய்
மறைக்குமா காணாது மற்றைத்தன் கையைக்
குறைக்குமாம் கூர்ங்கத்தி கொண்டு.'

இது பூதத்தாரும் காரைக்காற்பேயாரும் பாடியது. இதுவும் இரண்டாம் அடி குறைந்து வந்தவாறு கண்டு கொள்க.

'அறிவுடை நம்பியார் செய்த 'சிந்தம்' எப்பாற்படுமோ ?' எனின், தூங்கல் ஓசைத்தாய்ச் சுரிதகத்தருகு தனிச்சொல் இன்றித் 'தாழிரும் பிணர்த் தடக்கை' என்னும் வஞ்சிப்பாவே போல வந்தமையான் 'தனிச்சொல் இல்லா வஞ்சிப்பா என்று வழங்காமோ ?' எனின், வழங்காம்; செவியறிவுறூஉவாய் வஞ்சியடியால் வந்து பொருள் உறுப்பு அழிந்தமையால், 'உறுப்பழி செய்யுள்' எனப்படும்; 'புறநிலை வாழ்த்தும், வாயுறை வாழத்தும், அவையடக்கியலும், செவியறிவுறூஉம் என்னும் பொருண்மேற் கலியும் வஞ்சியுமாய் வரப்பெறா,' என்றார் ஆகலின், என்னை ?

'வழிபடும் தெய்வம் நிற்புறம் காப்பப்
பழிதீர் செல்வமொடு வழிவழி சிறந்து
பொலிமின் என்னும் புறநிலை வாழத்தே
கலிநிலை வகையும் வஞ்சியும் பெறாஅ.' 2

'வாயுறை வாழ்த்தே அவையடக் கியலே
செவியறி வுறூஉவென அவையும் அன்ன.' 3

என்றார் தொல்காப்பியனார் ஆகலானும்,

'புறநிலை வாயுறை செவியறி அவையடக்
கெனவிவை வஞ்சி கலியவற் றியலா.'

என்றார் நல்லாறனார் ஆகலானும்.

---

பி-ம் * பெறுமே † கொண்டு ‡ வேறுகொ

1. திருமந்திரம், 204 2. தொல். பொ. 422 3. தொல். பொ. 423

'அஃதே எனின், விளக்கத்தனுர் பாடிய 'கெடலரு மாமுனிவர்' என்னும் கலிப்பா, புறநிலை வாழ்த்தாய் வந்தது பிற, எனின், அஃது ஆசிரியச் சுரிதகத்தால் வந்தமையால், குற்றம் இன்று எனக் கொள்க.

'திருக்கொண்டு பெருக்கம் எய்திவீற் றிருந்து
குற்றம் கெடுத்து விசும்பு தைவரக்
கொற்றக் குடையெடுப் பித்துநிலம் நெளியப்
படைபரப்பி ஆங்காங்குக் களிறி யாத்து
நாடுவளம் பெருகக் கிளைகுடி ஓம்பி
நற்றுய் போல உற்றது பரிந்து
நுகத்துக்குப் பகலாணி போலவும்
மக்கட்குக் கொப்பூழ் போலவும்
உலகத்துக்கு மந்தரமே போலவும்
நடுவு நின்று செங்கோல் ஓச்சி
யாறில்வழி யாறு தோற்றியும்
குளனில்வழிக் குளந்தொடு வித்தும்
முயல்பாய்வழிக் கயல்பாயப் பண்ணியும்
களிறு பிளிற்றும்வழிப் பெற்றம்பிளிற்றக் கண்டும்
களிறூர் பலகாற் சென்றுதேன் றேயவும்
தண்புனற் படப்பைத் தாகியும்
குழைகொண்டு கோழி எறிந்தும்
இழைகொண் டான்றட்டும்
இலக்கங் கொண்டு செங்கால் நாரை எறிந்தும்
உலக்கை கொண்டு வாளை ஓச்சியும்
தங்குறை நீக்கிப் பிறர்குறை திருத்தி
நாடாள்வதே அரசாட்சி.'

என இத்தொடக்கத்தனவும், பாசாண்டங்களும், ஒரு சார்ச் சொற்கட்டும், கரிப்போக்கு வாசகத்து ஒரு சார்ச் சொற்கட்டும், எப்பாற்படும் எனின், அவையெல்லாம் 'சொற்சீர் அடி' எனப்படும் எனக் கொள்க. என்னை?

'கட்டுரை வகையால் எண்ணெடு புணர்ந்தும்,
முற்றடி இன்றிக் குறைசீர்த் தாகியும்,
ஒழியிசை யாகியும், வழியசை புணர்ந்தும்,
சொற்சீர்த் திறுதல் சொற்சீர்க் கியல்பே.' 1

என்பது இலக்கணம் ஆகலின்.

செய்யுள் இயல்
முடிந்தது.

1 யா. வி. 83 உரைமேற்

94] ௩. ஒழிபு இயல்.

## தனிச்சொல் நிற்கும் இடம்

அடிமுதற் பொருள்பெற வருவது தனிச்சொல்; அஃ
திறுதியும் வஞ்சியுள் இயலும் என்ப.

'இஃது என் நுதலிற்றோ?' எனின், மேற்சொல்லப்பட்ட பாக்கட்குத் தனிச்சொல் நிற்கும் இடம் உணர்த்துதல் நுதலித்து.

**இதன் பொழிப்பு:** அடி முதற்கண் செய்யுளகத்துப் பொருளைத் தழீஇத் தனியே நிற்பது, 'தனிச்சொல்' எனப்படும்; அது, வஞ்சிப்பாவின் ஈற்றின் கண்ணும் வரப்பெறும் என்பர் புலவர் (என்றவாறு).

'இறுதியும் வஞ்சியுள் இயலும் என்ப,' என்னும் உம்மையால், தனிச்சொல் இடையும் வஞ்சியுள் நிற்கப்பெறும் எனக் கொள்க. அல்லதூஉம், பிறரும் இவ்வாறே சொன்னார். என்னை?

'உறுப்பிற் குறைந்தவும் பாக்கண் மயங்கியும்
மறுக்கப் படாத மரபின ஆகியும்
எழுவாய் இடமாய் அடிப்பொருள் எல்லாம்
தழுவ நடப்பது தான்றனிச் சொல்லே.' 1
'வஞ்சி மருங்கின் இறுதியும் ஆமெனக்
கண்டனர் மாதோ கடனறிந் தோரே.' 2

என்றார் காக்கைபாடினியார்.

'தனியே
அடிமுதற் பொருள்பெற வருவது தனிச்சொல்; அஃ
திறுதியும் வஞ்சியுள் நடக்கும் என்ப.' 3

என்றார் அவிநயனார்.

தனிச்சொல்லைக் 'கூன்' என்று வழங்குவாரும் உளர் எனக் கொள்க. என்னை?

'அடியினிற் பொருளைத் தானினிது கொண்டு
முடிய நிற்பது கூனென மொழிப.' 4
'வஞ்சி இறுதியும் ஆகும் அதுவே.' 5
'அசைகூன் ஆகும் என்மனார் புலவர்.' 6

என்றார் பல்காயனார் ஆகலானும்,

'தானே அடிமுதற் பொருள்பெற வருவது
கூனென மொழிப குறியுணர்ந் தோரே.' 7
'வஞ்சி இறுதியும் வரையார் என்ப.' 8

என்றார் நற்றத்தனார் ஆகலானும் எனக் கொள்க.

வரலாறு:

---

1-8 யா. வி. 95 உரைமேற்.

[நேரிசை வெண்பா]

'உதுக்காண், சுரந்தானு வண்வகைச் சுவரன்மாப்பூ *
பரந்தானுப் பல்புகழ் பாடி—இரந்தார்மாட்
டின்மை அகல்வது போல இருணீங்க
மின்னும் அளித்தோ மழை.'

என இவ்வெண்பாவினுள் அடிமுதற்கண் 'உதுக்காண்' எனத் தனிச்சொல் வந்தவாறு கண்டுகொள்க.

[நேரிசை ஆசிரியப்பா]

'அவரே, கேடில் விழுப்பொருள் தருமார் பாசிலே
வாடா வள்ளியங் காடிறந் தோரே;
யானே, தோடார் எல்வளை நெகிழ நாளும்
பாடமை சேக்கையிற் படர்கூர்ந் திசினே;
அன்னள் அளியள் என்னது மாமழை
இன்னும் பெய்ய † முழங்கி
மின்னும் தோழி! என்னுயிர் குறித்தே.' ‡ 1

என இவ்வாசிரியத்துள் 'அவரே' எனவும், 'யாமே' எனவும் 'கூன்' வந்தவாறு கண்டுகொள்க.

[தரவு கொச்சகம்]

'உலகினுள், பெருந்தகையார் பெருந்தகையை பிறழாவே; பிறழினும்
இருந்தகைய இறுவரைமேல் § எரிபோலச் சுடர்விடுமே;
சிறுதகையார் சிறுதகையை சிறப்பெனினும் ¶ பிறழ்வின்றி
உறுதகைமை உலகினுக்கோர் ஒப்பாகித் தோன்றுதே.'

என இக்கலியடி முதற்கண் 'உலகினுள்' எனத் தனிச்சொல் வந்தவாறு கண்டுகொள்க.

[குறளடி வஞ்சிப்பா]

'உலகே, முற்கொடுத்தார் பிற்கொளவும்
பிற்கொடுத்தார் முற்கொளவும்
உறுதிவழி ஒழுகுமென்ப; ‖
அதனால்,
நற்றிறம் நாடுதல் நன்மை
பற்றிய ** யாவையும் பரிவறத் துறந்தே.'

என இவ்வஞ்சிப்பாவின் அடி முதற்கண் 'உலகே' எனத் தனிச்சொல் வந்தவாறு கண்டுகொள்க.

'தாழிரும் பிணர்த்தடக்கை' 2 என்னும் வஞ்சிப் பாட்டினுள் அடி முதற்கண் 'என்றியான்' எனவும், 'அதற்கொண்டும்' எனவும் சீர் கூனுய் வந்தன.

'மாவழங்கலின் மயக்குற்றன வழி' 3

என வஞ்சியின் இறுதி தனிச்சொல் வந்தவாறு கண்டுகொள்க.

'கலங்கழாஅலிற் றுறை கலக்குற்றன.' 4

என வஞ்சியடியின் நடு, 'துறை' எனத் தனிச்சொல் வந்தவாறு.

---

1 குறுந். 216· 2 யா. வி. உரை மேற் 3. புறம், 345·3 4· புறம்: 345:4:
பி-ம் * சுவானமா, சுவாணமா † பெய்யு ‡ என்னின்னுயிர் § இருவரைமேல்
¶ சிறப்பென்றும் ‖ ஒழுகுமே. ** பற்றற

பிறவும் வந்தவழிக் கண்டுகொள்க.

'காமர் கடும்புனல்' என்னும் கலிப்பாவினுள்,

'சிறுகுடி யீரே! சிறுகுடி யீரே!' 1

என ஓரடியால் தனிச்சொல் வந்தவாறு; ஓரடியாலும் கலிக்கண் தனிச்சொல் வரப்பெறும் ஆகலின். என்னை?

'வெண்சீர் வரைவின்றிச் சென்று விரவினும்
தன்பால் மிகுதியின் வருவன எல்லாம்
வஞ்சி உரிச்சீர் விரவினும் வெண்பா
அருகுந தனிச்சொல் அசைச்சீர் அடியே.'

என்றார் ஆகலின்.

'அடிமுதற் பொருள்பெற வருவது தனிச்சொல்;
இறுதியும் வஞ்சியுள் இயலும் என்ப.'

என்றாலும் கருதிய பொருளைப் பயக்கும். 'அஃது' என்று மிகுத்துச் சொல்ல வேண்டியது என்னையோ! எனின், 'நான்கு பாவின் அடி முதற்கண்ணும் சீர் கூனாய் வரப்பெறும்,' என்பாராயினும், வஞ்சியடியின் முதற்கண் அசை கூனாய் வருவதும், உகர ஈறுகிய நேரீற்று இயற்சீர் கூனாய் வருவதும் சிறப்புடைய; வஞ்சியடியின் இடையும் இறுதியும் அசை கூனாய் வருவதன்றிச் சீர் கூனாய் வாராது; ஆண்டு உகர ஈறுகிய நேரீற்று இயற்சீர் அருகிக் கூனாய் வரவும் பெறும்; அச்சீர், அல்லாப் பாவின் அடி முதற்கண் அருகி அல்லது கூனாய் வாராது; கொச்சகக் கலியுள் ஓரடி கூனாய் வருமாயினும், சிறப்பில்லை; வெண்பா, ஆசிரியம், கலி என்னும் இவற்றின் அடியுள் இடையும் இறுதியும் கூன் வரப் பெறுது என்பது அறிவித்தற்கு வேண்டப்பட்டது.

வரலாறு:

'அடி, அதர்சேர்தலின் அகஞ்சிவந்தன.'

எனவும்,

'மா, எறிபதத்தான்* இடங்காட்ட' 2

எனவும் வஞ்சியடியின் முதற்கண் 'அடி' எனவும் 'மா' எனவும் அசை கூனாய் வந்தவாறு.

'வேந்து, வேல்வாங்கிப் பிடித்துருத்தலின்'

எனவும்,

'தெருவு, தேரோடத் தேய்ந்தகன்றன.'

எனவும் வஞ்சியடியின் முதற்கண் உகர ஈறுகிய நேரீற்று இயற்சீர் கூனாய் வந்தவாறு.

வஞ்சியடி இறுதி அசை கூனாய் வந்தன மேற்காட்டின எனக் கொள்க.

'வடாஅது,
பனிபடு நெடுவரை வடக்கும், தெனாஅ
துருகெழு குமரியின் தெற்கும், குணாஅது
கரைபொரு தொடுகடற் குணக்கும், குடாஅது
தொன்றுமுதிர் பௌவத்தின் குடக்கும், கீழது
முப்புணர் அடுக்கிய முறைமுதற் கட்டின்
நீர்நிலை நிவப்பின் கீழும் மேல' 3

என்னும் ஆசிரியத்துள், அடி முதற்கண் 'வடாஅது' என உகரஈறுகிய நேரீற்று இயற்சீர்க் கூன் அருகி வந்தது.

---

1 கலி 39:11 2 புறம் 4:7 3 புறம் 6:1-6
மி-ம் * எறித்தான்

பிறவற்றுள்ளும் வந்தவழிக் கண்டுகொள்க.

வஞ்சி அல்லாப் பாக்கள் அடி இடையும் இறுதியும் கூன் வாராதவாறு மேற் காட்டியவற்றுள்ளும் பிறவற்றுள்ளும் கண்டுகொள்க.

[குறள் வெண்பா]

'அடிமுதற்கண் நான்கிற்கும் சீர்கூனும்; ஆகும்
இடைகடையும் வஞ்சிக் கசை.'

என்றுரும் உளர்.

95] புறநடை

நிரல்நிறை முதலிய பொருள்கோட் பகுதியும்
அறுவகைப் பட்ட சொல்லின் விகாரமும்
எழுத்தல் இசையை அசைபெறுத் தியற்றலும்
வழுக்கா மரபின் வகையுளி சேர்த்தலும்
அம்மை முதலிய ஆயிரு நான்மையும்
வண்ணமும் பிறவும் மரபுளி வழாமைத்
திண்ணிதின் நடாத்தல் தெள்ளியோர் கடனே.

'இஃது என் நுதலிற்றோ?' எனின், மேற்சொல்லப்பட்ட செய்யுட்கட் கெல்லாம் எய்தியதோர் புறநடை இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இதன் பொழிப்பு: நிரல்நிறை முதலாகிய பொருள்கோளும், அறுவகைப் பட்ட சொல்லினது விகாரமும், எழுத்து அல்லாத கிளவியை அசைபெறுத்து இயற்றலும், வகையுளி சேர்த்தலும், அம்மை முதலாகிய எட்டு யாப்பலங் காரமும், வண்ணங்களும், மற்றொழிந்தனவும் வரலாற்று முறைமையோடும் பொருந்த நடாத்துதல் புலவர் கடன் (என்றவாறு).

I

நிரல்நிறை முதலிய பொருள்கோட் பகுதியாவன: நிரல்நிறையும், சுண்ண மொழி மாற்றும், அடி மறி மொழி மாற்றும், அடி மொழி மாற்றும், பூட்டு விற் பொருள்கோளும், புனல் யாற்றுப் பொருள் கோளும், அளை மறி பாப்புப் பொருள் கோளும், தாப்பிசைப் பொருள் கோளும், கொண்டு கூட்டுப் பொருள் கோளும் என இவ்வொன்பதும் எனக் கொள்க.

அவற்றுள், (1) நிரல்நிறைப் பொருள்கோள் இரண்டு வகைப்படும்: பெயர் நிரல் நிறையும், வினை நிரல்நிறையும் என.

அவற்றுள் பெயர் நிரல்நிறை வருமாறு:

[இன்னிசை வெண்பா.]

'கொடிகுவளை கொட்டை நுசுப்புண்கண் மேனி
மதிபவளம் முத்தம் முகம்வாய் முறுவல்
பிடிபிணை மஞ்ஞை நடைநோக்குச் சாயல்
வடிவினளே வஞ்சி மகள்.'

எனவும்,

[நிலைமண்டில ஆசிரியப்பா]

'பொறையன் செழியன் பூந்தார் வளவன்
கொல்லி கொற்கை நல்லிசைக் குடந்தை
பாவை முத்தம் பல்லிதழ்க்* குவளை
மாயோள் முறுவல் மழைப்பெருங் கண்ணே.'

எனவும்,

[நேரிசை வெண்பா]

'கடைசெப்பும் வேயும் கதிர்முலையும் தோளும்;
இடைசெப்பின் ஏர்கொடி; அன்னம்—நடைசெப்பின்;
வண்டுவாழ் கூந்தலாள் வாயும் மடநோக்கும்
தொண்டைமான் ஆறை மகட்கு.'

எனவும்,

'வாக்கு முகந்தேன் மலர்க்கமலம்; வண்குவளைப்
பூக்குரும்பை வேய்கண் புணர்முலைதோள்;—நோக்கல்குல்
மான்றேர்; மயிந்தன் மணியருவி வேங்கடத்துத்
தேன்றேர் குறவர் மகட்கு.'

எனவும்,

'பூமலை நீர்உறையுள்; புள்ஏறு புள்கொடி;
வாய்மைவேல் ஆழி படைக்கலம்;—நாமம்
பிரமன் இறைக்கண்ணன்; பொன்நீக்கார் மேனி;
கருமம் படைப்பழிப்புக் காப்பு.'

எனவும்,

'காமவிதி கண்முகம்; மென்மருங்குல் செய்யவாய்
தோமில் துகடினி; சொல்லமுதம்;—தேமலர்க்
காந்தள் குரும்பை கனகம் மடவாள்கை
ஏந்திளங் கொங்கை எழில்.'

எனவும் கொள்க. (இஃது எழுத்து மாறு நிரல்நிறை.) இஃது எழுத்தாற் கொள்ளுமாறு: 'காவி கண்,' என்றும், 'மதி முகம்,' என்றும், 'துடி மருங்குல்' என்றும், 'கனி வாய்,' என்றும் விடுக்க.

இனி, வினை நிரல்நிறை வருமாறு:

[இன்னிசை வெண்பா]

'அடல்வேல் அமர்நோக்கி நின்முகம் கண்டே
உடலும் இரிந்தோடும் ஊழ்மலரும் பார்க்கும்
கடலும் கனையிருளும் ஆம்பலும் பாம்பும்
தடமதியம் ஆம்என்று தாம்.' 1

எனவும்,

[நேரிசை வெண்பா]

'காதுசேர் தாழ்குழையாய் கன்னித் துறைச்சேர்ப்ப;
போதுசேர் தார்மார்ப! போர்ச்செழிய!—நீதியால்
மண்அமிர்தம் மங்கையர்தோள் மாற்றுரை ஏற்றூர்க்கு
நுண்ணிய வாய பொருள்.'

எனவும்,

1 யா. வி. 51 உரைமேற். தொல். பொ. 403 உரைமேற்
பி-ம். *மாயிதழ்க்

'உண்டேர்ந் துதைத்தழித் தூதிக்காத் தேற்றளந்து
கொண்டெடுத்து வாய்போழ்ந்து சென்றுக்கிக்—கண்டறுத்தாள்
பேய்முலை புட்சகடம் சோகோடா நீர்நிலம்
பூமலைமா தூதமிர்தம் நஞ்சு.'

எனவும்,

'இறுத்தொசித் தட்டுதைத் தேந்திப்போழ்ந் தாடிப்
பறித்தெறிந் தூர்ந்தணைந்து காத்தான்—செறுத்த
விடைகுருந்தம் மல்லன் உருள்மலைமா கூத்துப்
படைவிளவு புட்பாம் பினம்.'

எனவும்,

[தரவு கொச்சகம்]

'பேய்முலை வியன்ஞாலம் பூங்குருந்தம் மதவேழம்
வாய்மருப் பொழிலேறு வாட்கண்ணார் குரவைச்சீர்
உண்டானும் அளந்தானும் ஒசித்தானும் காத்தானும்
கொண்டானும் கொடுத்தானும் கொடியுவணத் தானரோ.' 1

எனவும் இன்ன பிறவும் வந்தவாறு கண்டுகொள்க.

இனி, முறை நிரல்நிறை, எதிர் நிரல்நிறை, மயக்க நிரல்நிறை என்று வேண்டுவாரும் உளர்.

அவற்றுள் (க) முறை நிரல்நிறை வருமாறு:

[அறுசீர் ஆசிரிய விருத்தம்]

'பிரமன்மால் பிணுகி இந்து பேரிருள் செம்மை பீதம்
விரவலில் வெண்மை வட்டம் மிக்கமுக் கோணம் நாற்கோண்
வரிசிலை வாயு வன்னி மாநிலம் வருண ராசன்
பரலவம் எடுத்தல் ஏந்தல் இழித்தலே கெடுத்த லாறே.' *

எனவும்,

'இருணிறம் வளையம் வாயு எடுப்புதல் பிரமன் யஃகான்
எரிதிரி கோணம் செம்மை ஏற்றன்மால் இரேபை யாகும்
பெருநிலம் சதுரம் பீதம் பிணுகிகோள் இழைத்த லஃகான்
வருணன்விற் றவளம் விந்து மாற்றுதல் வகாரம் வித்தே.'

எனவும்,

[தரவு கொச்சகம்]

'புள்ளிப் போறியே சுடர்நந்தி போர்க்குலிசம்
வள்ளிதழ்த் தாமரையும் வைக்கவம் மண்டலத்தே
மண்டலத்தைப் புள்ளின் வதன முதலாகக்
கொண்டழியச் சிந்திப்பக் குன்றும் கொடுவிடமே.'

எனவும்,

---

1 இஃது இரண்டடி எதுகைச் செய்யுள்.
பி-ம், * [illegible]மே.

[அறுசீர் ஆசிரிய விருத்தம்]

'அடிமுழந் தாளோ டுந்தி அணிமிட றுதி யாகப்
படுபனி கந்த முந்நீர் பருதியஞ் சனமென் றின்ன
வடிவுடை வயின தேயன் வலிமிகு நகுலன் குக்கில்
இடியுரு மேற்றே டின்ன இயைந்தவ னாகத் தானே.'

எனவும்,

[குறள் வெண்பா]

'முறிமேனி; முத்தம் முறுவல்; வெறிநாற்றம்;
வேல்உண்கண் வேய்தோள் அவட்கு.' 1

எனவும்,

[குறள் வெண்பா]

'வாய்பவளம்; வேய்தோள்; மருங்குல் இளவஞ்சி
ஆய்மலர்க் கோதை அவட்கு.'

எனவும்,

[அறுசீர் ஆசிரிய விருத்தம்]

'ஆனை ஊற்றின் மீன்சுவையின் அசுணம் இசையின் அளிநாற்றத்
தேனைப் பதங்கம் உருவங்கண் டிடுக்கண் எய்தும்; இவ்வனைத்தும்*
கான மயிலஞ்† சாயலர் காட்டிக் கௌவை விளைத்தாலும்‡
மான மாந்தர் எவன்கொலோ வரையா தவரை வைப்பதே! 2

எனவும்,

'மலைமுலை நீராடை மாரிமென் கூந்தல்'

எனவும், இன்னவை பிறவும் முறை நிரல்நிறை.

பிறவும் வந்த வழிக் கண்டுகொள்க.

எதிர் நிரல்நிறை வருமாறு:

[நேரிசை ஆசிரியப்பா]

'குன்ற வெண்மணல் ஏறி நின்றுநின்
றின்னம் காண்கம்§ வம்மோ தோழி!
களிறும் கந்தும் போல நளிகடல்
கூம்பும் கலனும் தோன்றும்
தோன்றல் மறந்தோர் துறைகெழு¶ நாட்டே.'

எனவும்,

[கலி விருத்தம்]

'அனந்தனும் குளிகனும் ஆதி யாகிய
நனந்தலைப் பெருங்குலம் நான்கு நாட்டிய
கனங்கெழு கருடனா‖ லகத்துக் காணலாம்
இனம்புரி எதிர்நிரல் நிறையும் என்பவே.'

எனவும்,

---

1. குறள் 1113. 2. சாந்திரபுராணம்

பி-ம் * இவையெல்லாம். † மயிலின் ‡ விளைத்தாலும் § காண்குவயம் ¶ துனைகெழு
‖ கருடர்நா.

'நெருப்பினும் நிலத்தினும் நிவந்த காற்றினும்
திருத்தகு நீரினும் திருந்தத் தோன்றிய
பெருக்கிய தவளமே பீதம் செம்மையோ
டிருட்பிழம் பெனவுணர் இவற்றின் வண்ணமே.'

எனவும்,

[குறள் வெண்பா]

'கழாஅக்கால் பள்ளியுள் வைத்தற்றூற் சான்றோர்
குழாஅத்துள் பேதை புகல்.' 1

எனவும்,

'விலங்கொடு மக்கள் அனையர் இலங்குநூல்
கற்றாரோ டேனை யவர்.' 2

எனவும்,

[இன்னிசை வெண்பா]

'வில்லம்பு வேய்தோள் விலங்கரிக்கண் வெல்புருவம் *
பல்வாய் மொழிதேன் பவளம் பனிமுத்தம்
நல்லாயூர் அன்னாள் நடைசாயல் நோக்கமான்
மல்குசீர் மஞ்ஞை பிடி.'

எனவும்,

[நேரிசை வெண்பா]

'ஆடவர்கள் எவ்வா றகல்வரணி வெஃகாவும்
பாடகமும் ஊரகமும் பஞ்சரமா—நீடியமால்
நின்றான் இருந்தான் கிடந்தான் இதுவன்றோ
மன்றார் மதிற்கச்சி † மாண்பு?' 3

எனவும் கொள்க.

மயக்க நிரல்நிறை வருமாறு :

[இன்னிசை வெண்பா]

'கண்ண் கருவிளை; கார்முல்லை கூரெயிறு;
பொன்ன் பொறிசுணங்கு; போழ்வாய் இலவம்பூ;
மின்ன் நுழைமருங்குல்; மேதகு சாயலாள்
என்ன் பிறமகளா மாறு?' 4

எனவும்,

[ஆசிரிய இணைக்குறட்டுறை]

'இரங்கு குயின் முழவா, இன்னிசையாழ் தேனா,
அரங்கம் அணிபொழிலா ஆடும் போலும் இளவேனில்!
அரங்கம் அணிபொழிலா ஆடு மாயின்,
மரங்கொல் மணந்தகன்றார் நெஞ்சமென் செய்த திளவேனில்' 5

எனவும் வரும்.

இனி ஒருசார் ஆசிரியர், நிறை எண் நிரல்நிறை, குறை எண் நிரல்நிறை, மிகை எண் நிரல்நிறை என்று வேண்டுவோரும் உளர் எனக் கொள்க.

---

1. குறள் 849. 2. குறள் 410. 3. இது திருமழிசைஆழ்வார் அடியாராகிய கணிகண்ணர் இயற்றிய பாட்டு, தண்டி 67 உரைமேற். 4. யா.வி. 3 உரைமேற். 5. யா. வி. 52, 76 உரைமேற்.

பி.ம் : * வேல்புருவம் † கலிக்கச்சி, மலிகச்சி, பொழிற்கச்சி.

**வரலாறு :**

[கலி விருத்தம்]

'சாந்தும் தண்டழை யுஞ்சுர மங்கையர்க்
கேந்தி நின்றன இம்மலை ஆரமே;
வாய்ந்த பூம்பெடை யும்மலர்க் கண்ணியும்
ஈய்ந்த சாய்கைய இம்மலை ஆரமே.' 1

இதனுள் இரண்டு பொருள் நிறுவிப் பின்னும் இரண்டு பொருள் நிறுவின மையால், **நிறை எண் நிரல்நிறை.**

[கலி நிலைத்துறை]

'யானும் தோழியும் ஆயமும் ஆடும் துறைநண்ணித்
தானும் தேரும் பாகனும் வந்தென் நலனுண்டான்
தேனும் பாலும் போல்வன சொல்லிப் பிரிவானேற்
கானும் புள்ளும் கைதையும் எல்லாம் கரியன்றே?' 2

இதனுள் மூன்று பொருள் நிறுவி, ஒரு வழி இரண்டே நிறுவினமையால், **குறை எண் நிரல்நிறை.**

[அறுசீர் ஆசிரிய விருத்தம்]

'ஆசை அல்குல் பெரியாரை அருளும் இடையும் சிறியாரைக்
கூச மொழியும் புருவமும் குடில மாகி இருப்பாரை
வாசக் குழலும் மலர்க்கண்ணும் மனமும் கரிய மடவாரைப்
பூசல் பெருக்க வல்லாரைப் பொருந்தல் வாழி மடநெஞ்சே!' 3

இதனுள் இரண்டு பொருள் நிறுவிப் பின் ஒரு வழி மூன்று பொருள் நிறுவினமையால், **மிகை எண் நிரல்நிறை.** பிறவும் அன்ன.

இனி ஒருசார் ஆசிரியர், **ஒரு முதல் நிரல்நிறை, இரு முதல் நிரல்நிறை, உய்த்துணர் நிரல்நிறை** என்று வேண்டுவாரும் உளர்.

**வரலாறு :**

[நேரிசை வெண்பா]

'மீனொடு தண்டேறு வேதியர் ஆதியா
ஆறாத ஐந்தொன்பான் ஆயினவும்—தேனார்
விரைக்கமல வாண்முகத்தாய்! வெள்ளை முதலா
உரைத்தனவும் இவ்வாறே ஒட்டு.' 4

இது முதல் நிறுத்த முறையானே முற்றும் நிறுவாது, முதல் ஒன்றே சொன்னமையால், **ஒரு முதல் நிரல்நிறை.**

'வெண்பா முதலாக வேதியர் ஆதியா
மண்பால் வகுத்த வருணமாம்;— ஒண்பா
இனங்கட்கும் இவ்வாறே என்றுரைப்பர் தொன்னூல்
மனந்தட்பக் கற்றார் மகிழ்ந்து.' 5

இஃது இரு திறமும் முதலே சொன்னமையால், **இரு முதல் நிரல்நிறை.**

---

1. சூளா சீய 180 2. யா. வி. 28, 88 உரைமேற். 3. நாரத சரிதை. 4. யா. வி 95 உரைமேற், 5 யா. வி. 55, 95 உரைமேற்.

'செய்யோன் செழும்புகரோன் தெள்ளியோன் தேய்கதிரோன்
வெய்யோன் புதன்வெளியோன் வென்றிசெய் *—பொய்யாப்பொன்
செல்லாச் சனிகாரி தேவர்கோன் மந்திரியே
இல்காற் றிறைவரா வார்.'

[கலி விருத்தம்]

'சேய்புகர் மால்மதி ஆளுமுன் னுளினைக்
காய்கதிர் மால்பகர் சேயிடை நாளினை †
மாசறு பொன்சனி காரிபொன் னுங்கடை
ஆசறு நாள்களை அஞ்சக வூணே.'

இது பன்னிரண்டு பொருள் நிறுவி, ஒழிந்தவற்றை ஆதியும் கடையும் கொள்ளாது ஓர் இராசிக்கும் காலுக்கும் இறைவர் என்று பேர் குறியாது சொன்னாராயினும், 'மேடம்' முதலாகிய இராசி என்று மேடத்தின முதற் காலும் முதல் நாளின் முதற்காலும் என்று உய்த்துணர வைத்தமையால், **உய்த்துணர் நிரல்நிறை.**

அஞ்சகம் ஒரு நாளுக்கு நாலு காலாக ஒட்டிக்கொள்க.

[நேரிசை வெண்பா]

'பூமன் தெறுகதிரோன் பொன்காரி ஒண்புகரோன்
வாமப் புதன்வெளியோன் மாமந்தன்—சோமன்சேய்
சந்திரனே செவ்வாய் சதமகன்றன் மந்திரியே
அந்திரையக் காணமாள் வார்.'

[அறுசீர் ஆசிரிய விருத்தம்]

'ஆடரிவி லாதிநடு அந்தமுறை சேயிரவி அம்பொ னயினும்
தேடுசுற வேறுசனி வெள்ளிபுத னள்ளுமெறி தேள லவன்மீ
னேடுமுயல் திங்களினெ டங்கிகுரு வுண்டலணர் தண்டு துலைநீர்
மூடுகுட மோடுபுகர் காரிபுத னேரிதனை உண்ணு முறையே.'

இவையும் **உய்த்துணர் நிரல்நிறை.** இவ்விரண்டும் **திரையக் காணம்.** ஓர் இராசி மும்மூன்றாக ஒட்டிக்கொள்க.

இனி ஒருசார் ஆசிரியர், நிரல்நிறையைத் தொடைப்பாற் படுத்து, அடி நிரல்நிறை, இணை நிரல்நிறை, பொழிப்பு நிரல்நிறை, ஒரூஉ நிரல்நிறை, கூழை நிரல்நிறை, மேற்கதுவாய் நிரல்நிறை, கீழ்க்கதுவாய் நிரல்நிறை, முற்று நிரல் நிறை என்று வேண்டுவாரும் உளர் எனக் கொள்க.

வரலாறு :

[நேரிசை வெண்பா]

'முலைகலிங்கம் மூரி நிலமா மகட்கு
மலைபாரவை ; மாரிமென் கூந்தல் ;—குலநதி
தண்ணாரம் காஞ்சி தகைசால் முகமவட்குக்
கண்ணாவான் ஏறுயர்த்த கோ.'

எனவும்,

---

பி-ம்: * வென்றிசெய், † தாளினை.

[குறள் வெண்பா]

'கொடிவடிவேல் கூட்டழிக்கும் கொவ்வைவாய் மாதர்
இடைநெடுங்கண் என்னும் உறுப்பு.'

எனவும் இவை அடிதோறும் முதற்சீர்கண்ணே நிரல்நிறுத்தமையான், அடி நிரல்நிறை.

[நேரிசை வெண்பா]

'நண்ணினர்க்கும் நண்ணார்க்கும் நாடோறும் கோடாமைத்
தண்ணியராய் வெய்யராய்த் தக்காரோ—டெண்ணிக்
கருங்கடல்சூழ் மாநிலத்தைக் காப்பதாம் அன்றே
இருங்கழற்கால் வேந்தர்க் கியல்பு?'

எனவும்,

[கலி விருத்தம்]

'எண்ணினர் எண்ணகப் படாத செய்கையான்
அண்ணினர் அகன்றவர் திறத்தும் ஆணையான்
நண்ணினர் பகைவரென் றிவர்க்கு நாடொறும்
தண்ணியன் வெய்யனத் தானே வேந்தனே.' 1

எனவும் இவை முதல் இரு சீர்க்கண்ணும் நிரல்நிறுத்தமையால், இணை நிரல் நிறை.

[நேரிசை வெண்பா]

'புருவமும் பூணர் புணர்முலையும் கூறின்,
வரிசிலையும் மாண்பமைந்த கோங்கும்;—தெரியுங்கால்
நல்லிடை மெல்லியலார் நாட்டம் இவையிரண்டும்
வல்லி வசைதீர் மலர்.'

இது முதற் சீர்க்கண்ணும் மூன்றும் சீர்க்கண்ணும் நிரல் நிறுத்தமையால், பொழிப்பு நிரல்நிறை.

[இன்னிசை வெண்பா]

'புரிகுழலும் பூணர் முலையாள் திருமுகமும்
கொன்றையும் குன்றூ தொளிசிறக்கும் திங்களும்
என்றுரைப்பின் அல்ல தினிவே றுவமமற்
றென்றுரைக்க லாமோ ஒருங்கு?'

இது முதற் சீர்க்கண்ணும் நான்காம் சீர்க்கண்ணும் நிரல் நிறுத்தமையால், ஒரூஉ நிரல்நிறை.

'கண்ணும் புருவமும் மென்றோளும் இம்மூன்றும்
வள்ளிதழும் வில்லும் விறல்வேயும் வெல்கிற்கும்;
பல்லும் பகரும் மொழியும் இவையிரண்டும்
முல்லையும் யாழும் இகும்.' 2

இது நான்காம் சீர் இன்றி முதல் மூன்று சீர்க்கண்ணும் நிரல் நிறுத்தமை யால், கூழை நிரல்நிறை.

1. சூளா. நகரப். 17. 2. யா. வி.

'பல்லும் பணிமொழியாள் வாயும் பணைமுலேயும்
முல்லேயும் முந்நீர்ப் பவளமும் கோங்கரும்பும்
நல்லிணர்க் கோதை நறுநுதலும் நாட்டமும்
வில்லும் கயலும் இரும்.'

இஃது இரண்டாம் சீர்க்கண் இன்றி ஒழிந்த மூன்று சீர்க்கண்ணும் நிரல் நிறுத்தமையால், மேற்கதுவாய் நிரல்நிறை.

[நிலேமண்டில ஆசிரியப்பா]

'பொறையன் செழியன் பூந்தார் வளவன்
கொல்லி கொற்கை நல்லிசைக் குடந்தை
பரவை முத்தம் பல்லிதழ்க் குவளே
மாயோண் முறுவல் மழைப்பெருங் கண்ணே.' 1

இது மூன்றும் சீர்க்கண் இன்றி, ஒழிந்த மூன்று சீர்க்கண்ணும் நிரல் நிறுத் தமையால், கீழ்க்கதுவாய் நிரல்நிறை.

[இன்னிசை வெண்பா]

'அடல்வேல் அமர்நோக்கி நின்முகம் கண்டே
உடலும் இரிந்தோடும் ஊழ்மலரும் பார்க்கும்
கடலும் கனேயிருளும் ஆம்பலும் பாம்பும்
தடமதியம் ஆமென்று தாம்.' 2

என்பது நான்கு சீர்க்கண்ணும் நிரல்நிறுத்தமையால், முற்று நிரல்நிறை.

'இரண்டும் நான்கும் எட்டும் இரட்டியும்
இரண்டடி ஓரடி முச்சீர் இருசீர்
நிரந்த முறைமையின் நீர்த்திரை போல்வரின்
அம்போ தரங்கமென் றறிந்தனர் கொளலே.'

இதுவும் அது.

இனி, ஒருசார் ஆசிரியர்,

'பகற்செய்யும் செஞ்ஞாயிறும்
இரவுச் செய்யும் வெண்டிங்களும்' 3

என இவ்வாறு வருவனவற்றை முரண் நிரல்நிறை என்று வேண்டுவர்.

'நிரல்நிறை தானே,
வினேயினும் பெயரினும் நினேயத் தோன்றிச்
சொல்வேறு நிலேஇப் பொருள்வேறு நிலேயும்.'

என்பது நிரல்நிறைக்கு இலக்கணம்.

(2) சுண்ண மொழி மாற்று வருமாறு:

[இன்னிசை வெண்பா]

'சுரையாழ அம்மி மிதப்ப வரையனைய
யானேக்கு நீத்து முயற்கு நிலேயென்ப
கானக நாடன் சுனே.' 4

இதனுள், 'சுரை' என்று நின்றது 'மிதப்ப' என்பதனோடு பொருள் கொள்ளவும், 'அம்மி' என்று நின்றது 'ஆழ' என்பதனோடு பொருள்

1. யா. வி. பக். 2. யா. வி. 51, 95 உரைமேற். 3. பத்துப். மதுரைக். 7. 8.
4. யா. வி. 59 உரைமேற்.

கொள்ளவும், யானைக்கு' என்று நின்றது 'நிலை' என்பதனோடு பொருள் கொள்ளவும், 'முயற்கு' என்று நின்றது 'நீத்து' என்பதனோடு பொருள் கொள்ளவும் வந்தமையால், சுண்ணமொழி மாற்று.

'சுண்ணந் தானே,
பட்டாங் கமைந்த ஈரடி எண்சீர்
ஒட்டுவழி அறிந்து துணிந்தனர் இயற்றல்.'

என்றாராகலின்.

(3) அடிமறி மொழி மாற்று வருமாறு :

[அடி மறி மண்டில ஆசிரியப்பா]

'சூரல் பம்பிய சிறுகான் யாறே;
சூரர மகளிர் ஆரணங் கினரே;
வாரலை* எனினே யானஞ் சுவலே;
சாரல் நாட! நீவர லாறே.' 1

எனவும்,

'மாறுக் காதலர் மலைமறந் தனரே;
ஆறுக் கட்பனி வரலா னவே;
ஏறு மென்றோள் வளைநெகி ழும்மே;
கூறுய் தோழியான் வாழு மாறே.' 2

எனவும்,

'இட்டில் இரும்புழை இருளிய பொழுதே;
பட்டி உளியம் கொட்கும் ஆங்கே;
பொற்றொடி உண்கண் நீர்நில் லாவே;
வெற்ப! வாரல் வியன்மலை யாறே.'

எனவும் கொள்க. இவை வேண்டிற்று ஓரடி முதலாகச் சொன்னாலும் பொருள் கொண்டு நிற்றலால், அடி மறி மொழி மாற்று.

'அடிமறிச் செய்தி அடிநிலை திரிந்து
சீர்நிலை திரியாது தடுமா றும்மே.'

என்பவாகலின்.

(4) அடி மொழி மாற்று வருமாறு :

[குறள் வெண்பா]

'ஆலத்து மேல குவளை குளத்துள
வாலின் நெடிய குரங்கு.'

இதனுள் 'ஆலத்து மேல' என்பதனோடு 'வாலின் நெடிய குரங்கு' என்பதனைக் கூட்டியும், 'குவளை' என்பதனோடு 'குளத்துள' என்பதனைக் கூட்டியும் பொருள் கொண்டமையால், அடி மொழி மாற்று; 'இரண்டடி மொழி மாற்று' எனவும் அமையும்.

'மொழிமாற் றியற்கை,
சொல்நிலை மாற்றிப் பொருளெதிர் இயைய
முன்னும் பின்னும் கொள்வழிக் கொளாஅல்.' 3

என்பவாகலின்.

---

1—2 யா. வி. 73 உரைமேற். 3. தொல். சொல். 409.

பி-ம் * வாரல்

[குறள் வெண்பா]

'குன்றத்து மேல குவளை குளத்துள
செங்கோடு வேரி மலர்.'

எனவும்,

'உள்ளடி உள்ளன ஓலை செவியுள
முள்ளஞ்சித் தொட்ட செருப்பு.'

எனவும் இன்னவை பிறவும் அன்ன.

[பஃறொடை வெண்பா]

'சொல்லாதல் சொல்லின் பொருளாதல் முன்முறைவைத்
தவ்வகை நேர்கொள் நிரல்நிறையாம்; அவ்வவ்
விடையிட் டெதிரும் விராய்ச்சொல் இடையிடை
இட்டன சுண்ணம்; இரண்டடியாற் சொல்வர
நிற்ப தடிமொழி மாற்றல்; அலதடி
மறியா முழுதும்யாப் பு.'

இதனைப் பதம் நெகிழ்த்து உரைத்துக் கொள்க.

(5) பூட்டுவிற் பொருள்கோள் வருமாறு :

[நேரிசை வெண்பா]

'திறந்திடுமின் தீயவை பிற்காண்டும்; மாதர்
இறந்து படிற்பெரிதாம் ஏதம்;—உறந்தையர்கோன்
தண்ணார மார்பிற் றமிழ்நர் பெருமானைக்
கண்ணாரக் காணக் கதவு.' 1

இதனுள், 'திறந்திடுமின்' என்பது 'கதவு' என்பதனோடு பொருள் நோக்கு உடைமையின் **பூட்டுவிற் பொருள்கோள் ஆயிற்று.**

(6) புனல் யாற்றுப் பொருள்கோள் வருமாறு :

[இன்னிசை வெண்பா]

'அலைப்பான் பிறவுயிரை ஆக்கலும் குற்றம்;
விலைப்பாலிற் கொண்டூன் மிசைதலும் குற்றம்;
சொலற்பால அல்லாத சொல்லுதலும் குற்றம்;
கொலைப்பாலும் குற்றமே ஆம்.' 2

இஃது அடிதோறும் பொருள் அற்று மீளாது சேறலின், **புனல் யாற்றுப் பொருள்கோள்** ஆயிற்று.

(7) அளை மறி பாப்புப் பொருள்கோள் வருமாறு :

[அறுசீர் ஆசிரிய விருத்தம்]

'தாழ்ந்த உணர்வினராய்த் தாளுடைந்து
தண்டூன்றித் தளர்வார் தாமும்
சூழ்ந்த வினையாக்கை சுடவிளிந்து
நாற்கதிக்கட் சுழல்வார் தாமும்,
மூழ்ந்த பிணிநலிய முன்செய்த
வினையென்றே முனிவார் தாமும்
வாழ்ந்த பொழுதினே வானெய்தும்
நெறிமுன்னி முயலா தாரே.'

1 முத்தொள், 2. நான்மணி. 26 : யா. வி. 40 உரைமேற்.

இதனுள், 'வாழ்ந்த பொழுதினே வானெய்தும் நெறிமுன்னி முயலாதார்' என்னும் இறுதிச்சொல் முதலும் இடையும் சென்று மறிந்து பொருள் கோடலின், அளை மறி பாப்புப் பொருள்கோள் ஆயிற்று.

(8) தாப்பிசைப் பொருள்கோள் வருமாறு:

[குறள் வெண்பா]

'உண்ணுமை உள்ள துயர்நிலை ஊனுண்ண
அண்ணுத்தல் செய்யா தளறு.' 1

இஃது, 'ஊன் உண்ணுமை உள்ளது உயிர்நிலை', எனவும், 'ஊன் உண்ண அண்ணுத்தல் செய்யாது அளறு,' எனவும் நடு நின்ற 'ஊன்' என்னும் சொல்லே முதலும் இறுதியும் நின்று பொருள் கொண்டமையால், தாப்பிசைப் பொருள்கோள் ஆயிற்று.

(9) கொண்டு கூட்டுப் பொருள்கோள் வருமாறு:

[நேரிசை ஆசிரியப்பா]

'குவியிணர்த் தோன்றி ஒண்பூ அன்ன
தொகுசெந் நெற்றிக் கணங்கொள் சேவல்
நள்ளிருள் யாமத் தில்லெலி பார்க்கும்
பிள்ளை வெருகிற் கல்கிரை ஆகிக்
கடுநவைப் படீஇயரோ நீயே; நெடுநீர்
யாணர் ஊரனொடு வதிந்த
ஏம இன்றுயில் எடுப்பி யோயே!' 2

இதனுள், 'தொகுசெந் நெற்றிக் கணங்கொள் சேவல்' என்பதனையும், 'கடுநவைப் படீஇயரோ நீயே,' என்பதனையும், 'இன்றுயில் எடுப்பியோய்,' என்பதனையும் கூட்டிப் பொருள் கொண்டமையால், கொண்டு கூட்டுப் பொருள்கோள் ஆயிற்று.

[இன்னிசை வெண்பா]

'தெங்கங்காய் போலத் திரண்டுருண்ட பைங்கூந்தல்
வெண்கோழி முட்டை உடைத்தன்ன மாமேனி
அஞ்சனத் தன்ன பசலை தணிவாமே
வங்கத்துச் சென்றார் வரின்.' 3

இதனுள், 'அஞ்சனத் தன்ன பைங்கூந்தல்' எனவும், 'தெங்கங்காய் போலத் திரண்டு உருண்ட வெண்கோழி முட்டை உடைத்தன்ன பசலை' எனவும் சொற்களைக் கொண்டு கூட்டிப் பொருள் கொண்டமையால், இதுவும் கொண்டு கூட்டுப் பொருள்கோள் ஆயிற்று.

[நேரிசை வெண்பா]

'ஆரிய மன்னர் பறையின் எழுந்தியம்பும்
பாரி பறம்பின்மேற் றண்ணுமை—காரி
விறன்முள்ளூர் வேங்கை வெதிர்நாணுந் தோளாய்
திறனுள்ளூர் உள்ள தலர்.'

இதனுள், 'வெதிர் நாணும் தோளாய்!' என்றும், 'திறன் வேங்கை' என்றும், 'அலர் ஆரிய மன்னர் பறையின் எழுந்தியம்பும்' என்றும் சொற்களைக் கொண்டு கூட்டிப் பொருள் கொண்டமையால், இதுவும் அது. பிறவும் அன்ன.

---

1. குறள், 255 2. குறுந் 107 3. இதனை நேமிநாத உரையாசிரியர், மொழிமாற்றிற்கு உதாரணம் காட்டினர்.

கொண்டு கூட்டுழித் தன்னுள்ள சொல்லாதல் பொருளாதல் கொணர்ந்து கூட்டிச் சொல்லப்படுவனவும், தன் இல்லாத சொல்லாதல் பொருளாதல் கொணர்ந்து கூட்டிச் சொல்லப்படுவனவும் என நான்காம். அவை வந்த வழிக் கண்டு கொள்க.

நிரல்நிறை, சுண்ணம், அடி மறி மொழி மாற்று, அடி மொழி மாற்று என்னும் இந்நான்கினோடும், பூட்டு வில், புனல் யாறு, தாப்பிசை, அளை மறி பாப்பு, கொண்டு கூட்டு என்னும் இவ்வைந்து செய்யுட் பொருள்கோளும் உறழ, இருபதாம். அவை வந்த வழிக் கண்டு கொள்க.

இருபது வகையானும் காட்டினுர் அவிநயனுர் எனக் கொள்க.

ஆதித் தீபகம், அந்தத் தீபகம், மத்திமத் தீபகம், சிங்க நோக்கு, தேரைத் தத்து, பாசி நீக்கு, ஒரு சிறை நிலை என்று இவ்வகையாற் பொருள்கோள் சொல்வாரும் உளர். அவையும் அவற்றுள்ளே அடங்கும் எனக் கொள்க. அவை எல்லாம் வல்லார்வாய்க் கேட்டு உணர்க. ஈண்டு உரைப்பிற் பெருகும்.

## II

அறுவகைப்பட்ட சொல்லின் விகாரமாவன :

> 'அந்நாற் சொல்லும் தொடுக்குங் காலை
> வலிக்கும்வழி வலித்தலும், மெலிக்கும்வழி மெலித்தலும்,
> விரிக்கும்வழி விரித்தலும், தொகுக்கும்வழித் தொகுத்தலும்,
> நீட்டும்வழி நீட்டலும், குறுக்கும்வழிக் குறுக்கலும்
> நாட்டல் வலிய என்மனுர் புலவர்.' 1

என்று ஓதப்பட்டன.

வரலாறு :

> குறுத்தாட் பூதம் சுமந்த
> அறக்கதிர் ஆழியெம் அண்ணலைத் தொழவே.'

இதனுள், '**குறுந்தாள்**' என்பதனைக் '**குறுத்தாள்**' என்று வலிக்கும் வழி வலித்தவாறு.

> '**தண்டை**யின் இனக்கிளி கடிவோள்
> பண்டையள் அல்லள் மானேக் கினளே.'

இதனுள், '**தட்டை**' என்னும் சொல்லைத் '**தண்டை**' என்று மெலிக்கும் வழி மெலித்தவாறு.

[இன்னிசை வெண்பா]

> 'வெண்மணல் எக்கர் விரிதிரை தந்தநீர்
> கண்ணுடி மண்டிலத் தூதாவி ஒத்திழியும்
> தண்ணந் துறைவர் தகவிலரே தற்சேர்ந்தார்
> வண்ணம் கடைப்பிடியா தார்.'

இதனுள், '**தண்டுறைவர்**' எனற்பாலதனைத் '**தண்ணந்துறைவர்**' என விரிக்கும்வழி விரித்தவாறு.

---

1. தொல். சொல். 71

[நேரிசை வெண்பா]

'பூத்தாட் புறவிற் புனமதில் கைவிடார்
காத்தவிக் காவலர்; ஏனையார்—பாத்துரூர்
வேண்டார் வணக்கி விறன்மதில் தான்கோடல்
வேண்டுமாம் வேண்டார் மகன்.'

இதனுள் 'வேண்டாதாரை வணக்கி, எனற்பாலதனை 'வேண்டார் வணக்கி' என்று தொகுக்கும் வழித் தொகுத்தவாறு.

'பாசிழை ஆகம் பசப்பித்தான் பைந்தொடியை
மாசேனன் என்று மனங்கொளீஇ—மாசேனன்
சேயிதழ்க் கண்ணி தருகிலான் * சேர்த்தியென்
நோய்தீர நெஞ்சின்மேல் வைத்து.'

இதனுள், 'பச்சிழை' எனற்பாலதனைப் 'பாசிழை' என நீட்டும் வழி நீட்டியவாறு.

—'யானை
எருத்தத் திருந்த இலங்கிலைவேல் தென்னன்
திருத்தார்நன் றென்றேன் தியேன்.' 1

இதனுள் 'தீயேன்' எனற்பாலதனைத் 'தியேன்' என்று குறுக்கும் வழிக் குறுக்கியவாறு.

பிறவும் அன்ன. 'அறுவகைப்பட்ட சொல்லின் விகாரமும்' என்ற உம்மையால், தலைக்குறைத்தலும், இடைக்குறைத்தலும், கடைக்குறைத்தலும் என இவையும் வரலாற்று முறைமையோடும் கூட்டி வழங்கப்படும்.

வரலாறு:

'மரையிதழ் புரையும் அஞ்செஞ் சீறடி'

இதனுள், 'தாமரை' எனற்பாலதனை 'மரை' என்று தலைக்குறைத்து வழங்கியவாறு.

'வேதின வெரிநின் ஓதி முதுபோத்து' 2

இதனுள், 'ஓந்தி' எனற்பாலதனை 'ஓதி' என்று இடைக் குறைத்தவாறு.

'அகலிரு விசும்பின் ஆஅல் போல
வாலிதின் விரிந்த புன்கொடி முசுண்டை' 3

இதனுள், 'ஆரல்' எனற்பாலதனை 'ஆல்' என்று இடைக்குறைத்தவாறு.

'நீலுண் துகிலிகை கடுப்பப் பலவுடன்'

இதனுள், 'நீலம் உண் துகிலிகை' எனற்பாலதனை 'நீலுண் துகிலிகை' என்று கடைக்குறைத்தவாறு. பிறவும் அன்ன.

## III

'எழுத்தல் இசையை அசைபெறுத் தியற்றலும்' என்பது, எழுத்து அல்லாத முற்கும், வீளையும், இலதையும், அநுகரணமும், முதலாக உடையன செய்யுளகத்து வந்தால், அவற்றைச் செய்யுள் நடை அழியாமை, அசையும் சீரும் தளையும் அடியும் தொடையும் பிழையாமைக் கொண்டு வழங்குதலும் என்றவாறு.

---

1. இது 'பன்மாடக் கூடல்' எனத் தொடங்கும் செய்யுளின் இறுதி யா. வி. 62 உரை மேற். 2. குறுந். 140. 3. பத்துப். மலைபடு. 100,101.
பி-ம்: * தருதலான்.

வரலாறு :

[நேரிசை வெண்பா]

'மன்றலங் கொன்றை மலர்மிலைந் துஃகுவஃ
கென்று பயிரும் இடைமகனே!—சென்று
மறியாட்டை உண்ணுமை வண்கையால் வல்லே
அறியாயோ அண்ணுக்கு மாறு?' 1

எனவும், ஒழிந்தனவும் இடைக்காடனுர் பாடிய ஊசிமுறியுட் கண்டு அலகிட்டுக் கொள்க. பிறவும் அன்ன.

'எழுத்தல் இசையே அசையொடு சீர்க்கண்
நிறைக்கவும் படுமென நேர்ந்திசி னேரே.'

என்றார் பிறரும்.

## IV

'வழுக்கா மரபின் வகையுளி சேர்த்தலும்' என்பது, அசையும் சீரும் தளையும் அடியும் தொடையும் வண்ணமும் செய்யுட்கட்கழியாமை வகையுளி சேர்த்தலும் என்றவாறு.

'**வகையுளி**' என்பது, முன்னும் பின்னும் அசை முதலாகிய உறுப்புக்கள் நிற்புழி அறிந்து குற்றப்படாமை வண்ணம் அறுத்தல் என்றவாறு.

அவற்றுட் சில வருமாறு :

[குறள் வெண்பா]

'கடியார்பூங் கோதை கடாயினன் திண்டேர்
சிறியாடன் சிற்றில் சிதைத்து.'

இதனுள் '**கடியார்**' என்றும், '**பூங்கோதை**' என்றும், '**கடாயினன்**' என்றும் அலகிடின், ஆசிரியத்தளையும் கலித்தளையும் தட்டு, 'வெள்ளையுட் பிறதளை விரவா' 2 என்னும் இலக்கணத்தோடு மாறு கொள்ளும் ஆதலின், அதனைக் '**கடியார்பூ**' என்று புளிமாங்காய் ஆகவும், '**கோதை**' என்று '**தேமா**' ஆகவும் அலகிடத் தளையும் சீரும் வண்ணமும் சிதையாவாம்.

[நேரிசை வெண்பா]

'பாடுநர்க்கும் ஆடுநர்க்கும் பண்டுதாம் கண்டவர்க்கும்
ஊடுநர்க்கும் கூடுநர்க்கும் ஒத்தலால்—நீடுநீர்
நல்வயல் ஊரன் நறுஞ்சாந் தணியகலம்
புல்லலின் ஊடல் இனிது.' 3

இப்பாட்டினுள், டகரமும் நகரமும் பிரிந்திசைத்தனவாயினும், இரண்டினையும் கூட்டி, நிரையசையாக அலகிட்டுக்கொள்க. அல்லாவிடின், வண்ணம் அழிந்து கிடக்கும்.

[நேரிசை ஆசிரியப்பா]

'போதார் கூந்தல் இயலணி அழுங்க
ஏதி லாட்டியை* நீபிரிந் ததற்கே
அழலவிர் மணிப்பூண் நனைய
அழலா னுவெங்† கண்ணே தெய்யோ!' 4

1. இடைக்காடர் ஊசிமுறி 2. யா. வி. 22. 3. யா. வி. 95 உரைமேற்.
4. ஐங்குறு. 232

பி-ம் : * லாளனை † பெயலா னுவென்.

இதனுள், 'அழலானு' என்றும், 'எங்கண்ணே' என்றும், 'தெய்யோ' என்றும் அலகிடின், குற்றப்பட நிற்கும், ஆசிரியம் முச்சீரால் இறுக என்னும் ஒத்து இலாமையின்; அதனை வகையுளி சேர்த்தி, முதற்சீரைப் 'புளிமா' என்னும் சீராகவும் அல்லாதன மூன்றும் 'தேமா' என்னும் சீராகவும் அலகிட்டுக்கொள்ளப் பிழையாதாம்.

'தாழிரும் பிணர்த்தடக்கை' 1 என்பதனுள், 'தாழிரும் பிணர்த்தடக்கை' என்பது ஓரடியாகவும், 'தண்கவுள் இழிகடாத்த' என்பது ஓரடியாகவும், 'காழ்வாகக் கதம்பேணு' என்பது ஓரடியாகவும், 'கடுஞ்சினத்த கதக்களிற்ற' என்பது ஓரடியாகவும் அலகிட்டால், இருசீர் அடி வஞ்சிப்பாவாய்த் தனது தூங்கல் ஓசை பிழையாது நிற்கும் என்ப ஒருசாரார். இனி ஒருசாரார், வஞ்சிப்பாவினுள் கலியடியும் வரப்பெறும் ஆகலின், முதல் இரண்டடியும் கலியாகக்கொண்டு, கலியடி விரவிய வஞ்சிப்பா என்று வழங்குவர் எனக் கொள்க. பிறவும் அன்ன.

[நேரிசை வெண்பா]

'அருள்நோக்கும் நீரார் அசைசீர் அடிக்கண்
பொருள்நோக்கா தோசையே நோக்கி—மருள்நீக்கிக்
கூம்பவும் கூம்பா தலரவும் கொண்டியற்றல்
வாய்ந்த வகையுளியின் மாண்பு.'

இதனை விரித்து உரைத்துக் கொள்க.

பிறரும்,

'எழுத்தல் கிளவியின் அசையொடு சீர்நிறைத்
தொழுக்கலும் அடியொடு தளைசிதை யாமை
வழுக்கில் வகையுளி சேர்த்தலும் உரித்தே.' 2

என்றார் எனக் கொள்க.

V

'அம்மை முதலிய ஆயிரு நான்மையும்' என்பது, அம்மை, அழகு, தொன்மை, தோல், விருந்து, இயைபு, புலன், இழைபு என இவை எட்டும் எனக் கொள்க.

(1) அம்மையாவது, சிலவாய மெல்லியவாய சொற்களால் ஒள்ளியவாய பொருண்மேற் சிலவடியாற் சொல்லப்படுவது. என்னை?

'சின்மென் மொழியாற் சீரிது நுவலின்
அம்மை தானே அடிநிமிர் வின்றே.'

என்றாராகலின்.

வரலாறு:

[குறள் வெண்பா]

'அறிவினுள் ஆகுவ துண்டோ பிறிதினோய்
தன்னோய்போற் போற்றாக் கடை?' 3

எனக் கொள்க.

(2) அழகாவது, செய்யுட் சொல்லாகிய திரி சொல்லினால், ஓசை இனியதாக, நன்கியாக்கப்படுவது. என்னை?

'செய்யுள் மொழியாற் சீர்புனைந் தியாப்பின்
அவ்வகை தானே அழகெனப் படுமே.' 4

என்றாராகலின்.

---

1. யா. வி. 55 உரைமேற். 2. அவிநயம். யா. வி. 95 உரைமேற். 3. குறள். 315
4 தொல். பொ. 548

*வரலாறு :*

*[நேரிசை ஆசிரியப்பா]*

'துணியிரும் பரப்பகம்* குறைய வாங்கி
அணிகிளர் அடுக்கல் முற்றிய எழிலி
காலொடு மயங்கிய கனையிருள் நடுநாள்
யாங்குவந் தனையோ ஓங்கல் வெற்ப!
நெடுவரை மருங்கிற் பாம்புற† இழிதரும்
கடுவரற் கலுழி நீந்தி
வல்லியம் வழங்கும் கல்லதர் நெறியே!'

எனக் கொள்க.

(3) **தொன்மையாவது**, பழைமைத்தாய் நிகழ்ந்த பெற்றி உரைக்கப்படுவன வற்றின் மேற்று. என்னை?

'தொன்மை தானே,
உரையொடு புணர்ந்த பழைமை மேற்றே.' 1

என்றாராகலின்.

*வரலாறு :*

'செறிதொடி உவகை கேளாய் செஞ்சுடர்த்
தெறுகதிர்ச் செல்வன் . . . . . '

என்பது போல்வனவும், பாரதமும், இராமயணமும் கொள்க.

*(4)* **தோல்** என்பது, இழுமென்று மெல்லியவாய சொற்களால் விழுமிய வாய்க் கிடப்பனவும், எல்லாச் சொற்களோடும் கூடிய பல அடியை உடைய வாய்க் கிடப்பனவும் என இரண்டு வகைப்படும். என்னை?

'இழுமென் மொழியால் விழுமியது நுவலினும்
பரந்த மொழியால் அடிநிமிர்ந் தொழுகினும்
தோலென மொழிப தொன்மொழிப் புலவர்.' 2

என்றாராகலின்

*வரலாறு :*

*[நிலைமண்டில ஆசிரியப்பா]*

'பாயிரும் பரப்பகம் புகையப் பாம்பின்
ஆயிர மணிவிளக் கழலும் சேக்கைத்
துணிதரு வெள்ளம் துயில்புடை பெயர்க்கும்
ஒளியோன் காஞ்சி எளிதெனக் கூறின்,
இம்மை இல்லை மறுமை இல்லை
நன்மை இல்லைத் தீமை இல்லைச்
செய்வோர் இல்லைச் செய்பொருள் இல்லை
அறிவோர் யாரஃ திறுவுழி இறுகென்.'

இது மார்க்கண்டேயனார் காஞ்சி, இழுமென் மொழியால் விழுமியது நுவன்றது.

'திருமழை தலைஇய இருணிற விசும்பின்' 3

என்பது, பரந்த மொழியால் அடி நிமிர்ந்து ஒழுகியது. இது மலைபடுகடாம்.

1. தொல். பொ. 549 2. தொல். பொ. 550 3. பத்துப். மலைபடு. 1
பி-ம்: * பௌவம், † பாம்பென.

(5) **விருந்து** என்பது, புதியவாயினவற்றின் மேற்று. அவை இப்பொழுது உள்ளாரைப் பாடும் பாட்டு. என்னை ?

'விருந்தே தானும்,
புதுவது புனைந்த யாப்பின் மேற்றே.' 1

என்றாராகலின். அவை வழிபட்டுழி அறிந்துகொள்க. 2

(6) **இயைபு** என்பது, ஞ, ண, ந, ம, ன, ய, ர, ல, வ, ழ, ள எனப்பட்ட பதினொரு புள்ளி ஈறாய் வந்த பாட்டு எல்லாம். அவை பதினொருதாரணமும் வந்தவழிக் கண்டுகொள்க. என்னை ?

'ஞகாரை முதலா ளகாரை ஈற்றுப்
புள்ளி இறுதி இயையெனப் படுமே.' 3

என்றாராகலின்.

(7) **புலன்** என்பது, இயற்சொல்லாற் பொருள் தோன்றச் செய்யப்படும் பாட்டு. என்னை ?

'தெரிந்த* மொழியாற் செவ்விதிற் கிளந்து
தேர்தல் வேண்டாது குறித்தது தோன்றின்,
புலனென, மொழிப புலனுணர்ந்த தோரே.' 4

என்றாராகலின்.

**வரலாறு :**

**[நேரிசை ஆசிரியப்பா]**

'பார்க்கடல் முகந்த பருவக் கொண்மூ
வார்செறி முரசின் முழங்கி ஒன்னார்
மலைமுற் றின்றே வயங்குதுளி சிதறிச்
சென்றவள் திருமுகம் காணக் கடுந்தேர்
இன்றுபுகக் கடவுமதி பாக! உதுக்காண்
மாவொடு புணர்ந்த மாஅல் போல
இரும்பிடி உழைய தாகப்
பெருங்காடு மடுத்த காமர் களிறே.'

எனக் கொள்க.

(8) **இழைபு** என்பது, வல்லொற்று யாதும் தீண்டாது செய்யுளியலுடையாரால் எழுத்தெண்ணி வகுக்கப்பட்ட குறளடி முதலாப் பதினேழ் நிலத்து ஐந்தடியும் முறையானே உடைத்தாய் ஓங்கிய சொற்களான் வருவது. என்னை ?

'ஒற்றொடு புணர்ந்த வல்லெழுத் தடக்காது
குறளடி முதலா ஐந்தடி ஒப்பித்
தோங்கிய மொழியால் ஆங்கனம் ஒழுகின்
இழைபின் இலக்கணம் இயைந்த தாகும்.' 5

என்றாராகலின்.

---

1. தொல். பொ.5 51. 2. இவ்விருந்துக்கு இலக்கியம், முத்தொள்ளாயிரமும், பொய்கையார் முதலாயினோர் செய்த அந்தாதிச் செய்யுளும் என உணர்க. கலம்பகம் முதலாயினவும் சொல்லுப என்று எடுத்துக் காட்டுவர் பேராசிரியர். (தொ. பொ. 551 உரை). 3. தொல் பொ. 552 4. தொல், பொ, 553, 5. தொல். பொ. 554.

பி-ம்: *சேரி,

வரலாறு :

[நேரிசை ஆசிரியப்பா]

| | | |
|---|---|---|
| 'பேர்ந்து சென்று சார்ந்து சார்ந்து | (4) | குறளடி (4—6) |
| தேர்ந்து தேர்ந்து மூசி நேர்ந்து | (5) | |
| வண்டு சூழ விண்டு வீங்கி | (6) | |
| நீர்வாய்க் கொண்டு நீண்ட நீலம் | (7) | சிந்தடி (7—9) |
| ஊர்வாய் ஊதை வீச வீர்வாய் | (8) | |
| மணியேர் நுண்டோ டொல்கி மாலே | (9) | |
| நன்மணம் கமழும் பன்னெல் ஊர ! | (10) | நேரடி (10—14) |
| அமையேர் மென்றோள் ஆயரி நெடுங்கண் | (11) | |
| இணையீ ரோதி ஏந்திள வனமுலே | (12) | |
| இறும்பென மலரிடை எழுந்த மாவின் | (13) | நெடிலடி (15—17, |
| நறுந்தழை துயல்வரூஉம் செறிந்தேந் தல்குல் | (14) | |
| அணிநடை அசைஇய அரியமை சிலம்பின் | (15) | |
| மணிமருள் வணர்குழல் வளரிளம் பிறைநுதல் | (16) | |
| ஒளிநிலவு வயங்கிழை உருவுடை மகளொடு | (17) | |
| நளிமுழவ முழங்கிய அணிநிலவு நெடுநகர் | (18) | கழி நெடிலடி (18—20) |
| இருந்தளவு மலரளவு சுரும்புலவு நறுந்தொடை | (19) | |
| கலனளவு கலனளவு நலனளவு நலனளவு | (20) | |

பெருமணம் புணர்ந்தனே என்பவஃ
தொருநீ மறைப்பின் ஒழிகுவ* தன்றே.'

எனக் கொள்க.

## VI

'வண்ணமும்' என்பது, வண்ணங்களும் என்றவாறு. அவ்வண்ணந்தானே இருபது எனக் கொள்க. என்னே ?

'வண்ணந் தானே நாலேந் தென்ப.' 1

என்றாராகலின்.

'அவைதாம்,
பாஅ வண்ணம், தாஅ வண்ணம்
வல்லிசை வண்ணம், மெல்லிசை வண்ணம்,
இயைபு வண்ணம், அளபெடை வண்ணம்,

1. தொல். பொ. 524 பி-ம்:* மறை ஒழுகுவ.

நெடுஞ்சீர் வண்ணம், குறுஞ்சீர் வண்ணம்,
சித்திர வண்ணம், நலிபு வண்ணம்,
அகப்பாட்டு வண்ணம், புறப்பாட்டு வண்ணம்,
ஒழுகு வண்ணம், ஒரூஉ வண்ணம்,
எண்ணு வண்ணம், அகைப்பு வண்ணம்,
தூங்கல் வண்ணம், ஏந்தல் வண்ணம்,
உருட்டு வண்ணம், முடுகு வண்ணமென்
ருங்கவை என்ப * அறிந்திசி னோரே.' 1

**என்று ஓதப்பட்டன.**

அவற்றுள், பாஅ வண்ணம், சொற்சீர் அடியால் நூலுள் பயில வருவது. என்னை ?

'அவற்றுள்,
பாஅ வண்ணம் சொற்சீர்த் தாகி
நூற்பாற் பயில நோக்கிற் றென்ப.' 2

என்றாராகலின்.

வரலாறு :

'குஐ ஆன்என வரூஉம் இறுதி
அவ்வொடு சிவணும் செய்யு ளுள்ளே.' 3

எனவும்,

'அஇ உஅம் மூன்றும் சுட்டு.' 4

எனவும் கொள்க.

**தாஅ வண்ணமாவது, தோன்றுமிடத்து ஓரோவடி இடையிட்டு வந்த எதுகைத்து ஆகும். என்னை ?**

'தாஅ வண்ணம்,
இடையிட்டு வந்த எதுகைத் தாகும்.' 5

என்றாராகலின்.

வரலாறு :

[நேரிசை ஆசிரியப்பா]

'தோடார் எல்வளை நெகிழ நாளும்
நெய்தல் உண்கண் பைதல் உழவா †
வாடா அவ்வரி புதைஇப் ‡ பசலையும்
வைகல் தோறும் பையப் பெருக §
நீடார் இவணென நீண்மணம் || கொண்டோர்
கேளார் கொல்லோ காதலர் தோழி !
வாடாப் பௌவம் அறமுகந் தெழிலி
பருவம் செய்யாது ** வலனேர்பு வளைஇ
ஓடா மலையன் வேலிற்
கடிது மின்னுமிக் கார்மழைக் குரலே.' 6

என்னும் பாட்டுக் கொள்க.

---

1. தொல். பொ. 525. 2. தொல். பொ.526. 3. தொல். சொ. வேற். 25 4. தொல். எழுத். நூன். 31. 5. தொ. பொ. 527 6. யா. வி. 37 உரைமேற்.

பி-ம்: * ஆங்கன மறிய, ஆங்கன மொழிப † கலுழ. ‡ ததைஇ. § பெருகலின் || நீமனம் ** பெய்யாது

**வல்லிசை வண்ண**மாவது, வல்லெழுத்து மிகுவது. என்னை?

'வல்லிசை வண்ணம் வல்லெழுத்து மிகுமே.' 1

என்றாராகலின்.

வரலாறு:

[பஃறொடை வெண்பா]

'வட்டொட்டி அன்ன வணர்முடப் புன்னைக்கீழ்க்
கட்டிட்டுக் கண்ணி தொடுப்பவர் தாழம்பூத்
தொட்டிட்டுக் கொள்ளும் துறைச்சேர்ப்ப! நின்னொடு
விட்டொட்டி உள்ளம் விடாது நினையின்மேல்
ஒட்டொட்டி நீங்காதே ஒட்டு.'

எனக் கொள்க.

'**மெல்லிசை வண்ண**மாவது, மெல்லெழுத்து மிக்கு வருவது. என்னை?

'மெல்லிசை வண்ணம் மெல்லெழுத்து மிகுமே.' 2

எனக் கொள்க.

வரலாறு:

[நேரிசை ஆசிரியப்பா]

'பொன்னின் அன்ன புன்னைநுண் தாது
மணியின் அன்ன நெய்தலங் கானல்
மனவென உதிரும் மாநீர்ச் சேர்ப்ப!
மாண்வினை நெடுந்தேர் பூண்மணி ஒழிய
மம்மர் மாலை வாநீ
நன்மா மேனி நயந்தனை எனினே.'

எனக் கொள்க.

**இயைபு வண்ணம்** என்பது, இடையெழுத்து மிக்கு வருவது. என்னை?

'இயைபு வண்ணம் இடையெழுத்து மிகுமே.' 3

என்றாராகலின்.

வரலாறு:

[நேரிசை ஆசிரியப்பா]

'வால்வெள் ளருவி வரைமிசை இழியவும்
கோள்வல் லுழுவை விடரிடை யியம்பவும்
வாளுகி ருளியம் வரையக மிசைப்பவும்
வேலொளி விளக்கினர் வரினே
யாரோ தோழி! வாழ்கிற் போரே.'

எனக் கொள்க.

அளபெடை வண்ணமாவது, அளபெடை பயின்று வருவது. என்னை?

'அளபெடை வண்ணம் அளபெடை பயிலும்.' 4

என்றாராகலின்.

1. தொல். பொ. 528. 2. தொல். பொ. 529. 3. தொல். பொ. 530. 4. தொல். பொ. 531.

வரலாறு :

[இன்னிசை வெண்பா]

'தாஅம் படுநர்க்குத் தண்ணீர் உளகொலோ!
ஆஅம் பலபழி அன்னை அறிவுறில்;
வாஅம் புரவி வழுதியோ டெம்மிடைத்
தோஒம் நுவலுமிவ் வூர்.' 1

எனக் கொள்க.

'நெடுஞ்சீர் வண்ணம் என்பது, நெட்டெழுத்துப் பயின்று வருவது. என்னை?

'நெடுஞ்சீர் வண்ணம் நெட்டெழுத்துப் பயிலும். 2

என்றாராகலின்.

வரலாறு :

[நேரிசை ஆசிரியப்பா]

'நீரூர் பானு யாறே; காடே
நீலூர் காயாம் பூவி யாவே;
காரூர் பானு மாலே; யானே
யாரோ தாமே வாழா மோரே;
ஊரூர் பாகா! தேரே;
பீரூர் தோளான் பேரு ராளே.'

எனக் கொள்க.

குறுஞ்சீர் வண்ணம் என்பது, குற்றெழுத்துப் பயின்று வருவது. என்னை?

'குறுஞ்சீர் வண்ணம் குற்றெழுத்துப் பயிலும்.' 3

என்றாராகலின்.

வரலாறு :

[நேரிசை ஆசிரியப்பா]

'உறுபெயல் எழிலி தொகுபெயல் பொழியச்
சிறுகொடி அவரை பொதிதளை * அவிழக்
குறிவரு பருவம் இதுவென மறுகுபு
செறிதொடி நலமிலை அழியல்
அறியலை அரிவை கருதிய பொருளே.'

எனக் கொள்க.

சித்திர வண்ணம் என்பது, குற்றெழுத்தும் நெட்டெழுத்தும் விராய் வருவது. என்னை?

'சித்திர வண்ணம்,
நெடியவும் குறியவும் நேர்ந்துடன் வருமே.' 4

என்றாராகலின்.

---

1. இச் செய்யுளின் பின்னிரண்டடி 'தொடை யானந்தம்' என்னும் ஆனந்தக் குற்றத்திற்கு மேற்கோள் (யா. வி. 96 உரை.). 2. தொல். பொ, 532. 3. தொல், பொ. 533. 4. தொல். பொ. 534.

பிரம்; * பொரிதளை.

வரலாறு :

[நிலை மண்டில ஆசிரியப்பா]

'ஊர வாழி ஊர தேர
தார வாரி பேர சேரி
கார வேரி பாய வாரி
பீர நீர தோழி தோளே.'

எனக் கொள்க.

நலிபு வண்ணம் என்பது, ஆய்தம் உடைத்தாய் வருவது. என்னை ?

'நலிபு வண்ணம் ஆய்தல் பயிலும்.' 1

என்றாராகலின்.

வரலாறு :

[இன்னிசை வெண்பா]

'எஃகொ டவன்காப்ப ஏமார்ந்தாள் போதந்தாள்
அஃகுநீர்க் கான்யாற் றயன்மணல் எக்கர்மேல்;
இஃகுதோறின் பாவை திருந்தடி; பின்றை
அஃதோ விடலை அடி.'

எனக் கொள்க.

அகப்பாட்டு வண்ணம் என்பது, முடியாதது போன்று முடிவது. என்னை ?

'அகப்பாட்டு வண்ணம்,
முடியாத் தன்மையின் முடிந்ததன் மேற்றே.' 2

என்றாராகலின்.

வரலாறு :

[நேரிசை ஆசிரியப்பா]

'பன்மீன் உணங்கற் படுபுள் ஓப்பியும்
புன்னை நுண்டாது நம்மொடு தொகுத்தும்
பன்னாள் வந்து பணிமொழி பயிற்றித்
தோளி னீங்காமை * சூளிற் றேற்றியும்
மணந்ததற் கொவ்வான் தணந்துபுற மாறி
இனையன் ஆகி ஈங்குனைத் துறந்தோன்
பொய்தல் ஆயத்துப் பொலந்தொடி மகளிரொடு †
கோடுயர் வெண்மணல் ஏறி
ஓடுகலம் எண்ணும் ‡ துறைவன் தோழி !'

எனக் கொள்க.

புறப்பாட்டு வண்ணம் என்பது, முடிந்தது போன்று முடியாததன் மேற்று. என்னை ?

'புறப்பாட்டு வண்ணம்,
முடிந்தது போன்று முடியா தாகும்.' 3

என்றாராகலின்.

1. தொல். பொ. 535. 2. தொல். பொ. 536: 3. தொல். பொ. 537.
பி-ம்: * தோழி நீங்காமை. † மகளிர். ‡ என்னும்.

வரலாறு :

[நேரிசை ஆசியரிப்பா]

'நிலவுமணல் அகன்றுறை வலவன் ஏவலின்
எரிமணிப் புள்ளினம் மொய்ப்ப நெருநலும்
வந்தன்று கொண்கன் தேரே இன்றும்
வருகுவ தாயிற் சென்று சென்று
தொன்றுபு துதைந்த புன்னைத் தாதுகு
தண்போதின் மெல்லக வனமுலை நெருங்கப்
புல்லின் எவனே மெல்லியல் நீயும்
நல்காது விடுகுவை யாயின் அல்கலும்
படர்மலி உள்ளமொடு மடன்மா ஏறி
உறுதுயர் உலகுடன் அறியநம்
சிறுகுடிப் பாக்கத்துப் பெரும்பழி தருமே.' 1

எனக் கொள்க.

**ஒழுகு வண்ணம்** என்பது, ஓசையின் ஒழுகிக் கிடப்பது. என்னை ?

'ஒழுகு வண்ணம் ஓசையின் ஒழுகும்.' 2

என்றாராகலின்.

வரலாறு :

[நேரிசை ஆசியரிப்பா]

'அம்ம வாழி தோழி! காதலர் *
இனமீன் † பனிக்கும் இன்னா வாடையொடு
புன்கண் மாலை அன்பின் ‡ நலிய
உய்யலள் இவளென உணரச் சொல்லிச்
செல்லுநர்ப் பெறினே சேய அல்ல §
இன்னளி ‖ இறந்த மன்னவர்
பொன்னணி நெடுந்தேர் பூண்ட மாவே.'

எனக் கொள்க.

**ஒரூஉ வண்ணம்** என்பது, ஒன்றாத தொடையாற் கிடப்பது. 'அஃதி யாதோ ?' எனின், செந்தொடை. என்னை ?

'ஒரூஉ வண்ணம் ஒரீஇத் தொடுக்கும்.' 3

என்றாராகலின்.

வரலாறு :

[நேரிசை ஆசிரியப்பா]

'தொடிநெகிழ்ந் தனவே கண்பசந் தனவே
யான்சென் றுரைப்பின் மானமின் ¶ றெவனோ
சொல்லாய் வாழி தோழி! வரைய
முள்ளில் பொதுளிய அலங்குகுரல் நெடுவெதிர்
பொங்குவரல் இளமழை துவைப்ப
மணிநிலா விரியும் குன்றுகிழ வோர்க்கே.'

எனக் கொள்க.

---

1. இலக். விளக். பக். 781. 2. தொல். பொ. 538; 3. தொல். பொ. 539, வல்ல., * காதலர்க்; † கின்னே ‡ ஆன்பின்று; § சொல்லுநர்ப் பெறினே செப்ப இ னனி; ¶ மாண்பின்;

**எண்ணு வண்ணம்** என்பது, செவ்வெண்ணினும், உம்மை எண்ணினும், என எண்ணினும், என்று எண்ணினும், பிறவும் யாதானும் ஓர் எண்ணினும் வருவது. என்னை ?

'எண்ணு வண்ணம் எண்ணுப் பயிலும்.' 1

என்றாராகலின்.

வரலாறு :

[நிலை மண்டில ஆசிரியப்பா]

'பொறையன் செழியன் பூந்தார் வளவன்
கொல்லி கொற்கை நல்லிசைக் குடந்தை
பாவை முத்தம் பல்லிதழக் குவளை
மாயோள் முறுவல் மழைப்பெருங் கண்ணே.' 2

எனக் கொள்க. இது செவ்வெண் பெற்றது. பிறவும் அன்ன.

**அகைப்பு வண்ணம்** என்பது, அறுத்து அறுத்துச் சொல்லப்படுவது. என்னை ?

'அகைப்பு வண்ணம் அறுத்தறுத் தொழுகும்.' 3

என்றாராகலின்.

வரலாறு :

[நேரிசை ஆசிரியப்பா]

'கொடுத்த வேம்பின்மிசைத் துதைந்த போந்தை
அடைய அசைத்த ஆர்மலைப் பாட்டூர்
அண்ணல் என்போன் இயன்ற சேனை
முரசிரங்கும் தானையெதிர் முயன்ற
வேந்தருயிர் முருக்கும் வேலி னன்னவன்.'

எனக் கொள்க.

**தூங்கல் வண்ணம்** என்பது, பெரும்பான்மையும் வஞ்சி பயின்று வருவது. என்னை ?

'தூங்கல் வண்ணம் வஞ்சி பயிலும்.' 4

என்றாராகலின்.

வரலாறு :

[குறளடி வஞ்சிப்பா]

'தென்குமரி வடவிமய
மாஅவெல்லைத் தம்புகழ்விளங்கக்
கடலன்ன படைநாப்பண்
மலையன்ன களிற்றெருத்தின்
ஞாயிற்றன்ன சேண்விளங்குதிறலர்
திங்களன்ன வெண்குடையுயரிய
ஒன்னுதார் மிடல்சாயத்
துன்னரிய அகழ்கடந்தவர்
பொன்னுடைய எயில்முருக்கி
ஓவத்தன்ன வினைபுனைநல்லிற்
கோவத்தன்ன கனையெரிகவரச்

4. தொல். பொ. 540. 2. யா. வி. 95 உரைமேற். 3. தொல். பொ. 541.
4. தொல். பொ. 542.

சென்றவர்திறல் மழுங்கவாற்றலிற்
புலவர்பல புகழ்கொண்டு
பெறலரிய விழுத்தாயம்
விறலியர்க்கு மகிழ்ந்துவீசினே
ஒன்னுர் * துப்பிற் றென்னவர் மருக !
பல்கிளைப் † பசிநோனது
கல்பிறங்கிய சுரம்நீந்தி
இவண்வந்த நசைவாழ்நன்
எனவைத்ததெல்லாம் பிறர்க்காகும்
ஈந்ததெல்லாம் எனக்காகும்
பொருள்கொடுத்தும் புகழ்கொள்வனென
இவற்கீயேன் எனக்கீவனென
என்னேக்காது நின்னேக்கி
என்னேவிடுமதி வென்வேல்வழுதி !
வெயிற்கதிர்நுழையா வியன்பெருங்காவிற்
றண்புனல்வையை ஒண்டுறைத்தொகுத்த
கோடுறு ‡ மணலினும் ஏத்திப்
பாடுதும் பெரும!நின் ஞடொறும் புகழ்ந்தே.'
எனக் கொள்க.

ஏந்தல் வண்ணம் என்பது, சொல்லிய சொல்லிற் சிறந்து வருவது. என்னே?

'ஏந்தல் வண்ணம்,
சொல்லிய சொல்லிற் சொல்லியது சிறக்கும்.' 1

என்றுராகலின்.

வரலாறு :

[நேரிசை வெண்பா]

'கூடுவார் கூடல்கள் கூடல் எனப்படா ;
கூடலிற் கூடலே கூடலும் ;—கூடல்
அரும்பிய § முல்லை அரும்பவிழு மாலைப்
பிரிவாற் ‖ பிரிவே பிரிவு.'

எனக் கொள்க.

உருட்டு வண்ணம் என்பது, அராகத் தொடைமேல் வருவது. என்னே?

'உருட்டு வண்ணம் அராகம் தொடுக்கும்.' 2

என்றுராகலின்.

வரலாறு :

[வண்ணக ஒருபோகு]

[அராகம்]

'அணிகிளர் சிறுபொறி அவிர்துத்தி மாநாகத் தெருத்தேறி
துணியிரும் பனிமுந்நீர் தொட்டுழந்து மலைந்தனேயே ; ¶
ஆர்கலி உயரகல் எழில்வானத் தமரர்கணம் உடனுர்ப்ப

---

1. தொல். பொ. 543. 2. தொல். பொ. 544.

பி-ம்: * என்னுத். † புல்கிணைப். ‡ கோடுயர். § அருவிய. ‖ பிரியிற். ¶ தோட்டவிழ்ந்து மலர்ந்தனேயே.

வார்புனல் இகன்மிகல * மறமல்லனே மாய்க்கலிற் பொங்கினே;
முள்ளெயிற் றரிமருள்கண் ஆய்த்தியரொடு நிரைநடுங்க
வரைதிரள் நிமிர்தடக் கையினனி மலையெடுத் தேந்தினே;

[பேரெண்]

காமருதகைக் கல்வியல் மார்பினே;
கண்பொடு சுடரொளி நேமியை;
பூமலி வினைபுனே தாரினே;
பொன்புனே வினைபுனே உடுக்கையை;

[தனிச்சொல்]

அனையன,

[சுரிதகம்]

பலவுடன் புகழ்தகப் பயந்தோய்! நின்
இணைபுணர் கழலடி பரவுதும்
துணைபுணர் உவகையொடு மன்னுதும் எனவே.' 1

எனக் கொள்க.

முடுகு வண்ணம் என்பது, அடியற்றவுழி அறியலாகாதாய், நீண்ட அடித்தாய், அராகம் தொகுத்து வருவது. என்னே?

'முடுகு வண்ணம் முடிவறி யாமல்
அடியிறந் தொழுகும் அதனே ரற்றே.' 2

என்றாகலின்.

வரலாறு:

[அராகம்]

'பெருகலி யொலிமலி துணையணி பிறழத்
துயல்வியல் வளனுரை பிதிர அதிரும்
மதிவிலங் குருளுடை இருண்முந்நீர்
அருங்கலம் கவர்ந்தனேயே;
வகைதகை வளர்தளிர் உறுதுயர் வணரிணர்
துணர்புயல் புகையணங் குறுசினே
வினவா வினவில் உயர்வ ராயின்
வினைபடக் கிடந்தோய்! நின் சூழுறு சுடரொளி
திகழுணி மணியலங் கிலங்கவிர் கதிர்முத்தமொ
டுறழ்ந்தியாத்த தொடையமை துணைபுனே வினே
தொடுகழல் அடியிணை பரவுதும் யாமே.'

எனக் கொள்க.

இவ்வாறு வண்ண விகற்பம் எடுத்து ஓதினர் தொல்காப்பியனாரும் கையனாரும் முதலாக உடையார்.

அவிநயனர், தூங்கிசை வண்ணம், ஏந்திசை வண்ணம், அடுக்கிசை வண்ணம், பிரிந்திசை வண்ணம், மயங்கிசை வண்ணம் என்ற இவ்வைந் தினையும்; அகவல் வண்ணம், ஒழுகிசை வண்ணம், வல்லிசை வண்ணம், மெல் லிசை வண்ணம் என்ற இந்நான்கினையும்; குற்றெழுத்து வண்ணம், நெட்

1. யா. வி. 93, 95 உரைமேற். 2. தொல். பொ. 545.
பி.ம்: * வார்புகல் கழன்மறவர்.

டெழுத்து வண்ணம், வல்லெழுத்து வண்ணம், மெல்லெழுத்து வண்ணம், இடையெழுத்து வண்ணம் என்ற இவ்வைந்தினையும் கூட்டி உறழ, **நூறு வண்ணம்** பிறக்கும் என்றார்.

*அவை உறழுமாறு :*

**தூங்கிசை வண்ணம் 20.**

**[அகவல் :]**

குறில் அகவல் தூங்கிசை வண்ணம், நெடில் அகவல் தூங்கிசை வண்ணம், வலி அகவல் தூங்கிசை வண்ணம், மெலி அகவல் தூங்கிசை வண்ணம், இடை அகவல் தூங்கிசை வண்ணம் எனவும் ;

**[ஒழுகல் :]**

குறில் ஒழுகல் தூங்கிசை வண்ணம், நெடில் ஒழுகல் தூங்கிசை வண்ணம், வலி ஒழுகல் தூங்கிசை வண்ணம், மெலி ஒழுகல் தூங்கிசை வண்ணம், இடை ஒழுகல் தூங்கிசை வண்ணம் எனவும் ;

**[வல்லிசை :]**

குறில் வல்லிசைத் தூங்கிசை வண்ணம், நெடில் வல்லிசைத் தூங்கிசை வண்ணம், வலி வல்லிசைத் தூங்கிசை வண்ணம், மெலி வல்லிசைத் தூங்கிசை வண்ணம், இடை வல்லிசைத் தூங்கிசை வண்ணம் எனவும் ;

**[மெல்லிசை :]**

குறில் மெல்லிசைத் தூங்கிசை வண்ணம், நெடில் மெல்லிசைத் தூங்கிசை வண்ணம், வலி மெல்லிசைத் தூங்கிசை வண்ணம், மெலி மெல்லிசைத் தூங்கிசை வண்ணம், இடை மெல்லிசைத் தூங்கிசை வண்ணம் எனவும் இவை குறில் அகவல் தூங்கிசை வண்ணம் முதலிய இருபது தூங்கல் வண்ணம்.

அவைதாம் முதுபிடி நடந்தாற்போலவும், கோம்பி நடந்தாற்போலவும், நாரை நடந்தாற்போலவும், வரும். அவை ஒரு புடை ஒப்பினால் தூங்கிசை வண்ணம் எனக் கொள்க.

**ஏந்திசை வண்ணம் 20.**

**[அகவல் :]**

குறில் அகவல் ஏந்திசை வண்ணம், நெடில் அகவல் ஏந்திசை வண்ணம், வலி அகவல் ஏந்திசை வண்ணம், மெலி அகவல் ஏந்திசை வண்ணம், இடை அகவல் ஏந்திசை வண்ணம் எனவும் ;

**[ஒழுகல் :]**

குறில் ஒழுகல் ஏந்திசை வண்ணம், நெடில் ஒழுகல் ஏந்திசை வண்ணம், வலி ஒழுகல் ஏந்திசை வண்ணம், மெலி ஒழுகல் ஏந்திசை வண்ணம். இடை ஒழுகல் ஏந்திசை வண்ணம் எனவும் ;

**[வல்லிசை :]**

குறில் வல்லிசை ஏந்திசை வண்ணம், நெடில் வல்லிசை ஏந்திசை வண்ணம் வலி வல்லிசை ஏந்திசை வண்ணம், மெலி வல்லிசை ஏந்திசை வண்ணம், இடை வல்லிசை ஏந்திசை வண்ணம் எனவும் ;

**[மெல்லிசை :]**

குறில் மெல்லிசை ஏந்திசை வண்ணம், நெடில் மெல்லிசை ஏந்திசை வண்ணம், வலி மெல்லிசை ஏந்திசை வண்ணம், மெலி மெல்லிசை ஏந்திசை வண்ணம், இடை மெல்லிசை ஏந்திசை வண்ணம் எனவும்—இவை குறில் அகவல் ஏந்திசை வண்ணம் முதலிய இருபது ஏந்திசை வண்ணம்.

அவைதாம் மதயானை நடந்தாற் போலவும், பாம்பு பணைத்தாற் போலவும், ஓங்கிப் பறக்கும் புட்போலவும் வருமெனக் கொள்க.

### அடுக்கிசை வண்ணம் 20.

[அகவல் :]

குறில் அகவல் அடுக்கிசை வண்ணம், நெடில் அகவல் அடுக்கிசை வண்ணம், வலி அகவல் அடுக்கிசை வண்ணம், மெலி அகவல் அடுக்கிசை வண்ணம், இடை அகவல் அடுக்கிசை வண்ணம் எனவும் ;

[ஒழுகல் :]

குறில் ஒழுகல் அடுக்கிசை வண்ணம், நெடில் ஒழுகல் அடுக்கிசை வண்ணம், வலி ஒழுகல் அடுக்கிசை வண்ணம், மெலி ஒழுகல் அடுக்கிசை வண்ணம், இடை ஒழுகல் அடுக்கிசை வண்ணம் எனவும் ;

[வல்லிசை :]

குறில் வல்லிசை அடுக்கிசை வண்ணம், நெடில் வல்லிசை அடுக்கிசை வண்ணம், வலி வல்லிசை அடுக்கிசை வண்ணம், மெலி வல்லிசை அடுக்கிசை வண்ணம், இடை வல்லிசை அடுக்கிசை வண்ணம் எனவும் ;

[மெல்லிசை :]

குறில் மெல்லிசை அடுக்கிசை வண்ணம், நெடில் மெல்லிசை அடுக்கிசை வண்ணம், வலி மெல்லிசை அடுக்கிசை வண்ணம், மெலி மெல்லிசை அடுக்கிசை வண்ணம், இடை மெல்லிசை அடுக்கிசை வண்ணம் எனவும், இவை குறில் அகவல் அடுக்கிசை வண்ணம் முதலிய இருபது அடுக்கிசை வண்ணம்.

அவைதாம் ஒவ்வா நிலத்திற் பண்டி உருண்டாற் போலவும், நாரை இரைத்தாற் போலவும், தாராவும் தார்மணி ஓசையும் போலவும் வரும்.

### பிரிந்திசை வண்ணம் 20.

[அகவல் :]

குறில் அகவல் பிரிந்திசை வண்ணம், நெடில் அகவல் பிரிந்திசை வண்ணம், வலி அகவல் பிரிந்திசை வண்ணம், மெலி அகவல் பிரிந்திசை வண்ணம், இடை அகவல் பிரிந்திசை வண்ணம் எனவும் ;

[ஒழுகல் :]

குறில் ஒழுகல் பிரிந்திசை வண்ணம், நெடில் ஒழுகல் பிரிந்திசை வண்ணம், வலி ஒழுகல் பிரிந்திசை வண்ணம், மெலி ஒழுகல் பிரிந்திசை வண்ணம், இடை ஒழுகல் பிரிந்திசை வண்ணம் எனவும் ;

[வல்லிசை :]

குறில் வல்லிசைப் பிரிந்திசை வண்ணம், நெடில் வல்லிசைப் பிரிந்திசை வண்ணம், வலி வல்லிசைப் பிரிந்திசை வண்ணம், மெலி வல்லிசைப் பிரிந்திசை வண்ணம், இடை வல்லிசைப் பிரிந்திசை வண்ணம் எனவும் ;

[மெல்லிசை :]

குறில் மெல்லிசைப் பிரிந்திசை வண்ணம், நெடில் மெல்லிசைப் பிரிந்திசை வண்ணம், வலி மெல்லிசைப் பிரிந்திசை வண்ணம், மெலி மெல்லிசைப் பிரிந்திசை வண்ணம், இடை மெல்லிசைப் பிரிந்திசை வண்ணம் எனவும் இவை குறில் அகவல் பிரிந்திசை வண்ணம் முதலிய இருபதும் பிரிந்திசை வண்ணம்.

அவைதாம் பெருங்குதிரைப் பாய்த்தலும், ஒன்று கொட்டியும் இரண்டு கொட்டியும் முதலாக உடைய அறுத்துக்கொட்டும் போலவும் வரும்.

### மயங்கிசை வண்ணம் 20.

[அகவல் :]

குறில் அகவல் மயங்கிசை வண்ணம், நெடில் அகவல் மயங்கிசை வண்ணம், வலி அகவல் மயங்கிசை வண்ணம், மெலி அகவல் மயங்கிசை வண்ணம், இடை அகவல் மயங்கிசை வண்ணம் எனவும் ;

[ஒழுகல் :]

குறில் ஒழுகல் மயங்கிசை வண்ணம், நெடில் ஒழுகல் மயங்கிசை வண்ணம், வலி ஒழுகல் மயங்கிசை வண்ணம், மெலி ஒழுகல் மயங்கிசை வண்ணம், இடை ஒழுகல் மயங்கிசை வண்ணம் எனவும் ;

[வல்லிசை :]

குறில் வல்லிசை மயங்கிசை வண்ணம், நெடில் வல்லிசை மயங்கிசை வண்ணம், வலி வல்லிசை மயங்கிசை வண்ணம், மெலி வல்லிசை மயங்கிசை வண்ணம், இடை வல்லிசை மயங்கிசை வண்ணம் எனவும் ;

[மெல்லிசை :]

குறில் மெல்லிசை மயங்கிசை வண்ணம், நெடில் மெல்லிசை மயங்கிசை வண்ணம், வலி மெல்லிசை மயங்கிசை வண்ணம், மெலி மெல்லிசை மயங்கிசை வண்ணம், இடை மெல்லிசை மயங்கிசை வண்ணம் எனவும் இவை குறில் அகவல் மயங்கிசை வண்ணம் முதலிய இருபது மயங்கிசை வண்ணம்.

அவைதாம் நகரம் இரைந்தாற் போலவும், தாரை இசையும் ஆர்ப்பிசையும் இயமர இசையும் தேரைக்குரலும் போலவும் வரும்.

சூறைக்காற்றும் நீர்ச்சுழியும் போல வருவது, அகவல் வண்ணம்.

நீரொழுக்கும் காற்றெழுக்கும் போல வருவது, **ஒழுகல் வண்ணம்.**

தோற்கயிறும் இரும்பும் திரித்தாற் போலவும், கன்மேற் கல் உருட்டினுற் போலவும் வருவது, **வல்லிசை வண்ணம்.**

அன்ன நடையும் தன்னம்பறையும் போலவும், மணன்மேல் நடந்தாற் போலவும் வருவது, **மெல்லிசை வண்ணம்.**

இவை தொழில் வகையால் ஒரு புடை ஒப்புமை காட்டியவாறு.

இவை நூறு வண்ணமும் தம்முள் மயங்கி வரினும், மிக்கதனுற் பெயர் கொடுத்து வழங்கப்பெறும்.

வரலாறு :

[கலி நிலைத்துறை.]

'வினையொழி பொழுதின்கட் செல்வமே போல அஃகிச்
சுனையெழு குவளையும் ஆம்பலும் தீய்ந்து வாடிக்
கனையெரி கழைதீண்டிக் காடுவெந் தோடு கில்லா *
நனைகவுள் எழில்வேழம் நாவசைந் தெய்தி யாங்கு.'

இன்னவும், ஆசிரியங்களும், **பாவைப்பாட்டும்,** அன்ன பிறவும் குறில் அகவல் **தூங்கிசை வண்ணம்** எனப்படும். இவற்றை ஐந்தெழுத்தின் மேலும் 1 ஒட்டிக் கொள்க.

[கலி விருத்தம்.]

'கோலமலர் கொண்டுசில மந்திமலை வுடைத்தாய்ச்
சோலைதொறுந் தாழ்ந்தபொழிற் சோர்விலுயர் விஞ்சை
நீலமலர்க் கண்ணினவர் நீடுநனி ஏத்தச்
சீலமிகு நாதனடி சேரவினை சேரா.'

இன்னவும், வஞ்சியும், வஞ்சிப்பாவினமும் **ஒழுகிசைத்தூங்கல் வண்ணம்** எனப்படும். இவற்றையும் ஐந்தெழுத்தின்மேலும் ஒட்டிக்கொள்க.

---

1. ஈண்டு 'ஐந்தெழுத்து' என்றது, 'குறில், நெடில், வலி, மெலி, இடை' என்பவற்றை.

பி-ம். *ஓடுகல்லா, ஓடுக்கல்லா.

[எழுசீர் ஆசிரிய விருத்தம்.]

'ஏறுயர் கொடியின் இருவிசும் பதிரும்
எறிமுர சதிர்கடற் ருனே
வீறுயர் மணிக்கால் வெண்குடை ஓங்கு
தண்டுறை யின்பழை யாற்று
மாறடு படிவ மதியுறு நகருள் *
மாதவன் ஏதமில் பாதம்
வீறடு கதிகள் ஆழ்கதி † வீழ
விளங்கிய விழுத்துணை யாமே.'

என இச்சந்தத்தனவும்,

[அறுசீர் ஆசிரிய விருத்தம்.]

'பூவி னூர்பொழிற் பிண்டியின்கீழ்ப்
பொருவறு திருநகர்ப் பொன்னெயிலுள்
மாவி னூர்நலம் நோக்கினெல்லார்
பலர்ப ணிந்துவந் தடிவணங்கி.'

என இன்ன வண்ணத்தனவும் எல்லாம் வல்லிசைத் தூங்கல் **வண்ணம்** எனப்படும். இவற்றையும் ஐந்தெழுத்தின் மேலும் ஒட்டிக்கொள்க.

[குறள்வெண் செந்துறை.]

'தேனி னூர்மலர்ப் பிண்டியி னிழற்றேவர் ஏத்த
வானி னூர்குடை யானடி நாளும் வணங்குதுமே.'

[கலி விருத்தம்.]

'தாழி ஓங்கு மலர்க்கண்ணவர் தண்ணடி
பாழி ஓங்கு புனலார்பழை யாற்றுள்
ஊழி நின்ற மதியான்மதி சேர்ந்து
வாழி என்று வணங்கவினை வாரா.'

என இன்னவை எல்லாம் மெல்லிசைத் தூங்கல் **வண்ணம்** எனப்படும். இவற்றையும் ஐந்தெழுத்தின்மேலும் ஒட்டிக்கொள்க.

[தரவு கொச்சகம்.]

'களவினுற் கொணர்ந்தவெண் காணமும் விழுப்பொன்னும்
உளவெனினும் யான்றுய்ப்பல் உலவாது கிடந்தமையால்
வளையினுற் பொலிந்தகை வாட்கண்ணுள் வழிப்படூஉம்
கனைவாரிற் கனையிருட்கட் கானேன்மற் றிதுவல்லால்.'

என இன்னவும், கலிப்பாக்களும், தும்பிப்பாட்டும் குறில் அகவல் **ஏந்திசை வண்ணம்**. இவற்றையும் ஐந்தெழுத்தின்மேலும் ஒட்டிக்கொள்க.

[ஆசிரியத் துறை.]

'வரையென மாடங்கள் ஓங்குறு வீதியின் வஞ்சி மன்னவன்
புரைபுரை நின்றலர் பூந்தொடை யற்பொறை யன்ற னருளாளேற்
கரையெனக் காலையும் காண்பரிய கடல்போலும் கௌவையும்
அரையின மேகலை ஓட ஓடுமிவள் ஆவி ஆற்றுதே.'

என இன்ன ஆசிரியத்துறை ‡ விருத்தங்களும்; வெண்பாக்களும், வெள்ளொத்தாழிசைகளும் எல்லாம் குறில் ஒழுகல் ஏந்திசை வண்ணம் இவற்றையும் ஐந்தெழுத்தின்மேலும் ஒட்டிக்கொள்க.

பி-ம். * தருண † நெறிக ளாற்கதி ‡ இன்னவையாகிய சிறு, இன்னவை யாசிரியச்சிறு.

[நிலைமண்டில ஆசிரியப்பா.]

'நெறிநீர் இருங்கழி நீலமும் சூட்டாள் *
பொறிமாண் வரியதவன் ஆட்டலும் ஆட்டாள் †
சிறுநுதல் வேரும்பச் சிந்தியா நின்றாட்
கெறிநீர்த்தண் சேர்ப்பாயான் என்சொல்லிச் செல்கோ!' ‡

இதுவும் அது.

[கலி விருத்தம்.]

'இட்ட கன்றனை யானினி என்செய்கோ
கட்டெ ழில்லழ காகடி தென்னவே
மட்டெ ழின்மலர்த் தார்பொலி மார்பனும்
கெட்டெ ழுந்திறை கூறுவ னேவெனு.'

பறைபட் டனபட் டனசங் கினொலி
முறைவிட் டனவிட் டனமுன் னுலவாத்
திறைவிட் டனர்கொட் டினர்திண் கலிமா
நிறைகொட் டினரொட் டனர்நீள் முழவால்.'

இன்னவும் குறில் வல்லிசை ஏந்திசை வண்ணம். இவற்றையும் ஐந்தெழுத்தின்மேலும் ஒட்டிக்கொள்க.

[கலிநிலைத் துறை.]

'மான்விடு போழ்திற் பிணையின் உயிர்போவ தேபோல்
யான்விடு போழ்தின் இதுவேகொல் நினக்கும் என்னத்
தேனூறும் இன்சொல் மடவாய்! அழுதாற்ற கில்லாய்
வானூடு போய வரைகா ணியசென்ற காலே.'

என இன்னவும், 'உழவர் ஓதை' 1 எனப்படுவனவும் குறில் மெல்லிசை ஏந்திசை வண்ணம். இவற்றையும் ஐந்தெழுத்தின்மேலும் ஒட்டிக்கொள்க.

[அறுசீர் ஆசிரிய விருத்தம்.]

'கொடியிடை மாதர் மேனி குவளைமலர் உண்கண் என்றும்
பிடிநடை மாதர் மாண்ட நடைதா னெனப்பேது செய்தும்
வடிவொடு வார்ந்த மென்றோள் வளைசேர்ந்த கைகாந்தள் என்றும்
இடையிடை நின்று நின்று பலகாலும் உவப்ப தென்னே!' 2

என இன்ன பிறவும், எழுசீர் அடியால் வந்தனவும் எல்லாம் குறில் அகவல் அடுக்கிசை வண்ணம். இவற்றையும் ஐந்தெழுத்தின்மேலும் ஒட்டிக்கொள்க.

[எண்சீர் ஆசிரிய விருத்தம்.]

'மாலையால் வாடையால் அந்தியால் மதியால்
மனமுனம் உணர்வது நோயுறச் செய்த
சோலையால் தென்றலால் சுரும்பிவர் பொழிலால்
சொரிதரு காரொடு விரிதரு பொழுதே
கோலவால் வளையாற் கொடுப்பறி யானேற்
கொள்வறும் உயிரொடு பிறரொடும் அன்றே?
காலையார் வரவே காதலும் ஆங்கோர்
காலையென் னுங்கடல் நீந்திய வினையே.'

என இன்னவும், பிறவும், எண்சீரடி மிக்கு வருவனவும் குறில் ஒழுகல் அடுக்கிசை வண்ணம். இவற்றையும் ஐந்தெழுத்தின்மேலும் ஒட்டிக்கொள்க.

---

1. சிலப். 7 : 4. 2. வளையாபதி.

பி-ம். * சூடாள். † ஆடலும் ஆடாள். ‡ சொல்கோ.

[அறுசீர் ஆசிரிய விருத்தம்.]

'கடியான் வெயிலெறிப்பக் கல்லளையுள் வெதும்பிய கலங்கற் சின்னீர்
அடியால் உலகளந்த ஆழியான் ஆக்கிய அமிழ்தென் றெண்ணிக்
கொடியான் கொடுப்பக் குடங்கையாற் கொண்டிருந்து குடிக்கல் [தேற்றாள்
வடியேர் தடங்கண்ணி வஞ்சிக்கொம் பின்றாளிவ் வருவாளாயே'

எனவும்,

'அடைமின்சென் றடைமின்சென் றவனுக்கிய
சினகரத் திறைவன் றாளே.'

எனவும் அறுசீரடியால் வருவன எல்லாம் குறில் வல்லிசை அடுக்கிசை வண்ணம். இவற்றையும் ஐந்தெழுத்தின்மேலும் ஒட்டிக்கொள்க.

[கலி விருத்தம்.]

'பிடியுடை நடையடு நடையினள் தெரியின்,
கடிபடும் இலமலர் அடிநனி தனதாம்
துடியிடை அடுமிவள் நடுவொடி வதுபோல்
வடுவடி அடுமிவள் நெடுமலர் புரைகண்.'

எனவும்,

'கடுமுடையை நாறுகரு மேனியின ளாகிப்
படுமுடையுள் மாகுலவர் பாத்துணலும் ஈயார்
இடமுடைய காடுநனி ஏகெனலும் போகிப்
தடமுடைய கன்முழையி னுடமிய ளாகி.'

எனவும் இன்னவை எல்லாம் குறில் மெல்லிசை அடுக்கிசை வண்ணம். இவற்றையும் ஐந்தெழுத்தின்மேலும் ஒட்டிக்கொள்க.

'சூரலும் பிரம்பும் சுற்றிய'

எனவும்,

[கலி விருத்தம்.]

'முன்றில் நின்ற முடமுதிர் பெண்ணைமேல்
அன்றில் காள்! நுமை ஆற்ற வினவுதும் :
தொன்று காலம் தொடர்ந்துடன் ஆடினுள்
சென்று ழிச்செலும் செந்நெறி யாதென.'

எனவும்,

'குரவ ணங்கிலை மாவொடு சூழ்கரைச்
சரவ ணம்மிது தானனி போலுமால்
அரவ ணங்குவில் ஆண்டகை சான்றவன்
பிரிவு ணர்ந்துடன் வாரலன் என்செய்கோ!'[1]

எனவும் இன்னவை எல்லாம் குறில் அகவல் பிரிந்திசை வண்ணம். இவற்றையும் ஐந்தெழுத்தின்மேலும் ஒட்டிக்கொள்க.

[கலி விருத்தம்.]

'அறிவல் அறிவல் அமுதே அமுதே
எறிவெண் டிரைமீ திகலிற் றறிவல்;
இறுகல் இறுகல் இதுகேள் இதுகேள் :
பெறுவல் பெறுவல் பிழைப்பொன் றுபெறாய்.'

எனவும்,

1. யா. வி. 15 உரைமேற்.

'தேனம ருந்திரு வாரிள வேனிலின்
மானம ரும்மட நோக்கியர் நோக்காய்
தானுரு கல்லெயி றுங்கிநின் றுய்கரி
யானக * லாதடி அஞ்சலி செய்தும்.'

எனவும்,

'கதிர்கொள் மதியும் கனபொன் களிறும்
பயில்கொண் டுபரந் தழகா கியினி'

எனவும் இன்னவை எல்லாம் குறில் ஒழுகல் பிரிந்திசை வண்ணம். இவையும் ஐந்தெழுத்தின்மேலும் ஒட்டிக்கொள்க.

[அறுசீர் ஆசிரிய விருத்தம்.]

'துடித்த டித்தி மிழ்தரு துளங்கு வெள்ள ருவிநீர்
தொடுத்தெ டுத்த மாலைப்போல் தொடர்ந்து தோன்றும் தூய்மைசால்
அடுத்த டுத்து ரைபுக அசைவில் சீரு ருச்சந்தம்[1]
மடுத்த டுத்து வைகலும் மறத்த லின்றி வாழ்த்துவாம்.'

என இன்னவை எல்லாம் குறில் வல்லிசைப் பிரிந்திசை வண்ணம். இவற்றையும் ஐந்தெழுத்தின்மேலும் ஒட்டிக்கொள்க.

[தரவு கொச்சகம்.]

'களியுந்தி வீழ்ந்த கதிர்ச்செய்ய வெய்யோன்
ஒளியுந்தி நீண்டகுடை ஒருவனல் கானேல்
நிலமுந்தி யோடும் வளைமுல்லை மெல்ல
நகுமுந்தி யாகின்ற தாவியா தாங்கொலோ!'

என இன்னவை எல்லாம் குறில் மெல்லிசைப் பிரிந்திசை வண்ணம். இவற்றையும் ஐந்தெழுத்தின் மேலும் ஒட்டிக்கொள்க.

[அறுசீர் ஆசிரிய விருத்தம்.]

'வாங்குபு கொள்ள நின்றுள் வாரண வாசி மன்னன்
தேங்கமழ் ஒலிமென் கூந்தல் தேவினுட் கீன்ற மங்கை
ஆங்கவள் அருகல் அல்லாள் அத்தின புரத்தி ராசன்
வான்புகழ் மங்கை வாகைப் பூநிறம் அன்ன மேனி.'

என இன்னவை எல்லாம் குறில் அகவல் மயங்கிசை வண்ணம். இவற்றையும் ஐந்தெழுத்தின்மேலும் ஒட்டிக்கொள்க.

[கட்டளைக் கலித்துறை.]

'ஆசைப் படுவ அருந்தவம் கல்வி;அல் லாப்பிறகள்!
பேசப் படுவ திலம்; இவை யாவை பிறப்பிறப்பாம்
தேசத் தியற்கை தெரிந்துணர் வாருக்குச் சேயிழைமார்
பாசப் படுகுழிப் பற்றறுத் ‡ தார்வினைப் பற்றறுத்தார்.'

என இன்னவை எல்லாம் குறில் ஒழுகல் மயங்கிசை வண்ணம். இவற்றையும் ஐந்தெழுத்தின்மேலும் ஒட்டிக்கொள்க.

---

1. 'உருச்சந்தம்' என்பது வடநாட்டில் சமணர்க்குச் சிறந்த தலமாகிய ஊர்ஜயந்தகிரி இஃது 'உச்சந்தம்' எனவும் வழங்கும்.

பி-ம். * யாமக. † லாப்பிறர்கள். ‡ பாற்றறுத்.

[கலி நிலைத்துறை.]

'தாமத் தூண்களைத் தருக்கொடு முருக்குதல் மூாணும்
தூமத் தூவகல் எடுத்துக்கொண் டுழையவர் எறியும்
வாமத் தோள்களின் வலித்தனன் புடைத்தெடுத் தாற்றும்
பேய்மைத் தீத்தொழில் பெருகிய தாசனும் உணர்ந்தான்.'

என இன்னவை எல்லாம் குறில் வல்லிசை மயங்கிசை வண்ணம். இவற்றையும் ஐந்தெழுத்தின்மேலும் ஒட்டிக்கொள்க.

[அறுசீர் ஆசிரிய விருத்தம்.]

'உருகா தார்தம் இன்னுயிர்காத் தொழிய லாமோ உணர்ந்தார்க்கு
வருகார் போல வளஞ்சுரந்திவ் வையம் காக்கும் வயமாறன்
முருகார் ஆர மார்பினன் முரசம் ஆர்ப்ப முல்லைகாள்!
குருகார் பௌவம் உண்டிருண்ட கொண்டல் என்று குழைத்தீரோ?'

எனவும்,

'கண்ணுடை ரவர்கண்டார் கண்ணில்புண் பிறவெல்லாம்.'

எனவும் இன்னவை எல்லாம் குறில் மெல்லிசை மயங்கிசை வண்ணம். இவற்றையும் ஐந்தெழுத்தின்மேலும் ஒட்டிக்கொள்க.

இவற்றில் ஒரு வண்ணத்தாலேயும் பல வண்ணத்தாலேயும் வரும் இப்பெற்றியே கடையில்லா விகற்பமாம். அவற்றை ஒரு விகற்பத்தாற் சொன்னவாறு. பிற வகையால் வரும் வண்ணங்களையும் ஒரூஉ வண்ணங்களையும் உரைத்தவற்றோடு ஒருபுடை ஒப்புடையாற் சார்த்தி உணர்க.

என்னை?

[கட்டளைக் கலித்துறை.]

தூங்கேந் தடுக்குப்* பிரிதல் மயங்கிசை வைத்துப்பின்னும்
ஆங்கே அகவல் ஒழுகல் வலிமெலிப் பாற்படுத்துப்†
பாங்கே‡ குறில்நெடில் வல்லிசை மெல்லிசை யோடிடையும்
தாங்கா துறழ்தரத் தாம்வண்ணம் நூறும் தலைப்படுமே.' 1

எனக் கொள்க.

தூங்கிசை வண்ணம், ஏந்திசை வண்ணம், அடுக்கிசை வண்ணம், பிரிந்திசை வண்ணம், மயங்கிசை வண்ணம் என இவ்வைந்தினையும்;

அகவல் வண்ணம், ஒழுகல் வண்ணம், வல்லிசை வண்ணம், மெல்லிசை வண்ணம் என்னும் என இந்நான்கினையும்;

குற்றெழுத்து வண்ணம், நெட்டெழுத்து வண்ணம், வல்லெழுத்து வண்ணம், மெல்லெழுத்து வண்ணம், இடையெழுத்து வண்ணம் என இவ்வைந்தினையும் கூட்டிக்

குறில் அகவல் தூங்கிசை வண்ணம், நெடில் அகவல் தூங்கிசை வண்ணம், வலி அகவல் தூங்கிசை வண்ணம், மெலி அகவல் தூங்கிசை வண்ணம், இடை அகவல் தூங்கிசை வண்ணம் என்று இவ்வாறெல்லாம் உறழ்ந்துகொள்ள, நூறு வண்ணவிகற்பம் ஆம்.

## VII

இனி, 'வழு' என்பன, குற்றம். அவை நான்கு வகைப்படும்: எழுத்து வழுவும், சொல் வழுவும், பொருள் வழுவும், யாப்பு வழுவும் என.

அவற்றுள் (1) எழுத்து வழுவாவது, எழுத்ததிகாரத்தோடு மாறுகொள்வது.

1. யா. கா.
பி-ம். * தடுக்கல். † ஒழுகிசை வன்மையு மென்மையுமா. ‡ வாங்கே.

வரலாறு :

[நேரிசை வெண்பா.]

'வெறிகமழ் தண்சிலம்பின் வேட்டமே அன்றிப்
பிறிதும் குறையுடையான் போலும்—செறிதொடீஇ!
தேமான் இதணத்தான் நாமாக நம்புனத்தே
மாமான்பின் வந்த மகன்!'

என இதனுள், 'தேமா' எனற்பாலதனைத் 'தேமான்' என னகர ஒற்றுக் கொடுத்தமையால், எழுத்து வழு ஆயிற்று.

என்னை ?

'முன்னிலை நெடியும் ஆவும் மாவும்
னம்மிகப் புணரும் இயங்குதிணை யான.'

என்றாராகலின்.

(2) சொல் வழுவாவது, சொல்லதிகாரத்தோடு மாறு கொள்வது. என்னை ?

'சொல்லின் வழுவே சொல்லோத்து மரபிற்
சொல்லிய குற்றம் தோன்ற லான.'

என்றாராகலின்.

வரலாறு :

[நேரிசை வெண்பா.]

'இசையெல்லாம் கொட்ட எழிற்றனை ஊர்ந்து
வசையிலா மன்னர்வந் தேத்த—இசையும்
அடிசில் பருகி அணியார்த்துப் போந்தான்
கொடிமதிற் கோழியார் கோ.'

இதனுள், 'இசையெல்லாம் ஆர்ப்ப' எனவும், 'எழிற்றனை நாப்பண்' எனவும், 'அடிசில் அயின்று' எனவும், 'அணி அணிந்து போந்தான்' எனவும் இவ்வாறு பொதுவினுல் எடுத்துக்கொண்டு பொதுவினுல் முடித்தற்பாலன வற்றைப் பொதுப்பெயரால் எடுத்துக்கொண்டு சிறப்பு வினையான் ஒன்றற்கே உரிய சொற்புணர்த்தமையான், சொல் வழு ஆயிற்று. என்னை ?

'வேறுவினைப் பொதுச்சொல் ஒருவினை கிளவார்.' 1

எனவும்,

'வேறுவினை யுடைய பொதுவினை கிளப்பப்
பொதுவினை யுடைய வேற்றுமை உண்டோ ?'

எனவும் கூறினாராகலின்.

(3) பொருள் வழுவாது, பொருளதிகாரத்தோடு மாறு கொள்வது என்னை ?

'பொருளின் வழுவே தமிழ்நடைத் திரிவே.'

என்றாராகலின்.

வரலாறு :

[நேரிசை வெண்பா.]

'முன்னும் தொழத்தோன்றி முள்ளெயிற்றாய்! அத்திசையே
இன்னும் தொழத்தோன்றிற் றீதேகாண்—மன்னும்
பொருகளிமால் யானைப் புகார்க்கிள்ளி பூண்போற்
பெருகொளியால் மிக்க பிறை.' 2

இது நாண நாட்டம்.

---

1. தொல். சொல். 46. 2. தொல். பொ. 114 உரைமேற்.

'பண்டிப் புனத்துப் பகலிடத் தேனுட்
கண்டிக் களிற்றை அறிவன்மற்—றிண்டிக்
கதிரன் பழையனூர்க் கார்நீலக் கண்ணாய்!
உதிரம் உடைத்திதன் கோடு.' 1

இது நடுங்க நாட்டம்.

இவை இரண்டும் பொருளதிகாரத்தோடு மாறு கொண்டன. என்னை?

'நாணவும் நடுங்கவும் நாடாள் தோழி
காணுங் காலைத் தலைமகள் தேத்து.'

என்றாராகலின்.

[நேரிசை ஆசிரியப்பா.]

'வாளை மேய்ந்த வளைகோட்டுக் குதிரை
கோழிலை வாழைக் கொழுமடல் உறங்கும்
ஊரன் செய்த கேண்மை
தேரை வாலினும் பெரிதா கின்றே.'

இதுவும் பொருள் இன்மையாற் பொருள் வழு ஆயிற்று.

(4) யாப்பு வழுவாவது, யாப்பதிகாரத்தோடு மாறு கொள்வது. என்னை?

'யாப்பின் வழுவே யாப்பின திலக்கணம்
கோப்ப வாராக் கோவைத் தாகும்.'

என்றாராகலின்.

வரலாறு :

'குமண! வாழி! குமண உமணர்
உப்பிற் றேய்கநின் பகையே; யான்சில
பெருமை வேண்டி வந்தேன்;
நீநின் பெருமை வேண்டின் தா.'

இப்பாட்டு முதல் எடுத்துக்கொண்ட ஓசையிற்கெட்டுப் பின் பாவிக் கட்டுரையால் வந்தமையால், யாப்பு வழு.

பிறவும் அன்ன.

அறுத்து இசைப்பும், வெறுத்து இசைப்பும், அகன்று இசைப்பும் என்னும் ஓசைக் குற்றம் வருமாறு :

[குறளடி வஞ்சிப்பா.]

'வீங்குமணி விசித்த விளங்குபுனை நெடுந்தேர்
காம்புநீடு மயங்குகாட்டுள்
பாம்புபெரிது வழங்குதொ றேங்கு
வயங்குகலிமா நிரைபுநிரைபு

வலவன்,

வாம்பரி கடவி வந்தோன்
கெழூஉமணி அகலம் தழூஉமதி விரைந்தே.' 2

இது நாலசைப் பொதுச்சீர் பலவும் வந்து வஞ்சி தாங்கினமையின், அறுத்திசைப்பு என்னும் குற்றம் ஆயிற்று.

---

1. சிற்றெட்டகம். 2. இச்செய்யுள் எட்டு ஆசிரிய உரிச்சீரும் வந்த பாட்டுக்கு உதாரணமாகப் பின்னர் இவ்வுரையாசிரியராற் காட்டப்பட்டுள்ளது.

[நேரிசை வெண்பா.]

'ஓங்கிலை வேலோன் ஒளியால் அளிபெற்ற
பூந்துழாய் போன்றேமும் யாமேமற்—றேய்ந்து
தகைமொய்ம்பிற் ருழ்தடக்கைத் தண்ணருவி நாடன்
பகைமுனை போன்றேமும் யாம்.'

இதனுள், 'தகைமொய்ம்பிற் ருழ்தடக்கை' என்புழி வஞ்சி தூங்கிசைத்தமையால், வெறுத்து இசைப்பு.

'சிறுநன்றி இன்றிவர்க்கியாம் செய்தக்கால் நாளைப்
பெறுநன்றி பின்னும் * பெரிதென்—றுறுநன்றி
தானவாய்ச் செய்வதூஉம் தானமன் றென்பவே
வானவாம் உள்ளத் தவர்.' 1

இதனுள், 'சிறுநன்றி இன்றிவர்க்கியாம்' என்புழிக் குற்றியலிகரம் வந்து, வெட்டென்று இன்னுங்காய் இசைத்தமையால், வெறுத்து இசைப்பு ஆயிற்று.

[இன்னிசை வெண்பா.]

'கற்றற் றற்ற சுடற்ற கடற்றிரை
விற்றற் றற்ற வில்லேர் புருவத்தள்
சொற்றற் றற்ற சுடர்க்குழை மாதரோ
டுற்றற் றற்றதென் நெஞ்சு.'

இதுவும் வெறுத்து இசைப்பு.

'கானக நாடன் கருங்கோன் பெருமலைமேல்
ஆனை கிடந்தாற்போல் ஆய பெருங்கற்கள்
தாமே கிடந்தன கொல்லோ ! அவையேற்றிப்
பெற்றி பிறக்கிவைத்தார் உளர்கொல்லோ !'

இது, முன் செய்யுளாய் வந்து, இறுதி பரவிக் கட்டுரையால் வந்தமையால் அகன்று இசைப்பு என்னும் குற்றம் ஆயிற்று. இதுவும் யாப்புக் குற்றத்துள்ளே பட்டு அடங்கும். பிறவும் அன்ன.

இன்னும் வழு என்பதனலே, ஆனந்தம் முதலாகிய குற்றங்களும் அறிந்து கொள்க. பிறவும் அன்ன.

'திண்ணிதின் நடாத்தல் தெள்ளியோர் கடனே.'

என்பதனல், அவற்றை எல்லாம் பிழையாமே நடாத்துதல் புலவர்கள் கடன் என்றவாறு.

இச்சூத்திரத்துள் 'பிறவும்' என்று சொல்லிய அதனனே, நூலும், சூத்திரமும், ஓத்தும், படலமும், பிண்டமும் ஆமாறும், அடியின்றி நடப்பனவும், ஓரடியாய் நடப்பனவும், புனைந்துரையாய் நடப்பனவும் ஆமாறும் உணர்ந்துகொள்க.

நூலாவது, மூவகைத்தாய், மூவரின் நடைபெற்று, நால்வகைப் பயத்ததாய், எழுவகை ஆசிரியர் மதவிகற்பத்ததாய், பத்துவகைக் குற்றத்திற்றீர்ந்து, பத்துவகை மாண்பிற்றுய், பதிமூன்றுவகையான உரை பெற்று, முப்பத்திரண்டு தந்திர உத்தியொடு புணர்ந்து வருவது.

அவற்றுள், மூன்றுவகையாவன, தந்திரம், சூத்திரம், விருத்தி என இவை.

மூவரின் நடைபெறலாவது, அம்மூன்றும் நடாத்துவார் மூவர் ஆசிரியர் எனக் கொள்க.

---

1. யா. வி. 4 உரைமேற். * பி-ம் : மன்னும்,

நால்வகைப் பயனுவன, அறம், பொருள், இன்பம், வீடு என்பன. 1

எழுவகை ஆசிரியர் மத விகற்பமாவன, 'உடம்படுதல், மறுத்தல்' என்பன முதலாக உடையன 2 எனக் கொள்க.

பத்துவகைக் குற்றமாவன, 'குன்றக் கூறல்' 3 முதலாக உடையன எனக் கொள்க.

பத்துவகை மாண்பாவன, 'சுருங்க வைத்தல்' முதலாக உடையன 4 எனக் கொள்க.

பதிமூன்றுவகை உரையாவன, 'சூத்திரம் தோற்றல்' முதலாக உடையன எனக் கொள்க.

முப்பத்திரண்டு தந்திர உத்தியாவன :

'நுதலிப் புகுதல், ஒத்துமுறை வைத்தல்,
தொகுத்துக் காட்டல், வகுத்துக் காட்டல்,
முடிவிடம் கூறல், முடித்துக் காட்டல்,
தானெடுத்து மொழிதல், பிறன்கோட் கூறல்,
சொற்பொருள் விரித்தல், இரட்டுற மொழிதல்,
ஏதுவின் முடித்தல், எடுத்த மொழியின்
எய்த வைத்தல், இன்ன தல்ல
திதுவென மொழிதல், தன்னினம் முடித்தல்,
எஞ்சிய சொல்லின் எய்தக் கூறல்,
மாட்டெறிந் தொழிதல், பிறநூல் முடிந்தது
தானுடம் படுதல், தன்குறி வழக்கம்
மிகவெடுத் துரைத்தல், இறந்தது விலக்கல்,
எதிரது போற்றல், முன்மேற் கோடல்,
பின்னது நிறுத்தல், எடுத்துக் காட்டல்,
முடிந்தது முடித்தல், சொல்லின் முடிவின்
அப்பொருள் முடித்தல், தொடர்ச்சொற் புணர்த்தல்,
யாப்புறுத் தமைத்தல், உரைத்தும் என்றல்,
விகற்பத்து முடித்தல், தொகுத்துடன் முடித்தல்,
ஒருதலை துணிதல், உய்த்துணர வைத்தல்' 5

என இவை பாடலனுர் உரை.

'நூலெனப் படுவது நுவலுங் காலை
முதலும் முடிவும் மாறுகோள் இன்றித்
தொகையினும் வகையினும் பொருண்மை காட்டி
உண்ணின் றகன்ற உரையொடு பொருந்தி
நுண்ணிதின் விளக்கல் அதுவதன் பண்பே.' 6

'அதுவே தானும் ஈரிரு வகைத்தே.' 7

'ஒருபொருள் நுதலிய சூத்திரத் தானும்,
இனமொழி கிளந்த ஓத்தி னுனும்,
பொதுமொழி கிளந்த படலத் தானும்,
மூன்றுருப் படக்கிய பிண்டத் தானும்என்
றாங்கனை மரபின் இயலும் என்ப.' 8

1. நன். 10. 2. நன். 11. 3. நன். 12. 4. நன். 13.
5. நன். 14. 6—8. தொல். பொ. 478–484.

'அவற்றுள்,
சூத்திரந் தானே
ஆடி நிழலின் அறியத் தோன்றி
நாடுதல் இன்றிப் பொருணனி விளங்க
யாப்பினுள் தோன்ற யாத்தமைப் பதுவே.' 1

'நேரின மணியை நிரல்பட வைத்தாங்
கோரினப் பொருளை ஒருவழி வைப்ப
தோத்தென மொழிய உயர்மொழிப் புலவர்.' 2

'ஒருநெறி இன்றி விரவிய பொருளாற்
பொதுமொழி தொடரின் அதுபடலம் ஆகும்.' 3

'மூன்றுறுப் படக்கிய தன்மைத் தாயின்,
தோன்றுமொழிப் புலவர் அதுபிண்டம் என்ப.' 4

இவை, நாலும், சூத்திரமும், ஒத்தும், படலமும், பிண்டமும் ஆமாறு சொன்னவாறு.

'இவை எல்லாம் முன் சொல்லிப் போந்தன அன்றோ?' 5 எனின், உரைப்பான் புகுகின்றுழி 'இது நூலாமாறு,' என்று காட்டிற்றல்லது, இந்த நூலுட் சூத்திரத்தின் பொருள் என்று அப்பொழுது சொல்லிற்றில்லை எனக் கொள்க.

'உரையொடு நூலிவை அடியில நடப்பினும்,
வரைவில என்ப வாய்மொழிப் புலவர்.'

'மொழிபிசி முதுசொல் மூன்றும் அன்ன.'

என்றார் பல்காயனார்.

'உரையும் நூலும் அடியின்றி நடப்பினும்,
வரைவில என்ப வயங்கி யோரே.'

'வாய்மொழி பிசியே முதுசொல் என்றுங்
காமுரை மூன்றும் அன்ன என்ப.'

என்றார் நற்றத்தனார்.

இவை அடியின்றி நடப்பன உரைத்தவாறு.

'செயிர்தீர் செய்யுள் தெரியுங் காலை
அடியின் ஈட்டத் தழகுபட் டியலும்.'

'ஓரோவடி யானும் ஓரோவிடத் தியலும்.'

'அவைதாம்,
பாட்டுரை நூலே மந்திரம் பிசியே
முதுசொல் அங்கதம் வாழ்த்தொடு பிறவும்
ஆக்கின என்ப அறிந்திசி னோரே.'

என்றார் பல்காயனார்.

இவை ஓரடியால் நடப்பன உரைத்தவாறு.

புனைந்துரை இரு திறத்தன: பெரியதனைச் சுருக்கிச் சொல்லுதலும் சிறியதனைப் பெருக்கிச் சொல்லுதலும் என. என்னை?

'உரைக்கப் படும்பொருட் கொத்தன எல்லாம்
புகழ்ச்சியின் மிக்க புனைந்துரை ஆகும்.'

என்றாராகலின்.

1—4. தொல். பொ. 478—484. 5. யா. வி. 1 உரைமேற்.

வரலாறு :

[நேரிசை வெண்பா.]

'அடையார்பூங் கோதையாட் கல்குலும் தோன்றும்
புடையார் வனமுலையும் தோன்றும்—இடையாதும்
கண்டுகொளா தாயினும் காரிகை நீர்மையாட்
குண்டாகல் வேண்டும் நுசுப்பு.'

எனவும்,

[குறள் வெண்பா.]

'அயிர்ப்பாகல் நோக்குவேன் கண்டேன் மயிர்ப்பாகிற் *
பாகத்திற் பாகம் நுசுப்பு.'

எனவும் இவை பெரியதனைச் சுருக்கின.

'கலைக்கணார் † நின்றிட்ட பூசல் கடைக்கணு
கேளாமே நீண்டன கண்.'

எனவும்,

'பொன்மலி கூடற் பூமலி கச்சி
மாரி ஈகை மணியணி மாடம்'

எனவும் இன்னவை எல்லாம் சிறியவற்றைப் பெருக்கின. பிறவும் அன்ன.

இன்னும், 'வண்ணமும் பிறவும்' என்றதனாலே, நாலசைச் சீர் இன்றியே நடாத்துமாறும், நான்கசையும் எண்பத்திரண்டு சீரும் கொண்டு இயற்று மாறும், எழுபது தளை வழுவிற்றீர்ந்த அறுநூற்று இருபத்தைந்து அடியும் ஆமாறும், சந்தமும் தாண்டகமும் ஆமாறும், பாக்கட்கு வருணம் முதலாயின வற்றை வகுத்து வழங்குமாறும் உரைத்துக் கொள்க.

அவை சொல்லுமாறு :

[நேரிசை வெண்பா.]

'குற்றுகரம் ஒற்றுக்கிக் கூன்வகுத்துச் சிந்தியற்றி
மற்று நெடிலும் வகையுளியும்—சொற்றபின்
மேலசைச்சீர் நாட்டி அளபெடை வீறழித்தால்
நாலசைச்சீர்க் கில்லை நடை.'

என்பது, ஏழ் நயமும் தொகுத்தவாறு. ‡

[கலி விருத்தம்.]

'காக்கை பாடினி யார்முத லாகிய
மாக்க விப்புல வோர்மதம் பற்றியீங்
கூக்கம் இன்மையுண் டாமுக ரத்தையொற்
றுக்கின் நாலசைச் சீரணை யாதரோ.'

இதன் கருத்து :

'குண்டுநீடுநீர்க் குவளைத்தண்சுனை' 1

எனவும்,

'குறித்துக்கூடுவோர் நெறிமயங்கவும்' 2

எனவும்,

'போதுசேர்ந்துகூடு பொறிவண்டினம்' 3

எனவும்,

'புரிந்துவாங்குவீங்கு நரம்பிவர்தலின்' 4

எனவும்,

---

1–4. 'நலஞ்செலத் தொலைந்த' என்னும் பாட்டிலுள்ள அடிகள்.
* பி-ம் : மயிர்ப்பாதி. † கடைக்கணார். ‡ தொடுத்தவாறு.

'கொன்றுகொடுநீடு குருதிமாறவும்.' 1

எனவும் இத்தொடக்கத்தனவற்றுள் ஐயசைச்சீரும் ஆறசைச்சீரும் வந்தன வற்றைக் காக்கை பாடினியார் முதலாகிய ஒருசார் ஆசிரியர் மதம் பற்றி,

'இஉ இரண்டன் குறுக்கம் தளைதப
நிற்புழி ஒற்றும் நிலைமைய ஆகும்'

[காக்கை பாடினியார்.]

எனவும்,

'இஉ இரண்டன் குறுக்கம் தளைதவின்
ஒற்றெழுத் தாகும் உயிரள பெடையும்.'

எனவும்,

'சீர்தளை சிதைவுழி ஈருயிர்க் குறுக்கமும்
நேர்தல் இலவே உயிரள பெடையும்.'

[மயேச்சுரர்.]

எனவும்,

'உயிரள பெடையும் குறுகிய உயிரின்
இகர உகரமும் தளைதபின் ஒற்றும்.'
'சீர்தப வரினும் ஒற்றியற் றுகும்.'

[அவிநயனுர்.]

எனவும்,

[நேரிசை வெண்பா.]

'ஐந்தா றசையின் அருகி உகரத்தின்
வந்தசீர் ஒன்றிரண்டொற் றெப்பித்து—நந்துவித்தால்
வஞ்சிப்பா விற்கியலும் நாலசைச்சீர் ; அல்லுருச்சீர்
தங்கி விரவத் தகும்.' 2

எனவும் இவ்விலக்கணங்களினுலே ஆண்டுக் குற்றியலுகரங்களை ஐயசைச்சீரும் ஆறசைச்சீரும் அல்லவென்று அவ்வாறே அவற்றையும் களைக.

'வசையில்புகழ் வயங்குவெண்மீன்' 3

எனவும்,

'சோறுவாக்கிய கொழுங்கஞ்சி' 4

எனவும்,

'களிறுவழங்குதெருவில் நெடுந்தேரேறி'

எனவும்,

'திரைந்துதிரைந்து திரைவரத் திரள்முத்தம் கரைவாங்கி
நிரைந்துநிரைந்து சிறுநுளைச்சியர் நெடுங்கானல் விளையாடவும்.' 5

எனவும்,

'இரவுவரவுபே ரின்னுநெறி'

எனவும் வரும் இத்தொடக்கத்தனவற்றையும் இவ்விலக்கணத்தாலும்,

'தளைசிர் வண்ணம் தாங்கெட வரினே
குறுகிய இகரமும் குற்றிய லுகரமும்
அளபெடை ஆவியும் அலகியல் பிலவே.' 6

என்னும் இவ்விலக்கணத்தாலும் குற்றுகரங்களை ஒற்றுக்கிக்கொள்ள மூவசைச் சீரே ஆம் என்பது.

நேர்பசை நிரைபசை வேண்டும் ஆசிரியர்க்கு அவை எல்லாம் மூவசைச் சீரேயாம் எனக் கொள்க.

---

1—2. யா.வி. உரைமேற். 3. பத்துப் : பட்டினப். 1. 4. ஷை ஷை 44. 5. யா.வி. 15 உரை மேற். 6. யா,வி. 4.

[கலி விருத்தம்.]

'குற்றிய லிகரமும் குறுகல் இன்றியே
மற்றுள நாலசை வந்த வாலெனின்,
முற்றிய முதல்நடு இறுதி வஞ்சியுள்
குற்றமில் கூன்வரக் குற்றம் இல்லையே.'

என்பதன் கருத்து,

'அடி, அதர்சேறலின் அகஞ்சிவந்தன.'

எனவும்,

'மா, வேயெறிபதத்தா னிடங்காட்ட'

எனவும்,

'மண்கொண்ட குழிக் குவளைபூக்குந்தண்
சோணாட்டுப் பொருநன்'

எனவும்,

'கலங்கழாலிற் றுறை கலக்காணு'

எனவும்,

'மாவழங்கலின் மயக்குற்றன வழி.' 1

எனவும்,

'தேனுறுபூந் தெரிகுவளை மிசை'

எனவும் இத்தொடக்கத்தனவற்றுள் குற்றுகரம் இன்றியேயும் நாலசைச்சீர் வந்தன பிறவெனின், அவற்றுள் 'அடி' என்பதும், 'மா' என்பதும் முதற்கண் கூனாகவும்; 'குழி' என்பதும், 'துறை' என்பதும் இடைக்கண் கூனாகவும்; 'வழி' என்பதும், 'மிசை' என்பதும் கடைக்கண் கூனாகவும் வைப்ப, நாலசைச்சீர் அன்றாம்.

வஞ்சி அடியின் முதலும் இடையும் இறுதியும் அசை கூனாகப் பெறும். வஞ்சியடி முதற்கண் சீர் கூனாகவும் பெறும். இடையும் இறுதியும் உகர ஈறுகிய நேரீற்று இயற்சீரும் கூனாய் வரப்பெறும். அல்லாச்சீர் கூனாய் வரப் பெறா. நேர்பசை நிரைபசை வேண்டும் ஆசிரியர்க்கும் உகர ஈறுகிய நேரீற்று இயற்சீரும் அசையாம். இவை எல்லா ஆசிரியர்க்கும் துணிபு எனக் கொள்க. பிறவும் அன்ன. இவையும் அவர் காட்டியவே எனக் கொள்க.

இன்னும் அவர் காட்டுமாறு :

'அதற்கொண்டு, கலங்கொண்டன கள்ளென்கோ !
காழ்கோத்தன சூட்டென்கோ !' 2

எனவும்,

'வேந்து, வேல்வாங்கி வியந்துருத்தலின்'

எனவும்,

'தெருவு தேரோடத் தேய்ந்தகன்றன.' 3

எனவும் கொள்க.

இவற்றுள், 'அதற்கொண்டு' எனவும், 'வேந்து' எனவும், 'தெருவு' எனவும் இவை எல்லாம் சீர் கூனாயின.

இவற்றிற்கு இலக்கணம் சொல்லுமாறு :

'உறுப்பிற் குறைந்தவும் பாக்கண் மயங்கியும்
மறுக்கப் படாத மரபின வாகியும்
எழுவாய் இடமாய் அடிப்பொருள் எல்லாம்
தழுவ நடப்பது தான்றனிச் சொல்லே.' 4

1. புறம். 345. 2. 'தாழிரும் பிணர்த்தடக்கை' என்னும் பாட்டில் உள்ளவை யா.வி. 93 உரைமேற்.) 3. புறம். 345. 4. யா.வி. 94 உரைமேற்.

'வஞ்சி மருங்கின் இறுதியும் ஆமெனக்
கண்டனர் மாதோ கடனறிந் தோரே.' 1

என்பன காக்கை பாடினியம்.

'தனிச்சொல் என்ப தடிமுதற் பொருளொடு
தனித்தனி நடக்கும்; வஞ்சியுள் ஈறே.'

என்பது சிறுகாக்கை பாடினியம்.

'தனியே,

அடிமுதற் பொருள்பெற வருவது தனிச்சொலஃ
திறுதியும் வஞ்சியுள் இயலும் என்ப.' 2

என்பது அவிநயம்.

'அடியினிற் பொருளைத் தானினிது கொண்டு
முடிய நிற்பது கூன்என மொழிய.' 3
'வஞ்சி இறுதியும் ஆகும் அதுவே.' 4
'அசைகூன் ஆகும் என்மனுர் புலவர்.' 5

என்பன பல்காயம்.

'தானே அடிமுதற் பொருள்பெற வருவது
'கூன்என மொழிப குறியுணர்ந் தோரே.' 6
'வஞ்சி இறுதியும் வரையார் என்ப.' 7

என்பன நற்றத்தம்.

'வட இமயமொடு தென் பொதியிலிடை'

என்பதனுள் 'வட' என்பதும், 'தென்' என்பதும் கூன் எனக் கொள்க.

[கலி விருத்தம்]

'அந்தமும் ஆதியும் நடுவும் கூனசை
வந்தன அன்றியும் வந்த வாமெனின்
முந்திய குறளடி மொழிந்த தன்றது
சிந்தென நாலசை சேர்வ தில்லையே.'

என்ற இதன் கருத்து, வஞ்சிப்பாவின் முதல் நடு இறுதி கூன் இன்றியும்,

'தண்முகைமென்குழல் பெருந்தடங்கண்
பூவேநலந்தொலைந் தினியாற்றலள்'

எனவும்,

'வலமாதிறத்தான் வளிகொட்ப'

எனவும்,

'அள்ளற்பள்ளத் தகன்சோணுட்டு.' 8

எனவும்,

'வேங்கைவாயில் வியன்குன்றூர்.' 9

எனவும்,

'அங்கண்வானத் தமராசரும்.' 10

எனவும் இத்தொடக்கத்தனவற்றுள் 'நாலசைச்சீர் வந்தனபிற' எனின், 'அவை குறளடி வஞ்சி அல்ல; சிந்தடி வஞ்சியாக வைப்ப, நாலசைச்சீர் அல்லவாம்,' என்பது. பிறவும் அன்ன.

---

1—7 யா.வி. 94 உரைமேற். 8—9 யா. வி. 95 உரைமேற். 10. இது குறளடிப் பாவிற்கு மேற்கோளாகக் காட்டப்பட்டுள்ளது. யா. வி. 90 உரைமேற்.

எல்லா ஆசிரியரும், 'வஞ்சியுள் மூன்றிடத்தும் நிரையீற்றியச்சீர் மிக்கு வரும்; நேரீற்று இயற்சீர் முதலும் இடையும் அருகிவரப் பெறும்;' என்ப. என்னை?

'தாழ்பொழிற் றடமாஞ்சினை
வீழ்குயிற் பெடைமெலிவினை.' 1

எனவும்,

'தவளமுத்தம் சங்கீன்று
பவளமொடு ஞெமர்ந்தூராய்' 2

எனவும்,

'புன்காற் புணர்மருதின்
போதப்பிய புனற்றாமரை' 3

எனவும்,

'உடைமணியரை உருவக் குப்பாயத்து' 4

எனவும்,

'தேந்தாட் டீங்கரும்பின்' 5

எனவும்,

'பூந்தாட் புனற்றாமரை' 6

எனவும் காட்டுவாராகலின்.

பல்காயனார், 'நேரீற்று இயற்சீர் வஞ்சியடியின் இறுதியும் அருகி வரப் பெறும்,' என்றார். அவர் கூறுமாறு:

'இயற்சீர் நேரிறல் தன்றளை உடைய
கலிக்கியல் பிலவே காணுங் காலை;
வஞ்சியுள்ளும் வந்த தாகா;
ஆயினும் ஓரோவிடத் தாகும் என்ப.'

என்பது பல்காயம்.

'கலித்தளை அடிவயின் நேரீற் றியற்சீர்
நிலைக்குரித் தன்றே தெரியு மோர்க்கே.' 7
'வஞ்சி மருங்கினும் இறுதி நில்லா.' 8

என்றார் தொல்காப்பியனார்.

'நேரீற் றியற்சீர் கலிவயின் இலவே;
வஞ்சி மருங்கினும் இறுதியின் இலவே.'

என்பது நற்றத்தம்.

'செங்கண் மேதி கரும்புழக்கி' 9 என்றித் தொடக்கத்தனவற்றைச் சிந்தடியும் குறளடியும் விரவி வந்த வஞ்சிப்பா எனக் கொள்க.

---

1. யா.வி. 15 உரைமேற். 2. பானல்வாய்' என்னும் பாட்டின் அடி 3-6. பா. ?. 15. உரைமேற். 7-8 தொல்—89 (யா.வி. 90 உரைமேற்.)

[கலி விருத்தம்.]

'நேரசை இறுதியாய் நிகழும் ஈரசைச்
சீர்க்கடை வஞ்சியுட் செலவும் கூறினர்
நேர்நிரை நேர்பொடு நிறையும் நாலசைச்
சீருநன் கெடுத்துடன் செப்பி னாரரோ.'

இது பல்காயனார் மதம்.

'குற்றிய லுகரமும் கூனும் சிந்துமா
முற்றிய அன்றியும் மொழிவ ராமெனின்,
தெற்றென நெடிலடி சேரும் என்பது
சொற்றபின் நாலசைத் தோற்றம் இல்லையே.'

இதன் கருத்து,

'சிறுசோற்றானும் நனிபல கலத்தன் மன்னே' 1

என்றித்தொடக்கத்தன ஆசிரிய அடிகளுள்ளும்,

'கண்டல்வண்டற் கழிபிணங்கிக்* கருநீல மதுவிம்மவும்
கொண்டல்கொண்ட பணைமுன்றிற் பண்ணையாயம் குடிகெழுவவும்.'

என்றித் தொடக்கத்துக் கொச்சக அடிகளுள்ளும் முன்சொன்ன பெற்றி அன்றி நாலசைச்சீர் வந்தன பிறவெனின், அவைதாம் நாற்சீர் அல்ல என்று ஐஞ்சீர் அடியாக வைப்ப, நாலசைச்சீர் அல்லவாம். தொல்காப்பியனாரும் கீரனாரும் முதலாக உள்ளார், ஒருசார் ஆசிரியத்துள்ளும் கலியுள்ளும் ஐஞ்சீரடியும் அருகி வரப்பெறும் என்று,

'என்பொடு தடிபடு வழியெல்லாம் எமக்கீயு மன்னே!
அம்பொடு வேல்நுழை வழியெல்லாம் தானிற்கு மன்னே!' 2

என்னும் ஆசிரிய அடிகளும்,

'அணிகினர் சிறுபொறி அவிர்துத்தி மாநாகத் தெருத்தேறி' 3

என்னும் கலியடியும் காட்டுவாராகலின் என்பது.

அவர் சொல்லுமாறு :

'வெண்டளை விரவியும் ஆசிரியம் விரவியும்
ஐஞ்சீர் அடியும் உளவென மொழிப.' 4

என்பது தொல்காப்பியம்.

'ஆசிரியம் கலி' என்று அதிகாரம் வருவித்து உரைக்கப்பட்டது இச் சூத்திரம்.

'ஐஞ்சீர் அடுக்கலும் மண்டிலம் ஆக்கலும்
வெண்பா யாப்பிற் குரிய அல்ல.' 5

என நக்கீரர் அடிநூலுள் 'வெண்பா யாப்பிற்கு உரிய அல்ல' என்றமையால், ஆசிரியத்துக்கும் கலிக்கும் ஐஞ்சீர் அடி புகுதலும் மண்டிலம் ஆகலும் உரிய என்று விரித்து உரைத்தார் எனக் கொள்க.

---

1 புறம் 235 : 4. 2 புறம் 235 : 6, 7. 3 யா.வி. 93, 95 உரைமேற். 4 தொல். பொ. 375. 5 நக்கீரனார் அடிநூல்.

பா-ம் : * கழிபிணங்க.

[கலி விருத்தம்]

'சேரும் நேரடிப் பாவிலேஞ் சீரடி
ஏரும் வெள்ளையல் லாவழி என்பது
சோர்வி லாததொல் காப்பியத் துள்ளுநக்
கீர ஞரடி நூலுள்ளும் கேட்கவே.'

இதனை விரித்து உரைத்துக் கொள்க.

'தகைபெறு பொதியிலெம் தலைவன் ஆணையின்
தொகைவகை விரிபடச் சொற்ற நூல்களுள்
வகையுளி சேர்த்துதல் வகுப்பர் ஆதலால்,
நகைபெற நாலசை நடப்ப தில்லையே.'

இதன் கருத்து,

[எழுசீர் ஆசிரிய விருத்தம்]

'கங்கணக் கைப்பந்தார்க் கனைகழற்காற்
கருவ்வரைபோல் நீண்ட மார்பிற் காமர்கோலம்
பொங்கிய சாமரை பொற்ப ஏந்திப்
புடைநின் றமரர்கள் போற்றிவீசச்
சிங்கம்சுமந் துயர்ந்தஆ சனத்தின்மேற்
சிவகதிக்கு வேந்தாகித் தேவர் ஏத்த
அங்கம் பயந்த அறிவனுய அறப்படைமுன்
ருய்ந்தானடி அடைவா மன்றே.'

இவ்வெழுசீர் ஆசிரிய விருத்தம் முதலாக உடையனவற்றில் மேற்சொன்ன பெற்றி அன்றியேயும் நாலசைச்சீர் வந்தன பிறவெனின், அகத்தியனுர் ஆணையாற் செய்யப்பட்ட நூல்கள் எல்லாம் 'வகையுளி சேர்த்துக' என்பதனுல், 'போற்றிவீச' என்பதனையும் 'ஆசனத்தின் மேல்' என்பதனையும் வகையுளி சேர்ந்த மூவசைச்சீர் என்பதாம்.

நாலசைச்சீர் வேண்டும் ஆசிரியரும்,

[நேரிசை வெண்பா]

'பாடுநர்க்கும் ஆடுநர்க்கும் பண்டுதாம் கண்டவர்க்கும்
ஊடுநர்க்கும் கூடுநர்க்கும் ஒத்தலால்—நீடுநீர்
நல்வயல் ஊரன் நறுஞ்சாந் தணியகலம்
புல்லலின் ஊடல் இனிது.' 1

என்பதனுள், டுகர நகரங்களை வகையுளி சேர்த்தி, மூவசைச் சீரேயாக வைப்பராகலின் என்பது.

'எழுத்தல் கிளவியின் அசையொடு சீர்நிறைத்
ஒழுக்கலும் அடியொடு* தளைசிதை யாமை
வழுக்கில் வகையுளி சேர்த்தலும் உரித்தே.' 2

என்ருர் அவிநயனுர்.

'குன்றியும் தோன்றியும் பிறிதுபிறி தாகியும்
ஒன்றிய மருங்கினும் ஒருபுடை மகாரம்
அசையும் சீரும் அடியும் எல்லாம்
வகையுளி சேர்த்தல் வல்லோர் மேற்றே.'

என்ருர் நற்றத்தனுர்.

1. யா.வி. பக். 2. யா.வி. பக். பி-ம் : * அடிதொடை.

[கலி விருத்தம்]

'அசைகளும் ஓரோவழி ஆகும் சீரியல்
இசைபெற நிற்புழி என்ப துண்மையால்,
விசைபெறு துறையினை விருத்த மாக்கினல்
நசைபெறு நாலசை நடப்ப தில்லையே.'

இதன் கருத்து,

[கட்டளைக் கலித்துறை]

'குயிலும் குழலும் அலைத்தன தீஞ்சொற்கள் கொவ்வைச்செவ்வாய்
கயலும் மலரும் கடுத்தன உண்கண்கள் வெண்முத்தம்பல்
இயலும் படியுள தாவது நன்றன்றித் தோன்றியக்கால்
அயிலுஞ்செவ் வேலும் அழலம்பும் ஆம்பிற ஆடவர்க்கே.

எனவும்,

'இருநெடுஞ் செஞ்சுடர் எஃகமொன் றேந்தி இரவின்வந்த
அருநெடுங் காதற்கன் றேதரற் பாலதல் லாதுவிட்டால்
கருநெடு மால்கடல் ஏந்திய கோன்கயல் சூடும்நெற்றிப்
பெருநெடுங் குன்றம் விலையோ கருதிலெம் பெண்கொடிக்கே.' 1

எனவும். இத்தொடக்கத்துக் கலித்துறையுள் நாலசைச்சீர் வந்தன பிறவெனின், அவை கலித்துறை அல்ல என்று சீர் சீராக இறுவழி அசைச் சீராக, ஆசிரிய விருத்தமாம்; பலரும் அவற்றை 'விருத்தம்' என்று வழங்குவராகலின்,

எல்லா ஆசிரியரும், 'அசையும் ஓரோவழிச் சீராம்,' என்ப;

'ஊர் அலரெழச் சேரி கல்லென.' 2

எனவும்,

[வஞ்சி விருத்தம்]

'உரிமை யின்கண் இன்மையால்
அரிமதர் மழைக் கண்ணள்
செருமதி செய் தீமையால்
பெருமை கொன்ற என்பவே.' 3

எனவும் காட்டுவர் ஆகலின் என்பது.

'இசைநிலை நிறைய நிற்குவ வாயின்
அசைநிலை வரையார் சீர்நிலை பெறலே.' 4

என்றார் தொல்காப்பியனார்.

'நேர்நிரை வரினே சீர்நிலை எய்தலும்
பாவொடு பிறவும் ஆகும் ஓரோவழி.' 5

என்றார் அவிநயனார்.

'நேரும் நிரையும் சீராய் வருதலும்
சீரும் தளையும் சிதைவுழிக் கொளலும்
யாவரும் உணர்வர் யாவகைப் பாவினும்.' 6

என்றார் மயேச்சுரர் .

1. யா.வி. 15, 95 உரை மேற். 2. குறுந். 262:1. 3. யா.வி. 15, 21 உரைமேற்.
4. தொல். பொ. 339. 5-6. யா.வி. 14 உரை மேற்.

[கலி விருத்தம்]

'தளையொடு சீர்தபின் தக்க ஆவிகள்
அளபெடா ; எடுப்பினும் அலகு காரியம்
விளைவில என்பவர் மீட்டும் நாலசை
உளசில சீருமென் றுரைப்ப தென்கொலோ !'

இதன் கருத்து,

[நேரிசை வெண்பா]

'தாஅய்த்தாஅய்ச் செல்லும் தளர்நடைப் புன்சிறார்
போஒய்ப்போஒய்ப் பூசல் இடச்செய்து—போஒய்ப்போஒய்
நிற்குமோ நீடு நெடும்புதவம் தானணைந்து
பொற்குமோ என்றது போந்து.' 1

இதனுள் மேற்சொன்ன பெற்றி அன்றியேயும் நாலசைச்சீர் வந்தன பிற வெனின், அற்றன்று ;

[குறள் வெண்பா]

'நிலம்பாஅய்ப்பாஅய்ப் பட்டன்று நீலமா மென்றோள்
கலம்போஒய்ப்போஒய்க் கௌவை தரும்.' 2

இத்தொடக்கத்தனவற்றுள், தளையும் சீரும் வண்ணமும் கெட நில்லாமையின் அளபெடா ; அளபெடுப்பினும், அலகு காரியம் பெறு என்று மூவகைச்சீராக வைப்பாகலானும்,

[குறள் வெண்பா]

'காஅரி கொண்டான் கதச்சே மதனழித்தான்
ஆஅழி ஏந்தல் அவன்.' 3

இத்தொடக்கத்தனவற்றுள்,

'மாத்திரை வகையாற் றளைதப் கெடா நிலை
யாப்பழி யாமைநின் றளபெடை வேண்டும்.'

என்று தளை கெடாமற்பொருட்டு அளபெடுத்து வெண்டளை ஆக்குவர் ஆகலானும், இவ்வாறே 'தாஅய்த்தாஅய்' என்ற இத்தொடக்கத்தனவற்றுள்ளும் சீரும் தளையும் கெட்டு நில்லா ஆகலின், ஓர் அளபெடையை அளபெடாது என்று நெட்டெழுத்தே போலக் கொண்டு அலகிட மூவசைச் சீரேயாம். நாலசைச்சீர் கொள்வான் புகினும், உதாரண வாய்ப்பாட்டான் ஓசை யூட்டி வண்ணம் அறுக்கும்பொழுது சான்றோர் கோவையுள் வெண்பாப் போல ஓசை உண்ணாது, செப்பலோசை வழுவும் என்பது.

'இஉ இரண்டன் குறுக்கம் தளைதப
நிற்புழி ஒற்றும் நிலைமைய ஆகும்.'
'உயிரள பேழும் உரைத்த முறையான்
வருமெனின் அவ்வியல் வைக்கப் படுமே.'

என்றார் காக்கை பாடினியார்.

'சீர்தளை சிதைவுழி ஈருயிர்க் குறுக்கமும்
நேர்தல் இலவே உயிரள பெடையும்.'

என்றார் மயேச்சுரர்.

---

1. யா.வி. 60 உரை மேற். 2. யா.வி. 4, 93 உரைமேற்.
3. யா.வி. 4, 41 உரைமேற்.

'உயிரள பெடையும் குறுகிய உயிரின்
இகர உகரமும் தனிதபின் ஒற்றும்.'
'சீர்தப வரினும் ஒற்றியற் றாகும்.'

என்றார் அவிநயனார்.

[குறளடி வஞ்சிப்பா]

'கோவாமுத்திற் கண்பனிகால
வழுத்தாண்மார்வ பழுதறவஞ்சி
வாராவாரிருள் எரிழிந்தழிய
வளைவாய் தேய்ந்தனள் களைவருகாதலின்
ஆனுவழகி தானனிபுலம்பி
அழல்சேர்மெழுகிற் கலுழ்வனள்கவல
வாராவிடினவள் ஆருயிரிழத்தலின்
பெரியவரியவிவள் பருவரல்பெருகலின்
இனியே,
அல்ல குறிப்பினும் ஆகுவ
களவியல் வேண்டும் கடுப்பொடு மடுத்தே.'

'முன்சொன்னதே அன்றி இவ்விருசீர் அடி வஞ்சிப்பாவினுள் நாலசைச்சீர் பதினாறும் வந்தன பிறவெனின், அது வஞ்சிப்பா அன்று; அகவல் ஓசைத்தாய் நாற்சீர் அடியால் வந்தமையால், இயற்சீரால் வந்த நேரிசை ஆசிரியப்பா வாகக் கொள்ள நாலசைச்சீர் அன்றாம். தனிச்சொல் ஆசிரியத்துள்ளும் வரும் எனக் கொள்க.

[நேரிசை ஆசிரியப்பா]

'உமணர்சேர்ந்து கழிந்த மருங்கின் அகன்றலை
ஊர்பாழ்த் தன்ன ஓமையம் பெருங்கா
டின்னா என்றி ராயின்,
இனியவோ பெரும! தமியேற்கு மனையே?' 1

'இதன் முதற்கண் நாலசைச்சீர் வந்ததன்றோ?' எனின், அஃது ஐஞ்சீர் அடியாக வைப்பினும், குற்றுகரத்தை ஒற்றாகக் கொண்டு நாற்சீர் அடியாக வைப்பினும் நாலசைச்சீர் அன்றாம். 'இனியிரந்து வாங்கின்' என்னும் அடியினும் மூன்றாஞ்சீர்க்கண் நாலசைச்சீர் வந்தது எனினும், ஆண்டுக் குற்றுகரத்தை ஒற்றாகக் கொள்ளவும், அளபெடையை அலகு காரியம் பெறாது என்று விலக்கவும், ஐஞ்சீர் அடி ஆக்கவும் நாலசைச்சீர் அன்றாம்.

[குறட்டாழிசை]

'கோடான்மன்னு பூங்கானக் குயில்கண்மன்னு நீள்சோலை
நாடவரும் மினியர் நயந்து.'

என இதனுள்ளும் நாலசைச்சீர் வந்தன எனின், அதனை முதலடி அறுசீராகவும் ஈற்றடி நாற்சீராகவும் அலகிட்டு அந்தடி குறைந்து வந்த தாழிசைக்குறள் என்று வழங்க நாலசைச்சீர் அன்றாம்.

[குறட்டாழிசை]

'காம்புதேம்பா வெற்பிற் கல்லளையுள் வாழ்கின்ற
பாம்பிற் கடிய புலி.'

1. குறுந். 124.

'இதனுள் முதலடிக்கண் நாலசைச்சீர் வந்தது பிற,' எனின், முதலடியை ஐஞ்சீர் அடியாகக் கொண்டு, ஈற்றடி குறைந்த தாழிசைக்குறளாகக் கொள்ள, நாலசைச்சீர் அன்றும். நாலசைச்சீர் வேண்டும் ஒருசார் ஆசிரியரும், வெண்பாவினுள் அளபெழுந்தால் அன்றி நாலசைச்சீர் வாரா என்று இத்தொடக்கத் தனவற்றையும் தாழிசைக்குறளேயாகக் கொள்வர் எனக் கொள்க.

[வெளி விருத்தம்]

'கொண்டல் முழங்கினவால் கோபம் பரந்தனவால்—
என்செய்கோயான்
வண்டு வரிபாட வார்தளவம் பூத்தனவால்—என்செய்கோயான்
எண்டிசையும் தோகை இருந்தாவி ஏங்கினவால்—
என்செய்கோயான்! 1

என்னும் வெளி விருத்தத்துள் 'என்செய்கோயான்' என்னு மதனை வகையுளி சேர்த்தவும் ஆகாதாய் நாலசைச்சீர் வந்தது பிற எனின், அதனைக் குறளடியால் வந்த தனிச்சொல் எனக் கொள்க.

கலியுள்,

'சிறுகுடி யீரே! சிறுகுடி யீரே! 2

என அளவடியால் தனிச்சொல் வந்தது. அதற்கு இலக்கணம்,

[இன்னிசை வெண்பா]

'வெண்சீர் வரைவின்றிச் சென்று விரவினும்
தன்பால் மிகுதி இன்மெல்லாம் வஞ்சி
உரிச்சீர் விரவுதல் வெண்பாவிற் கில்லை
தனிச்சொல் அசைச்சீர் அடி.'

என்பதனை விரித்து உரைத்துக்கொள்க.

இவ்வகையே நாலசைச்சீர் வேண்டாமே நடாத்தும் உபாயம் கண்டாராயினும், இவ்வாறு உரைப்பின் உணர்வினர்க்கு அன்றி அறிய ஒண்ணாது ஆதலானும், பழைய நூல் வழி நில்லாது தமது மதம்பிடித்துச்சொன்னர் என்னும் பாதுகாவலானும்.

[குறள் வெண்பா]

'உலகம் தழீஇய தொட்பம் மலர்தலும்
கூம்பலும் இல்ல தறிவு.' 3

என்ப ஆகலானும், காக்கை பாடினியார் முதலாகிய ஒருசார் ஆசிரியர் மாப்பெரும்புலவர்தம் மதம்பற்றி நாலசைச்சீர் விரித்தோதினர் இந்நூலுடையார் எனக் கொள்க.

[நேரிசை வெண்பா]

'நேர்பும் நிரைபசையும் நோாதே நாலசைச்சீர்
சேரும் சிறிதென்று செப்பாதே—பாரின்மேல்
தென்றமிழ்நூல் யாப்புரைத்தான் சிந்தைபோல் நுண்ணிதே
இன்றமிழ்போல் நல்லாள் நடை.'

---

1. யா.கா. 6 உரைமேற். 2. கலி. 39:12.
3. குறள் 425.

இனி, நாலசையும், பத்து இயற்சீரும், எட்டு ஆசிரிய உரிச்சீரும், நான்கு வெண்பா உரிச்சீரும், அறுபது வஞ்சி உரிச்சீரும் ஆமாறு சொல்லுதும்.

எழுத்தினால் ஆக்கப்படும் அசை நான்கு வகைப்படும். நேரசையும், நிரையசையும், நேர்பு அசையும், நிரைபு அசையும் என.

என்னை ?

'நேரே நிரையே நேர்பே நிரைபென
ஈரிரண் டென்ப அசையின் பெயரே.' 1

என்றாராகலின்.

அவற்றுள், நேரசை நான்கு வகைப்படும்: தனிநெடிலும், தனிக்குறிலும், நெட்டெழுத்தும், குற்றெற்றும் என.

என்னை ?

'தனிநெடில் தனிக்குறில் ஒற்றொடு வருதலென்
றந்நால் வகைத்தே நேரசை என்ப.' 2

[நற்றத்தம்]

என்பவாகலின். அதற்கு உதாரணம், 'காரி, சேந்தன்' என வரும்.

நிரையசை நான்கு வகைப்படும்: குறில் இணையும், குறில் நெடிலும், குறில் இணை ஒற்றும், குறில் நெடில் ஒற்றும் என.

என்னை?

'குறிலிணை குறில்நெடில் ஒற்றொடு வருதலென்
றந்நால் வகைத்தே நிரையசை என்ப' 3

[நற்றத்தம்.]

என்பவாகலின். அதற்கு உதாரணம், 'பல, பலா, பலம், கிழான்' என வரும்.

நேர்பசை, நிரையசை ஆமாறு சொல்லுதும்: நேர் முதலாகிய குற்றிய லுகரம் நேர்பு அசையாம்; நிரை முதலாகிய குற்றியலுகரம் நிரைபு அசையாம். என்னை ?

என்னை?

'நேர்முத லாகிய குற்றிய லுகரம்
நேர்பென மொழிப; நிரைமுதல் நிரைபே.'

என்பவாகலின்.

நேர்பு அசைக்கு உதாரணம், 'கோடு, தோன்று, குன்று' என வரும்.

நிரைபு அசைக்கு உதாரணம், 'மரபு, மயங்கு, மலாடு, மலாட்டு' என வரும்.

நேர் முதலாகிய முற்றியலுகரமும் நிரை முதலாகிய முற்றியலுகரமும் நேர்பசையும் நிரைபசையுமாம்.

என்னை ?

'முற்றிய லுகரம் வரினுமவை பெயரே.'

என்பவாகலின்.

முற்றியலுகரமாவது, மெல்லெழுத்தும் இடையெழுத்தும் சார்ந்து வரும் உகரம்.

முற்றியலுகர நேர்பசைக்கு உதாரணம், 'காணு, வேணு, மின்னு, மண்ணு, என வரும்.

முற்றியலுகர நிரைபசைக்கு உதாரணம், 'உருமு, அரவு, விரவு, செலவு' என வரும்.

நேர் முதலாகிய இரு வகை உகரமும் ஒற்று அடுப்பினும் நேர்பசையாகும் நிரை முதலாகிய இருவகை உகரமும் ஒற்று அடுப்பினும் நிரைபசையாகும். என்னை ?

1. யா.வி. 5 உரைமேற். 2–3. யா.வி. 8 உரைமேற்.

'குற்றிய லுகரம் முற்றிய லுகரம்
ஒற்றொடு தோன்றற் குரிய வாகும்.'

என்பவாகலின்.

அவற்றிற்கு உதாரணம்;

'சேற்றுக்கால், ஆட்டுக்கால்,' எனவும், 'களிற்றுத்தாள், வெளிற்றுப்பனை' எனவும் இவை குற்றியலுகரம் ஒற்றொடு வந்த நேர்பசை நிரைபசைகள்.

'மின்னுப்பூண், மண்ணுச்சாந்து எனவும், 'உருமுத்தீ, வெருவுப்பாம்பு, விரவுப்பூண், விழவுக்களம்' எனவும் இவை முற்றியலுகரம் ஒற்றொடு வந்த நேர்பசை நிரைபசைகள்.

[கட்டளைக் கலித்துறை]

'குறிலும் நெடிலும் குறிலிணை தானும் குறில்நெடிலும்
நெறிநின் றுயிர்ப்பினும் நேர்ந்தொற் றடுப்பினும் நேர்நிரையென்
றறி; முந்தை நேர்நிரை ஐந்திருகரம் அடுத்து வந்தால்
நெறிநுண் கருங்குழல்! நேர்பும் நிரைபும்; 'ஒற் றொடு' மற்றே.'

இதனை விரித்து உரைத்துக் கொள்க.

'நேரோ ரலகு; நிரையிரண் டலகு;
நேர்புமூன் றலகு; நிரைபுநான் கலகென்
றோதினர் புலவர் உணரு மாறே.' 1

[அவிநயம்]

நேரசையும் நிரையசையும் 'இயல் அசை' எனப்படும்; நேர்பசையும் நிரைபசையும் 'உரியசை' எனப்படும். என்னை?

'முதலிரண் டியலசை; ஏனைய உரியசை.'

என்பவாகலின்.

அவ்வசை இரண்டு கூடியும் சீராம்; மூன்று கூடியும் சீராம். என்னை?

'ஈரசை கொண்டது சீரெனப் படுமே;
மூவசை இறத்தல் இல்லென மொழிப.'

என்பவாகலின்.

ஆகச் சீர் இரண்டு வகைப்படும்; இயற்சீரும் உரிச்சீரும் என.

அவற்றுள், இயற்சீர் பத்து வகைப்படும்; நேரசையும் நிரையசையும் மயங்கின நான்கு சீரும், நேர்பு நிரைபு முதலாக* நேரசை இறுதியாகிய இரண்டு சீரும், நேரசைப் பின்னும் நிரையசைப் பின்னும் நேர்பசையும் நிரை பசையும் வந்து ஆகிய நான்கு சீரும் என.

என்னை?

'இயலசை மயக்கம் இயற்சீர் ஆகும்;
உரியசைப் பின்னர் நேரியல் காலையும்
இயற்சீர்ப் பால;
இயலசை இறுதி வரூஉம் உரியசை
இயற்சீர் பால ஆகும் என்ப.'

என்றாராகலின்.

---

1. யா.வி. 5 உரைமேற்.

பி-ம். * முதலாகிய.

அவற்றிற்கு உதாரணம் :

**தேமா, புளிமா, பாதிரி, கணவிரி**

எனவும்,

**போதுபூ, விறகுதீ,**

எனவும்,

**போரேறு, பூமருது, கடியாறு, மழகளிறு**

எனவும் கொள்க.

**[கட்டளைக் கலித்துறை]**

'நேரும் நிரையும் மயங்கிய நான்கென்ப ; நேரிறுவாய்
நேர்பும் நிரைபும் முதலியற் சீர்களும், நேர்நிரைப்பின்
நேர்பும் நிரைபும் நிலவிய நான்கும் நிரைவளைத்தோள்
நேர்நுண் குழல்மட வாய்! இயற் சீரென்று நேர்ந்தனரே.'

இதனை விரித்து உரைத்துக் கொள்க.

இனி, உரிச்சீர் மூன்று வகைப்படும் : ஆசிரிய உரிச்சீரும், வெண்பா உரிச் சீரும், வஞ்சி உரிச்சீரும் என.

என்னை ?

'ஆசிரிய உரிச்சீர் வெண்பா உரிச்சீர்
வஞ்சியொடு மூன்றே உரிச்சீர் தோற்றம்.'

என்பவாகலின்.

அவற்றுள், ஆசிரிய உரிச்சீர் எட்டு வகைப்படும் : நேர்பும், நிரைபும் மயங்கிய நான்கும், நேர்பும் நிரைபும் நிரை இறுதியாகிய இரண்டும், சூலநிலை* அளபெடைப்பின் நிரை வந்ததும், இறுதிநிலை அளபெடைப்பின் நிரை வந்ததும் என.

என்னை ?

'உரியசை மயக்கம் ஆசிரிய உரிச்சீர் ;
நிரையிறு காலையும் அதனோ ரற்றே.'

எனச் சொன்னாராகலின்.

அவற்றிற்கு உதாரணம் :

'வீடுபேறு, மாறுகுருகு, வரகுசோறு, முருட்டுமருது

எனவும்,

**நீடுகொடி, குழறுபுலி**

எனவும்,

**தூஉமணி, கெழூஉமணி**

எனவும் கொள்க.

**[கட்டளைக் கலித்துறை]**

'நேர்பும் நிரைபும் மயங்கிய நான்கும் நிரையிறுவாய்
நேர்பும் நிரைபும் முதலிய சீர்களும் நேர்நிரையாய்ச்
சேரும் அளபெடைப் பின்னிரை சேரிரு சீரொடெட்டும்
ஆரும் அறியுற ஓதினர் ஆசிரி யக்கவையே.'

என இதனை விரித்து உரைத்துக் கொள்க.

இனி, வெண்பா உரிச்சீர் நான்கு வகைப்படும் : நேர்நேரும் நிரைநேரும் ஆகிய இரண்டுசீர் முதற்கண்ணும் முறையானே நேரும் நிரையும் புணர்ப்ப அவை தோன்றும்.

என்னை ?

---

பி—ம். * தனிநிலை

'நேர்நேர் நிரைநேர் ஆயிரு சீரும்
நேர்முத லாகவும் நிரைமுத லாகவும்
நான்கென மொழிப வெண்பா உரிச்சீர்.'

**என்பவாகலின்.**

வரலாறு :

**பூவாமா, பூவிரிமா, விரிபூமா, நறுவடிமா**

எனக் கொள்க.

மாசெல்வாய், மாபடுவாய், புலிசெல்வாய், புலிபடுவாய்

எனினும் ஒக்கும்.

இனி, வஞ்சி உரிச்சீர் ஆவன, வெண்பா உரிச்சீர் அல்லாத மூவசைச்சீர் அறுபதும் எனக் கொள்க.

என்னை ?

'வெண்பா உரிச்சீர் அல்லா மூவசை
எல்லாம் வஞ்சி உரிச்சீர் ஆகும்.'

**என்பவாகலின்.**

அவற்றிற்கு உதாரணம் :

**[இன்னிசை வெண்பா]**

'மாபுலி பாம்பு களிறென் றிவைமுதலாச்
சேல்படு போகு வழங்கென் றிவைநடுவா
வாய்சுரம் காடு கடநீரு வைத்தாரே
பாசுரம்வஞ் சிக்குரிச் சீர்.'

இதன் வழியே உறழ்ந்தால், அறுபத்து நான்கு மூவசைச் சீராம். ('செல்' என்பது, முதல் நீண்டது.) அவற்றுள் நான்கு வெண்பா உரிச்சீரும் ஒழித்து, அல்லாத அறுபதும் வஞ்சி உரிச்சீர்க்கு உதாரணமாம் எனக் கொள்க.

அவை சொல்லுமாறு :

மாசெல்வாய், மாபடுவாய், மாபோகுவாய், மாவழங்குவாய் ;
புலிசெல்வாய், புலிபடுவாய், புலிபோகுவாய், புலிவழங்குவாய் ;
பாம்புசெல்வாய், பாம்புபடுவாய், பாம்புபோகுவாய்,
பாம்புவழங்குவாய் ;
களிறுசெல்வாய், களிறுபடுவாய், களிறுபோகுவாய்,
களிறுவழங்குவாய் ;

என இவை நேர் ஈறுக வந்த பதினாறும்,

'மாசெல்சுரம், மாபடுசுரம், மாபோகுசுரம், மாவழங்குசுரம் ;
புலிசெல்சுரம், புலிபடுசுரம், புலிபோகுசுரம், புலிவழங்குசுரம் ;
பாம்புசெல்சுரம், பாம்புபடுசுரம், பாம்புபோகுசுரம்,
பாம்புவழங்குசுரம் ;
களிறுசெல்சுரம், களிறுபடுசுரம், களிறுபோகுசுரம்,
களிறுவழங்குசுரம் ;

என இவை நிரையீறுகிய பதினாறும்,

மாசெல்காடு, மாபடுகாடு, மாபோகுகாடு, மாவழங்குகாடு ;
புலிசெல்காடு, புலிபடுகாடு, புலிபோகுகாடு, புலிவழங்குகாடு ;
பாம்புசெல்காடு, பாம்புபடுகாடு, பாம்புபோகுகாடு, பாம்புவழங்கு
காடு ;
களிறுசெல்காடு, களிறுபடுகாடு, களிறுபோகுகாடு, களிறுவழங்கு
காடு.

என இவை நேர்பு ஈறுகிய பதினாறும்,

மாசெல்கடறு, மாபடுகடறு, மாபோகுகடறு, மாவழங்குகடறு ;
புலிசெல்கடறு, புலிபடுகடறு, புலிபோகுகடறு, புலிவழங்குகடறு ;
பாம்புசெல்கடறு, பாம்புபடுகடறு, பாம்புபோகுகடறு,
பாம்புவழங்குகடறு ;
களிறுசெல்கடறு, களிறுபடுகடறு, களிறுபோகுகடறு,
களிறுவழங்குகடறு.

என இவை நிரைபு ஈறுகிய பதினாறும், எனக் கொள்க.

இவற்றுள்,

மாசெல்வாய், மாபடுவாய், புலிசெல்வாய், புலிபடுவாய் என நான்கும் வெண்பா உரிச்சீர் ; ஒழிந்த அறுபதும் வஞ்சி உரிச்சீர்.

[கட்டளைக் கலித்துறை]

'நேர்நிரை நேரபு நிரைபுமுப் பாலும் நிரைத்துறழ்ந்தாற்
சீர்சிலை முப்பத் திரண்டின் இரட்டியச் சீரினுள்ளா
நேர்நிரை யாதி இடைகடை நேர்வந்த நான்கும்வெள்ளைக்
காரியர் ஓதினர் அல்லன வஞ்சிக் கறுபதுமே.'

இதனை விரித்து உரைத்துக் கொள்க.

இயற்சீர் முதலாகியவற்றிற்கு இலக்கியம் வருமாறு :

[நேரிசை ஆசிரியப்பா]

'குருகுவேண் டாளி கோடுபுய்த் துண்டென
வாழுங்கு பெருங்காட்டு மழகளிறு காணாது
மருள்பிடி திரிதரும் சோலை
அருளான் ஆகுதல் ஆயிழை! கொடிதே!' 1

இது பத்து இயற்சீரும் வந்த பாட்டு.

[நேரிசை ஆசிரியப்பா]

'வீங்குபிணி விசித்த விளங்குபுனை நெடுந்தேர்
காம்பு நீடு மயங்க காட்டுள்
பாம்பு பெரிது வழங்குதொ றேங்கு
வயங்கு கலிமா நிரைபு நிரைபு
வலவன்,
வாம்பரி கடவி வந்தோன்
கெழூஉமணி அகலம் தழூஉமதி விரைந்தே.' 2

இஃது எட்டு ஆசிரிய உரிச்சீரும் வந்த பாட்டு.

'நன்மாறு வருவாயோ நறுவடிமா பூவுதிர'

இது நான்கு வெண்பா உரிச்சீரும் வந்த பாட்டு.

[இணைக்குறள் ஆசிரியப்பா]

'நலஞ்செலத் தொலைந்த புலம்பொடு பழகி
இன்னு வாயின அன்னே தோழி!
பார்தோயப் பரந்துமூழ்கி
நீர்சுமந்த நிரைசெலவினுள்

---

1. யா.வி. 29 உரைமேற்.
2. யா.வி. பக்.... ல் இச்செய்யுள் நாலசைப் பொதுச்சீர் பலவும் வந்து வஞ்சி தூங்கின அறுத்திசைப் பெண்ணும் குற்றத்திற்கு உதாரணமாகக் காட்டப்பட்டுள்ளது.

5. இடித்தோவா தடுத்துராறிக்
கடுஞ்சினத்த களிறுபோல
விண்டுகொண்மூ வியந்தேறி
இலங்குபு நீர்பொழிதலின்
மாண்டுசொரியும் திரளருவி

10. வரன்றுமணிநீள் வரைத்ததும்பவும்
தேனுறுபூந் தெரிகுவளைமிசைத்
திசைபோகுகால் உளர்ந்துயிர்த்தலிற்
குண்டுநீடுநீர்க் குவளைத்தண்சுனை
குறித்துக்கூடுவோர் நெறிமயங்கவும்

15. வான்வழங்குவாள் வளரிளம்பிறை
வரைத்தயங்குநீர் கரைவிலங்கலின்
நின்றுதயங்குநீள் நிலவுதவலின்
நெடிதுநெடிதுசென் றிராப்பெருகவும்
தேமாவின் பழஞ்சிந்தியும்

20. திரளாசினிக் கனிமாந்தியும்
சூழ்மயிர்க்காருகம் சுழன்றுபாய்வன
விளையாடவும்,
நீள்கருமுக்கி நிரைமுசுக்கலை
நிரைச்சுளைப்பழப் பலவேறிக்

25. கோடுகுலைப்பன உகந்துகனிக்
குடைந்துமுழங்குவ குரல்பயிற்றவும்
தாழ்கூடுசினைத் தண்சண்பகம்
தகைகூடுநிறப் போதவிழ்தலின்
வண்டுகூடுவன வரித்தும்பி

30. மணந்துசென்றுபல் குரன்மிழற்றவும்
போர்தயங்குபன் மதவேழம்
பொலித்திற்றுவன் மத்தம்சொரியவும்
கோடுதயங்குவன குடாமூழ்கிக்
குழைந்துநீலம் நனிபரப்பவும்

35. கோடல்நீடு கொழுமுகையொடு *
குடசஞ்சூடும் குறுங்குறவர்
சோறுபேணாது பிழிமகிழ்ந்து
சுழல்புதாங்காது பிணைந்தாடவும்
கல்பொருயாறு கடிதெழுதலிற்

40. கனைதுணைநீடு விடரகன்றுறைக
என்றுநினையாது கரைபோகிக்
கரைந்துதவிராது பிடியலறவும்
மாலிருபோது மகிழ்சிலம்பின்
மகிழ்ந்தாடும் மயில்தளர்தலிற்

பி. ம். * கொடு முகையொடு.

45. போதுசேர்ந்துகூடு பொறிவண்டினம்
புரிந்துவாங்குவிங்கு நரம்பிவர்தலின்
நீர்குடைந்துபாடு மடமங்கையர்
நிரையொருங்கு நின்று கறுப்புளரித்
தூசுகளைந்துவேறு துகில்திருத்தித்

50. துளங்குதோன்று கலனணியவும்
வேய்கண்ணுடைந்து முத்துதிரவும்
வெதிர்கண்ணுடைந்து நெல்லுதிரவும்
காடுதீமணந்து பொன்னிமைப்பவும்
கலந்துதேன்பிளந்து நெய்யொழுகவும்

55. சூழ்கொடிமினங்கு * சுடர்வேங்கைமிசைத்
துணர்க்கறிமிளகு வளமுக்கிச்சென்று
சுவையுணர்ந்துசிறு கடுவன்சிரித்து
முகஞ்சிவந்து மெய்மறப்பவும்
விண்டொடுவிளங்கு வெண்மணல்விராய்

60. நீண்டுமயங்கு செங்காந்தளொடு
மாறுமாறுதொடர்ந்து மலைக்கொடிச்சியர்
மலிவுதொறுமகிழ்ந்து தழைபுனையவும்
தேன்வழங்குமுழங்கு திகழ்நாற்றிசை
மருண்டுவெருண்டு நிலமாந்தர்

65. நீடுசுழன்றுமுழன்றும் நெறியுணரா
நினைபுநினைபுபரி புலரவும்கூடவும்
குருடையனபல சுனைமலர்ந்து
சுழல்வணங்குவன சுடர்க்குவளை
கண்டோர்கண்டோர் மகிழ்ந்துமாறவும்

70. களித்துக்களியோ டுவந்துபிளிற்றவும்
இன்னனபிறவும் இன்னுயிர்மருள
உருவினுந்தொழிலினும் வெருவரத்தோன்றி
அரும்புபல கவினிய மணிமலைக்
கருங்கல் நாடனெடு கலவா வூங்கே.'

இஃது அறுபது வஞ்சி உரிச்சீரும் வந்த பாட்டு. இப்பாட்டினுள் முதலடி இரண்டும் ஆசிரிய அடி. அல்லனவற்றை இருசீர் அடியாக அலகிட்டு, அடி தோறும் முதற்கண்ணே மூவசைச்சீர் அறுபத்து நான்கும் வந்தவாறு கண்டு கொள்க.

வஞ்சியுரிச்சீர் அறுபதும் வெண்பாவிற் புகப்பெறா; ஆசிரியத்துள்ளும் கலியுள்ளும் 'மாசெல்சுரம், புலிசெல்சுரம், மாசெல்காடு, புலிசெல்காடு, மாசெல்கடறு, புலிசெல்கடறு, பாம்புசெவ்வாய், பாம்புபடுவாய், களிறுசெவ்வாய், களிறுபடுவாய் என்னும் பத்து வஞ்சியுரிச்சீரும் புகப்பெறும் எனக் கொள்க. என்னை ?

---

பி-ம். * சூழ்கொடி பிணங்கு.

[நேரிசை வெண்பா]

'இருநான் ககவற்சீர் ஈரைந் தியற்சீர்
ஒருநான்கு வெள்ளைக் குரிச்சீர்—ஒருவாத
மூவிருபான் வஞ்சிக் கவற்றுட் கலியகவற்
பாவிரவற் பாலனவும் பத்து.'

எனவும்,

'மாசெல் புலிசெல் சுரங்காடு வான்கடறு
பாகிழையாய்! பாம்பு களிற்றின்பின்—பேசிய
செல்வாய் படுவாய் சிவணிய சீரிவையே
பல்லோர் பயின்றுரைக்கும் பத்து.'

எனவும்,

[இன்னிசை வெண்பா]

'நேர்நேர் நிரைநேர்ப்பின் நேரொழித்த ஈரசையும்
சீரேற் றவற்றுதி நேர்பும் நிரைபசையும்
ஈரொன் றிற் சீரொன்றாய் இன்சீராம் வஞ்சிச்சீர்
ஆசிரியத் துட்புகும் பத்து.'

எனவும்,

[குறள் வெண்பா]

'நிரைபாதி நேர்பாதி அந்தாதி நேர்நேர்
நிரைநேரிற் சேர்ந்தவும் பத்து.'

எனவும் வரும் இவற்றை விரித்து உரைத்துக் கொள்க.

ஒழிந்த ஐம்பது வஞ்சியுரிச்சீரும் அகவலுட் புகப்பெறா எனக் கொள்க; கலியுள்ளும் அவ்வாறே எனக் கொள்க. வஞ்சி இறுதியுள்ளும் ஒத்தாழிசைக் கலியுள்ளும் 'தேமா, புளிமா' என்னும் இரண்டு இயற்சீரும் புகப்பெறா. ஒழிந்த சீர் எல்லாச் செய்யுளுள்ளும் புகப்பெறும்.

இனி, அசைச்சீராய் நின்றவிடத்துத் தளை வழங்கும்பொழுது நேரசைச் சீருக்கு மற்றும் ஓரிலகு கொடுத்து நேர்நேர் ஆகவும், நிரையசைச்சீருக்கு மற்றும் ஓரலகு கொடுத்து நிரைநேர் ஆகவும், நேர்பு அசைச்சீருள் ஓரலகு களைந்து தேமா ஆகவும், நிரைபு அசைச்சீருள் ஓரலகு களைந்து புளிமா ஆகவும் வைப்பர் எனக் கொள்க.

என்னை ?

'உரியசைச் சீர்ப்பின் உகரம் நோராய்த்
திரியும் தளையில * சேர்த லானே.'

என்றார் நல்லாறனார்.

'சீரா கிடனும் உரியசை உடைய
நேரீற் றியற்சீர் அவ்வயி னான.'

என்றார் நற்றத்தனார்.

'இயற்சீர்ப் பாற்படுத் தியற்றினர் கொளலே
தளைவகை சிதையாத் தன்மை யான.' 1

என்றார் தொல்காப்பியனார்.

---

1. தொல். பொ. 340. பி-ம் * தளைவகை.

[குறள் வெண்பா.]

'நேர்நேராம் நேரசையும் நேர்பும்; நிரைநேராய்
ஏனை இரண்டும் எனல்.'

இவற்றை விரித்து உரைத்துக் கொள்க.

'தன்சீர் உள்வழித் தளைவகை வேண்டா.' 1

என்றும்; **'போதுபூ, போரேறு, பூமருது'** இவைகளைப் பாதிரியாகவும்; **'விறகுதீ, கடியாறு, மழகளிறு'** இவைகளைக் கணவிரியாகவும்; வெண்சீரின் ஈற்றசை நிரைபசையாகவும் இயற்றித் தொல்காப்பியனாரும் நற்றத்தனாரும் முதலாகிய ஆசிரியர் சொன்ன மதமெல்லாம் வல்லார்வாய்க் கேட்டுக் கொள்க; ஈண்டு உரைப்பின், பெருகும். ஒழிந்தன எல்லாம் இந்நூலோடு ஒக்கும்.

[குறள் வெண்பா.]

'போதுபூப் போரேறு பூமருதென் றிம்மூன்றும்
பாதிரியா வைக்கப் படும்.'

எனவும்,

'ஏனைய மூன்றும் கணவிரியாம் வெண்சீரின்
ஈறு நிரையாம் எனல்.'

எனவும் இவற்றை பதம் நெகிழ்த்து உரைத்துக் கொள்க.

இனி, ஒரு சாரார் சொல்லும் கடாவும் விடையும்:

[நேரிசை வெண்பா.]

'குற்றுகரம் ஒற்றாகக் கொள்ளாதே வெள்ளையான்
மற்றும் தளைவிரவும் மற்றதனால்—குற்றுகரம்
ஐந்தா றசைச்சீர் அருகிவரும் வஞ்சிக்கண்
என்றாற்றான் என்னும் இழுக்கு?'

இது கடா.

'அறுத்திசைக்கும் செய்யுட்பால் அன்றுள்ளான் றன்பேர்
செறிப்பிற் செயிர்வாக்காம் என்னும்—குறிப்பினாற்
கேடுரைத்தார் கெட்டவரோ பற்றார்க்கும் கேடல்லர்
நாடறியும் என்பதனால் நன்கு.'

இது விடை.

இனி, ஐந்து வகைப்பட்ட பதினேழ் நிலத்தவாய எழுபது தளையிற்றீர்ந்த சிறப்புடை நாற்சீரடி அறுநூற்று இருபத்தைந்தும் ஆவன சொல்லப்படும்.

'ஐவகை அடியும் விரிக்குங் காலை
மெய்வகை அமைந்த பதினேழ் நிலத்த
எழுபது தளையின் * வழுவில வாகி
அறுநூற் றிருபத் தைந்தா கும்மே.' 2

என்றாராகலின்.

ஐவகை அடியும் பதினேழ் நிலமும் மேற்சொல்லப்பட்டன. 3

**எழுபது தளை வழுவாவன:**

ஆசிரிய நிலம் பதினேழுள்ளும் வெண்டளை தட்பப் பதினேழும், கலித்தளை தட்பப் பதினேழுமாய், ஆசிரியப்பாவிற்கு முப்பத்து நான்கு தளை வழுவாம். என்னை?

---

1. தொல். பொ. 367. 2 தொல் பொ. 362 3. யா.வி. 49 உரை மேற்கோளாகிய வெள்ளைநிலம் பத்து, என்னும் வெண்பாவை நோக்குக.
பி-ம் * வகைமையின்.

'ஐவகை அடியும் அறிவுறத் தெரியின்
மெய்வகை அமைந்த பதினேழ் நிலமே.'

'ஆசிரிய மருங்கின் ஐந்தும் வரினே
சீரிய வெள்ளைக் கலித்தளை வரினே
நாலெண் வழுவோ டிரண்டென மொழிப.'

என்றூராகலின்.

வெள்ளை நிலம் பத்தினுள்ளும் ஆசிரியத்தளை தட்பப் பத்தும், கலித்தளை பட்பப் பத்துமாய் வெண்பாவிற்கு இருபது தளை வழுவாம்.

என்னை?

'சிந்தோ டளவு நெடிலீ றொழிய
வந்த உரிமை ஈரைந்து நிலத்தும்
மென்றளை கலியொடு தட்டன வெள்ளைக்
கொன்றிய தளைவழு இருப தென்ப.'

என்றூராகலின்.

'மென்றளை' என்பது ஆசிரியத்தளை.

கலி நிலம் எட்டினுள்ளும் வெண்டளை தட்ப எட்டும், ஆசிரியத் தளை தட்ப எட்டுமாய், கலிப்பாவிற்குப் பதினறு தளை வழுவாம்.

என்னை?

'அளவிரு நிலத்தொடு நெடில்கழி நெடிலென
விரவும் இருநான் கெய்திய கலியினுள்
மரபே வெள்ளை ஆசிரி யத்தளை
வரினும் வழுவகை ஈரெட் டாகும்.'

என்றூராகலின்.

[குறள் வெண்பா.]

'மூன்றிற்கும் சொன்ன முறையால் தொகுத்துணரத்
தோன்றும் வழுவெழுப தாம்.'

இவை எழுபது தளை வழுவாவன.

இனி, அறுநூற்று இருபத்தைந்து அடியும் காட்டுமிடத்துச் சீர் வரையறுக்கின்றுழிக் குற்றுகர இகரங்களை ஒற்றாகக் கொண்டு, முற்றுகர இகரங்களை எழுத்தாகக் கொண்டு வழங்கப்படும்.

[நேரிசை வெண்பா.]

'குற்றுகரத் தோடு வருஞ்சீர் எழுத்தைந்தும்
முற்றுகர முற்றசீ ராமென்ப—தெற்றெனக்
குற்றிகரத் தோடு வருஞ்சீர் எழுத்தைந்தும்
முற்றிகர முற்றசீ ராம்.'

என்றூராகலின்.

ஆசிரியப்பாவிற்கு உரிய இருநூற்று அறுபத்தோரடியும் ஆமாறு சொல்லுமிடத்து, ஆசிரியப்பாவிற்கு உரிய சீர் பதினறும்; இயற்சீர் பத்தும், தன் சீர் ஆறும் என. அவற்றுள் தன் சீர் ஆறும் தளை வகுக்கப்படாமையின் ஆறும் கொள்ளப்படா.

என்னை?

'தன்சீர் உள்வழித் தளைவகை வேண்டா.' 1

என்றுகராகலின். ஒழிந்த இயற்சீர் பத்தும் கொண்டு தளை வழங்கப்படும்.

என்னை?

---

1. தொல். பொ. 367.

[நேரிசை வெண்பா]

'இயற்சீர் ஒருபதும் தன்சீரோர் ஆறும்
இயற்றுப ஆசிரி யத்தென்—றியற்றுங்கால்
தன்சீர் வருமேல் தளைநோக்கார் மற்றெழிந்த
இன்சீராற் கொள்வர் தளை.'

என்பவாகலின்.

இயற்சீர் பத்துமே கொண்டு அடி வகுக்குமிடத்து நான்கு நிலைமையவாம். இரண்டெழுத்துச் சீரும், மூன்றெழுத்துச் சீரும், நான்கெழுத்துச் சீரும், ஐந்தெழுத்துச் சீரும் என.

என்னை ?

[குறள் வெண்பா]

'திரண்டியற்சீர் பத்திற்கும் நான்காம் நிலைமை
இரண்டாதி ஐந்தீ றெழுத்து.'

என்பவாகலின்.

அவற்றுள், ஈரெழுத்துச் சீராவன, நான்காம். அவையாவன, போதுபூ, போரேறு, பாதிரி, தேமா' என இவை.

என்னை ?

[குறள் வெண்பா]

'ஈரெழுத்துச் சீராவ போதுபூப் போரேறு
பாதிரி தேமா இவை.'

என்பவாகலின்.

அவற்றுள், தேமாவும் பாதிரியும் சிறுமை ஐந்தெழுத்தடியினின்றும் பெருமை பதினேழெழுத்தடிகாறும் உரிமையாய்ப் பதின்மூன்றடியும் ஓரோ ஒரு சீர் பெற இரண்டுமாய் இருபத்தாறும்.

என்னை ?

[குறள் வெண்பா]

'தேமாவும் பாதிரியும் சிற்றெல்லை * ஐந்தெழுத்தா
ஏறும் பதினே ழெழுத்து.'

எனவும்,

'ஒருசீர் பதின்மூன் றடிக்குரித் தாக
இருசீரு மாயிருபத் தாறு.'

எனவும் சொன்னாராகலின்.

இனி, 'போதுபூ, போரேறு' என்னும் இரண்டு ஈரெழுத்துச்சீரும் ஆறெழுத்து முதலாகப் பதினேழெழுத்தின்காறும் உயர்பு ஒரோ ஒன்று பன்னிரண்டிற்கும் உரியவாக, இரண்டுமாக இருபத்து நான்கு அடியாம்.

என்னை ?

[குறள் வெண்பா]

'ஆறெழுத் தாதி பதினேழு காறுயரும்
போதுபூப் போரே றிவை.'

'ஒன்றிற்குப் பன்னிரண் டாக இருசீர்க்கும்
வந்த இருபத்து நான்கு.'

என்றாராகலின்.

---

* தொல். பொ. 367. பி-ம் ! சிறெல்லை.

**இவ்விருபத்து நான்கும் முன் சொன்ன இருபத்தாறுமாய் ஈரெழுத்துச் சீராம் வழி ஆசிரிய அடித்தொகை ஐம்பது.**

**என்னை ?**

[குறள் வெண்பா]

'எடுத்துரைத்த ஈரெழுத்துச் சீரிறு லாய
அடித்தொகை ஐம்ப தெனல்.'

என்பவாகலின்.

இனி, மூவெழுத்துச் சீராவன, ஏழு சீர். அவையாவன, **'பாதிரி, புளிமா, விறகுதீ, போதுபூ, போரேறு, பூமருது, கடியாறு'** என இவை.

**என்னை ?**

[நேரிசை வெண்பா]

'பாதிரி இன்புளி மாப்பாய் விறகுதீப்
போதுபூப் போரேறு பூமருது—கோதில்
கடியா றெனவேழும் மூவெழுத்துச் சீராய்
அடியாகும் என்றுரைத்தார் ஆய்ந்து.'

என்பவாகலின்.

அவற்றுள், **'போதுபூ, விறகுதீ, கடியாறு'** என்னும் இம் மூன்றும் ஏழெழுத்தடி முதலாகப் பதினெட்டெழுத்தடிகாறும் உயர்ந்த பன்னிரண் டடியும் பெற, மூன்றுமாய் முப்பத்தாறும்.

**என்னை?**

[இன்னிசைச் சிந்தியல் வெண்பா]

'போதுபூக் கோதில் விறகுதீப் பூங்கடியா
றேழாதி ஈரொன்பான் ஏற ஒரோவொன்றிற்
காகுமுப் பன்னீ ரடி.'

என்பவாகலின்.

இனி **'பாதிரி, புளிமா, போரேறு, பூமருது'** என்னும் நான்கு சீரும் ஆறெழுத்தடி முதலாகப் பதினெட்டெழுத்தடிகாறும் உயர்ந்த பதின்மூன் றடியும் பெற, நான்குமாய் ஐம்பத்திரண்டு அடியாம்.

**என்னை ?**

[குறள் வெண்பா]

'ஏனை ஒருநான்கும் ஆறுதி ஈரொன்பான்
ஏறுதலால் ஐம்பத் திரண்டு.'

என்பவாகலின்.

மேற்சொன்ன முப்பத்தாறும், இவை ஐம்பத்திரண்டும் தலைப்பெய்ய, மூவெழுத்துச் சீராயவழி, ஆசிரிய அடித்தொகை எண்பத்தெட்டு.

**என்னை ?**

[குறள் வெண்பா]

'எடுத்துரைத்த மூவெழுத்துச் சீரினன் ஆய
அடித்தொகை எண்பத்தெட் டாம்.'

என்பவாகலின்.

இனி, நாலெழுத்துச் சீராவன ஐந்து வகைப்படும். 'அவை யாவையோ ?' எனின், **'கணவிரி, பூமருது, கடியாறு, விறகுதீ, மழகளிறு'** என இவை.

**என்னை?**

[இன்னிசைச் சிந்தியல் வெண்பா]

'கணவிரி பூமருது கார்க்கடி யாறு
விறகுதீ நான்கெழுத்தும் ஆகும் ;—குறைவில்
மழகளிறும் அன்ன தகைத்து.'

என்பவாகலின்

அவற்றுள், பூமருது ஏழெழுத்தடி முதலாகப் பத்தொன்பது எழுத்து அடிகாறும் உயர்ந்த பதின்மூன்று அடியும் பெற, பதின்மூன்றேயாம்.

என்னை ?

[குறள் வெண்பா]

'பூமரு தேழாதி பத்தொன்பான் காறுயர
ஆகும் அடிபதின்மூன் றும்.'

என்பவாகலின்.

ஒழிந்த 'கணவிரி, கடியாறு, மழகளிறு, விறகுதீ' என்னும் நான்கு சீரும் எட்டெழுத்தடி முதலாகப் பத்தொன்பது எழுத்து அடிகாறும் உயர்ந்த பன்னிரண்டடியும் பெற, நான்குமாய் நாற்பத்தெட்டு அடியாம்.

என்னை ?

[குறள் வெண்பா]

'ஒழிந்தநான் கெட்டாதி பத்தொன்பான் காறும்
மொழிந்த அடிநாற்பத் தெட்டு.'

என்பவாகலின்.

முன் சொன்ன பூமருது பெற்ற பதின்மூன்றும், இவை நாற்பத்தெட்டும் கூடி நான்கெழுத்துச் சீராய வழி, ஆசிரிய அடித்தொகை அறுபத்தொன்று

என்னை ?

[குறள் வெண்பா]

'நாட்டிய நாலெழுத்துச் சீரால் அடித்தொகை
கூட்டி அறுபதின்மேல் ஒன்று.'

என்பவாகலின்.

இனி ஐந்தெழுத்துச் சீராவது 'மழகளிறு' என்பது. அதுதான், ஒன்பது எழுத்து முதலாக இருபது எழுத்தின்காறும் உயர்ந்த பன்னிரண்டு அடியும் பெறுவது.

என்னை ?

[இன்னிசைச் சிந்தியல் வெண்பா]

'ஐந்தெழுத் தாகும் மழகளி றச்சீரால்
ஒன்பான் முதலா இருப துயர்த்தெண்ண
வந்த அடிபன் னிரண்டு'

என்பவாகலின்.

இவை பத்து இயற்சீருள்ளும் ஈரெழுத்துச் சீரால் ஐம்பதும், மூவெழுத்துச் சீரால் எண்பத்தெட்டும், நாலெழுத்துச் சீரால் அறுபத்தொன்றும், ஐந்தெழுத்துச் சீரால், பன்னிரண்டும் தலைப்பெய்ய, நான்கு நிலைமையாலும் ஆயின ஆசிரிய அடித்தொகை இருநூற்று ஒருபத்தொன்று.

என்னை ?

[குறள் வெண்பா]

'நான்கு நிலைமைக்கும் வந்த அடித்தொகை
நான்கைம்பான் மேலொருபத் தொன்று.'

என்பவாகலின்.

இனி, ஆசிரியத்துள் அசைச்சீராயினவற்றால் அடியாமாறு: ஓரெழுத்துச் சீரும், இரண்டெழுத்துச் சீரும், மூன்றெழுத்துச் சீருமாக வழங்கா எனக் கொள்க.

என்னை?

[குறள் வெண்பா]

'ஓரெழுத்தும் ஈரெழுத்தும் மூவெழுத்து மாவழங்கா
ஆசிரியத் துள்ளசைச்சீர் ஆம்.'

என்பவாகலின்.

அவற்றுள், நேர் அசையும் நேர்பு அசையும் ஓரெழுத்தாயவழி, நான்கெழுத்தடி முதலாகப் பதினைந்தெழுத்தடிகாறும் உயர்ந்த ஒரோ ஒன்றிற்குப் பன்னிரண்டு அடியாக, இரண்டிற்குமாய் இருபத்து நான்காம்.

என்னை?

[இன்னிசைச் சிந்தியல் வெண்பா]

'நேரசையும் நேர்பசையும் ஓரெழுத் தாயவழி
நான்கெழுத் தாதி பதினைந்து காறுயரத்
தோன்றுமால் நாலா றடி.'

என்பவாகலின்.

அவ்விரண்டசையும் 'தேமா' என்னும் சீரேயாகுதலால், இரண்டுமாய் அலகு நிலையாற் பன்னிரண்டேயாகக் கொள்ளப்படும்.

என்னை?

[குறள் வெண்பா]

'இருபன் னிரண்டென்பர் ஏனையார்; ஈண்டை
ஒருபன் னிரண்டே துணிவு.'

என்பவாகலின்.

இனி, நேர்பு அசை இரண்டெழுத்தாகக் கொள்ளுமிடத்து ஐந்தெழுத்தடி முதலாகப் பதினாறெழுத்தடிகாறும் உயரப் பன்னிரண்டு அடியாம்.

என்னை?

[குறள் வெண்பா]

'நேர்பீ ரெழுத்தாங்கால் ஐந்தாதி ஈரெட்டுச்
சேர அடிபன் னிரண்டு.'

என்பவாகலின்.

நிரையசையும் நிரைபு அசையும் இரண்டெழுத்தாய வழி, ஐந்தெழுத்தடி முதலாகப் பதினேழெழுத்தடிகாறும் உயர்ந்து, ஒரோ ஒன்று பதின்மூன்றாக, இரண்டுமாக இருபத்தாறும்.

என்னை?

[இன்னிசைச் சிந்தியல் வெண்பா]

'நிரையும் நிரைபும் இரண்டெழுத் தாங்காற்
புரைதீரைந் தாதி பதினே ழுயர்வாய்
இயையும் இருபதின்மேல் ஆறு.'

என்பவாகலின்.

நிரையசையும் நிரைபு அசையும் 'புளிமா' என்னும் சீரேயாகுதலால் அலகு இருக்கையாற் பதின்மூன்றேயாகக் கொள்க.

என்னை?

[குறள் வெண்பா]

'இருபதின்மேல் ஆறென்பர் ஏனையார்; ஈண்டை
ஒருபதின்மேல் மூன்றே துணிவு.'

என்பவாகலின்.

இனி நிரைபு அசை மூன்றெழுத்தாயவழி, ஆறெழுத்தடி முதலாகப் பதினெட்டெழுத்தடிகாறும் உயர்ந்த பதின்மூன்று அடியாம்.

என்னை ?

[நேரிசைச் சிந்தியல் வெண்பா]

'புரைதீரா ருதி பதினெட் டுயர
நிரைபு பதின்மூன்று நேரப்—புரைதீர்ந்த
மூவெழுத்தாங் காலை முடிவு.'

என்பவாகலின்.

நேர் அசையும் நேர்பு அசையும் ஓரெழுத்தும் ஈரெழுத்துமா ஆங்கால், இருபத்து நான்கடி ஆக்கின; நிரை அசையும் நிரைபு அசையும் ஈரெழுத்தும் மூவெழுத்துமா ஆங்கால், இருபத்தாறடி ஆக்கின. இவை எல்லாம் தலைப்பெய்ய, ஆசிரியத்துள் ஐம்பதடி அசைச்சீர் ஆயின.

என்னை ?

[குறள் வெண்பா]

'ஆசிரி யத்துள் அசைச்சீர் அடித்தொகை
நாட்டினர் ஐம்பது நன்கு.'

என்பவாகலின்.

இவை ஐம்பதும், மேற்சொன்ன இருநூற்று ஒருபத்தோரடியும் தலைப் பெய்து எண்ண, ஆசிரிய அடித்தொகை இருநூற்று அறுபத்தொன்றும்

என்னை ?

[குறள் வெண்பா]

'அரில்தீர் அகவற் கடித்தொகை ஆய்ந்தார்
இருநூற் றறுபத்தொன் றென்று.'

என்பவாகலின்.

இனி, வஞ்சிப்பாக் குறளடி மூன்றும், சிந்தடி மூன்றும், அளவடியுள் முதல் மூன்றும் பெற்ற ஒன்பது நிலமும், முச்சீர்க் கட்டளையாற் பெற்ற முச்சீரடியுமாய் வஞ்சி பத்து நிலமும் பெற, அவையும் ஆசிரிய அடியுள்ளே அடங்கும் என்பது.

என்னை ?

[குறள் வெண்பா]

'ஆசிரியம் பெற்ற அடிநிலமே வஞ்சிக்கும்
ஆகுமாஞ் சீராற் குறைத்து.'

என்பவாகலின்.

வெண்பாவிற்கு உரிய இருநூற்று முப்பத்திரண்டு அடியும் ஆமாறு சொல்லுமிடத்து, இயற்சீர் பத்தும் தன்சீர் நான்குமாய், வெண்பாவிற்குப் பதினான்கு சீருமாம்.

என்னை ?

[குறள் வெண்பா]

'வெள்ளைக் கியற்சீர் பத்துந்தன் சீரொரு
நான்குமாக் கொள்வர் குறித்து.'

என்பவாகலின்.

அவை நான்கு நிலைமையவாம்: இரண்டெழுத்துச் சீரும், மூன்றெழுத்துச் சீரும், நான்கெழுத்துச் சீரும், ஐந்தெழுத்துச் சீரும் என.

என்னை ?

[குறள் வெண்பா]

'இரண்டெழுத்தும் மூன்றெழுத்தும் நான்கெழுத்தும் ஐந்தும்
திரண்டே எழுத்துச்சீர் ஆம்.'

என்பவாகலின்,

வெண்பாவிற்குச் சொல்லப்பட்ட பதினன்கு சீருள்ளும் தேமாவும், பாதிரியும், போதுபூவும், போரேறும் என்னும் நான்கு சீரும் ஈரெழுத்துச் சீராம். என்னை ?

[குறள் வெண்பா]

'தேமாவே பாதிரி போதுபூப் போரேறென்
ருகுமாம் ஈரெழுத்துச் சீர்.'

என்பவாகலின்.

அவற்றுள், 'தேமா' எட்டெழுத்தடி முதலாகப் பதினறெழுத்தடிகாறும் உயர்ந்த ஒன்பதடியும் பெற்ற ஒன்பதேயாம்.

என்னை ?

[குறள் வெண்பா]

'தேமாவெட் டாதி பதின றுயர்த்தெண்ண
ஆமாகும் ஒன்ப தடி.'

என்பவாகலின்.

ஒழிந்த பாதிரியும், போதுபூவும், போரேறும் என்றிவை மூன்றும் ஏழெழுத்தடி முதலாகப் பதினேந்தெழுத்தடிகாறும் உயர்ந்த ஒரோ ஒன்று ஒன்பதாக, இருபத்தேழடியாம்.

என்னை ?

[குறள் வெண்பா]

'கழிந்தமூன் றேழாதி மூவைந் துயர
மொழிந்தனர் மூவொன்ப தென்று.'

என்பவாகலின்.

ஈரெழுத்தாய வழி, நான்கு சீரானும் ஆக்கப்பட்ட வெண்பாவிற்கு அடித் தொகை முப்பத்தாறு.

என்னை ?

[குறள் வெண்பா]

'ஈரெழுத்து நாற்சீரா வெள்ளைக் கடித்தொகை
கூறுவர் முப்பத்தா றென்று.'

என்பவாகலின்.

வெள்ளைக்கு மூவெழுத்துச் சீராவன, பாதிரியும், மாசெல்வாயும், மாபடுவாயும், புளிமாவும், போதுபூவும். போரேறும், பூமருதும், விறகுதீயும், கடியாறும் என ஒன்பது சீரும் எனக் கொள்க.

என்னை ?

[நேரிசை வெண்பா]

'பாதிரியும் மாசெல்வாய் மாபடுவாய் இன்புளிமாப்
போதுபூப் போரேறு பூமருது—தீதில்
விறகுதீ வீழ்கடியா றென்பதாம் என்றுங்
கறைகுவர் மூவெழுத்துச் சீர்.'

என்பவாகலின்.

அவற்றுள், விறகுதீயும், கடியாறும் என்றிரண்டு சீரும் ஏழெழுத்தடி முதலாகப் பதினறெழுத்தடிகாறும் உயர்ந்த பத்தடியும் ஒரோ ஒன்றிற்குப் பத்துப் பத்தாக, இரண்டிற்குமாக இருபது அடியாம்.

என்னை ?

[இன்னிசைச் சிந்தியல் வெண்பா]

'தாவில் விறகுதீத் தண்கடியா றென்றிரண்டும்
ஏழுமுத லாகப் பதின றுயர்த்தெண்ண
ஆகும் அடியிருப தாம்.'

என்பவாகலின்.

ஒழிந்த பாதிரியும், மாசெல்வாயும், மாபடுவாயும், புளிமாவும், போதுபூவும், பூமருதும், போரேறும் என எழு சீரும் எட்டெழுத்தடி முதலாகப் பதினு றெழுத்து அடிகாறும் உயர்ந்த ஒன்பதடியும் ஏற, ஒரோ ஒன்றுக்கு ஒன்பது அடியாக, அறுபத்து மூன்று அடியாம்.

என்னை ?

[குறள் வெண்பா]

'ஏனை எழுசீரும் எட்டாதி ஈரெட்டாய்
ஏறத்தாம் ஏழொன்ப தாம்.'

என்பவாகலின்.

மூவெழுத்துச் சீராயவழி, வெள்ளைக்கு அடித்தொகை எண்பத்து மூன்று.

என்னை ?

[குறள் வெண்பா]

'மூவெழுத் தாம்வழி வெள்ளைக் கடித்தொகை
எண்ணுங்கால் எண்பத்து மூன்று.'

என்பவாகலின்.

வெள்ளைக்கு நான்கெழுத்துச் சீராவன, கணவிரியும், பூமருதும், கடியாறும், மழகளிறும், மாபடுவாயும், விறகுதீயும், புலிசெல்வாயும் என இவ்வேழு சீரும்.

என்னை ?

[இன்னிசை வெண்பா]

'கணவிரி பூமருது கார்க்கடி யாறு
மழகளிறு மாபடுவாய் வாய்ந்த விறகுதீக்
கொள்ளப் புலிசெல்வா யோடு குறித்தேழு
வெள்ளைக்கு நான்கெழுத்துச் சீர்.'

என்பவாகலின்.

அவற்றுள், பூமருதும், மாபடுவாயும் என இரண்டு சீரும் ஒன்பது எழுத்தடி முதலாகப் பதினாறு எழுத்தடிகாறும், உயர்ந்த ஒரோ ஒன்றிற்கு எட்டாக, இரண்டுமாய்ப் பதினாறு அடியாம்.

என்னை ?

[இன்னிசைச் சிந்தியல் வெண்பா]

'நன்பால பூமருது மாபடுவாய் என்றிரண்டும்
ஒன்பான் முதலாய்ப் பதினு றெழுத்தேற
வந்த அடிபதினு றும்.'

என்பவாகலின்.

ஒழிந்த கணவிரியும், கடியாறும், மழகளிறும், விறகுதீயும், புலிசெல்வாயும் என இவ்வைந்தும் எட்டெழுத்தடி முதலாகப் பதினறெழுத்து அடிகாறும் உயர்ந்த ஒன்பது அடியும் ஒரோ ஒன்றிற்கு ஒன்பதாக, ஐந்திற்குமாய் நாற்பத் தைந்து அடியாம்.

என்னை ?

[குறள் வெண்பா]

'ஏனையைந் தெட்டு முதற்பதி னுறுயர
ஆன அடி நாற்பத் தைந்து.'

என்பவாகலின.

நாலெழுத்து ஆயவழி, வெள்ளைக்கு அடித்தொகை அறுபத்தொன்று.

என்னை ?

[குறள் வெண்பா]

'நாலெழுத் தாம்வழி வெள்ளைக் கடித்தொகை
ஆகும் அறுபதின்மேல் ஒன்று.'

என்பவாகலின்.

வெண்பாவிற்கு ஐந்தெழுத்துச் சீராவன, மழகளிறும், புலிபடுவாயும் என இவை.

என்னை ?

[குறள் வெண்பா]

'மழகளிறு வாய்ந்த புலிபடுவாய் என்ப
அளவியன்ற ஐந்தெழுத்தாம் சீர்.'

என்பவாகலின்.

இவை இரண்டும் ஒன்பது எழுத்தடி முதலாகப் பதினைந்தெழுத்தடிகாறும் உயர, ஒரோ ஒன்றிற்கு எட்டாகப் பதினாறு அடியாம்.

என்னை ?

[குறள் வெண்பா]

'எட்டாதி மூவைந் தெழுத்துயர அச்சீராற்
பட்ட அடிபதி னாறு.'

'ஒன்பான் முதலாக ஐந்தெழுத்துச் சீரிரண்
டாய அடிபதி னாறு.'

என்பவாகலின்.

வெண்பாவிற்குச் சீரால் ஆம் அடித்தொகை நூற்றுத் தொண்ணூற்றாறு

என்னை ?

[குறள் வெண்பா]

'தேற்றுங்கால் சீராலாம் வெள்ளைக் கடித்தொகை
நூற்றுத்தொண் ணூற்றின்மேல் ஆறு.'

என்பவாகலின்.

இனி, வெண்பாவினுள் அசை சீராய் நடக்குமாறு: வெண்பாவினுள் நாலசையும் சீராமிடத்து மூன்று நிலைமையவாம்: ஓர் எழுத்தினாற் சீராகலும், இரண்டெழுத்தினாற் சீராகலும், மூன்று எழுத்தினாற் சீராகலும் என.

என்னை ?

[குறள் வெண்பா]

'வெள்ளையுள் நாலசையும் சீராங்கால் முந்நிலைமை
கொள்ளுமாம் ஒன்றாதி மூன்று.'

எனவும்,

'ஓரெழுத் தாதியா மூன்றெழுத் தீறாக
மூன்று நிலைமைப் படும்.'

எனவும், சொன்னாராகலின்.

அவை வருமாறு: நேர் அசையும் நேர்பு அசையும் ஓர் எழுத்தினாற சீராகுமிடத்து ஏழெழுத்தடி முதலாகப் பதினைந்து எழுத்தடிகாறும் உயர, ஒரோ ஒன்றிற்கு ஒன்பதாக, இரண்டிற்குமாய்ப் பதினெட்டாம்.

என்னை ?

[இன்னிசைச் சிந்தியல் வெண்பா]

'நேர்நேர் பசையிரண்டும் ஓரெழுத்துச் சீராங்கால்
ஏழு முதலாப் பதினைந் துயர்த்தெண்ண
ஆகுமீ ரொன்ப தடி.'

என்பவாகலின்.

அவ்விரண்டினையும் 'தேமா' என்னும் சீராகக் கொள்ள, அலகு நிலையால் ஒன்பதாம்.

என்னை ?

[குறள் வெண்பா]

'இரண்டொன்ப தாயினும் இவ்விரண்டும் கூட்டித்
திரண்டொன்ப தாகச் செயல்.'

என்பவாகலின்.

நேர்பசை ஈரெழுத்துச் சீராம்வழி எட்டெழுத்து அடி முதலாகப் பதினு றெழுத்து அடிகாறும் உயர்த்தெண்ண ஒன்பது அடியாம்.

என்னை ?

[இன்னிசைச் சிந்தியல் வெண்பா]

'நேர்பசை ஈரெழுத் தாம்வழிச் சீரிதின்
எட்டாதி ஈரெட் டியர்த்தெண்ண ஆமென்றுங்
கொட்டினர் ஒன்ப தடி.'

என்பவாகலின்.

இனி, நிரை அசையும் நிரைபு அசையும் ஈரெழுத்தாய வழி ஏழெழுத்தடி முதலாகப் பதினைந்தெழுத்தடிகாறும் உயர்த்தெண்ண, ஓரோ ஒன்று ஒன்ப தாக, இரண்டுமாய்ப் பதினெட்டடியாம்.

என்னை ?

[இன்னிசைச் சிந்தியல் வெண்பா]

'நிரையும் நிரைபும் இரண்டெழுத்தாங் காலைப்
புரைதீரே ழாதி பதினைந் துயர
உரைசாலீ ரொன்ப தடி.'

என்பவாகலின்.

இரண்டும் 'புளிமா' என்னும் சீரே ஆகுதலால், இரண்டினையும் ஒன்பதாகக் கொள்க.

என்னை ?

[குறள் வெண்பா]

'இரண்டு புளிமாவென் றெண்ணினர் ஆய்ந்து
திரண்டொன்ப தாகச் செயல்.'

என்பவாகலின்.

இனி, நிரைபு அசை மூவெழுத்துச் சீராமிடத்து எட்டெழுத்தடி முதலாகப் பதினுறெழுத்து அடிகாறும் உயர, ஒன்பது அடியாம்.

என்னை ?

[இன்னிசைச் சிந்தியல் வெண்பா]

'வைத்த நிரைபசை மூவெழுத்துச் சீராங்கால்
எட்டு முதலாப் பதினு றுயர்த்தெண்ண
ஒட்டினர் ஒன்ப தடி.'

என்பவாகலின்.

வெண்பாவினுள் நான்கு அசையும் அசைச்சீராய் நின்று ஆக்கின அடித் தொகை முப்பத்தாறும்.

என்னை ?

[குறள் வெண்பா]

'வெள்ளைக் கசைச்சீரால் ஆகும் அடித்தொகை
கொள்ளுங்கால் முப்பதின்மேல் ஆறு.'

என்பவாகலின்.

இவையெல்லாம் தலைப்பெய்து எண்ண, வெண்பா அடித்தொகை இருநூற்று முப்பத்திரண்டு.

என்னை ?

[குறள் வெண்பா]

'தெரியுங்கால் வெள்ளைக் கடித்தொகை செப்பல்
இருநூற்று முப்பத் திரண்டு.'

என்பவாகலின்.

இனி, கலிக்குரிய சீரால் அடி ஆமாறு: வெண்பா உரிச்சீர் நான்கும், 'நீடுகொடி, குழறுபுலி' என்னும் இரண்டு ஆசிரிய உரிச்சீரும், இயற்சீர் பத்தினுள்ளும் 'தேமா, புளிமா' என்னும் இரண்டு நேரீற்று இயற்சீரும் ஒழித்து ஒழிந்த எட்டு இயற்சீருமாய், பதினன்கு சீரும் கலிக்குரியவாம்.

என்னை ?

[நேரிசை வெண்பா]

'திரியேறு பூமாசேர் வாயாத் திரிந்து
மருதுகொடி மாவருவா யாறு—விரிதீப்
புலிசேர ஆகும் புலிகளிறு வந்து
புலிவருவா யாங்கலியுட் புக்கு.'

என இதனை விரித்து உரைத்துக்கொள்க.

'வெண்பா உரிச்சீர் ஒருநான்கும் ஆசிரியத்
தின்பா உரிச்சீருள் ஓரிரண்டும்—திண்பா
இயற்சீரின் எட்டினே டீரேழு சீரும்
உரைப்பர் கலிக்குரிமை உய்த்து.'

என்பவாகலின்.

அவை நான்கு நிலைமையவாம்.

என்னை ?

[குறள் வெண்பா]

'உய்த்துரைத்த ஈரேழும் நான்கு நிலைமையால்
வைத்துரைப்பர் நன்குணர்ந் தோர்.'

என்பவாகலின்.

நான்கு நிலைமையாவன : இரண்டெழுத்துச் சீராகலும், மூன்றெழுத்துச் சீராகலும், நான்கெழுத்துச் சீராகலும், ஐந்தெழுத்துச் சீராகலும் என இவை.

என்னை ?

[குறள் வெண்பா]

'திரண்டவை நானிலைமை செப்பில் எழுத்தோர்
இரண்டொடு மூன்றுநான் கைந்து.'

என்பவாகலின்.

அவற்றுள் 'பாதிரி, போதுபூ, போரேறு' என்னும் இம்மூன்றும் ஈரெழுத்தாம்வழிப் பதின்மூன்று எழுத்தடி முதலாகப் பதினேழெழுத்து அடிகாறும் உயர்ந்த ஐந்தடியும் ஓரோ ஒன்றிற்கு ஐந்தாக, மூன்றுமாய்ப் பதினைந்தடியாம். யாம்.

என்னை ?

[இன்னிசைச் சிந்தியல் வெண்பா]

'பாதிரி போதுபூப் போரேறென் றிம்மூன்றும்
ஆதி பதின்மூன்றுப் பத்தின்மேல் ஏழுயர்
வாகும் பதினைந் தடி.'

என்பவாகலின்.

இனி, மூவெழுத்துச் சீராய்க் கலியுள் நடப்பன, 'பாதிரி, போதுபூ, விறகுதீ, போரேறு, பூமருது, கடியாறு, நீடுகொடி, மாசெல்வாய், மாபடுவாய்' என்னும் இவ்வொன்பது சீரும் எனக் கொள்க.

என்னை?

[பஃறொடை வெண்பா]

'பாதிரி போதுபூப் பாய விறகுதீப்
போரேறு பூமருது பூங்கடியா றேதிய
நீடு கொடியோடு மாசெல்வாய் மாபடுவாய்
மூதறிவார் மூவோ ரெழுத்தின் முடிந்தனவென்
றோதினர் ஒன்பது சீர்.'

என்பவாகலின்.

அவற்றுள் 'கடியாறு, மாசெல்வாய், மாபடுவாய்' என்னும் இம்மூன்றும் பதின்மூன்று எழுத்தடி முதலாகப் பதினெட்டு எழுத்தடிகாறும் உயர்ந்த ஆறடியும் பெற, மூன்றுமாய்ப் பதினெட்டடியாம்.

என்னை?

[இன்னிசைச் சிந்தியல் வெண்பா]

'ஒத்த கடியாறு மாசெல்வாய் மாபடுவாய்
பத்தின்மேல் மூன்றுதி பத்தின்மேல் எட்டுயர
ஒத்த அடிபதி னெட்டு.'

என்பவாகலின்.

இனி, ஒழிந்த ஆறுமாவன: 'பாதிரி, போதுபூ, விறகுதீ, போரேறு, பூமருது, நீடுகொடி' என்னும் இவ்வாறும் பதினன்கெழுத்தடி முதலாகப் பதினெட்டு எழுத்தடிகாறும் உயர்ந்த ஐந்தடியும் பெற்று, ஒரோ ஒன்று ஐந்தடியாக, ஆறுமாய் முப்பது அடியாம்.

என்னை?

[இன்னிசைச் சிந்தியல் வெண்பா]

'ஏனை அறுசீரும் ஈரேழ் முதலாக
நானன்கின் மேலிரண் டோங்கி ஒரோவொன்றற்
கைந்தா அடிமுப்ப தாம்.'

என்பவாகலின்.

இவை முப்பதும் மேற்கூறிய பதினெட்டுமாய் மூவெழுத்தாயவழிக் கலியடித்தொகை நாற்பத்தெட்டு.

என்னை?

[குறள் வெண்பா]

'மூவெழுத் தாங்கால் முரற்கைக் கடித்தொகைமேல்
ஏவினர் நாற்பதின்மேல் எட்டு.'

என்பவாகலின்.

நாலெழுத்துச் சீராய்க் கலியுள் நடப்பன, 'கணவிரி, கடியாறு, விறகுதீ, பூமருது, நீடுகொடி, புலிசெல்வாய் மாபடுவாய், மழகளிறு, குழறுபுலி' என்னும் ஒன்பது சீரும் எனக் கொள்க.

[பஃறொடை வெண்பா]

'நலமிகு நாலெழுத் தாயவழி நல்லாய்!
கணவிரி கார்க்கடி யாறு விறகுதீப்
பூமருது நீடு கொடியே புலிசெல்வாய்
மாபடு வாயே மழகளிறு தாவில்
குழறுபுலி என்றார் குறித்து.'

என்பவாகலின்.

அவற்றுள் 'கணவிரி, கடியாறு மழகளிறு' என்னும் மூன்றும் பதினான்கு எழுத்தடி முதலாகப் பத்தொன்பது எழுத்தடிகாறும் உயர்ந்த ஆறு அடியும் பெற, ஓரோ ஒன்று ஆறாக, மூன்றுமாய்ப் பதினெட்டடியாம்.

என்னை ?

[இன்னிசை வெண்பா]

'கணவிரியும் கண்ணார் கடியாறும் ஏனை
மழகளிறும் நாலெழுத்துக் கொள்ளும் இயல்வகையா
ஈரேழ் முதலாக ஈரொன்பான் மேலொன்று
சேர அடிபதி னெட்டு.'

என்பவாகலின்.

மாபடுவாய் பதினான்கு எழுத்து அடி முதலாகப் பத்தொன்பது எழுத்து அடிகாறும் உயர, ஆறடியாம்.

என்னை ?

[குறள் வெண்பா]

'மாபடுவாய் பத்தின்மேல் நான்காதி பத்தொன்ப
தேற அடியிருமூன் றாம்.'

என்பவாகலின்.

புலிசெல்வாய் பதின்மூன்று எழுத்தடி முதலாகப் பத்தொன்பது எழுத்து அடிகாறும் உயர, ஏழடியாம்.

என்னை ?

[குறள் வெண்பா]

'பத்தின்மேல் மூன்று முதலாகப் புலிசெல்வாய்
பத்தொன்ப தேறவே ழாம்.'

என்பவாகலின்.

'விறகுதீ, பூமருது, நீடுகொடி, குழறுபுலி' என்னும் நான்கும் பதினைந்து எழுத்தடி முதலாகப் பத்தொன்பது எழுத்து அடிகாறும் உயர்ந்த ஐந்தடியும் பெற, நான்குமாய் இருபதாம்.

என்னை ?

[குறள் வெண்பா]

'ஏனைநான் கைம்மூ வெழுத்தாதி பத்தொன்ப
தேற அடியிருப தாம்.'

என்பவாகலின்.

நான்கெழுத்தாம்வழிக் கலியடித் தொகை ஐம்பத்தொன்று.

என்னை?

[குறள் வெண்பா]

'நாலெழுத் தாங்கால் கலியின் அடித்தொகை.
ஆயுங்கால் ஐம்பதின்மேல் ஒன்று.'

என்பவாகலின்.

இனி, கலிக்குரிய ஐந்தெழுத்துச் சீராவன : 'மழகளிறு, புலிபடுவாய், குழறுபுலி' என்னும் இவை.

என்னை?

[குறள் வெண்பா]

'மழகளிறு வாய்ந்த புலிபடு வாயே
குழறுபுலி ஐந்தெழுத்துச் சீர்.'

என்பவாகலின்.

அவற்றுள் குழறுபுலி பதினாறு எழுத்தடி முதலாக இருபதெழுத்து அடிகாறும் உயர்த்து எண்ண, ஐந்தடியாம்.

என்னை ?

[இன்னிசைச் சிந்தியல் வெண்பா]

'கோதில் சிறப்பிற் குழறு புலியென்ப
றீரெட்டி ஞதி இருப துயர்த்தெண்ண
ஆகும் அடித்தொகை ஐந்து.'

என்பவாகலின்.

மழகளிறு பதினைந்து எழுத்தடி முதலாக இருபது எழுத்தடிகாறும் உயர்த்தெண்ண ஆறடியாம்.

என்னை ?

[இன்னிசைச் சிந்தியல் வெண்பா]

'மாசில் சிறப்பின் மழகளி றென்னுஞ்சீர்
மூவேழைந் தாதி இருப துயர்த்தெண்ண
ஆயின ஆறடி ஆய்ந்து.'

என்பவாகலின்.

புலிபடுவாய் பதினான்கு எழுத்தடி முதலாக இருபது எழுத்தடிகாறும் உயர்த்தெண்ண, ஏழடியாம்.

என்னை ?

[இன்னிசைச் சிந்தியல் வெண்பா]

'பொறப்பமைந்தார் சொன்ன புலிபடுவாய் என்னுஞ்சீர்
பத்தின்மேல் நான்கு முதலிருப தீறாக
ஒத்தமைந்த ஓரேழ் அடி.'

என்பவாகலின்.

ஐந்தெழுத்தாம்வழிக் கலியின் அடித்தொகை பதினெட்டு.

என்னை ?

[குறள் வெண்பா]

'ஐயெழுத் தாயவழி ஆன்ற கலியடி
எய்துங்கால் ஈரொன்ப தாம்.'

என்பவாகலின்.

இனி, கலியடியெல்லாம் கூட்டி எண்ண, நூற்று முப்பத்திரண்டு அடியாம்.

என்னை ?

[குறள் வெண்பா]

'கருதுங்கால் ஆய்ந்த கலியடி எல்லாம்
ஒருநூற்று முப்பத் திரண்டு.'

என்பவாகலின்.

கலியடியுள் அசைச்சீராயின இல்லையென்று உணர்க.

ஆசிரிய அடி இருநூற்று அறுபத்தொன்று; வெண்பா அடி இருநூற்று முப்பத்திரண்டு; கலியடி நூற்று முப்பத்திரண்டு; ஆக அறுநூற்று இருபத்தைந்து அடியாம்.

என்னை?

என்னை?

[நேரிசை வெண்பா]

'இருநூற் றிருமுப்பத் தொன்றகவற் கேனை
இருநூற்றே டெண்ணான்கு வெள்ளைக்—கொருநூற்று
முப்பத் திரண்டாம் முரற்கைக் கிவையறுநூற்
றற்றமில் ஐயைந் தடி.' 1

என்பவாகலின்.

இனி, சந்தமும் தாண்டகமும் ஆமாறு: நாலெழுத்து முதலாக இருபத்தாறு எழுத்தின்காறும் உயர்ந்த இருபத்து மூன்று அடியானும் வந்து, தம்முள் ஒத்தும்; குருவும் லகுவும் ஒத்தும் வந்தன அளவியற்சந்தம். எழுத்து ஒவ்வாதும் எழுத்தலகு ஒவ்வாதும் வருவன அளவழிச்சந்தம்.

இருபத்தேழெழுத்து முதலாக உயர்ந்த எழுத்தடியினவாய், எழுத்தும் குருலகுவும் ஒத்து வருவன அளவியற்றாண்டகம். எழுத்து ஒவ்வாதும் எழுத்தலகு ஒவ்வாதும் வருவன அளவழித்தாண்டகம்.

என்னை?

[நேரிசை வெண்பா.]

'ஈரிரண் டாதி இருபத்தா றந்தமாச்
சாரும் எழுத்தின்கட் சந்தமாம்;—சீரொத்த
மூவொன்ப தாதியா முற்றின தாண்டகமென்
றோதினர் தொல்லோர் எடுத்து.'

'சந்தமும் தாண்டகமும் தம்முள் எழுத்திலகு
வந்த முறையை வழுவாவேல்—முந்தை
அளவியலாம் என்றுரைப்பர்; அவ்வாறன் றாகில்
அளவழி யாமென்ப ரால்.'

இவற்றை விரித்து உரைத்துக் கொள்க.

குரு லகு ஆவன: குற்றெழுத்து ஒற்று அடாது வந்தது லகு. அது ரகர வடிவிற்று. இனிக் குற்றெழுத்து ஒற்றடுத்தும் நெட்டெழுத்து ஒற்றடுத்தும், நெட்டெழுத்துத் தனித்தும் வந்தது குருவாம். அது டகர வடிவிற்று.

அடி இறுதிக்கண் வந்த குற்றெழுத்து ஒருகாற் கூறு மாற்றாற் குருவாகவும் இடப்படும். லகுவிற்கு ஓரலகாகவும் குருவிற்கு ஈரலகாகவும் இடினும் இழுக்கா.

[குறள் வெண்பா]

'ரகரவடி வாமீ திலகு; குருவே
நிகரில் டகாரமென நேர்.' 2

என்றாராகலின்.

[நேரிசை வெண்பா]

'குற்றெழுத்துச் செவ்வி லகுவாகும்; நெட்டெழுத்தும்
குற்றொற்றும் நெட்டொற்றும் கோணமாய்த்—தெற்றக்
குருவென்ப தாகும்; குறிலும் குருவாம்
ஒருகால் அடியிறுதி உற்று.'

எனவும்,

1. யா.வி. 49 உரைமேற். 2. யா.வி. 5 உரைமேற்.

[குறள் வெண்பா]

'குருவிலகு வாகும் குருவாம் நெடிலும்
நெடிலொற்றும் குற்றொற்றும் நின்று.'

எனவும் சொன்னாராகலான்.

அவற்றிற்குச் செய்யுள் :

[வஞ்சித்துறை]

'ஆதி நாதர்
பாத மூலம்
நீதி யாய்நின்
றோது நெஞ்சே!'

இது நாலெழுத்தடி **அளவியற்சந்தம்.**

'பந்தம் நீக்குறில்
அந்தம் இல்குணத்
தெந்தை பாதமே
சிந்தி நெஞ்சமே!'

இஃது ஐந்தெழுத்தடி **அளவியற்சந்தம்.**

'திரித்து வெந்துயம் *
முரித்து நல்லறம்
விரித்த வேதியர்க்
குரித்தென் உள்ளமே.'

இஃது ஆறெழுத்தடி **அளவியற்சந்தம்.**

[வஞ்சி விருத்தம்]

'பாடு வண்டு பாண்செயும்
நீடு பிண்டி நீழலான்
வீடு வேண்டு வார்க்கெலாம்
ஊடு போக்கும் உத்தமன்.'

இஃது ஏழெழுத்தடி அளவியற்சந்தம்.

'முரன்று சென்று வண்டினம் †
நிரந்த பிண்டி நீழலுட்
பரந்த சோதி நாதனெம்
அரந்தை நீக்கும் அண்ணலே!'

இஃது எட்டெழுத்தடி அளவியற்சந்தம்.

'வினயத் தான்வினைத் தொண்டினீர்!
அனகத் தானருள் காண்குறிற்
கனகத் தாமரைப் பூமிசைச்
சினனைச் சிந்தமின் செவ்வனே.'

இஃது ஒன்பதெழுத்தடி அளவியற்சந்தம்.

---

பி–ம்: * வெங்கயம் † வட்டினம்.

'கருதிற் கவினர் கயனுட்டத்
திருவிற் புருவத் திவளேயாம்
மருவற் கினியாள் மனமென்னே
உருவக் கமலத் துறைவாளே.'

இது பத்தெழுத்தடி அளவியற்சந்தம்.

[கலி விருத்தம்.]

'ஆதி யானற வாழியி னுனலர்ச்
சோதி யான்சொரி பூமழை யான்வினைக்
காதி வென்ற பிரானவன் பாதமே
நீதி யாநினை * வாழிய நெஞ்சமே!' 1

இது பதினேரெழுத்தடி அளவியற்சந்தம்.

'குரவு தான்விரி கொங்கொடு கூடின
மரவ மாமலர் ஊதிய வண்டுகாள்!
இரவி போலெழி லார்க்கெம ராகிநீர்
கரவி றாதுரை மின்கடிக் காகவே.'

இது பன்னிரண்டெழுத்தடி அளவியற்சந்தம்.

'கலையெலா முதற்கணே கண்டு கொண்டுபெண்
கொலையினும் கொடுந்தொழில் பூண்டு கோலவெஞ்
சிலையினன் செழுஞ்சரம் சேர்த்த செவ்வனே
மலையமா ருதத்தொடும் வந்து தோன்றுமே.'

எனவும்,

[கலி நிலைத்துறை.]

'கோடற் கொல்லைக் கோல அரங்கிற் குவவுத்தேன்
பாடக் கொன்றைப் பைம்பொழில் நீழற் பருவஞ்சேர்
வாடைப் பாங்காய் மத்த மயூரக் கிழவோன்வந்
தாடக் † கொண்மூ ஆர்த்தன அம்பொற் கொடியன்னுய்!'

எனவும் இவை பதின்மூன்றெழுத்தடி அளவியற்சந்தம்.

'குரவக் கோலக் கொங்கணி சோலைக் குயிலாலப்
பரவைத் தேன்காள்! பாடுமி னீரும் பகைவெல்வான்
புரவித் தேர்மேற் போனவ ராஞு தினிவந்தால்
விரவிக் கோநின் வெங்கணை வேனிற் பொருவேளே.'

இது பதினுன்கெழுத்தடி அளவியற்சந்தம்.

[தரவு கொச்சகம்.]

'யதிகணம் இருநிலம் இறைவனே டிமையோர்
துதிதிகழ் மொழியிசை துதைமதில் உடையேம்
அதிபதி அடியிணை அடைகுவம் எழுநாம்
மதிபுரை திருமுக மடநடை மயிலே.'

இது பதினைந்தெழுத்தடி அளவியற்சந்தம்.

---

1. சூளா. சயம். 25.
பி-ம்: * யானினை. † ஆடிக்.

[கட்டளைக் கலித்துறை.]

'மாவரு கானல் வரையதர்ப் பாங்கர் மலிகுரவின்
பூமலி சோலைத் திருவருங் காண்பர் புதுமதுநீர்த்
தாமரை வாவித் தடமலர் சாடிக் கயலுகளக்
காமரு நீலம் கனையிருள் காலும் கழனிகளே.'

இது பதினாறெழுத்தடி அளவியற்சந்தம்.

[எழுசீர் விருத்தம்.]

'கோலக் கொன்றைக் கொழுநன் எழிலார் கொம்பான தோளை [நாளும்
சாலப் புல்லித் தளவ மடவாள் தானகத் தோகை எல்லாம்
ஆலக் கொண்டு அதிரும் இதுகாண் ஆய்மலர்க் கோதை நல்லாய்'
காலச் செவ்வேற் கனகக் கடகக் காதலர் சொன்ன ஆறே.'

எனவும்,

[கட்டளைக் கலித்துறை.]

'செருவினை வைவேல் திகழொளி வேந்தர் திருமுடிமேல்
உருவினை ஒண்போ துறுநின பாதங் குறைவறியாக்
கருவினை யாட்டும் கவினுடை வாட்கட் கனிபுரைவாய்த்
திருவினை யாடும் கனவரை யாகச் சினவரனே.'

எனவும் இவை பதினேழெழுத்தடி அளவியற்சந்தம்.

[அறுசீர் விருத்தம்.]

'பிணியார் பிறவிக் கடலுட் பிறவா வகைநா மறியப்
பணியாய் மணியார் அணைமேல் பணியா வொருமூ வுலகும்
கணியா துணரும் கவினுர் கலைமா மடவாள் கணவா!
அணியார் கமலத் தலரா சனனே! அறவா ழியனே!

இது பதினெட்டெழுத்தடி அளவியற்சந்தம்.

[எழுசீர் விருத்தம்.]

'அன்னங் கண்டர விந்த வாவி யதுகண் டம்பூம் பொழிற்புன்னைநின்
றின்னுங் கண்ட ஞாழலி னீழ லிதுகண் டிங்கேநில் யான்சென்று [கோன்
மன்னும் காவி விரிந்த வாச மலரா லனைகே தகைப்போது
பொன்னம் போது கவிரந் தாது துயலத் தண்டாது தந்திவனே.'

இது பத்தொன்பது எழுத்தடி அளவியற்சந்தம்.

'அருவிப் பலவரை காள்! சொக் கத்தருவே! அம் மாதவிப் பந்த [காள்!
மருவிப் போதினி கோது சூத வனமே வடாதுன்ன லீர்களாற்
செருவிற் கேயுரு வன்ன செம்மலிக் குன்றத் திடையின்வந் தாலவர்க்
கிருவிப் பைம்புன நோக்கி யேயிளை யாரினந் தெய்திஞர் [என்மினே.'

இஃது இருபதெழுத்தடி அளவியற்சந்தம்.

'பின்றூழும் பீலி கோலிப் பெருமுகில் அதிரப்
பிண்டமாய் வண்டுபாடப்
பொன்றூழும் கொன்றை நீழற் புனமயில் இனமாய்ப்
பூமிசைப் போந்துதேதே
என்றுடக் கோடல் இளகின இதுகார் என்ப
தியங்கி நின்றுநாளைச்
சென்றூர்தேர் வந்து தோன்றும் செறிவளை மடநல்லாய்
செல்கநின் செல்லறுன்.'

எனவும்,

'வண்பாராண் மன்னர்பொன் மகுடங் கிரிகாள
மாலை கொய்யாத போதினிற்
பெண்பாலோர் கௌவன் ஞானப் பெருங்கட
லேவர்ப் பேரிளம் பெண்டிராதி
பண்பாரென் பாடு பாதம் பரமநிருப
மாலைக் குணகீர்த்தி என்பர்
நண்பாரின் கமலமாண் புடையவ ரடைவர்
நற்குணச் சித்தி தானே.'

எனவும் இவை இருபத்தோரெழுத்தடி அளவியற்சந்தம்.

'அருமாலைத் தாதலர நின்றமர் குழுவினோ
டாயிரச் செங்க ணுனும்
திருநாமம் செப்பறேற் றூன்றிகழ் ஒளிவளையத்
தேசுமீ தூர வீரர்*
கருமாலைக் காதிவென் றுய்கமல சரணமும்
கண்டுகை கூப்ப மாட்டாப்
பெருமான்மற் பெற்றியா† னின்பெருமை அருகனும்
வல்லமோ பேசு மாறே?'

இஃது இருபத்திரண்டெழுத்தடி அளவியற்சந்தம்.

[எண்சீர் விருத்தம்.]

'சோதி மண்டலம் தோன்றுவ துளதேற்
சொரியு மாமலர்த் தூமழை யுளதேற்
காதி வென்றதோர் காட்சியு முளதேற்
கவரி மாருதம் கால்வன வுளவேற்
பாத பங்கயம் சேர்நரு முளரேற்
பரம கீதமும் பாடுந ருளரேல்
ஆதி மாதவர் தாமரு குளரேல்
அவரை யேதெளிந் தாட்படு மனனே!'

இஃது இருபத்துமூன்றெழுத்தடி அளவியற்சந்தம்.

'விலங்கு நீண்முடி யிலங்கு மீமிசை
விரிந்த மாதவி புரிந்த நீள்கொடி
உலங்கொ டாள்கொடு சலந்து சூழ்தர
உறைந்து புள்ளின நிறைந்த வார்சடை

---

பி-ம்: * தேசுமூ தூர வீரக் † போற்றியா

அலங்க ருழ்தா மலர்ந்த தோள்வலி
அசைந்த ஆடவர் இசைந்த சேவடி
வலங்கொள் நாவலர் அலர்ந்த வானிடை
வரம்பில் இன்பமும் ஒருங்கு சேர்வரே.'

இஃது இருபத்துநான்கெழுத்தடி அளவியற்சந்தம்.

[அறுசீர் விருத்தம்.]

'இருகிய புரிகுழல் அரிவைய ரவரொடு
திகழொளி இமையவரும்
பெருகிய கரிகுல மருவிய படையொடு
பரிதலில் அரசவையும்
முருகுடை மலரொடு முறைமுறை வழிபட
முனிகளை நனியகலா
அருகன திருவடி அடைபவர் அடைகுவர்
அமரொளி அமருலகே.'

எனவும்,

[எண்சீர் விருத்தம்.]

'பொங்கழல நாகம் புற்றக நீங்கிப்
புரியிக முறுகிய கயிறென மிளிரும்
தங்கிய வெண்டேர் வெஞ்சுர நீந்தித்
தனதட மிடைசெறி மடமயில் இயலாய்ச்
செங்கய லொண்கட் டேமொழி யாளும்
திறலொடு முடுகிய செறிகழ லவனும்
பங்கய வாவிப் பன்மணி மாடப்
பதிநனி குறுகுவர் பரிவொழி யினிநீ.'

எனவும் இவை இருபத்தைந்தெழுத்தடி அளவியற்சந்தம்.

[கலி நிலைத்துறை.]

'கரிமருவு கடிமதிலி னிடுகொடிகள் திசைதடவு கடுமையினதாய்த்
திருமருவு பெருவிழவொ டமரர்குழு வொழுகுதொழு செழுமை
[வழுவாத்
திருமரபி னரபதிக ளணிகிளரு மணிமகுட முறமறுவிலாக்
குருமருவு விரிகமல சரணநனி பணிவர்மலி குருசினகரே.'

இஃது இருபத்தாறெழுத்தடி அளவியற்சந்தம்.

இனி அளவழிச் சந்தத்திற்குச் சில வருமாறு :

[வஞ்சி விருத்தம்]

பொங்கு சாமரை தாம்வீசச்
சிங்க பீடம் அமர்ந்தவெங்
கொங்கு சேர்குளிர் பூம்பிண்டிச்
செங்க ணுனடி சேர்மினே.'

எனவும்,

'போத லேபொரு ளாக்கொண்ட
காத லாற்கொரு காரியம்
தூது சென்றுரை யாய்தும்பி!
நீதி யானெறி போகியே.'

எனவும்,

[அறுசீர் விருத்தம்]

'அருண மாஞ்சினை கறித்துட னகன்பொழில்
அலவலைக் குயில்கூவத்
தருண வேனிலும் புகுந்தது தனுநெகத்
தடமலர்ச் சரபுங்கம்
கருண மூலமொ டுறநிறைந் திறைஞ்சினன்
கறைமிடற் றிறைநாட்டக்
கிரணந் தான்சுடக் கிரியிடைத் திருவுடம்
பிழந்துழல் கிழவோனே.'

எனவும் இவை நான்கடியும் எழுத்தொத்துக் குரு லகு ஒவ்வாது வந்த **அளவழிச்சந்தம்.** பிறவும் வந்தவழிக் காண்க.

[அறுசீர் விருத்தம்]

'அருங்கயம் விசும்பிற் பார்க்கும் அணிச்சிறு சிரலை அஞ்சி
இருங்கயம் துறந்த திங்கள் இடங்கொண்டு கிடந்த நீலம்
நெருங்கிய மணிவிற் காப்ப நீண்டுலாய்ப் பிறழ்வ செங்கேழ்க்
கருங்கயல் அல்ல கண்ணே எனக்கரி போக்கி னாரே.' 1

இஃது எழுத்தும், குருவும், இலகுவும் ஒவ்வாது வந்த **அளவழிச்சந்தம்.** பிறவும் வந்தவழிக் கண்டு கொள்க.

இனி, **தாண்டகம்** வருமாறு :

[எண்சீர் விருத்தம்]

'வானிலவி முகிலார்ப்ப மருவி மாண்பால்
மயிலினமாய் வந்துலவச் சுரும்பு பாடத்
தேனுலவு நறுமுல்லை முறுவல் ஈனத்
திசைதிசையிற் றேந்தளவம் சிறந்து பூப்பக்
கானிலவு மலிகொன்றை கனக ஞாலக்
கவினியவாய்ச் சார்ந்ததுகார் கலந்து கண்ணார்
மானிலவு மடநோக்கின் நெடிய வாட்கண்
வனமுலையாய்! மற்றுமனம் வருந்தல் நீயே.'

இஃது இருபத்தேழெழுத்தடி **அளவியற்றாண்டகம்.**

[ஒன்பதின்சீர் விருத்தம்]

'கருநிறப் பொறிமுகக் கட்டடத் தமிழ்செவிக் கழைமருப்
புறுவலிக் கவினுடைக் கரிகளைக் கனவரைக்கட்
சுருணிறத் தெரியுளைச் சுரிமுகத் தொளியுகிர்ச் சுடரெயிற்
றிடிகுரற் றுறுமயிர்த் துனிசினத்* தரிசுழற்றும்

1. சிந். 626.

பி-ம் : * துணிசினத்.

இருளுடைச் சிறுநெறிக் கவலையுட் டனிவரற் கினிவரத்
தகுவதன் றிரவினிற் பகலினிற் பெரிதுநன்றால்
திருநிறப் புரிவளைச் சிறுநுதற் பெரியகட் சிகழிகைப்
புனைகுழற் றுவரிதழ்த் திதலொளிக் கலையிவட்கே.'

இது முப்பத்தேழெழுத்தடி அளவியற்றாண்டகம்.

[பதினொருசீர் விருத்தம்]

'அனவரதம் அமரர் அரிவையரொ டணுகி
அகனமரும் உவகை யதுவிதியி னவரா
வணிதிகழ வருவர் ஒருபால்;
கனவரையொ டிகலும் அகலமொளி கலவு
கரகமல நிலவு கனகமுடி கவினு
கழலரசர் துழனி ஒருபால்;
தனவரத நளின சரணநனி பரவு
தகவுடைய முனிகள் தரணிதொழ வழுவில்
தருமநெறி மொழிவர் ஒருபால்;
சினவரன பெருமை தெரியினிவை யவன
திருவிரவு இளவி தெனிருமொழி அளவு
சிவபுரம தடைதல் திடனே.'

இது நாற்பத்துமூன்றெழெழுத்தடி அளவியற்றாண்டகம்.

[பதினான்கு சீர் விருத்தம்]

'அல்லற் கோடைக் கொல்லைத் தேவாய்
அலைகடலின் அமுதம் அளறுபட அணுகி
அணிபுணரி பருகி அரவலறி மறுக
அதிர்ந்தன கார்முகில்;
மல்லற் செல்வக் கொல்லைப் பாங்கே
மலிபிடவம் அலர வருதளவம் இளக
மயிலினமும் அகவ மதுகரமும் முரல
மகிழ்ந்தன மானினம்;
தொல்லைக் கைம்மாச் செம்மற் றிண்டேர்
துரகமொடு வயவர் அரவமிகு பரவை
தொலையவரன் அழிய நிலமைதுயர் * அடைய
இலங்கிய தோளினாய்!
எல்லைக் காலம் சொல்லிற் றீதாம்
எழுதுகொடி அனைய இடுகுமிடை ஒடிய
எழினிலவு கனகம் இனமணியொ டியைய
இணைந்தெழு கொங்கையாய்!'

இது நாற்பத்தேழெழுத்தடி அளவியற்றாண்டகம்.

**ஒழிந்த அளவியற்றாண்டகமும் வந்தவழிக் கண்டு கொள்க.**

---

பி-ம்: * நிலைமைதுயர்

இனா அளவழித்தாண்டகத்திற் சில வருமாறு :

[எண்சீர் விருத்தம்]

'மூவடிவி னுலிரண்டு சூழ்சுடரும் நாண
முழுதுலக மூடியெழில் முளைவயிர நாற்றித்
தூவடிவி னுலிலங்கு வெண்குடையி னீழற்
சுடரோய்! உன் அடிபோற்றிச் சொல்லுவதொன் றுண்டால் :
சேவடிகள் தாமரையின் சேயிதழ்கள் தீண்டச்
சிவந்தனவோ? சேவடியின் செங்கதிர்கள் பாயப்
பூவடிவு கொண்டனவோ பொங்கொளிகள் சூழ்ந்து?
புலங்கொள்ளா வாலெமக்கெம் புண்ணியர்தம் கோவே!' 1

இஃது எழுத்தும் இலகுவும் ஒவ்வாது வந்த **அளவழித்தாண்டகம்.** பிறவும் அன்ன.

சந்த அடியும் தாண்டக அடியும் விரவி ஓசை கொண்டு வந்தால், அவை **சந்தத்தாண்டகம்** என்றும், **தாண்டகச்சந்தம்** என்றும் வழங்கப்படும்.

என்னே?

[நேரிசை வெண்பா]

'சந்தச் சரணமும் தாண்டகத்தின் பாதமும்
வந்து மயங்கி வழுவிகந்த—செந்தமிழ்நர்
ஈண்டு வடநூற் புலவர் இயற்சந்தத்
தாண்டகம் என்றுரைப்ப தாம்.'

என்பவாகலின்.

அவற்றுட்சில வருமாறு :

[எண்சீர் விருத்தம்]

'அங்குலியின் அவிரொளியால் அருண மாகி
அணியாழி மரகதத்தாற் பசுமை கூர்ந்து
மங்கலஞ்சேர் நூபுரத்தால் அரவம் செய்யும்
மலரடியை மடவன்ன மழலை ஓவாச்
செங்கமல வனமென்று திகைத்த போழ்தில்
தேமொழியால் தெருட்டுதியோ, செலவி னுலோ?
தொங்கலம்பூங் கருங்கூந்தற் சுடிகை நெற்றிச்
சுந்தரி! நிற் பணிவார்க்கென் துணிவு தானே!' 2

இதனுட் சந்த அடியும் தாண்டக அடியும் மயங்கி வந்தவாறு கண்டு கொள்க. பிறவும் அன்ன.

இனி, ஒரு சாரர், சந்த அடி பலவாய் வருவனவற்றைச் **'சந்தத் தாண் டகம்'** என்றும், தாண்டக அடி பலவாய் வருவனவற்றைத் **'தாண்டகச் சந்தம்'** என்றும், சந்த அடியும் தாண்டக அடியும் ஒத்து வருவனவற்றைச் **'சமசந்தத் தாண்டகம்'** என்றும் வழங்குவர். அவை வந்தவழிக் கண்டு கொள்க.

நான்கடியும் ஒத்து வருவனவும், நான்கடியும் ஒவ்வாது வருவனவும், இரண்டடி ஒத்து நான்கடியால் வருவனவும், பிறவாற்றுல் வருவனவும்; **மாராச்சையும், மிச்சாகிருதியும்** முதலாகிய சாதியும்; **ஆரிடமும், பிரத்தாரமும்** முதலாகிய ஆறு பிரத்தியமும்; **பிங்கலமும், மாபிங்கலமும், சயதேவமும்,**

---

1. சூளா. துறவு. 64 ; யா.வி. 25 உரைமேற்.
2. யா.வி. 15 உரைமேற்.

ஞானசாரியமும், சந்திரகோடிச்சந்தமும், மயூரத் திரிசந்தமும், மேடகத் திரிசந்தமும் முதலாகிய சந்தோபிசிதிகளுள்ளும்; பாட்டியல் மரபு, மாபுராணம் முதலாகிய தமிழ் நூலுள்ளும் பகுதியுடையார்வாய்க் கேட்டுக் கொள்க. அவை ஈண்டு உரைப்பிற் பெருகும்.

சந்தமும் தாண்டகமும் என்ற இவற்றுக்கு எழுத்து எண்ணுகின்றுழிக் குற்றுகர இகரங்களை எழுத்தாகவே கொண்டு எண்ணுக.

இனி, காக்கை பாடினியாரும், பாட்டியல் உடையாரும், வாய்ப்பியம் உடையாரும் முதலாகிய ஒருசார் ஆசிரியர், இவற்றையும் இனத்தின்பாற்படுத்து வழங்குவர். தொல்காப்பியனர் முதலாகிய ஒரு சார் ஆசிரியர், இவற்றையும் மேற்கூறப்பட்ட பாவினங்களையும் கொச்சகக்கலிப்பாற்படுத்து வழங்குவர் எனக் கொள்க.

இனி, ஒருசார் வடநூல்வழித் தமிழாசிரியர், 'ஒருபுடை ஒப்புமை நோக்கி இனமெனப்படா; மூவகைப்பட்ட விருத்தங்களுள்ளும், சந்தத் தாண்டகங் களுள்ளுமே பட்டு அடங்கும்,' என்பர். இந்நூலுடையார், காக்கை பாடினியார் முதலாகிய ஒரு சார் ஆசிரியர் மதம் பற்றி எடுத்து ஓதி, இவையும் உடன் பட்டாரெனக் கொள்க.

என்னை?

[நேரிசை வெண்பா]

'ஒருபுடையால் ஒப்புரைப்பின் மற்றுமோர் பாவிற்
கொருபுடையால் ஒக்குமா றுண்டாம்;—இருபுடையும்
ஒப்பித்துக் கோடுமோ, ஒன்றிற்கே சார்த்துதுமோ,
எப்பெற்றிக் கோடும் இனம்?'

இது கடா.

[கலி விருத்தம்]

'குன்றி ஏய்க்கும் உடுக்கையென் றுற்கரி
தொன்றுமோ, சிவப் பென்றுமோ, அவ்விரண்
டொன்றி நின்றவென் றோதுது மோ?' எனின்,
நின்ற தோர்வர லாற்றேடு நிற்குமே.'

இது விடை.

[நேரிசை வெண்பா]

'வெள்ளைக்குச் செப்பல் அகவற் ககவலே
துள்ளலே தூங்கல் கலிவஞ்சிக் குள்ளாகும்
தொன்னூற் புலவர் துணிவெனிற் பாவினமும்
சொன்னூற் புலவர் துணிபு.'

இனி, செய்யுட்களுக்கு வருணம் முதலாயின சொல்லுமாறு:

[நேரிசை வெண்பா]

'தெய்வம் துணையிராசி பக்கம் திணைபொழுது
பொய்யில் புகைவண்ணம் பூச்சாந்து—மையில்கோள்
நாற்கதி சாதி கிழமைநாள் நன்கமையப்
பாற்படுக்க பானுன்கின் பால்.'

'வெண்பா முதலாக வேதியர் ஆதியா
மண்பால் வகுத்த வருணமாம்;—ஒண்பா
இனங்கட்கும் இவ்வாறே என்றுரைப்பர் தொன்னூல்
மனந்தட்பக் கற்றேர் மகிழ்ந்து.' 1

எனக் கொள்க.

---

1. யா.வி. 55, 95 உரை மேற்.

'வெண்பா முதலா நால்வகைப் பாவும்
எஞ்சா நாற்பால் வருணர்க் குரிய.' 1

'பாவினத் தியற்கையும் அதனோ ரற்றே.' 2

'சீரினும் தளையினும் சட்டக மரபினும்
பேரா மரபின பாட்டெனப் படுமே.'

'அவைதிரி பாகின் விசாதி யாகும்.'

என்றார் வாய்ப்பியம் உடையார்* எனக் கொள்க.

இவற்றுக்கு நிறமும், திணையும், பூவும், சாந்தும், புகையும், பண்ணும், திறனும், இருதுவும், திங்களும், நாளும், பக்கமும், கிழமையும், பொழுதும், கோளும், இராசியும், தெய்வமும், திசையும், மந்திரமும், மண்டிலமும், பொறியும், எழுத்து முதலாகிய பண்பும் அறிந்து ஆராதிப்ப இவை யாவர்க்கும் கல்வியும் புலமையுமாக்கி, நன்மை பயக்கும். இவை யெல்லாம் திணைநூலுட் கண்டு கொள்க.

அவற்றுட் சில சொல்லுமாறு :†

[நேரிசை வெண்பா]

வெண்பா முதலாக வேதிய ராதியா
மண்பால் வகுத்த வருணமாம்; ஒண்பா
இனங்கட்கும் இவ்வாறே என்றுரைப்பர் தொன்னூல்
மனந்தட்பக் கற்றோர் மகிழ்ந்து.'

'மீனுடு தண்டேறு வேதிய ராதியா
ஆறாத ஐந்தொன்பா னுயினவும்—தேனுர்
விரைக்கமல வாண்முகத்தாய்! வெள்ளை முதலா
உரைத்தனவும் இவ்வாறே ஒட்டு.' 3

'ஆரல் மகமோ டனுடம் அவிட்டமென்
றீரிரண்டும் ஆதியா வெண்ணியநாள்—சீரிய
வெண்பா அகவல் கலிவஞ்சி என்றுரைத்தார்
எண்பா அறிவோர் எடுத்து.'

'வேதியர்க்கு வெண்மை; வியன்செம்மை வேந்தர்க்கு
நீதிசால் பீதம் நிதிக்கிழவோர்க்—கோதிய
நீலமாம் ஏனை நிலைமையோர்க் கக்குலத்தின்
பாலவாம் பாவிற்கும் அற்று.'

'ஆரம் அரிசந் தனம்பழுப்போ டங்கலவை
பாரியனற் பாநான்கின் பாற்படுத்தார்—சீரிய
வெண்போது செங்கழுநீர் வேரிசேர் சண்பகத்தின்
வண்போது நீல மலர்.'

'மகயிரம் ஆதியா வண்பூரங் காறும்
வகையின் மருட்பாவின் நாளாம்—தகாதென்னெண்
டோராசாந் தேரிரு சந்தச்சென் றெண்போது
தேரிற் பவளம் சிவப்பு.'

---

1. 2 யா.வி. 55 உரைமேற். 3. யா.வி. 95 உரைமேற்.

பி-ம் : * யாப்பியனூலுடையார். † வருமாறு.

[தரவு கொச்சகம்.]

'வேதவாய் மேன்மகனும் வேந்தன் மடமகளும்
நீதியாற் சேர நிகழ்ந்த நெடுங்குலம்போல்
ஆதிசால் பாவும் அரச வியன்பாவும்
ஓதியவா றென்ற மருட்பாவாய் ஓங்கிற்றே.' 1

[நேரிசை வெண்பா.]

'பாநாளாற் பாவோரை தாமொப்பப் பண்புணர்ந்த
மாநா வலர்வகுத்த வாய்மையாற்—பாநான்கின்
மூவிற் றினமும் மொழிப்புத்தேள் உண்மகிழப்
பாவித்துப் பாடப் படும்.'

'பண்பாய்ந்த ஏழு பதினு றிழிபுயர்வா
வெண்பா அடிக்கெழுத்து வேண்டினர்—வெண்பாவின்
ஈற்றடிக் கைந்தாதி ஈரைந் தெழுத்தளவும்
பாற்படுத்தார் நூலோர் பயின்று.' 2

'முற்றுகரந் தானும் முதற்பாவின் ஈற்றடிப்பின்
நிற்றல் சிறுபான்மை நேர்ந்தமையால்—மற்ற
அடிமருங்கின் ஐயிரண்டோ டோரெழுத்து மாதல்
துடிமருங்கின் மெல்லியலாய்! சொல்லு.'

(இதன் ஈற்றடி பதினேரெழுத்து.)

'பாலன் றனதுருவாய் ஏழுலகுண் டாலிலையின்
மேலன்று நீகிடந்தாய் மெய்யென்பர்—ஆலன்று
வேலைநீர் உள்ளதோ, விண்ணதோ, மண்ணதோ?
சோலைசூழ் குன்றெடுத்தாய்! சொல்லு.' 3

'எளிதின் இரண்டடியும் காண்பதற்கென் உள்ளம்
தெளியத் தெளிந்தொழியும் செய்வே—களியிற்
பொருந்தா தவனைப் பொரலுற் றரியாய்
இருந்தான் திருநாமம் எண்ணு.' 4

இப் பொய்கையார் வாக்கினுள் முற்றியலுகரம் ஈறாய் வந்தன. பிறவும் வந்தவழிக் கண்டுகொள்க.

[நேரிசை வெண்பா.]

'முல்லை குறிஞ்சி மருதத்தின் பின்னெய்தல்
எல்லையில் பாக்கட் கியற்றிணையாம்;—முல்லை
குறிஞ்சி யெனவிரண்டு குன்று மருட்கென்
றறைந்தார் வியன்புலவோர் ஆய்ந்து.'

எனவும்,

'முல்லை அந்தணன்; குறிஞ்சி அரசன்;
மல்லல் மருதம் வாணிகன் என்ப;
நெய்தல் சூத்திரன்; நினையுங் காலைப்
பல்குலம் என்ப பாலை யானே.'

எனவும்,

1. யா.வி. 55 உரை மேற். 2. 3 யா.வி. 62 உரைமேற்
3, 4 திவ். இயற்பா. மு.தி. 69, 51; * யா.வி. 57 உரைமேற்.

[நேரிசை வெண்பா.]

'பண்ணும் திறமும்போல் பாவும் இனமுமாம்
வண்ண விகற்ப வகைமையால்—பண்மேல்
திறம்விளரிக் கில்லதுபோல் செப்பல் அகவல்
இசை மருட்கும் இல்லை இனம்.' 1

எனவும்,

'பாடப் படுவோர்க்கும் பாடு மவன்றனக்கும்
நாடப் படுநயங்கள் நாடாதே—பாடுமேற்
காகப்புட் சேரக் கனிபனையின் வீழ்வதுபோல்
ஆகித்தற் சேரும் அலர்.'

எனவும்,

'நாற்பா நடைதெரிந்த நன்னூற் பெரும்புலவர்
நூற்பால் நயந்த நுழைபொருளைப்—பாச்சார்த்திப்
பாவித்துப் பார்மேல் நடாத்தப் படருமே
நாவித் தகத்து நகம்.'

எனவும்,

[கலி விருத்தம்.]

'புலந்துறை போகிய நலவர் நாவினுட்
கலந்துறை கலைமகள் கவிதை கந்தமா
நிலந்தொழப் புறப்படும் நிலையள் ஆகுமிவ்
விலங்கிழை பெருமையை எண்ண வேண்டுமோ!'

எனவும்,

[கட்டளைக் கலித்துறை.]

'உள்ளப் பரவையி னூல்வரை நாட்டியொண் கேள்விதம்பா
எள்ளப் படாமை இயையக் கடையின் இசைபெருக்கும்
வள்ளற் குணநாவர் வானோர் களைவள மைப்படுக்கும்
வெள்ளைக் கவிதை அமிழ்தமெல் லார்க்கும் வெளிப்படுமே.'

'அகமுத லாய பொருள்கவிக் காவி அணிதழைப்பத்
தகமுத லோர்சொற்ற பாவின சட்டகக் கட்டுரையே
நிகழ்தரும் ஓசை இயனடை யானெடு நீர்வரைப்பிற்
புகழ்தரு வாய்மைப் பயன்வியன் சீர்த்திப்புத் தேளுலகே.'

எனவும் இவற்றை விரித்து உரைத்துக்கொள்க.

அறம் பொருள் இன்பம் வீடு பேறு ஆமாறு சொன்ன நூல்களுள்ளும், அவை சார்பாக வந்த சோதிடமும், சொகினமும், வக்கிங்கிரந்தமும், மந்திரவாதமும், மருத்துவநூலும், சாமுத்திரியமும், நிலைத்துநூலும், ஆயுதநூலும், பத்து விச்சையும், ஆடைநூலும், அணிகலநூலும், அருங்கலநூலும் முதலாயவற்றுள்ள மறைப்பொருள் உபதேசமும், வல்லாராயும் கவிப் பெருமையும், சாவவும் கெடவும் பாடுமாறும் மனத்தது பாடுமாறும், பாடப்படுவோர்க்கு வரும் நன்மையும் தீமையும் அறியுமாறும் வல்லார்வாய்க் கேட்டு உணர்ந்து கொள்க. ஈண்டு உரைப்பிற் பெருகும்.

இனிப் பாவினங்களுட் சமக்கிரதமும் வேற்றுப்பாடையும் விரவி வந்தால், அவற்றையும் அலகிட்டுப் பாச்சார்த்தி வழங்கப்படும். அவை குறுவேட்டுவச் செய்யுளும், உலோகவிலாசனியும், பொருவநல்லூர்ப் பாசாண்டமும் முதலாக உடையன எனக் கொள்க.

---

1. யா.வி. 55, 56 உரைமேற்.

[நேரிசை வெண்பா.]

'செந்தமிழ்ச் செய்யுட் டெரிந்துணர்ந்து செந்தமிழ்க்கண்
வந்த வடமொழியை மாற்றுதே—சந்தம்
வழுவாமற் கொண்டியற்று மாண்பினுர்க் குண்டே
தழுவாது நிற்குந் தமிழ்?'

பாக்கட்கு ஓசை பிறக்குமாறு உரைத்துக்கொள்க. அவை சொல்லுமாறு:

[குறள் வெண்பா.]

'வெண்சீரிற் செப்பல் பிறக்கும்; விகற்பத்துப்
பண்பாய்ந்த துள்ளல் படும்.'

'இயற்சீருள் தோன்றும் அகவல்; அவற்றின்
விகற்பத்து வெள்ளோசை யாம்.'

'தன்சீருள் தூங்கல் கலியடியின் கண்டக்கால்
வஞ்சிக் கிசையாய் வரும்.'

'மயங்கி வருவனவும் வல்லோர் வகுப்ப
மயங்காமற் கொண்டுணரற் பாற்று.'

என இவற்றை விரித்து உரைத்துக்கொள்க.

[நேரிசை வெண்பா.]

'தலைவன் தலைமுதலாத் தார்வேந்தன் காறும்
மலைமுதலா மாநாய்கன் மாதே!—நிலமுழுதும்
மன்னர்கோ ளூரு மறைமுதலா வஞ்சிக்கோன்
தன்முதலோர்த் தந்தானும் தான்.'

'ஈரிரண்டும் ஏழெழுத்தும் ஈரைந்தும் மூவைந்தும்
பாரியன்ற நாற்சீர் பதினெட்டும்—ஏர்பாய்
விளையும் பதினேழ் நிலத்துக் குறள்சிந்
தளவு நெடில்கழியோ டைந்து.'

'ஐந்தும் அகவற்கு வெள்ளைக் களவடியும்
சிந்து நெடிலடிக்கட் டொல்லிரண்டும்—வந்த
தளவிரண்டும் ஆன்ற நெடில்கழியும் ஒண்பாற்
றளசிதைவில் தண்டாக் கலிக்கு.' 1

'ஈரிரண்டோ டீரா றெழுவாய் இறுவாயாச்
சேரும் எழுத்திருசீர் வஞ்சிக்காம்;—ஓரும்
நெடிலடிக்கு நேர்ந்தனவும் மூவொருசீர் வஞ்சிக்
கடிவகுத்தார் எட்டாதி ஆய்ந்து.' 2

[குறள் வெண்பா.]

'ஐந்தாதி ஐயிரண் டீரும் அறுநிலமும்
வந்தவடி வெள்ளைக் களவு.'

---

1 யா. வி 25 உரைமேற். 2, யா. வி. 25, 90 உரைமேற்.

[நேரிசை வெண்பா.]

'பண்பாய்ந்த ஏழு பதினு றிழிபுயர்வா
வெண்பா அடிக்கெழுத்து வேண்டினர்—வெண்பாவின்
ஈற்றடிக் கைந்தாதி ஈரைந் தெழுத்தளவும்
பாற்படுத்தார் நூலோர் பயின்று.'

இவற்றின் கருத்து: 'நாலெழுத்து முதலாகிய மூன்றும் குறளடி; ஏழெழுத்து முதலாகிய மூன்றும் சிந்தடி; பத்தெழுத்து முதலாகிய ஐந்தும் அளவடி; பதினைந்தெழுத்து முதலாகிய மூன்றும் நெடிலடி; பதினெட் டெழுத்து முதலாகிய மூன்றும் கழிநெடிலடி.

'அவற்றுள் ஐந்தடியாலும் ஆசிரியம் வரப்பெறும். சிந்தடி மூன்றடியாலும், அளவடியாலும், நெடிலடியின் முதல் இரண்டடியாலும் வெண்பா வரப் பெறும். வெண்பாவின் ஈற்றடி, ஐந்தெழுத்து முதலாகப் பத்தெழுத்தின் காறும் உயர்ந்த ஆறு நிலத்தானும் வரப்பெறும். பதின்மூன்றெழுத்து முதலாக இருபதெழுத்தின்காறும் உயர்ந்த எட்டு நிலத்தானும் **இலக்கணக் கலிப்பா** வரப்பெறும். இலக்கணக் கலிப்பா அல்லாதன, மிக்கும் குறைந்தும் வரப்பெறும். இருசீரடி வஞ்சிப்பா நான்கெழுத்து முதலாகப் பன்னீரெழுத்தின்காறும் உயர்ந்த ஒன்பது நிலத்தானும் வரப்பெறும். முச்சீரடி வஞ்சிக்கு எழுத்து எண்ணி வகுத்திலரேனும், ஏழெழுத்து முதலாகப் பதினேழெழுத்தின்காறும் உயர்ந்த பத்தடியாலும் வரப்பெறும். முச்சீரடி யெல்லாம் ஒரு நிலமாகக் கொண்டு, இரு சீரடி வஞ்சி நிலம் ஒன்பதோடும் கூட்டி, வஞ்சி நிலம் பத்து என்ப. அல்லாது இருபது எழுத்தின் மிக்கு வரும் நாற்சீரடிப்பா இல்லை. நாற்சீரடிப் பாவினங்களின் அடி இருபது எழுத்தின் மிக்கு, இருபத்து நான்கு எழுத்தின்காறும் வரப்பெறும்,' என்பது.

வெண்பா ஆசிரியங்களுள்ளும் இலக்கணக் கலிப்பாவினுள்ளும் வரும் சீர் ஐந்தெழுத்தின் மிகப்பெறு. வஞ்சியுள் வரும் சீர் ஆறு எழுத்து ஆகவும் பெறும்; சிறுமை மூன்று எழுத்து ஆவது சிறப்புடைத்து; இரண்டெழுத்தினுல் அருகி வரப்பெறுமாயினும் எனக் கொள்க.

என்னை?

[நேரிசை வெண்பா.]

'அளவியற்பா ஆன்றசீர் ஐந்தெழுத்திற் பல்கா;
வளவஞ்சிக் காறுமாம் மாதோ;—வளவஞ்சிச்
சின்மையொரு மூன்ருகும் என்பர் சிறப்புடைமைத்
தன்மை தெரிந்துணர்வோர் தாம்.' 1

என்பவாகலின்.

அவற்றிற்குச் செய்யுள் வருமாறு:

[நேரிசை ஆசிரியப்பா.]

குறளடி
4—6

பேர்ந்து சென்று சார்ந்து சார்ந்து [4]
தேர்ந்து தேர்ந்து மூசி நேர்ந்து [5]
வண்டு சூழ விண்டு வீங்கி [6]

சிந்தடி
7—9

நீர்வாய் கொண்டு நீண்ட நீலம் [7]
ஊர்வாய் ஊதை வீச ஊர்வாய் * [8]
மணியேர் † நுண்டோ டொல்கி மாலே [9]

---

1 யா.வி. 25 உரைமேற்.
பி-ம்: * ஈர்வாய். † மதியேர்.

அளவடி
10—14

நன்மணம் கமழும் பன்னெல் ஊர ! [10]
அமையேர் மென்றோள் ஆயரி நெடுங்கண் [11]
இணையீ ரோதி ஏந்திள வனமுலை [12]
இறும்பமென் மலரிடை யெழுந்த மாவின் [13]
நறுந்தழை துயல்வரூஉம் செறிந்தே ரல்குல் [14]

நெடிலடி
15—17

அணிநடை அசைஇய அரியமை சிலம்பின் [15]
மணிமருள் வணர்குழல் வளரிளம் பிறைநுதல் [16]
ஒளிநிலவு வயங்கிழை உருவுடை மகளொடு [17]

கழிநெடி
லடி
18—20

நளிமுழவு முழங்கிய அணிநிலவு நெடுநகர் [18]
இருந்தளவு மலரளவு சுரும்புலவு நறுந்தொடை [19]
கலனளவு கலனளவு நலனளவு நலனளவு [20]
பெருமணம் புணர்ந்தனை என்பவஃ
தொருநீ மறைப்பின் ஒழிகுவ தன்றே.' 1

என்னும் ஆசிரியம், நான்கெழுத்து முதலாக இருபது எழுத்தின்காறும் உயர்ந்த பதினேழ் நிலமும் பெற்று, குறளடி முதலாகிய ஐந்தடியாலும் வந்தது.

இவ்வெழுத்துக்களால் வெண்பா வருமாறு :

[இன்னிசைச் சிந்தியல் வெண்பா]

'மட்டுத்தான் உண்டு மதஞ்சேர்ந்து விட்டுக் [7]
களியானை கொண்டுவா என்றான்—களியானைக்
கியாரோ எதிர் நிற்பவர் !'

இஃது ஏழெழுத்தடி வெண்பா.

'ஆர்த்தார்த்துக் கண்சேந்து வேர்த்து விரைந்துதன் [8]
பொன்னோடை யானையின் மேற்கொண்டான்—என்னுங்கொல்
மன்னர் உறையும் மதில் !'

இஃது எட்டெழுத்தடி வெண்பா.

[குறள் வெண்பா]

'சென்று முகந்து நுதலாட்டி மாறேற்று [9]
வென்று பெயர்ந்தானெங் கோ.'

இஃது ஒன்பதெழுத்தடி வெண்பா.

இவை மூன்றும் சிந்தடி.

---

1. யா.வி. 95 உரைமேற்.

[நேரிசை வெண்பா]

'நின்று திரியும் சுடருளை நில்லாது [10]
வென்று திரிதருவேன் யானுளனுச்—சென்றோங்கி
மண்ணக மார்பின் மறையலோ மற்றினியென்
கண்ணகத்துப் பட்ட படி.'

இது பத்தெழுத்தடி வெண்பா.

'இற்றேன் உடம்பின் எழினலம் என்றென்று [11]
பற்றுவிட் டேங்கும் உயிர்போல—மற்று
நறுமென் கதுப்பினுள் தோடோயின் நண்ணும்
மறுநோக் குடையவாம் கண்.'

இது பதினோரெழுத்தடி வெண்பா.

'புறத்தன நீருள பூவுள * மாவின் [12]
திறத்தன கொற்சேரி யவ்வே—அறத்தின்
மகனை முறைசெய்தான் மாவஞ்சி யாட்டி
முகனை முறைசெய்த கண்.' 1

இது பன்னிரண்டெழுத்தடி வெண்பா.

'இரியன் மகளிர் இலைஞெமலுள் ஈன்ற [13]
அரியிளஞ் † செங்காற் குழவி அருகிருந் ‡
தாமன்பா ராட்ட உறங்கிற்றே § செம்பியன்றன்
நாமம்பா ராட்டாதார் நாடு.' 2

இது பதின்மூன்றெழுத்தடி வெண்பா.

'மணிமிடைந்த பைம்பூண் மலரணிதார் மார்பன் [14]
அணிமகர வெல்கொடியா னன்னுன்—தனிநின்று
தன்னை வணங்காமைத் தானணங்க வல்லாளே **
என்னை அணங்குறியி னுள்.' ††

இது பதினான்கெழுத்தடி வெண்பா.

இவை ஐந்தும் அளவடி.

[நேரிசை வெண்பா]

முகமறிந்தார் மூதுணர்ந்தார் முள்ளெயிற்றூர் காமம் [15]
அகமறையாத் தாம்வாழ மென்றோர்க்—ககமறையா
மன்னேநீ வார்குழை வையெயிற்றாய்! என்னேமற்
றென்னையாம் வாழும் எனல்!'

இது பதினைந்தெழுத்தடி வெண்பா.

[குறள் வெண்பா]

'படியுடையார் பற்றமைந்தக் கண்ணு மடியுடையார் [16]
மாண்பயன் எய்தல் அரிது.' 3

இது பதினாறெழுத்தடி வெண்பா.

இவை இரண்டும் நெடிலடி.

---

1. தண்டி. 40 மேற். 2. முத்தொள்ளாயிரம். 3 குறள் 606

பி-ம்: * வூரண நீரன. † அரிவிரவும். ‡ அரையிருளில். § உறங்குமே.
** வணங்காமற் றுன்வணங்க வல்லானே †† என்னை வணிங்குரியி னுன்.

இனி, வெண்பாவின் ஈற்றடிக்கு இலக்கியம் வருமாறு :

[குறள் வெண்பா]

'பிண்டி மலர்மேற் பிறங்கெரியுட் கந்துருள்போல்
வண்டு சுழன்று வரும்'. [5]

இஃது ஐந்தெழுத்து ஈற்றடி வெண்பா.

'நிலவரை நீள்புக ழாற்றிற் புலவரைப்
போற்றாது புத்தேள் உலகு.' 1 [6]

இஃது ஆறெழுத்து ஈற்றடி வெண்பா.

'உரைப்பார் உரைப்பவை எல்லாம் இரப்பார்க்கொன்
றீவார்மேல் நிற்கும் புகழ்.' 2 [3]

இஃது ஏழெழுத்து ஈற்றடி வெண்பா.

'புகழ்பட வாழாதார் தந்நோவார் தம்மை
இகழ்வாரை நோவ தெவன்?' 3 [8]

இஃது எட்டெழுத்து ஈற்றடி வெண்பா.

'இலனென்னும் எவ்வம் உரையாமை ஈதல்
குலனுடையான் கண்ணே உள.' 4 [5]

இஃது ஒன்பதெழுத்து ஈற்றடி வெண்பா.

'குணம்புரியா மாந்தரையும் கூடுமால் என்னே
மணங்கமழும் தாமரைமேல் மாது!' [10]

இது பத்தெழுத்து ஈற்றடி வெண்பா.

ஒழிந்தனவும் வந்தவழிக் கண்டு கொள்க.

இனி, ஒருசார் ஆசிரியர், ஈற்றடி ஒழித்து ஏனையடி எழுத்து ஒத்து வருவனவற்றைக் '**கட்டளை வெண்பா**' என்றும், ஒவ்வாது வருவனவற்றைக் '**கலம்பக வெண்பா**' என்றும், ஈற்றடி எழுத்தும் ஏனையடி எழுத்தும் ஒத்து வருவனவற்றைச் '**சமநடை வெண்பா**' என்றும், ஈற்றடி எழுத்தினோடு ஏனையடி எழுத்துச் சில ஒத்தும் ஒவ்வாதும் வருவனவற்றைச் '**சமவியல் வெண்பா**' என்றும், ஈற்றடி எழுத்து மிக்கு ஏனையடி எழுத்துக் குறைந்து தம்முள் ஒவ்வாது வருவனவற்றை '**மயூரவியல் வெண்பா**' என்றும் வழங்குவர்.

அவற்றுட் சில வருமாறு :

[கட்டளை வெண்பா]

'நடைக்குதிரை ஏறி நறுந்தார் வழுதி
அடைப்பையா! கோறு,' எனலும்—அடைப்பையான்
கொள்ளச் சிறுகோல் கொடுத்தான் றலைபெரினும்
எள்ளா தியங்காண் டலை.' 5

எனவும்,

---

1 குறள். 234. 2 குறள். 232. 3 குறள். 237. 4 குறள். 223.
5 யா. வி. உரைமேற்.

'வெறிகமழ் தண்புறவின் வீங்கி உகளும்
மறிமுலை உண்ணுமை வேண்டிப்—பறிமுன்கை
அஉ அறியா அறிவில் இடைமகனே!
நொஅலையல் நின்னட்டை நீ.' 1

எனவும்,

'மாவடு வென்னும் மலர்புரை கண்ணினய்!
பாவெடுத்துப் பாடும் பயனேக்கி—மேவி
எடுத்த இனத்தினல் இன்பஞ்சொற் சேரத்
தொடுத்த மொழிவ தமிழ்.' * 2

எனவும்,

'கரவொடு நின்ருர் கடிமனையிற் கையேற்
றிரவொடு நிற்பித்த தெம்மை—அரவொடு
மோட்டாமை பூண்ட முதல்வனை முன்வணங்க
மாட்டாமை பூண்ட மனம்.' 3

எனவும்,

'நற்கொற்ற வாயில் நறுங்குவளைத் தார்கொண்டு
சுற்றும்வண் டார்ப்பப் புடைத்தாளே—பொற்றேரான்
பாலைநல் வாயின் மகள்.' 4

எனவும்,

'இன்னமிழ்தம் ஊட்டி எழில்வளைசேர் முன்கைக்கொண்
டென்னையர்பேர் சொல்லென் றிரந்தாலும்—தென்னயம்பைச்
செஞ்சுடர்வாள் வெஞ்சினவேற் சீர்ச்சேந்தன் என்னுமால்
கிஞ்சுகவாய் அஞ்சொற் கிளி.'

எனவும் இவை ஈற்றடியல்லா ஏனையடியெல்லாம் எழுத்து ஒத்து வந்தமையாற் கட்டளை வெண்பா.

[கலம்பக வெண்பா]

'மந்தரமும் மாகடலும் மண்ணுலகும் விண்ணுலகும்
அந்தரமும் எல்லாம் அளப்பரிதே—இந்திரர்கள்
பொன்சகள ஆசனமாப் போர்த்து மணிகுயின்ற
இன்சகள ஆசனத்தான் ஈடு.' 5

எனவும்,

'தானேரும் எம்முள்ளி வாராது தானண்ணி
வானேரை வாட உரப்புங்கொல்—வானேர்
முடிக்கோடி தேய்த்தான் மூவழிதம் தந்தான்
அடிக்கோடி மீளாத அன்பு?'

எனவும் இவை எல்லா அடியும் எழுத்து ஒவ்வாது வந்தமையால், கலம்பக வெண்பா.

[சமநடை வெண்பா]

'சென்று புரிந்து திரிந்து செருவென்றுன்
மின்றிகழும் வெண்குடைக்கீழ் வேந்து.'

---

1. யா. வி. 7, 37 உரை மேற். 2. இடைக்காடனர் பாடல்.
3. தண்டி. 62. மேற். 4. யா.வி. 59 உரை மேற். 5. யா.வி. 57 உரை மேற்.
பி-ம்: * தமிழ்து.

இஃது ஈற்றடியும் ஏனை அடியும் எழுத்து ஒத்து வந்தமையால், சமநடை வெண்பா.

சமவியல் வெண்பா வந்தவழிக் கண்டுகொள்க.

[மயூரவியல் வெண்பா]

'குருந்து குளிர்ந்து மயங்கு குவட்டு
மருந்து கொணர்ந்து மகிழ்ந்து நமது
பெரும்பிணியை நீக்குவதாம் பீடு.'

இஃது ஈற்றடி மிக்கு, ஏனை அடி குறைந்து, தம்முள் ஒவ்வாது வந்தமையால், மயூரவியல் வெண்பா.

இனி, பதின்மூன்று எழுத்தடி முதலாகிய இலக்கணக்கலி எட்டும் வருமாறு :

[இலக்கணக் கலிப்பா]

1. 'அன்றுதான் குடையாக வின்றுநளி நீர்சோரக்
குன்றெடுத்து மழைகாத்த கோலப்பூண் மார்பினோய் !'

இது பதின்மூன்று எழுத்தடிக் கலிப்பா.

2. 'மாசற்ற மதிபோல வனப்புற்ற முகங்கண்டு [14]
தூசுற்ற துகின்மருங்கிற் றுடிநடு வெனத்தோன்றி'

இது பதினான்கு எழுத்தடிக் கலிப்பா.

இவை இரண்டும் அளவடி.

1. 'ஊனுடை உழுவையின் உதிர்ந்தோய் உகிர்போல
வேனிலை எதிர்கொண்டு முருக்கெல்லாம் அரும்பினவே.'

இது பதினைந்து எழுத்தடிக் கலிப்பா.

2. 'வாயாநோய் மருந்தாகி வருந்தியநாள் இதுவன்றோ ?'

இது பதினாறெழுத்தடிக் கலிப்பா.

3 'மாவலிசேர் வரைமார்பின் இகல்வெய்யோன் மனமகிழ'

இது பதினேழெழுத்தடிக் கலிப்பா.

இவை மூன்றும் நெடிலடி.

1. 'அறனின்றமிழ் கையொழியான் அவலங்கொண் டதுநினையான்'

இது பதினெட்டெழுத்தடிக் கலிப்பா.

2. 'உருபனிகண் உறைப்பவுநீ ஒழிவொல்லாய் செலவழித்தல்'

இதி பத்தொன்பது எழுத்தடிக் கலிப்பா.

3. 'நிலங்கிளையா நெடிதுயிரா நிறைதளரா நிரைவளையாள்
கலந்திருந்தார் கதுப்புளரார் கயல்கடிந்த கருந்தடங்கண்'

இஃது இருபதெழுத்தடிக் கலிப்பா.

இவை மூன்றும் கழிநெடிலடி.

இவையெல்லாம் குற்றிகர குற்றுகரங்களும், ஒற்றும், ஆய்தமும் நீக்கி எழுத்தெண்ணி முதலடியே கொள்க.

இனி, நாலெழுத்து முதலாகப் பன்னிரண்டு எழுத்தின் காறும் உயர்ந்த ஒன்பது நிலமும் பெற்ற இருசீரடி வஞ்சிப்பா வருமாறு :

[வஞ்சிப்பா]

1. 'கல்சேர்ந்து கால்தோன்று [4]
மல்குநீர் புனல்பரப்பும்'

இது நாலெழுத்து இருசீரடி வஞ்சிப்பா.

2. 'தண்பால் வெங்கள்ளின்' [5]

இஃது ஐந்தெழுத்து இருசீரடி வஞ்சிப்பா.

3. 'கண்டுதண்டாக் கட்கின்பத் [6]
துண்டுதண்டா மிகுவளத்தான்'

இஃது ஆறெழுத்து இருசீரடி வஞ்சிப்பா.

இவை மூன்றும் குறளடி.

1. 'காழ்வரக் கதம்பேணுக் [7]
கடுஞ்சினத்துக் களிற்றெருத்தின்' 1

இஃது ஏழெழுத்து இருசீரடி வஞ்சிப்பா.

2. 'தாழிரும் பிணர்த்தடக்கைத்
தண்கவுள் இழிகடாத்து.' 2

இஃது எட்டெழுத்து இருசீரடி வஞ்சிப்பா.

3. 'நிலனெளியத் தொகுபீண்டி' 3

இஃது ஒன்பது எழுத்து இருசீரடி வஞ்சிப்பா.

இவை மூன்றும் சிந்தடி.

1. 'அகன்ஞாலம் நிலைதுளங்கினும்
பகன்ஞாயிற் றிருள்பரப்பினும்'

இது பத்தெழுத்து இருசீரடி வஞ்சிப்பா.

2. 'தாள், களங்கொளக் கழல்பறைந்தன.' 4

இது பதினேரெழுத்து இருசீரடி வஞ்சிப்பா.

3. 'குருகிரிதலின் கிளிகடியினர்.'

இது பன்னிரண்டெழுத்து இருசீரடி வஞ்சிப்பா.

இவை மூன்றும் அளவடி.

இனி எட்டெழுத்து முதலாகப் பதினேழெழுத்தின் காறும் உயர்ந்த முச்சீரடி வஞ்சிப்பா வருமாறு :

1. 'அள்ளற் பள்ளத் தகன் சோணட்டு' 5

எனவும்,

2. 'வேங்கை வாயில் வியன்குன்றூர்' 6

எனவும் இவை எட்டெழுத்து முச்சீரடி வஞ்சிப்பா.

'மதுவிரவிய மலர்கஞலிய வயற்றாமரை'

இது பதினேழெழுத்து முச்சீரடி வஞ்சிப்பா.

---

1. யா.வி. 93 உரை மேற். 'தாழிரும் பிணர்த்தடக்கை' என்னும் குறளடி வஞ்சிப்பாவின் அடி 3, 4. 2. யா.வி. 93 உரை மேற். 3. யா.வி. அடி 5. 4. புறம். 4 : 3. 5, 6. யா.வி. 94 உரை மேற்.

'கொடிவாலன குருநிறத்தன குறுந்தாளன' 1

இதனுட் பதினாறும், பதினைந்தும், பதினான்கும், பதின்மூன்றும் எழுத்து வந்தன.

ஒன்பதும், பத்தும், பதினொன்றும், பன்னிரண்டும் ஆகிய எழுத்தான் வந்த முச்சீரடி வஞ்சிப்பா வந்தவழிக் கண்டுகொள்க.

எல்லா அடிகளும் எழுத்து ஒத்து வரும் கலிகளைக் **கட்டளைக்கலி** என்றும், ஒவ்வாது வருவனவற்றைக் **கலம்பகக்கலி** என்றும் வழங்குவர். இவ்வாறே **கட்டளை ஆசிரியம், கலம்பக ஆசிரியம்** என்றும்; **கட்டளை வஞ்சி, கலம்பக வஞ்சி** என்றும் வழங்கப்படும்.

[கலி விருத்தம்]

'கட்டளை கலம்பகம் சமநடை சமவியம்
மட்டவிழ் குழலினாய்! மயூர சமவியம்
ஒட்டினார் எழுத்தினால் ஒட்டி ஒண்டமிழ்க்
கிட்டமா யவர்கள்வெண் பாவின் பேர்களே.'

இதனை விரித்து உரைத்துக்கொள்க.

இனி, இருபது எழுத்தின் மிக்க நாற்சீரடிப் பாவினம் வருமாறு :

[தரவு கொச்சகம்]

'கொடிகொடியொடு மிடைவனவுள குடைகுடையொடு குடைமிசை [யுள
கடிநறுமலர் சொரிவனவுள கடிமதிலுள கவரியுமுள
அடிவழிபடும் அமரருமுளர் அருளாழியொ டரியணையுள
இடிமுரசமும் அதிர்வனவுள இனிதினிதவ ரதுதுறவுமே.'

என வரும்.

இனிச் சந்தங்கட்கும் தாண்டகங்கட்கும் பிரத்தாரம் முதலாகிய ஆறு பிரத்தியமும் சொல்லப்படும்.
என்னை ?

[நேரிசை வெண்பா]

'சந்தமும் தாண்டகமும் தம்முள் எழுத்திலகு
வந்த முறைமை வழுவாவேல்—முந்தை
அளவியலாம் என்றுரைப்பர்; அவ்வாறன் றாகில்
அளவழி யாமென்ப ரால்.' 2

இதனை விரித்து உரைத்துக்கொள்க.

அளவியற்சந்தத்திற்கும் அளவியற்றாண்டகத்திற்கும் பிரத்தாரமும் நட்டமும் உத்திட்டமும், ஒன்று இரண்டு மூன்று என்னும் முறைமையான் ஏறச்சொன்ன இலகு செய்கையும் எண்ணும் அலகிட்டு, நில அளவையும் எண்ணும் இவ்வாறு பிரத்தியமும் சொல்லப்படும்.

பிரத்தரிக்கும்படி :

[குறள் வெண்பா]

'குருக்கீழ் இலகுவாம் ஏனைய ஒப்பாம்
குருந்தொகையாம் ஆதிக்கட் கூறு'

இது பிரித்தரிப்பதற்கு இலக்கணம்.

---

1. யா. வி. 90 உரைமேற். 2. யா.வி. பக்.

'பிரத்தாரம்' எனினும், 'உறழ்ச்சி' எனினும் ஒக்கும். 'நட்டம்' என்பது, அவ்வாறு பிரத்தரிக்கப்பட்டனவற்றுள் இனைத்தாவது என்று அறிவதன் அலகு நிலை அறியேன் என்றால், சொல்லப்பட்ட பிரத்தார எண்ணினை அரை செய்து ஓர் இலகு வைத்துப் பாகஞ்செய்யப் போதாதவழி ஆண்டு ஓர் உருவிட்டுப் பாகம் செய்து, ஆண்டு ஒரு குரு இடுக. இவ்வாறே பிரத்தார அடி எழுத்துள் ளளவும் வைக்க.

அதற்கு இலக்கணம் :

[நேரிசை வெண்பா]

இனைத்தாவ தென்றறிவன் ஈடறியேன் என்றால்
அனைத்தரைசெய் தாண்டிலகு வைக்க—நினைத்ததனை
விள்ளத்தான் ஆகாதேல் வேறோர் உருவிட்டுக்
கொள்ளத்தான் ஆகும் குரு.'

இது நட்டத்திற்கு இலக்கணம். 'நட்டம்' எனினும் 'கேடு' எனினும் ஒக்கும்.

இனி, 'பிரத்தரித்தன் அலகிருக்கை அறிவேன்; எனைத்தாவது என்று அதன் எண் அறியேன்' என்றால், அதன் பிரத்தாரத்தின்மேல் ஒன்று, இரண்டு, நான்கு, எட்டு, பதினாறு என்று இவ்வாறே ஒன்று முதலாக இரட்டித்தது முடிவளவும் ஏறவிட்டு, இலகுவின்மேல் நின்ற இலக்கங்களைக் கூட்டி, அதனோடு ஒரு குரு இட்டு, அதன் அளவினால் இனைத்தாம் விருத்தம் என்று சொல்லுக.

இதற்கு இலக்கணம் :

[நேரிசை வெண்பா]

'ஒன்றிரண்டு நான்கெட்டென் றுள்ளளவும் ஓர்த்திரட்டித்
தென்றும் இலகுவின்மேல் எண்களோ—டொன்றிட்டு
வைத்த முறைமை வழுவாமைக் கட்டுரைப்ப
துத்திட்டம்; சுட்டெனினும் ஒன்று.'

இனி, ஓர் இலகு முதலாவுடைய விருத்தம் இன்னதனை என்று விகற்பித்துச் சொல்லுமாறு :

விருத்த அடியுள் எழுத்து எனைத்து உள அவ்வனைத்தும் ஒன்று முதல் ஒன்று உத்தரம் அனுலோமமாக மேல் ஏறவிட்டுப் பின்னை முதல் இருந்த ஒன்றினைச் சிதையாதே அதனை இரண்டாவதனிற் கூட்டி, இரண்டாவதனை மூன்றாவதனிற் கூட்டி, மூன்றாவதனை நான்காவதனிற் கூட்டி, இவ்வாறே இறுதி ஒழித்து இறுதி அல்லனவும் கூட்டி, மீட்டும் அதன் அயல் அளவும் கூட்டி, இவ்வாறே கீழ் முதல் வைத்த ஒன்றின் முதல் அளவு அயல் அளவும் கூட்டி, முறையானே மேனின்றும் கீழ் இழிய ஒன்று முதல் ஒன்று உத்தரமாக இலக்கம் இட்டு, மேலைக் குப்பையினின்றும் கீழை ஒன்றின்காறும் நிறுத்தி, மேலைக் குப்பையில் விருத்தம் ஓர் இலகு உடையனவாகவும், இரண்டாம் குப்பையில் விருத்தம் இரண்டிலகு உடையனவாகவும், மூன்றாம் குப்பையில் விருத்தம் மூன்றிலகு உடையனவாகவும், நான்காம் குப்பையில் விருத்தம் நான்கிலகு உடையனவாகவும் இவ்வாறே கடைக்கண் நின்ற முற்றிலகு விருத்தத்தளவும் ஒன்று உத்தரமாக எண்ணிக்கொள்க. எல்லாக் குப்பை இலகு விருத்தங்களையும் உடன் கூட்டிப் பின்னை ஒரு முழுக் குரு விருத்தம் உடன் கூட்டிச் சொல்ல, அச்சாதியிற் பிறந்த விருத்தங்கள் எல்லாவற்றிற்கும் தொகையாம்.

அதற்கு இலக்கணம் :

[நேரிசை வெண்பா]

'ஒன்றிரண்டு மூன்றுநான் கைந்தாறே ழெட்டொன்ப
தென்றுயர் விச்சை அளவெரீஇ—ஒன்றிலொன்
றிட்டிட் டிறுதி ஒழித்தொழிய ஏகாதி
ஒட்டி இலகுகொண் டொட்டு.'

இனி இவ்விருத்தத்தில் விரிந்த விருத்தச் சாதியில் இன்னதனை விருத்தம், இன்னதனை எழுத்து, இன்னதனைக் குரு, இன்னதனை இலகு, இன்னதனை மாத்திரை என்று வரையறுத்துக் கூறுமாறு :

ஒரு விருத்தத்தினைப் பிரத்தார முறையால் உறழ்ந்துபெற்ற விருத்தங்களைத் திரட்டி ஐந்து படி வைத்து, முதற்படி ஒழித்து ஒழிந்த நான்கு படியினையும் விருத்தத்து ஓரடியுள் எழுத்து எண்ணிக்கொண்டு, அவ்வெழுத்துக்களால் மாற, மூன்றும் படியினையும் நான்காம் படியினையும் அரை செய்து, முடிவிற் படியில் அதன் பாதம் ஒரு பத்திரமாகக் கூட்டினால், முதற்படி, விருத்தங்களது அளவையாம்; இரண்டாம் படி, எழுத்துக்களது அளவையாம்; மூன்றும் படியும் நான்காம் படியும், குரு இலகுக்களது அளவையாம்; ஐந்தாம் படி, மாத்திரைகளது அளவையாம்.

அதற்கு இலக்கணம் :

[இன்னிசை வெண்பா]

'விருத்த விருத்தியினை வேறைந்தா நாட்டி
விருத்த அடியெழுத்தால் மாறி—அருத்திக்க
மூன்றொடு நான்காய குப்பை ஒருக்கதன்
பாதியுடன் வைக்கமே லே.' 4

'விருத்த விருத்தியதன் * வீவில் எழுத்துக்
குருக்களோ டேனைக் குறைவில் இலகு
வருக்கத்தின் மாத்திரை என்றிவை ஐந்தும்
விகற்பித்து வேண்டப் படும்.'

விரித்த அப்பிரத்தார † விருத்தங்களை இரட்டித்து ஒன்று களைய, விரல் அளவையாம்.

[குறள் வெண்பா]

'பிரத்தார எண்ணிரட்டித் தொன்று களைய
விரற்களவை யாகி விடும்.'

என்றாராகலின்.

அவ்விரற் பன்னிரண்டு கொண்டது சாணும். சாண் இரண்டு கொண்டது முழமாம். முழம் நான்கு கொண்டது கோலாம். கோல் ஐஞ்னூறு கொண்டது கூப்பீடாம். கூப்பீடு நான்கு கொண்டது காதமாம். இவ்வாறு வகுத்துப் பிழையாமற் கூறுக.

அதற்கு இலக்கணம் :

[கலி விருத்தம்.]

'பெருக்கிய வாறு பிரத்தரித் தாங்கட்
டருக்கிய நாவலர் சந்தந் தரணி
இரட்டித் ததனந்தத் தொன்று களைய
விரற்கள வாமென்று வேண்டுவர் தாமே.'

---

பி-ம் : * விதியதனை † விருத்தப்பிரத்தார.

[நேரிசை வெண்பா.]

'நாலிருசாண் கொண்டது நற்கோலாம்; ஐந்நூறு
கோலியைந்த நீளம் குரோசமே;—நாலு
குரோசமோர் காவதமாம்; குன்றாத சாணும்
விரோதந்தீர் முந்நால் விரல்.'

[குறள் வெண்பா.]

'முந்நால் விரற்சாண் இரண்டுகை நான்குகோல்
ஐஞ்ஞூறு கூப்பீ டளவு.'

[நேரிசை வெண்பா.]

'பரமாணுத் தேர்த்துகள் பஞ்சித்துய் எஞ்சா
மயிர்மணல் ஐயவி எண்ணெல்—விரலளவும்
எட்டெட்டா ஏறும் எழில்விரல் ஆதியா
ஒட்டினவும் நூன்முறையால் ஒட்டு.'

[குறள் வெண்பா.]

'படையொடுதீ நீர்வளியாற் பங்கப் படாத
முடிபொருள் முந்தை அணு.'

இவற்றை விரித்து உரைத்துக் கொள்க.

[நேரிசை வெண்பா.]

'உழற்ச்சிகே டுத்திட்டம் ஒன்றிரண்டென் றேத்தித்
திறப்படுத்த திண்ணிலகுச் செய்கை—சிறப்பித்தாங்
கெண்ணி நிலவளவோ டேய்ந்த இருமூன்றே
திண்ணியோர் கண்ட தெளிவு'

இது சமவிருத்தங்கட்கு ஆறு பிரத்தியமும் சொன்னவாறு.

இனி, ஒருசார் ஆசிரியர், உறழ்ச்சி நில அளவுகளை விகற்பித்துச் சொல்லுமாறு :

உறழ்ச்சி இரு வகைப்படும் : முற்றக் குருவே வைத்து உறழ்தலும், முற்ற இலகுவே வைத்து உறழ்தலும் என.

அவற்றுள் முற்றக் குருவே வைத்து உறழுமாறு :

[குறள் வெண்பா.]

'குருக்கீழ் இலகுவாம் ஏனைய ஒப்பாம்
குருத்தொகையாம் ஆதிக்கட் கூறு.'

எனக் கொள்க.

பிரத்தாரம் செய்தற்கு இலக்கணம் :

[குறள் வெண்பா.]

'ஈறு வருக்கித் திழித்திரட்டித் தன்றவற்றுன்
மாறியுய்த் திங்ஙனே வைத்து.' 1

(?) எனவும்,

'ஆர்த்த படியினெதி ரச்சுன் வருமாயிற்
பேர்த்திருகால் வைக்க பெரிது.' 2

எனவும் கொள்க.

1, 2. இவற்றின் சரியான பாடம் கிடைக்கவில்லை.

[நேரிசை வெண்பா.]

'இரண்டுநான் கெட்டுப் பதினாறு முப்பத்
திரண்டொடறு பத்துநான் கென்றுங்—கிரட்டித்தே
உற்கிருதி காறும் உலேயா முறைமையால்
நற்குரைப்பான் நாவலனு வான்.'

'ஒன்றுதி என்றார் வடபுலவோர் சந்தங்கட்
கென்றார் இருமூன் றெழுத்தாதி—தென்றமிழாற்
சீரிரண்டாம் என்றுரைத்தார் எல்லாரும் மேன்மூன்றே
டோரிரண்டாம் என்றார் உயர்வு.'

[குறள் வெண்பா.]

'ஈரைஞ்ஞூற் றெண்மூன்றும் என்பர் பிரத்தரித்தால்
ஈரைந்தாம் சந்தத்திற் கெண்.'

பத்தாம் சந்தத்திற்கு எண், ஆயிரத்து இருபத்து நான்கு என்றவாறு.

[குறள் வெண்பா.]

'மதிலிரண்டு மாவாறு வாய்ந்த வசுக்கள்
பதினைந்தாம் சந்தப் பரப்பு.'

பதினைந்தாம் சந்தத்திற்குத் தொகை, முப்பத்தீராயிரத்து எழுநூற்று அறுபத்தெட்டு.

[குறள் வெண்பா.]

'உருவுபா ழென்பரவை யோரெட்டைந் தேழா
திருபதாம் சந்தத்தின் எண்.'

இருபதாம் சந்தத்திற்குத் தொகை, பத்து லட்சத்து நாற்பத்தெண்ணாயிரத்து ஐஞ்ஞூற்று எழுபத்தாறு.

[குறள் வெண்பா.]

'ஆறேழ் உருவுபாழ் எட்டோடு மங்கலமாம்
ஆறேடுநான் குற்கிருதிக் காம்.'

இருபத்தாறும் சந்தத்திற்குத் தொகை, ஆறு கோடியே எழுபத்தொரு லட்சத்து எண்ணாயிரத்து எண்ணூற்று அறுபத்து நாலு.

[குறள் வெண்பா.]

'ஏற இரட்டித் திழிய அரைசெய்து
கூறுக தேறும் பொருள்.'

**'உத்தம்'** என்னும் ஓரெழுத்து முதற் சந்தத்திற்குப் பிரத்தார எண் தொகை 2; இரண்டாம் சந்தத்திற்கு 4; மூன்றாம் சந்தத்திற்கு 8; நாலாம் சந்தத்திற்கு 16; ஐந்தாம் சந்தத்திற்கு 32; ஆறும் சந்தத்திற்கு 64; ஏழாம் சந்தத்திற்கு 128; எட்டாம் சந்தத்திற்கு 256; ஒன்பதாம் சந்தத்திற்கு 512; பத்தாம் சந்தத்திற்கு 1,024; பதினோராம் சந்தத்திற்கு 2,048; பன்னிரண்டாம் சந்தத்திற்கு 4,096; பதின்மூன்றாம் சந்தத்திற்கு 8,192; பதினான்காம் சந்தத்திற்கு 16,384; பதினைந்தாம் சந்தத்திற்கு 32,768; பதினாறும் சந்தத்திற்கு 65,536; பதினேழாம் சந்தத்திற்கு 131,072; பதினெட்டாம் சந்தத்திற்கு 262,144; பத்தொன்பதாம் சந்தத்திற்கு 524,288; இருபதாம் சந்தத்திற்கு 1,048,576; இருபத்தோராம் சந்தத்திற்கு 2,097,152; இருபத்திரண்டாம் சந்தத்திற்கு 4,194,304; இருபத்து மூன்றாம் சந்தத்திற்கு 8,388,608; இருபத்து

நான்காம் சந்தத்திற்கு 16,777,216; இருபத்தைந்தாம் சந்தத்திற்கு 33,554,432; 'உற்கிருதி' என்னும் இருபத்தாறும் சந்தத்திற்குப் பிரத்தார அடித்தொகை, 67,108,864.

இது பிரத்தார எண்களின் தொகை. 'உத்தம்' என்னும் ஓரெழுத்துச் சந்தம் முதலாக, 'உற்கிருதி' என்னும் இருபத்தாறு எழுத்துச் சந்தத்தளவும் முறையானே கண்டுகொள்க.*

பிரத்தரித்து நின்ற சந்தத்தினுள் இரண்டு களைய, அதன் கீழ்ப் போன சந்தம் எல்லாவற்றிற்கும் தொகையாம்.

இனி, விரல் அளவு சொல்லுமாறு :

[குறள் வெண்பா.]

'பிரத்தார எண்ணிரட்டித் தொன்று களைய
விரற்களவை யாகி விடும்.'

'ஆதி இரட்டித் ததனகத் தொன்றிடினும்
வேறுபா டில்லை விரல்.'

'ஒருபடி நீக்கி ஒழிந்த தரைசெய்தால்
ஆதி யதற்கு விரல்.'

[நேரிசை வெண்பா.]

'மூன்றேழு மூவைந்து முப்பதின்மேல் ஒருருவு
மூன்றுடை மூவிருபான் ஒன்றிரண்டேழ்—தோன்ற
இரட்டித்தாங் கோருருவிட் டெண்ணுவான் காணும்
விரற்றொகையா நின்ற விரி.'

முதல் விருத்தத்தின் பிரத்தார நில அளவை விரல் மூன்று; இரண்டாவதன் நில அளவை விரல் ஏழு; மூன்றாவதன் நில அளவை விரல் பதினைந்து; நாலாவதன் நில அளவை விரல் முப்பத்தொன்று; ஐந்தாவதன் நில அளவை விரல் அறுபத்து மூன்று; ஆறாவதன் நில அளவை விரல் நூற்றிருபத்தேழு; ஏழாவதன் நில அளவை விரல் இருநூற்று ஐம்பத்தைந்து; எட்டாவதன் நில அளவை விரல் ஐந்நூற்றுப் பதினொன்று; ஒன்பதாவதன் நில அளவை விரல் ஆயிரத்து இருபத்து மூன்று; பத்தாவதன் நில அளவை விரல் இரண்டாயிரத்து நாற்பத்தேழு; பதினொன்றாவதன் நில அளவை விரல் நாலாயிரத்துத் தொண்ணூற்றைந்து; பன்னிரண்டாவதன் நில அளவை விரல் எண்ணாயிரத்து நூற்றுத் தொண்ணூற்றொன்று; பதிமூன்றாவதன் நில அளவை விரல் பதினாயிரத்து முந்நூற்று எண்பத்து மூன்று; பதினாலாவதன் நில அளவை விரல் முப்பத்திராயிரத்து எழுநூற்று அறுபத்தேழு; பதினைந்தாவதன் நில அளவை விரல் அறுபத்தையாயிரத்து ஐந்நூற்று முப்பத்தைந்து; பதினாறாவதன் நில அளவை விரல் லட்சத்து முப்பத்தோராயிரத்து எழுபத்தொன்று; பதினேழாவதன் நில அளவை விரல் இரண்டு லட்சத்து அறுபத்திராயிரத்து நூற்று நாற்பத்து மூன்று; பதினெட்டாவதன் நில அளவை விரல் ஐந்து லட்சத்து இருபத்து நாலாயிரத்து இருநூற்று எண்பத்தேழு; பத்தொன்பதாவதன் நில அளவை விரல் பத்து லட்சத்து நாற்பத்தெண்ணாயிரத்து ஐந்நூற்று எழுபத்தைந்து; இருபதாஞ் சந்தத்தின் பிரத்தார நில அளவை விரல் இருபது லட்சத்துத் தொண்ணூற்றேழாயிரத்து நூற்று ஐம்பத்தொன்று;

---

பி-ம் * 'உத்தம்' முதலிய இருபத்தாறு சந்தங்களின் பெயர்கள்; 1. உத்தம், 2. அதியுத்தம். 3. மத்திமம். 4. நிலை. 5. நன்னிலை. 6. காயத்திரி. 7. உண்டி. 8. அனுட்டுப்பு. 9. பகுதி. 10. பந்தி. 11. வனப்பு. 12. சயதி. 13. அதிசயதி. 14. சக்குவரி. 15. அதிசக்குவரி. 16. ஆடி 17. அதியாடி. 18. திருதி. 19. அதிதிருதி. 20. கிருதி. 21. பிரகிருதி. 22. ஆகிருதி. 23. விக்கிருதி. 24. சங்கிருதி. 25. அபிகிருதி. 26. உற்கிருதி. இவற்றிற்கு மேற்கோள் இலக்கியங்களை வீரசோழியம், யாப்புப்படலம் 33-ஆம் காரிகையின் உரைநோக்கி யறிக.

இருபத்தோராஞ் சந்தத்தின் பிரத்தார நில அளவை விரல் நாற்பத்தொரு லட்சத்துத் தொண்ணூற்று நாலாயிரத்து முந்நூற்று மூன்று; இருபத்தி ரண்டாம் சந்தத்தின் பிரத்தார நில அளவை விரல் எண்பத்து மூன்று லட்சத்து எண்பத்தெண்ணாயிரத்து அறுநூற்றேழு; இருபத்து மூன்றாஞ் சந்தத்தின் பிரத்தார நில அளவை விரல் ஒரு கோடியே அறுபத்தேழு லட்சத்து எழுபத்தேழாயிரத்து இருநூற்றுப் பதினைந்து; இருபத்து நாலாம் சந்தத்தின் பிரத்தார நில அளவை விரல் மூன்று கோடியே முப்பத்தைந்து லட்சத்து ஐம்பத்து நாலாயிரத்து நானூற்று முப்பத்தொன்று; இருபத்தைந் தாவது சந்தத்தின் பிரத்தார நில அளவை விரல் ஆறு கோடியே எழுபத்தொரு லட்சத்து எண்ணாயிரத்து எண்ணூற்று அறுபத்து மூன்று; 'உற்கிருதி' என்னும் இருபத்தாறும் சந்தத்தின் பிரத்தார நில அளவை விரல் பதின் மூன்று கோடியே நாற்பத்திரண்டு லட்சத்துப் பதினேழாயிரத்து எழுநூற்று இருபத்தேழு.

இவை உத்தம் முதல் உற்கிருதி ஈறுகிய சம விருத்தங்களது பிரத்தார நில அளவை விரல்; முறையானே கண்டு கொள்க.

[குறள் வெண்பா]

'இராயிரத்து நாற்பத்தே ழென்றுரைப்பர் பத்து
விராயதற்குச் சொன்ன விரல்.'

'ஆறைந்தைத் தையே ழெனவுரைப்பர் மூவைந்து
மேவிய பூமி விரல்.'

'இரண்டுபாழ் மும்மூன்றே ழேகமைந் தொன்றே
வருமிருபான் பூமி விரல்.'

'ஒன்றுதீ நான்கிரண்டோ டொன்றேழ் முனியிரண்டேழ்
நற்கிருதிச் சந்த விரல்.'

விரலைச் சாணும், முழமும், கோலும், கூப்பிடும் காதமும் செய்து சொல்லுமாறு :

[குறள் வெண்பா]

'முந்நால் விரல்சாண் இரண்டுகை நான்குகோல்
ஐஞ்ஞூறு கூப்பீ டளவு.'

இதன் வழியே ஒட்டிக் கொள்க.

'உற்கிருதி' என்னும் இருபத்தாறும் சந்தத்தின் நிலஅளவை அறுநூற்றுத் தொண்ணூற்றென்பதின் காதமும், நூற்றொரு கோலும், ஒரு முழமும், ஏழு விரலும் எனக் கொள்க.

[குறள் வெண்பா]

'ஏற்புடைய காதம் குறைந்த எழுநூறு
நூற்றொருகோல் கைவிரல் ஏழு.'

பிறவும் இவ்வாறே நில அளவை கண்டு கொள்க.

இனி, உத்தம் முதலாக உற்கிருதி ஈறுகக் கிடந்த இருபத்தாறு சந்தங் கட்கும் முறையானே பிரத்தார நில அளவை சொல்லுமாறு :

உத்தத்தின் விரல் அளவை மூவிரல்; இரண்டாவதன் விரல் அளவை ஏழு; மூன்றுவதன் விரல் அளவை சாணே மூவிரல்; (இவை மூன்று சந்தமும் தமிழ்க்கு உரிய அல்லாதன.) நான்காவதற்கு முழமே ஏழு விரல்; ஐந்தா வதற்கு இரு முழங்கை சாணே மூவிரல்; ஆறுவதற்கு ஒரு கோலே ஒரு முழமே ஏழு விரல்; ஏழாவதற்கு இரு கோலே இரு முழங்கை சாணே மூவிரல்; எட்டாவதற்கு ஐங்கோலே ஒரு முழமே ஏழு விரல்; ஒன்பதாவதற்கு பதின்கோலே இருமுழங்கை சாணே மூவிரல்; பத்தாவதற்கு இருபத்தொரு

கோலே ஒரு முழமே ஏழு விரல்; பதினொன்றாவதற்கு நாற்பத்திரு கோலே இரு முழங்கை சாணே மூவிரல்; பன்னிரண்டாவதற்கு எண்பதைங் கோலே ஒரு முழமே ஏழு விரல்; பதின்மூன்றாவதற்கு நூற்றெழுபதின் கோலே இரு முழங் கை சாணே மூவிரல்; பதினான்காவதற்கு முந்நூற்று நாற்பத்தொரு கோலே ஒரு முழமே ஏழு விரல்; பதினைந்தாவதற்குக் கூப்பீடே நூற்றெண்பத்திரு கோலே இரு முழங்கை சாணே மூவிரல்; பதினாறாவதற்கு இரண்டு கூப்பீடே முந்நூற்றறுபத்தைங் கோலே ஒரு முழமே ஏழு விரல்; பதினேழாவதற்கு ஒரு காதமே ஒரு கூப்பீடே இருநூற்று முப்பதின் கோலே இரு முழங்கை சாணே மூவிரல்; பதினெட்டாவதற்கு இரு காதமே இரண்டு கூப்பீடே நானூற்றறு பத்தொரு கோலே ஒரு முழமே ஏழு விரல்; பத்தொன்பதாவதற்கு ஐங்காதமே ஒரு கூப்பீடே நூற்று* இருபத்திரு கோலே இரு முழங்கை சாணே மூவிரல்; இருபதாவதற்குப் பதின் காதமே மூன்று கூப்பீடே முந்நூற்று நாற்பத்தைங் கோலே ஒரு முழமே ஏழு விரல்; இருபத்தொன்றாவதற்கு இருபத்தொரு காதமே மூன்று கூப்பீடே நூற்றுத்தொண்ணூறு கோலே இரு முழங்கை சாணே மூவிரல்; இருபத்திரண்டாவதற்கு நாற்பத்து மூன்று காதமே இரண்டு கூப்பீடே முந்நூற்றெண்பத்தொரு கோலே ஒரு முழமே ஏழு விரல்; இருபத்து மூன்றாவதற்கு எண்பத்தேழு காதமே ஒரு கூப்பீடே இருநூற்று அருபத்திரு கோலே இரு முழங்கை சாணே மூவிரல்; இருபத்து நான்காவதற்கு நூற்றெழுபத்து நான்கு காதமே மூன்று கூப்பீடே இருபத்தைங்கோலே ஒரு முழமே ஏழு விரல்; இருபத்தைந்தாவதற்கு முந் நூற்று நாற்பத்தொன்பதின் காதமே இரண்டு கூப்பீடே ஐம்பதின் கோலே† இரு முழங்கை சாணே மூவிரல். 'உற்கிருதி' என்னும் இருபத்தாறாவதற்கு அறுநூற்றுத் தொண்ணூற்றென்பதின் காதமே நூற்றொரு கோலே ஒரு முழமே ஏழு விரல் எனக் கொள்க.

இனி, உத்தம் முதலாக உற்கிருதி ஈறுகக் கிடந்த விருத்தச் சந்தங்களின் எழுத்து வரையறுத்துச் சொல்லுமாறு:

ஓர் அடியுள் எழுத்து எண்ணி, அவற்றை நான்கினல் மாற, நான்கடிக்கும் எழுத்தாம் எனக் கொள்க.

[குறள் வெண்பா]

'அடியுள் எழுத்தினை நான்கினல் மாற
முடியுமாம் நான்கடிக்கும் எண்.'

அல்லது,

[நேரிசை வெண்பா]

'சந்த எழுத்தலகிற் றள்ளி அரைசெய்து
சந்த எழுத்தின் அரைகூட்ட—வந்தன
பாதத் தெழுத்தாம்; பரவையால் மாறவரும்
ஏதமில் நான்கடிக்கும் எண்.'

இவ்வுரைச் சூத்திரத்தின் கருத்தாவது: தான் வேண்டப்பட்ட சந்தத்தின் எழுத்துக்களை வருக்கித்து அரை செய்து, அவ்வருக்க மூலத்துட் சந்த எழுத்தின் அரை கூட்ட, அச் சந்தங்கள் அளவெழுத்துச் சங்கையாம்; அவற்றை நான்கினல் மாற, நான்கடிக்கும் எழுத்தாம்.

'உத்தம்' என்னும் முதற்சந்தத்திற்கு எழுத்து நான்கு; இரண்டாவதற்கு எழுத்து எட்டு; மூன்றாவதற்கு பன்னிரெண்டு; நான்காவதற்குப் பதினாறு; ஐந்தாவதற்கு இருபது; ஆறாவதற்கு இருபத்துநாலு; ஏழாவதற்கு இருபத் தெட்டு; எட்டாவதற்கு முப்பத்திரண்டு; ஒன்பதாவதற்கு முப்பத்தாறு; பத்தா வதற்கு நாற்பது; பதினொன்றாவதற்கு நாற்பத்து நாலு; பன்னிரண்டாவதற்கு நாற்பத்தெட்டு; பதின்மூன்றாவதற்கு ஐம்பத்திரண்டு; பதினான்காவதற்கு ஐம்பத்தாறு; பதினைந்தாவதற்கு அறுபது; பதினாறாவதற்கு அறுபத்து நாலு; பதினேழாவதற்கு அறுபத்தெட்டு; பதினெட்டாவதற்கு எழுபத்திரண்டு;

பி-ம்: * நானூற்று, † பதின்கோலே,

பத்தொன்பதாவதற்கு எழுபத்தாறு; இருபதாவதற்கு எண்பது; இருபத்தொன்றாவதற்கு எண்பத்து நான்கு; இருபத்திரண்டாவதற்கு எண்பத்தெட்டு; இருபத்து மூன்றாவதற்குத் தொண்ணூற்றிரண்டு; இருபத்து நான்காவதற்கு தொண்ணூற்றாறு; இருபத்தைந்தாவதற்கு நூறு; இருபத்தாறாவதற்கு நூற்று நான்கு.

**இனி, அளவழிச் சந்தங்கட்குப் பெயர் சொல்லுமாறு :**

அளவழிச் சந்தங்களிற் சீர் ஒத்து ஓர் அடியுள் ஓர் எழுத்துக் குறைந்து வந்ததனை **'நிசாத்து'** என்றும், இரண்டெழுத்துக் குறைந்து வந்ததனை **'விராட்டு'** என்றும், ஓரெழுத்து மிக்கு வந்ததனைப் **'புரிக்கு'** என்றும், இரண்டெழுத்து மிக்கு வந்ததனைச் **'சுராட்டு'** என்றும்; முதலடியும் நான்காமடியும் சீர் ஒத்து ஓர் எழுத்துக் குறைந்து நடு இரண்டடியும் சீர் ஒத்து ஓர் எழுத்து மிக்கதனை **'யவமத்திமம்'** என்றும் 'தோரையிடைச் செய்யுள்' என்றும்; இடை இரண்டடியும் குறைந்ததனைப் **'பிபீலிகா மத்திமம்'** என்றும் **'எறும்பிடைச் செய்யுள்'** என்றும்; முதலிரண்டடியும் ஒத்துக் கடையிரண்டடியும் எழுத்து மிக்கு வருவனவற்றையும், முதலிரண்டடியும் தம்முள் ஒத்து எழுத்து மிக்குக் கடையிரண்டடியும் ஒப்ப எழுத்துக் குறைந்து வருவனவற்றையும், முதலிரண்டடியும் தம்முள் ஒப்ப எழுத்துக் குறைந்து கடையிரண்டடியும் தம்முள் ஒப்ப எழுத்துக் குறைந்து வருவனவற்றையும், ஒன்றிடை விட்டுக் குன்றி வருவனவற்றையும், ஒன்றிடையிட்டு மிக்கும் குறைந்தும் வருவனவற்றையும் **'பாதிச்சமச் செய்யுள்'** என்றும்; இவ்வாறின்றிச் சீர் ஒத்து மிக்கும் குறைந்தும் வருவனவற்றை **(அளவழிப்பையுட் சந்தம்)** என்றும் வேண்டுவர்.

தாண்டகங்கட்கும் இவ்வாறே சொல்லுவர் ஒருசார் வடநூல் வழித் தமிழாசிரியர்.

அவற்றுட் சில வருமாறு :

**[கலி விருத்தம்]**

'பங்கயக் காடுகொண் டலர்ந்த பாங்கெலாம் [12]
செங்கயல் இனநிரை திளைக்கும் செல்வமும் [13]
மங்கையர் முகத்தன மதர்த்த வாளரி [13]
அங்கயற் பிறழ்ச்சியும் அமுத* நிரவே.' 1 [13]

இது சீர் ஒத்து ஓர் அடியுள் ஓர் எழுத்துக் குறைந்து வந்தமையால் **நிசாத்து.**

'கொல்லைக் கொன்றைக் கொழுநன் றன்னை [9]
மல்லற் பொழில்வாய் மணியேர் முறுவல் [11]
முல்லைக் குறமா மடவாள் முறுகப் [11]
புல்லிக் குளிரப் பொழியாய் புயலே!' [11]

இஃது ஓரடியுள் இரண்டெழுத்துக் குறைந்து சீர் ஒத்து வந்தமையால், விராட்டு.

என்னை ?

**[குறள் வெண்பா]**

'ஓரெழுத்துக் குன்றின் நிசாத்தாம்; விராட்டாகும்
ஈரெழுத்துக் குன்றும் எனின்.'

என்பவாகலின்.

---

1. சூளா. நாட்டு. 2.

பி-ம் : * ஆருத.

[வஞ்சித்துறை]

'பேடையை இரும்போத்துத் [7]
தோகையால் வெயின்மறைக்கும் [8]
காடகம் இறந்தார்க்கே [7]
ஓடுமென் மனனேகாண்.' 1 [7]

இஃது ஓரடியுள் ஓரெழுத்து மிக்குச் சீர் ஒத்து வந்தமையால் புரிக்கு.

[கலி விருத்தம்]

'கலைபயில் அல்குலார் காமர் மஞ்ஞைபோன் [12]
றுலவுவர் மெல்லவே ஒண்பொன் மாநகர்; [12]
அலர்மலி வீதிகள் ஆறு போன்றுள; [12]
மலையென நிவந்துள மதலை மாடமே.' [14]

இஃது இரண்டெழுத்து ஓரடியுள் மிக்குச் சீர் ஒத்து வந்தமையால், சுராட்டு.

என்னை?

[குறள் வெண்பா]

'ஓரெழுத்து மிக்காற் புரிக்காம்; சுராட்டாகும்
ஈரெழுத்து மிக்க தெனின்.'

என்பவாகலின்.

[வஞ்சித் துறை]

'மல்லன்மா மழையார்ப்பக் [7]
கொல்லைவாய்க் குருந்திளகின; [9]
முல்லைவாய் முறுவலித்தன; [9]
செல்வர்தேர் வரவுண்டாம்.' [7]

இது முதலடியும் நான்காம் அடியும் எழுத்துக் குறைந்து, நடு இரண்டடியும் எழுத்து மிக்கு, நாலடியும் சீரொத்து வந்தமையால், **யவமத்திமம்** 2 எனக் கொள்க.

[தரவு கொச்சகம்.]

'பரவு பொழுதெல்லாம் பன்மணிப்பூட் டோவா [13]
வரவும் இனிக்காணும் வண்ணநாம் பெற்றேம் [12]
விரவு மலர்ப்பிண்டி விண்ணோர் பெருமான் [12]
இரவும் பகலும்வந் தென்றலைமே லானே.' [13]

இது முதலடியும் ஈற்றடியும் எழுத்து மிக்கு, நடு இரண்டடியும் எழுத்துக் குறைந்து, நாலடியும் சீர் ஒத்து வந்தமையால், **பிபீலிகா மத்திமம்.**

என்னை?

[குறள் வெண்பா.]

'இடைக்கண் இரண்டடியும் மிக்கால் யவமாம்;
எறுப்பிடையாம் குன்றின் எழுத்து.'

என்பவாகலின்.

---

1. யா.வி. 91 உரை மேற். 2. இது வடமொழியில் 'யவமத்தியயதி' எனப்படும்.

[கலி விருத்தம்.]

'திருவிற்கோர் கற்பகத் தெரியன் மாலையார் [13]
உருவிற்கு விளக்கமாம் ஒண்பொற் பூங்கொடி [13]
முருகற்கும் அனங்கற்கும் எனக்கும் மொய்சடை [14]
ஒருவற்கும் பகைத்தியால் ஒருத்தி வண்ணமே.' [14]

இது முதலிரண்டடியும் எழுத்துக் குறைந்து, கடையிரண்டடியும் எழுத்து மிக்கு, நான்கடியும் சீர் ஒத்து வந்தமையால், **பாதிச் சம விருத்தம்.**

[வஞ்சித்துறை.]

'மடப்பிடியை மதவேழம் [9]
தடக்கையால் வெயின்மறைக்கும் [9]
இடைச்சுரம் இறந்தார்க்கே [8]
நடக்குமென் மனனேகாண்.' 1 [8]

'இரும்பிடியை இகல்வேழம் [9]
பெருங்கையால் வெயின்மறைக்கும் [9]
அருஞ்சுரம் இறந்தார்க்கே [8]
விரும்புமென் மனனேகாண்.' 2 [8]

இவை முதலிரண்டடியும் எழுத்து மிக்கு, கடையிரண்டடியும் எழுத்துக் குறைந்து, நான்கடியும் சீர் ஒத்து வந்தமையால், **பாதிச் சமச் செய்யுள்.**

[கலி விருத்தம்.]

'அடிமிசை அரசர்கள் வணங்க ஆண்டவன் [14]
பொடிமிசை யப்புறம் புரள விப்புறம் [13]
இடிமுர சதிரவொர் இளவல் தன்னெடும் [14]
கடிமணம் புகுமிவள் கற்பின் நீர்மையே' 3 [13]

இது முதலடியும் மூன்றும் அடியும் எழுத்து மிக்கு, இரண்டாம் அடியும் ஈற்றடியும் எழுத்துக் குறைந்து, நாலடியும் சீர் ஒத்து வந்தமையால், **பாதிச் சம விருத்தம்.**

[அறுசீர் விருத்தம்]

'மெய்யறி விலாமை என்னும் வித்தினிற் பிறந்து வெய்ய [16]
கையறு வினைகள் கைபோய்க் கடுந்துயர் விளைந்த போர்வை [17]
மையற வுறைந்து வாடும் வாழுயிர்ப் பிறவ மாலை [16]
நெய்யற நிழற்றும் வேலோய்! நினைத்தனை நினைக்க என்றான்.' 4 [17]

இது முதலடியும் மூன்றுமடியும் எழுத்துக் குறைந்தும், ஏனை இரண்டடியும் எழுத்து மிக்கும், நான்கடியும் சீர் ஒத்து வந்தமையால், **பாதிச் சம விருத்தம்.**

என்னை ?

[தரவு கொச்சகம்.]

'முடிவிரண்டும் மிக்கும் முதலிரண்டும் நைந்தும்
முடிவிரண்டும் குன்றி முதலிரண்டும் மிக்கும்
அடியிடையிட் டஃகியும் * மிக்கும் வருமேற்
படியின்மேற் பாதிச் சமவிருத்த மாமே.'

என்பவாகலின். **இதனைப் பதம் நெகிழ்த்து உரைத்துக் கொள்க.**

---

1, 2. யா.வி. 91 உரை மேற். 3. சூளா. முத்தி. 22. 4. சூளா. இரத. 80.
பி-ம் ; * உருகியும்.

இனி, சிறப்புடைப் பையுட் சந்தங்களிற் சில வருமாறு :

[அறுசீர் விருத்தம்]

'ஆதியான் அருளாழி தாங்கினான் ஆயிரவெங் கதிரோன் நாணும் [19]
சோதியான் சுரர்வணங்கும் திருவடியான் சுடுநீற்றான் நினையப் பட்ட [22]
காதியான் அருளிய கதிர்முடி கவித்தாண்டான் மருகன் கண்டாய் [20]
ஓதியான் உரைப்பினும் இவன்வலிக்கு நிகராவார் உளரோ வேந்தர்.' 1 [21]

இது முதலடி பத்தொன்பது எழுத்தாயும், இரண்டாமடி இருபத்திரண்டு எழுத்தாயும், மூன்றாமடி இருபது எழுத்தாயும், நான்காம் அடி இருபத்தோரெழுத்தாயும் வந்தமையால், **அளவழிப் பையுட்சந்தம்.**

[கலி விருத்தம்.]

'மணிமலர்ந் துமிழ்தரும் ஒளியும் சந்தனத் [14]
துணிமலர்ந் துமிழ்தரும் தண்மைத் தோற்றமும் [13]
அணிமலர் நாற்றமும் என்ன அன்னவால் [12]
அணிவரு சிவகதி அடைவ தின்பமே.' 2 [14]

இது முதலடியும் முடிவடியும் பதினாலெழுத்தாய், இடையடி இரண்டும் பதின்மூன்றும் பன்னிரண்டுமாய், எழுத்து ஒவ்வாது வந்தமையால், **அளவழிப் பையுட்சந்தம்.** இதனை **எறுப்பிடைச் சந்தச் செய்யுள்** என்பாரும் உளர்.

[அறுசீர் விருத்தம்]

'செஞ்சுடர்க் கடவுட் டிண்டேர் இவுளிகால் திவள ஓன்றும் [17]
மஞ்சுடை மகர்* நெற்றி வானுரு வாயில் மாடத் [15]
தஞ்சுடர் இஞ்சி ஆங்கோர் அகழணிந் தலர்ந்த தோற்றம் [16]
வெஞ்சுடர் விரியும் முந்நீர் வேதிகை மிதிட் டன்றே.' 3 [15]

இதுவும் முதலடி பதினேழெழுத்தாய், இரண்டாமடியும் நான்காமடியும் பதினைந்தெழுத்தாய், மூன்றாமடி பதினாறெழுத்தாய் வந்தமையால், **அளவழிப் பையுட் சந்தம்.** இதனைப் **பாதிச் சமப் பையுட்சந்தம்** என்பாரும் உளர்.

[அறுசீர் விருத்தம்]

'என்னிது விளைந்த வாறித் தூதுவர் யாவர் என்று [15]
கன்னவில் வயிரத் திண்டோட் கடல்வண்ணன் வினவ யாரும் [17]
சொன்னவின் றுரைக்க மாட்டார் துட்கென்று துளங்க ஆங்கோர் [16]
கொன்னவில் பூதம் போலும் குறண்மகள்† இதனைச் சொன்னாள்.' 4 [16]

இது முதலடி பதினைந்தெழுத்தாய், இரண்டாமடி பதினேழெழுத்தாய், பின் இரண்டடியும் பதினாறெழுத்தாய் வந்தமையால், **அளவழிச் சந்தப் பையுள்.**

பிறவும் இவ்வாறு வருவனவற்றை எல்லாம் வந்த வகையாற் பெயர் கொடுத்து வழங்குக.

என்னை ?

'வந்த முறையாற் பெயர்கொடுத் தெல்லாம்
தந்தம் முறையாற் றழாஅல் வேண்டும்.'

என்பது இலக்கணமாகலின்.

---

1. சூளா. சுயம். 25. 2. சூளா. முத்தி. 6. **3.** சூளா. நகரப். **3.**
**4.** சூளா. சீய. 107.

பி-ம் : * மதர்வை. † குறமகள். ‡ குறமகள்.

தாண்டகமும் இவ்வாறே கொள்க ;

'ஒன்றென முடித்தலென்

றின்ன வகையால் யாவையும் முடியும்.'

என்பவாகலின்

'குமரசேனாசிரியர் கோவையும், தமிழ் முத்தரையர் கோவையும், யாப்பருங்கலக் காரிகையும் போன்ற சந்ததால் வருவனவற்றின் முதற்கண் நிரையசை வரின், ஓரடி பதினேழெழுத்தாம்; முதற்கண் நேரசை வரின் ஓரடி பதினாறெழுத்தாம். இவ்வாறன்றி மிக்கும் குறைந்தும் வாரா. அவை எண்ணுகின்றுழி ஆய்தமும் ஒற்றும் ஒழித்து, உயிரும் உயிர்மெய்யும் குற்றியலிகரமும் குற்றியலுகரமும் கொண்டு எண்ணப்படும். என்னை ?

[நேரிசை வெண்பா.]

'எழுவாய் நிரைவரினும் ஏழுடைய ஈரைந்

தெழுவாய் தனிவரினென் றெஞ்சும்—வழுவாத

கோவையும் செய்யுட்கால் குன்றா பெருகாவென்

றேவினர் தொல்லோர் எழுத்து.'*

என்பவாகலின்.

அவற்றுட் சில வருமாறு :

[கட்டளைக் கலித்துறை.]

'இருநெடுஞ் செஞ்சுடர் எஃகமொன் றேந்தி இரவின்வந்த

அருநெடுங் காதற்கன் றேதாற் பாலதல் லாதுவிட்டாற்

கருநெடு மால்கடல் ஏந்திய கோன்கயல் சூடுநெற்றிப்

பெருநெடுங் குன்றம் விலையோ கருதிலெம் பெண்கொடிக்கே!' 1

எனவும்,

'காய்ந்துவின் டார்நையக் காமரு கூடலிற் கண்சிவந்த

வேந்துகண் டாயென்ன வெள்வளை சோரக் கலைநெகிழப்

போந்துகண் டாரொடும் போந்துகண் டேற்கவள் பொன்முடிமேற்

போந்துகண் டாளென்று போந்ததென் மாட்டோர் புறனுரையே.' 2

எனவும்,

'திண்டேர் வயவரைச் சேர்வ்வென் றூனன்ன தேங்கவுண்மா

வண்போ தமன்ற வழைநிழல் நீக்கிய வார்சிலம்ப!

நண்போ நினையிற்பொல் லாதது; நிற்க; என் னன்னுதலாள்

கண்போல் குவளை கொணர்ந்ததற் கியாதுங்கைம் மாறிலமே!' 3

எனவும் இவற்றுட் கண்டு கொள்க.

[கலி விருத்தம்.]

'முன்றில் எங்கும் முருகியப் பாணியும்

சென்று வீழரு வித்திரள் ஓசையும்

வென்றி வேழ முழக்கொடு கூடிவான்

ஒன்றி நின்றதி ரும்மொரு பாலெலாம்.' 4

என்னும் சந்தத்து நேரசை முதலாய் வருமடி பதினாறெழுத்து ஆயினவாறு.

நிரையசை முதலாய் வருமடி, பன்னிரண்டு எழுத்தாம்.

1. யா.வி. 15 உரை மேற். 2. யா.வி .53 உரை மேற். 3. யா.வி. 96 உரைமேற்.
4 சூளா. நாட்டுப். 7.

பி-ம் : * எடுத்து.

**வரலாறு :**

[கலி விருத்தம்]

'அணங்க ரான ஆடல் முழவமும்
கணங்கொள் வாரணக் கம்பலைச் செல்வமும்
மணங்கொள் வான்முர சும்வயல் ஓதையும்
இணங்கி எங்கும் இருக்கையந் நாடெல்லாம்.' 1

என இதனுள் நிரையசை முதலாய் வரும் அடி பன்னிரண்டு எழுத்தாய் வந்தவாறு கண்டுகொள்க.

**சிந்தாமணி, சூளாமணி, குண்டல கேசி, நீல கேசி, அமிர்தபதி** என்ற இவற்றின் முதற்பாட்டு வண்ணத்தான் வருவனவற்றில் நேரசை முதலாய் வரின், ஓரடி பதினன்கு எழுத்தாம்; நிரையசை முதலாய் வரின், ஓரடி பதினேந்தெழுத்தாம். **பிங்கல கேசியின்** முதற் பாட்டு இரண்டாமடி ஓரெழுத்து மிகுத்துப் புரிக்காகப் புணர்த்தார். அல்லன எல்லாம் ஒக்கும்.

வரலாறு :

[கலி நிலைத்துறை]

'மூவா முதலா உலகம் ஒருமூன்றும் ஏத்தத்
தாவா தவின்பம் தலையா யதுதன்னின் எய்தி
ஓவாது நின்ற குணத்தொண்ணிதிச் செல்வன் என்ப
தேவா திதேவன் அவன்சே வடிசேர்தும் அன்றே.' 2

எனவும்,

'வென்றான் வினையின் தொகையா யவிரிந்து தன்கண்
ஒன்றாய்ப் பரந்த உணர்வின் ஒழியாது முற்றும்
சென்றான் திகழும் சுடர்சூழ் ஒளிமூர்த்தி யாகி
நின்றான் அடிக்கீழ்ப் பணிந்தார் வினைநீங்கி நின்றார்.' 3

எனவும்,

'முன்றான் பெருமைக் கணின்றான் முடிவெய்து காறும்
நன்றே நினைந்தான் குணமே மொழிந்தான்ற னக்கென்
றொன்றா னுமுள்ளான் பிறர்க்கே உறுதிக்கு ழந்தான்
அன்றே இறைவன்? அவன்றாள் சரணங்கள் அன்றே.' 4

எனவும்,

'நல்லார் வணங்கப் படுவான் பிறப்பாதி நான்கும்
இல்லான் உயிர்கட் கிடர்தீர்த் துயிரின்பம் எய்தும்
சொல்லான் தருமச் சுடரோன் எனுந்தொன்மை யானன்
எல்லாம் உணர்ந்தான் அவனே இறையாக ஏத்தி.' 5

எனவும்,

'குற்றங்கள் மூன்றும் இலனய்க் குணங்கட் கிடனய்' 6

எனவும் இவை நேரசை முதலாய் வந்து, ஓரடி பதினன்கெழுத்து ஆனவாறு கண்டு கொள்க.

'மதியம் கெடுத்த வயமீன் எனத்தம்பி மாழாந்
துதிதற் குரியாள் பணியால் உடனய வாறும்
நிதியின் னெறியின் அவன்றே ழ்ர்நிரந்த வாறும்
பதியின் அகன்று பயந்தா ளைப்பணிந்த வாறும்.' 7

என நிரையசை முதலாய் வந்து, பதினைந்தெழுத்து ஓரடிக்கள் வந்தவாறு கண்டு கொள்க.

---

1. சூளா. நாட்டுப் 9
2. சிந். கட. வாழ். 3. சூளா. காப்பு; யா.வி. 24 உரை மேற். 4. குண்டல. கட. வாழ். 5. நீலகேசி, கட. வாழ். 6. இஃது அமிர்தபதி என்னும் நூலின் முதற்செய்யுள் என்றுகிக்க இடமுண்டு. 7. சிந். பதிகம், 18.

[சந்தக் கலி விருத்தம்]

'அம்பொன்மாலை யார்களித்த லத்தெழுந்த ரத்தவாய்க்
கொம்பனார்கொ டுத்தமுத்த நீரவாய கோழரைப்
பைம்பொன்வாழை செம்பொனிற்ப ழுத்துவீழ்ந்த சோதியால்
அம்புபாய்ந்து வந்தொசிந்து சாறுசோர்வ போலுமே.' 1

இந்தச் சந்தத்தால் நேரசை முதலாக வருவன ஓரோ அடியுள் பதினேந் தெழுத்தாயும், நிரையசை முதலாய் வருவன பதினாறெழுத்தாயும் வருதல் பெரும்பான்மைய எனக் கொள்க.

'கவர்கதிர்வ ரம்பிறுங்கு காய்கவின்ற எட்குழாம்
துவரைகொட்ப யறுழுந்து தோரையோடு சூழ்கொடி
அவரையின்ன பல்லுணவு ளக்கரிய என்பவாற்
கவரும்வண்டு சூழநின்று காந்தள்கை மறித்தவே.'

இது நிரையசை முதலாய்ப் பதினாறெழுத்தாயினவாறு கண்டுகொள்க.

'மாசில்கண்ணி மைந்தரோடு மங்கைமார் திளைத்தலிற்
பூசுசாந்த ழித்திழிந்து புள்ளிவேர்பு லர்த்தலால்
வாசமுண்ட மாருதம் வண்டுபாட மாடவாய்
வீசிவெள்ளி லோத்திரப் பொதும்புபாய்ந்து விம்முமே.' 2

இஃது இச்சந்தத்தால் வந்து, மூன்றாமடி எழுத்துக் குறைந்து வந்தது.

'தெய்வநாறு காந்தளஞ் சிலம்புதேங்கொள் பூம்பொழில்
பவ்வமுத்த வார்மணற் பறம்புமௌவல் மண்டபம்
எவ்வமாடு நீர்ப்பொழில் இடங்களின்ப மாக்கலாற்
கவ்வையாவ தந்நகர்க் காமனார்செய் கவ்வையே.' 3

இதுவும் சந்தத்தால் வந்து, ஈற்றடி பதினான்கெழுத்தாய் வந்தது.

இவ்வாறு எழுத்துக் குறைந்தும் மிக்கும் வருவனவற்றை அறிந்து, **'நிசாத்து'** என்றும், **'விராட்டு'** என்றும், **'புரிக்கு'** என்றும், **'சுராட்டு'** என்றும் பெயரிட்டு வழங்குக.

நான்கடியும் எழுத்து ஒத்து வருவனவற்றைத் **'தலையாகு சந்தம்'** என்றும், ஓரெழுத்து மிக்கும் குறைந்தும் வருவனவற்றை **'இடையாகு சந்தம்'** என்றும், இரண்டெழுத்து மிக்கும் குறைந்தும் வருவனவற்றையும் பிறவாற்றான் மிக்கும் குறைந்தும் வருவனவற்றையும் **'கடையாகு சந்தம்'** என்றும் வழங்குவர் ஒரு சார் ஆசிரியர்.

தாண்டகங்கட்கும் இவ்வாறே சொல்லுவர்.

இவற்றையெல்லாம் ஞானாசாரியமும்,* **சயதேவமும்** மிச்சா கிருதியும், **பிங்கலமும், மாபிங்கலமும், இரணமாமஞ்சுடையும், சந்திரசோடிச் சந்தமும், 'குணகாங்கி'** என்னும் **கருநாடகச் சந்தமும், வாஞ்சியார்** செய்த **வடுகர்சந்த** மும் ஆகியவற்றுள்ளும், மாபுராணம் முதலாகிய தமிழ் நூலுள்ளும் புகுதி யுடையார்வாய்க் கேட்டுக் கொள்க. இவையெல்லாம் விகற்பித்து உரைக்கப் பெருகும்.

ஒருசார் வடநூல் வழித் தமிழாசிரியர், "குருவும் இலகுவும் புணர்ந்து முற்ற வரினும், முற்றக் குருவேயாயும் முற்ற இலகுவேயாயும் வரினும், **'சமானம்'** என்பதாம்; இலகுவும் குருவும் புணர்ந்து முறை வரிற் **'பிரமாணம்' என்ப**

1. சூளா. இரதநூ. 13. 2. சூளா. இரதநூ. 16. 3. சூளா. இரதநூ. 18.

பி-ம் ; * சரணச்சிரையம்.

தாம்; இரண்டு குருவும் இரண்டு இலகுவுமாய் முறையானே வரினும், இரண்டு இலகுவும் இரண்டு குருவுமாய் முறையானே வரினும், 'விதானம்' என்ப தாம்,'' என்பர்.

என்னே?

[நேரிசை வெண்பா]

'குருலகுமுற் றுயும் குருவிலகு வேறுய்
வருமெனினும் மைதீர் சமானம்; —குருலகுவின்
பிற்முன் வரிற்பிர மாணம்; விதானமாம்
என்றூர் இரண்டாம் எனின்.'

என்பவாகலின்.

வரலாறு:

[கலி விருத்தம்]

'போது விண்ட புண்ட ரீக
மாத ரோடு வைக வேண்டின்
ஆதி நாதர் ஆய்ந்த நூலின்
நீதி ஓதி நின்மின் நீடு.'

எனவும்,

[வஞ்சித்துறை]

'கற்ற நூவினர்
செற்றம் நீக்கினர்
வெற்றி வேந்தருக்
குற்ற தூதரே.'

எனவும் இவை குருவும் இலகுவும் அடி முடியளவும் முறையே வந்தமையால், சமானம்.

[கலி விருத்தம்]

'காரார் தோகைக் கண்ணர் சாயற்
றேரார் அல்குல் தேனர் தீஞ்சொல்
போரார் வேற்கட் பொன்னே! இன்னே
வாரார் அல்லர் போனர் தாமே.'

இது முற்றக் குருவே வந்தமையால், 'சமானம்' எனப்படும்.

[வஞ்சித் துறை]

'முருகு விரிகமலம்
மருவு சினவரன
திருவ டிகடொழுமின்
அருகு மலமகல.'

இது முற்ற இலகுவே வந்தமையால், 'சமானம்' எனப்படும்.

[வஞ்சி விருத்தம்]

'கயற்க ருங்கண் அந்நலார்
முயக்கம் நீக்கி மொய்ம்மலர்
புயற்பு ரிந்த புண்ணியர்க்
கியற்று மின்கள் ஈரமே.'

இது இலகுவும் குருவும் முறையே வந்தமையால், 'பிரமாணச் செய்யுள்' எனப்படும்.

[கலி விருத்தம்]

'துங்கக் கனகச் சோதி வளாகத்
தங்கப் பெருநூல் ஆதியை ஆளும்
செங்கட் சினவேள் சேவடி சேர்வார்
தங்கட் கமரும் தண்கடல் நாடே.'

இஃது இரண்டு குருவும் இரண்டு இலகுவுமாய் முறையானே வந்தமையால், **'விதானச் செய்யுள்'** எனப்படும்.

[வஞ்சித் துறை]

'பொருளாளிற் புகழாமென்
றருளாளர்க் குரையாயுந்
திருமார்பிற் சினனேயொன்
றருளாய்நின் அடியேற்கே.'

இஃது இரண்டு குருவும் இரண்டு இலகுவுமாய் முறையானே வந்தமையால், **'விதானச் செய்யுள்'** எனப்படும்.

[வஞ்சி விருத்தம்]

'பூவார் பொய்கைப் பொற்போதில்
தேவார் செங்கட் சேயாநீ
யாவா வென்று தென்னேசூர்
மாவா னுனைக் கொன்றானே!'

இது முற்றக் குருவே வந்தமையால், **சமானம்.**

பிறவும் அன்ன. இவையெல்லாம் 'பிறவும்' எனறதனுற் கொள்க.

**செய்யுள் ஓத்துக் கரணம்.**

**முற்றும்.**

96] [ரு

**சித்திரக்கவி மாலை**

**மாலை மாற்றே, சக்கரம், சுழிகுளம்,**
**ஏக பாதம், எழுகூற் றிருக்கை,**
**காதை கரப்பே, கரந்துறை பாட்டே,**
**தூசம் கொளலே, வாவ னூற்றி,**
**கூட சதுர்த்தம்,* கோமூத் திரியே,**
**ஓரெழுத் தினத்தால்† உயர்ந்த பாட்டே,**
**பாத மயக்கே, பாவின் புணர்ப்பே,**
**ஒற்றுப் பெயர்த்தல், ஒருபொருட் பாட்டே,**
**சித்திரப் பாவே, விசித்திரப் பாவே,‡**
**விகற்ப நடைய வினவுத் தரமே,**
**சருப்பதோ பத்திரம், சார்ந்த எழுத்து**
**வருத்தனம் மற்றும் வடநூற் கடவுள்**
**ஒருக்குடன் வைத்த உதாரணம் நோக்கி**
**விரித்து முடித்த மிறைக்கவிப் பாட்டே; 1**

**பி-ம்: * சதுக்கம். 1. பிங். சூ. 368. † ஓரினத் தெழுத்தால். ‡ சித்திரக் காவே விசித்திரக் காவே.**

உருவக மாதி விரவியல் ஈறு
வருமலங் காரமும் வாழ்த்தும் வசையும்
கவியே கமகன் வாதி வாக்கியென்
றவர்கள் தன்மையும் அவையின தமைதியும்
பாடுதல் மரபும் தாரணைப் பகுதியும்
ஆனந்தம் முதலிய ஊனமும் செய்யுளும்
விளம்பனத் தியற்கையும் நரம்பின் விகற்பமும்
பண்ணும் திறமும் பாலையும் கூடமும்
எண்ணிய திணையும் இருதுவும் காலமும்
எண்வகை மணமும் எழுத்தும் சொல்லும்
செந்துறை மார்க்கமும் வெண்டுறை மார்க்கமும்
தந்திர உத்தியும் தருக்கமும் நடமும்
முந்துநூல் முடிந்த முறைமையின் வழாஅமை
வந்தன பிறவும் வயினறிந் துரைப்போன்
அந்தமில் கேள்வி ஆசிரி யன்னே.

இச்சூத்திரம் நூல் உரைக்கும் ஆசிரியனது பெருமை உணர்த்துதல் நுதலிற்று.

மாலை மாற்றுவது, ஈறு முதலாக வாசித்தாலும் அப்பாட்டே ஆவது.

வரலாறு :

[குறள் வெண்பா]

'நீமாலை மாருடி நீனுடி நாடுனு
நீடிரு மாலைமா நீ.'

எனவும்,

'பூமாலை காரணி பூமேத வேதமே
பூணீர கீாலைமா பூ.'

எனவும்,

[நேரிசை வெண்பா]

'காதுரும பூமாலை காதுசேர் போதாமி
காதொருவன் யார்வேலை மாமாது—காதுமா
மாலைவேர் யான்வருதோ காமிதா போர்சேது
காலைமா பூமருது கா.'

எனவும்,

'காடா மாதா ல்தாகா காதா ல்தா மாடாகா.'

எனவும்,

'காடா மாற பிறமா மாதா தாமா மாற பிறமா டாகா.'

எனவும் வரும்.

சக்கரம் வருமாறு : சக்கரம் பல விதத்தவாயினும், நான்காரச் சக்கரமும், ஆறாரச் சக்கரமும், எட்டாரச் சக்கரமும் என அடங்கும்.

அவற்றுள் **நான்காரச் சக்கரம்** வருமாறு :

**[நிலைமண்டில ஆசிரியப்பா]**

'மேனமக் கருளும் வியனருங் கலமே
மேலக விசும்பின் விழுவொடு வருமே
மேருவரை யன்ன விழுக்குணந் தவமே
மேவதன் றிறநனி மிக்கதென் மனமே.' 1

இது நான்கு ஆராய், நடுவு 'மே' என்னும் எழுத்து நின்று, முதலும் ஈறும் அதுவேயாய்ச் சூட்டின்மேல் நாற்பத்து நான்கு எழுத்தாய், ஆர்மேல் ஓரோ எழுத்தாய் முற்றுப் பெற்றது.

**[நேரிசை ஆசிரியப்பா]**

'நவைக்கணம் வீய நன்னூ லாய்ந்து
சேட்டலர் விராய மோட்டார் பிண்டி
நன்னிழன் மேயோன் சேவடி
துன்னினர் துன்னலர் துகட்டிரும் பிறப்பதே.'*

இது நான்கு ஆராய், நடுவு 'மோவிராய' என்பது பட்டு, ஆர்மேல் ஐவைந் தெழுத்தாய், சூட்டின்மேல் முப்பத்திரண்டு எழுத்துப் பெற்று முடிந்தது.

இனி, **ஆறாரச்சக்கரம்** வருமாறு :

**[நேரிசை வெண்பா]**

'பூங்கடம்பி னந்தார்தா நன்று புனைதேனூர்
கோங்கெழு கொங்கந்தார் தான்பேணு—மோங்குநன்
மாக்கோதை மாதவித்தார் தாங்கோட லெண்ணுமாற்
பூக்கோதை மாதர்தம் பொற்பு.'

இஃது ஆறு ஆராய், நடுவு ரகரவொற்று நின்று, குறட்டைச் சூழத் தா என்னும் எழுத்து நின்று, ஆர்மேல் ஏழெழுத்து நின்று, சூட்டின்மேற் பன்னி ரண்டு எழுத்துப் பெற்று முடிந்தது.

**[நேரிசை வெண்பா]**

'கொலைமான் விழியகறல் குன்றுத செவ்வி
கலிவான்சென் றூன்ற மயங்கி—யொலிபாவி
விண்க ணிடித்துரற லின்றுகி மின்னுக
கொண்கன் வரவிரவின் கண்.'

இஃது ஆறு ஆராய், '**கலி மல்லன்**' என்னும் பெயர் குறட்டைச் சூழ நின்று, நடுவு றகரம் நின்று, ஆர்மேல் அவ்வாறு எழுத்துப் பெற்று, சூட்டின்மேல் பன்னிரண்டு எழுத்துப் பெற்று, அவ்வெழுத்து மாலை மாற்றாய் முடிந்தது.

**[நேரிசை வெண்பா]**

'மண்பாய வையகத்து மாலைமாற் றிருக
எண்பா லெழுத்தும் இணையொப்ப—வெண்பாவின்
சீர்கிடப்பத் தென்றமி ழாளி கலிமல்லன்
பேர்கிடப்பப் பேசல் அரிது.'

இதன் வழியே எழுதிக் **கண்டு கொள்க.**

---

1. யா.வி. 52 உரை மேற்.

பி.ம். * பிறப்பே.

[நேரிசை வெண்பா]

'தக்கவர் சம்பந்தந் தாங்கி யிவனெஞ்ச
மக்கட் டொகைஞாலந் தந்தோம்பி—மிக்கின்றே
விண்மணந் தஞ்சாந்தந் நீவி நிரைத்தந்த
தண்மணவிற் சான்றோர் தயா.'

இதுவும் ஆறு ஆராய், நடுவுத் தகாரம் நின்று, குறட்டைச் சூழ நகர ஒற்று நின்று, ஆர்மேல் எவ்வேழெழுத்து நின்று, சூட்டின்மேற் பன்னிரண்டு எழுத்துப் பெற்று முடிந்தது.

[நேரிசை வெண்பா]

'ஆறாராய் அவ்வார்மேல் எவ்வே ழெழுத்தாகி
ஏரார்ந்த நேமிமேல் ஈராறாய்ச்—சீரார்ந்த
ஒண்குறட்டைச் சூழ நடுவோர் தகாரமேற்
றண்மணவிற் சக்கரமாந் தான்.'

இதன் வழியே எழுதிக் கண்டு கொள்க.

இனி, **எட்டாரச் சக்கரம்** வருமாறு:

[நிலைமண்டில ஆசிரியப்பா]

'கார்க்கட லொலிமா வார்ப்பொ டானைக்
கோளகட் டாவ மாழ்துய ரழுந்த
வாகந் திருநல மாகமுன் னடைமத்
தாவரை நிறீஇய மால்வரை கடிந்த
காடவர் கோன்றிரு வாரமிழ் தாடவர்க்
கடைந்த தப்புரத் தக்கது தானே.'

[நேரிசை வெண்பா]

'ஆரெட்டாய் அவ்வார்மேல் ஐயைந் தெழுத்தாகி
ஏரொத்த நேமிமேல் எண்ணான்காய்—வாரத்தால்
வாழ்க வலிவல மாவுளதேன் மாதவர்கோன்
சூழ்தருமச் சக்கரமாச் சொல்லு.'

இதன் வழியே அதனை எழுதிக் கண்டு கொள்க.

[நேரிசை ஆசிரியப்பா]

'பருவரை நிவந்துபுடை யிருங்கடல் வளவிய
வகன்பெருங் கிடக்கைப் பார்மிசைப் பல்வரைமுன்
மல்குவளங் கெழுமிய வசையறு நிதிய
மீதில புரிக பாரி போலவொன்
றினிதி னேத்திக் கவியெலாஞ் சொல்லவு
மீவோர்ப் பெருதெனப் பல்கிளை தேம்பச்
செந்தீக் கட்புலத் துளங்கொண்டு துளங்கா
வோங்குமிசை யிரவலன் களிறுசெவி தாழ்த்துக்
கேழலோ டாழ்தரு நீரகடுங் கலுழி
நீந்திக் கண்டேன் களகண் பூந்தேன்
பண்ணியல் யாழ்நல மொழியவர்
கண்மலர் புல்லிக் கலக்கநின் றோளே.'

இஃது,

[கலி வெண்பா.]

'எட்டாராய் ஆர்மேற்பத் தொன்ப தெழுத்தாகி
வட்டத்துள் எண்ணுன்காய் வன்குறட்டில்—எட்டும்
அரிதிரன் பாட்டென்றங் கார்நடுவண் நின்ற
இருநான் கியவைதுபார்த் துண்ணேன் றெருவாமை
ஆராழி பாய்ந்த இடந்தோ றழகிதாப்
பாராளும் பல்லவ மல்லனென்—றூராய்ந்
தொருங்கமைந் துள்ளாற்கவ் வாகி யொலிநீர்க்
கருங்கடற் றண்களந்தை வேந்தன்—இருங்கழற்கால்
வண்டுரையுந் தண்டார் மருசாதி வாட்களைகண்
திண்டோ ளிணைச்செவ்வி தண்டாதாக்—கொண்டமைத்
தாசிரிய மாக்கி யதனுட் கரந்தது
மாவல்சீர் வள்ளுவன் பாட்டினுள்—எசிலா
'எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு.'

எனக் கொள்க.

[நேரிசை ஆசிரியப்பா.]

'தடங்கடன் மண்ணிற் றருமருள் விரும்பிய
சின்மென் கிளவித் தெய்வப் பாரியு
மில்லை யாகிய திரவலர் வினையெனத்
தன்னுடன் பொத்திய தாசிடு சிதவலு
மடுத்த மெய்யினள் கடைத்தலை முன்சனத்
தீவது நோக்கியே * * (?)
ஏனை முனைகெட வேவிய வெட்சி
சால்பிற்றந் தோலா தாங்கே மதிநிலை
வென்றி வேழ மிகுதி பாடி
நின்றனள் விறலி நெருந லின்றே
யஞ்சி பாடிய வவ்வை போல
வறுமை யுற்ற சிறுமை மூதுரை —
தணந்து மிக்க தழற்பொலி திருமணி
யணிந்ததரைத்துஞ்ச வல்லிநின் றேளே.'

இதுவும்,

[கலி வெண்பா.]

'வட்டம் இரட்டித்து வன்குறட் டுள்ளமைந்த
எட்டாரச் சக்கரமிச் சக்கரத்தின் இட்டமையப்
பட்ட எழுத்துப் பதிற்றெட்டொ டைந்துதலை
இட்ட ஒருநூ றிவையிடுமா செப்பிய
ஆழியின்மேல் நின்றங் கணிசிறந்த ஆயுங்கால்
ஏழும் இருபதும் ஐந்தும் இனமுறையே
வாழியர்நின் றூரின்மேல் வல்லோர் வகுத்தனவும்
ஆழி முறையிற் பதினெட்டாம் சூழியன்ற

இன்குறட்டுள் எட்டும் இரவலர்தம் பல்கிளைக்கே
அன்புரைக்கு மஞ்சாதான் பாட்டென்று முன்புரைத்த
ஆராழி பாய அணிதங் கிடந்தொறவன்
தீராச் சிறப்புப்பேர் சேர்வித்து நேரொத்த
சவ்வகத்து மூன்று வதுதந்த சக்கரத்தின்
செவ்வகத்து வேந்துந் தெரிந்திவற்றால் இவ்வகையே
ஆசிரியம் ஆக்கி அதனுட் காந்துரைத்த
நேரிசை வெண்பா நினையுங்கால் பாரில்
'தருமலிந்த வண்மை தலைத்தந்து மிக்க
திருமலிந்து தீதிலவே யாக—வுருமலிந்த
வென்னரசன் மள்ளன் மதினிலை யேதிலர்க
டுன்னரிய வெஞ்சினத்தான் றேள்.'

எனக் கொள்க.

சக்கரத்திற்கும் திரிபாகிக்கும் எழுத்து எண்ணுகின்றுழி எல்லா எழுத்தும் கொள்ளப்படும்; அடிக்கு எழுத்து எண்ணுமாறு போலக் குற்றிகரக் குற்றுகரங் களும் ஒற்றும் ஆய்தமும் ஒழித்து எண்ணப்படா. திரிபாகிக்கும் அத்தொடக் கத்தன கொள்க. சக்கரத்திற்குக் காட்டின பாட்டுள்ளும் கண்டு கொள்க.

இதனுட் 'சக்கரம்' என்றதனானே, பூமிச் சக்கரமும், ஆகாயச் சக்கரமும், பூமியாகாயச் சக்கரமும், வட்டச் சக்கரமும், புருடச் சக்கரமும், சதுரச் சக்கரமும், கூர்மச் சக்கரமும், மந்தரச் சக்கரமும், காடகச் சக்கரமும், கலிபுருடச் சக்கரமும், சலாபச் சக்கரமும், சக்கரச் சக்கரமும், அரவுச் சக்கரமும் முதலாகவுடையன புணர்ப்பாவையுள்ளும், போக்கியத்துள்ளும், கிரணியத்துள்ளும், வதுவிச்சையுள்ளும் கண்டு கொள்க.

அவையெல்லாம் சாவவும் கெடவும் பாடுதற்கும், மனத்தது பாடுதற்கும் பற்றும் என்று கொள்க.

சுழிகுளமாவது, எட்டெழுத்தாய் நான்கு வரியும் முற்றுப் பெற்ற பாட்டு, முதலும் ஈறும் சுழித்து வாசித்தாலும் அப்பாட்டே ஆவது.

வரலாறு :

[வஞ்சித்துறை.]

'அதிகமல மாகாவே
திண்ணிற மேர்போகா
கனிநீங்கு மார்மா
மறங்குவகு மேல.'

எனவும்,

'கதமிகு வன்கோளி
தன்குன் றிவாற்கோ
மிகுதிற மாநீவான்
குன்றதன் மாறீவ.'

எனவும்,

'சதமக லாவேலர்
தனதிண் டேரகல
மதியடு வானூரவே
கண்டுயிலா வாடேலா.'

எனவும் கொள்க.

**ஏகபாதமாவது,** ஓரடியே நாற்கால் உச்சரித்தால், பாட்டுப் பொருள் வேறு பட்டு முடிவது.

வரலாறு :

'நாணு னிறைந்த மதியாள் கலைநான்கு மொத்தாள்'

எனவும்,

'அம்பு தைத்த விலங்கா வித்தன'

எனவும்,

'வாளும் வாளியுங் கோத்தெறிந் திட்டன'

எனவும்,

'சிலீமுகம் பாய்தரு குஞ்சி யாயினர்'

எனவும்,

'களிறும் வந்தன கண்டும்வந் தனரோ'

எனவும்,

'அரையர் கோனயி ராவண மேறினன்'

எனவும் இவற்றை நாற்கால் உச்சரித்து, **ஏக பாதம்** ஆமாறு கண்டு கொள்க.

**எழு கூற்றிருக்கையாவது,** ஏழு அறை ஆக்கி, முறையானே முறுமக்கள் முன்னின்றும் புக்கும் போந்தும் விளையாடும் பெற்றியான் வழுவாமை ஒன்று முதலாக ஏழிறுதியாக முறையானே பாடுவது.

வரலாறு :

**[இணைக்குறள் ஆசிரியப்பா.]**

ஒருபொருட் கிருதுணி புரைத்தனை யொருகா
லிருபிறப் பாளர்க்கு மூவமிழ் தாக்கி
யீரறம் பயந்த வோரரு ளாழியை
யிருமலர் நெடுங்க ணரிவையர் தம்மொடு
மூவகை யுலகி னுல்வகைத் தேவரு
மும்மையி னிறைஞ்சு மீரடி யொருவனை
யிருவினை பிரித்து மூவெயின் முருக்கி
நாற்கதி தவிர்த்த வைங்கதித் தலைவ!
நான்மறை யாள! மும்மதிற் கிழவ!
இருகுண மொருமையிற் றெரிவுறக் கிளந்த
விருசுடர் மருட்டு முக்குடைச் செல்வ!
நால்வகை வருணமு மைவகைக் குலனு
மாறறி மாந்தர்க் கறிவுற வகுத்தனை
யைந்திற நறுமலர் முன்னுற வேந்தி
நாற்பெரும் படையொடு மும்முறை வலங்கொண்
டிருகையுங் கூப்பி யொருமையின் வணங்கி
யரசர் நெருக்குறூஉ முரசுமுழங்கு முற்றத்
திருநிதிப் பிறங்கலொ டிமையவர் சொரிதலின் *
முருகயர் வுயிர்க்கு மும்மலர் மாரியை
நால்வகை யனந்தமு நயந்தனை தேவரி
னைவகை விழவு மையற வெய்தினை
யாறுபுரி நிலையுந் தேறினர்க் கியம்பினை
யெழுநயம் விரித்த திருமறு மார்பினை

பி.ம். ? செறிதலின்.

யறுபொரு ளறைந்தனை யைம்பத மருளினை
நான்குநின் முகமே மூன்றுநின் கண்ணே
யிரண்டுநின் கவரி யொன்றுநின் னசோகே
யொருதன்மையை யிருதிறத்தினை
முக்குணத்தினை நால்வகையினை
யைம்பதத்தினை யறுபிறவியை
யேழகற்றிய மாதவத்தினை
யரிமருவிய மணியணையினை
வளர்கதிரொளி மண்டலத்தினை
அதனால்,
மாகெழு நீழற் கேவலந் தோற்றிய
வாதியங் குரிசினிற் பரவுதுந்
தீதறு சிவகதி சேர்கயா மெனவே.'1

எனவும்,

[இணைக்குறள் ஆசிரியப்பா.]

'ஒருடம் பிருவரா யொன்றி யொன்றுபுரிந்
தீரிதழ்க் கொன்றை சூடினை; மூவிலைச்
சூல மேந்தினை; சுடருஞ் சென்னிமிசை
யிருகோட் டொருமதி யெழில்பெற மிலைச்சினை;
ஒருகணை யிருதோள் செவியுற வாங்கி
மூவெயி லுற்றிசை முனையரண் செகுத்தனை;
ஆற்ற முந்நெறி பயந்தனை; தேற்றி
யிரண்டி னீக்கி யொன்றி னுன்ற
விரண்டு மில்லோர்க்கு
முந்நெறி யுலகங் காட்டினை; அந்நெறி
நான்கென வூழி தோற்றினை; வாள்செலு
மைந்தலை யரவரைக் கசைத்தனை; நான்முகன்
மேன்முகக் கபால மேந்தினை; நூலின்
முப்புரி மார்பினை; மூவா மேனியை;
இருவரை குடையா வேந்திய வாற்ற
லொருபெருங் கடவு ளொருவ னுயினை;
ஆங்குநிற் காண
திருவரு மூவல கியைந்துடன் றிரிதா
நாற்றிசை
யைம்பெருங் குன்றத் தழலாய்த் தோற்றினை;
ஆறுநின் சடைய தைந்துநின் றுறையே;
நான்குநின் வாய்மொழி; மூன்றுநின் கண்ணே;
இரண்டுநின் படையே; ஒன்றுநின் னேறே;
ஒன்றியல் காட்சி யுமையவ ணடுங்க
விருங்களிற் றுரிவை போர்த்தனை; நெருங்கிய
முத்தி நான்மறை யைம்புல னடக்கிய
வறுதொழி லாளர்க் குறுதுயர் தீர்த்தனை;

1. திருப்பாமாலை

ஏழிய வின்னரம் பியக்கினே ; தாழா
வாறின் னமிழ்தம் பயந்தனை யைந்தினில்
வீறுயர் கோவை விழுத்தக வேந்தினே ;
ஆல நீழ லருந்தவர்க் கறநெறி
நால்வர் கேட்க நன்கினி துரைத்தனை ;
நன்றியின்
முந்நீர்ச் சூர்மா முரணறக் கொன்றங்
கிருவரை யெறிந்த வொருவன் றுதையை ;
ஒருமிட றிருவடி வாக்கினே ; தரும
மூவகை யுலகுட னுணரக் கூறினே ;
நால்வகை யிலக்கண விலக்கிய நலம்பட
மொழிந்தனே ;
ஐங்கணைக் காமற் காய்ந்தனே ;
அறுவகைச் சமயமு நெறியுளி வகுத்தனே ;
ஏழி னேசை யிராவணன் பாடத்
தாழாக் கேட்டவன் றலைநனி பொருந்தி
யாறிய சினத்தை யாகி யைங்கதித்
தேரொடு மற்றவன் செல்கென விடுத்தனே ;
நாற்றோ ணளனே நந்திபிங் கிருடியென்
றுற்றற் பூத மூன்றுடன் பாட
விருகண் மொந்தை யொருகண் கொட்ட
மட்டவிழ் கோதை மலைமகள் காண
நட்ட மாடிய நாத னீயே ;
அதனல்,
மண்டிணி ஞாலத்து மன்னுயிர்க் கெல்லா
மூழி நின்னடி யேத்தி நின்றபல்
லூழியும் பொன்னுல கெய்துவர் காண்பர்
அதனல்,
அறியேன் சொன்ன வறிவில் வாய்மொழி
வறிதெனக் கொள்ளா யுலகம் வேண்டும்
வெறிகமழ் கொன்றையொடு வெண்ணில வணிந்து
கீதம் பாடிய வண்ணநின்
பாதம் பரவுதுஞ் சென்னியிற் பணிந்தே.' 1

எனவும் இவை **எழுகூற்றிருக்கை.**

**காதை கரப்பு** என்பது, ஒரு பாட்டினுள் மற்றொரு பாட்டுக்கு எழுத்து உளவாய்ச் சொற்புகாமே பாடுவது.

வரலாறு :

[**நேரிசை வெண்பா.**]

'பல்லார்க்கு மீயும் பரிசிற் கொடைத்தடக்கை
மல்லார் மணிவரைத்தோள் வண்கோசன்—மல்லலந்தார்
செஞ்சொற் செருந்தைதன் றென்னுறந்தை யென்றுளும்
வஞ்சிக் கொடிமருங்கின் வந்து.'

1. இது நக்கீரர் பாடிய திருவெழுகூற்றிருக்கை, பதினோராந்திருமுறை அச்சுப்பிரதியிற் காணப்படும் பாடம் இதனின் மிகவும் வேறுபட்டுள்ளமை ஒப்பு நோக்கி யறிக.

இதனுட்போந்த செய்யுள் :

[குறள் வெண்பா.]

'எல்லார்க்கு நன்றும் பணித லவருள்ளுஞ்
செல்வர்க்கே செல்வந் தகைத்து.' 1

என இக்குறள் வெண்பாவின்கண் நேரிசை வெண்பாவின் எழுத்து உளவாய்ச் சொற்புக்கிலாமை எழுதித் தெரிந்து கொள்க.

**கரந்துறை பாட்டு** என்பது, ஒரு பாட்டுச் செவ்வே எழுதினால், அதனை ஈற்று நின்று மொழிக்கு முதலாயின எழுத்துத் தொடங்கி, ஒன்று இடையிட்டு எழுத்துக் கொள்ள, மற்றொரு பாட்டுப் போதுவது.

வரலாறு :

[நேரிசை ஆசிரியப்பா.]

**'காண்கவினன் காரோர் திரைக நல்ல
பரம்புவாய் கானலம் விடுதிசை சோரல்மா
போரளிக் கொருங்குதோ லினங்கோ ளோங்குமெண்
வாயக லிலமே னுள்ளார் வார்கலைக்
கூவீ வார்ந்தார்த் தேறுநற் றுளிக்கணங்
கருவிகதிர் கோளாய் தாதேர்ந் தாடுநர்
தேர்வ திற்றெகின் கடவிட் டேகா**
காசி லெழிலிய போமே
யாடுசெவி நோன்று ளானை யாடினனே.'

இதனைக் கீழ்மேலாக ஒன்றிடையிட்டு எழுதப் போந்த செய்யுள்,

[நேரிசை வெண்பா.]

'ஆளான் விடுமே யழிசிகாட் டன்றெதிர்ந்தார்
தாளார் கருங்களிற்றுத் தார்வீக்க—வாளா
னுலகவா மெங்கோன தோங்கொளிபோல் சோதி
விலகாவாம் பல்கதிரோன் விண்.'

என வந்தவாறு கண்டு கொள்க.

**தூசங்கொளல்** என்பது, ஒருவன் ஒரு வெண்பாச் சொன்னால், அதன் ஈற்றெழுத்தே ஈறாக, அதன் முதல் எழுத்தே முதலாக மற்றொரு வெண்பாவான ஈற்றினின்று மேற்பாடுவது.

**வாவனாற்றி** என்பது, ஓர் எழுத்துக் கொடுத்தால், அது முதலாக ஈற்றடி பாடி; பின்னும் ஓர் எழுத்துக் கொடுத்தால், எருத்தடி பாடி; மற்றோர் எழுத்துக் கொடுத்தால், இரண்டாமடி பாடி; பின்னும் ஓர் எழுத்துக் கொடுத்தால், முதலடி பாடிப் பொருள் முடிய எதுகை வழுவாமற் பாடுவது.

**கூடசதுர்த்தமாவது**, நான்காமடிக்கு எழுத்து முதல் மூன்றடியுள்ளும் பெருக்கிக் கொள்ளப் பாடுவது.

வரலாறு :

[கட்டளைக் கலித்துறை.]

'கருமால் வினைகள்கை யேறிச் செடிசெய்து காறடப் போய்
அருமா நிரயத் தழுந்துதற் கஞ்சியஞ் சோதிவளர்
பெருமான் மதிதெறு முக்குடை நீழற் பிணியொழிக்குந்
**திருமால் திருந்தடிக் காளா யொழிந்ததென் சிந்தனையே.'**

எனக் கொள்க.

---

1, குறள், 125.

கோமூத்திரி என்பது, இரண்டு வரியாக எழுதி, மேலும் கீழும் ஒன்று இடையிட்டு வாசித்தாலும் அதுவேயாவது,

வரலாறு :

[வஞ்சி விருத்தம்.]

'மேவார் சார்கை சார்வாகா
மாவார் சார்கை சார்வாமா?
காவார் சார்கை சார்வாகா
மாவார் சார்கை சார்வாமா?' 1

எனவும்,

'பரவிப் பாரகத் தார்பணி யுங்கழ
லிரவி யீர்ந்தண் வலம்புரி மாலேயே
விரவிப் போரவைத் தார்துணி வெங்கழ
லிரவி யீர்ந்தண் வலம்புரி மாலேயே.' 2

எனவும் கொள்க. பிறவும் வந்தவழிக் கண்டு கொள்க.

ஓரினத்தெழுத்தால் உயர்ந்த பாட்டு என்பது, ஓரெழுத்தினுலேயும், ஒரு சார் இனத்தினுலேயும் பாடுவது.

வரலாறு :

[நேரிசைச் சிந்தியல் வெண்பா.]

'காக்கைக்கா காகூகை கூகைக்கா காகாக்கை
கோக்குக்கூ காக்கைக்குக் கொக்கொக்க—கைக்கைக்குக்
காக்கைக்குக் கைக்கைக்கா கா.' 3

எனவும்,

[இன்னிசை வெண்பா.]

'தத்தித்தா தூதுதி தாதூதித் தத்துதி
துத்தித் துதைதி துதைத்ததா தூதுதி
தித்தித்த தித்தித்த தாதெது தித்தித்த
தெத்தாதோ தித்தித்த தாது.' 4

எனவும் கொள்க.

இனவெழுத்துப் பாட்டாவது, மூன்று வகைப்படும்: வல்லினமும், மெல்லினமும், இடையினமும் என. அவற்றிற்குச் செய்யுள் வருமாறு :

[நேரிசை வெண்பா.]

'கற்புடைத்தாக் காட்டுதற் காகாதோ கைகாட்டிச்
சொற்படைத்துக் காட்டற்கட் டுக்கத்தாற்—பொற்புடைத்தாப்
பாட்டாற்றப் பாடிப் பறைகொட்டக் கொட்டத்துக்
கோட்டாற்றுச் சேதிகத்துக் கூத்து.'

எனவும்,

---

1—2. இவற்றைப் பின் வருமாறு எழுதிக் காணக;—
'மேவார் சார்கை சார்வாகா மாவார் சார்கை சார்வாமா
காவார் சார்கை சார்வாகா மாவார் சார்கை சார்வாமா.'
'பரவிப்பாரகத் தார்பணியுங் கழலிரவி யீர்ந்தண் வலம்புரி மாலேயே
விரவிப் போரவைத் தார்துணி வெங்கழலிரவி யீர்ந்தண் வலம்புரிமாலேயே.'

3, 4. தண்டி, 96 மேற்.

[குறள் வெண்பா]

'தெறுக தெறுக தெறுபகை தெற்ருற்
பெறுக பெறுக பிறப்பு.' 1

எனவும் இவை **வல்லினத்தான் வந்த பாட்டு.**

[நேரிசை வெண்பா]

'நன்மனமும் நாணமும் முன்னினும் நான்முன்னேன்
நின்மனமும் நின்ஞுணு மென்னென்ஞே—நன்மனமும்
நண்ணுமே நன்மாமை நண்ணுமா மெண்ணுமின்ஞே
மண்ணின்மேன் மானன்ன மா.'

இது **மெல்லினத்தால் வந்தது.**

[நேரிசை வெண்பா]

'வில்லாள ருள்ளாரேல் வாளிலர் வாளாளர்
வில்லாள ருள்ளாரை வெல்வாரேல்—வில்லார்
வல்லாள ருள்ளாரை வைவ ரவர்வயின்
வல்லாள ருள்ளார் வலி.'

எனவும்,

[குறள் வெண்பா]

'வயலுழுவார் வாழ்வாருள் வாழ்வா ரயலுழுவார்
வாழ்வாருள் வாழா தவர்.' 2

எனவும் இவை **இடையினத்தான் வந்த பாட்டு.**

**பாத மயக்காவது,** மூவர் மூன்று ஆசிரிய அடி சொன்ஞல், தான் ஓரடி பாடிக் கிரியை கொளுத்துவது.

வரலாறு :

[நிலைமண்டில ஆசிரியப்பா]

'ஈயற் புற்றத் தீர்ம்புறத் திறுத்த 3
கற்ருேய்த் துடுத்த படிவப் பார்ப்பான் 4
நன்ஞட் பூத்த பொன்னிணர் வேங்கை 5
மலர்கொய வுறுவதென் மனமவள் மாட்டே.

இது பழவடி மூன்றஞேடு தாம் ஓர் அடி பாடிப் **பாக்கஞர்** பாடிய **பாத மயக்கு.**

**பாவின் புணர்ப்பாவது,** நால்வர் நான்கு பாவிற் கட்டுரை சொன்ஞல், அவையே அடிக்கு முதலாகப் பாடிப் பொருள் முடிப்பது.

வரலாறு :

[நேரிசை வெண்பா]

'மலைமிசை எழுந்த மலர்தலை வேங்கைப்
பொத்தகத் திருந்த நெய்த்தலைத் தீந்தேன்
கண்டகம் புக்க செங்கண் மறவன்
யாழி னின்னிசை மூழ்க
வீடுகெழு பொதியில் நாடுகிழ வோனே.'

இது பாவுக்கு ஒப்பப் பாடியது.

---

1. யா. வி. 2 உரை மேற். 2. யா. வி. 2, 15 உரை மேற். 3. அகம். 8:1
4. முல்லைப். 37 5. அகம். 85·20

**ஒற்றுப் பெயர்த்தல்** என்பது, ஒரு மொழியைப் பாட்டின் இறுதிக்கண் வைத்துப் பிரிதொரு பொருள் பயக்கப் பாடுவது.

வரலாறு :

*[நேரிசை வெண்பா]*

'நறுமாந் தளிர்மேனி நாளுருப் பிள்ளை
உறுமாறு கொள்ளின் வருந்தும்—பெறுமாறு
வெண்ணெய் உருக்கி நறுநெய் கொடுத்தேனும்
எண்ணெய்கொண் டப்புந் தலை.'

எனவும்,

'என்னைநீ காயல் எரிகதிரோய்! யான்பயந்த
பொன்னங் கழலான்பின் போகிய—மின்னைக்
கருதலரே யாகிக் கருணைக்கொன் றிட்ட
பருதிவேற் பாண்டவரைக் காய்.'

எனவும்,

'செய்துமோ பாண! திருவி லுடனேந்திப்
பொய்திர் நெடுந்தேர் புரிதக *—மெய்யே
பலமுறை யாலிரவென் மாமகிழார் † சோரர்
குலமுறையாற் செற்றுன் ‡ குறை.'

எனவும்,

(இது பொய்கைக் கதயானை சூழாசிரியர் பாடியது § அவர் வைத்த விரதமாவது ¶)

*[நேரிசை வெண்பா]*

'தேருடைத்தாய்க் கற்பாய்த் ** திணமருதாய்த் திண்மரம்
ஓரடியுட் பத்துடன் ஒற்றுப்பேர்த்—தேருடைய
பண்பாவு தொல்சீர் மறமன்னர் தம்முன்னல்
வெண்பா உரைப்பான் கவி.' 1

எனவும் வரும். பிறவும் அன்ன.

**ஒரு பொருட்பாட்டாவது**, ஒன்றனையே வருணித்துப் பாடுவது.

வரலாறு :

*[நிலைமண்டில ஆசிரியப்பா]*

'மனங்கனிந் தன்ன மண்மிசைத் தோன்றிப்
பனங்கனி நிறத்த பரூஉத்தாள் முழுமுதல்
நார்பொதி வயிற்றி னீர்பொதி மென்மூளை
தந்துநிறுத் தன்ன தோற்றமொடு கவின்பெறத்
5 திரிந்துவிட் டன்ன திண்கெழு நுண்சுருள்
ஊழி நூழிலை யுயரிய வரைபுரை
கலங்க மேய்ப்ப வாகிய †† நெகிழ்ந்து
வாளினங் கருக்கின் அவ்வயி றழுங்கச்
சூல்சுமந் தெழுந்த செம்மூக் கணிகுலை

1. தண்டி. 98, உரை மேற்கோட்செய்யுட்களாகிய 'பொற்புடைய மாதர்' 'ஓரடியுட் பத்து' எனத் தொடங்கும் செய்யுட்களையும் அவற்றின் உரையையும் இதனுடன் ஒப்பு நோக்குக.

பி.ம் * புகுதக, புகுதுக † யாலிர வெண்மா மகிழார் ‡ சென்றுன்.
§ இவை பெரய்கைக் கதத்த யானைச் சூழாசிரியர் பாடியவை ||வாதமாவது ** காமர் ††வாய

10 மூங்கா மூக்கெனத் தோன்றியாங் கெய்தி
அதிரலங்கன் * கோதை யாயிழை மகளிர்
பரிசா மேய்ப்பப் பலபோது பொதுளி
நாய்சிரித் தன்ன தோற்றமோ டுடும்பின்
தோலுரித் தன்ன பூழ்படு பட்டைக்
15 கிளிச்சிற கேய்க்கும் பாவையம் பசுங்காய்
இழுதி னன்ன இன்கனி ஏந்தி
வாழைதன் னகலிலை மறைக்கும் ஊரன்
முரண்கொள் யானை முத்துப்படை அழுங்க
அரண்கொள் மாக்களிற் றேன்றும் நாடன்
20 அன்புதர வந்த என்புருகு பசலை
தணிமருந் தறியாள் அன்னை உருவுகிளர்
அந்தளி, ரென்னுமென் றடமென் றோளே.'
என வரும். பிறவும் அன்ன.

சித்திரப்பா என்பது, நான்கு கூடின எல்லாம் பத்தாகவும் மூன்று கூடின வெல்லாம் பதினைந்தாகவும், பிறவாற்றானும் எண் வழுவாது பாடுவது.

வரலாறு :

[நேரிசை ஆசிரியப்பா]

'ஒருதிரட் பிண்டிப் பொன்னெயில் மூன்றின்
ஈரறம் பயந்த நான்முக அண்ணல் [10]
மூவகை உலகிற்கும் ஒருபெருங் கடவுள்
நால்வகை யோனியுள் இருவினை கடிந்து [10]

முக்கெறி பயந்த செந்நெறி ஒருவன்
நால்வகை அளவையும் இருவகைப் பண்பும் [10]

ஒன்ற உரைத்த முக்குடைச் செல்வன்
ஈரடி பரவினர் என்ப
பேரா நானெறி † பெறுகிற் போரே.' 1 [10]

இது நான்கு புணர்ந்து கூடியவெல்லாம் பத்தாகிய சித்திரப்பா. இதனை நான்கு வரியும் முறையே எழுதிக் கண்டு கொள்க.

[நேரிசை வெண்பா]

'இருவரமாம் ஏழுநாள் ஆறமர்ந்தான் கோயில்
ஒருவனையே நாடிய போந்தேம்—ஒருவனும்
எண்கையான் முக்கணான் நான்முகத்தான் ஒன்பானோ
டைந்தலைய நாகத் தவன்.' 2

| 2 | 7 | 6 |
|---|---|---|
| 9 | 5 | 1 |
| 4 | 3 | 8 |

இஃது இணைந்து மூன்று கூடினவெல்லாம் பதினைந்தாகிய சித்திரப்பா. இதனை ஈசானன் திசை முதலாக எட்டுத் திசை மேலும் நிறுத்தி, நடுவே பின் ஐந்து நிறுத்திவிடுவது.

1, 2. திருப்பாமாலை
பி—ம் : * ஆலரங் ‡ நன்னெறி

பிறவும் அன்ன.

**விசித்திரப்பா** என்பது, எங்கும் ஏழறையாகக் கீறி, மேலே ஒழுங்கினுள் மொழிக்கு முதலாயின எழுத்து ஒரு பொருள் பயக்க நிறுவி, அவ்வெழுத்துக் களை ஒழுங்கும் கண்ணறையும் படாமே நிறுவி, ஓரெழுத்துக்கு ஓரடியாக வானும் ஒரு சீராகவானும் முற்றுப் பெறப் பாடுவது.

எழுத்து நிறுவுதற்கு இலக்கணம்: ஒருவன் பாண்டவர் யானைக்கொம்பே புள்ளித்தாய்க் கண்ணன்றோடு திசையே எனக் கொள்க. நான்காவது முதலா நான்கிறுதியாக அதன் மூன்று முதலாக முடிவது எனவும் கொள்க. **அமிதபதி கவி** என வரும். பிறவும் அன்ன.

விகற்ப நடைய வினவுத்தரமாவது, வினவினர்க்கு விடைக்குறையாகிய ஒரு மொழியும் தொடர்மொழியும் புணர்ப்பது.

*வரலாறு :*

**[நேரிசை வெண்பா]**

'பூமேலாள் ஆரென்பார்? பூம்போர்வை என்செய்யும்
தீமேல் படின்? கொடுத்தார் கொள்வதெவன்?—ஆமே
நலந்திகழும் செங்கை நயதீரன் எங்கோன்
சிலம்பின் திருவேங் கடம்.'

இது தொடர்மொழி வினவுத்தரம். ஒரு மொழி வினவுத்தரம் வந்துழிக் கண்டு கொள்க. இவற்றின் விகற்பமும் அறிந்து கொள்க.

சருப்பதோபத்திரமாவது, எட்டு எழுத்தான் இயன்ற நான்கு வரியாம். அவை மாலை மாற்றும், சுழிகுளமுமாய் ஒருங்கு வரச் சொல்வது.

*வரலாறு :*

**[வஞ்சி விருத்தம்]**

'நீகாவா மாமா வாகாநீ
தாமாவா தாதா வாமாதா
வாவாகோ தாதா கோவாவா
மாதாதா மாமா தாதாமா.'

எனவும்,

'பீநீகா மாமா காநீபீ
நீகாமா வாவா மாகாநீ
காமாவா கோகோ வாமாகா
மாவாகோ தாதா கோவாமா.'

எனவும்,

'மாநீகா மாமா காநீமா
நீகாமா வாவா மாகாநீ
காமாவா கோகோ வாமாகா
மாவாகோ தாதா கோவாமா.'

எனவும்,

'மாமாதா நீநீ தாமாமா
மாதீயா காகா யாதீமா
தாயாவே டாடா வேயாதா
நீகாடா யாயா டாகாநீ.'

எனவும் கொள்க.

இப்பெற்றியே எல்லா எழுத்தும் மொழிக்கு முதலாயினவே நிறுவி, ஓரெழுத்துக்கு ஓரடியாகப் பாடிப் பொருள் முடிப்பனவும் சருப்பதோபத்திரம் எனப்படும். அவையும் வந்தவழிக் கண்டு கொள்க.

**எழுத்து வருத்தனமாவது**, ஓரெழுத்து முதலாக ஒன்று தலைச்சிறந்து ஏறிய எழுத்துக்களால் முறையே பொருள் பயக்கச் சொல்லுவது.

*வரலாறு :*

[நேரிசை வெண்பா]

'கூர்ப்பதனை ஓரெழுத்தால் என்சொல்லும்? **தூய்ப்பதற்குப்**
பேர்த்தெழுத்தொன் றிட்டாற் பெயரென்னும்?—பேர்த்தும்
பிணக்கும் எழுத்தொன்று பேர்த்துரைத்தால் என்னும்?
மணத்தின் பெயர்வதுவை யாம்.'

எனக் கொள்க. பிறவும் அன்ன.

'சார்ந்த எழுத்து வருத்தனம்' என்று சொன்னவதனால், முன்னம் ஒரு சொல்லேயாய்ப் பின்னை முறையானே ஓரோ எழுத்து ஏறச் சொல்லப்படு வனவும் 'எழுத்து வருத்தனம்' எனப்படும். அவை வந்தவழிக் கண்டு கொள்க.' 1

'மற்றும் வடநூற் கடலுள்
ஒருக்குடன் வைத்த உதாரணம் நோக்கி
விரித்து முடித்த மிறைக்கவிப் பாட்டே.'

என்பது, 'ஆரியம்' என்னும் பாரிரும்பௌவத்துக் காட்டிய அக்கரச் சுதக மும், மாத்திரைச் சுதகமும், பிந்து மதியும், பிரேளிகையும் முதலாகவுடை யனவும், இப்பெற்றியே தமிழாகச் சொல்லும் மிறைக் கவிகளும் அறிந்து கொள்க,' என்றவாறு.

அவற்றுட் சில வருமாறு :

[நேரிசை வெண்பா]

'நெற்பெயர தொன்றை நிறுவிக் கடைநீக்க
நற்பயத்தி னுற்கால தொன்றாகும்;—மற்றதன்
ஈற்றெழுத்து நீக்க இயல்புடைய நூற்செய்கை
பாற்படத் தோன்றும் பயின்று.'

**இஃது அக்கரச் சுதகம்; 'எழுத்துச் சுருக்கம்' எனவும் அமையும்.**

**வரலாறு :**

**பாலாவி, பாலா, பா**

**எனக் கொள்க.**

[குறள் வெண்பா]

'வாம மணிமே கலையார் மயிர்குறுகின்
ஆமவர் பெய்யும் அணி.'

**எனவும்,**

'வண்ணத்தின் ஒன்றேறி மாத்திரையிற் குன்றுமேல்
கண்ணன் உமிழ்ந்த பொருள்.'

எனவும்,

'மயிர்நிறுவி மற்றதற்கோர் புள்ளி கொடுப்பின்
செயிர்தீர் மரமாகும் சென்று.' 2

எனவும், இவை மாத்திரைச் சுதகம்; 'அளவுச் சுதகம்' எனவும் அமையும்.

---

1. மாறன். 278 உரையும், உதாரணமும் நோக்குக. 2. நன். 269 உரைமேற்.

வரலாறு :

1. கூழை, குழை
2. நீலம், நிலம்
3. ஓதி, ஒதி

எனக் கொள்க.

பிந்துமதி என்பது, எல்லா எழுத்தும் புள்ளியுடையனவே 1 வருவது.

வரலாறு :

[குறள் வெண்பா]

'நெய்கொண்டெ னெற்கொண்டே னெட்கொண்டென் [கொட்கொண்டேன்
செய்கொண்டென் செம்பொன்கொண் டென் ?'

எல்லா எழுத்தும் புள்ளியுடையனவே வந்தமையால், இது பிந்து மதி.

[அறுசீர் விருத்தம்]

'தறியும் இரண்டு தையலார் அணியும் இரண்டு தார்வேந்தர்
அறிய அரசர் வீற்றிருக்கும் அணையும் இரண்டென் றுடையராய்ச்
செறிய வல்லான் றேய்த்தமையாற் செழும்பூர் சோலை தாமுடையர்
வெறிகொள் தொண்டை யார்வேந்த னவையுள் விரவா ரொருவரே.'

வரலாறு :

பொத்தகம்

இது பிரேளிகை. 2 பிறவும் அன்ன.

'விரித்து முடித்த மிறைக்கவிப் பாட்டு' என்று சிறப்பித்தவதனால், நிரோட்டி பாடுதலும், அலகிருக்கை வெண்பாப் பாடுதலும், முண்டப்பாட்டு வாசித்தலும், தேர்கையும், திரிபாகியும், கண்ட கட்டும், கல்லவலும் முதலாக வுடையனவும் அறிந்து கொள்க.

அவற்றுள் நிரோட்டியாவது :

[நேரிசை வெண்பா]

'ஆறிரண்டாம் ஆவியும் ஐயிரண்டாம் ஆவியும்
மாறிகந்த உஊவும் ஓனமும்—கூறில்
வகர பகரமஃகான் வந்தணையாச் செய்யுள்
நிகரில் நிரோட்டி எனல்.' 3

ரலாறு :

[நேரிசை வெண்பா]

'ஆர்கலிநீர் ஞாலத் தலந்தார்கட் காற்றலாற்
காரெழிலி நாணக் கலந்ததே—சீர்சான்ற
சண்டர சண்டன் சனந்தாங்கி சங்கையார்
கண்டர கண்டன்றன் கை.'

பிறவும் அன்ன.

தேர்கையாவன : குறைத்தலைப் பிணங்கண்டு 'காவிப்பல்லன்' என்றான் என்பதும், 'குதிரை பட்ட நிலமிது,' எனச் 'செத்தது பெட்டைக் குதிரை,' என்றான் என்பதும் முதலாவுடையன. 'விரலும் கண்டகமும் கண்டறிந் தான்,' என்பதும் பிறவும் அன்ன.

---

1. ஈண்டுப் 'புள்ளியுடையனவே'' என்றது, மெய்களையும் எகரஒகரங்கள் கூடிப் பிறந்த உயிர்மெய்களையும் எனக் கொள்க. [நன், 269 உரை நோக்குக.] 2. 'பிரேளிகை) என்பது விடுக்கும் பிதிர்(ஆ''.தாவது விடுகவி)—தொல் சொல். 449 உரை 3 உ, ஊ, ஒ, ஓ, ஔ, ப, ம, வ, ஆகிய இவை இதழ் குவித் தொலிக்கப் பிறப்பன வாதலின் இவை வாராது பாடுவது நிரோட்டி என்க.

திரிபாகியாவது, 'மூன்றெழுத்தாய் ஒன்றின் பெயராய், முதலும் ஈறும் ஒன்றின் பெயராய், இடையும் ஈறும் ஒன்றின் பெயராயின,' என்று வாயின் வாசகம் செய்வதும் நிறுவுவதுமாம்.

வரலாறு :

'போர்ப்பது, பருத்தி—பாதிரி' என நிறுத்தி, 'பாரி, திரி' என்று அவிழ்ப்பது.

பிறவும் அன்ன.

'கண்ட கட்டு' என்பது, 'பசுக்கொண்டு போது,' என்று சொல்லப் போயினான், சென்று கண்டு மீண்டு வந்து, 'அவையுள்ளாயின,' என்னிற் 'போதாவாயின,' என்று அவிழ்ப்பது. பிறவும் அன்ன.

கல்லவலாவது, நாடறி சொற்பொருள் பயப்பப் பிழையாமை வாசகம் செய்வது.

வரலாறு :

'மனையிற்கு நன்று.'

'முதுபோக்குத் தீது.'

'முதுபோக்கே அன்று.'

'பெருமூர்க்குத் தீது.'

என்பனவாம்.

'உருவக மாதி விரவியல் ஈறு

வருமலங் காரமும்.'

என்பது, உருவகமும், உவமையும், வழிமொழியும், மடக்கும், தீபகமும், வேற்றுமை நிலையும், வெளிப்படை நிலையும், நோக்கும், உட்கோளும், தொகைமொழியும், மிகை மொழியும், வார்த்தையும், தன்மையும், பிற பொருள் வைப்பும், சிறப்பு மொழியும், சிலேடையும், மறுத்து மொழி நிலையும், உடனிலைக் கூட்டமும், நுவலா நுவற்சியும், உயர் மொழியும், நிதரிசனமும், மாறுபட்டும், ஒருங்கியல் மொழியும், ஐயமும், உயர்வும், விரவியலும், வாழ்த்தும் என்று ஓதப்பட்ட அலங்காரங்களும் என்றவாறு. அவை அணியியலுட் கண்டு கொள்க.

வாழ்த்து இரண்டு வகைப்படும்: மெய் வாழ்த்தும், இரு புற வாழ்த்தும் என.

வரலாறு :

[நேரிசை வெண்பா]

'கார்நறு நீலம் கடிகயத்து* வைகலும்

நீர்நிலை நின்ற பயன்கொலோ†—கூர்நுனைவேல்

வண்டிருக்க நக்கதார் வாமான் வழுதியாற்

கொண்டிருக்கப் பெற்ற குணம்?' 1

இது மெய் வாழ்த்து.

இருபுற வாழ்த்து வருமாறு :

[நேரிசை வெண்பா]

'பண்டும் ஒருகாற்றன் பைந்தொடியைக் கோட்பட்டு

வெங்கடம் வில்லேற்றிக் கொண்டுழந்தான்—தென்களந்தைப்

பூமான் திருமகளுக் கின்னம் புலம்புமால்

வாமான்றேர் வையையார் கோ.'

இஃது இரு புற வாழ்த்து.

---

1. முத்தொள்ளாயிரம்.

பி-ம் ; * கடியகத்து, † தவங்கொலோ,

வசையும் இரண்டு வகைப்படும்: மெய் வசையும் இரு புற வசையும் என.

வரலாறு :

[நேரிசை வெண்பா]

'தந்தை இலேச்சுமடன் தாய்தொழீஇ தான்பார்ப்பான்
எந்தைக்கி தெங்ஙனம் பட்டதுகொல்—முந்தை
அவியுணவி ஞர்தெரியின் யாவதாங் கொல்லோ
கவிகண்ண ஞர்தம் பிறப்பு!'

இது மெய் வசை.

[நேரிசை வெண்பா]

'படையொடு போகாது நின்றெறிந்தான் என்றுங்
கொடையொடு நல்லார்கட் டாழ்ந்தான்—படையோடு
பாடி வழங்கும் தெருவெல்லாம் தான்சென்று
கோடி வழங்கு மகன்.'

இஃது இரு புற வசை.

'கவியே கமகன் வாதி வாக்கியென்
றவர்கள் தன்மையும்'

என்பது, 'கவியும், கமகனும், வாதியும், வாக்கியும் என்ற இந்நால்வரது தன்மையும்,' என்றவாறு.

அவருட் கவி என்பார் நான்கு வகைப்படுவர்: ஆசு கவியும், மதுர கவியும், சித்திர கவியும், வித்தார கவியும் என.

அவரைக் கடுங்கவி, இன்கவி, அருங்கவி, பெருங்கவி என்று வேண்டுவாரும் உளர்.

ஆசுகவியாவான், தொடுத்த பொருளும், தொடுத்த சூழலும், அடுத்த தொடையும் வழுவாமற் கடுத்துப் பாடுவான்.

மதுர கவியாவான், சொற்செல்வமும் பொருட்பெருமையும் உடைத்தாய்த் தொடையும் தொடை விகற்பமும் துதைந்து, உருவகம் முதலாகிய அலங் காரங்களை உட்கொண்டு, ஓசைப் பொலிவு உடைத்தாய், உய்த்துணரும் புலவர் கட்கு ஒலி கடல் அமிழ்தம் போன்று இன்பம் பயக்கப் பாடுவான்.

சித்திர கவியாவான், மாலை மாற்று முதலிய அருங்கவி பாடும் நன்மையை உடையான்.

வித்தார கவியாவான், மும்மணிக் கோவையும், பன்மணி மாலையும், மறமும், கலி வெண்பாவும், மடலூர்ச்சியும் முதலாகிய நெடும்பாட்டுக் கோவையும்; பாசாண்டமும், கூத்தும், விருத்தமும், கதை முதலாகிய செய்யுளும் இயல் இசை நாடகங்களோடும் கலை நூல்களோடும் பொருந்தப் பாடும் பெருங்கவி எனக் கொள்க.

ஒழிந்த விகற்பங்கள் கவி மயக்கறையுள்ளும், பிறவற்றுள்ளும் கண்டு கொள்க.

இனி, கமகனுவான், பல நூல்களது வகைமையாலும், மதியது பெருமை யாலும் கல்லாத நூல்களையும், கற்றுர் வியப்ப உய்த்துரைக்கும் கருத்துடைய புலவன் எனக் கொள்க.

வாதியாவான், மேற்கோளும் ஏதுவும் எடுத்துக் காட்டும் நாட்டி, அளவை செய்து, தன் கோள் நிறீஇப் பிறன் கோள் மறுப்பான் எனக் கொள்க.

**வரலாறு :**

'நிலைபேறு இல்லை சொல், செய்யப்படுதலால்; குடம்போல,' என்பது, நிரலே மேற்கோளும் ஏதுவும் எடுத்துக் காட்டும் ஆயின. 'நிலைபேறு இல்லை சொல்,' என்பது மேற்கோள்; 'செய்யப்படுதலால்' என்பது ஏது; 'குடம் போல' என்பது எடுத்துக் காட்டு.

'நிலைபேறு உடைத்துச் சொல், செய்யப்படாமையால்; ஆகாயம் போலும்,' என்பதும் ஓர் அளவை. **'அளவை'** எனினும், **'பிரமாணம்'** எனினும் ஒக்கும்.

இனி, **'வாதம்'** என்பது, சல வாதமும் விதண்டா வாதமும் முதலாகப் பல என்று எடுத்து ஓதுவாரும் உளர்.

**வாக்கி** என்பான், அறம் பொருள் இன்பம் வீடுகண்மேற் கேட்க வேட்கை பிணிக்கச் சொல்லும் ஆற்றல் உடைய ஆசிரியன் எனக் கொள்க.

'அவையினது அமைதியும்' என்பது, 'அவையோரது தன்மையும்' என்றவாறு. அவைதாம் நான்கு வகைப்படும் : நல் அவையும், தீ அவையும், குறை அவையும், நிறை அவையும் என.

என்னை ?

'அவையெனப் படுபவை அரிறபத் தெரியின்
நல்லவை தீயவை குறைநிறை யவையெனச்
சொல்லுப என்ப தொல்லை யோரே.'

என்பவாகலின்.

*[நல்லவை.]*

'அவற்றுள்,
நல்லவை யென்பது நாடுங் காலை
எத்துறை யானும் இருவரும் இயம்பும்
அத்துறை வல்லோர் அறனெடு புணர்ந்தோர்
மெய்ப்பொருள் கண்டோர் மிக்கவை ஓர்ப்போர்
கற்றவர் கல்விக் கடாவிடை அறிவோர்
செற்றமும் சினமும் சேரா மனத்தோர்
முனிவொன் றில்லோர் மூர்க்கர் அல்லோர்
இனிய முகத்தோர் இருந்துரை கேட்போர்
வேந்தன் ஒருவர்கண் வாரம் படினும்
தாந்தாம் ஒருவர்கட் பாங்கு படாதோர்
அன்னோர் முன்னர்க் கூறிய பொழுதிற்
றொலையு மாயினும் தொலைவெனப் 1 படாஅது
வெல்லு மாயினும் மிகச்சிறப் புடைத்தே.'

எனக் கொள்க.

*[தீயவை.]*

'தீயவை என்பது தெரியுங் காலைச்
சுலாவும் சுண்டும் தாமேற் கொண்டு
நிலவாப் பொருள்களைக் குலவி யெடுத்தாங்
குரைத்தவொரு வற்காய்ச் செருவென மொழிந்து
சொல்லிய துணரா தல்லவை யுணர்ந்து
வாரம் படுவது தீயவை யாகும்.'

எனக் கொள்க.

---

1. தொலைவு—நாத்தொலைவு முதலிய சோர்வுகள் (மணி. 24:99(

[நிறையவை.]

'நிறையவை என்பது நினையுங் காலை
எல்லாப் பொருளும் தம்மகத் தடக்கி
எதிர்வரு மொழிகளை எடுத்துரைப் பதுவே.'

எனக் கொள்க.

[குறையவை.]

'குறையவை என்பது கூறுங் காலை
நிறைவில் சொல்லை நினைந்தவை யெடுப்ப
அறையும் என்ப ஆணையின் இகந்தே.'

எனக் கொள்க.

[தொலைவு]

'தொலைவெனப் படுபவை சொல்லுங் காலைக்
கூறியது கூறல் மாறுகொளக் கூறல்
பொருளல கூறல் மயங்கக் கூறல்
கேட்போர்க் கின்னா யாப்பிற் றாகிப்
பழித்த மொழியான் இழித்துக் கூறல்
தன்னான் ஒருபொருள் கருதிக் கூறல்
இன்னா வகையின் மனங்கோ ளின்மை
அன்னவை பிறவும் அவற்றினெறி யாகும்.'

எனக் கொள்க.

'பாடுதல் மரபு' என்பது, குலனும் விச்சையும் ஒழுக்கமும் பிராயமும் என்றிவற்றிற்குத் தக்க வகையால், பாட்டுடைத் தலைமகனையும் அவன் சின்னங்களையுமே பாடுதலும், கிளவிப்பொருள் அல்லனவற்றோடு பாட்டுடைத் தலைமகனைப் பெயரும் ஊரும் முதலிய உறுப்புக்களைச் சேர்த்திப் பாடுதலும், தீயனவற்றை அவன் பகைவரைச் சார்த்திப் பாடுதலும் என இரண்டாம். அவையெல்லாம் பெரிய முப்பழம் முதலாயினவற்றுட் கண்டு கொள்க.

'தாரணை பகுதியும்' என்பது, 'தாரணை விகற்பங்களும்' என்றவாறு.

தாரணை விகற்பங்களாவன, நாம தாரணையும், அக்கரத் தாரணையும், செய்யுட்டாரணையும், சதுரங்கத் தாரணையும், சித்திரத் தாரணையும், வயிரத் தாரணையும், வாயுத் தாரணையும், நிறைவு குறைவாகிய வெண்பொருட்டாரணையும், வத்துத் தாரணையும் ஆயினவற்றை உருவக்கர சங்கேதங்களால் இடம்பட வறிந்து தரித்து, அனுலோமமாகவும் பிரதிலோமமாகவும் பிறவாறாகவும் சொல்லுவது. அவையெல்லாம் தாரணை நூலுட் கண்டு கொள்க.

சதுரங்க அறையில் உருவுகளை உருவக்கர சங்கேதங்களால் திரித்துக் குதிரையடியாகவும், குதிரையும் யானையுமாகவும் பாய்ந்து வருவதற்கு இலக்கணம் வருமாறு :

[நேரிசை ஆசிரியப்பா]

'கடிகம ழிலைமலர் சீரிதழ்த் தாமரைப்
பனிமலர் வாட்டிய மீமிசை நிகரினா
புரமிக லூன்றலின் மேலொளி நெருங்கிய
சேண்விளங் கெழிலடி குறுகுதற் றூநிறப்
பெருமலர் வேங்கையு மூங்கிலு நுடங்கிப்
பிணியவிழ் வித்த மாத்த ஊறவமும்

சாந்தமு மகிலுங் கிளர்ந்து தீங்கனிச்
சூரலு முகிரலுங் கெழுமித் தேறிய
நூலவர் பேணும் வெட்சியு முறிததை
விரைமலர் மகிழு நாகமும் பீடுடைத்
திருவுஞ் சகமலி யாதி கீர்த்தி
ஊனமில் கேள்வியிற் றெளிந்து சுரும்பிவர்
நீடிணர்ப் பாசிலை வடுமா மிசைமிக
உருகெழு மென்கனி நேரே பூசணித்
துகளறு செங்கா யேங்கெனக் கூறி
ஈண்டிய காதலிற் றடவிய சிறுநுதற்
பெருமதர் மழைக்கட் செவ்வாய்ப்
புரிகுழ லிக்கியாம் பொதிபெறற் பொருட்டே.' 1

இந்நேரிசை ஆசிரியம் வேண்டியதோர் முதலாகவாயினும், வேண்டியதோர் அறை ஈருகவாயினும் பாய்த்துவது.

சிறு நுதலவரைப் 2 பாய்த்த அறுபத்துநாலு வெங்குதிரை வரும்.

இனி, குதிரையும் யானையுமாகப் பாய்த்துமாறு : 3

[நிலைமண்டில ஆசிரியப்பா]

'செங்கை யுந்திச் சீர்மலி யாரம்
கீழணி தாழ்பொழில் கண்ணகன் திண்ணிலம்
சகமலி யிருவினைச் சார மீரம்
சித்திர மத்திரம் கிளரொளி தளரகிற்
கார்மழை தீரணி நான்மறை மீனுரு
வாடை பீடை வித்தர் பத்தர்
நிலமும் மலையும் பிரமனு மவர்மணி
மிகவு நகுமதி மாரி நீரில்
பார வீரர் புள்ளி வெள்ளை
முத்தி நெய்த்த நூலோர் மேலோர்
பேரா வூழி பெரிய வுருவுடை
பூதிய வேதன் மூரி நோன்ற
மெய்ம்மை நுண்மை தெள்ளிய குருபரன்
எந்தையன் சுந்தா னூரன் சேரன்
தூதன் கேசவன் சூழ்பொழி லேழணி
கூறிய தேர்வும் கெழுமிய துத்திச்
சீரிய கரிபரி தெரிந்தனன் தெளிந்தே.'

இதன் அடைவே கரியும் பரியும் வேண்டியதோர் அறை முதலாகவும, வேண்டியதோர் அறை ஈருகவும் துதித்து வரைய, அறுபத்து நாலும் வரும்.

---

1. அ ஆ இ ஈ உ ஊ எ ஏ இவை உருவக்கர சங்கேதங்கள்.
   1 2 3 4 5 6 7 8
2. 'சிறுநுதலவர்' என்பதில் 'சி' என்னும் எழுத்துக்கு 3-ம், 'நு' என்னும் எழுத்துக்கு 5-ம் உருவக்கர சங்கேதமெனக் கொள்க.
3. குவ்வுக்கு 5-ம், யாவுக்கு 2-ம் உருவக்கர சங்கேதமாம்.

இனி, இவற்றைச்

'சிறுநுதல் கடிகமழ் பெருமதர் மழைக்கண்
துத்திச் செங்கை சீரிய கரிபரி.'

என மாறியும் படிக்கக் கடிதின் உதவும்.

அறைகட்கு எழுத்து நிறுத்துவதற்கு இலக்கணம்:

[குறள் வெண்பா]

'அன்னம் கழிசங்கு தத்தை நகர்பறவை
மன்னன் வலம்புரியோ டெட்டு.' 1

[அறுசீர் விருத்தம்]

'அன்னம் ஒன்றும்; கழியிரண்டாம்;
அணிநீர்ச் சங்கம் ஒருமூன்றும்;
தண்ணந் தத்தை ஈரிரண்டாம்;
தகைசால் நகரம் ஐந்தாகும்;
பன்னும் பறவை இருமூன்றும்;
பழிதீர் மன்னன் ஓரேழாம்;
மன்னு மொழியாய்! வலம்புரியேல்
மருடீர் இருநான் காகும்மே.'

எனக் கொள்க.

இவற்றை நிரலே அ, க, ச, த, ந, ப, ம, வ என அணிந்து, அந்த அறைகளில் ஏகார எழுத்தளவு எதிர் நடாத்த அறுபத்து நாலறைக்கும் எழுத்துக்களாம்.

ஆனந்தம் ஆறு வகைப்படும்: எழுத்தானந்தமும், சொல்லானந்தமும், பொருளானந்தமும், யாப்பானந்தமும், தூக்கானந்தமும், தொடையானந்தமும் என.

'உறுபுகழ் மரபின் உயர்ந்தோர் கூறிய
அறுவகை மரபின ஆனந் தம்மே.'
'அவைதாம்,
இயனெறி திரிந்த எழுத்தா னந்தமும்
சொன்னெறி வழீஇய சொல்லா னந்தமும்
புகழ்ச்சிநிலை திரிந்த பொருளா னந்தமும்
யாப்புநிலை திரிந்த யாப்பா னந்தமும்
தூக்குநெறி திரிந்த தூக்கா னந்தமும்
தொடைநெறி திரிந்த தொடையா னந்தமும்
நடையறி புலவர் நாடினர் இவையே.'

அவற்றுள் எழுத்தானந்தமாவது, பாடப்படுவோன் பெயரைச் சார்த்தி எழுத்து அளபெழப் பாடுவது.

என்னை?

'இயற்பெயர் சார்த்தி எழுத்தள பெழினே'. 1
இயற்பா டில்லா எழுத்தா னந்தம்.' 2

என்றாராகலின்.

---

1. அ க ச த ந ப ம வ } இவை உருவக்கர சங்கேதங்கள்.
   1 2 3 4 5 6 7 8 }

2. அகத்தியனார் ஆனந்த ஒத்து; 1, 2, 3. யா. வி. உரைமேற்.

வரலாறு :

[நேரிசை வெண்பா]

'ஆழி யிழைப்பப் பகல்போம்; இரவரின்
தோழி துணையாத் துயர்தீரும்;—வாழி
நறுமாலை தாராய் திரையவோஒ வென்னும்
செறுமாலை சென்றடையும் போது.' 1

இது பொய்கையார் வாக்கு. இதனுள் 'திரையவோஒ' என்புழி இயற் பெயர் சார்த்தி எழுத்தளபெழுந்தமையான், எழுத்தானந்தம்.

சொல்லானந்தமாவது, இயற்பெயர் மருங்கின் மங்கலம் அழியத் தொழிற் சொல் பாட்டுடைத் தலைமகன்மேல் ஏறப் பாடுவது.

என்னை ?

'இயற்பெயர் மருங்கின் மங்கலம் அழியத்
தொழிற்சொற் புணர்ப்பினது சொல்லா னந்தம்.' 2

என்றாராகலின்.

வரலாறு :

[நேரிசை வெண்பா]

என்னிற் பொலிந்த திவண்முகம் என்றெண்ணித
தன்னிற் குறைபடுப்பான் தண்மதியம்—மின்னி
விரிந்திலங்கு வெண்குடைச் செங்கோல் விசயன்
எரிந்திலங்கு வேலின் எழும்.'

இதனுள் மதியை 'விசயன் வேல்போல் எழும்' என்பான், 'விசயன் எரிந்து' என அத்தொழில் அவன்மேல் ஏறச் சொன்னமையாற் சொல்லா னந்தம்.

பொருளானந்தமாவது, பாட்டுடைத் தலைமகன் நாட்டின் யாதானும் ஒன்றனைச் சிறப்பித்துச் சொல்லலுற்றவிடத்து, அத்திணைக்கு உரிய இறைச்சிப் பொருளை ஊறுபடச் சாவவும் கெடவும் சொல்லுவதூஉம், புகழ்தலுற்றவிடத்து ஆகாத பெற்றியின் மங்கலம் அழியச் சொல்லுவதூஉம், மங்கலமாகிய உவமை யால் மங்கலம் இல்லாத உபமேயத்தை உவமிப்பதூஉம், தலைமகனோடு உவமிக்கப் பட்டதற்கு இடையூறுபடச் சொல்லுவதூஉம் முதலாக வுடையன எனக் கொள்க.

என்னை ?

'இறைச்சிப் பொருளை ஊறுபடக் கிளப்பினும்
புகழ்ச்சிக் கிளவியிற் பொருந்தா கூறலும்
உவமைக் காட்சியின் ஊனம் தோன்றினும்
இவையல பிறவும் இன்னவை வரினே
அவையென மொழிப பொருளா னந்தம்.' 3

என்றாராகலின்.

வரலாறு :

'முறிமே யாக்கைதன் கிளையொடு துவன்றிச்
சிறுமை யுற்ற களையாப் பூசல்.' 4

என மலைபடு கடாத்துக் கூத்தரை ஆற்றுப்படுப்பான், 'நீர் போம் வழியுள் இன்னவும் இன்னவும் ஏதங்களாவன ; அவற்றைச் சாராதே போமின்,

1—2. அகத்தியனார் ஆனந்த ஒத்து ; 1, 2, 3. யா. வி, 4 உரை மேற்.
3. அகத். ஆனந். ஒத்து. 4. பத்து. மலைபடு. 313–14.

என்பான், 'ஒரு குரங்கு ஒரு வரைமேலிருந்து வழுவி ஒரு விடாகம் புக்கு விழுந்தது கண்டு, மற்றைக் குட்டியும் தாயும் விடாகம் புக்கு வீழ்ந்தன; வீழக் குரங்குகள் எல்லாம் அவற்றுக்கு இரங்கி அழுது, பெரியதோர் ஆரவாரம் எழுந்தது. அவ்வரையை ஒருவிப் போமின்,' என்றான். அவன் மலைக்கு உரிய இறைச்சிப் பொருளாகிய குரங்கிற்கு இடையூறு சொன்னமையால், இது பொருளானந்தம்.

> 'கணங்கொ டோகையிற் கதுப்பிகுத் தசைஇ
> விலங்குமலைத் தமர்ந்த சேயரி நாட்டத்
> திலங்குவளை விறலியர் நிற்புறஞ் சுற்ற' 1

என்பது, 'பீலி விரித்துப் பல மயில் இருந்தாற்போல வழி வந்து ஆசைந்த வருத்தத்தால் தத்தம் கேசங்களை எடுத்து முடிக்க கில்லாது விரித்திருப்பர், அவர் மலைமேல் வழிபோம் கூத்தப்பெண்டிர்,' என்று புகழ்தலுற்றான். பெண் சாதிகள் ஊறுபட்டு அழுகை நிகழ்ந்தவிடத்து மயிர் விரித்திருப்பார்கள். அவ்வகை மங்கலம் இல்லாத மயிர் விரியை அவன் நாட்டோடும் புகழ்ந்த மையான், இதுவும், பொருளானந்தம்.

> 'பெயலொடு வைகிய வியன்கண் இரும்புனத்
> தகலிரு விசும்பின் ஆஅல் போல
> வாலிதின் விரிந்த புன்கொடி முசுண்டை' 2

என்பது, நாடு புகழ்தலுற்றான், மற்று மங்கலம் உளவாக வைத்து, வானத்துள் துறுமித் தோன்றுங் கார்த்திகை மீனோடு கடைப்பட்டார் தின்னும் அடகாகிய முசுண்டையின் பூவை ஒப்பித்தமையான், இஃது உவமக் காட்சியுள் ஊனம் தோன்றிய ஆனந்த உவமை.

[கட்டளைக் கலித்துறை]

> 'திண்டேர் வயவரைச் சேர்வைவென் றானன்ன தேங்கவுண்மா
> வண்போ தமன்ற வழைநிழல் நீக்கிய வார்சிலம்ப!
> நண்போ நினையிற்பொல் லாதது; நிற்க; என் னன்னுதலாள்
> கண்போல் குவளை கொணர்ந்ததற் கியாதுங்கைம் மாறிலமே.' 3

இதனுள் தலைமகனோடு உவமிக்கப்பட்ட யானையைத் துரந்தான் என ஊறுபடச் சொன்னமையால், இதுவும் உவமக் காட்சியில் ஊனம் தோன்றிய ஆனந்த உவமை.

[நேரிசை வெண்பா]

> 'வள்ளெயிற்றுப் பேழ்வாய் ஞமலிக்கு மான்குழாம்
> எள்ளி இரிந்தாற்போல் எவ்வழியும்—வள்ளற்கு
> மாலார் கடலன்ன மண்பரந்த வாட்டானை
> மேலாரு மேலார் விரைந்து.'

இதனுட் புலியினோடு உவமிக்கப்படுகின்ற தலைமகனாகிய வீரனோடு நாயை உவமித்தமையால், இறப்ப இழிந்த ஆனந்த உவமை.

[நேரிசை வெண்பா]

> 'இந்திரனே போலும் இளஞ்சாத்தன்; சாத்தற்கு
> மந்தரமே போன்றிலங்கும் மல்லாகம்;—மந்தரத்துத்
> தாழருவி போன்றுளது தார்மாலை; அம்மாலை
> ஏழுலகும் நாறும் இனிது.'

1. பத்து. மலைபடு. 44–6
2. பத்து. மலைபடு. 99–101
3. யா.வி. 95 உரைமேற்.

இதனுள் கீழ்மகனாகிய சாத்தனைக் குல மன்னரை உவமிக்கப்பாலனவற்றோடு அவனுக்குப்பரிக்கலாகாமை உவமித்தலின், இறப்ப உயர்ந்த ஆனந்த உவமை.

'சென்றுபடு பருதியிற் சிவந்த தோற்றத்தை.'

இதனுள் படுஞாயிற்றுக்கு உவமையாகக் காட்டலின், **இறந்துபாட்டுவமை ஆனந்தம்.**

'தீயி னன்ன ஒண்செங் காந்தள்
தூவலிற் கலித்த புதுமுகை ஊன்செத்
தெய்யா தெறிந்த புன்புறச் சேவல்
ஊஉன் அன்மையின் உண்ணா துகுத்தென
நெருப்பின் அன்ன பல்லிதழ் தாஅய்
வெறிக்களம் கடுக்கும் வியலறை தோறும்.' 1

இதனுள், 'தீப்போலாம் உருவம் தோன்றும் செங்காந்தட்பூவினை ஊன் என்று கருதி அறியாது எறிந்த பருந்து, காலான் இடுக்கி வாயிற்குத்தி, ஊன் அன்மை கண்டு விட்டது,' என்று காந்தட்பூவினது சிவப்பினைக் குணனேறச் சொல்லுவான், அவாவிச் சென்றது கொண்டு, அவாவியது அன்மையால் விட்டது என்று பரிசிற்கவி, அவாவிய கவியை அவாக்கெடக் கூறினமையின், இது பரிசிற் பொருளானந்தம்.

**யாப்பானந்தமாவது**, முன் தொடுக்கப்பட்ட சிறப்புடை மொழியின் பின்னர்ப் பாட்டுடைத் தலைவன் பெயர் நிறீஇ, அதன் பின்னே சிறப்புடை மொழி நிறீஇச் சிறப்பிக்கப்படுவதனை இவ்வாறு இடர்ப்படப் பாடுவது.

என்னை ?

'முதற்றொடை மருங்கின் மொழிநிறுத் தொருபெயர்
இடைப்படுத் தவ்வழி இடுங்குசீர்ப்* படினே
வாய்ப்ப நோக்கி வல்லோர் கூறிய
யாப்பா னந்தமென் றறைதல்† வேண்டும்.' 2

என்றாராகலின்.

வரலாறு :

[கட்டளைக் கலித்துறை]

'ஊகத்தி னுன்மல்கு சோலை யுளிய னுயர்வரைவாய்
மேகத்தி னுமின் னுவு மிகவு மெலிந்திளைத்த‡
ஆகத்தி னேற்கரு ளாயென் பணியுமை வாயெயிற்று
நாகத்தி னுன்மால் கடைந்திடப் பட்ட நளிகடலே!' 3

எனக் கொள்க.

**தூக்கானந்தமாவது**, கஞ்சத் தாளம் முதலிய கருவிகளோடும் இசைந்த இசைக்கிழ்ப் பாடுதற்கண், அவன் பெயரைச் சார்த்தி, உயரவும் இறுகவும் பெயர் பிளந்து பண்ணியும், ஒருவர்க்கும் பெயர் புலனாகாமையும் சொல்லுதல்.

என்னை ?

'தாழா மரபினர் யாழொடு புணர்ந்த
பாவகை ஒருவனைப் பாடுங் காலைத்
தொல்வகை மரபின் அவன்பெயர் தோற்றி
எங்கினும் இடுங்கினும் எழுந்துபிரிந் திசைப்பினும்
தூங்கினும் குழறினும் தூக்கா னந்தம்.' 4

என்றாராகலின்.

---

1. பத்து. மலைபடு. 145–50. 2—3. அகத்தியனார் ஆனந்த ஒத்து.
3, இதில் உளியன் என்பது பாட்டுடைத் தலைவன் பெயர்.
பி–ம். * இடுஞ்சீர், இருசீர். † ஆறியல், ‡ மெலிந்துரைத்து.

அவற்றிற்கு இலக்கியம் வந்தவழிக் கண்டுகொள்க.

**தொடையானந்தமாவது,** அளபெடைத் தொடைப் பாட்டினுட் பாட்டுடைத் தலைவன் பெயர் சார்த்தி அளபெடுப்பத் தொடுப்பது.

என்னை ?

'அளபெடை மருங்கிற் பாடப் படுவோன்
பெயரொடு தொடுப்பிற் பெற்றியில் வழுவாத்
**தொடையா னந்தம்** எனவே துணிக.' 1

என்றாராகலின்.

வரலாறு :

[குறள் வெண்பா]

'வாஅம் புரவி வழுதியோ டெம்மிடைத்
தோஒம் நுவலுமிவ் வூர்.'

இதனுட் 'புரவி வழுதி' என்று அடைப்பெயர் சார்த்தி அளபெடுப்பத் தொடுப்பினும் **தொடையானந்தம்.**

[குறள் வெண்பா]

'வாஅ வழுதி மதுரை மறுகினிற்
போஓ பகைமுனைப் போர்.'

இஃது அடையடாமையின் மிக வழு.

இனி, 'ஆனந்தப் பையுள்' என்பதும் ஒன்று உண்டு: அஃதாவது, களவினுளாயினும் கற்பினுளாயினும் தலைவனும் தலைவியும் தம்மிற் பிரிந்துழிப் பிரிவாற்றுது கையறு துயரமொடு காட்சிக்கு அவாவி மெய் மெலிவுற்று அழி வழி யிரங்கிப் பாட்டுடைத் தலைவனது நாடானும் ஊரானும் குறித்து, அவன் ஊர் மேல் அன்றில் ஏங்கினும், குயில் கூவினும், ஆயர் குழலிசை கேட்பினும், ஏற்றின் மணிக்குரல் கேட்பினும், அவனுடு சூழ்ந்து கிடந்து அவள் ஏங்கினும், 'என்னுயிர் கழியும்,' என்று இவ்வாறு கூறினும், 'அவன் ஊர் அனையாள், நாடு அனையாள், உயிர் கழிக்கின்றது!' எனினும், பிறவாற்றானும் குணமேம் பட்டன ஊரும் நாடும் பார்த்துச் சார்த்திக் கூறினும், உவப்பினும் அவை **ஆனந்தப் பையுள்.**

என்னை ?

'களவினும் கற்பினும் கலக்க மில்லாத்
தலைவனும் தலைவியும் பிரிந்த காலைக்
கையறு துயரமொடு காட்சிக் கவாவி
எவ்வமொடு புணர்ந்து நனிமிகப் புலம்பப்
பாடப் படுவோன் பதியொடும் நாட்டொடும்
உள்ளுறுத் திறினே யுயர்கழி யானந்தப்
பையுள் என்று பழித்தனர் புலவர்.' 2

என்று எடுத்து ஓதினர் அகத்தியனர்.

அவற்றுக்கு இலக்கியம் வந்துழிக் கண்டுகொள்க.

இனி, **மாபுராணமுடையார் கூறுமாறு :** விகாரமாத்திரையாகிய உயிரளபெடையும், கால் மாத்திரையாகிய ஒற்றும் பாட்டுடைத் தலைமகன் பெயருக்கும் அவன் பெயர்க்கு அடையாகிய சொற்கண்ணும் புணர்ப்பிற் குற்றம் என்றார்.

---

1—2, அகத். ஆனந்த ஒத்து.

என்னை ?

'கழிநெடில் அசையும் காலெழுத் தசையும்
பெயரயற் புணர்ப்பினும் பெயரின்டப் புணர்ப்பினும்
வழுவென மொழிப வாய்மொழிப் புலவர்.' 1

என்பவாகலின்.

அவர் [காட்டும்] உதாரணம் :

[குறள் வெண்பா]

'**மன்னும் வழுதி** வருமருங்கு நின்றுளென்
றின்னும் உரைக்குமிவ் வூர்.'

என்பதனுள், விகார மாத்திரையாகிய கால் மாத்திரையாய் மகர ஒற்று, பெயர் அருகு வரலின், வழு.

[குறள் வெண்பா]

'**வாஅம் புரவி** வழுதியோ டெம்மிடைத்
தோலும் நுவலுமிவ் வூர்.'

என்பதனுள், விகார மாத்திரையாகிய உயிரளபெடையை 'வழுதி' என்னும் பெயர்க்கு அடையாகிய புரவிக்குப் புணர்த்தலின், வழு.

இனி, இசையானந்தம் ஒன்று. அஃதாவது, அவலமுற்றிருந்தோர்க்கு இசையாகிய பஞ்சமமும், குறிஞ்சியும், பியந்தையும், பாலையாழும், காந்தார பஞ்சமமும், இவற்றொடு பியந்தை யாழும், தலைவனைப் புகந்த பாடாண் பாட்டிற்கும் இசையாகி வரப் புணர்ப்பது 'இசையானந்தம்' எனப்படும்.

என்னை ?

'சிறையழி துயரொடு சிந்தையிற் பிரிந்த
கவலை கூர்ந்த கருணைக்குப் பெயரே
அவலம் என்ப அறிந்திசி னோரே.'
'**அவலம் என்பதற் கிசையெனப் படுவது**
குறிஞ்சி புறநிலை பியந்தை யென்று
பசந்த விகற்பிற் பாலை யாழே
கருதிய கற்பிற் காந்தார பஞ்சமம்
இசையா னந்தம் என்மனார் புலவர்.'

என்றாராகலின்.

பாட்டுடைத் தலைவனையே கிளவிப்படக் கிளவித் தலைவனாகக் கூறுவதூஉம் **ஆனந்தம்** எனக் கொள்க.

என்னை ?

'உருவி யாகிய ஒருபெருங் கிழவனை
**அருவி கூறுதல் ஆனந் தம்மே.'** 2

என்றாராகலின்.

'**ஆனந்தம் முதலிய ஊனமும்**' என்றதனால், '**பிரிபொருட்டொடர் மொழி**' முதலிய குற்றங்களும் மறு வாராமற் புணர்க்கப்படும்.

'பிரிபொருட் டொடர்மொழி முரண்மொழி யெனாஅ
ஒருபொருள் மொழியே ஐயமொழி யெனாஅ
முறைபிறழ வைப்பே சொல்வழு வெனாஅ
யாப்பின் வழுவே நடைவழு வெனாஅப்
5. பொருளின் வழுவே புணர்ப்புவழு வெனாஅக்

1. மாபுராணம் ; யா.வி. 2 உரைமேற்.
2. பு.வெ. 235 உரைமேற்.

கலையொடு மலைவே காலமலை வெனாஅ
உலக மலைவே இடமலை வெனாஅ
மேற்கோள் மலைவே ஓதுமலை வெனாஅ
எடுத்துரை மலைவே நூன்மலை வெனாஅ
10. இருநான் கடுத்த ஈரைம் புறவும் ;
உய்த்துணர் மொழியே ஒட்டுப்பிரி மொழியே
பிறிதுபடு மொழியே பிசிபடு மொழியே
உத்தி மறுதலை எனவரூஉம் இவையும்
இடக்கர் இசையவும் இடக்கர்ப் பொருளவும்
15. இடக்கர்ப் படவரூஉம் சந்தி இசையவும்
இன்னா இசையவும் எனவெடுத் திவற்றொடு
முன்னாங் கூறிய பிறழ்வும் தொகைஇ
ஏழுடை இருபான் ஊனம் நீக்குபு
பாட வல்லோன் கவிஞன் ; அன்றேல்,
20. அடங்காப் புதல்வற் பயந்த பாத்தையிற்
புறஞ்சொற் பெறாவும் புலவ ரானே.'
எனக் கொள்க.

இனி, செய்யுளாவன :

'செய்யு டாமே மெய்யுற விரிப்பின்
தனிநிலைச் செய்யுள் தொடர்நிலைச் செய்யுள்
அடிபல தொடுத்த தனிப்பாச் செய்யுள்
உரையிடை மிடைந்த பாட்டுடைச் செய்யுள்
இசைநுவல் மரபின் இயன்ற செய்யுள்
நயநிலை மருங்கின் சாதியொடு தொகைஇ
அவையென மொழிப அறிந்திசி னோரே.'
என்று ஓதப்பட்டனவெல்லாம் அணியியலுட் காண்க.

இனி, 'விளம்பனத்தியற்கையும்' என்பது :

'விளம்பனத் தியற்கை விரிக்குங் காலை
ஆரியம் தமிழொடு நேரிதின் அடக்கிய
உலகின் தோற்றமும் ஊழி இறுதியும்
வகைசால் தொண்ணூற் றறுவா தியற்கையும்
வேத நாவின் வேதியர் ஒழுக்கமும்
ஆதி காலத் தரசர் செய்கையும்
அவ்வவ நாட்டார் அறியும் வகையால்
ஆடியும் பாடியும் அறிவரக் கிளத்தல்.' 1
எனக் கொள்க.

இனி, 'நரம்பின் விகற்பமும்' என்பது : நரம்பு எழு வகைய : குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என.

1. வீரசோ. அலங். 40 உரைமேற்.

என்னை ?

> ' இளிகுரல் துத்தம் நான்கு மாத்திரை ;
> விளரி கைக்கிளை மூன்றே யாகும் ;
> தாரம் உழையிரண் டாகத் தகுமே.' 1

என்றாராகலின்.

இனி, பண் நான்கு வகைய : அவை **பாலை யாழ், குறிஞ்சி யாழ், மருத யாழ், செவ்வழி யாழ்** என்பன.

என்னை ?

> ' பாலை குறிஞ்சி மருதஞ்செவ் வழியென
> நால்வகைப் பண்ணு நவின்றனர் புலவர்.'

என்றார் **வாய்ப்பியனார்.**

> ' **விளரி** யாழோ டைந்தும் என்ப.'

இனி, பண் சார்வாகத் தோன்றியன **திறமாம்.** என்னை ?

> ' பண்சார் வாகப் பரந்தன எல்லாம்
> திண்டிறம் என்ப திறனறிந் தோரே.'

என்றாராகலின்.

அத்திறம் இருபத்தொரு வகைய :

> ' அராகம் நோதிறம் உறழ்ப்புக் குறுங்கலி
> ஆசான் ஐந்தும் பாலையாழ்த் திறனே.'
> ' நைவளம் காந்தாரம்
> பஞ்சுரம் படுமலை மருள்அயிர்ப் பாற்றுச்
> செந்திறம் எட்டும் குறிஞ்சியாழ்த் திறனே.'
> ' நவிர்வடுகு வஞ்சி
> செய்திறம் நான்கும் மருதயாழ்த் திறனே.'
> ' சாதாரி பியந்தை
> நொந்த திறமே பெயர்திறம் யாமயாழ்
> சாதாரி நான்குஞ்செவ் வழியாழ்த் திறனே.'

என்றார் **வாய்ப்பியனார்.**

பாலை எழு வகைய : **செம்பாலை, படுமலைப் பாலை, செவ்வழிப் பாலை, அரும் பாலை, கோடிப் பாலை, விளரிப் பாலை, மேற்செம் பாலை** என.

குரல் குரலாகச் செம்பாலை பிறக்கும். துத்தம் குரலாகப் படுமலைப் பாலை பிறக்கும். கைக்கிளை குரலாகச் செவ்வழிப் பாலை பிறக்கும். உழை குரலாக அரும்பாலை பிறக்கும். இளி குரலாகக் கோடிப் பாலை பிறக்கும். விளரி குரலாக விளரிப் பாலை பிறக்கும். தாரம் குரலாக மேற்செம்பாலை பிறக்கும் என்க.

இனி, **கூடம்** ஆமாறு :

[குறள் வெண்பா.]

> 1. ' உகுதிறத்துத் துப்பாயார் தாவென்பார்க் கில்லென்பான்
> கைப்பையாய்க் குற்று விடும்.'

---

1 குரறுத்த நான்கு கிளைமூன் றிரண்டாங் குறையா வுழையிளி நான்கு—விரையா.

2. 'இல்லென்பான் கையிற் குடா விரகிலிக்
குள்ளதென் துய்ப்பதென் தான்?' 1

3. 'விடுகைபோ லுள்ளத துத்திரத்திட் டானும்
இடுகுவையிற் கைக்குங் குறை.'

4. 'தாவென்பார்க் கில்லென்பான் கையுண்டேற் குன்ற
விடாஅ துலகத் துது.'

5. 'குன்று வினையுள் உயர்நிலந் துன்புற்றுத்
தாவென் றிரப்பாடன் கை.' 2

6. 'துப்பாயார் தாவென்பார்க் கில்லென்பான் கையுள்
குடாஅன் விடாஅன் உழைப்பு.'

7. 'கைமாட்சி[குன்று] விரகன் உ[ட]லகத்
துண்மாட்சித் தாயினு மில்.'

இவை ஏழும் கூடப் பாட்டு.

என்னை?

[குறள் வெண்பா.]

'நின்ற நரம்புக்கா றுநரம்பு சென்றுமுன்
நிற்பது கூடமாச் செப்பு.'

என்றாராகலின்.

இவற்றின் பயன் வல்லோர்வாய்க் கேட்க. ஈண்டு உரைப்பிற் பெருகு மாகலின், அகத்தியத்துட் காண்க.

இனி, எண் இரண்டு வகைய: கணிதமும் கரணமும் என. அவற்றுள் கணிதமாவன, பதினாறு வரி கருமமும், ஆறு கலாச வருணமும், இரண்டு பிரகாணச் சாதியும், முதகுப்பையும், ஐங்குப்பையும் என்ற இப் பரிகருமமும்; மிச்சிரகமும் முதலாகிய எட்டாதிகாரமுமாம். அவை அவினந்த மாலையும், அரச சட்டமும்,* வருத்தமானமும் முதலியவற்றுட் காண்க.

இனி, திணையாவன நான்கு வகைய: அகத்திணை, அகப்புறத்திணை, புறத்திணை, புறப்புறத்திணை என.

என்னை?

'அகமே அகப்புறம் புறமே புறப்புறம்
எனநான் கென்ப திணையின் பகுதி.'

என்றாராகலின்.

அகத்திணை இருவகைய: களவு, கற்பு என.

என்னை?

'களவும் கற்பும் கைகோ ளாக
அளவில் அன்பின தகமெனப் படுமே.'

'ஐந்திணை தழுவிய அகமெனப் படுவது
கந்தருவ நெறிமையிற் களவொடு கற்பே.'

---

1, 2, நன். 268 மயிலை நாதர் உரைமேற்.

குறிப்பு.—
இக்குறள் வெண்பாக்கள் எழினும்சீர்தோறும் முதற்கண் நின்ற எழுத்து, குரல் துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி தாரம், என்னும், எழிசை நரம்புகளைக் குறிப்பாலறிய வந்தன.

—ம் * மாராச சட்டம்.

'அவற்றுள் களவெனப் படுவ தூஉழ்
கரவன் மரபின் பாற்பட வருமே.'
'கற்பெனப் படுவது கரணமோ டியையக்
கூடிய பிறவும் கூறுதற் குரித்தே.'
'எய்திய இரண்டும் கைகோள் என்ப.'
'கிழவன் பாங்கன்,
கிழத்தி தோழி திறத்தன கூற்றே.'

இன்ன பிறவும் அகத்திணை.

இனி, அகப்புறமாவன, காந்தள், வள்ளி, சுரநடை, முதுபாலை, தாபதம், தபுதாரம், குற்றிசை, குறுங்கலி, பாசறைமுல்லை, இல்லாண்முல்லை என்ற இவை பத்தும்; கைக்கிளை, பெருந்திணை என்ற இவை இரண்டும் என்க.

'ஆய்ந்த அகப்புறம் ஐயிரண்டு மாயுங்கால்
காந்தள் * * * *
அமர்த்தவீ ரைந்தும் அகத்தின் புறமே.' 1
'கைக்கிளை யென்று பெருந்திணை யென்றுங்
கத்திணை இரண்டும் அகத்திணைப் புறனே.'

இவை பன்னிரு படலம்.

அவற்றுட் கைக்கிளையாவது, காட்சி முதலாம் கை காமம். என்னை?

'கைக்கிளை தானே காணுங் காலைக்
கூட்டமில் கிளவிக் கைக்கிளை அகப்புறம்.'
'பெருந்திணைப் பொருளே பொருந்தக் கூறின்,
அறத்தின் இயன்ற அகத்தொடு புணராத்

---

(கலி வெண்பா.)

'ஆய்ந்த அகப்புறம் ஐயிரண்டும் ஆயுங்கால்
காந்தள் கலிமடன்மா ஏறுதல்; காமமிக்
காய்ந்தவர் வள்ளி வெறியாட்டம்; வாய்ந்த
சுரநடை மாதர் வருத்தம்; சுரனுள்
முதுபாலை தன்னை மொழியின் மதுமலர்த்தார்க்
காவலன் வீயக் கவன்ற ததுவாகும்;
பாசறை முல்லை தலைமகன் பாசறைக்கண்
மாசறு மாதரை உள்ளுதல்; மாசற்ற
இல்லவள் முல்லையும் அஃதேயாம்; சொல்லுங்கால்
குற்றிசை கோல்வளை யாளைத் தளைமகன்
முற்றத் துறந்த துறவாம்; குறுங்கலி
முற்றத் துறந்த தலைமகனை முன்னின்று
பொற்றொடி மாதர் பழிதூற்றும்; குற்றந்தீர்
தாபதம் காதற் றலைமகனை நீங்கிய
மேவரு மாதர் நிலையாகும்; மேவருஞ்சீர்
நீக்கப்பட் டாளை உவந்த தலைமகன்
பார்த்துறூஉம் தன்மை யதுவாம் தபுதாரம்;
பத்தும் அகத்தின் புறம்.'

—வீரசோ. பொ. படல. 12 உரைமேற்

திறத்த தென்ப திறனறிந் தோரே.'

'நிலையா அன்பின் நீடா இன்பத்

துலகமலை வெல்லாம் பெருந்திணை அகப்புறம்.'

என்றுராகலின்.

இனி, புறமாவது,

'வெட்சி கரந்தை [வஞ்சி காஞ்சி

நொச்சி உழிஞை தும்பை என்றுங்

கித்திற மேழும்] புறனென மொழிப.'

'வெட்சி முதலாத் தும்பை யீருச்

செப்பிய ஏழும் புறப்பொரு ளாகும்.'

எனக் கொள்க.

வெட்சி ஆ கவர்தலானும், கரந்தை உட்குவரச் சென்று விடுத்தலானும்,

'வெட்சியும் கரந்தையும் தம்முள் மாறே.' 1

வஞ்சி மேற்செல்லலானும், காஞ்சி அஞ்சாது எதிர் சென்று ஊன்றலானும்,

'வஞ்சியும் காஞ்சியும் தம்முள் மாறே.' 2

உழிஞை ஆரெயில் முற்றலானும், நொச்சி விழுமிதின் அவ்வெயிற் காத்தலானும்,

'உழிஞையும் நொச்சியும் தம்முள் மாறே.' 3

'பொருதல் தும்பை புணர்வ தென்ப.' 4

இவற்றின் விகற்பமெல்லாம் பன்னிரு படலத்துட் காண்க.

புறப்புறமாவன, வாகையும், பாடாண் பாட்டும், பொதுவியற்றிணையும் எனக் கொள்க.

என்னை?

'வாகை பாடாண் பொதுவியற் றிணையெனப்

போகிய மூன்றும் புறப்புறப் பொருளே.'

என்றார் தொல்காப்பிய அகத்தியம் உடையார்.

'மதுவிரி வாகையும் [பாடாண் பாட்டும்]

பொதுவியற் படலமும் புறமா கும்மே.'

என்றார் வாய்ப்பியனார்.

இவை ஆமாறு, 'வெண்பா மாலையுள்ளும் 5 பன்னிரு படலத்துள்ளும் காண்க.

இன்னும் 'திணையே' என்றதனால், குறிஞ்சி முதலிய ஐந்திணையும் உணர்த்தும்.

என்னை?

குறிஞ்சி [முல்லை மருதம் நெய்தல்

அருஞ்சுரப்] பாலையோ டைந்தும் அகமே.'

என்றாராகலின்.

---

1–4. பன்னிரு படலம்; மதுரைக் காஞ்சி—நச்சினார்க்கினியர் குறிப்பு நோக்குக.
5. இங்கு 'வெண்பா மாலை' என்றது புறப்பொருள் வெண்பா மாலையை என்க. என்னை? வெண்பா மாலை எனப்பெயர் நிறீஇ [பு,வெ.சிறப்.] என்றாராகலின்.

அவை ஆமாறு :

‘மெய்வகை கூதிர்
* * * முன்பனி வகையே.’

இது குறிஞ்சித்திணை.

‘வெம்பர லத்தம் * * * வகையே.’

இது பாலைத்திணை.

‘தவலரும் * * * உறுப்பே.’

இது முல்லைத்திணை.

‘அருங்கடல் * * * உறுப்பே.’

இது நெய்தற்றிணை.

‘ஒல்லென் * * * யே.’

இது மருதத்திணை.

‘இடனே பருவம் பொழுதூண் பொருள்பெயர்
கடவுண் மாந்தர் களவிழ வூர்நீர்
மாமரம் புட்பறை யாழென் றிவற்றின்
ஆகிய மரபின் அகனைந் திணைக்கு
முந்தைய மூன்று முதல்கரு வேனை
ஐந்தா நிலைய துரிப்பொரு ளாகும்.’

‘மற்றவை தம்முள் மயங்கினும் அப்பெயர்
பெற்ற திணையின் பெயர்க்கொடை பெறுமே.’

‘செவ்விய உரிப்பொருட் கேது வாகவே
எவ்வகை இறைச்சியும் இயற்றுப தெரிந்தே.’

‘ஒருவன் பெயர்மலே யாறுநா டூரிவை
வரினுண் டுலகியல் வழக்கந் தோற்றல்.’

‘ஐந்திணை தழுவிய அகமெனப் படுவது
கந்தருவ நெறிமையிற் களவொடு கற்பே.’

இவற்றைப் பதம் நெகிழ்த்து உரைத்துக்கொள்க.

இன்னும் அவ்விதப்பான் உயர்திணையும் அஃறிணையும் ஆமாறு உரைத்தும் :

‘உயர்திணை என்மனார் மக்கட் சுட்டே;
அஃறிணை என்மனார் அவரல பிறவே;
ஆயிரு திணையின் இசைக்குமன சொல்லே.’ 1

எனவும்,

‘மக்கட் சுட்டே உயர்திணை யாகும்.’

எனவும்,

‘தேவரும் நரகரும் மேவவும் பெறுமே.’

எனவும்,

‘ஏவிய இம்மூன் றன்றி ஒழிந்தவை
யாவகைப் பொருளும் அஃறிணை யாகும்.’

எனவும் கொள்க.

---

1. தொல், சொல், கிளவி 1.

இனி, ஒரு சாரார், 'அகத்திணை, புறத்திணை, அகப்புறத்திணை என மூன்றாய் அடங்கும்,' என்ப. ஆமாறு அவிநயத்துட் காண்க.

இனி, இருதுவாவன :

'காரே கூதிர் முன்பனி பின்பனி
சீரிள வேனில் வேனில் என்றாங்
கிருமூ வகைய பருவம்; அவைதாம்
ஆவணி முதலா இவ்விரண் டாக
மேவின திங்கள் எண்ணினர் கொளலே.'

இந்த இருது வருணனை அணியியலுட் காண்க.

இனி, காலம் மூவகைய : இறந்த காலம், நிகழ் காலம், எதிர் காலம் என. என்னை ?

'இறந்ததும் நிகழ்வதும் எதிர்வதும் என்னும்
திறந்தெரி வுடையன கால மாகும்.'

என்றாராகலின். அன்றியும், நன்னர்க் காலம், நற்காலம்; தீந்த காலம், தீக் காலம்; நற்றீக்காலம், தீத்தீக் காலம் என இவையுமாம். நான்கு யுகமும் எனினுமாம். இவை ஆமாறு உரைப்பிற் பெருகலின், உலக சமய பேதம் வல்லார் வாய்க் கேட்டு உணர்க.

இனி, 'எண் வகை மணம்' ஆவன : பிரம மணம், விதி மணம், ஆரிட மணம், தெய்வ மணம், அசுர மணம், இராக்கத மணம், பைசாச மணம், கந்தருவ மணம் என்பன.

பிரம மணமாவது, ஓர் இருதுக்கண்ட கன்னியை மற்றை இருதுக் காணுமே கொளற்பால மரபினோர்க்கு நீர் பெய்து கொடுத்தல்.

என்னை ?

[நேரிசை வெண்பா.]

'ஒப்பாருக் கொப்பார் ஒருபூப் பிரிந்தபின்
இப்பால் மதிதோன்றா எல்லைக்கண்—அப்பால்
தருமமே போல்கென்று தக்கார்க்குச் சேர்த்தல்
பிரமமாம் போலும் பெயர்.'

என்றாராகலின்.

விதி மணமாவது, கொடுத்த பரியத்தின் இரு மடங்கு மகட்கொடுப்போன் கொடுத்தல்.

என்னை ?

[நேரிசை வெண்பா.]

'கொடுத்த பொருள்வாங்கிக் கொண்ட பொழுது
மடுப்பர் மடுத்தற் கமைந்தால்—அடுப்போன்
இரண்டா மடங்குபெய் தீவ ததுவே
இரண்டாம் மணத்தின் இயல்பு.'

என்றாராகலின்.

ஆரிடமாவது, ஏறும் ஆவும் கொணர்ந்து நிறீஇ, அவற்றின் முன்னர்க் கைக்கு நீர் பெய்து கொடுத்தல்.

என்னை ?

[நேரிசை வெண்பா.]

'இற்குலத்தோ டொப்பானுக் கொப்பான் இமிலேறுப்
பொற்குளம்பிற் பொற்கோட்ட வாப்புனைந்து—முற்படுத்து
வாரிடம்பே ராமுலையை வாழ்க்கைக்கண் வைப்பதுரை
ஆரிடம் பேராம் அதற்கு.'

என்றாராகலின்.

தெய்வமாவது, வேள்விக் களத்துத் தீப்பாரித்துத் தீ முன்னர் வேள்வி ஆசிரியர்க்குக் கைக்கு நீர் பெய்து கொடுத்தல்.

என்னை ?

[நேரிசை வெண்பா.]

'மெய்ப்பாலைப் பெண்டன்மை எய்தியபின் மெல்லியலை
ஒப்ப உணர்ந்த பொழுதுண்டல்—ஒப்பாற்கு
நெய்தயங்கு தீமுன்னர் நேரிழையை ஈவதே
தெய்வப்பே ராகும் தெளிந்து.'

என்றாராகலின்.

இவை நான்கும் அந்தணர்க்கு உரிய.

அசுரமாவது, 'இன்னது செய்தார்க்கு இவள் உரியள்,' என்றவிடத்து, அன்னது செய்து எய்துவது. அவை வில்லேற்றுதல், திரிபன்றி எய்கல். கொல் ஏறு கோடல் முதலிய.

என்னை ?

[நேரிசை வெண்பா.]

'வில்லேற்றல் வேள்வியைக் காத்தல் மிகுவலிக்
கொல்லேற் றியல்குழையைக் கோடலென்—றெல்லாம்
அரியனசெய் தெய்தினன் ஆயின் அசுரம்;
அரியவாம் அந்த மணம்.'

இராக்கதமாவது, ஆடை மேலிடுதல், பூ மேலிடுதல், கதவடைத்தல் முதலியவற்றால் வலிதிற் கோடல்.

என்னை ?

[நேரிசை வெண்பா.]

'பூந்துகிலோ டின்னவுமேல் இட்டும் புதவடைத்தும்
பாய்ந்து கதந்தாஅய்ப் * பற்றிக்கொண்—டேந்திழையை
எய்தப் படுவ திராக்கதம் என்பதே
மைதீர்ந்தார் சொல்லும் மணம்.'

பைசாசமாவது, துஞ்சினாரோடும், மயங்கினாரோடும், களித்தாரோடும், செத்தாரோடும், விலங்கினோடும் இழிதகு மாபில் யாருமில்லா ஒரு சிறைக்கண் புணர்ந்து ஒழுகும் ஒழுக்கம்.

என்னை ?

[நேரிசை வெண்பா.]

'துஞ்சல் களித்தல் மயங்குதல் மாழாத்தல்
அஞ்சல் அறிவழிதல் சாதலென்—றெஞ்சினவும்
இன்ன திறத்தான் இழிதக வெய்துபவேல்
பின்னைப் பிசாசமணப் பேர்.'

எனவும்,

---

பி-ம்: * வலிந்துதாய்.

'குணத்தி னிழிந்த மயங்கியவ ரோடும்

பிணத்தினும் விலங்கினும் பிணைவது பிசாசம்.'

எனவும் சொன்னாராகலின்.

கந்தருவமாவது, ஒத்த குலனும் குணனும் அழகும் அறிவும் பருவமும் உடையார், யாருமில் ஒருசிறைக்கண் அன்பு மீதூரத் தாமே புணர்ந்து ஒழுகும் ஒழுக்கம்.

என்னை ?

[நேரிசை வெண்பா.]

'ஒத்த குலத்தார் தமியராய் ஓரிடத்துத்
தத்தமிற் கண்டதம் அன்பினால்—உய்த்திட
அந்தரம் இன்றிப் புணர்வ ததுவரோ
கந்தருவம் என்ற கருத்து.'

எனவும்,

'முற்செய் வினையது முறையா உண்மையின்,
ஒத்த இருவரும் உள்ளகம் நெகிழ்ந்து
காட்சி ஐயம் தெரிதல் தேற்றலென
நான்கிறந் தவட்கு நானும் மடனும்
அச்சமும் பயிர்ப்பும் அவற்கும்
உயிர்த்தகத் தடக்கிய
அறிவும் நிறையும் ஓர்ப்பும் தேற்றமும்
மறைய அவர்க்கு மாண்டதோர் இடத்தில்
மெய்யுறு வகையுமுள் ளல்ல துடம்படாத்
தமிழியல் வழக்கமெனத் தன்னன்பு மிகைபெருகிய
களவெனப் படுவது கந்தருவ மணமே.'

என்றார் அவிநயனார்.

இனி, எழுத்து நான்கு வகைய: உருவெழுத்தும் , உணர்வெழுத்தும், ஒலியெழுத்தும், தன்மையெழுத்தும் என.

என்னை ?

'அவற்றுள்,
உருவே உணர்வே ஒலியே தன்மையென
இருவகை எழுத்தும் ஈரிரண் டாகும்.'

என்றாராகலின்.

அவற்றுள் உருவெழுத்தாவது, எழுதப்படுவது.

என்னை ?

'காணப் பட்ட உருவம் எல்லாம்
மாணக் காட்டும் வகைமை நாடி
வழுவில் ஓவியன் கைவினை போல
எழுதப் படுவ துருவெழுத் தாகும்.'

என்றுராகலின்.

உணர்வெழுத்தாவது,

'கொண்டவோர் குறியாற் கொண்ட அதனை
உண்டென் றுணர்வ துணர்வெழுத் தாகும்.'

ஒலியெழுத்தாவது,

'இசைப்படு புள்ளின் எழாஅல் போலச்
செவிப்புல னுவ தொலியெழுத் தாகும்.'

தன்மையெழுத்தாவது,

'முதற்கா ரணமுந் துணைக்கா ரணமும்
துணைக்கா ரணத்தொடு தொடரிய உணர்வும்
அவற்றெடு புணர்ந்த அகத்தெழு வளியின்
மிடற்றுப்பிறந் திசைப்பது தன்மை எழுத்தே.'

என எழுத்தினது விகற்பமும், எழுத்தினது புணர்ச்சியும் எழுத்ததிகாரத்துட் காண்க.

அ, க, ச, ட, த, ப, ய, முதலிய ஆயவெழுத்தும்; அ, ச, ல, வ, ர, ங, ய முதலிய இராசி எழுத்தும்; கார்த்திகை முதலிய நாள் எழுத்தும்; தோபம் முதலிய நால்வகை எழுத்தும்; சாதி முதலிய தன்மை எழுத்தும்; உச்சாடனை முதலிய உக்கிர எழுத்தும்; சித்திர காருடம் முதலிய முத்திற எழுத்தும்; பாகியல் முதலிய நால்வகை எழுத்தும்; புத்தேள் முதலிய நாற்கதி எழுத்தும்; தாது முதலிய யோனி* எழுத்தும்; மாகமடையம்† முதலிய சங்கேத எழுத்தும்; கலி முதலிய சங்கேத எழுத்தும்; பார்ப்பான் வழக்காகிய பதின் மூன்றெழுத்தும் என்ற இத்தொடக்கத்தனவும்; கட்டுரை எழுத்தும்; வச்சிரம் முதலிய வடிவெழுத்தும்; மற்றும் பல வகையாற் காட்டப்பட்ட எல்லா எழுத்தும் வல்லார்வாய்க் கேட்க.

இனி, சொல் நான்கு வகைய: பெயர்ச்சொல், தொழிற்சொல், இடைச் சொல், உரிச்சொல் என.

1. 'எப்பொரு ளேனும் ஒருபொருள் விளங்கச்
செப்பி நிற்பது பெயர்ச்சொல் ஆகும்.'

2. 'வழுவில் மூவகைக் காலமொடு சிவணித்
தொழில்பட வருவது தொழிற்சொல் ஆகும்.'

3. 'சுடுபொன் மருங்கிற் பற்று சேய்ப்ப
இடைநின் றிசைப்ப திடைச்சொல் ஆகும்.'

4. 'மருவிய சொல்லொடு மருவாச் சொற்கொணர்ந்
துரிமையொ டியற்றுவ துரிச்சொல் ஆகும்.'

என்பன வாய்ப்பியம்.

இனி, ஒருசார் ஆசிரியர், இயற்சொல், திரிசொல், திசைச்சொல் என்றும் உரைப்பர்.

அவற்றுள் திரிசொற் சில வருமாறு:

'பைஞ்ஞீலம் பைதிரம் விரற்றலை யோர்பித்தை
பூழிலவம் பீளைதுருவையனல் தொடுப்பகை பிறடி
கருவுள நவிரல் வசிதலையல் நிவப்புச்
செப்பிய பிறவும் திரிசொல் ஆகும்.'

---

பி-ம் : * வொளி † மாதமடை

ஆடு, எருது, விடை, ஏறு, மோத்தை, சேவல், ஒருத்தல், கலே, களிறு, ஏற்றை, கடுவன், கூரன், பகடு என இவை **ஆண் பெயர்.**

மகடு, ஆ, பிடி, குமரி, கன்னி, பிணவு, முடுவல் என்ற இன்னவை **பெண் பெயர்.**

குழவி, மகவு, மறி, குருளே என்ற இன்னவை **இளமைக்கு எய்திய பெயர்.**

'பெயரிவை மும்மையும் பிறவுமிப் பொருட்கண்
இயைபெதிர் இயலும் என்றுணர்ந் தியையக்
குறியொடு காரணம் கொளவகுத் தொழிந்த
தறிய வுரைப்போன் ஆசிரி யன்னே.'

என இவற்றின் விரிவறிந்து வந்துழிக் காண்க.

இடைச்சொல்லும் உரிச்சொல்லும் **தொல்காப்பியம், தக்காணியம், அவி நயம், நல்லாறன் மொழி வரி** முதலியவற்றுட் காண்க.

இனி, 'செந்துறை மார்க்கமும் வெண்டுறை மார்க்கமும்' ஆமாறு: 'நாற் பெரும் பண்ணும், இருபத்தொரு திறனும் ஆகிய இசையெல்லாம் **செந்துறை;** ஒன்பது மேற்புறமும், பதினேராடலும் என்ற இவையெல்லாம் **வெண்டுறை** யாகும்,' என்பது **வாய்ப்பியம்.**

இனி, ஒரு சார் ஆசிரியர் சொல்லுமாறு:

'கந்தருவம் என்பது கசடறக் கிளப்பினற்
செந்துறை வெண்டுறை எனவிரு வகைத்தே.'

அவற்றுட் '**செந்துறை**' என்பது, பாட்டிற்கு ஏற்பது; '**வெண்டுறை**' என்பது, ஆடற்கு ஏற்பது.

என்னே?

'செந்துறை என்ப தொலிகுறித் தற்றே;
வெண்டுறை என்பது கூத்தின் மேற்றே.'

என்பவாகலின்.

**செந்துறை விரி** மூவகைய: செந்துறையும், செந்துறைச் செந்துறையும், வெண்டுறைச் செந்துறையும் என.

**வெண்டுறை விரி மூவகைய:** வெண்டுறையும், வெண்டுறை வெண்டுறையும், செந்துறை வெண்டுறையும் என.

என்னே?

'ஆங்கிரு துறையும் அறுவகைப் பகுதிய
பாங்கின் உணரும் பண்பி னுனே.'

என்முராகலின்.

அவற்றுட் செந்துறைப் பாட்டாவன, பரிபாடலும், **மகிழிசையும், காம இன்னிசையும்** என்பன.

என்னே?

'தெய்வம் காமம்
மையில் பொருளாம் பரிபா டல்லே
மகிழிசை நுண்ணிசை யுரிபெரு மரபிற்
காமவின் னிசையே யாற்றிசை இவற்றைச்
செந்துறை என்று சேர்த்தினர் **புலவர்.'**

**என்முராகலின்.**

**செந்துறைச் செந்துறைப் பாட்டாவன,**

> ‘ ஓங்கெழில் முதலாக்
> குன்று கூதிர் பண்பு தோழி
> விளியிசை முத்துறழ் என்றிவை யெல்லாம
> தெளிய வந்த செந்துறைச் செந்துறை.’ 1

எனக் கொள்க.

**வெண்டுறைச் செந்துறைப்** பாட்டாவன, **கலியும், வரியும், சிற்றிசையும், சிற்றிசைச் சிற்றிசையும்** என்ற இத்தொடக்கத்தன.

என்னை ?

> ‘ கலியே வரியே சிற்றிசை என்று
> மலிதரு பேரிசைச் சிற்றிசைச் சிற்றிசை
> என்றிவை யெல்லாம் பாணி யியந்தூக்
> கொன்ற நோக்கி ஒளிபட வந்த
> வெண்டுறைச் செந்துறை வேண்டுங் காலே.’

என்றாராகலின்.

**வெண்டுறைப் பாட்டாவன,** இலக்கு நாட்டிச் செய்யப்படும் கூத்திற்கு உரிய வாகிய வரியும், குரவையும், **மண்டிலமும்,** சேதமும் முதலிய.

**வெண்டுறை வெண்டுறைப் பாட்டாவன,** பதினோராடற்கும் ஏற்ற பாட்டு அவை **அல்லியம்** முதலியவும் பாடல்களாக ஆடுவாரையும் பாடல்களையும் கருவியையும் உந்து இசைப்பாட்டாய் வருவன.

என்னை ?

> ‘அவ்வப் பொருளால் அரில்தப நாடிப்
> பாட்டினிற் புகழ்தல் பாடலி தாகலிற்
> பதினோ ராடற் பாட்டாய் வந்தன
> வெண்டுறை வெண்டுறை எனவிரித் தனரே.’

என்றாராகலின்.

இனி, இவற்றின் உறுப்பு ஐம்பத்து மூன்றாவன, அல்லிய உறுப்பு ஆறு; கொட்டி உறுப்பு நான்கு; குடத்தின் உறுப்பு ஐந்து; பாண்டரங்க உறுப்பு ஆறு; மல்லாடல் உறுப்பு ஐந்து; துடியாடல் உறுப்பு ஆறு; கடையத்து உறுப்பு ஆறு; பேட்டின் உறுப்பு நான்கு; மாக்காலாடல் உறுப்பு நான்கு; பாவை உறுப்பு மூன்று என இவை.

இவற்றின் தன்மை **செயிற்றியமும், சயந்தமும், பொய்கையார் நூலும்** முதலியவற்றுட் காண்க; ஈண்டு உரைப்பிற் பெருகும்.

**‘பதினோ ராடலும் ஆடினர் யாரோ ?’** எனின்,

**[குறள் வெண்பா]**

> 1. ‘**அல்லியம்** மாயவன் ஆடல்; அதற்குறுப்புச்
> சொல்லினரா றாகத் துணிந்து.’
>
> 2. ‘**கொட்டி** கடம்பமர்ந்தான் ஆடல்; அதற்குறுப்
> பொட்டினர் மூன்றுடன் ஒன்று.’

---

1, இதனுள் ’ ‘ஓங்கெழில்‘ என்பது, ‘ஓங்கெழி லகல்கதிர் பிதிர்துணி மணிவிழ முந்நீர் விசும்பொடு பொருதலற‘ என்னும் பாட்டையும்; ‘ குன்று ’ என்பது, ‘ குன்று குடையாக் குளிர்மழை தாங்கினான்‘ ’ என்னும் பாட்டையும்; ‘ கூதிர்‘ என்பது, ‘கூதிர்கொண் டிருநேங்கும்‘ என்னும் பாட்டையும்; ‘பண்பு‘ என்பது, ‘பண்பு கொள் செயன்மாலை‘ என்னும் பாட்டையும்; ,தோழி‘ என்பது, தோழி வாழி தோழி வாழி, வேழ மேறி வென்ற தன்றியும் ‘என்னும் பாட்டையும், ‘ விளியிசை ’ என்பது, ‘விளியிசைப்ப விண்ணநடுங்க’ என்னும் பாட்டையும்; ‘முத்துறழ்‘ என்பது, ‘முத்துற மூகலந்தேங்கி’ என்னும் பாட்டையும் முதல் நினைப்புக் குறிப்பால் உணர நின்றன.
[நன். மயிலை, 268 உரைமேற்கோள் நோக்குக.)

3. 'அறுமுகத்தன் ஆடல் குடைக்கூத் ததற்குப்
பெறுமுறுப்பு நான்காகப் பேசு.'

4. 'குடத்தாடல் குன்றெடுத்தான் ஆடல்; அதற்கு
மடக்கிய ஐந்துறுப் பாம்.'

5. 'முக்கணன் ஆடிற்றுப் பாண்டரங்கம்; மற்றதற்
கொக்குமுறுப் பாறு உணர்.'

6. 'மாயவன் ஆடிற்று மல்லாடல்; மற்றதற்
காய உறுப்புக்கள் ஐந்து.'

7. 'துடியாடல் மங்கை எழுவ ரதாடற்
கடியாம் உறுப்புக்கள் ஆறு.'

8. 'கடையம் அயிராணி ஆடல்; அதனிற்
குடைய உறுப்பைந்தோ டொன்று.'

9. 'காமன தாடலாம் பேட்டா டதற்குறுப்பு
நாமிக வாராயின் நான்கு.'

10. 'மாயவள் ஆடல் மரக்கால்; அதற்குறுப்
பேய்வன ஈரிரண் டென்.'

11. 'திருவாடல் பாவை; அதற்குறுப்புத் தேரின்
ஒருவா திரண்டுடன் ஒன்று.'

எனக் கொள்க.

[குறள் வெண்பா]

'பல்வரை நின்றுடல் ஆறு ;மற் றைந்துந்தன்
எல்லையின் வீழ்ந்தாடல் என்.'

செந்துறை வெண்டுறைப் பாட்டாவன, தெய்வதமும், பாவையும், வானூர் மதியமும், இலங்கிரும், வைளவமும், ஒன்று கொட்டும், முருட்டும் என்ற இத் தொடக்கத்து மேற்புறச் செய்யுள் எனக் கொள்க.

என்னை?

'தேவ பாணி முதலா ஏவிய
ஒன்றீ ருகக் கிடந்தவும் வந்த
இலங்கிரு வைளவம் வானூர் மதியம்
என்றிம் மொழிந்த மேற்புறம் எல்லாம்
செந்துறை வெண்டுறை சேர்த்துங் காலே.'

என்றாராகலின்.

இனி, முப்பத்திரு வகை உத்தியாவன,1 முன் கூறியவே.

தருக்கமாவன, ஏகாந்த வாதமும், அநேகாந்த வாதமும் என்பன. அவை குண்டலம், நீலம், பிங்கலம், அஞ்சனம், தத்துவ தரிசனம், காலகேசி முதலிய செய்யுட்களுள்ளும்; சாங்கியம் முதலிய ஆறு தரிசனங்களுள்ளும் காண்க.

இனி, [நடச்] செய்யுளாவன,

'வரியே குரவை மதலை மேடம்
முரியே தாழிசை முன்னிலை வாழ்த்தே
தேவ பாணி சிற்றிசை நேரிசை
பாவை தனிநிலை பாங்கமை மடலே.'

என்று ஓதப்பட்டன. அவை இன்மணியாரத்துள்ளும் பிறவற்றுள்ளும் கண்டு கொள்க.

---

1. யா, வி, 95 உரைமேற்கோள் நோக்குக.

'முந்துநூல் முடித்த முறைமையின் வழாஅமை
வந்தன பிறவும் வயினறிந் துரைப்போன்
அந்தமில் கேள்வி ஆசிரி யன்னே.'

என்பது, மேல் நூல் முடிந்த முறைமையின் வழாமைச் சொன்னவும், சித்திர சமைய பத்திர சேதக கணித கத்தவுத்தி முதலிய பிறவும் அறிந்து இடத்திற்கு ஏற்ற வாற்ருன் உரைக்க வல்லோன் கேள்வி முற்றிய ஆசிரியன் என்று கூறப் படுவான் (என்றவாறு).

[நேரிசை வெண்பா]

'சொல்லிற் சுருங்கிப் பொருள்பெருகித் தொன்ஞான *
எல்லாம் விளக்கி இருளகற்றும்—நல்யாப்
பருங்கலம் வல்லவர் தாமன்றே கேள்வி
ஒருங்கலர்த்த † வல்லோர் உணர்ந்து?'

ஒழிபு இயல்
முற்றிற்று.

யாப்பருங்கல மூலமும்
**விருத்தியுரையும்**
முற்றும்
18—8—1944.




பி-ம் : * தொன்னூலம் † ஒருங்கறிய




# பொருட் குறிப்பகராதி

---

இ—தொடர்ச்சி.



ஈ





உ

குறுளடியான் வந்த வஞ்சிப்பா,
குறளடியும் சிந்தடியும் மயங்கி வந்த வஞ்சிப்பா,
குறளடி வஞ்சிப்பாச் சிறப்புடைத் தென்பது,
குறிஞ்சித் திணை,
குறிப்பு ஏவல் தற்சுட்டின்சண் வந்த குற்றெழுத்து, விட்டிசைப்பின், மொழியிடை கடைகளிலும் நேரசையாம் என்பது,
குறிப்புத் தொடை,
குறில் அகவல் அடுக்கிசை வண்ணம்,
குறில் அகவல் ஏந்திசை வண்ணம்,
குறில் அகவல் மயங்கிசை வண்ணம்,
குறில் அகவற் பிரிந்திசை வண்ணம்,
குறில் அகவற் றூங்கிசை வண்ணம்,
குறில் ஒழுகல் அடுக்கிசை வண்ணம்,
குறில் ஒழுகல் ஏந்திசை வண்ணம்,
குறில் ஒழுகல் மயங்கிசை வண்ணம்,
குறில் ஒழுகற் பிரிந்திசை வண்ணம்,
குறில் மெல்லிசை அடுக்கிசை வண்ணம்,
குறில் மெல்லிசை ஏந்திசை வண்ணம்,
குறில் மெல்லிசைப் பிரிந்திசை வண்ணம்,
குறில் மெல்லிசை மயங்கிசை வண்ணம்,
குறில் வல்லிசை அடுக்கிசை வண்ணம்,
குறில் வல்லிசை ஏந்திசை வண்ணம்,
குறில் வல்லிசைப் பிரிந்திசை வண்ணம்,
குறில் வல்லிசை மயங்கிசை வண்ணம்,
குறுக்கும் வழிக்குறுக்கல் — குறுக்கல் விகாரம்,
குறுஞ்சீர் வண்ணம்,
குறுவெண் பாட்டு — குறள் வெண்பா,
குறைச் சிஃறுழிசைக் கொச்சகம்,
குறைப் பஃறுழிசைக் கொச்சகம்,
குறையவை — அறிவு குணங்களாற் குறைவுற்றவர் கூடியுள்ள சபை,
குறையீற்று ஒரு பொருள் இரட்டை,
குறையீற்றுப் பல பொருள் இரட்டை,
குறையெண் நிரனிறை,

## கூ

கூட சதுர்த்தம் — சித்திரக் கவிகளுள் ஒன்று,
கூடம் ஆமாறு,
கூர்மச் சக்கரம் — ஆமை வடிவா னியன்ற சித்திர கவி வகை,
கூழை அளபெடைத் தொடை,
கூழை இயைபுத் தொடை,
கூழை எதுகைத் தொடை,
கூழை நிரனிறை,
கூழை முரண் தொடை,
கூழை மோனைத் தொடை,
கூன் :
1. வெண்பாவில் வருதல்,
2. ஆசிரியத்தில் வருதல்,
3. கலியில் வருதல்,
4. வஞ்சியில் வருதல்,
கைக்கிளைச் சமனிலை மருட்பா,
கைக்கிளைப் பொருண்மேல் ஆசிரியம் வருவழி எருத்தடி முச்சீரான் வரப் பெறுதென்பது,
கைக்கிளை மருட்பாவின் இலக்கணம்,
கைக்கிளையும் வெண்பா முதலா ஆசிரிய இயலான் இறும் என்பது,
கைக்கிளை வியநிலை மருட்பா,

## கொ

'கொச்சகக் கலிப்பா' என்பது காரணக்குறியாதல்,
கொண்டு கூட்டுப் பொருள்கோள்,

## கோ

கோமூத்திரி — சித்திரக் கவிகளுள் ஒன்று; ஒரு செய்யுளின் முன்னி ரண்டடி மேல் வரியாகவும் பின்னி ரண்டடி கீழ் வரியாகவும் எழுதி, அவ்விரு வரியின் எழுத்துகளையும் பசுவின் மூத்திரரேகை போல மாறி மாறிப் படிக்க அச்செய்யுளே ஆகும்படி அமைத்துப் பாடுவது,

# அரும்பதம் முதலியவற்றின் அகராதி

## அ

அஃகம் :
1. தானியம்,
2. முறைமை,

அஃகாய்தம் — ஆய்தக் குறுக்கம்,

அஃகிய நாலுயிர் — குற்றிய லிகரம், குற்றியலுகரம், ஐகாரக்குறுக்கம், ஔகாரக்குறுக்கம்,

அஃதான்று — அதுவன்றி,

அஃதும் — அதுவும்,

அஃதேல் — அப்படியானல்,

அஃறிணை — மக்கள் ஒழிந்த பிற பொருள்கள்,

அஉ அறியா — எட்டும் இரண்டும் அறியாத (கபடற்ற),

அக்கரத்தாரணை — நவதாரணையுள் ஒன்று,

அக்கேனம் — ஆய்த எழுத்து,

அகடுற — நடுவு நிலைமை பொருந்த,

அகணித — கணிக்கப்படாதவனே,

அகப்படுத்தல் — தமக்கு ஆகச் செய்தல்,

அகப்படுத்தார் — தமக்கு ஆகச் செய்தார்,

அகம் முதல் நான்கு — அகம், அகப்புறம், புறம், புறப்புறம் என்னும் பொருட் பாகுபாடுகள்,

அகலம் — மார்பு,

அகவ — கூத்தாட,

அகவல் — ஆசிரியப்பா,

அகற்பு :
1. நீக்கம்,
2. பிரிவு,

அகறல் — விட்டு நீங்குதல்,

அகன்பொழில் — விசாலமான சோலை,

அகன்றிசைப்பு — யாப்பு முறையி னின்று அகன்று காட்டும் குற்றம்,

அகிலம் — பூமி,

## அ—தொடர்ச்சி

அகைப்பு :
1. எழுச்சி,
2. இடை விட்டுச் செல்லுதல்,
3. கூறுபாடு,
4. மதிப்பு,
5. முயற்சியாலுண்டானது,

அங்கப் பெருநூல் ஆதி — அங்காகமம் முதலிய பெரு நூல்கள்,

அங்கபுவ்வம் — அங்காகமம் பன்னிரண்டும் பூர்வாகமம் பதினான்குமாகிய சமணர்க்குரிய பரமாகமங்கள்,

அசுணம் — அசுணமா,

அசுரீர் — அசுரர்களே,

அசைஇய — இயங்கிய,

அசோகு — அருகக் கடவுளுக்குரிய அசோக மரம்,

அஞ்சக வூண்,

அஞ்சனம் :
1. 'அஞ்சனகேசி' என்னும் இறந்துபட்ட ஒரு தருக்க நூல்,
2. மை,

அஞ்சிறை (அகம் சிறை) உட்சிறகு,

அஞ்சு — அச்சம்,

அட்ட — காய்ச்சிய,

அட்டான் :
1. அழித்தான்,
2. ஆக்கித் தந்தான்,

அட்டுபு — இட்டு,

அடக்கியல் — சரிதகம்,

அடம்பி — அடம்ப மலர்,

அடுக்கம் — மலைச்சாரல்,

அடுக்கல் — மலை,

அடும்பு — மலர்க்கொடி வகை,

அடைச்சிய — சேரச் செய்த,

அ—தொடர்ச்சி.

அடைத்த அரும்பொருள் — அரசிறையாக விதிக்கப்பட்ட அரும்பொருள்,

அடைப்பையான் — வெற்றிலை மடித்துக் கொடுப்பவன்,

அண்ணாக்கு மாறு — வாய் திறந்தழைக்கும் வகை,

அண்ணாத்தல் — வாய்திறத்தல்,

அண்ணினர் — நெருங்கி யிருப்பவர்,

அணங்க வல்லாள் — வருத்த வல்லவள்,

அணங்காகி — வருத்தமாகி,

அணங்காமை — வருந்தாமல்,

அணங்கு — துன்பம்,

அணங்கும் — வருந்தும்,

அணங்குறியினாள் — அஞ்சச் செய்தவள்,

அணல் — அண்ணம், உள்மிடறு, கழுத்து, தாடி,

அணிகல நூல் — ஆபரண சாஸ்திரம்,

அணி மகர வெல்கொடியான் — மன்மதன்,

அணுக் கந்தம் — அணுத் தொகுதி,

அணைவு — புகலிடம்,

அத்துண் ஆடை — தைப்புண்ட ஆடை,

அத்துவ யோகம் — நில அளவை; ஒரு சந்தலைப் பிரத்தாரம் செய்ய வேண்டினால் அதற்கு எவ்வளவு இடம் வேண்டும் என்பதை அறிவது,

அதி கண்டம் — செய்யுட் சீர்,

அந்தடி — முடிவடி,

அந்தத் தொடை — அந்தாதித் தொடை,

அந்தரம் — பேதம்.

அந்தரித்தும் — மாறுபட்டும்,

அந்தௌ — 'அந்தோ!' என்பதன் மரூஉ,

அந்நலார் — அழகிய பெண்டிர்,

அந்நீர் இப்பி — அழகு வாய்ந்த முத்துச் சிப்பி,

அநேகாந்த வாதம் — பல பட்சங்களையும் கூறும் ஆருகதத் தருக்கம்,

அ—தொடர்ச்சி.

அம்பல் — சிலரறிந்து கூறும் பழிச்சொல்,

அம்புத் தரங்கம் — அம்போதரங்கம்,

அம்போதரங்கம் — நீரில் தோன்றும் அலைகள்,

அம்மருங்குல் — அழகிய இடையை உடையவள்,

அம்மலர் — அழகிய மலர்,

அமராசர் — தேவேந்திரர்கள்,

அமரீர் — தேவர்களே,

அமன்ற — நெருங்கிய,

அமித பதி கவி,

அமிழ்தளைஇ—இன்பம் கலந்து,

அமை — மூங்கில்,

அமைதி — தன்மை,

அமையும் — பொருந்தும்,

அயன் — பிரமன்,

அயிர்ப்பு — குறிஞ்சி யாழ்த் திறவகை,

அயிராணி — இந்திராணி,

அயில் — வேலாயுதம்,

அரக்காம்பல் — செவ்வல்லி மலர்,

அரக்கார்ந்த பஞ்சி — செம்பஞ்சி,

அரசர் வியன்பா — ஆசிரியப்பா.

அரத்த வாய் — பவளம் போன்ற வாய்,

அரந்தை — துன்பம்,

அரவ வனப்பு — ஒலியழகு,

அரவித்தன — ஒலித்தன,

அரவிந்தம் — தாமரை,

அரவு :

1. (கேதுவென்னும்) பாம்பு,
2. பாம்பு,

அரவொடு மோட்டாமை பூண்ட முதல்வன் — சிவபெருமான்,

அராறு — குறிஞ்சி யாழ்த்திற வகை,

அராகம் :

1. பாலை யாழ்த்திற வகை,
2. கலிப்பாவின் உறுப்புகளுள் ஒன்று,

அரி :

1. சிங்கம்,
2. செவ்வரி,

அ—தொடர்ச்சி.

அரிக்கிணை — கிணைப்பறை வகை,

அரிசந்தனம் — சந்தன வகை,

அரிது படக் காட்டல் — அருமை தோன்றக் காட்டுதல்,

அரிமா :

1. சிங்கம்,
2. நிரைநேர்,

அரிமா நோக்கு — சிங்க நோக்காக முன்னும் பின்னும் நோக்கும் சூத்திர நிலை,

அரிமான் எருத்தம் சேர் அணை — சிங்காதனம்,

அரியணை — சிங்காதனம்,

அரியிளஞ் செங்காற் குழவி — மென்மையும் இளமையும் செம்மையும் வாய்ந்த காலையுடைய குழந்தை,

அரில் — குற்றம்,

அருகல் — அருமையாதல்,

அருகுமலம் — கெட்டுகின்ற மலங்கள்,

அருங்கயம் — பெருங்குளம்,

அருங்கல நூல் — அழகு நூல்,

அருங்கல மொழி — அழகு செய்யும் சொல்,

அருங்கவி — சித்திரக் கவி,

அருஞ்சமம் — கடும்போர்,

அருஞ்சுரம் — கடத்தற்கு அரிய பாலை வனம்,

அருணம் — சிவப்பு,

அருத்திக்க — இரு சம பாகங்களாகப் பிரிக்க,

அருந்து ஏமாந்தனம் — உண்ணுதலை விரும்பினேம்,

அருப்பம் — கோட்டை,

அல்கல் — தங்குதல்,

அல்கலும் — நாடோறும்,

அல்கியார்த்த — நிலைபெற்று ஒலித்த,

அல்கிரை — சிறு தீனி,

அல்குல் :

1. பக்கம்,
2. பிருஷ்டம்,

அல்லதூஉம் — அன்றியும்,

அல்லியம் — மாயவன் ஆடிய கூத்து,

அ—தொடர்ச்சி.

அல்லிருங் கூந்தல் — இருள் போலும் கரிய கூந்தலையுடையவள்,

அல்லுரிச்சீர் — அல்லாத உரிச்சீர்கள்,

அல்வழி — அல்லாத இடம்,

அலகிடுதல் — செய்யுளில் அசைக் கணக்கிடுதல்,

அலங்கடை — அல்லாத விடத்து,

அலகு — அளவு,

அலர்த்த வல்லார் — விளக்க வல்லவர்,

அலந்தார் — வருந்தியவர்கள்,

அலமர — அசைய,

அலர் — பலரறிந்து கூறும் பழிச் சொல்,

அலர்த்த வல்லார் — விளக்க வல்லவர்,

அலர்ந்த தோற்றம் — விளங்கிய காட்சி.

அலராசனன் — அருகக் கடவுள்,

அலவலைக்குயில் — விடாது கூவுதலையுடைய குயில்,

அலவன் — நண்டு,

அலைத்தது — வருத்தியது,

அலைப்பட்ட — வருத்தப்பட்ட,

அலைப்பான் — கொல்லும் பொருட்டு,

அலையல் — வருந்தாதே,

அலை வாழ்க்கை — கொலை செய்து வாழும் வாழ்க்கை,

அவ்வளை — அழகிய வளை,

அவம் — வீண்,

அவலம் — துக்கம்,

அவற்கண்டு — அவனைப் பார்த்து,

அவித்த — அழித்த,

அவிதல் — பணிதல்,

அவிந்தொழுகுதல் — பணிந்து நடத்தல்,

அவியுணவினர் — தேவர்,

அவிர்ந்தது — விளங்கியது,

அவிழ்ப்பது — விடுகவிப் பொருளை விடுப்பது,

அவிழும் — மலரும்,

அவுணர் — அசுரர்,

அவை — சபை,

அ—தொடர்ச்சி.

அவையடக்கியல் — 'வல்லாதன சொல்லினும் அவற்றை ஆராய்ந்து கொண்மின்' என அவை யகத்தாரெல்லார்க்கும் வழிபடு கிளவி சொல்லுதல்,

அழல் உளை — தீச்சுடர் போலும் பிடரி மயிர்,

அழிசி காடு — அழிசியின் ஆர்க்காடு என்னும் நகரம்,

அழுங்கல் :

1. ஆரவாரம்,
2. வருந்துதல்,

அளப்பருங்கடற்பெயர் அருந் தவத்தோன் — அமித சாகரர்,

அளவை — பிரமாணம்,

அளறு :

1. நரகம்,
2. சேறு,

அளறுபட — சேறுக,

அளி — வண்டு,

அளியன் — அன்புடையான்,

அளைப்பள்ளி — வளையாகிய படுக்கை,

அற்றம் — கேடு,

அற்றன்று — அது போன்றதன்று,

அறப்புணை — தருமத் தெப்பம்,

அறப்புறம் — ஆதுலர் சாலை கடவுளர் ஆலயம் முதலியன,

அறப்புறம் — இறையிலி நிலம்,

அறமிரண்டு — இல்லறம், துறவறம்,

அறமுதல் நான்கு — அறம், பொருள், இன்பம், வீடு என்பன,

அறல் — கருமணல்,

அறவாழி — தரும சக்கரம்,

அறவாழியன் — அருகக் கடவுள்,

அறிவன் — அருகக் கடவுள்,

அறுத்திசைப்பு — வேற்றிசை கலந்து வரும் யாப்பு வழு,

அறுத்துக்கொட்டு,

அறுதொழிலாளர் — வேதியர்,

அறு பிறவி — அற்ற பிறவி,

அறு பொருள் — சீவம், புற்கலம், தருமம், அதருமம், ஆகாசம், காலம் என்பன,

அ—தொடர்ச்சி.

அறுமுகத்தன் — முருகக் கடவுள்,

அறுவர் — சூரியன், யமன், வாயு, இந்திரன், அசுவினித்தேவர் இருவர்; கண்ணன், தருமன், வீமன், அருச்சுனன், நகுலன், சகதேவர்,

அன்றே — இரக்கக் குறிப்பு,

அன்னெள — 'அன்றே' என்பதன் மரூஉ,

அனங்கன் — மன்மதன்,

அனந்த சதுட்டயம் — அனந்த ஞானம், அனந்த தரிசனம், அனந்த வீரியம், அனந்த சுகம் என்பன,

அனு — மோனை எழுத்து,

அனு கரணம் — ஒலிக் குறிப்பு,

அனுங்க — வருந்த,

அனுப்பிராசம் — வழி எதுகை,

அனுலோமம் — வலப்பக்கம்,

அனைத்து — அவ்வளவு ('எள்ளனைத்தும் இடரின்றி'),

அனை வகை — அந்த வகை,

ஆ

ஆ — பெற்றம், மரை, எருமை இவற்றின் பெண் பெயர்,

ஆஅல் — ஆரல் (கார்த்திகை நட்சத்திரம்),

ஆக்கை — உடல்,

ஆகம் — மார்பு,

ஆகுதி — அக்கினியில் மந்திர பூர்வமாகச் செய்யும் ஓமம்,

ஆசான் — பாலை யாழ்த் திற வகை,

ஆசிரியக்கு — ஆசிரியத்துக்கு,

ஆசு — எதுகையிடையில் வரும் ய், ர், ல், ழ் என்னும் ஒற்று,

ஆசையல்குல் — காமவிச்சையை உண்டாக்கும் அல்குல்,

ஆடமை — அசையும் மூங்கில்,

ஆடவர் — வாலிபர்,

ஆடி — 'கண்ணாடி' என்பதன் முதற் குறை,

ஆடு :

1. மேடராசி,
2. விலங்குகளின் ஆண்,

ஆடு கழை — அசையும் மூங்கில்,

ஆ—தொடர்ச்சி

ஆடை நூல் — நெசவு நூல்,

ஆண்டு — வயது (பிராயம்),

ஆணை — கட்டளை,

ஆதிசால் பா — வெண்பா,

ஆதி தீபகம் — முதனிலைத் தீவகம்,

ஆதி நாதர் ஆய்ந்த நூல் — சமணு கமம்,

ஆதி நாதன் — அருகக் கடவுள்,

ஆம்பல் :

1. அல்லி மலர்,

2. ஆம்பற் பண்,

ஆம்பலந்தீங்குழல் — குமுத வடிவாக அணைசு பண்ணிச் செறித்த இசைக் குழல்,

ஆய் :

1. ஆராய்ச்சி செய்,

2. தாய்,

ஆய்கோல் — மெல்லிய கைக்கோல்,

ஆய்த்தியர் — ஆய்ச்சியர்,

ஆய்த்தோ — ஆயிற்ரே,

ஆய்திணை — சிறுதிணை,

ஆய் மலர் — அழகிய பூ,

ஆய எழுத்து — இரகசிய எழுத்து,

ஆயம் — தோழியர் கூட்டம்,

ஆயன் — கண்ணபிரான்,

ஆயிரண்டு — அவ்விரண்டு,

ஆயுத நூல் — போர்க் கருவிகளைப் பற்றிக் கூறும் நூல்,

ஆர் :

1. ஆரக்கால்,

2. ஆத்திப் பூமாலை,

ஆர்கலி — கடல்,

ஆர்கை — உண்ணுதல்,

ஆரஞர் — பெருந்துன்பம்,

ஆரம் :

1. கடம்ப மரம்,

2. சந்தன மரம்,

3. ஆர்,

4. முத்துமாலை,

ஆரல் — கார்த்திகை நட்சத்திரம்,

ஆரிடம் — இருடிகளாற் செய்யப்பட்ட செய்யுள்,

ஆ—தொடர்ச்சி.

ஆரிடம் நான்மை — நான்கு ஜின வேதங்கள் : பிரதமானு யோகம், கரணனு யோகம், சரணனு யோகம், திரவ்யானு யோகம் என,

ஆரிய மன்னர் — வடநாட்டரசர்,

ஆரியர் — ஆசிரியர்,

ஆலி — ஒலித்து,

ஆழி — சக்கராயுதம்,

ஆழியிழைத்தல் — கூடலிழைத்தல் : காதலனைப் பிரிந்த காதலி அவன் வரும் நிமித்தம் அறியக் கண்களை மூடிக்கொண்டு பூமியில் கூடற் சுழி வரைதல்,

ஆழியை — சக்கராயுதத்தை உடையை,

ஆற்றல் — இன்னசொல் இன்ன பொருளை உணர்த்தும் என்னும் நியதி,

ஆற்றுக் காலாட்டியர் — மருத நிலப் பெண்டிர்,

ஆற்றுப்படுப்பான் — வழியிற் செலுத்துபவன் (guide),

ஆறறி புலவர் — இயல்பறிந்த புலவர்,

ஆறறி மாந்தர்,

ஆறிரண்டாம் ஆவி — பன்னிரண்டாம் உயிராகிய ஔ என்னும் எழுத்து,

ஆறின்றி — நீதியின்றி,

ஆறு — வழி,

ஆறு கலாச வருணம் — கணித வகை,

ஆறு பொருள் — அறு பொருள்,

ஆறை — ஆறகழூர், சேலம், ஆற்காட்டு ஜில்லாக்கள் சேருமிடத்தில் உள்ளது,

ஆன் — பசு,

ஆன்றட்டு (ஆன் [illegible] கட்டு) பசுவினைக் கட்டி,

ஆனந்த ஓத்து — குற்றங்களை விளக்கும் இலக்கண நூல்; அகத்தியரால் இயற்றப்பட்டது,

ஆனேற்றான் கச்சியகம் — 'சிவ காஞ்சி' என்னும் பெரிய காஞ்சீ புரம்,

இ

இகந்த — நீங்கிய,

இகரக் குறுக்கம் — குற்றியலிகரம்,

இ—தொடர்ச்சி

இகல் — வலிமை,

இகவா — கடவாத,

இகும் — தாழ்த்தும்,

இசை :
1. கீர்த்தி,
2. செய்யுட் சீர்,

இஞ்சி — மதில்,

இடம்பட அறிந்து — மிகுதியாக ஆராய்ந்தறிந்து,

இடுக்குடை உள்ளத்தான் — உலோபத் தன்மையுடைய மனமுடையவன்,

இடுகினும் — இறுகினுலும்,

இடுகு துறை — குறுகிய நீர்த்துறை,

இடுகும் இடை — சிறுகும் இடை,

இடுகுறி — இட்டு வழங்கும் பெயர்,

இடைநிலை — தனிச்சொல்,

இடைநிலைப் பாட்டு — தாழிசை (கலியுறுப்பு),

இடைமகன் — இடையன்,

இடைப்பால் எதுகை — இடையின எதுகை,

இடையன் — முல்லை நிலத்தான்,

இணர் — பூங்கொத்து,

இணைச் செப்பு — இரட்டைக் கலசம்,

இணையசை — நிரையசை,

இதணம் — பரண்,

இந்திரர்கள் — தேவர்கள்,

இந்து — சந்திரன்,

இம்மா — நேர்நேர்,

இமில் — எருதின் திமில் (Hump)

இமிழ் கடல் — ஒலி கடல்,

இமிழ் தருதல் — ஒலித்தல்,

இமைப்ப — ஒளி வீச,

இயக்கம் — நடை,

இயக்கியர் — யக்ஷப் பெண்டிர்,

இயங்கலின் — நடமாடுவதால்,

இயம் — வாத்தியம்,

இயமர இசை — பறையொலி,

இயல் — பெருமை,

இயல் ஞானம் — 'ஸம்யஞ்ஞானம்' என்னும் நன்ஞானம்,

இ—தொடர்ச்சி

இயற்காட்சி — 'ஸம்யக் ஞானம்' என்னும் நல்லறிவு,

இயற்பாடு — பொருத்தம்,

இயனூல் — இலக்கண நூல்,

இரட்டி :
1. இரு மடங்கு,
2. இரண்டாகி,

இரண்டு கொட்டி,

இரண்டு பிரகரணச் சாதி — கணித வகை,

இரணத் தொடை — முரண் தொடை,

இரவரின் — இராப்பொழுது வந்தால்,

இர வாரல் — இரவில் வாராதே,

இராஅள் — இரவாள் (யாசியாள்),

இராசி — 'மேடம்' முதலிய பன்னிரண்டு ராசிகள்,

இராசி எழுத்து — இராசிகளுக்கு உரிய எழுத்து,

இரியல் மகளிர் — வீட்டை விட்டு ஓடும் பெண்டிர்,

இரு கண் மொந்தை — இரு கட்பறை,

இரு குணம் — உண்மையின்மைகள்,

இரு கோட்டொரு மதி — இரு நுனிகளையுடைய ஒப்பற்ற பிறைச் சந்திரன்,

இருங்கயம் — பெருங் குளம்,

இருங்கிளை — பெருஞ் சுற்றம்,

இருங் கூந்தல் — கருங் குழல்,

இரு சுடர் — சந்திர சூரியர்,

இருஞ்சினை — பெருங் கிளை,

இருத்தி — சித்தி,

இருது :
1. 'கார்ப்பருவம்' முதலிய ஆறு பருவங்கள்,
2. மகளிர் பூப்பு,

இரு துணிபு — ஒரு பொருட்கு ஒரே சமயத்தில் உண்மையும் இன்மையும் கூறும் முடிபாகிய அநேகாந்த வாதம்,

இரு துணிபொரு பொருட்கியல் வகை — அனேகாந்த முறை,

இருந்தளவு — பெருமுல்லை,

இருந்தாள் — பெரிய கால்,

இ—தொடர்ச்சி

இருந்தான் — அமர்ந்தான்,

இருபத்தொரு திறன் — இருபத்தொரு பண்ணின் திறப் பாகுபாடுகள்,

இரு பிறப்பாளர் — பார்ப்பனர்,

இரும்படம் — பெரிய படம்,

இரும்பிடி — பெரிய பெண் யானை,

இரு மூன்றில் ஒன்று — அரசர்க்குச் செலுத்த வேண்டிய ஆறிலொரு கடமை,

இரு வகைப் பண்பு,

இருவர் — பிரம விஷ்ணுக்கள்,

இருவரை — கிரவுஞ்ச மலை,

இருவி — தினையரிதாள்,

இரு விசும்பு — சுவர்க்கம்,

இரு வினை — காதி அகாதி கன்மங்கள்,

இருள் — அஞ்ஞானம்,

இருளறு சிவகதி — பிறப்பற்ற முத்தி நிலை,

இல் — மனைவி,

இல்லாண் முல்லை — படை வீட்டில் தங்கியுள்ள தலைவனைத் தலைவி நினைப்பதைக் கூறும் அகப்புறத் துறை,

இலக்கம்,

இலகு — குற்றெழுத்து ஒற்றடாது வருவது ; இது ரகர வடிவிற்று,

இலங்கா புரத்தார்தம் கோமான் — இராவணன்,

இலங்கிரு — செந்துறை வெண்டுறைப் பாட்டுள் ஒரு வகை,

இலதை — எழுத்தல்லாத ஒலி,

இல மலர் — இலவம்பூ,

இலவம் — இலவ மரம், இலவந்தீவு, கால வகை,

இலேசு — விதப்புச் சொல்,

இலைச் சுமடன் — இலை சுமந்து விற்கும் மூடன்,

இலை ஞெமல் — உலர்ந்த ஓலை வேய்ந்த வீடு,

இவுளி — குதிரை,

இழுக்காது — குற்றப்படாது,

இழுக்கு — குற்றம்,

இ—தொடர்ச்சி

இழுது — தேன்,

இளவேனில் — இள வெயிற் காலம் : சித்திரை, வைகாசி மாதங்கள்,

இளி வந்த — இழிந்த,

இளையாட்டி — தங்கை,

இறடி — தினை,

இறவு — தேன் கூடு,

இறுகல் — மூர்ச்சியாதே,

இறுங்கு — சோளம்,

இறு சீர் — முடியும் சீர்,

இறுத்தது — அழித்தது,

இறும்பென — புதர்போல,

இறுவரை — பெரிய மலை,

இறுவாய் — முடிவு,

இறை — சிவபெருமான்,

இறை கூரும் — தங்கியிருக்கும்,

இறைச்சிப் பொருள் — கருப் பொருளினுள்ளே கொள்ளும் பொருள்,

இறைமை — கடவுட் பண்பு,

இறைவன் — சிவபெருமான்,

இன் கவி — சித்திர கவி,

இன்பக்கு — காமத்திற்கு,

இன்மை — வறுமை,

இன்மொழி — நேர்நிரை,

இன்னணம் — இவ்வண்ணம் ('இன்ன வண்ணம்' என்பதன் மரூஉ),

இன்னதனை — இத்தனை,

இன்னா — துன்பம்,

இன்னாங்காய் — கடுமையாய்,

இன்னிசை மூவடி முக்கால் — இன்னிசை வெண்பா,

இனக் கிளி — கிளிக் கூட்டம்,

இன நிரைகள் — பசுக் கூட்டங்கள்,

இனம் — பசுக் கூட்டம்,

இன மீன் — மீன் இனம்,

இனிதிருந்து நல்லறம் சொல்லியான் — புத்தர்,

இனி மொழி — நிரைநிரை,

இனிய நீர் மூன்று — கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய் ஆகிய மூன்றும் கலந்து ஊறிய நீர்,

இனைந்து — வருந்தி,

இ—தொடர்ச்சி.

இனையல் — வருந்தாதே,

இனையை — இத்தன்மையை உடையை,

இனையையோ — நீ இப்படிப்பட்டவனே,

ஈ

ஈயல் — சிறகு முளைத்த கறையான்,

ஈரடி முக்கால் — சிந்தியல் வெண்பா,

ஈரம் — அன்பு,

ஈரறம் — யதிதர்ம ச்ராவக தர்மங்கள்,

ஈரிதழ் — குளிர்ச்சி பொருந்திய இதழ்கள்,

ஈருயிர்க்குறுக்கம் — குற்றியலிகரமும் குற்றியலுகரமும்,

ஈரைஞ்ஞூற்றெழினூட்டத்து இமையோன் — இந்திரன்,

உ

உஃகுவஃகென்று — உஃகுவஃகென்று ஒலித்து,

உகிர் — நகம்,

உகுத்த — உதிரச் செய்த,

உகுத்தென — சிதறினாற் போல,

உச்சந்த மால்வரை — வட நாட்டில் சமணர்க்குச் சிறந்த தலமாகிய ஊர்ஜ்ஜயந்தகிரி,

உச்சாடனை முதலிய உக்கிர எழுத்து,

உச்சியார் — வானுலகத்தவராகிய தேவர்,

உஞற்றும் —செய்யும்,

உடுக்கை — உடை,

உடும்பு — பல்லி இனத்தைச் சார்ந்த மலைவாழ் ஜந்து,

உடுவிலான் — சந்திரன்,

உடைந்த — தோற்ற,

உடைபுறம் — தோற்றோடும் சேனை,

உண்கண் — மையுண்ட கண்,

உண்ணுதவாறும் — இசைவாகாத வாறும்,

உணங்கல் — வற்றல்,

உணர்வெழுத்து — மனத்திற் கருதும் வடிவெழுத்து,

உ—தொடர்ச்சி.

உத்தம் — ஓரடியில் ஒரே எழுத்துக் கொண்ட வடமொழிச் சந்தம்,

உத்தரம் — பின் பக்கம்,

உத்திட்டம் — யாதேனும் ஒரு விருத்தம் பிரத்தாரத்தில் எத்தனையாம் விருத்தமாயிருக்கும் என்பதை அறியும் முறை,

உது — சேய்மைக்கும் அண்மைக்கும் இடையானதைக் குறிக்கும் சுட்டுப் பெயர்,

உந்து இசைப்பாட்டு — இயக்கும் இசைப்பாட்டு,

உம்மை எண் — எண்ணும்மை,

உமணர் — உப்பு வாணிகர்,

உய்க்கப்படுவது — நடத்தப்படுவது,

உய்த்துணர வைத்தல் — ஆராய்ந்தறியுமாறு அமைத்தல்,

உயர்திணை — மக்கள் தேவர் நரகர்,

உயர்ந்தன்று — உயர்ந்தது,

உயவும் — வருந்தும்,

உயிர்ப்பால் எதுகை — உயிரெழுத்தெதுகை,

உரவோன் — அருகக் கடவுள்,

உரறல் — முழங்குதல்,

உரன் — மன வலிமை,

உராஅய — வலியடைந்த,

உரிப்பொருள் — ஐந்திணைகளுக்கு உரிய புணர்தல், பிரிதல், இருத்தல், ஊடல், இரங்கல் ஒழுக்கங்களும் அவற்றின் நிமித்தங்களும்,

உரிவை — தோல்,

உருச்சந்தம் — ஊர்ஜ்ஜயந்தகிரி என்னும் உச்சந்த மலை,

உருமு — இடி,

உருமுத்தீ — இடியாலுண்டான தீ,

உருவக்கர சங்கேதங்கள் — உருவம் எழுத்துக் குறிகள்,

உருவெழுத்து — எழுதப்படும் எழுத்து,

உலகியற் சுலோகங்கள் — உலகியலைப் பின்பற்றிச் செய்த சுலோகங்கள்,

உலப்பித்தல் — அளவு படுத்துதல்,

உலவை — சிறு கொம்பு,

உலைக்கல் — கொல்லன் உலைக்களத்துள்ள பட்டடைக்கல்,

உ—தொடர்ச்சி.

**உவக்காண்** — உங்கே உள்ளவற்றைப் பார்,

**உவணம்** — கருடன்,

**உவந்தனே** — விரும்பி,

**உழக்கும்** — அனுபவிக்கும்,

**உழிஞை** — கோட்டை மதிலே முற்றுகையிடுதலைக் கூறும் புறத்துறை,

**உழுவை** — புலி,

**உழையதாக** — பக்கத்திலுள்ளதாக,

**உள்ளான்** — நினையான்,

**உளம்** — மனம், மார்பு, உட்பக்கம், ஆன்மா,

**உளியம்** — கரடி,

**உற்கிருதி** — ஓர் அடியில் இருபத்தாறு எழுத்துக் கொண்ட வட மொழிச் சந்த வகை,

**உறந்தையர்கோன்** — சோழன்,

**உறழ்ச்சி** — பிரத்தாரம்,

**உறழ்ப்பு** — காந்தார பஞ்சமம்,

**உறுலியர்** — உறுதிருக்கக் கடவது,

**உறுதகைமை** — பெருந்தன்மை,

**உறுவர்கள்** — முனிவர்கள்,

**உறுவன்** — மிக்கோன்,

**உறையுள்** — வாழிடம்,

**உன்னேன்** — நினையேன்,

ஊ

**ஊஉழ்** — நினைப்பு,

**ஊகம்** — கருங்குரங்கு,

**ஊட** — பிணங்க,

**ஊடு போக்கும்** — நடுவே செலுத்தும்,

**ஊதியம்** — பயன்,

**ஊதுதி** — ஊதுகின்றாய்,

**ஊதை** — காற்று,

**ஊமன்** — கூகை,

**ஊர்கோள்** — பரிவேடம் (Halo),

**ஊர்பணிய மதியம்** — ஊர்கோளால் அழகுறுத்தப்பட்ட சந்திரன்,

**ஊரகம்** — காஞ்சீபுரத்திலுள்ள திருமால் திருப்பதிகளுள் ஒன்று,

**ஊரன்** — மருத நிலத் தலைவன்,

ஊ—தொடர்ச்சி

**ஊரன** — ஊரில் உள்ளவை (அம்பு),

**ஊழ்த்த** — மலர்ந்த,

**ஊழி நடாயினான்** — உலகத்தை நடத்தியவன்,

**ஊழுலக்கை** — நினைப்பழிவு,

எ

**எஃகு** :

1. ஆய்தம்,
2. கூர்மை,
3. மதி நுட்பம்,
4. வேலாயுதம்,

**எஃகுச் செவி** — நுனித்தறியும் காது,

**எக்கர்** — மணல் மேடு,

**எடுத்துக்காட்டு** — உதாரணம்,

**எண்ணிரு தோள் ஏர் நகையாள்** — துர்க்கை,

**எதி பங்கம்** — யதி வழு (ஓசையறும் வழி நெறிப்பட வாராமல் நிற்பது),

**எம்முள்ளி** — எம்மை நினைத்து,

**எமரீர்** — எம்மவர்களே,

**எய்க்கும்** — இளைக்கும்,

**எய்தான்** :

1. அடையான்,
2. அம்பெய்திக் கொன்றான்,

**எய்துவது** — அடைவது,

**எய்யாது** — அறியாமல்,

**எயிலவன்** — மதிலுள் இருப்பவன்,

**எயிலான்** — மதிலையுடையவன்,

**எயிறு** — பல்,

**எயினர்** — வேடர்,

**எயினர் கோன்** — வேடர் தலைவன்,

**எரியவர்** — முத்தீ வளர்க்கும் அந்தணர்,

**எருத்தத்து** — கழுத்தில்,

**எருத்து** — ஈற்றயலடி,

**எருத்தம்** :

1. கழுத்து,
2. கலிப்பாவின் உறுப்பாகிய தரவு,

**எருவை** — கழுதை,

**எல்** — ஒளி,

**எல்லை** — பகல்,

எ—தொடர்ச்சி

எல்லை நீர் — கடல்,

எல்லே — தோழியே,

எல் வளை — ஒளி பொருந்திய வளையல்,

எலாஅ — தோழியே,

எவ்வம் :

1. இளி வரவு,

2. துன்பம்,

எவன் — என்னை,

எழிலி — மேகம்,

எழினி — திரைநேர்,

எழு — படைக்கல வகை,

எழுத்தந்தாதி — ஒரு செய்யுளில் ஓரடியின் ஈற்றெழுத்து அடுத்த அடியின் முதலெழுத்தாக வரத் தொடுப்பது,

எழுத்தல் இசை — எழுத்தோசை அல்லாத முற்கு, வீளை, இலதை, அனுகரணம் முதலாக உடையன,

எழுத்து, அசை முதலியன காரணக் குறி ஆமாறு,

எழு நயம் — ஸப்த பங்கி நியாயம்,

எழுவகைப் பிறவி — சூக்ஷ்மேகேந்திரியம், பாதரேகேந்திரியம், துவீந்திரியம், திரீந்திரியம், சதுரிந்திரியம், அஸஜ்ஞி பஞ்சேந்திரியம், ஸஜ்ஞி பஞ்சேந்திரியம் என்னும் எழு வகைத் தோற்றம்,

எழுவாய் — தொடக்கம்,

எள்கி — அஞ்சி,

எளிமை — சுலபம்,

எற்றால் — எதனால்,

எற்றுறந்தான் — என்னை விட்டு நீங்கினான்,

எற்றே — வியப்பிடைச் சொல்,

எறிந்த — பாய்ந்தெடுத்த,

எறி படை — கைவிடு படை,

எறியா — அழித்து,

எறும்பிடை — எறும்பின் இடை,

எறும்பி — எறும்பு,

எறும்பி அளை — எறும்பின் புற்று,

எறும்பொழுக்கு — எறும்பின் சாரை,

எறுழ் வலி — மிக்க வலிமை,

எ—தொடர்ச்சி

என்று — எண்ணிடைச் சொல்,

என்றுவெண் — 'என்று' என்னும் எண்ணிடைச் சொல்,

என்றும் — என்று கூறுவோம்,

என்றுமோ — என்று சொல்வோமோ,

என்னையர் :

1. என் தந்தையார்,

2. என் தலைவர்,

'என' என்னும் இடைச் சொல் சிறப்பினை உணர்த்துதல் (உ-ம்.) அரசெனப் படுவது,

எனவெண் — 'என' என்னும் எண்ணிடைச் சொல்,

எனும் — சிறிதும் (உ-ம்.) 'அருனெனும் இலராய்',

ஏ

ஏஎ — அம்பு,

ஏஎம் — இன்பம்,

ஏகாந்த வாதம் — ஆருகதம் அல்லாத மற்ற ஒரே பட்சத்தைக் கூறும் தருக்கம்,

ஏடீ — தோழீ,

ஏடு — இதழ்,

ஏணி — எல்லை ('நளியிரு முந்நீர் ஏணி யாக'— புறம். 35:1),

ஏத்தி — துதித்து,

ஏதம் :

1. குற்றம்,

2. துன்பம்,

ஏதில் — அன்னியம்,

ஏதிலான் — அயலான்,

ஏது — காரணம்,

ஏந்தல் — பெருமையிற் சிறந்த தலைவன்,

ஏந்தெழில் — மிக்க அழகு,

ஏமம் — பாதுகாப்பு,

ஏமுற்றல்—களித்தல்,

ஏய்க்கும் — ஒக்கும்,

ஏர் — அழகு,

ஏர் கொடி — அழகிய பூங் கொடி,

ஏர்பு — எழுச்சி,

ஏலார் — வெற்றிமேற் கொள்ளார்,

## ஏ—தொடர்ச்சி.

ஏழுகற்றிய — சப்த பயங்களை நீக்கிய,

ஏழுலகு :

1. பூலோகம், புவலோகம், சுவலோகம், மகலோகம், சன லோகம், தவலோகம், சத்திய லோகம் என்பன,

2. நாகலோகம், பவணலோகம், நர லோகம், சோதிர்லோகம், கல்ப லோகம், அக்மிந்திர லோகம், மோக்ஷலோகம் என்பன ஜைனர் கூறும் வகை,

ஏற்றுரி — எருதின் தோல்,

ஏற்றை — ஆற்றலோடு கூடிய விலங்கின் ஆண்,

ஏறு :

1. இடப ராசி,

2. எருது,

3. சில விலங்குகளின் ஆண்,

ஏறுயர்த்தகோ — சிவ பெருமான்,

ஏனல் — தினை,

## ஐ

ஐக்கட்டி -- கபக்கட்டி,

ஐங்கணைக் காமன் — மன்மதன்,

ஐங்கதி — (பஞ்சம கதி) மோக்ஷ மார்க்கம்,

ஐங்கதித் தலைவன் — அருகக் கடவுள்,

ஐங்குப்பை — கணித வகை,

ஐஞ்சீர் — மாச்சீர், விளச்சீர், காய்ச் சீர், கனிச்சீர், பொதுச்சீர் என்பன,

ஐந்தெழுத்து — குறில், நெடில், வலி, மெலி, இடை யெழுத்துகள்,

ஐம்படை — சங்கு, சக்கரம், கதை, கட்கம், கோதண்டம் என்னும் பஞ்சாயுதம்,

ஐம்பதம் — 'அ, ஸி, ஆ, உ, ஸா' என்னும் ஜைனர்களுக்குரிய பஞ்ச மந்திரம்,

ஐம்பால் — ஐந்து வகையாக முடிக்கப் படும் கூந்தலையுடையாள்,

ஐயவி — சிறு கடுகு,

ஐயள் — வியக்கத்தக்கவள்,

ஐயிரண்டாம் ஆவி — பத்தாம் உயிராகிய 'ஒ' என்னும் எழுத்து,

## ஐ—தொடர்ச்சி

ஐவகை விழவு — ஸ்வர்க்காவதரணம், மந்திராபிஷேகம், மஹாப்ரஸ்தானம், கேவலோத்பத்தி, பரிநிர்வாணம் என்னும் பஞ்ச கல்யாணம்,

ஐவர் — மும்மூர்த்திகளும் இந்திரனும் குபேரனும்,

## ஒ

ஒக்கல் — சுற்றம்,

ஒடிய — துவள,

ஒண்பா — சிறந்த செய்யுள்,

ஒண்மை — சிறப்பு,

ஒதி — ஒதிய மரம்,

ஒதுங்கல் — நடத்தல்,

ஒப்பித்தல் — உவமை கூறுதல்,

ஒப்பு — உலகத்தார் ஏற்றுக் கொள்வது,

ஒய்தாள் — உயர்ந்த கால்,

ஒரீஇயொரீஇ — நீங்கி நீங்கி,

ஒருக்கு — ஒருங்கு,

ஒரு சிறை — ஓரிடம்,

ஒருத்தல் — ஒரு சார் விலங்குகளின் ஆண்,

ஒரு பொருள் மொழி — பரியாயச் சொல்,

ஒருவா — நீங்காத,

ஒரோவடி — ஒவ்வோரடி,

ஒல்குபு — நுடங்கி,

ஒல்கும் — நுடங்கும்,

ஒலியெழுத்து — செவிப்புலனுக இசைக்கும் எழுத்து,

ஒழுக்கல் — நடத்துதல்,

ஒழுகு — ஒழுங்கு,

ஒள்ளியோன் — சிறந்தவன்,

ஒளி வட்டம் :

1. இறைவனைச் சூழ்ந்துள்ள ஒளிப் பிரபை,

2. சந்திரன்,

ஒற்றியற்று — ஒற்றின் தன்மையை உடையது,

ஒற்று :

1. ஆய்த எழுத்து,

2. மெய் யெழுத்து,

### ஒ—தொடர்ச்சி

ஒன்பதாம் ஆவி — ஐகாரம்,

ஒன்பது மேற்புறம்,

ஒன்றுத் தொடை — செந்தொடை,

**ஒன்றுகொட்டி,**

ஒன்று கொட்டு — செந்துறை வெண்டுறைச் செய்யுளுள் ஒரு வகை,

ஒன்னுத ('ஒன்றுத' என்பதன் மரூஉ) — பொருந்தாத,

ஒன்னுர் ('ஒன்றுர்' என்பதன் மரூஉ) — பகைவர்.

ஒன்னுர் துப்பின் தென்னவர் — பகைவர் வலிகளைத் தம் வலியாக்கிக் கொண்ட பாண்டியர்.

### ஓ

ஓங்கல் — மலை,

ஓசையுண்ணுதல் — செய்யுளோசை இசைதல்,

ஓசையூட்டுதல் — செய்யுள் ஓசையை வாய்பாட்டால் அளந்து அறிதல்,

ஓடை — குடைவேலமரம், நீரோடை, நெற்றிப் பட்டம், மலை வழி,

ஓத நீர் — கடல்,

ஓதி :

1. ஓந்தி (ஓணன்),
2. கூந்தல்,

ஓதுதுமோ — சொல்வோமோ,

ஒப்ப — ஓட்ட,

ஓம்படைக் கிளவி — பெரியோர் பாது காவலாகச் சொல்லும் சொல்,

ஓமை — உகா மரம்,

ஓர் — அறி, ஆராய், கூர்ந்து கேள், நினை,

ஓர்ப்பு — ஆராய்ந்துணர்தல்,

ஓரடி முக்கால் — குறள் வெண்பா,

ஓராதே — ஆராயாமல்,

ஓரி — ஒரு வள்ளல்,

ஓருடம்பிருவர் — அர்த்தநாரீசுவரர்,

ஓரை — இராசி,

ஓரை — காதோலை,

ஓவம் — ஓவியம்,

ஓவாது — விட்டு நீங்காமல்,

ஓவா முயற்சி — இடைவிடாத முயற்சி,

ஓனம் — ஓகார உயிர்.

### க

கஃசம் — கைசம்,

கஃசு — காற்பலம்,

கஃடு — ஒலிக்குறிப்பு,

கஃதம் — கைதம்,

கஃது — ஒலிக்குறிப்பு,

கஃபு — ஒலிக்குறிப்பு,

கஃறு — ஒலிக்குறிப்பு,

கங்குல் — இரவு,

கசடற — ஐயுறவு தீர,

கசிவு — அன்பு,

கஞ்சத் தாளம் — கைத்தாளம்,

கஞலிய — நெருங்கிய,

கஞலின — நெருங்கின,

கட்டளை — அளவு,

கட்டி — வெல்லக் கட்டி,

கட்டு — பந்தம்,

கட்டுரை — வசன நடை,

கட்டுரை எழுத்து,

கட்டுரைப்பார் — உறுதியாகச் சொல்லுவார்,

கடகம் — கங்கணம்,

கடங்கள் — காடுகள்,

கடந்தோய் — அழித்தவனே,

கடம்பமர்ந்தான் — முருகக் கடவுள்,

கடவி — செலுத்தி,

கடவுமதி — செலுத்து,

கடன் — கடமை,

கடாம் — மதநீர்,

கடாய்க் கன்று — காளைக் கன்று,

கடாவும் — வினவும்,

கடிகா — காவலையுடைய இளமரச் சோலை,

கடிந்திசினோய் — நீக்கியவனே,

கடி மணம் — மிகு மணம்,

கடி மதில் — காம வெகுளி மயக்கங்களாகிய கடியப்பட்ட மதில்கள்,

கடி மலர் — மணமுள்ள பூ,

கடி வரை — நீக்கத் தக்க நிலை,

கடிவோள் — ஓட்டுபவள்,

கடு — கடுக்காய்,

கடுங்கவி — ஆசுகவி,

க—தொடர்ச்சி

கடுந்தேர் — விரைந்து செல்லும் தேர்,

கடுப்ப — சந்தேகிக்க,

கடுப்பு — வேகம்,

கடுவன் — குரங்கு, பூனை, பன்றி, முயல் இவற்றின் ஆண்,

கடைசி — மருத நிலப் பெண்,

கடை செப்பு — தந்தத்தாற் கடைந்து செய்த சிமிழ்,

கடைப்பிடித்து — தெளிவுற அறிந்து,

**கடையம் — இந்திராணி ஆடிய** கூத்து,

கடையில்லா அறிவு — முடிவில்லாத அறிவுடைமை,

கண்டகம் — வாள்,

கண்டங்கறுக்கும் :

1. கழுத்துக்கறுக்கும்,
2. கண்டு அங்கு அறுக்கும்,

கண்டல் — மர வகை,

கண்டித்து — துணித்து,

கண்ணறை — அகலம்,

கண் வாங்கு இருஞ்சிலம்பு — கண்ணைக் கவரும் பெருமலை,

கண விரி — நிரைநிரை,

கதம்படுவர் — கோபங்கொள்வர்,

கதழ் பரி — விரைந்து செல்லும் குதிரை,

கதழொளி — மிக்க பிரகாசம்,

கதி நான்கு — தேவ கதி, மானிட கதி, நரக கதி, விலங்கு கதி,

கதிர் வடம் — ஒளி வீசும் முத்து மாலை,

கதிரொளி மண்டிலம் — பிரபாவலயம் மூன்று ; 'திரிவாசி' என்பன,

கதுப்பு — கூந்தல்,

கதுவாய்ப்பட்டு—குறைப்பட்டு,

கந்தருவ நெறிமை — கந்தருவ வழக்கம்,

கந்து — யானை கட்டும் தறி,

கந்துருள் — வண்டிச் சக்கரம்,

கபாலம் — மண்டையோடு,

கமுகு — பாக்கு மரம்,

க—தொடர்ச்சி

கயம் — நீர் நிலை,

கயவர் — கீழ் மக்கள்,

கரணம் — விவாகச் சடங்கு,

கரந்தை — பகைவர் கவர்ந்து சென்ற பசுக் கூட்டத்தை உரியவன் சென்று மீட்டு வருதலைக் கூறும் புறத்துறை,

கரவன் மரபு — களவொழுக்கம்,

கரவொடு நின்றூர் கடிமனை — இரப்பவர்க்கு அஞ்சி மறைந்து வாழ்பவர்களின் காவலையுடைய வீடு,

கராஅ — முதலை,

கராஅம் — முதலை,

கரி — சாட்சி,

கரி கால் — சுடலையில் வேகும் கால்,

கரிய — கருமையானவை,

கரு — கருப்பம், முட்டைக் கரு, குழந்தை, குட்டி, நடு, கருப்பொருள் முதலியன,

கருங்கடல் — பெருங் கடல்,

கருங்கை — கொன்று வாழும் கை,

கருண மூலம் — காதின் அடிப்பாகம்,

கருப் பொருள் — ஐந்திணைகளுள் ஒவ்வொன்றிற்கும் உரிய தெய்வம், தலைவர், மாக்கள், புள், விலங்கு, ஊர், நீர், பூ, மரம், உணு, பறை, யாழ், பண், தொழில் என்பன,

கருவரை — பெரு மலை,

கருவி — காரணம்,

கருவிளை — காக்கட்டான் பூ,

கல் — மலை,

கல்லென — ஒலிக்குறிப்பு,

கலங்களுர் — பெருந்துன்பம்,

கலம் — கப்பல்,

கலவுதல் — கலத்தல்,

கலவை — கலவைச் சந்தனம்,

கலன் — கப்பல்,

கலி — கூத்துக்குரிய வெண்டுறைச் செந்துறைப் பாட்டுள் ஒரு வகை,

கலிக்கும் — உண்டாகும்,

கலிங்கம் :

1. ஆடை,
2. மிளகு,

க—தொடர்ச்சி

**கலித்தல் :**

1. எழுதல்,
2. செருக்குதல்,
3. நெருங்கியிருத்தல்,
4. வேகமாதல்,

கலிதரும் — செருக்கும்,

கலிமா — குதிரை,

கலி முதலிய சங்கேத எழுத்து,

கலுழி — காட்டாறு,

**கலை :**

1. மேகலாபரணம்,
2. ஆண் மான், ஆண் முசு, ஆண் சுரு,

கலைபயில் அல்குலார் — மேகலாபரணம் பொருந்திய அல்குலையுடைய பெண்டிர்,

கலை மகள் — சரசுவதி,

கலைமா மடவாள் கணவன் — அருகக் கடவுள்,

கலைமான் ஏற்று ஊர்தி — துர்க்கை,

கலையேற்றூர்தி — துர்க்கை,

கவ்வை — துன்பம்,

கவ்வை செய்தன்று — துன்பம் செய்தது,

கவரி — வெண்சாமரை,

கவலை — கிளை வழி,

கவவுறு காதல் — அணையும் விருப்பம்,

கவற்ற — வருத்த,

கவற்றி — கவலையுறச் செய்து,

கவறு — சூது,

கவிரந்தாது — முருக்க மலர்,

கவிழ்தல் — குனிதல்,

கவின் — அழகு,

கவினிய — அழகு செய்த,

கவுந்தி — குந்தி தேவி,

கவுள் — தாடை,

கவைஇக்கொள — தழுவிக்கொள்ள,

கழல் — கழற்சிக்காய்,

கழற்று — உறுதி மொழி,

கழறும் — இடித்துரைக்கும்,



க—தொடர்ச்சி

கழனி — மருத நிலம்,

கழிநெடிலசை — உயிரளபெடையான் வந்த அசை,

கழீஇ — கழிந்து,

கழுமிய — பொருந்திய,

கழூஉ — கழு மரம்,

கழூஉ மணி — சுத்தம் செய்யப்பட்ட மாணிக்கம்

கழை — மூங்கில்,

களம் வேட்டல் — போர்க்கள வேள்வி செய்தல்,

களவு — களவொழுக்கம்,

களித்தார் — கள்ளைப் பருகியவர்,

களிற்றுத்தாள் — யானைக் கால்,

களிறு — யானை, பன்றி, சுறு இவற்றின் ஆண்,

களிறு பிளிற்றும் வழிப் பெற்றம் பிளிற்றக் கண்டு—காடு திருத்தி நாடாக்கி,

கறங்கருவி — ஒலிக்கும் மலையாறு,

கறித்து — கோதி,

கறுத்த — கோபித்த,

கறை — குற்றம்,

கறைப்பல் — மாசு படிந்த பற்கள்,

கறை மிடற்று இறை — சிவ பெருமான்,

கறை மிடறு — நஞ்சு பொருந்திய கழுத்து,

கன்றி — முதிர்ந்து,

கன்னி — கன்னியா குமரியாறு,

கனலி — நெருப்பு,

கனி — கொவ்வைக் கனி,

கனை துயில் — பெருந்தூக்கம்,

கனையிருள் — மிகுந்த இருள்.

கா

கா — காப்பாற்று,

காக்கைக்கு — இந்திரனுக்கு,

காச்சு,

**காசு :**

1. குற்றம்,
2. நேர் நேர்,

கா—தொடர்ச்சி.

காஞ்சி :

1. ஆற்றுப் பூவரச மரம்,
2. படையெடுத்து வந்த அரசனை எதிர் சென்று தாக்குதலைக் கூறும் புறத்துறை,
3. மகளிர் இடையிலணியும் எழு கோவையுள்ள மேலாபரணம்,

காட்சி :

1. அழகு,
2. அறிவு,

காட்டு — உதாரணம்,

காடு — சுடுகாடு,

காடு கிழவோள் — துர்க்கை,

காணம் — பொற்காசு,

காணிய — காண,

காணிய புகின் — பார்க்கத் தொடங்கினால்,

காத்து — நெடிலொற்றின் கீழ் வந்த குற்றுகரம்,

காதம் — நான்கு கூப்பிட்டு அளவு,

காதி — ஞான வரணீயம், தரிசன வாணீயம், வேதநீயம், மோகநீயம், ஆயுஷ்யம், நாமம், கோத்திரம், அந்தராயம் என்னும் எண் வகைக் கர்மங்கள்,

காந்தள் — காந்தள் மலர் அணிந்து வேலன் வெறியாடுவதைக் கூறும் அகப்புறத்துறை; முருகக் கடவுளுக்குரிய காந்தட் பூவினைச் சிறப்பித்துக் கூறுவது என்பர் புறப்பொருள் வெண்பாமாலை ஆசிரியர்,

காந்தார பஞ்சமம் — பாலையாழ்த் திறங்களுள் ஒன்று,

காந்தாரம் — குறிஞ்சி யாழ்த்திற வகை,

காபு,

காம்பு — மூங்கில்,

காமக்கு — காமத்திற்கு,

காமம் :

1. பக்ஷ பாதம்,
2. விருப்பம்,
3. கதிர் காமம் என்னும் முருக ஸ்தலம்,

காமர் — அழகு,

கா—தொடர்ச்சி

காமவேள் — மன்மதன்,

காமன் — பிரத்தியும்னனாக அவதரித்த மன்மதன்,

காய் கதிர் — சூரியன்,

காய்ந்தனை — அழித்தாய்,

கார் :

1. கார்ப்பருவம் : ஆவணி புரட்டாசி மாதங்கள்,
2. மேகம்,

காரணக் குறி — காரணப் பெயர்,

காரி — சனி,

காரிகை — அழகு,

காரெழிலி — கருக்கொண்ட மேகம்,

கால் :

1. இடம், :
2. காற்று,

கால கேசி — இறந்துபட்ட ஒரு தருக்க நூல்,

காலெழுத்தசை — மகரக் குறுக்கம் பெற்ற அசை,

காவதம் — நாலு குரோசத் தூரம்,

காவி — நீலோற்பலம்,

காவிரி வளநாடன் — சோழன்,

காவேரி — காவிரி யாறு,

காழ் :

1. இருப்புக் கம்பி,
2. குற்றம்,

காழ் வர — குற்ற முண்டாக,

காறட — (கால் + தட) கால் தடுக்க,

காறு — ஏர்க் கொழு,

கான் — காடு,

கானல் — கடற்கரைச் சோலை.

கி

கிஞ்சுகம்—சிவப்பு.

கிடக்கை — வைப்பு முறை,

கிடங்கு — அகழ், குளம், குழி ஆகிய நீர்நிலைகள்,

கிடந்தாய் — பள்ளி கொண்டாய்,

கிடந்தான் — படுத்தான்,

கிரியிடை — இமயமலையில்,

கிரியை கொளுத்துவது — வினை முடிவு செய்வது.

கி—தொடர்ச்சி

கிழத்தி — தலைவி,

கிழமை — 'ஞாயிறு' முதலிய வார நாட்கள்,

கிழமையது — உரிமையுடையது,

கிழவன் — தலைவன்,

கிழான் — உரியவன்,

கிள்ளி — சோழன்,

கிளவி — சொல்,

கிளை எதுகை — இன வெதுகை,

கிளை எழுத்து — இன வெழுத்து,

கிளை மோனை — இன மோனை,

### கீ

கீழ்ந்து — தோண்டி,

### கு

குக்கில் — செம்போத்து என்னும் பறவை,

குஞ்சி — தலை மயிர்,

குட்டம் — ஆழம், திரள், மடு, சிறுமை,

குடத்தாடல் — கண்ணபிரான் ஆடிய குடக் கூத்து,

குடந்தை — கும்பகோணம்,

குடாஅ — கொடாத,

குடாஅது — மேற்கிலுள்ளது,

குடிலம் :

1. வஞ்சகம்,

2. வளைவு,

குடைக் கூத்து — முருகக் கடவுள் அசுரர் ஆயுதமிழந்து நின்ற போது குடையைச் சாய்த்து அதனையே திரையாகக் கொண்டு ஆடிய கூத்து,

குடை குடையொடு குடை — முக்குடை,

குடைதும் — நீராடுவோம்,

குடையொன்ற தொன்றும் அதன் மேலதொன்றும் உடையார் — முக்குடைச் செல்வராகிய அருகக் கடவுள்,

குண்டலம் — குண்டலகேசி யென்னும் நூல்; பிற மதத்தவரை வாதில் வென்று தன் மதத்தை நிலை நாட்டிய ஒரு பவுத்தப் பெண் துறவியின் வரலாற்றைக் கூறுவது; தமிழ்ப் பெருங் காப்பியம் ஐந்தனுள் ஒன்று; நாத குத்தனார் என்னும் புலவரால் இயற்றப்பட்டது,

கு—தொடர்ச்சி

குண்டு — ஆழமான நீர்நிலை,

குண்டு சுனை — ஆழமான சுனை,

குணக்கடற் பெயரோன் — 'குண சாகரர்' என்னும் சமண அறிஞர்; யாப்பருங்கலக் காரிகையின் உரையாசிரியர்,

குணஅது — கிழக்கில் உள்ளது,

குணில் — குறுந்தடி,

குமரி — கன்னி, பருவமடைந்த பெண், புதல்வி,

குமுறு நின்றன — பிளிறுகின்றன,

குய் — தாளிப்பு,

குயின் — மேகம்,

குயின்று — பதிக்கப்பட்டு,

குரல் :

1. கதிர்,

2. பெண்டிர் கூந்தல்,

குரவை :

1. குரவைக் கூத்து,

2. கூத்துக்குரிய வெண்டுறைப் பாட்டுள் ஒரு வகை,

குராஅம் — குரவ மலர்,

குரால் — புகர் நிறம்,

குரு — குற்றெழுத்து ஒற்றடுத்தும், நெட்டெழுத்து ஒற்றடுத்தும், நெட்டெழுத்துத் தனித்தும் வரும் அசை; இது டகர வடிவினையுடையது,

குருகு — நாரை,

குருசினகர் — தலை நகர்,

குருதிக் கோட்டன — இரத்தக்கறையையுடைய தந்தங்களையுடையவை,

குருந்து — குருந்த மரம்,

குரும்பை — தென்னம் பிஞ்சு,

குருளை — பாம்பின் குஞ்சு, குழந்தை, ஒரு சார் விலங்கின் இளமை,

குரூஉ — நிறம்,

### கு—தொடர்ச்சி

குரோசம் — ஐந்நூறு கோல் அளவுடைய தூரம்,
குலநதி — மலையருவி,
குலவேறு — குலத்தலைவன்,
குலா — வளைவு,
குலிசம் — வச்சிராயுதம்,
குலை வேல் — அழிக்கின்ற வேலாயுதம்,
குவட்டிடை — மலையுச்சியில்,
குவளை — நீலோற்பலம்,
குவைஇ — குவித்து,
குழல் — பெண்டிர் கூந்தல்,
குழவி — கைக் குழந்தை, ஒரு சார் விலங்கின் பிள்ளைப் பெயர், புல் மரம் முதலிய ஓரறிவுயிரின் இளமைப் பெயர்,
குழறு — புலி,
குழிசி — சோற்றுப் பானை,
குழு — கூட்டம்,
குழூஉம் — கூடும்,
குழை — காதணி,
குளவி — மலை மல்லிகை,
குற்ற — பறித்த,
குற்றிசை — தலைவன் மனைவியைப் புறக்கணித்து அறநெறி தவறி ஒழுகுவதைக் கூறும் அகப் புறத் துறை,
குற்றி போல் — மேய போல,
குறங்கு — தொடை,
குறடு — சக்கரத்தின் இடையிலுள்ள 'குடம்' என்னும் உறுப்பு,
குறண் மகள் — பூதகி,
குறி — பெயர்,
குறிஞ்சி — குறிஞ்சிப் பண்,
குறி நெறி — குறித்த வழி.

குறுங்கலி :

1. தன் மனைவியை விரும்பாது மன மாறுபட்ட ஒருவனுடைய காதல் கெடும்படி கூறும் அகப் புறத் துறை,
2. பாலையாழ்த்திற வகை,

குறுத்தாள் — குறுந்தாள் (குறுகிய கால்),

### கு—தொடர்ச்சி

குறும்பு — பாலை நிலத்து ஊர்,
குறு வேட்டுச் செய்யுள்,
குன்றி — குன்றி மணி,
குன்றெடுத்தான் — கண்ணபிரான்,
குனி கோடு — வளைந்த கொம்பு,
குனி திரை — வளைந்த அலை.

### கூ

கூ காக்கைக்கு — பூமியைக் காப்பதற்கு,
கூடப் பாட்டு — மறை பொருட் பாட்டு,
கூடல் — மதுரை,
கூடலார் கோமான் — பாண்டிய மன்னன்,
கூடார் — பகைவர்,
கூத்தன் — உயிர்,
கூதாளி — தூதுவளை,
கூதிர் — குளிர் காலம் : ஐப்பசி கார்த்திகை மாதங்கள்,
கூப்பீடு — ஐந்நூறு கோல் அளவு,
கூம்ப — குவிய,
கூம்பு — பாய் மரம்,
கூர்ம்பரல் — கூர்மையான பருக்கைக் கற்கள்,
கூரன் — ஆண் நாய்,
கூவிளி — பேரோசை,
கூழை — கூந்தல்,
கூளி — பேய்,
கூற்றம் — யமன்,
கூற்று — சொல்,
கூற்றுட்க — இயமன் அஞ்ச,
கூற்றுறழ் மொய்ம்பிற் பகழி — யமனையொத்த வலிமை வாய்ந்த அம்பு,

கூன் :

1. செய்யுள் அளவுக்கு மேல் வரும் அசையும் சீரும்,
2. தனிச் சொல்.

### கெ

கெண்டி — வருந்தி,
கெண்டை — சேல் மீன்,

கெ—தொடர்ச்சி

கெழீஇ — கலந்து,

கெழுதகைமை — அன்பு,

கெழுவுதல் — நிறைதல்,

கெழூஉ மணி — ஒளிபொருந்திய இரத்தினம்.

கே

கேசம் — தலை மயிர்,

கேண்மியா — கேள்,

கேண்மை — சினேகம்,

கேதகைப் போது — தாழம்பூ,

கேழ் — நிறம்,

கேள் — காதலன்,

கேள்வன் — கணவன்.

கை

கைக்கிளை — 'ஒருதலைக் காமம்' என்னும் அகப்புறத் துறை,

கைக்கும் — கசக்கும்,

கைக்கைக்கு — (பகையை) அழிப்பதற்கு,

கை காமம் — வருத்தும் விருப்பம்,

கை கோள் — தலைவன் தலைவியரின் களவு கற்பு ஒழுக்கங்கள்,

கைசம் — கலைசம்,

கைசு — (கலைசு) காற்பலம்,

கைதம் — கலைதம்,

கைதவம் — வஞ்சனை,

கைதை — தாழை,

கை பிடித்தோன் — கணவன்,

கை போய் — கடந்து சென்று,

கைம்மா — யானை,

கைம்மாட்சியில்லா விரகன் — கைத்திறம் அற்ற சாமர்த்தியவான்,

கைம்முழம் — இரு சாண் அளவு,

கையகலும் — விட்டு நீங்கும்,

கையறு வினை — ஒழுக்கங் கெட்ட செயல்,

கைவரை — சிறிது போழ்து,

கைவல் மகடூஉ — கைத்திறம் வாய்ந்த பெண்

கொ

கொக்கொக்க — கொக்கைப் போல,

கொங்கு :

1. தேன்,

2. வாசனை,

கொச்சகம் — சிறப்பில்லாதது,

கொச்சை — சிறப்பில்லாதது,

கொட்கும் :

1. திரியும்,

2. துள்ளும்,

கொட்டி — சிவபெருமான் ஆடிய 'கொடுகொட்டி' என்னும் கூத்து,

கொட்டை — விஷ்ணுகாந்தி மலர்,

கொட்பு — சுற்றித் திரிதல்,

கொடிச்சியர் — குறிஞ்சி நில மகளிர்,

கொடியுவணத்தான் — கருடக் கொடியையுடைய கண்ணபிரான்,

கொடுங்குழாய் — வளைவான குண்டல மணிந்தவளே,

கொடுத்தோன் — தந்தை,

கொடுநா — ஓரம் பேசுகின்ற நாக்கு,

கொண்கன் — நெய்தல் நிலத் தலைவன்,

கொண்மூ — மேகம்,

கொப்பூழ் — நாபி,

கொல் — கொலைத் தொழில்,

கொல்லேற்றான் — சிவபெருமான்,

கொல்லேறு கோடல் — கொல்லும் தொழிலையுடைய இடபத்தைத் தழுவிப் பிடித்தல்,

கொளல் — கொள்க,

கொளீஇய — கொண்ட,

கொற்சேரிய — கொல்லர் வாழும் இடத்திலுள்ளவை (வாட்கள்),

கொன்றையந் தீங்குழல் — கொன்றைக் கனியைத் துளைத்துச் செய்யப்பட்ட இன்னிசைக் குழல்,

கொன்றை வேய்ந்த செல்வன் — சிவபெருமான்.

கோ

கோக்கு — அரசனுக்கு,

கோட்ட — கொம்புகளை உடையவை,

கோட்டந்து — அகப்படுத்தி,

கோட்பட்டு — பிடிக்கப்பட்டு,

